2 துய்ய மலர்ப்பராபரா நாளுந் துலங்கும்
வேற்கரா அரா (எந்தனை)

3 நாரத முனிவோர்கள் தோத்திரா வருள்
நல்கிய பன்னிரு நேத்திரா
சாரமிகு சகலசாத்திரா சோலை தழைக்குங்
குன்றைக்குடி க்ஷேத்திரா (எந்தனை)

## 88. மயின்மிசை வருவாய்

பல்லவி

மயின்மிசை வருவாய் வரமெல்லாந் தருவாய்
குயின்மொழி வாயா குறமகணேயா (மயின்)

சரணங்கள்

1 சங்கர ரருளும் பாலா கன துங்க மிகுந்த வேலா (மயின்)
2 பாத வுபயகமலா செக நாத பூரண வமலா (மயின்)
3 தோகை மலைக்குகேசா வெற்றி வாகைபுனை
பிரகாசா (மயின்)

## 89. தேவா எனைக்காவாய்

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

தேவா யெனைக் காவாய் - மூவா முதற்பொருளே (தேவா)

சரணங்கள்

1 தமதன்பரைத் தேற்றி நமன் வந்திட மாற்றித் (தேவா)
2 துயரந்தனைப் போக்கி நயமென்பதனை யாக்கித் (தேவா)
3 சிகியங்கிரி வந்த குகவம்பிகை தந்த (தேவா)

## 90. நீ மறவாதே

ராகம் : ஆனந்த பைரவி

பல்லவி

நீ மறவாதே மனமே – நீ மறவாதே

அநுபல்லவி

மாமலர்ப் பொழில்சூழ் தருஞ்சிகிமலை
வந்த கந்தனை யெந்த நாளும் (நீ)

சரணங்கள்

1 கங்கைதனைச் சூடியே யொளிர் ககனமன்று ளாடியே
மங்கை பாகங் கூடியே தரு மைந்தனை நிதந் தேடியே (நீ)

2 வள்ளியம்மை தெய்வயானை யிரு மாதர் மருவுவோனை
புள்ளி மயிலின் வருவோனை யன்பர் போற்று
மெம்பெருமானை (நீ)

3 ஆதிபராபரனை யெதி ராடி வருமசுரனை
மோது வலு சமரனை யருள் முத்துக் கந்த குமரனை (நீ)

## 91. சாமி நாதனே

பைரவி ராகம்

பல்லவி

சாமி நாதனே யருள் தழைக்கும் போதனே (சாமி)

அநுபல்லவி

வாமி யருளும் பாலா (யிரு) மாதர் புணரும் லோலா (சாமி)

சரணங்கள்

1 தஞ்சம் வேறில்லையே யென் றனக்கு வரந்தல்லையே
வஞ்சவினை தொல்லையே வாக்கருள் சொல்லையே (சாமி)

2 அன்பர் மனோகரனே யாளும் பராபரனே
வன்கணசுரனை மாய்த்த குமரனே (சாமி)

3 குன்றைமலைக் கிசைந்த குருபரா சிறந்த
நன்றுயருஞ் சுகந்த ஞானசம்பந்த (சாமி)

## 92. வேடிக்கை பார்க்கிறான்

ராகம் : காம்போதி

பல்லவி

வேடிக்கை பார்க்கிறான் - கந்தன்
வேடிக்கை பார்க்கிறான்

அநுபல்லவி

தேடிக்கை கூப்பிச் சிந்தை மகிழ்ந்து தினம்
அடியவர் பணி சிகிமலை யிலிருந்து (வேடிக்கை)

சரணங்கள்

1 ஒன்பது ஓட்டையுள்ள வொருகூடு படைத்து
அன்புட னுருவனை யதுக்குள்ளே யடைத்து (வேடிக்கை)

2 சாகர மாஞ்சமு சாரத்தில் வீழ்த்தி
போக போக்கியமதில் புந்தியை யாழ்த்தி (வேடிக்கை)
3 சொர்ன்ன மகுடமின்னுந் தோகை மலைக்குகன்
வர்ன்ன மயிலேறி வருமாறுமுகன் (வேடிக்கை)

## 93. ஆண்டவனே

பல்லவி

ஆண்டவனே யுன்னை வேண்டினவ னென்னை
ஆதரிக்க வேணும் (ஆண்ட)

அநுபல்லவி

காண்டற் கரிய குன்றை மாமலை தன்னில் வரு
காரணனே பரிபூரணனே சாமி (ஆண்ட)

சரணங்கள்

1 எக்காலமும் போற்றிப் பணிசெய்யு மெந்தன்
வினையை மாற்றி
சிக்கா மனத்தைத் தேற்றித் திருந்தும் படிக்கு நாளும்
பொருந்தும் நயத்திலேற்றி (ஆண்ட)
2 பொல்லா மதியை நீக்கி நல்ல போதமதி யுண்டாக்கி
நில்லா வாசையைத் தாக்கி யெனை
நேர்விழியினு லன்பால் மிகுந்து நோக்கி (ஆண்ட)
3 படியுமுகில் கண்மோதும் பொழிலுறை பருசிகிமலை மீதும்
அடியவர் மனப்போதும் - வளர்
ஐயனே யென்றனை மெய்யுட னெப்போதும் (ஆண்ட)

## 94. எனக்குன் அருள்தருவாய்

ராகம் : சௌராஷ்டிரம்

பல்லவி

எனக்கு னருள்தருவாய் - வனக்குயிலுடன் வருவாய்
(எனக்குன்)

சரணங்கள்

1 மாய வலையிற்பட்டு மயங்காமல் - மனை
வாழ்க்கையி லகப்பட்டுத் தியங்காமல்
தாயது கருவினி லுயங்காமல் - பொல்லாத்
தரித்திர வாழியில் முயங்காமல் (எனக்குன்)

2 வஞ்சமான தொழில் செய்யாமல் — தன்
மனமார உரை பொய்யாமல்
நெஞ்சிலுனைத் தினங் கையாமல் — பொல்லா
நேரிழையார் மன நையாமல் (எனக்குன்)

3 குன்றையம் பதிக்கலங்காரா — மணங்
கொள்ளுங் கடம்பணி தாரா
நன்றருள் புரிமயில் வீரா
நங்கையர் மருவும் வசீரா (எனக்குன்)

## 95. காணுத கண்ணென்ன கண்கள்

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

காணுத கண்ணென்ன கண்கள்

அநுபல்லவி

சேனுடனவுஞ் சோலைச் சிகண்டிமலை நாதனைக் (காணுத)

சரணங்கள்

1 கொஞ்சிய தெய்வானை ரஞ்சிதவாயனைக் (காணுத)
2 கந்த மலர்ப்பாதனைச் சுந்தர நாதனைக் (காணுத)
3 குன்றைமலை வேலைத் தன்றன் மலர்த்தாளைக் (காணுத)

## 96. எப்படியு முனையல்லாமல்

ராகம் : கல்யாணி

பல்லவி

எப்படியு முனையல்லாம லெனக் கேது துணை ஐயா (எப்படி)

அநுபல்லவி

மைப்படியும் பொழில்சூழுஞ் செகண்டியில் வாழுங் குகா
என்னை யாளுந் தெய்வம் (எப்படி)

சரணங்கள்

1 வஞ்சமாம் பிறவியின் மாய்கையை விலக்க
அஞ்சலென்று சொல்லியன் போடாதரிக்க (எப்படி)
2 வறுமைப் பிணிக்கடலில் வழியறிந்தேற
சிறுமைப்படாது ஞானந் தெளிந்து தேற (எப்படி)
3 தென் சிகிமலைத் தேவனே வுனக்கு
அன்பனுகிய அடியவ னெனக்கு (எப்படி)

## 97. கந்தனை மறவாயே

ராகம் : மத்தியமாவதி

பல்லவி

கந்தனை மறவாயே மனமே – கருவினிற் பிறவாயே
உந்தனைக் காப்பது ஒருவனே (கந்தனை)

சரணங்கள்

1 இன்னஞ் செனன மெடுக்கவுஞ் செய்யான்
பின்னு மருண்மழை பெய்யவும் பொய்யான் (கந்தனை)

2 தரித்திர வாழியிற் றள்ளவு மாட்டான்
மரித்திடும் போதே மன மார்க்கத்தி லோட்டான்
(கந்தனை)

3 மன்றன் மலர்ப்பொழில் வானை நெருக்கும்
குன்றை மலையிற் குடிகொண் டினிதிருக்கும் (கந்தனை)

## 98. நாதா சரவணபவகுக நாதா

பல்லவி

நாதா சரவண பவகுக நாதா (நாதா)

அநுபல்லவி

பாதா பதும மென்மலர் நிகர் – பாதா (நாதா)

சரணங்கள்

1 வேலா அசுரனை யுடல்கிழி வேலா
பாலா வுமையவள் தரவரு பாலா (நாதா)

2 சேயா சிகிமலைதனில் வரு சேயா
வாயா மதுரித மிலகிய வாயா (நாதா)

## 99. என்னை யாளாய்

ராகம் : ஸௌராஷ்டிரம்

பல்லவி

என்னை யாளாய் மலரிணை மலர்த் தாளாய் (என்னை)

அநுபல்லவி

வன்ன மாமயிலா நீப மலரணி யொயிலா (என்னை)

சரணங்கள்

1 அஞ்சவே வரு வஞ்சமாவுடை நெஞ்சு கூறிடு
மிஞ்சுவேலா (என்னை)

2 வானவர் தவமோனவர் பணி தேனலரணி ஞான நாயகா (என்னை)

3 கந்தனே சம்பந்தனே யினிச் சந்த நாவலா அந்த மயிலா (என்னை)

## 100. பார்க்க வேணுமென்றால்

ராகம்: மோகனம்

பல்லவி

பார்க்கவேணுமென்றாற் கண்ணாயிரம் படைக்க வேண்டாமோ (பார்க்க)

அநுபல்லவி

தீர்க்கமான முடியுலாவிய சிகிமலை ஐயன் மகிமையை யெல்லாம் (பார்க்க)

சரணங்கள்

1 கண்ணில்லாதவர் கண்டு துதிக்கவும்
காலில்லாதவ ரோடிக் குதிக்கவும்
எண்ணில்லாத ஊமை நண்ணிமுன் பேசவும்
இச்சையானபடி ரட்சிக்கு மகிமையைப் (பார்க்க)

2 பாற்காவடி கட்டித் தோளிலெடுத்துப்
பாதை நடந்து மலையை யடுத்து
ஏற்க வரும்போது யார்க்குந் தெரியப்பா
லெங்கும் நிறையவே பொங்கு மகிமையைப் (பார்க்க)

3 வானவரனயர்கள் மாதவர் விரைந்து வந்துநின்
றானந்தக் கண்ணீர் கரைந்து
தேனலர் கற்பகக் கானலர் கொண்டருச்
சித்து நல்ல மகா முத்திகொள் மகிமையைப் (பார்க்க)

## 101. கண்ணாரக் காணுவ தெந்நாளோ

ராகம்: ஆனந்தபைரவி

பல்லவி

கண்ணாரக் காணுவ தெந்நாளோ - அந்த
விண்ணுடர் போற்றிய வித்தகனை நான் (கண்ணார)

சரணங்கள்

1 ஆனந்தத் தாண்டவமாடிய வென்னையனருளிய பாலனை
ஞானந் தவறாத மாதவர் வானவர்
நாள்தோறும் பணி கோலனைக் (கண்ணார)

2 வள்ளி மனமகிழ் வாகவே குளிர் தினை
வனத்திலலையும் பாதனை
புள்ளி மயிலேறி விளையாடி வரும்
புண்ணிய போதனைக் (கண்ணா)

3 அடியவர் மனத்திலுறையு மகா அற்புத மெய்யனை
படிபுகழுங் குன்றுக் குடிவளரும் பன்னிரு கையனை
கந்தனைக் (கண்ணா)

## 102. மோசம் போகாதே

பல்லவி

மோசம் போகாதே மனமே – மோசம் போகாதே

அநுபல்லவி

வாசமலர் நீப மாலிகை வாகனை வள்ளி மோகனைத்துதி (மோசம்)

சரணங்கள்

1 சாரமாஞ் சமுசார மீது யென்னேரமும் விசாரமா
யெண்ணி (மோசம்)

2 வஞ்சனை செய்து மிஞ்சு நோய்களை நெஞ்சிலே
யெண்ணித் தொஞ்சிடாது நீ (மோசம்)

3 அண்டமுயர் செகண்டி மலையிற் கொண்ட பொருளைக்
கண்டிடாது (மோசம்)

## 103. பன்னிரு கரத்தோனே

ராகம் : அசாவேரி

பல்லவி

பன்னிரு கரத்தோனே (பன்னிரு)

அநுபல்லவி

மின்னுஞ் சிகிமலையின் மீது எப்போதும் வளர் (பன்னிரு)

சரணங்கள்

1 என்னை ரட்சிப்பதற்கு எந்தை நீ யல்லாது
பின்னை வேறுண்டென்று பேசுவதேது (பன்னிரு)

2 எங்கு மோடிப்பார்த்தாலும் என்றனக்கு நீயே
பொங்கு மனுக் கிரகம் புரிந்திடுவாயே (பன்னிரு)

3 மன்றல் மலர்ப்பொழில் வருரசம் நீந்தும்
குன்றையம்பதி வரு குருபரவே லேந்தும் (பன்னிரு)

## 104. செனன மெடுத்த பலன் தானோ

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

செனன மெடுத்த பலன் தானோ - பொல்லாத்
தீவினை செய்திருப் பேனோ (செனன)

அநுபல்லவி

கனகமயமா யொளி காட்டுஞ் சிகண்டிமலைக்
கர்த்தனே யுனதுடைய சித்த மிரங்காதது நான் (செனன)

சரணங்கள்

1 பாற்கடன் முழுகுவோர் பாலையுண்ணுததுபோல
பாக்கிய முற்றோர் தர்மப் பலனைப் பண்ணுததுபோல
தீர்க்கமாக நல்ல மார்க்கமாகவனு
தினமுந் துதிக்கவுன்றன் மனதிரங்காதது நான் (செனன)

2 எல்லா மிருக்க வொன்று மில்லாதது போல
இருப்பது கெட்ட விசை கெடுவதனாலே
கல்லாத மழலைச் சொல்லல்லால் மனமகிழ்ந்து
கனியுந் தாய்போல் மனதிரங்காதது நான் (செனன)

3 குன்றுக் குடிவளர் குமர குருநாதா
கோல மயிலேறுங் குஞ்சித பாதா
துன்றிய விதழ் நீப மன்றல் மாலிகை யணி
துய்யனே நீயருள் செய்யாதது நான் (செனன)

## 105. ஐயனே பன்னிரு கையனே

ராகம்: சங்கராபரணம்

பல்லவி

ஐயனே பன்னிரு கையனே
துய்யனே பூதியணி மெய்யனே (ஐயனே)

சரணங்கள்

1 பூரணனே செககாரணனே – நான்கு
ஆரணனே யருள் நாரணனே சாமி (ஐயனே)

2 ஆண்டவனே நீபம் பூண்டவனே – ஆனந்தத்
தாண்டவனே புவியைக் கீண்டவனே சாமி (ஐயனே)

3 தொண்டின மிருமன்பர்கள் மண்டிவரும் விண்ணோர்கள்
அண்டினோரைக் காக்குஞ் சிகண்டி மலையில்வளர்
(ஐயனே)

## 106. எனக்கென்ன தெரியாதா

பல்லவி

ராகம் : ஆனந்தபைரவி

எனக்கென்ன தெரியாதா

அநுபல்லவி

கனக்குஞ் சிகரக் குன்றைக் கந்தனே யுன்றன் மகிமை
(எனக்)

சரணங்கள்

1 முன்பு மயிலாப்பூரிற் றென்புடன் பொற்குடத்தி
லென்பு பெண்ணுருவாக அன்புடன் செய்ததுவும்
(எனக்)

2 தண்டமிழ் மனங்கொண்ட ருளால் முதலே
யுண்ட பாலனே வரக்கண்ட அதிசயமும் (எனக்)

3 துறக்கத் தவரும் வாழ்த்தச் சிறக்கப் பதிகம்பாடி
நிறக்கச் செப்புக்கத வந்திறக்கச் செய்த மகிமை (எனக்)

## 107. ஆண்டவனைக் கண்டாலுனக்கு

பல்லவி

ஆண்டவனைக் கண்டாலுனக்கு வேண்டிய துவுண்டாம்
(ஆண்ட)

அநுபல்லவி

காண்டற் கரிய வுருவோனைச் சிகண்டி மலையோனை (ஆண்ட)

சரணங்கள்

1 உந்தன் மிடிதீரும் நலமுள்ள தெல்லாஞ் சாரும்
வந்த தீவினை சோரும் நல்ல மார்க்கமெல்லாஞ் சேரும்
(ஆண்ட)

2 மாயப்பிறவி வராது மனதில் வஞ்சனை பொய்யிராது
காயங்கெடுதல் தராது உந்தன் கருத்தொரு காலுங்கராது
(ஆண்ட)

3 செகமாயங்கள் நீறுங் கல்வி சித்தமுழுதுந் தேறும்
சகல ஞானங்கள் மீறும் செல்வந் தகுந்தபடியூறும் (ஆண்ட)

## 108. மனதிரங்கியே

பல்லவி

மனதிரங்கியே வேண வரங்கள் தல்லையோ (மனதிரங்)

அநுபல்லவி

உனது பத்தன் நானென்பது றுதியில்லையோ (மனதிரங்)

சரணங்கள்

1 ஆசை வாழ்வினிற்பட்டு அழுந்த நியாயமோ
தாசன் மேற்பட்சஞ் செய்யாதது சம்பிரதாயமோ
(மனதிரங்)

2 வாச நீபமலர் மாலையணி புயா
மோசமான சூர்படை முற்றுவேற் செயா

3 கான நாயகி மனக் கருணை நேசனே
வானளாவிய சிகிமலையின் வாசனே (மனதிரங்)

## 109. சித்த மிரங்க வேணுமென் சாமி

ராகம் : காம்போதி

பல்லவி

சித்த மிரங்க வேணுமென் சாமி யுன் சித்த மிரங்க வேணும்

அநுபல்லவி

பத்தர் பணிகுன்றைப் பரனே யரனே யுன் (சித்த)

சரணங்கள்

1 நடன மயிலாளா குற மடவரல் புணர்தோளா (சித்த)

2 கனக சதங்கைத் தாளா வுமையவள் மனது மகிழும் பாலா
(சித்த)

3 குன்றை மலைக்குகேசா நெஞ்சி லென்று நிறைபிரகாசா
(சித்த)

## 110. உந்தனருட் கண்பாராய் சாமி

பல்லவி

உந்தனருட் கண்பாராய் சாமி யெந்தன் வினையைத் தீராய்
(உந்)

சரணங்கள்

1 வானத்தர் பணியுங் கங்காதரர் பாலா கானக்குறத்தி
பங்கா (உந்)

2 நடம்புரியு மயிலா மணமிகுந்த கடம்பணியும் ஒயிலா (உந்)

3 தோகை மலைக்கிறையாய் வெற்றி மிகு வாகைபுனை
யிறையாய் (உந்)

## 111. இந்தச் செனனம்

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

இந்தச் செனன மெடுத்த பலன்றானே (இந்தச்)

அநுபல்லவி

முந்தச் செனன மென்னமோ - பொன்
முடியா குன்றக் குடிவளர் குகா (இந்தச்)

சரணங்கள்

1 உந்தன் பதத்தை யென்றுந்தா னுறுதியாய் மனநின்றும்
எந்த விதத்தினாலோ நானின்பப் படாது துன்பப் படுவது (இந்தச்)

2 எப்படியும் வந்தடுத்துப் பணிந்தேத்து வார்க்கருள் கொடுத்து
வைப்பது சாமிக்கு வழக்க - மென்னை
மாத்திரந் தேடாதது நேர்த்தியாச்சு நான் (இந்தச்)

3 வஞ்சனான சூரனாவி போக வாதுசெய்து வரு கோவே
தஞ்சம் வேறில்லை யென்றடுத்த யெந்தனை
வேணு மென்னாத நினைவென்ன சாமி (இந்தச்)

## 112. எந்தன் முகம்

பல்லவி

எந்தன் முகம் பார்த்து இரக்கஞ் செய்யவேணும் (எந்)

அநுபல்லவி

கந்தனே யுன்னடியை யெக்காலமும் பணிசெய்யும் (எந்)

சரணங்கள்

1 நடன மயிலோனே குறவள்ளி மடவரல் புணர்தேனே (எந்)

2 சகல வுயிர்கள் ரட்சகனே - யனுக்கிரக
மிகவே செய்யு மாறு முகனே (எந்)

3 குன்றக் குடிக்கொரு பொருளே - யெந்நாளும்
நன்றான வரந்தரு மருளே (எந்)

## 113. நடன மயின்மிசை

பல்லவி

நடன மயின்மிசை யடியனிடம் வருவாய் (நடன)

அநுபல்லவி

வட வரையை நிகர் சிதரமிகு சிகி
மலையில் வருகுமர குரு குகனே (நடன)

சரணங்கள்

1 எதிர்வருவலு அவுணர் குலம் விழ
கதிகொள் துணை அயில் விடுசூரா (நடன)

2 மடமயி ல்குறமகளை மருவிய திடமுடைய புயகுக நாதா (நடன)

3 கனக விமையவர் முனிவரடியவர் மகவு மனனதொடு பணியு
முருகா (நடன)

## 114. ரட்சிக்க வேணும்

பல்லவி

ரட்சிக்கவேணும் முருகையா ரட்சிக்க வேணும் (ரட்சி)

அநுபல்லவி

யிச்சிக்குந்தேன் பொழிலிசையுங் குன்றைக் குடியாய் (ரட்சி)

சரணங்கள்

1 கானக மயிலி தோளா அருள்புரி வானவர் பணிதாளா (ரட்சி)

2 அடியவர் மிடிதீர்த்து அவரது குடிதனை நிதங் காத்து (ரட்சி)

3 குன்றக் குடியின் வாசா அடியவரை இன்ருதரிக்கும் ஈசா (ரட்சி)

## 115. ஒருவர் துணையில்லையே

பல்லவி

ஒருவர் துணையில்லையே – அடியவர்
இருவினை போகவில்லையே (ஒருவர்)

சரணங்கள்

1 கஞ்ச மலர்ச் சரணனே யன்பர்கள் நெஞ்சினிற் பூரணனே (ஒருவர்)
2 வேதனுர் பணி குருவே யெங்கும் ஆதரவா மருவே (ஒருவர்)
3 நின்ருடுகின்ற மயிலோனே முடியுயர் குன்ருக்குடிப் பெருமானே (ஒருவர்)

## 116. கருணை வைத்து ரட்சிப்பாய்

பல்லவி

கருணை வைத்து ரட்சிப்பாய் (கருணை)

அநுபல்லவி

மருவுஞ் சோலைவளர் குன்ருக் குடியாய் (கருணை)

சரணங்கள்

1 அண்டர் பணியும் அழகிய பாதா
தொண்டர் மனதுறை தொன்மறை நாதா (கருணை)
2 ஆசைக் கிசைந்த தெய்வானை மணுளா
வாச மலர்முக வள்ளி கணுளா (கருணை)
3 அகண்ட பரிபூரணு அற்புத ஒயிலா
செகண்டி மலைக்கிறைவா சித்திர மயிலா (கருணை)

## 117. வேலவனே யருள்வாய்

ராகம் : கல்யாணி

பல்லவி

வேலவனே யருள்வாய் - நீலமயில் வாகனு (வேல)

சரணங்கள்

1 எதிர் வருகிற வவுணருட குல
மதனை வழிபட நிமிடமதில் வெலும் (வேல)
2 அடியவர் பழவினை பொடிபடவும் வரு
மிடிதவிர் தரநல மருளியபோர் (வேல)
3 சிகரமிகு கனசிகிமலை வளர்குக குமரகுரு சரவணபவ (வேல)

## 118. தேடிக் கொள்ளுவாய் மனமே

பல்லவி

தேடிக் கொள்ளுவாய் மனமே (தேடி)

அநுபல்லவி

ஆடிக்குதிக்கு மயிலேறிய ஆனந்தத் தாண்டவனைத் (தேடி)

சரணங்கள்

1 பங்கயப் பாதனை குறத்திக்கு யிங்கித நாதனைத் (தேடி)
2 அண்டர் பூபனைப் பணித் தொண்டர் தேவனைத் (தேடி)
3 அரவணி சிவனை யருள் சரவண பவனைத் (தேடி)

## 119. எப்படியு மருள்தருவாய்

ராகம் : காம்போதி

பல்லவி

எப்படியுமருள் தருவாய் - மயிலேறி யெந்தன்முன்
வருவாய் (எப்படி)

அநுபல்லவி

மைப்படியும் பொழில் வாசங் கமழும்
மன்னிய குன்றை தன்னில் வளர்குகா (எப்படி)

சரணங்கள்

2 ஆனந்தத் தாண்டவ மாடிய வென்னைய
னருளிய மைந்தா நல்ல
ஞானந் தவறுத மாமுனிவர் பணி
ரஞ்சித ஞான சம்பந்தா (எப்படி)

1 உன்னை நெடுநாளா யடுத்திருந்தது
உலகத்துக் கெல்லா மொக்கவே யினி
என்னை மனதினி லெண்ணி யருள் செய
எல்லவர்களும் பார்க்கவே (எப்படி)

3 குன்றை யம்பதி தன்னிலிருந்து செங்
கோனடாத்திய நாதா வளர்
மன்றன் மலர்மாலை கொண்டு இமையவர்
வந்து நிதம் பணி பாதா (எப்படி)

## 120. மனதுக் கிசைந்தபடி வரந்தர வேணும்

ராகம் : சங்கராபரணம்

பல்லவி

மனதுக் கிசைந்தபடி வரந்தர வேணும் (மனது)

அநுபல்லவி

தினமடியவர் பணி சிகிமலை நாதா (மனது)

சரணங்கள்

1 சமரசவுரிய வேலா குமரி யருளிய பாலா (மனது)
2 நெஞ்சிற் கவலை போக மிஞ்சிய நயமாக (மனது)
3 நடன மயில் வாகா மடவியர் பாகா (மனது)

## 121. சங்கரர் பாலகனே

பல்லவி

சங்கரர் பாலகனே செங்கையில் வேலவனே (சங்)

சரணங்கள்

1 பொல்லாத மிடிதீர்ப்பாய் இல்லாத குடிகாப்பாய் (சங்)
2 நெஞ்சினில் வருவாய் செஞ்சொலைத் தருவாய் (சங்)
3 தோகைக் கிரீசா வாகைப் புயேசா (சங்)

## 122. இது நல்லதா சாமி

பல்லவி

இது நல்லதா சாமி பதும மலர்ச் சரணு இது நல்லதா சாமி (இதுநல்)

சரணங்கள்

1 மாயமெனு முலக வாழ்வினில் சுகப்படல்
நோயதிலே மனம் நொந்து நொந்தகப் படல் (இதுநல்)
2 பருவ மங்கையரது பாதக விச்சை
யுருக வலைகுவது யொடுகா கோலெச் சை (இதுநல்)
3 நன்ருகக் காத்து ரட்சிக்க வேணுமய்யா
குன்ருக் குடிவளர் கோவே முருகையா (இதுநல்)

## 123. துதி செய்குவாய் மனமே

பல்லவி

துதி செய்குவாய் மனமே மதிதவழுஞ் சிகிமலை வருகுகனைத் (துதி)

சரணங்கள்

1 அண்டர் பணிபாதனைத் தொண்டர் துதிநாதனைத் (துதி)

2 அரகர சிவனைச் சரவண பவனைத் (துதி)
3 அன்புடன் தினமே நம்பிநீ மனமே (துதி)

## 124. தயவு வையாத தாமதமென்ன சாமி

பல்லவி

தயவு வையாத தாமத மென்ன சாமி (தயவு)

அநுபல்லவி

வயனமிகு நேம வள நாடனே யுன்றன் (தயவு)

சரணங்கள்

1 கங்கை சூடிய காரணர் பாலா
மங்கை யரிருவர் மருவிய லோலா (தயவு)
2 கனக மயிலா கருணை நிதியே
வனச மலருறை மறைமுதல் துதியே (தயவு)
3 குன்றுக் குடிவரு குருபர குகனே
நன்றாய்க் காத்தென்னை ரட்சிப்பாய் வரனே (தயவு)

## 125. எந்தன் மனப்படி யருள்வாய்

பல்லவி

எந்தன் மனப்படி யருள்வாய் சுந்தர மிகு சிகிமலையா
(எந்தன்)

சரணங்கள்

1 அண்டர் பணிதரு தண்டையின் சரணா (எந்தன்)
2 கந்த மலர்களணி சந்தத புயனே (எந்தன்)
3 குன்றையின் மலைவரு நன்றணி குகனே (எந்தன்)

## 126. எந்த வினையானாலும்

ராகம் : கல்யாணி

பல்லவி

எந்த வினையானாலும் வந்தவினை தீரய்யா (எந்த)

அநுபல்லவி

கந்த மலர்ப்பொழிற் சிகண்டிமலை முருகா (எந்த)

சரணங்கள்

1 உந்தனையே யெந்த நாளும் சிந்தையினி னைந்துவாழும்
எந்தனிடத்திலே வந்த பொல்லாத (எந்த)

2 எக்காலமு முன்னை முக்காலமும் நின்னை
மிக்கார் துதியாய்த் தொக்காய்ப் பணியும் (எந்த)

3 குன்றையின் மலைமீது நன்றுடனெப் போதும்
நின்றருள் புரியும் வென்றிகொள் வேலா (எந்த)

## 127. ஆசைக் கடலிலாழ விதியோ

பல்லவி

ஆசைக் கடலி லாழ விதியோ - சாமி
மோசு வாழ்வினில் மூழ்க லாகுமோ (ஆசை)

சரணங்கள்

1 வஞ்சமானதோர் சமுசாரம் – அதில்
வருந்துவது வெகு விசாரம்
நெஞ்சினில் நினைத்தாலது பாரம்
நின்கிருபை செய்வது பகாரம் (ஆசை)

2 தாரித்திர மெனும் மாயம் – அதிற்
ருனுழலலாமோ யென்றன் காயம்
பாரிக்கு மோவது பாயம் – அதைப்
பார்க்கச் செய்வது சம்பிரதாயம் (ஆசை)

3 குன்ருக் குடிக்கு வாசா – கானக்
குறத்தி மனதுக்கிசை நேசா - யெனை
நன்ருகக் காப்பாய் குகேசா – யினி
ரட்சிக்கவேணும் பிரகாசா (ஆசை)

## 128. உனது தயவு வேணுமய்யா

பல்லவி

உனது தயவுவேணு மய்யா
கனக மயிலிற் ருேணுங்குகா (உனது)

சரணங்கள்

1 தீராதவினை தீர்ப்பாய் யெந்தனுட
நேராகவந்து காப்பாய் (உனது)

2 சேயாய்ப் பிறந்தனேக மாக ஓயாத் துயரம் போக (உனது)

3 சிகிமலை தன்னில் வாசா அண்ட பகரண்டம் புகழீசா
(உனது)

## 129. ஆரை நம்புவேன் சாமி

பல்லவி

ஆரை நம்புவேன் சாமி ஆரை நம்புவேன் (ஆரை)

அநுபல்லவி

காரைப் பொருதுஞ் சோலைச் சிகண்டிக் கந்தனே
நானுந்தனை யல்லால் (ஆரை)

சரணங்கள்

1 நிர்த்தனமிடு மயிலா வுயர் எத்திசை புகழ் ஒயிலா (ஆரை)

2 கானக் குறத்தி பாகா மகா
ஞானத்தர் பணியோகா (ஆரை)

3 குன்றைக்கு வாய்த்தவனே
சூருடல் அன்றைக்குத் தேய்த்தவனே (ஆரை)

## 130. இன்னமொரு தெய்வம்

பல்லவி

இன்னமொரு தெய்வங்களிப்படி யுண்டோ (இன்ன)

அநுபல்லவி

வன்னமிகு பொழில் மயின்மலையோன் போல (இன்ன)

சரணங்கள்

1 அடியவர் குடிவரு மிடிதனைப் பொடிசெய (இன்ன)

2 பத்தர்கள் சித்தர்கள் நித்திய மொய்த்திட (இன்ன)

3 உருகிய கருணையாய்ப் பெருகிட வருள்செய (இன்ன)

## 131. ஒருதரஞ் சரவண பவனே

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

ஒருதரஞ் சரவண பவனே – யென்று
லோடிடுந் தீவினையே (ஒருதரஞ்)

அநுபல்லவி

ஒருதரம் சொன்னலதற்கு வரும் பலனென்னலேதான்
சொன்ன லாமோ (ஒருதரஞ்)

சரணங்கள்

1 சண்முக நதிதனிற் ருனஞ் செய்து முடித்து
தவள நீறணிந்து பஞ் சாட்சரஞ் செபித்து
பண்முக தோத்திரம் பாடிப்படித்துப்
பத்தியுட ஜேயனைப் பார்த்துக் கைகுவித்து (ஒருதரஞ்)

2 வந்திடுந் தீவினை மாய்ந்தது மாறுமே
மாருத நோயெல்லாம் வருந்திட நீறுமே
சிந்தனை செயச்செய்யச் சித்திகள் மீறுமே
தினந்தினந் திவ்வியமாய்ச் சிந்தனை தேறுமே (ஒருதரஞ்)

3 குன்ருக் குடிவளர் குமர குகேசனை
குடிவளருங் கானக் குறத்திதன் நேசனை
நன்ருக வன்பரை ரட்சிக்கும் ராசனை
நம்பின பேர்க்கருள் நல்கும் பிரகாசனை (ஒருதரஞ்)

## 132. தோத்திரஞ் செய்குவாய் மனமே

ராகம் : மத்தியமாவதி

பல்லவி

தோத்திரஞ் செய்குவாய் மனமே – தோத்திரஞ் செய்குவாய்

அநுபல்லவி

க்ஷேத்திரங்களி லுயருங் குன்றைச் செய்ய
கிரிவள ரய்யனைக் கண்டு (தோத்)

சரணங்கள்

1 பொருதிய படையெல்லாம் பேர்கிடத் தேய்த்து
வருகிற சூரனை மாண்டிட மாய்த்து
வலியுள்ள வேலனைக் கொலுவினிற் கண்டு (தோத்)

2 பத்தர்கள் மிடிதனைப் பறந்திட வடித்து
தித்தியென மயிலிற் சேர்ந்திட நடித்த
சேயனை யருளிய தூயனை நீ கண்டு (தோத்)

3 குன்றைக்கு வாய்த்த குமரனைக் கந்தனை
மன்றுக் குளாடிய மணியருள் மைந்தனை
மதுமலர் நீபனை நிதநிதங் கண்டு (தோத்)

## 133. தீவினை தீர்க்கவேணும்

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

தீவினை தீர்க்கவேணும் பொல்லாத தீவினை தீர்க்கவேணும்

அநுபல்லவி

பாவினையாகவே யுலகத்திற் செனனம்
படைத்தனுற் பலன் கிடைத்த தென்ன சாமி (தீவினை)

சரணங்கள்

1 சொற்பன மாமிந்த வாழ்வு அதின்மனஞ்
சொக்குவ தெல்லாந் தாழ்வு
எப்படியு முனக்கே யடைக் கலமென்
றிருப்பவர்க்கு நன்றி பெறும்படி (தீவினை)

2 சகல ரட்சக னீயே யினியே யென்
றன்னைக் காக்கின்ற தாயே
பகரவரியதோர் பழமறை தேடிய
பதும சரவண வி துவன வதன (தீவினை)

3 குன்ருக் குடிக் குருபரனே சாமி
குகனே சரவண சிவனே
நன்ருகக் காக்குந் தெய்வ நீயென்று
நம்பினவனைத் திரும்பிப் பார்த்து நீ (தீவினை)

## 134. வரவேணும் சாமி

பல்லவி

வரவேணும் சாமி வந்து வரந்தர வேணும் சாமி (வர)

சரணங்கள்

1 அரிய நடனே புரி மயிலுடனே (வர)

2 கருதரும் வேதா யிருவர் சமேதா (வா)

3 குன்றையின் மேலாய் நின்றருள் சீலா (வர)

## 135. மனதில் நினைத்தபடி வரமருள்வாய்

ராகம் : மத்தியமாவதி

பல்லவி

மனதி னினைத்தபடி வரமருள்வாய் (மனதில்)

அநுபல்லவி

அனவரத காலமுன்னடி பணியு மெந்தன் (மனதில்)

சரணங்கள்

1 கானக மடந்தை பாகா அருளிய ஞானசம்பந்த குகா
(மனதில்)

2 அண்டர் பணியு நாதா அனுதினந் தொண்டர் பரவு பாதா
(மனதில்)

3 தோகைமலைமயிலா வெற்றியுள வாகைபுனே ஒயிலா
(மனதில்)

## 136. கண்டபோதே காட்சி பெறலாம்

பல்லவி

கண்டபோதே காட்சி பெறலாம் அண்டர்பணி
யென்னய்யனைக்

கண்டபோதே காட்சி பெறலாம் (கண்ட)

சரணங்கள்

1 மன்றன் மலர்க் குழற்றெய் வானை யின்றயவுள
பெருமானைக் (கண்ட)

2 நடன மயிலின் வாகனை அடியவர் பணியோகனைக் (கண்ட)

3 குன்றைமலைக்கு நாதனை யென்றனைக் காக்கு நாதனைக்
(கண்ட)

## 137. மனதுப்படியே வரமருள்வாய்

ராகம் - சங்கராபரணம்

பல்லவி

மனதுப்படியே வரமருள்வாய் (மனது)

அநுபல்லவி

கனகக்கிரிச் செகண்டி மலையாய் (மனது)

சரணங்கள்

1 அண்டர் பணியு மாறுமுகனே தொண்டர் பரவுங் குகனே
(மனது)

2 வானவர் சேனுபதியே ஞானவர் செய்யுந் துதியே (மனது)

3 ஆதிபராபரனே சோதியே வேற்கரனே (மனது)

## 138. ஆனந்தக் கடலே

ராகம் : சங்கராபணம்

பல்லவி

ஆனந்தக் கடலே வானம் பரவுங் குன்றைமலைக் கரசே
(ஆனந்த)

சரணங்கள்

1 கடம்பமென் மலரணி புயனே அடம்புரியுஞ் சூரசெயனே (ஆனந்த)

2 எந்தன் மனப்படி யருள்தாயே வந்தவினை
தீர்த்தருள்வாயே (ஆனந்த)

3 துங்க மயிலின் மலைமேலே தங்கிவளரும் வடிவேலே (ஆனந்த)

## 139. உனக்கு நானடிமை

பல்லவி

உனக்கு நானடிமை எனக்கு நீ யருள்வாய் (உனக்கு)

சரணங்கள்

1 வாதுசெய் சூரன்முனம் நின்றவா
மோதம ரிலவனை வென்றவா (உனக்கு)

2 அடியவர் மிடிகளைத் தீர்த்தவா
குடிவளர் குறமினைச் சேர்த்தவா (உனக்கு)

3 நடமிடு சிகி ஒருகுருகா வடவரை நிகர் சிகிமுருகா (உனக்கு)

## 140. வஞ்சஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சஞ் செய்யாதே – மனதே
வஞ்சஞ் செய்யாதே (வஞ்சம்)

அநுபல்லவி

நெஞ்ச மொருமித்துக் குன்றக் குடிவளர்
நித்திய கல்யாணனைப் பத்தியுடன் போற்ற (வஞ்சம்)

சரணங்கள்

1 அன்பர்கள் வந்து பணியுந் தாளனை
அன்புகொள் வள்ளியம்மை மணாளனை
அனுதினமு முந்தன் மனதொடு பணிய (வஞ்சம்)

2 ஆடிய மயிலேறிய வீரனை நாடிய பேருக்கு நாளு
முதாரனை
நத்திமுப்போதும் புத்தியாய்ப்போற்ற (வஞ்சம்)

3 அண்டர் முனிவர்கள்தன் நாயனே
தொண்டர்கள் மனதிலுற் றோனுக்குச் சேயனே
தோத்திரஞ் செய்து நேர்த்தியாய்ப் பரவ (வஞ்சம்)

## 141. உனக்கென்ன குறை

பல்லவி

உனக்கென்ன குறை மனமே
வனக்குறமாது மகிணனிருக்க (உனக்)

சரணங்கள்

1 சூர சங்காரன் தூய சிங்காரன்
தார லங்காரன் சண்முகனிருக்க (உனக்)

2 வள்ளி மணாளன் மாமலர்த் தாளன்
புள்ளி மயிலாளான் புரவலனிருக்க (உனக்)

3 தோகை மயின்மலையான் துகளறு சிலையான்
தாகமுள்ள கலையான் சாமி யிருக்க (உனக்)

## 142. நான் மறப்பேனோ

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

நான் மறப்பேனோ என்னையனே - நான் மறப்பேனோ (நான்)

அநுபல்லவி

வான்மருவிய சோலை நீடிய மயின்மலைக்கிசை
அயில் படைத்தோனே (நான்)

சரணங்கள்

1 வந்த வினையை யொழித்து பொல்லாமாமிடிகளைக் கழித்து
சொந்த மென்றருளளித்து – என்னைத்
தொண்டனென வாட்கொண்ட நாதனே (நான்)

2 ஆசா பாசத்தை நீக்கி யெனை யன்புடனயமாக்கி
காசான தெல்லாம் போக்கி – யெனைக்
காத்துக் கடைக்கண் பார்த்த நாதனே (நான்)

3 குன்றைக் குடியினையனே நல்ல கோலாகல மெய்யனே
நன்று மருளுந் துய்யனைத் தினம்
நாவிற்று தித்துச் சேவித்துக்கொள்ள (நான்)

## 143. வேலவனே சரணம்

ராகம்: புன்னாகவராளி

பல்லவி

வேலவனே சரணம் கதிர் வேலவனே சரணம் (வேலவ)

அநுபல்லவி

நீல மயிலேறியே நல்ல நிர்த்தமிடுங் கர்த்தனே சாமி (வேலவ)

சரணங்கள்

1 கங்கை யணியுங் கர்த்தர் பாலனே
மங்கை குறத்தி மருவும் லோலனே (வேலவ)
2 பத்தர் முனிவர் பரவு நயனே
புத்தர் மதத்தைப் போக்குஞ் சேயனே (வேலவ)
3 குன்றை மலைக் குருசிற் குகனே
என்றைக்கும் ரட்சிக்குஞ் செகனே (வேலவ)

## 144. சாமி சரணத்தை

ராகம்: ஆனந்த பைரவி

பல்லவி

சாமி சரணத்தைக் காணாத பேர்க்குச்
சென்ம சாபல்ய முண்டோ (சாமி)

அநுபல்லவி

பூமி பரவுங் குன்றைக் குடியில் வளருகின்ற
பூவரை புயசெய தேவ சேனாபதிச் (சாமி)

சரணங்கள்

1 அண்டர் முனிவர ரன்பர்கள் பணியக்
கொண்ட குருபர சுப்பிரமணிய (சாமி)
2 மஞ்சடர் கிரௌ வுஞ்ச மாவுடன் சமர
மிஞ்சிய வயில்கொடு வென்றிடு குமர (சாமி)
3 இரவும் பகலுமன தெண்ணித் தன்னடியைப்
பரவுவார்க்கனுக் கிரகம் பண்ணும் செகண்டிச் (சாமி)

## 145. ஆரெனக்கிருக்கிறார்

பல்லவி

ஆரெனக்கிருக்கிறார் என் சாமி - ஆரெனக்கிருக்கிறார் (ஆரென)

அநுபல்லவி

காரெனப் பொலியுங் காவுலாவுங் குன்றைக்
கர்த்தனே பரிசுத்தனே சாமி (ஆரென)

சரணங்கள்

1 தேவரு முனிவரு மூவரு மயனும்
யாவரும் பணியுங் காவலனே சாமி (ஆரென)

2 கானக் குறக்கொடி வானத் தெய்வானை மின்
தானற்புடன் புணர் ஞானப்புய குகா (ஆரென)

3 சரவணபவனே யரனருள் புதல்வா
கரதல கமலா வரமருளிடவே (ஆரென)

## 146. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா வுன்றன் அடியேன் முன் வா (வடிவே)

சரணங்கள்

1 கடிவார் பொழிற் குன்றைக்குடி நாயகா (வடிவே)
2 நடமா மயிலா தட நீடயிலா (வடிவே)
3 எனை யாளுவாய் மனம் வாழுவாய் (வடிவே)

## 147. பதந்தர வேணும்

ராகம்: ஆரபி

பல்லவி

பதந்தர வேணு முன்னுட பதந்தர வேணும் (பதந்)

அநுபல்லவி

நிதம்பணிந்தவர்க் கருணித்த முதவிய (பதந்)

சரணங்கள்

1 தெள்ளு தினைப்புனத்தில் வள்ளியம்மைக் காகப்
புள்ளி மயிலிலாமல் மெள்ள நடந்தலையும் (பதந்)

2 வந்த வடியவர் பந்த வினைகளை
நைந்தழியச் செய் சுந்தரமிலகிய (பதந்)

3 மன்றன் மலர்ப்பொழில் நன்றுடன் சூழ்தரு
குன்றை மலையினி னின்ற மலரிணைப் (பதந்)

## 148. மயின்மீது வரவேணும்

ராகம் : சங்கராபரணம்

பல்லவி

மயின்மீது வரவேணும் – வந்தெனக்கு
வரமெல்லாந் தரவேணும் (மயின்)

அநுபல்லவி

கையின் மீது வேலெடுத்துக் கலங்கமாவை வென்ற
கர்த்தனே யுன்னுட சித்த மிரங்கியே (மயின்)

சரணங்கள்

1 அண்டர் முனிவர ரன்புடன் வந்து
தொண்டர் களிரங்கித் துதிப்பவனே மகிழ்ந்து (மயின்)

2 தண்டைச் சிலம்பு சதங்கை யிலங்க
மண்டலம் புகழ்ந்திட மகிழ்ந்து முகந்துலங்க (மயின்)

3 குன்றை மலையில் வருங்குருபர குகனே
நன்றுட னருளை நல்கி யறுமுகனே (மயின்)

## 149. ஆருக்குங் கிட்டுமோ

பல்லவி

ஆருக்குங் கிட்டுமோ (ஆருக்)

அநுபல்லவி

காருக்குயருஞ் சிகரக் குன்றைக் கர்த்தர் – தெரிசித்த
முருக (ஆருக்)

சரணங்கள்

1 யோக முயன்று யேக மனதா யொருமித்து அன்பு
தேக பரவசமாகவே தான் சேவலனைப் பணி செய்ய
(ஆருக்)

2 ஆசா பாசத்தை நாசமாக்கி ஆனந்தக் கடலில் வீழ
ஈசா திரு முருகேசா வெனவே யிசைந்து பணிந்து தாழ
(ஆருக்)

3 செகண்டி மலையில கண்ட பூரண தேவா தேவர்க்கிறைவா
சுகந்த மார்பா யெனவே பணியச் சோதியா யெங்கு
நிறைவா (ஆருக்)

## 150. சமர வடிவேலா

பல்லவி

சமர வடிவேலா அமரர் பணியுங் கோலா (சமர)

சரணங்கள்

1 சங்கர ரருள் சேயா குறமி னிங்கித மிகுநேயா (சமர)
2 வாசனை மிகு நீபா சூரனை நாசமிடுங் கேயா (சமர)
3 குன்றக்குடி வாசா யென்றனை யின்ருள் முருகேசா (சமர)

## 151. எந்த விதத்திலும்

பல்லவி

எந்த விதத்திலு மையனைக் காண்பதே யிகபரசாதனமே (எந்த)

அநுபல்லவி

கந்தமலர்ப் பொழில் சூழுஞ் செகண்டி மலைக்
கர்த்தனை வேத வித்தகனைத் தானே (எந்த)

சரணங்கள்

1 மடக்கொடியாகிய வள்ளி மணாளனை
திடத்த விண்ணோரண்டர் தேடிய தாளனை (எந்த)
2 வானவர் பணிசெயுமால் மருகேசனைத்
தேனலர்க் கடம்பணி செயமுருகேசனை (எந்த)
3 செகண்டி மலைக் கிசையுந் தேவர் பிரானை
அகண்ட பரிபூரணனந்தனை மானை (எந்த)

## 152. வந்தவினை யெல்லாந் தீருமே

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

வந்தவினை யெல்லாந் தீருமே - யன்பர்
மனதினினைத்த தெல்லாம் நேருமே (வந்த)

அநுபல்லவி

கந்தமலர் மாலை புனையுங் கதிர்வேற் கையனை
முருகையனைக் கண்டால் (வந்த)

சரணங்கள்

1 சகல சீவதயாபரனை சுககுறமயில் சுபகரனைக் கண்டால் (வந்த)

2 ஆனந்த ரூப மகேசனைத் தானந்தமான மகேசனைக்
கண்டால் (வந்த)

3 குன்றைமலை வருகோனை நன்றருள் புரிபெருமானைக்
கண்டால் (வந்த)

## 153. நான் மறவேனே

பல்லவி

நான் மறவேனே ஐயனை நான் மறவேனே (நான்)

அநுபல்லவி

கான்முகில் படியுஞ் செகண்டிமலைக் கர்த்தனை (நான்)

சரணங்கள்

1 மோசமாகிய பொல்லா ஆசாபாசத்தை
நாசமாகவே செய்வோர்கள் நேசனை நிதமே (நான்)

2 கங்கை சூடிய வொருமங்கையர் பாகரை
சங்கர ரருளியபால யெங்கணையனை (நான்)

3 குன்றை வாசனை யருள்கின்ற நேசனை
மன்றன் மார்பனைத் துதித்து யென்று மாசையாய்
(நான்)

## 154. ஒருகாலும் மறவாதே

பல்லவி

ஒருகாலும் மறவாதே அதுவே – மனமே
உனக்கா காதரவிப் போதே (ஒருகா)

அநுபல்லவி

செருக்கான சோலை சூழுங்குன்றைக் குடிவளர்
சேயனை யன்பர் சகாயனை நாயனை (ஒருகா)

சரணங்கள்

1 வனசமலர்வதன வள்ளி மனோகரனை
தினமுமடியார் பணி செக குருபரனை (ஒருகா)

2 சூரசங்காரனைத் துரை முருகேசனை
சாரமிகுஞ் சகல சாஸ்திரப் பிரகாசனை (ஒருகா)

3 அண்டர் முனிவர ரடிதொழு நாதனை
மண்டலமும் பணிமயின்மலை நீதனை (ஒருகா)

## 155. சாமியை மறவாதே

பல்லவி

சாமியை மறவாதே கந்த சாமியை மறவாதே

அநுபல்லவி

தேமலர்ப் பொழின் மாமுடி சேருஞ்
செகண்டி மலைவள ரகண்ட பரிபூரண (சாமி)

சரணங்கள்

1 மதுரிதமொழி வனமகள் புணர் புயனே
சதுமறை பணிதரு சண்முக வயனே (சாமி)
2 வஞ்ச வவுணரை வந்தடு பவனே
அஞ்சலென வருளு மறுமுக சிவனே (சாமி)
3 சேர்த்திகழ் மலரயன் சென்றிடு சிறையைத்
தீர்த்தருள் புரிபவன் சிகிமலைக் கிறையை (சாமி)

## 156. செனன மெடுத்தாயே

பல்லவி

செனன மெடுத்தாயே யெடுத்தாற் சேயனைப் பணிவாயே
(செனன)

அநுபல்லவி

அனவரதமு மனதுடன் முரு
கையனைப் பணிந்து மெய்யன்பனுகாமல் (செனன)

சரணங்கள்

1 ஆசைக் கடலிலழுந்தி யகப்பட்டு
மோசப் பட்டலைந்து முழுவதுங் கெட்டு (செனன)
2 வேண்டிய ஐம்புல வேட்கையைத் துடையாமல்
ஆண்டவனைப் பணிந்தானந்த மடையாமல் (செனன)
3 நன்ருகச் சிந்தையை நாளுமுருக் காமல்
குன்ருக் குடியானைக்கும் பிட்டிருக்காமல் (செனன)

## 157. வேலவனே சரணம்

பல்லவி

வேலவனே சரணம் (வேலவனே)

அநுபல்லவி

ஞாலம் புகழுங் குன்றை மலையாய் (வேலவனே)

சரணங்கள்

1 தண்டமிழ் பயில்வாயா பூமண்டலம் பணிசேயா (வேலவனே)

2 சங்கரரருள் மைந்தா ஆடும் துங்கமயிலினை கந்தா (வேலவனே)

3 தானவர் குலகாலா குறக்கானமயிலி மாலா (வேலவனே)

## 158. எந்தவினை யானாலும்

பல்லவி

எந்த வினையானாலும் வந்தவினை தீரய்யா (எந்த வினை)

அநுபல்லவி

கந்தமலர்ப் பொழிலுறை - குன்றைக்
காவலா வெகு ஆவலாக (எந்த வினை)

சரணங்கள்

1 கடம்பணியு மொயிலா நடம்பயிலு மயிலா (எந்த வினை)

2 கவுரி யுடைய சுதனே சவுரிய வேலாயுதனே (எந்த வினை)

3 மீறுமவுணர் கோபா ஆறுமுக ரூபா (எந்த வினை)

## 159. எனது மனதைத் தேற்றுவாய்

பல்லவி

எனது மனதைத் தேற்றுவாய் – சாமி
யெந்தன் வினையை மாற்றுவாய் (எனது)

அநுபல்லவி

கனக மயமாஞ் செகண்டிக் குன்றுக்
கர்த்தனே தயவு செய்தின்று (எனது)

சரணங்கள்

1 கடம்பை யணியு மலர்ப் புயனே
கன்னி குறத்தி புணரு நயனே
நடம்புரியும் பச்சை மயிலா
நாதனே வெகு வான ஒயிலா (எனது)

2 அஞ்சலென்ன வந்தடுத்து அடுத்தவர்க்கருள் கொடுத்து
நெஞ்சக மலர வைத்து ரட்சிக்கு மையனே செகத்து (எனது)

3 ஆதியு மனாதி யாகி யண்ட பகிரண்டமாகி
நீதியுமா யெங்கு மெங்கு நிர்மல சொருபனே யென்றும்
(எனது)

## 160. மாய வாழ்க்கை

பல்லவி

மாய வாழ்க்கை நிலையென்றெண்ணி வருந்தாதே மனதே
(மாய)

அநுபல்லவி

ஞாயமாகக் குன்ருக்குடி ராசனை நேசம் பெருமல் (மாய)

சரணங்கள்

1 ஆசா பாசக்கடலில் வீழாமல் – நாசம் போகாமல்
நாதனைத் தாழாமல் (மாய)

2 நடனமிட்டிடு மயிலேருமல் மடமயிற் கலையுமலர்ப் பதந்
தேருமல் (மாய)

3 பத்தியுடனே குன்றைப் பதியிற் சென்று
நித்தியந் துதியா மனிச்சய மீதென்று (மாய)

## 161. நம்புவாய் மனமே

பல்லவி

நம்புவாய் மனமே யம்பொன் முடிக் கொன்றை யம்பதி
நாதனை (நம்பு)

சரணங்கள்

1 கந்தனைக் குகனை ஞானசம் பந்தனைச் சுதனை (நம்பு)

2 ஆண்டவனை ஐயனை யாருங் காண்டரிய மெய்யனை (நம்பு)

3 குன்றையானை யெனக்கு நன்றருள் புரிவானை (நம்பு)

## 162. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணும் கந்தமிகுஞ் செகண்டிக் கர்த்தனே
நிர்த்தனே (உந்தன்)

சரணங்கள்

1 கானமயில் மாலா தானவர் குலகாலா (உந்தன்)

2 வனச மண்டப வேதா தினமும் பணிசெய் பாதா (உந்தன்)

3 குமர குருபரா சமர வாயுத தரா (உந்தன்)

## 163. இதுவே கயிலாசம்

பல்லவி

இதுவே கயிலாசம் குன்றை – யிதுவே கயிலாசம் (இதுவே)

அநுபல்லவி

மதுவேறிய நீபமலர் மாலை புனைமார்பன்
வந்தவர்க் கனுபூதி தந்ததினாலே (இதுவே)

சரணங்கள்

1 கண்ணில் லாதவன் கனிகண்டு சொல்லவும்
எண்ணுங் காலில்லாதான் ஏறச் செல்லவும்
இப்படியதிசய மெப்பதியிலுமுண்டா
இருக்குமோ இங்கு இருக்குமாதலால் (இதுவே)

2 வந்தவடியவர் மாய்கையைக் கெடுத்து
எந்த விதத்திலு மின்பத்தைக் கொடுத்து
இச்சையானபடி ரட்சித்தவ ரவர்க்
கீடில்லாத மோட்ச வீடருள்வதினாலே (இதுவே)

3 வானவருந் தேவர் வந்து கூடுவதாலே
ஞான முனிவர் நாளுந் தேடுவதாலே
நான்மறைகளுந் தாமறியாமை யாலே
நந்தா வளமுள சிந்தாத பொழிலுறை (இதுவே)

## 164. நீயென்ன அறியாயோ

ராகம்: காம்போதி

பல்லவி

நீயென்ன அறியாயோ மனமே நீ யென்ன அறியாயோ
(நீயென்ன)

அநுபல்லவி

தாயென்ன அடியவர் தங்களை ரட்சிக்கும்
தழைக்குங் குன்றைமலைச் சண்முக நாதனை (நீயென்ன)

சரணங்கள்

1 வாயினாலே (பரவி) வாழ்த்தும்படி யிருக்க
மனத்தினால் தியானம் செய்யும்படி யிருக்க
நீயினிய தமிழ்பாடும்படி யிருக்க
நின்மல ரூபனை நித்தத் துதித்திருக்க (நீயென்ன)

2 வந்தவடியவர் மனதினைத் தேற்றிட
மாயப் பிறவியை வாராமல் மாற்றிட
சிந்தவரு நோயைத் தீயவே நோற்றிடச்
செய்யுங் குருபரனைத் தினந்தினம் போற்றிட (நீயென்ன)

3 அண்டர் பணியு மருள் முருகேசனை
யழகிய குறமகளன்புறு நேசனை
கொண்டல் படியுங் குன்றையில் வாசனை
கும்பிட்டு வாழ்த்திடக் குகனை:ப் பிரகாசனை (நீயென்ன)

## 165. கதியில்லை ஐயா

பல்லவி

கதியில்லை ஐயா வுனையல்லால் கதியில்லை ஐயா
(கதி)

அநுபல்லவி

மதிதவழ் குன்றை மலைக்குருபரனே (கதி)

சரணங்கள்

1 தெய்வத் தலங்களெங்குந் தேடியே சென்றாலு
முய்வைச் செய்வதற்குவுனை யல்லா லொன்றாலும் (கதி)

2 மாயப் பிறவியை மாற்றி வைப்பதற்கு
நேயமாயருள் செய்ய நின்னையல்லா லெனக்குக் (கதி)

3 சங்கர ரருளிய சரவணபவனே
துங்க மயிலில் வருந்துதி பெறுசிவனே (கதி)

## 166. ஆசை யெதற்கு

ராகம்: ஆனந்தபைரவி

பல்லவி

ஆசை யெதற்கு கெட்ட ஆசை யெதற்கு (ஆசை)

அநுபல்லவி

வாச மேவிய பொழின்மயின்மலை நாதனே (ஆசை)

சரணங்கள்

1 மெத்தமதி மயங்கி வேண்டி வந்தன்பில்லாச்
சித்தமுடனே பயிர் செய்யுமின்னூர்கள் பொல்லா (ஆசை)

2 மன்னுமனைகள் நல்ல மனைவியர் மக்களென்னும்
நண்ணுஞ் சகல போகம் தமக்கினி வேணுமென்னும் (ஆசை)

3 எப்படியுஞ் செகத்திலிருந்து மயக்கப்படும்
துப்புறவில்லாத சுகத்திலமுழ்ந்திக் கெடும் (ஆசை)

## 167. வந்து ரட்சிக்க வேணும்

பல்லவி

வந்து ரட்சிக்க வேணும் அது வெந்தன்
மனதுக்கிசைவு தோணும் (வந்து)

அநுபல்லவி

கந்தமலர்ப் பொழில் சூழுஞ் செகண்டிமலைக்
கர்த்த(னே) நல்ல வித்தகனே சாமி (வந்து)

சரணங்கள்

1 பெண்ணாசை பொன்னாசை மண்ணாசை மற்றப்
பேராசையில் வீழ்ந்து சோரா திருந்து
கண்ணார வுந்தனைக் கண்டு தரிசித்து
கதிபெற வெந்தன் மதியைத் திருத்திட (வந்து)

2 மாருத பிறப்பென்னுமாயச் சமுத்திரத்தில்
மாய்ந்துலைந்து சாய்ந்து விடாது
தேருத மனதைத் தேற்றி யனுதினஞ்
சித்தி தருங்கன முத்தியடையவே (வந்து)

3 குன்றுக்குடி வளர் குமரகுருபரா
கோகன கமல ராகிய பாதா
நன்றுகத் தயவு செய்து மயிலேறி
நாடியே யடியனைத் தேடியே தானினி (வந்து)

## 168. நடன மயிலா

பல்லவி

நடன மயிலா வ்ள்ளி நாயகி யொயிலா (நடன)

அநுபல்லவி

தடமுடியுயர் செகண்டிமலை தனில் வ்ளர் வன்னமான
(நடன)

சரணங்கள்

1 பைங்கடப்ப மாலை யணிபுயா
துங்க வசுரனைத் தொலைத்திடு சேயா (நடன)

2 அஞ்சலென்ன வ்டைந்தோரைப் பார்ப்பாய்
தஞ்சமில்லை யெந்தனை நீ சேர்ப்பாய் (நடன)

## 169. இகபர சாதனந் தருமே

ராகம் : பந்துவராளி

பல்லவி

இகபர சாதனந்தருமே வேண இச்சை யெல்லாமும்
வருமே (இகபர)

அநுபல்லவி

சகல வளமிகு குன்றக் குடிவளர்
சாமிநாதன்றன் மாமலர்ப்பாதம் (இகபர)

சரணங்கள்

1 வன்னமிலகுநீப மலரிணுபரணம்
தன்னையணியு மெந்தன் சாமிதன் சரணம் (இகபர)

2 பால்மொழி நயமிகு பயம்வ்ரு சேல்கள்
போல்விழி யுமைதரு புதல்வன் மலர்க்கால்கள் (இகபர)

3 வானவர் தானவர் மனதொடு பேதம்
ஞானமிகு முனிவர் நாடிய பாதம் (இகபர)

## 170. காணக் கிடைக்கலையே

ராகம் : சகானு

பல்லவி

காணக் கிடைக்கலையே மனக்'கண்ணைப் படைக்கலையே
(காணக்)

அநுபல்லவி

சேணிற் பொலியுமுடிச் செகண்டிமலை ஐயனைக் (காணக்)

சரணங்கள்

1 சித்தி யடியவர்க்குச் செய்தருள் போதனைக்
நித்திய சுபகுறமின் லீலா விநோதனைக் (காணக்)

2 சமர கோலாகல சத்துரு சங்காரனை
கமல சரவண வலங்கார சிங்காரனைக் (காணக்).

3 அடியவர் தங்களை யாண்டருள் யோகனை
வடிவுறு வேற்கர வரதனை வாகனைக் (காணக்)

## 171. வருத்தத்தைத் தீராய்

பல்லவி

வருத்தத்தைத் தீராய் மலர்க்கண்ணாற் பாராய் (வருத்)

அநுபல்லவி

திருத்தமாகிய செகண்டிமலை நாதா (வருத்)

சரணங்கள்

1 சமர வடிவேலா அமரர் பணிகாலா (வருத்)

2 கோதண்டர் மருகா வேதண்ட முருகா (வருத்)

3 குன்றையம் பதியாய் நன்றுயர் துதியாய் (வருத்)

## 172. உந்தனனுபூதி தருவாய்

பல்லவி

உந்தனனுபூதி தருவாய் – நல்ல
உயர்ந்த மயிலின் மீது வருவாய் (உந்த)

அநுபல்லவி

கந்தமலர்ப் பொழில் சூழுஞ் செகண்டிக்
கனக மலையரசே வனச மலர்ப் பாதா (உந்த)

சரணங்கள்

1 கங்கையணி சடையார் பங்கிலுறை மயிலாள்
இங்கித மிகுபாலா துங்க மயில் வாகா (உந்த)

2 வானவர் தவமிகு ஞானவர் பணிசெயுந்
தேனலரணிபுய கானமயில் வாகா (உந்த)

3 தெண்டிரை சூழ்கின்ற மண்டலம் புகழுஞ்செ
கண்டிமலை வரு தொண்டர்கள் பணிபாதா (உந்த)

## 173. எனது துயரந்தீராய்

ராகம் : காம்போதி

பல்லவி

எனது துயரந் தீராய் கனக மயிலில் வாராய் (எனது)

சரணங்கள்

1 அமிர்த வசன சுப அலங்கிருத ரூபா
குமுதவிதட் குறமின் கொஞ்சிய நீபா (எனது)
2 கோகனக வேதா குருவுபதேசா
மாகவமரர்பணி வரத குகேசா (எனது)
3 கடிபொழில் சூழுஞ் செகண்டியின் மேரா
வடிவுறு மயிலணி மலர்க்கர வீரா (எனது)

## 174. ஒருகாலும் மறவாதே

ராகம் : ஆனந்தபைரவி

ஒருகாலும் மறவாதே மனமே – உனக்குக்
கருத்தானது யீதே (ஒருகா)

சரணங்கள்

1 இந்திரன் முதலின ரிறைஞ்சிய பாதனை
சுந்தரமிகு குறத் தோகையினுதனை (ஒருகா)
2 சேவலங் கொடியனைச் செங்கதிர் வேலனை
நாவலனை யுமை நாயகி பாலனை (ஒருகா)
3 குன்றைமலைக் கிசைந்த கோலனை நாயனை
நன்றடியார்க் கருணுதனை மாயனை (ஒருகா)

## 175. நித்தந் தரிசனம்

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

நித்தந் தரிசனந் தரவேணும் – என்மு
னிர்த்தன மயின்மிசை வரவேணும் (நித்தந்)

அநுபல்லவி

பத்தர்கள் முனிவர்கள் பணிசெய் பதாம்புயா (நித்தந்)

சரணங்கள்

1 ஆதி பராபர மாகிய ரூபா
நீதி யிலாத சூரை நீத்திடு கோபா (நித்தந்)

2 கங்கையணி சடைக் கர்த்தரருளு மைந்தா
மங்கை குறமயிலி மருவிய கந்தா (நித்தந்)

3 மஞ்சு சூழுஞ் செகண்டி மாமலைக் கதிபா
தஞ்சமென அன்பர் தான்புகழ் துதிபா (நித்தந்)

## 176. கவலையைத் தீர்ப்பாய்

பல்லவி

கவலையைத் தீர்ப்பாய் நவமலர்க்கண் பார்ப்பாய் (கவலை)

சரணங்கள்

1 ஆறுமுகத் தெய்வமே ஆருதுணையுண்டு
வேறு கதியுமில்லை விரும்பிய அன்பு கொண்டு (கவலை)

2 ஒருத்தர் துணையுமில்லை ஒருத்தர் கொடுப்பதில்லை
ஒருத்தர் ரட்சிப்பதில்லை உன்னை விடவுமில்லை (கவலை)

3 குன்றை யம்பதிவளர் குககுருபரனே
வென்றியுள்ள நெட்டிலை வேலணி கரனே (கவலை)

## 177. ஒருதரமையனைத் தரிசிப்பாய்

ராகம் : காம்போதி

பல்லவி

ஒருதர மையனைத் தரிசிப்பாய் – மனமே
யுள்ள மட்டுக்கும் போதும் (ஒருதர)

அநுபல்லவி

கருமுகிறவழ் குன்றைக் கனக மலையில் வளர்
கர்த்தனைப் பரமபதத் தனைக் கண்டு (ஒருதர)

சரணங்கள்

1 தீர்த்தங்க ளாடிச் செபதப முடித்துத்
தோத்திர மையன்மேற்றுதியுடன் படித்து
தோகை மயிலோனை வாகை யயிலோனை (ஒருதர)

2 பத்தர்கள் வினையிருட் பாஸ்கர விடிவைச்
சித்தி யருளிய சிவபர வடிவைத்
தேவர்க்கு ராசனை மூவர்க்கு நேசனை (ஒருதர)

3 யென்றைக்கு மன்பரை யீடேற்றஞ் செய்வோனை
வென்றிகொள் சூருயிர் வேரறக் கொய்வோனை
வெஞ்சமராளனை ரஞ்சித தாளனை (ஒருதர)

## 178. விதி விலகாதோ

பல்லவி

விதிவிலகாதோ துதிபெறு குன்றைத் தூயனைக்
கண்டால் (விதிவில)

சரணங்கள்

1 நேர்த்திய தாகவே தீர்த்தனைத் தரிசித்தால் (விதிவில)
2 மெய்யனை நயமிகு மையனைப் பூசித்தால் (விதிவில)
3 மாயனை வனமயினேயனைப் போற்றினுல் (விதிவில)

## 179. எத்தனை குற்றங்கள்

ராகம்: காம்போதி

பல்லவி

எத்தனை குற்றங்கள் செய்தாலும் பொறுத்
திருந்து ரட்சிப்பதுவே ஞாயம் (எத்தனை)

அநுபல்லவி

பத்தர்கள் நிறைதிருக் குன்றைக் குடிவரு
பரனே பரனே யரனே யரனே (எத்தனை)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி மாலைபுனைபுயா
நேசக்குற மயில் சினேக முருகையா (எத்தனை)
2 கங்கையணி சடைக் கர்த்தரருள் பாலா
செங்கை தனிலணி சித்திர வடிவேலா (எத்தனை)
3 அடியவர் மிடிதனை யழித்திடுஞ் சேயா
கடிமலர்க்குப தேசங் கருதிய வாயா (எத்தனை)

## 180. மறவாதே நெஞ்சமே

பல்லவி

மறவாதே நெஞ்சமே - மறவாதே (மறவாதே)

அநுபல்லவி

குறைமதி நுதலினள் குஞ்சரிநாதனை
தித்திதி மிதிமி திமிதி தித்தீயென
நிர்த்தமிடு மயினிர்மல ரூபனை (மறவாதே)

சரணங்கள்

1 சமரரண் விசய சங்கிராம கெம்பீர
பமரமலர் புனைவேற் பங்கச கரனை (மறவாதே)
2 கனக கொடு முடிசேர் கயிலையை நிகராந்
தினகர பிரபைமிகுஞ் செகண்டிமலை யோனை (மறவாதே)

## 181. இந்தச் சாமியைக் கண்டு தரிசித்தால்

ராகம் : காம்போதி

பல்லவி

இந்தச் சாமியைக் கண்டு தரிசித்தால்
இகபர சித்தியுண்டாம் (இந்த)

அநுபல்லவி

சொந்தச் சாமி யென்றடுத் தன்பர்
துதிக்குங் குன்றைப் பதிக்குகந்த (இந்த)

சரணங்கள்

1 வானுடர் பணிதேவ சேனுபதியாக
வந்த குருபர கந்தசாமியைத்
தேனுடுங் குழற் குறமானுள் மருவிய
சித்திர மயிலேறு சத்தியணி கையனை (இந்த)
2 கங்கையணி சடைச் சங்கையணி
கர்த்தரிடம்
மங்கை யுமையவ ளிங்கித மாகவே
வந்திடும் பாலனைக் கந்த சுவாமியை (இந்த)
3 குன்றைமலை வருநன்றருள் வேலனைக்
குககுரு தாசனை மகபதி மருகனை
வென்றி புனைபுய மன்றல் மலர் நீப
விருத்தி பெறுங்கன சத்குரு சங்காரனை (இந்த)

## 182. இதுவே தருணமையா

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

இதுவே தருணமையா சாமி (இதுவே)

அநுபல்லவி

மதுவேறிய பொழிற் சிகிமலை நாதனே (இதுவே)

சரணங்கள்

1 கந்தமிகு நீபா சுந்தர ரூபா (இதுவே)
2 தேனலர்ப் பாதா கான மின்னுதா (இதுவே)
3 மயின்மலை யோனே யயின் முருகோனே (இதுவே)

## 183. இகபர சாதனமுண்டு

பல்லவி

இகபர சாதன முண்டு சிகிமலை ஐயனைத்
தரிசனஞ் செய்தால் (இகபர)

சரணங்கள்

1 சமர வயிலோனைக் குமரப் பெருமானை
அமரர் பணிதேனை யனுதினந் துதித்தால் (இகபர)
2 கானக மயிலைத் தானணை யொயிலை
மான பொன்னயிலை வைத்தவனைக் கண்டால் (இகபர)
3 சங்கரர் பாலனை யிங்கித லோலனைச்
சங்கையில் கோலனைச் சந்ததம் பணிந்தால் (இகபர)

## 184. காணுவ தெந்நாளோ

ராகம் : புன்னுகவராளி
பல்லவி

காணுவ தெந்நாளோ (காணுவ)

அநுபல்லவி

சேனுயர் பொழிலுறை செகண்டி மலையோனைக் (காணுவ)

சரணங்கள்

1 நம்பின பேர்களை யிச்சித்து
அன்புட னடியரை ரட்சித்து
ஆண்டவனை நீபம் பூண்டவனை நான் (காணுவ)
2 அந்தர வானவர் முழுதுஞ்
சிந்தை மகிழ்வொடு தொழுதும்
சீருடன் துதிக்கும் பேருயர் வேலனைக் (காணுவ)
3 பன்னிரு கையனைத் தென்முரு கையனை
சிகிமலை வளருஞ் சுககுமரேசனைக் (காணுவ)

## 185. அஞ்சாதே மனதே

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

அஞ்சாதே மனதே அஞ்சாதே மனதே (அஞ்)

அநுபல்லவி

மஞ்சார் பொழிற் குன்றை
ஐயன் பன்னிரு கையனிருக்கையில் (அஞ்)

சரணங்கள்

1 ஆசா பாசத்தி லழுந்தி மயங்கிக்
காசார் முலையார் கண்வலையில் தியங்கி (அஞ்)

2 கனத்த தரித்திரக் கரையை யேற
மனத்துக் கிசைந்தபடி வணங்கிடத் தேற (அஞ்)

3 குன்றை மலைக்கிசை குகனைத் துதித்தேத்த
மன்றன் மலர்ப்புய வரதனைப் போற்ற (அஞ்)

## 186. கருத்தினினைத்தேன்

பல்லவி

கருத்தினினைத்தேன் – அனுதினங்
கண்டு துதித்தேன் (கருத்)

அநுபல்லவி

திருத்தகு குன்றைச் சிகிமலையானைக் (கருத்)

சரணங்கள்

1 பராபரமாகிய வெளியை மற்றச்
சராசர முதலான வொளியைக் (கருத்)

2 அண்ட பகிரண்ட ரூபியை யெதிர்
கொண்ட வசுரர்கள் கோபியைக் (கருத்)

3 நித்திய பூரண நிறையைப் பரி
சுத்தமதாகிய மறையைக் (கருத்)

## 187. கிடைப்பதரிதே

பல்லவி

கிடைப்பதரிதே சாமி பாதங் கிடைப்பதரிதே (கிடைப்)

அநுபல்லவி

நடக்கு மயிற்பரி நாம வேலவன் பாதங் (கிடைப்)

சரணங்கள்

1 சங்கர ரருளிய விங்கித பாலர் பாதங் (கிடைப்)
2 அண்டர் புரிபணி கொண்டவர் பாதங் (கிடைப்)
3 தேனலரணிபுய ஞான நாயகர் பாதங் (கிடைப்)

## 188. இன்னமொரு சனன மெடுப்பானே

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

இன்னமொரு சனன மெடுப்பானே - யதை
யெடுத்தெடுத் தின்னங் கெடுப்பானே (இன்ன)

அநுபல்லவி

வன்னமயின் மலை வந்த கந்தனை நல்ல
மார்க்கமுடன் பணிந்து தீர்க்கஞ் செய்து கொள்ளாமல்
(இன்ன)

சரணங்கள்

1 ஐம்பெரும் பூதத்தை யடக்கிக் கொண்டு
சம்பிரம மாகிய தற்பரனைக் கண்டு
சாலோக மடையாமற் பூலோகத்தினில் வந்து (இன்ன)

2 குன்றை நகரிலன்பு கொண்ட விறையோனை
என்று முனிவ ரிறைஞ்சிய மறையோனை
எக்காலமும் போற்றித் தொக்காயருள் பெருமல் (இன்ன)

## 189. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா - எனக்கொரு
ஆதரவு செய்குவாய் (ஆடிய)

அநுபல்லவி

கூடிய பொழிலுறை குன்றைமலை யோனே (ஆடிய)

சரணங்கள்

1 மனதுக் குழலுந்துயர் போக்குவாய்
யெனதிச்சைப் படியே யுண்டாக்குவாய் (ஆடிய)

2 இச்சையென்ன செய்ய ஐயா – அதிற்
பட்சமென் னத்துக்கருள் துய்யா (ஆடிய)

3 பங்கச மலர் முகநாதா – மலர்த்
துங்கமிகு மிருபாதா (ஆடிய)

## 190. மனதுக்கொரு திடஞ்சொல்லுவாய்

பல்லவி

மனதுக் கொருதிடஞ் சொல்லுவாய் சரவண பவனே
(மனதுக்)

அநுபல்லவி

கனகக்கிரி நிகருங் கதிர்ச் சிகிமலையதில் வருகுமரா (மனதுக்)

சரணங்கள்

1 அசுரர்கள் குலகாலா உமையவ ளருளிய வொருபாலா
யிசையுள நதிபோலா யழகிய இலகு குறமின் மாலா
(மனதுக்)

2 ஆடிய மயின்மீதே வந்து அருள்செய்வா யிப்போதே
தேடிய வடிப்போதே நினைக்குஞ் செல்வனை மறக்காதே
(மனதுக்)

3 சிகிமலை மேலோனே தண்டை சிறந்திடுங் காலோனே
நகுகன வேலோனே யெழுதாத நான்மறை நாலோனே
(மனதுக்)

## 191. வந்தருள்வாய் நீ

பல்லவி

வந்தருள்வாய் நீ சுந்தரமிகுந்த தோகை மலையோனே
(வந்தருள்)

சரணங்கள்

1 அரவணி புதல்வா சரவண பவனே (வந்தருள்)
2 வனச சரணு கன கானக மயிலா (வந்தருள்)
3 வானவர் பணிசெயும் ஞான சண்முகவா (வந்தருள்)

## 192. எந்தனைக் காப்பாய்

பல்லவி

எந்தனைக் காப்பாய் சுந்தர மிகுந்த தோகை மயிலோனே
(எந்தனை)

சரணங்கள்

1 சங்கர ரருளும் இங்கித பாலா (எந்தனை)
2 அன்பர்கள் பணியுந் தென்சிறை மயிலா (எந்தனை)
3 குன்றையின் மலையாய் நன்றருள் புரிவாய் (எந்தனை)

## 193. வன்ன வடிவேலவா

பல்லவி

வன்ன வடிவேலவா மன்னுசிகி மேரில் வாழ் (வன்ன)

சரண்ங்கள்

1 சமரமிகு சூரா குமர குருபரா (வன்ன)
2 ஆரண முடிவே காரண வடிவே (வன்ன)
3 நன்றுள்ள சாத்திரா குன்றையின் க்ஷேத்திரா (வன்ன)

## 194. நானு வறியலாமா

பல்லவி

நானு வறியலாமா நின்னருளில்லாமல்
நானு வறியலாமா (நானு)

அநுபல்லவி

வானுடர் பணி தேவ சேனுபதியே (நானு)

சரணங்கள்

1 கங்கையணி சடைக் கர்த்தரருளு மைந்தா
அங்கத்தை மங்கை வடிவாக்கிய சம்பந்தா (நானு)
2 கானக மயிலாள் காதல் கொளும் ரூபா
தேனலர் சூழு மனத்தே மலரணி நீபா (நானு)
3 தோகை மலையில் வளர் துரை சண்முகேசா
வாகை புனையயிலா மனக்கும் பிரகாசா (நானு)

## 195. தருணமிது வையனே

பல்லவி

தருணமிது வையனே அருண நிறமுடி மருவுஞ் சிகிமலையா (தருண)

சரணங்கள்

1 மாலை யணியும் புயா வாலை குறமினய்யா (தருண)

2 தேவர்கள் பணி பாதா மூவர்கள் முதனுதா (தருண)
3 சூர சங்காரா – வீர சிங்காரா (தருண)

## 196. ஆடியே துரையே

பல்லவி

ஆடிய துரையே மயின் மீது ஆடிய துரையே (ஆடிய)

அநுபல்லவி

சூடிய கொண்டைத் தோகையிலேறி (ஆடிய)

சரணங்கள்

1 அந்தர துந்துபி முழங்க சுந்தர வானவர் விளங்க (ஆடிய)
2 துன்னிய அடியவராட சின்னரர் சங்கீதம் பாட (ஆடிய)
3 தூவியின் மீது என்றுந் தாவிய குன்றையினின்று (ஆடிய)

## 197. சித்த மறியாதோ

ராகம் : காம்போதி

பல்லவி

சித்த மறியாதோ என் சாமி யுன் – சித்த மறியாதோ (சித்த)

அநுபல்லவி

பத்தியுடனே நித்தமும் பணி பத்தனென்பது கர்த்தனே யுனது (சித்த)

சரணங்கள்

1 உன்னை யல்லாது பின்னை
யொரு தெய்வமுண்டோ என்பது கண்டேனே யின்று (சித்த)
2 சன்னி தானத்தின் முன்னமே நின்று தன்
பத்தியுடன் பணியன் பனிவனென்று (சித்த)
3 ஆண்டவனே யுன்னை வேண்டினவ னென்னை
தூண்டில் மச்சம்போல் மால் பூண்டு மெலிவினை
தொலைத்து மிகுந்த நன்னலத்தைச் செய்வதாக (சித்த)
4 தோகை மலைக்குக வாகைபுனை வேலால்
துளைத்து தானவரைக் கிளைத்திட வொட்டாத
ஓகை புனை ஒயிலா பாகை நிகர் மொழியாள்
உல்லாச முருகேசா யெல்லாரும் பணிபாதா (சித்த)

## 198. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே ஒருதரந் தரிசித்துக்
கொண்டால் போதாதோ (குமர)

அநுபல்லவி

அமரர் பணி பாதனே சமர சங்காரனே
நான் மறை முனிவரர் நாடிய பாதனே
தேன் மலர்க்குழல் வள்ளி தேவியின் நாதனே (குமர)

சரணங்கள்

1 அண்ட பகிரண்ட மாகிய ரூபனே
வண்டனெனுஞ் சூரனே மாய்த்திடு கோபனே (குமர)

2 தோகை மலைவளர் சுந்தர முருகனே
வாகை புனைபுய மாயவன் மருகனே (குமர)

## 199. எந்நேரமும்

ராகம்: காம்போதி

பல்லவி

எந்நேரமுங் கண்டு தரிசனஞ் செய்தால்
இகபர சித்தியாமே (எந்நேர)

அநுபல்லவி

மின்னேர் முடிக்குன்றை வேலனைக் கோலனை (எந்நேர)

சரணங்கள்

1 சிந்தையை வேறிடஞ் செல்லா தடக்கி
ஐந்து புலன்களை யசையாது மடக்கி
ஆசையுடன் சென்று மோசமில்லாது நின்று (எந்நேர)

2 மாத ரிருவர்கள் மருவிய மோகனை
காதலுட னன்பர் கருதிய யோகனை
கண்ணாரவே கண்டு பண்ணாருந் துதிகொண்டு (எந்நேர)

3 வஞ்சனை செயுஞ்சூரை மாய்த்திடுஞ் சத்தியை
தஞ்சமலை யென்பரைத் தற்காக்குஞ் சித்தியைத்
தருஞ்சிகி மேலோனைப் பொருண்மறை நாலோனை
(எந்நேர)

## 200. மனதுக்கொரு திடஞ் சொல்லவேணும்

ராகம் : காம்போதி

பல்லவி

மனதுக்கொரு திடஞ்சொல்ல வேணும்
வந்த வினைதனை வெல்ல வேணும் [மனதுக்]

அநுபல்லவி

தினகர பிரபை முடிசேரும் பொழிலுறை
செகண்டி மலை வளர கண்ட பரிபூரண (மனதுக்)

சரணங்கள்

1 சங்கையில் லாதவிண்ணோர்
மங்களமுடனே தான் வந்து பணி பாதா
துங்க மயிலேறு மிங்கித சரவண தூய சண்முக நாதா (மனதுக்)

2 துதிக்கு மடியவர்க்கு கதிக்கு மருள்புரி சுந்தர குமரேசா
உதிக்கும் வானிலகு மதிக்குறை முடியுமை யருளிய பிரகாசா (மனதுக்)

3 வஞ்ச வரக்கரை யஞ்சும் படியவரை மாய்த்தவனே ஆசிலாத்
தஞ்சம் வேறில்லை ரஞ்சித தமிழருள் சர்வேஸ்வரா யேசிலா (மனதுக்)

## 201. அருள்செய்ய வேணும்

பல்லவி

அருள் செய்ய வேணும் சாமி அருள் செய்ய வேணும் (அருள்)

அநுபல்லவி

இருள்செய்யும் பொழிலுறை யெழிற்சிகி மலையோனே (அருள்)

சரணங்கள்

1 எந்தனக் குன்னை யல்லாலி னியொரு தெய்வமில்லை
தந்து ரட்சியா விட்டாற் சாமி யிது தொல்லை (அருள்)

2 எப்படியு மினியெந்தனைக் காக்க வேணும்
அப்பவல்லோ சாமி யடியேனுக்குத் தோணும் (அருள்)

3 அண்ட பகிரண்டம் யாவும் நிறைபரனே
தொண்டர் மனதினிற் றேனும் குருபரனே (அருள்)

## 202. கடைக்கண் பாரய்யா

பல்லவி

கடைக்கண் பாரய்யா சாமி கடைக்கண் பாரய்யா (கடைக்)

அநுபல்லவி

மடைக்கண் போலத் தேன் பாயு நீப மாலை மார்பனே
(கடைக்)

சரணங்கள்

1 கதி வேறில்லையோ வென்று கேட்கிறேன் வேலா
மதி சூடிய கர்த்தர் மகிழ்ந்தருள் பாலா (கடைக்)

2 பத்தர்கள் வாழவே கிருபை பண்ணு மூர்த்தியே
எத்தலத்தினு நிறைந்திலங்கும் கீர்த்தியே (கடைக்)

3 குன்றை மலையிலே யருள்கொண்ட நாதனே
மன்றன் மேவிய செந்தாமரையின் பாதனே (கடைக்)

## 203. தரிசிக்க வேணுமே

ராகம் : சகாணு

பல்லவி

தரிசிக்க வேணுமே என்னய்யனை நான்
சிந்திக்கத் தோணுமே (தரி)

அநுபல்லவி

பரிசுத்த ருத்ராட்ச பஞ்சாட்சர மணி (தரு)

சரணங்கள்

1 பத்தியுடன் மனப்பரிவு மிகக் கொண்டு
சுத்த நிட்களமான சொரூபியைக் கண்டு (தரி)

1 சஞ்சித பார சத்துவந்தன்னையே போக்க
மிஞ்சிய நோயையுந் தீவினையையு நீக்க (தரி)

3 தோகை மலைவளர் துரை முருகேசனை
வாகை புனையும் சிகிவளர் பிரகாசனைத் (தரி)

## 204. எனக்கொரு குறைவந்தால்

பல்லவி

எனக்கொரு குறை வந்தால் தனக்கில்லையோ சாமி (எனக்)

அநுபல்லவி

மனக்குறை தீர்க்கும் வரத சண்முகனே (எனக்)

சரணங்கள்

1 வாச மிகுந்த நீப மாலை யணியும் வாகா
நேச மிகுந்த குற நேரிழை யிடப்பாகா (எனக்)

2 மாயப் பிறவியில் மயங்கிட மாட்டி
தீய யிச்சையி லென்னைச் செலுத்துவ தென்னக் கோட்டி (எனக்)

3 நல்லோர் பணியுங் குன்றை நன்னகர் வாழ்வோனே
சொல்லரிய ஞானச் சுபரச மிகுந்தேனே (எனக்)

## 205. சரவணபவனே

பல்லவி

சரவண பவனே என்றன்னை யாள்பவனே (சரவண)

அநுபல்லவி

அரகார வெனவே யன்பர்கள் பணி பாதா (சரவண)

சரணங்கள்

1 மனதிற் கவலையை மாற்றி வைப்பாயே
எனதிச்சை யின்படி யதை யருள்வாயே (சரவண)

2 இருமட மாதர்களிச்சைக் குகந்த தோளா
செருவி லெதிர்ந்தவர்கள் சேவிக்குந் தாளா (சரவண)

3 கொடுமுடி மிகுந்த குன்றை யினுதா
முடுகிய தானவர் முன்னடு வரதா (சரவண)

## 206. வரந்தர வேணும்

பல்லவி

வரந்தர வேணும் புரந்தரன் முதலன்பு புரியும் குன்ருக் குடியாய் (வரந்)

அநுபல்லவி

கந்தனே ஞான சம்பந்தனே யெனக்கினி (வரந்)

சரணங்கள்

1 சேவலனே யுயர் காவலனே யெனக்கு (வரந்)
2 கானமயில் மேவிய மான்மருகா யெனக்கு (வரந்)

## 207. எந்த வினையுந் தீருமே

ராகம் : பியாகடை

பல்லவி

எந்த வினையுந் தீருமே மனதிட்ட காமியஞ் சேருமே (எந்த)

அநுபல்லவி

கந்தமலர்ப் பொழிற் குன்றை மலையோனைக்
கண்டாலும் பணி கொண்டாலு மினி (எந்த)

சரணங்கள்

1 வஞ்ச வசுரனை மாவென நின்றோனை
அஞ்சவே செயமாக வென்றோனை
அன்புடன் றுணிந்து யின்புடன் பணிந்தால் (எந்த)

2 அண்டர்க் கருளு மாறிரு குகையோனை
மண்டிய பூதி வரைந்திடு மெய்யோனை
வர்த்தனை யாகவே நித்தமுந் துதித்தால் (எந்த)

3 வாச நீபமென் மாலை வாகனை
நேசமாங்குற நேரிழை பாகனை
நெஞ்சுடன் சரண கஞ்சத்தைப் பணிந்தால் (எந்த)

## 208. வினைப் பயனோ

பல்லவி

வினைப்பயனோ சாமி (வினைப்)

அநுபல்லவி

உனக்கடிமை யாகியும்
உண்மையில் லாதது (வினைப்)

சரணங்கள்

1 பரகதி யடைவதும் நரகமடைவதும்
வரநின் முனடைவதும் சரவண பவனே (வினைப்)

2 நோயாளி யாவதும் பேயாகப் போவதும்
தாயான வுனா திடஞ் சேயாயிருப்பதும் (வினைப்)

## 209. அருள்தர வேணும்

பல்லவி

அருள் தரவேணும் சாமி யருள் தரவேணும் (அருள்)

அநுபல்லவி

திருவளர் பொழிலுறை செகண்டி மலை நாதா (அருள்)

சரணங்கள்

1 சமர வடிவேலா மனதுட னமரர் பணிகாலா (அருள்)
2 சங்கர ரருண்மகனே வள்ளியம்மை பங்கில்வரு குகனே (அருள்)
2 சிகியின் மலையோனே பொருணிறை பகரும் கலையோனே (அருள்)

## 210. என்னை யாளாய்

பல்லவி

என்னை யாளாய் பின்னை வேறுண்டோ (என்னை)

சரணங்கள்

1 வானவர் பணிதாளா கானமின்னுள கனாளா (என்னை)
2 சங்கர ரருள் பாலா துங்கமிகு வேலா (என்னை)
3 குன்றையின் மலைவாசா நன்றருள் புரியீசா (என்னை)

## 211. இன்னந் தயவு வரவில்லையோ

ராகம் : காம்போதி

பல்லவி

இன்னந் தயவு வரவில்லையோ – மன
திட்டப்படி வரந்தல்லையோ (இன்னந்)

அநுபல்லவி

வன்னமயிற் குருபரனே – குன்றை
மலைக்குக வயிற்கரனே (இன்னந்)

சரணங்கள்

1 உய்யும்படிக் கினி யுன்னிடஞ் சேர்க்க
ஐயனே வேண்டு மருட்கண் பார்க்க (இன்னந்)
3 என்புருக நின்று யின்புடனேத்த
அன்புடனே நின்னலர் ப்பபத்தம் போற்ற (இன்னந்)

3 வஞ்ச வசுரரை மாய்த்திடு கைய
அஞ்ச வேண்டாமென் ருதரவு செய்ய (இன்னந்)

## 212. அறியாத தென்ன சாமி

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

அறியாத தென்ன சாமி முருகையனே மெய்யனே (அறியா)

அநுபல்லவி

சிறியோ ரானவர் தெரிந்துந் தெரியாமற் செய்த பிழை
தன்னை (அறியா)

சரணங்கள்

1 சூடுஞ் சடைமுடித் தூயோனே - யருள்
ஆடு மயிலி லெழுந்தருளிய செயனே
அடியவனிவனமக்கடிமைய னென்று (அறியாத)

2 மாலை யணிபுய மாயனே - நல்ல
சோலைக் குறத்திபுணர் சுந்தர நாயனே
சுத்தமுடன் பணி பத்தனிவ னென்று (அறியாத)

3 பரம பதத்தோனே பங்கயனே பணி
சரவணபவனே தகுமதிசயனே
தண்டமிழ் பாடிய தொண்டனிவ னென்று (அறியாத)

## 213. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே அமரர் பணிபவனே (குமர)

சரணங்கள்

1 சகம் பரவிய தேவே கானச் சுகஞ்செய் மின்னுள் கோவே
(குமர)

2 திருமகள் மகிழ் மருகா யெனக் கருள்புரி திருமுருகா
(குமர)

3 தோகை மலை யீசா வெற்றி வாகை புனை குகேசா (குமர)

## 214. இந்த வேளை வந்து

பல்லவி

இந்த வேளை வந்து ரட்சி ஐயா (இந்த)

அநுபல்லவி

அந்த வேளை வென்றவர் பாலா யெந்தனக்கு
ஆதரவு செய்குவாயா (இந்த)

சரணங்கள்

1 மதுமலர் நீப மாலை வாகனே - நல்ல
விதுமுகக் குறமாது பாகனே (இந்த)

2 நின்னை யல்லது வேறு கதியேது சாமி யெந்
தன்னை ரட்சிக்குந் தெய்வ மிப்போது (இந்த)

3 சொன்னமலை நிகருந் தோகையா யவுணர் குலத்தை
முன்னம் வென்று புனையும் வாகையா (இந்த)

## 215. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா அன்பர் தேடிய அயிலா (ஆடிய)

சரணங்கள்

1 கந்தனே குகனே பரனுர் கொந்தனே மகனே (ஆடிய)

2 தீவினை தீராய் மயின்மேவியே வாராய் (ஆடிய)

3 குன்றையின் மேரா நீப மன்றல்கொள் மாரா (ஆடிய)

## 216. சேவற் கொடியோனே

பல்லவி

சேவற் கொடியோனே யென தாவற் கிசைவோனே
(சேவற்)

அநுபல்லவி

மூவர்க்கு மேலான மூர்த்தி கரனே (சேவற்)

சரணங்கள்

1 கூற்றுவனுர் வந்து கூப்பிடு முன்னே
பார்த்து அனுக்கிரகம் பண்ணுமையா யின்னே (சேவற்)

2 அடியவர் பணியுமையனே மெய்யனே
குடிவளர் குறமகள் கொண்டிடு மையனே (சேவற்)

3 ஆறுமுகவ குன்றையம் பதியாய் - பின்னை
வேறுகதி யில்லை வேண்டினே னுன்னை (சேவற்)

## 217. எனக்கொரு வரம்

பல்லவி

எனக்கொரு வரந்தருவாய் வனக்குற மயில்தோழா (எனக்)

சரணங்கள்

1 மண்டி வருமவுணர் கொண்டபடை முழுதும்
கண்டதையெதிரெதிர் சண்டைசெய் யயிலா (எனக்)

2 பத்தர் மிடிகள் தவிர்த்திடு குருபரா
தத்திய மயிலை நடத்திடு வீரா (எனக்)

3 வாகை புனைபுயவா ஓகைபுனை யொயிலா
கோகனக சரணு தோகை மலைமுருகா (எனக்)

## 218. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே ஆவலாகியே யெனையாதரித்தாள்வாய் (தேவ)

சரணங்கள்

1 ஞானராசனே கான மானினேசனே (தேவ)

2 ஈசர் பாலனே பிரகாச லோலனே (தேவ)

3 கண்டியாளனே மலர்கொண்ட தோளனே (தேவ)

## 219. தயவு செய்யாத தென்னசாமி

ராகம்: ஆனந்தபைரவி

பல்லவி

தயவு செய்யாத தென்ன சாமி (தயவு)

அநுபல்லவி

புயறவழுங் குன்றைப் பொருப்பி லிருப்பவனே (தயவு)

சரணங்கள்

1 வந்த வினைகளெல்லாம் நீறவே - யினி
யெந்த வினைகளு மாறவே
யிச்சை வைத்தென்மேற் பட்சம் வைத்துத் (தயவு)

2 அன்புகனிந் தொழுகக் கொண்டு நின்று
முன்பு நின் சன்னிதியைக் கண்டு
முக்கிய மாகத் துதிக்கும் படியாகத் (தயவு)

3 குன்றைப் பதிக்கரசாக வந்த
மன்றற் கடம்பணிவாக மாயன்
மருகனே வேலு முருகனே யென்மேல் (தயவு)

## 220. வரஞ் செய்யாத தென்னசாமி

பல்லவி

வரஞ் செய்யாததென்ன – சாமி
பரஞ்சுடராகிய பத்ம விலோசனு (வரஞ்)

சரணங்கள்

1 எந்த விதத்திலும் வந்தவினை தீர
அந்தமிகு நயம் வந்தது சேர (வரஞ்)

2 சந்தத மாகிய செந்தமிழ் பாட
இந்திரர் பவிசு மிகுந்து கைகூட (வரஞ்

3 குன்றைமலை மீது யென்றும் வளர்பவா
நின்ற வசுரனை வென்று வருபவா (வரஞ்)

## 221. எனக்கு முன் வரவேணும்

பல்லவி

எனக்கு முன் வரவேணும் வனக்குறமாது தோழா (எனக்)

சரணங்கள்

1 வாது செய் சூரனை மோது வேல வீரனே (எனக்)
2 செங்கை கொளயிலா தங்க நன்மயிலா (எனக்)
3 குன்றையின் மலையாய் நன்றுள கலையாய் (எனக்)

## 222. மைந்தனை நினை மனமே

பல்லவி

மைந்தனை நினை மனமே (மைந்தனை)

அநுபல்லவி

அந்தமிகு சிகிமலையில் வாழு மரவமணியுயர் பரம ரருளிய
(மைந்தனை)

சரணங்கள்

1 கோலவானி லண்டர் தமக்காக ஆல முண்ட கண்டர்
(மைந்தனை)

2 கங்கை சூடு சடையார் துய்ய செங்கண் மகிழ்விடையார்
(மைந்தனே)

3 கயிலை மலையரனு ருமையின் மயிலை மகிழ்பரனுர்
(மைந்தனே)

## 223. இதைப்பார்க்க வேறுமுண்டோ

பல்லவி

இதைப்பார்க்க வேறுமுண்டோ - மனமே (இதைப்)

அநுபல்லவி

அதைப்பார்க்க நினைவே அற்புயனை நீப மற்புயனைத் துதி
(இதைப்)

சரணங்கள்

1 அரகரவெனச் செபம் பண்ணு - அனுதினங்
கரமலர் குவித்து நீ யிரவுபகலு மெண்ணு (இதைப்)

2 ஐயன் சரித்திரத்தைப் பாரு உனக்குத்தான்
மெய்யன்பு நல்வழியா லெய்தும்படி சேரு (இதைப்)

3 குன்றை யம்பதிக்கு நீ செல்லு - ஆண்டவன்முன்
நின்று தீவினை தன்னை யின்றுநீ வெல்லு (இதைப்)

## 224. வாராத தென்ன சுவாமி

பல்லவி

வாராத தென்ன சுவாமி தீராத வினையெல்லாந் தீர்த்து
ரட்சிக்க
வாராததென்ன சுவாமி (வாராத)

சரணங்கள்

1 பன்னிரு கையிலும் பாரவயில் பிடித்து
யென்னிரு கண்குளிர யெழில் நீபமுடித்து (வாராத)

2 இச்சையுடன் மயிலேறியே யாடி
செச்சைபுனைபுயர் சேயே யெனைத் தேடி (வாராத)

3 குன்றையம் பதிவளர் கோகனகப் பாதா
யின்றெனை ரட்சிப்பாய் யென்னுடைய நாதா (வாராத)

## 225. சரவணபவனே

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

சரவணபவனே குன்றைப் பரமசிவனே (சரவண)

சரணங்கள்

1 சுகமுள்ள வாழ்க்கையை யுறவே வேணும் – நல்ல
யிக பரசாதனம் பெறவேணும் (சரவண)

2 நடன மயிலேறி வரவேணும் – யெந்தன்
நெஞ்டர் நோய்க்கருள் தரவேணும் (சரவண)

3 உந்தனை யல்லால் வேறு கதியேது உன்னை
வந்தனை யல்லால் வேறு துதியேது சாமி (சரவண)

## 226. என்னைக் காப்பதாரய்யா

ராகம் : சங்கராபரணம்

பல்லவி

என்னைக் காப்பதாராய்யா யினி யெந்தனைக் கண்பாரய்யா
(என்னை)

அநுபல்லவி

வன்னச் சிறையின் மயிலேறி வந்து விளையாடு முந்தனைப்
பாடும் (என்னை)

சரணங்கள்

1 பூதாதியால் வந்த தேகம் – நாளும் பொய்யான
வாழ்க்கையின் மோகம்
பேதாதி பேதமனேகஞ் செய்யும் பிரபஞ்ச மாய்கையை
நீக்கி
யருள் நெஞ்சின் மேலுண்டாக்கி (என்னை)

2 வஞ்ச வினைகளைச் செய்யாமல் சத்திய
வாய்மையு நேயமும் பொய்யாமல்
கொஞ்சு மின்னு ராசை வைய்யாமல்
கொடுத்துமிக விச்சித்து அடுத்து இனி ரட்சித்து
(என்னை)

3 குன்றைமலை யினுதனே வள்ளி குஞ்சரி மேவும்
வினேதனே
என்று மடியவர்க் கருணீதனே யெனக்
கிஷ்ட காமியந்தந்து சிஷ்டர்களுடன் வந்து (என்னை)

## 227. சுப்பையா

பல்லவி

சுப்பையா அருள் செய்வதெப்பையா —சாமி (சுப்பையா)

அநுபல்லவி

ஃமைப் பொழில்கள் சூழும் குன்றை மாமலை தனக்கதிபனே (சுப்பையா)

சரணங்கள்

1 சரவணபவ னெனத் தானே யுருச்செபித்து
இரவு பகலு நெஞ்சிலிசை விடாமனினைத்து
இருக்கு மெனைக்காத் (தருளெனைச் சேர்க்க) தருள்
குகனே (சுப்பையா)

2 கானக்குறப் பெண்ணுட காதல் நாதனே
வானக்குரிசில் பணி மாமலர்ப் பாதனே
வனச மலரின் வேதா மனதொடு பணி நீதா
(சுப்பையா)

3 குன்றைமலைக் கிசைந்த கோல மயில்வாகனு
மன்றல் மலர்நீபமாலை புனையும் யோகா
வடிவுறு தூயா அடியவர் சகாயா (சுப்பையா)

## 228. இரு கையால் வேலெடுத்து

பல்லவி

இரு கையால் வேலெடுத்து முருகையா வரவேணும்
(இருகை)

சரணங்கள்

1 அருமறை புகழ்தேவே திருவருள் புரிகோவே
(இருகை)

2 அந்தர வாணர்தானே வந்தடி பணிதேனே (இருகை)

3 குன்றையின் மலைமீது நின்றவனே யிப்போது (இருகை)

## 229. ஆரிருக்கிறுர்

பல்லவி

ஆரிருக்கிரு ரென்பதறியாயோ — சாமி (ஆரிருக்)

அநுபல்லவி

சீரிருக்குங் குன்றைச் செகண்டி மலையோனே (ஆரிருக்)

சரணங்கள்

1 நான் மறை புகழு நாதனே போதனே
வான்வளர் தெய்வானை வாசனே நேசனே (ஆரிருக்)

2 அண்டர் முனிவரர்க் கடஞ் செய்து திடஞ் செய்யு
விண்டிட வசுரனை வென்றவா கொன்றவ (ஆரிருக்)

3 குன்றையின் மலைவளர் குகனே சுகனே
யென்று மடியர்க் கருளீசனே ராசனே (ஆரிருக்)

## 230. எப்படியும் ரட்சிப்பது நாமன்றோ

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

எப்படியும் ரட்சிப்பது நாமன்றோ
என்பது தெரியாதோ (எப்படி)

அநுபல்லவி

மைப்பொழில் சேருங் குன்றை மாமலை வாசனே சாமி
(எப்படி)

சரணங்கள்

1 தேடாதிருந்தாலும் வரஞ் செய்யாதிருந்தாலும்
நாடாதிருந்தாலும் யென்னை நத்தாதிருந்தாலும் சாமி
(எப்படி)

2 மாதத்தை யிலொருதர மங்கே வராத போதிலும்
தோத்திரஞ் செய்ய மனதிற் றோனாத போதிலும் சாமி
(எப்படி)

3 வாசமலர் நீபமணி மாலையணி தேவர்
யீசரருள்பாலா வான யிமையவர் பணிதேவா (எப்படி)

## 231. ஆருந்துணையில்லாபேரும்

பல்லவி

ஆருந் துணையில்லா பேருமுனைச் சேர்ந்தா
லாதரவு செய்குவ தாரய்யா (ஆருந்)

அநுபல்லவி

மேருந் துணையில்லாத குன்றைமலை வாழும்
வித்தகனே பரிசுத்தனே சாமி (ஆருந்)

சரணங்கள்

1 பன்னிரு கையினி லுன்னித வேலெடுத்து
பாரமயிலி லேறிச் சூரனை வென்றவா
உன்னிரு பாதத்தை நன்னய மாகவே
உண்டென்ப வருக்குக் கண்டெதிர் நின்றவா (ஆருந்)

2 கூனற் சிலையின் வேடக் கானக் குறத்திக் காசை
கொண்டு அவளைக் கண்ணுற் கண்டு மயங்கு நாதா
வானவர்க் கரனும் ஞானத் தலைவரும்
வந்து வணங்குகின்ற கந்தமலர்ப் பாதா (ஆருந்)

3 கோகனகத் திருவை மோகமுடன் புணருங்
கோமள மேனியன் மாமருகா குகா
சேகர் நிறமுள்ள மாக முயர்ந்திலகு
செகண்டிமலையா யருளு கந்த வறுமுகவா (ஆருந்)

## 232. கனக மயிலேறி வருவாய்

பல்லவி

கனக மயிலேறி வருவாய் – யெந்தன்
கவலையைத் தீர்த்தருள் தருவாய் (கனக)

அநுபல்லவி

வனச மலர்மாது வளருங் குன்றை
மலைக் குகந்தவா கலைக் குகந்தவா (கனக)

சரணங்கள்

1 எப்படியுமுனை வந்தடுத்தடுத்தவ ரீடேறும்படி செய்ய
நல்ல
செப்புமுலை மின்னு ராசையை விட்டு நத்தி வலிய
சுகம் பெற்றுய்ய (கனக)

2 எந்த விதத்திலு மன்பருடைய இடுக்கண் யாவையுந்
தீர்க்க வாசக்
கந்தமலர் போன்ற பன்னிரு கருணைக் கண்களா
லெந்தனைப் பார்க்க (கனக)

3 நம்பு மடியவர் தங்கட் கிடையூறு நாட்டிய பேர்களை
வெல்ல
தென்புடனே யுன்னை ரட்சிக்கிறே மென்று சேயிதழ்
வாயினுற் சொல்ல (கனக)

## 233. தரிசனஞ் செய்தேனே

ராகம்: ஆனந்தபைரவி

பல்லவி

தரிசனஞ் செய்தேனே (தரிச)

அநுபல்லவி

கரிசனமுடனே பரிசனஞ் சூழவே
கார்த்திகைத் திருவிழா வெகு
நேர்த்தி நேர்த்தியென்று (தரிச)

சரணங்கள்

1 பங்கய வாவியிற் படிந்து தானம் பண்ணி
பஞ்சாட்சரந் தரித்து அஞ்சாட்சரம் செபித்து
செங்கை சிரசிற் கூப்பிச் சேவடிகளை யெண்ணிச்
சிந்தையி லன்பு கொண்டு எந்தையை முன்பு கண்டு (தரிச)

2 வேதாந்தப் பொருளை விளங்குங் குமரனை
மேலான முத்தனை நாலான சித்தனை
நாதாந்தப் பொருளை நாடரும் பரனை
நன்மை சாலுமனேக சென்ம சாபலமாகத் (தரிச)

3 விண்வளர் கோவிலும் விசித்திர தூவியும்
வீதிகொள் தீபமும் சுற்றிய தூபமும்
கண்வளர் வீதியுங் கானமும் வாவியும்
கருத்தினிற் சேர்த்து விருப்புடன் பார்த்துத் (தரிச)

## 234. கந்தனை மறவாதே

பல்லவி

கந்தனை மறவாதே கவனம் வேறென் றெண்ணாதே
(கந்தனை)

அநுபல்லவி

வந்த வினையெல்லா நீறுமே பொல்லா மாயப் பிறவியு
மாறுமே (கந்தனை)

சரணங்கள்

1 ஆசா பாசந் தீருமே நல்ல ஆனந்த வீடு சேருமே
காசார் முலையார் கண்வலைக்குட் பட்டுக் கன்றிடாத
நன்றி சாருமே (கந்தனை)

2 வானவருடைய நாடழித்த மாவவுணனை யீடழித்த
கானவர் மாதுமேற் காதல் கொண்ட கர்த்தனைப்
பரிசுத்தனை (கந்தனை)

3 குன்றையம் பதிவாசனை யனுகூலனைப் பிரகாசனை
வென்றி சேர்கன வீரப் பிரதாப வேலனை மயிற்கோலனை
(கந்தனை)

## 235. நானுந்தன் பாதத்தை நம்பினேனையா

பல்லவி

நானுந்தன் பாதத்தை நம்பினேனையா (நானுந்)

அநுபல்லவி

யேனுந்தன் பாதத்தை நம்பினே னென்றால் – இனி
யெனக்குக் கதிவேறு இல்லையென்று சாமி (நானுந்)

சரணங்கள்

1 உலகிலடியவரை யுய்யும்படி செய்து
அலகிலாத வுனதருள் மழை பெய்து
ஆதரித்து ரட்சிக்கு மாண்டவனீ யென்று (நானுந்)

2 வந்த வினைதன்னை மாறும் படியாக
எந்த விதத்திலு மிப்படி யனேக
இச்சையுடனருளு மெம்பிரா னென்று (நானுந்)

3 குன்றையின் மலைவளர் குககுரு பரனே
யென்று மடுத்தவருக் கீந்திடும் வரனே
யெப்பொழுது முனையித யத்தில் நினைந்து (நானுந்)

## 236. தஞ்சம் வேறில்லை ஐயா

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

தஞ்சம் வேறில்லை ஐயா –
மஞ்சடர் சோலை மயின்மலை நாதா (தஞ்சம்)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புன வள்ளி மின்னெயிலா
துள்ளி விளையாடிய புள்ளி மயிலா (தஞ்சம்)

2 வானவர் முனிவர்கள் தியான சர்வேசா
தேனலரணிபுய ஞான விஸ்வாசா (தஞ்சம்)

3 எண்டிசை புகழுஞ் செகண்டியின் மேரா
மண்டிய சூரனைக் கண்டித சாரா (தஞ்சம்)

## 237. எத்தனை நாட்செல்லுமோ

பல்லவி

எத்தனை நாட்செல்லுமோ
பத்தனைக் காக்கும்படி மனம்வர (எத்தனை)

சரணங்கள்

1 தாரித்திரத்திற்றன் விழுந்தலைந்து
பாரிற்றிரிந்து பட்டுக்குலை பதறுமல் மனஞ் சிதறுமற்
காக்க (எத்தனை)
2 ஆசா பாசத்தில வதிப்பட்டுத்
தேசா தேசத்திற் சென்று கெட்டு
சித்தமுரு காம லுத்தமனே காக்க (எத்தனை)
3 சிகிமலைக் கொரு தெய்வமே யுன்னை
யகமதினினைத் தன்புறு மெனின்
ஆதரித் தெப்போதும் பூதலத்திற் காக்க (எத்தனை)

## 238. சித்த மிரங்க வேணும்

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

சித்த மிரங்க வேணும்
முத்தலமும் புகழ்முது குன்றைமலை யோனே (சித்த)

சரணங்கள்

1 விற்பன முனிவர்கள் வேண்டிய தேவே
யற்புத குறமயிலாள் மகிழ்கோவே (சித்த)
2 ஞான நயகுண ரஞ்சிதப் பொருளே
தேனலரயனுட செவிக்குரை யருளே (சித்த)
3 பத்தனரி வனென்று பரிவுடன் பார்க்க
மெத்தவு மனதில் விரும்பியே காக்க (சித்த)

## 239. ஆடிக்கொண்டு

பல்லவி

ஆடிக்கொண்டு மயின்மீது நானுசை கொண்டு காண
வருவாய் (ஆடிக்)

அநுபல்லவி

தேடிக் கொண்டு வருமன்ப னெதிர் முன்னே
திருந்திதித்திமி தகுந்ததோமென (ஆடிக்)

சரணங்கள்

1 அண்டர் முனிவரர் காணவே - யுருகுந்
தொண்ட ரிதயந் தோணவே
தொத்திமிதியெனத் தாதிதிகுவென (ஆடிக்)

2 சதங்கை கிண்கிணி யாடவே – திவ்விய
யிதங்கள் கின்னரர் பாடவே
யிசைகொள் வாத்தியந் திசைக ளார்ப்பவே (ஆடிக்)

## 240. பத்தனுனல்லவோ

பல்லவி

பத்தனுனல்லவோ முத்தர் புகழு முதல்வனே சாமி (பத்த)

சரணங்கள்

1 தஞ்சம் வேறில்லை சாமியென் றுருக்கும்
நெஞ்சகத் தினினைக் கொண்டிருக்கும் (பத்த)

2 வேண்டின படிக்கு விரும்பித் துதிக்கும்
ஆண்டவனே யென்று அகமதிற் பதிக்கும் (பத்த)

3 அல்லும் பகலு மன்புடன் றேடும்
சொல்லும் பொருளுந் துலங்கப் பாடும் (பத்த)

## 241. செகன் மோகனு

பல்லவி

செகன் மோகனு சுககுமரா செகன் மோகனு (செகன்)

சரணங்கள்

1 வனச மலரின் வேதா பரவு கனக சதங்கைப் பாதா
(செகன்)

2 வள்ளி மனோகரனே சூரிய தெள்ளிய வயில்தரனே
(செகன்)

3 சருவ சாத்திர சாகரா குன்றை மேவு குருபர
ஞானசேகரா (செகன்)

## 242. எந்த விதத்திலும் சாமி

பல்லவி

எந்த விதத்திலும் சாமி வந்தருள் செய்குவாய் (எந்த)

அநுபல்லவி

கந்த மலர்ப்பொழில் சூழுயர் செகண்டிமலை வளரண்டர்
நாயகா (எந்த)

சரணங்கள்

1 உமை யொரு பங்கிலமையு மெங்க
ளுத்தமனு ரருள் புத்திரனே சாமி (எந்த)

2 நன்மையிலாத தின்மைய னுனலும்
நாதனே நான்கு வேதனே சாமி (எந்த)

3 புத்தியில்லாத பத்தனுனலும்
பூரணனே செக காரணனே சாமி (எந்த)

## 243. தருணத்தி லுதவ வேணும்

ராகம்: பியாகடை

பல்லவி

தருணத்தி லுதவ வேணும் – அது
தானே யுலகுக் கெல்லாந் தோணும் (தருணத்)

அநுபல்லவி

வருணத்திலுயர் வேத மறையவர் பூசிதா (தருணத்)

சரணங்கள்

1 அந்தி மதியணி சடையார் நல்ல சுந்தர மாமழ
விடையார்
துய்யனே பன்னிரு கையனே சாமி (தருணத்)

2 தற்பர வடிவான நாதா – திவ்விய
அற்புத மாகிய பாதா – வானி
லண்டர் முனிவர்கள் தொண்டர்கள் தோத்திரா
(தருணத்)

3 குன்றை மலைக்கு வாசா கானில் மன்றல் மயிற்கு நேசா
மனதில்
வஞ்சக மில்லாது தஞ்ச மென்பவர்க்கு (தருணத்)

## 244. என்னை யாள வேணும்

பல்லவி

என்னை யாள வேணும் உன்னை யடுத்தேன் (என்னை)

சரணங்கள்

1 உந்தனைத் தேடாமற் போனாலு மினி
யெந்த விதத்தினி லானாலும் (என்னை)

2 பூசியா திருந்தாலும் உன்பா னேசியா திருந்தாலும் (என்னை)

3 குன்றைமலைக் குகந்து வளர் மன்றனீப முன்வந்து (என்னை)

## 245. அருளாறு முகனே

பல்லவி

அருளாறு முகனே குருபர குகனே (அருளா)

சரணங்கள்

1 மாயவன் மருகா அடியர்க்கு தாயக முருகா (அருளா)

2 வரஞ் செயவேணும் மனதுக்குத் திறம்படத் தோணும் (அருளா)

3 குன்றையின் மேரா அசுரனை வென்றிடுஞ் சூரா (அருளா)

## 246. எனக்கொன்றுந் தெரியாதே

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

எனக்கொன்றுந் தெரியாதே (எனக்)

அநுபல்லவி

வனக்குன்று முலை வள்ளி மங்கை மணாளா (எனக்)

சரணங்கள்

1 இகமதிற் றுயரிடரினைத் துடைப்பாயோ
சுகமயக்கு வழிதனை யடைப்பாயோ (எனக்)

2 அடியவர்க்கு யெந்தனை யாளிட வெண்ணுவாயோ
கடிமல ருன்னடியைக் காத்திடப் பண்ணுவாயோ (எனக்)

3 மூதண்டம் புகழ் கிரி முடிவளர் முருகா
மாதண்டம் புரியு மாயவன் மருகா (எனக்)

## 247. சங்கர சண்முகனே

பல்லவி

சங்கர சண்முகனே நல்ல மங்கள சுக குகனே (சங்கர)

அநுபல்லவி

துங்க மலர்ப்பொழிலுறை தங்கமுடிச் சிகிமலை
தோகை மயிலோனே வாகை யயிலோனே (சங்கர)

சரணங்கள்

1 எந்நாளு முனை நம்பி யிருக்கிறே னென் மீது
யிச்சை யுடனே பட்சம் வைப்பாயே (சங்கர)

2 சின்னாள் வாழ்க்கையாற் றேசத்திலுழன்று
திரியா தடியருடன் சரியாய் மெய்ப்பாயே (சங்கர)

3 ஆசைக் கடல்தனி லகப்பட்டுக் கொண்டு
அலையு மனது குலைய லாமோ (சங்கர)

4 வாசக் குழன் மடவார்கள் மயக்கில்
மயங்கிக் கலங்கித் தியங்கப் போமோ (சங்கர)

5 ஆராதரவினில் யானிருக்கிறே னய்யா
அதுவெல் லாமினி மெதுவென் றெண்ணாதே (சங்கர)

6 போத சிகிமலைப் பெருமானே நான்
பேதைமைய னெனைச் சோதனை பண்ணாதே (சங்கர)

## 248. ஆண்டவனைப் பணிந்து

ராகம் : காம்போதி

பல்லவி

ஆண்டவனைப் பணிந்து கொண்டு பார்த்தால்
வேண்டிய தெல்லா முனக்குண்டு (ஆண்ட)

அநுபல்லவி

காண்டற்கரிய ரூபனை நெஞ்சே செகண்டி மலைக்கொரு
பூபனை (ஆண்ட)

சரணங்கள்

1 பத்தியுடனே செல்லு ஐயனை பார்த்துத் தோத்திரஞ்
சொல்லு
முத்தி பெறும் நிலையினில்லு வினை மூடிய பாசத்தை
வெல்லு நெஞ்சே (ஆண்ட)

2 ஆசைக் கடலி லாழாதே மனத் தன்பிலாருடன்
சூழாதே
மோசத் துரையில் வீழாதே மனதில் மூர்த்தியை விட்டு
மீளாதே நெஞ்சே (ஆண்ட)
3 குன்றை மலைக்கு நாதனை யவுணர் கோனை வெல்லும்
விகாதனை
மன்றன் மாமலர்ப் பாதனை யாரும் வணங்குதற்
கெட்டாத வேதனை நெஞ்சே (ஆண்ட)

## 249. நாதனே சரணம்

பல்லவி

நாதனே சரணம் போதனே யன்பர் பூசிதனே சாமி
(நாத)

சரணங்கள்

1 ஆண்டவனே சரணம் ஞான தாண்டவனே சரணம்
(நாத)
2 சீலனே சரணம் வள்ளி லோலனே சரணம் (நாத)
3 குன்றையாய் சரணம் அவுணர் வென்றியாய் சரணம்
(நாத)

## 250. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் (வந்து)

அநுபல்லவி

கொந்து கொந்தாய்ப் பொழிலுறை குன்றை
மலையிலிருந்து (வந்து)

சரணங்கள்

1 கூடிய சிறை மீறி யாடிய மயிலேறி (வந்து)
2 நீபமலர் முடித்துப் பூபமின் வேல்பிடித்து (வந்து)
3 மிண்ட வுணர் விசைய தண்டைச் சிலம்பசைய (வந்து)

## 251. இதுவே சமயம்

ராகம்: காம்போதி

பல்லவி

இதுவே சமயஞ் சமயம்
பதுமா சனத்தனும் பரவிய குரவனே (இதுவே)

சரணங்கள்

1 ஆனந்தத் தாண்டவ நடராசா – பத்த
ரன்பிற் கிரங்கிய குமரேசா
கானந்தனில் மயில்மகிழ் நேசா - யிந்தக்
காலங் கலியுகக் கால மென்றெண்ணுதே (இதுவே)

2 மாயப் பிறவி யதனில் வீழ்ந்து - பொல்லா
வறுமைக் கடலின் மிகவாழ்ந்து
ஓயாத துன்பத்திற் ருழ்ந்து - மிகுந்
துடைந்திடாது மனதிடைந்திடாது செய்ய (இதுவே)

3 குன்ருக் குடிக்குருபரனே - ஆடுங்
கோல மயிற் பராபரனே (குன்ருக்)
பொன்ருத வயிற் கரனே பரி பூரணனே செக
காரணனே (இதுவே)

## 252. ஐயனே யெனக்காதரவு

பல்லவி

ஐயனே யெனக்காதரவு செய்குவாய் (ஐயனே)

அநுபல்லவி

துய்யனே மலர்ச்சோலை வளருங் குன்றை யாலையமதில்
வரும் (ஐயனே)

சரணங்கள்

1 சீலனே நல்ல தேனலர் பொழிலுறை மானனையாள்
வள்ளி
கோலனே வெகு கூரிய நெடிய பொன் சீரிய வேல் முரு
(கையனே)

2 கந்தனே யருள் காரணனே பரி பூரணனே சம்
பந்தனே கரக பாலினி யாளருள் பாலகனே முரு
(கையனே)

3 நீபனே யெதிர் நேரினில் வருமொரு சூரவ வுணனுட
கோபனே தழை கோகனகாசனி மோகனனூர் மரு
(கையனே)

## 253. பாத தரிசனங் கண்டேன்

ராகம் : சகானு

பல்லவி

பாத தெரிசனங் கண்டேன் கண்டேன்
ஆதரவு கொண்டேன் கொண்டேன் (பாத)

சரணங்கள்

1 வரந்தரு பூரணன் பூரணன் நிரந்தர நாரணன்
நாரணன் (பாத)
2 வள்ளியம்மை லோலன் புள்ளி மயில் வேலன் வேலன்
(பாத)
3 குன்றைமலை வாசன்வாசன் நன்றருள் முருகேசன்
கேசன் (பாத)

## 254. ஐயனே முருகையனே

ராகம் : சங்கராபரணம்

பல்லவி

ஐயனே முருகையனே - யென்று
அனுதினந் துதி வினவுவாய் மனமே (ஐயனே)

அநுபல்லவி

துய்யனைப் பன்னிரு கையனைக் குன்றைமலைத்
தோகை மலையோனை வாகை யயிலோனை (ஐயனே)

சரணங்கள்

1 வாச மலரணி வாகனை குற வள்ளி தெய்வானைதம்
பாகனை
பூசித வன்பர் சினேகனை - புவன
ரட்சகனைத் தவ முனிவர் மோகனை (ஐயனே)
2 சங்கர ரருளிய பாலனை செக சால விநோத
மயிற்கோலனை
மங்கள சுபகர லோலனை யெறி வருபடையசுரனைப்
பொருதிய வேலோனை (ஐயனே)
3 வானவர் குல சகாயனை திவ்விய மதுரித தமிழ்புகல்
வாயனை
ஞான பரிபூரண சேயனை - யருள்
நாரண ஆரண காரண நாயனை (ஐயனே)

## 255. உனக்கிது தானுண்மை

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

உனக்கிது தானுண்மை மனமே (உனக்)

அநுபல்லவி

வனக்குற மாது மருவிய புயனை வந்தனையுடனே சிந்தனை
செய்துகொள் (உனக்)

சரணங்கள்

1 பல்லாயிர கோடி யண்ட பகிரண்டப் பரப்பெங்கும்
எல்லா வுயிர்க்குயிரா ரட்சித்திருந்து
அங்கங்கு தங்கு மருளீசனை முருகேசனைப் பணியாத
(உனக்)

2 நிர்த்தன மயிலேறிக் கையி னெட்டிலை யயில் பிடித்து
பத்தர் களிறைவர்கள் நீபப் பன்மலர் மாலை முடித்து
வரும்
பங்கய பாதனை யிங்கிதமுடன் பணி (உனக்கு)

3 சோலை நிறை குன்றையான் சிறைத்
தோகை மலைவரு வோனைப் பாலை நிகர்மொழி மின்னாிரு
பாவையர் மேவிய தேனை நாளும்
பத்தியுடனே நிதந் துதித்துக் கொள் (உனக்கு)

## 256. உன் செயலல்லாமல்

பல்லவி

உன் செயலல்லாம லெல்லா மென்செயலாவ தேதய்யா
(உன்)

அநுபல்லவி

மஞ்சடர் பொழில் சூழுங் குன்றை மயின்மலை வரையி
வடிவேலா (உன்)

சரணங்கள்

1 ஆடுமயிலேறி விளையாடு முருகையா
வாடுமிடை மாமலரின் மாது மருகையா (உன்)

2 கங்கையணி செய்ய சடைக்கர்த்தரருள் பாலா
மங்கை குறமாது மயில் மருவி வளர்வேலா (உன்)

3 வாசமிகு நீப மலர் மாலையணி வாகா
தாசனெனை யாளவருள் தந்துதவா யோகா (உன்)

## 257. அஞ்ச வேண்டாம்

ராகம் : காம்போதி

பல்லவி

அஞ்ச வேண்டாம் மனதே யினிமே லஞ்ச வேண்டாம்
மனதே (அஞ்ச)

அநுபல்லவி

மஞ்சடர் பொழில்வளர் மயின்மலை மீது
வந்த குருபர கந்தனிருக்கிருன் (அஞ்ச)

சரணங்கள்

1 எந்த விதத்திலு முந்தன் மனப்படி யெப்படியு மருள்
தருவான்
வந்த வினைதனைத் தீர்த்துச் சிறைமயில் வாகனத்திலேறி
வருவான் (அஞ்ச)

2 உனக்கொரு நாளுங் குறைச்சல் வராம லுண்மையுடன்
வரம் புரிவான்
மனக் கமல மலர்ந்தருள் கருணைமாரி மிகவுஞ் சொரிவான்
(அஞ்ச)

3 இகபர சாதன மெல்லாமு முனதிச்சைப் படிக்குக்
கொடுப்பான்
செகமதிலாசை யெனும் வலைதன்னி னீசிக்கும் வழிதன்னைத்
தடுப்பான் (அஞ்ச)

## 258. கண்டு தரிசிக்க வேணும்

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

கண்டு தரிசிக்க வேணும்
அண்டர் பணிகுன்றை ஐயனை மெய்யனைக் (கண்டு)

சரணங்கள்

1 சரவண பவகுக கந்தனை நதி யரவணி பவரருள்
மைந்தனைக் (கண்டு)

2 கோகன காசனனைச் சிறை தாகமுடன் தீர்த்த நாதனைக்
(கண்டு)

3 குன்றை யம்பதிவளர் கர்த்தனை யன்பர்க்கென்று முதவிய
சித்தனைக் (கண்டு)

## 259. ஆடிக் கொண்டோடி வருவாய்

ராகம் : அசாவேரி

பல்லவி

ஆடிக் கொண்டோடி வருவாய் - உனது
அன்பன் மனது என்புருகவே - முருகா (ஆடிக்)

அநுபல்லவி

வேடிக்கை யாகவே மயிலேறி விதங்கொள் பாதச் சதங்கை
குலுங்க (ஆடிக்)

சரணங்கள்

1 அந்தர துந்துபி புடைக்கவே யோசை யட்டதிக் கெங்கு
மடைக்கவே
முந்து துவசங்கள் விண்ணைத் துடக்கவே - யன்பு
முற்றுமெனக் கருள் கிடைக்கவே (ஆடிக்)

2 பத்தர்கள் தோத்திரஞ் சொல்லவே யிரு பக்கமுந்
தேவர்கள் செல்லவே
தத்தைய ரிருபுறம் புல்லவே யென் றன்னுறு தீவினையை
வெல்லவே (ஆடிக்)

3 செகவுயிர்க் கெல்லாம் பொருந்து - மருள்
செய்யுந் தெய்வமே திருந்து
சகல வினைக்கு மருந்து பொல்லா தானகுன்றை
மலையிலிருந்து (ஆடிக்)

## 260. சம்பந்த மூர்த்தியாகவே

பல்லவி

சம்பந்த மூர்த்தியாகவே யவதாரஞ் செய்தாரே (சம்பந்த)

அநுபல்லவி

நம்பு மடியவர் தங்களைக் காக்க - எந்
நாளும் வாழுஞ் சீர்காழிப் பதியினில் (சம்பந்த)

சரணங்கள்

1 தென்மதுராபுரி மீனவன் உடல்வெப்பம்
சீதளமாகிப் போகவே நய நன்மதுரத் தமிழ்ச் சாத்திரமும்
நாளுக்கு நாள் சுத்தமாகவே (சம்பந்த)

2 எண்ணுயிரவர் சமணரும் வாதினி லெல்லாருங் கழுவி
லேறவே – திவ்விய
பண்ணுருந்திருத் தேவாரத்தமிழ்ப் பதிகப் பாடல் மீறவே
(சம்பந்த)

3 சைவ சமயங்கள் முழுவது மது தானே யுலகிலெக்
களிக்கவே - அருள்
தெய்வதலங் களெங்கணும் பூசை சிறப்பதாகச் செழிக்கவே
(சம்பந்த)

## 261. மனதே நான் சொன்ன புத்தி

பல்லவி

மனதே நான் சொன்ன புத்தி கேளாய் (மனதே)

அநுபல்லவி

கனகா சலக்குன்றைக் கர்த்தனைப் பணிந்துகொள் (மனதே)

சரணங்கள்

1 ஐயன் சரித்திரத்தைத் துதிப்பாய் - நெஞ்சில்
துய்யவன் பதத்தைப் பதிப்பாய் (மனதே)

2 குன்றைக் குடிக்கு நீ சென்று – உனக்கு
நன்றருள் வரம்பெறு இன்று (மனதே)

3 ஆண்டவன் சந்நிதியைத் தேடு - தேடி
அன்பெனும் வாரிதியிற் கூடு (மனதே)

## 262. ஏதுக்கு மயங்குகிருய்

பல்லவி

ஏதுக்கு மயங்குகிருய் மனதே நீ யேதுக்கு மயங்குகிருய்
(ஏதுக்கு)

அநுபல்லவி

போதுற்ற பொழிற்குன்றைப் பூபன் நீபனிருக்க (ஏதுக்கு)

சரணங்கள்

1 மனத்துயர் தீர்த்தும் வாழ்க்கையைத் தந்தும்
கனத்துடன் காப்பதைக் கண்டு கொண்டிருந்தும்
(ஏதுக்கு)

2 வார்தடு கொங்கையர் மாய்கையி லுழன்றும்
சீர்தடுமாறு மென்று சிந்தை தளர்ந்தும் (ஏதுக்கு)

3 தோகை மலைக்குகனைத் துதிசெய்து கொண்டும்
ஆக மகிழ்ச்சியுடன் ஐயனைக் கண்டும் (ஏதுக்கு)

## 263. உன் சித்தம் என் பாக்கியம்

பல்லவி

உன்சித்த மென்பாக்கியம் – ஐயா (உன் சித்தம்)

அநுபல்லவி

மின் சித்திர சிகிமலை மேலில் வரும் ஐயனே (உன் சித்தம்)

சரணங்கள்

1 மாயப் பிறவியை நீக்கி நலம் மருவிய அருளை யுண்டாக்கி
தீயகொடு வினையைப் போக்கி – வெகு
திவ்விய ஆனந்தத்தைச் செய்வையோ செய்யாயோ
(உன் சித்தம்)

2 பன்னிருகையில் வேலெடுத்து - என் மேல்
பட்சம் வைத்துநீ அன்பு தொடுத்து
மன்னுமுயர் வாக்குக் கொடுத்து – வேண
வரங்களெல்லாந்தர வருவையோ வாராயோ
(உன் சித்தம்)

3 எந்தன்னை யாட்கொள்ள வேணும் - உலகில்
எல்லோர்க்கு மதுவல்லோ தோணும்
சிந்தை யெனக்கு மகிழ்பூணும் – படி
செய்யவுன் பாதத்தில் சேர்ப்பாயோ - சேர்க்காயோ
(உன் சித்தம்)

## 264. மனது கொண்டபடி யருள்வாய்

பல்லவி

மனது கொண்டபடி யருள்வாய் என்றன் (மனது)

அநுபல்லவி

உனது அன்பனெனு முண்மையை யறிந்து (மனது)

சரணங்கள்

1 போதமுடன் நிதம்பூசித்து உந்தன்
பாத மறவாத படியிருக்கு மெந்தன் (மனது)

2 பொருள்தேடிப் பாடிப் புகன்றே - உன்றன்
அருள் தேடிக்கொண்ட அன்பன் நான் என்னுட (மனது)

3 சோமன் ரவிதவழ தோகைமலை தனது
மாமலையென்றே வளர்குகா யெனது (மனது)

## 265. உன் கதியே கதி

பல்லவி

உன் கதியே கதி ஐயா (உன்கதி)

அநுபல்லவி

மின்றவழுங் குன்றைமலை மேவு முருகையா (உன்கதி)

சரணங்கள்

1 தாதவிழு நீபமலர்த்தாரா வரு காதலர்
மின்னார்களலங்காரா (உன்கதி)

2 மாதவனார் மகிழவரு மருகா யெதிர் மோதவுணர்
படையை வெலு முருகா (உன்கதி)

3 குன்றைமலை மீதிலுறை கோவே முன்னே சென்று
வருமன்பரை யாள் தேவே (உன்கதி)

## 266. காக்க வேணுமய்யா

பல்லவி

காக்க வேணுமைய்யா கடைக்கண் பார்க்க வேணுமய்யா
(காக்க)

அநுபல்லவி

மாது குறவள்ளி பாகா மணச் சீதமல ரணிபாதா (காக்க)

சரணம்

வேலணி பன்னிரு கையா தோகை கோல மயில்
வருதுய்யா
அண்டர் பணி சிகிமேரா நீப வண்டணியுஞ் செய்ய தாரா
(காக்க)

## 267. மயிலேறி வருவாய்

பல்லவி

மயிலேறி வருவாய் சாமி வரமினித் தருவாய் (மயிலேறி)

அநுபல்லவி

குயிலான மொழியாள் குறமகள் தோழா (மயிலேறி)

சரணங்கள்

1 வானவர் தேடிய பாதா தேனலரணிபுய நாதா
(மயிலேறி)

2 வேலையணி யிருகரனே ஞாலமெல்லாம் புகழரனே
(மயிலேறி)

3 சோலையுயர் குன்றைவாசா மாலின் மருக முருகேசா
(மயிலேறி)

## 268. உன்பாத தரிசனந் தாராய்

பல்லவி

உன்பாத தரிசனந் தாராய் என்மேல் அன்பான கடைக்
கண்பாராய் (உன்பாத)

அநுபல்லவி

தென்பார் புகழ் குன்றைச் சீர்ப்பதி மேவிய சித்தனே
பரிசுத்தனே சாமி (உன்பாத)

சரணங்கள்

1 கானக் குறத்தியை மேவிக் கலந்தனை காதலனே யெனை
யாளும் திவ்விய
ஞானமெய்ஞ்ஞான கிருபா நிதியே தெய்வ நாயகனே
யெந்நாளும் (உன்பாத)

2 அமரர் முனிவரர் பயங்கரமாகச் செய்யவுணர் குலமழிவாக
வெதிர்
சமரிடுவேல் கொடு சம்மாரஞ் செய்யுஞ் சவுரியமிகு
களவாக (உன்பாத)

3 நாரணனுர் மருகேச குகேச நன்மைமிகு பரிமள நீபா
குன்றை
மேரில் வளர்பவ வன்பரை நெஞ்சில் விரும்பி ரட்சிக்கும்
பிரதாபா (உன்பாத)

## 269. அஞ்ச வேண்டாம் மனமே

பல்லவி

அஞ்சவேண்டாம் மனமே மஞ்சடர் குன்றைமலை மாதவ
னிருக்க (அஞ்ச)

சரணங்கள்

1 உன்னுட சித்தப்படி கொடுப்பான் - ஜெனனந்
தன்னுட வழியைத் தடுப்பான் (அஞ்ச)
2 இச்சையான தெல்லாந் தருவா - னுன்மேற்
பட்சம் வைத்து மயின்மேல் வருவான் (அஞ்ச)
3 வானுயர் சோலைகள் பெருக்க முடன்
ருனுயர் குன்றைய னிருக்க (அஞ்ச)

## 270. காணாத நாளெல்லாம் நாளோ

ராகம் : காம்போதி

பல்லவி

காணாத நாளெல்லாம் நாளோ
பூணூர்முலை வள்ளி பூபனைக் கண்ணாரக் (காணாத)

சரணங்கள்

1 மனதை யொரு மனதாய்ப் பண்ணி யந்த
மனதுக்குளய்யனை யெண்ணி
கனகமயில் வேலையு நண்ணிக் கூடக்
கலந்து தியானித்து நலம் பெறவே கண்ணாற் (காணாத)
1 ஆதியந்த மில்லாத ரூபனை பகிரண்டமெல்லாந்
துதிபிரதாபனை
மோதிய வவுணர்தங் கோபனை தேவர்
முன்பனை யன்பர்க் கன்பனைக் கண்ணால் (காணாத)
3 வேதாந்தப் பொருண் முடிவை யன்பர்
வினையாகிய விருள் விடிவை
நாதாந்தமான வடிவை யருள்
நாதனை நான்கு வேதனைக் கண்ணாற் (காணாத)

## 271. ஒருதரம் மனமே

ராகம் : காம்போதி

பல்லவி

ஒருதரம் மனமே குருபரனென் ருலுனக்கது போதாதோ
(ஒருதரம்)

அநுபல்லவி

திருவளர் சோலை நிறை சிகண்டிமலையில் வரு
சேயனை யன்பர் சகாயனை மனமார (ஒருதரம்)

சரணங்கள்

1 கஞ்ச மலரை நிகர் காலனை மலர்க் கானமயிலி புணர்
லோலனை
மிஞ்சு மவுணரை வெல்வேலனை மயின் மேனடத்தியதிருக்
கோலனை (ஒருதரம்)

2 வேத வேதாந்தப் போதனை யிருவினைதனையடர் நாதனை
மாதரிருவர் விநோதனை யிந்த வையகங் காக்கு நீதனை
(ஒருதரம்)

3 வானவர் பணி நாயனைச் சிகி மாமலை வளர் தூயனை
மோனவர்கள் சகாயனை யருள் மூர்த்தி யருளுஞ்சேயனை
(ஒருதரம்)

## 272. ஐயனை அன்புடன் கண்டு

ராகம் : அடாணு

பல்லவி

ஐயனை யன்புடன் கண்டு பணிந்தவர்க்குய்யும் வகையினி
யுண்டு (ஐயனை)

அநுபல்லவி

வையகம் பரவிய குன்றைமலை வாசன் குககுமரேசனாகிய
(ஐயனை)

சரணங்கள்

1 செய்ய மாமலர் நீபமாகிய திவ்விய தாரணி வாகனை
மையலாள் குறருப நாயகி மருவிய வலப்பாகனை (ஐயனை)

2 சர்வதயா பரசந்திர சடாதர சங்கர ரருளிய பாலனை
கர்வமிகு வசுர சூரபத்மாவுட கண்ணியத்தைத்
துலைக்கும் வேலனை (ஐயனை)

3 வானளவியதொரு பூமலர் சோலையின்
வாசனை மிகு கொன்றை யீசனை
ஞான முனீசுரர் பூசனை புரிகின்ற நாதனை லோகப்
பிரகாசனை (ஐயனை)

## 273. சாமி சித்த மிரங்காதோ

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

சாமி சித்த மிரங்காதோ
பூமிகுத்த சோலைவளம் பொருந்து குன்றையிருந்து வளர்
(சாமி)

சரணங்கள்

1 அண்டபகிரண்ட நிறைசோதி யெங்கு மாகிய பிரப்பிரம
நீதி
கொண்ட சருவேஸ்வர ஆதி திவ்விய
கோலமிருகின்ற பச்சை நீலமயிலேறி வருஞ் (சாமி)

2 கங்கையணி செய்ய சடை நாதா கறைக்
கண்டரரருளிய பரமேசா செகநாதா
செங்கண் மழவிடையில் வரு வேதர் அருள்
செய் சரவணபவ தூய சண்முகேசா (சாமி)

3 தோகைமலை மீது வரு கந்தா காழித்
தொல்லையம் பதியினிற் சம்பந்தா வாகை
புனையும் புயமைந்தா யிந்த
மண்டலம் புகழுஞ் சிகண்டிமலை மீது வாழுஞ் (சாமி)

## 274. சரவணபவ குகனே

ராகம் : ஸ்ரீராகம்

பல்லவி

சரவணபவ குகனே அரவணிபவர் மகனே (சரவண)

அநுபல்லவி

அந்தர வான ரன்புடன் றுதிக்கும்
மந்திர முனிவர் கண்மனதினிற் பதிக்கும் (சரவண)

சரணம்

சகல சர்வேசா சண்முக நாதா
சுககும ரேசா சுசிகர பாதா
செகண்டி மலையில்வளர் தேவர்கள் கோவே
யகண்டபரி பூரண மாகிய தேவே (சரவண)

## 275. உனக்கொரு தடையுண்டோ

பல்லவி

உனக்கொரு தடையுண்டோ - மனமே (உனக்)

சரணங்கள்

1 வனக்குற மயிலியை மருவிய தோளனை
வந்தனு தினமு முவந்து பணிவதற்கு (உனக்)

2 சந்திர சடாதர சங்கரர் பாலனை
இந்திரர் முனீசுர ரின்புறு கோலனை
இதய மகிழ விருபத மலர் பணிய (உனக்)

3 கொந்தலர் சோலைக் குன்றையிலையனை
வந்தடி தொழுபவர் மனநிறை துய்யனை
வம்பலர் புயனை யன்பொடு பணிய (உனக்)

## 276. பாத தரிசனஞ்செய்வாய்

பல்லவி

பாத தெரிசனஞ் செய்வாய் மனமே நாத குமரேசன்
(பாத)

அநுபல்லவி

குஞ்சரி மேவிய மெய்யன் - அன்பர்
நெஞ்சினிலுறை நய துய்யன் (பாத)

சரணம்

அண்டர் பணிபுரி கந்தன் உயர்
தொண்டர் சூழ்ஞானசம்பந்தன்
குன்றை யெனும் பதிவாசன் சூரை
வென்றிடுவேற் பிரகாசன் (பாத)

## 277. தண்டாயுத பாணி போலும் தெய்வம்

பல்லவி

தண்டாயுத பாணி போலுந் தெய்வம் உண்டாமோ மேலும்
வண்டார் பொழிலுறை குன்றையாகி வரு
மலைமேவிய திருமுருகேசனுனதே (தண்டாயுத)

சரணங்கள்

1 வந்து அனுதின மலரடிதனை மனமாரப் பணிந்து
வாழ்த்து மடியார்க்கும்
முந்திய தீவினையால் மும்மல பாசத்தால் மூடிய
பாசத்தால் மோசமாகிய பேர்க்கும் (தண்டாயுத)

2 ஆசையதாகவே யழகிய மயின் மேலானந்தமாகவே
யாடிய நாதன்
வாசமதாய் நிறைவாழித்ணீப மாலை கணிறைந்திடு
மார்பனுன நீதன் (தண்டாயுத)

3 குன்றுக் குடிவளர் குமரகுகேசன் கூரிய வேலினைக்
கொண்டிடுகையன்
நன்ருக வடியவர் வாழவே யெந்த நாடொறுங் காத்து
ரட்சிக்கு மையன் (தண்டாயுத

## 278. அனுதினங் துதிப்பாய்

பல்லவி

அனுதினந் துதிப்பாய் யுந்தன் மனதிற் பதிப்பாய் (அனு)

அநுபல்லவி

தாதவிழ் நீபத் தாரணி புயனை மாதரிருவர்கள் மருவிய
நயனை (அனு)

சரணம்

கங்கையணி சடைக்கர்த்தர் தன் பாலனை
துங்க மயிலில் வரு சுந்தர வேலனை
குன்றையின் மலைவளர் குககுமரேசனை
நன்றருள் புரியு நாத குகேசனை (அனு)

## 279. நம்பினேன் நான்

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

நம்பினேன் நான் சாமி உன்பாதத்தை (நம்பி)

அநுபல்லவி

தும்பி முகவர் தன் சோதரனே யரனே (நம்பி)

சரணங்கள்

1 வன்ன மயிலேறி வலக்கையில் வேலெடுத்து
சின்னஞ் சிறுவயதாய்ச் சிறக்கு முனையடுத்து (நம்பி)

2 ஆக்குமுலகத்தினி லாதரித்து யெந்தனைக்
காக்குந் தெய்வநீ யென்றெக் காலமு முந்தனை (நம்பி)

3 கொந்தலர் பொழிலுறை குன்றை மலையினின்று
வந்தருள் புரிந்தாளும் வல்லவனே யென்று (நம்பி)

## 280. வரவேணும்

பல்லவி

வரவேணும் அருள் தரவேணும் சாமி (வரவே)

அநுபல்லவி

திருவளர் குன்றைச் செகண்டி மலையாய் (வரவே)

சரணங்கள்

1 சர்வ தயாபரா நிர்மலவா வரா (வரவே)

2 கான மயிலிலே தானவரை வெல்வேலா (வரவே)

3 அகண்டபரி பூரணா செகண்டிமலைக் காரணா (வரவே)

## 281. சன்னிதியைக் கண்டு

பல்லவி

சன்னிதியைக் கண்டு - தொழுத பேர்க்கு
சகல வரங்களுமுண்டு (சன்னிதி)

அநுபல்லவி

வன்ன மயிலேறி வந்து விளையாடும்
மயின்மலை வாசனை ஒயில்முருகேசனை (சன்னிதி)

சரணங்கள்

1 தண்டைச் சிலம்பு சதங்கை யசைய
வண்டலர் நீபமென்பா லிசைய
வருகுரு பரனை யருள் சிவபரனை (சன்னிதி)

2 செங்கனி வாயமுது சிந்தி யொழுகவே
அங்கமெலா மன்பரருளினின் முழுகவே
அருள்செயு நாதனை திருமலர்ப் பாதனை (சன்னிதி)

3 குன்றையின் மலைவளர் குககுமரேசனை
வென்றி யசுரனை வென்றிடும் ராசனை
வீறுமுக வேலனை யாறுமுகப் பாலனை (சன்னிதி)

## 282. அஞ்ச வேண்டாம்

பல்லவி

அஞ்ச வேண்டாம் மனமே (அஞ்ச)

அநுபல்லவி

மஞ்சார் பொழிற் குன்றை மலையாண்டி யுண்டு (அஞ்ச)

சரணங்கள்

1 இன்னமுனக்கு வேணதெல்லாந் தருவார்
வன்ன மயிலேறி மகிழ்ந்தினி வருவார் (அஞ்ச)

2 எந்த விதத்திலு முன்னிட்டப்படி செய்வார்
வந்து விழியருள் மாரியைப் பொழிவார் (அஞ்ச)

3 சகல வரமுந் தந்து ரட்சிப்பார்
அகமகிழ்ந்து உன்னை ஆண்டாதரிப்பார் (அஞ்ச)

## 283. குக குமரா

பல்லவி

குக குமரா சரணம் அகமகிழ்ந்தடியனை யாதரிப்பாயே
(குககுமரா)

சரணங்கள்

1 வானவர் பணிசரணு நீபத் தேனல ராபரணு (குககுமரா)
2 சகல புவன ரட்சகா ஆறு முகமலர்ந்தருள்வை போகா
(குககுமரா)
3 எண்டிசை துதிபாதா வுயர் சிகண்டியின் மலைநாதா
(குககுமரா)

## 284. என்னைக் காப்பதற்கு

ராகம் : சங்கராபரணம்

பல்லவி

என்னைக் காப்பதற் குன்னைப்போல் யாரு சாமி (என்னைக்)

அநுபல்லவி

சொர்ண மகுடமுடி துலங்குங் குன்றைக் கதிபா (என்னைக்)

சரணங்கள்

1 மாயமான விச்சையில் மன மயங்கி வீழாமல்
சாயமில் பிறப்பெனுஞ் சாகரத்தி லாழாமல் (என்னைக்)

2 சகரால் பாவந் தன்னிலே சாராமல்
முகமாய்ப் பெண்கள் மோகத்திற் சேராமல் (என்னைக்)

3 கொண்டல் படியுஞ் சோலைக் குன்றை மலைக்குகேசா
அண்டர் முனிவர் பணியழகு மயின் மகேசா (என்னைக்)

## 285. தேவர் தேவே

பல்லவி

தேவர் தேவே யருண் மூவர் கோவே
ஆவலாயே யென்னை யாண்டருள்வாயே (தேவர்)

சரணங்கள்

1 ஆதியும் நீயே சாமி அனாதியும் நீயே
சோதியும் நீயே பரி சுத்தமும் நீயே (தேவர்)

2 அண்டமு நீயே வானமு தண்டமு நீயே
யெண்டிசை நீயே செக மெங்கணு நீயே (தேவர்)

3 கொந்தலர் குன்றையில் வாழுங்குகா
எந்த நாளும் மன்பா யென்னையே யாளும் (தேவர்)

## 286. எந்தனைக் காப்பது சாமி

பல்லவி

எந்தனைக் காப்பது சாமி உந்தனுக்குப் பாரமோ (எந்தனை)

அநுபல்லவி

கந்த மலர்ச்சோலை சூழுங் குன்றையந் தண்மலை வாசா
(எந்தனை)

சரணங்கள்

1 கஞ்ச பாதனே யருள் தஞ்ச நாதனே (எந்தனை)

2 கூறின் வேலனே கொன்றை யாரர் பாலனே (எந்தனை)

3 மயிலின் வாகனனே வள்ளி ஒயிலி சினேகனே
(எந்தனை)

## 287. பூசித்த பேருக்கு

பல்லவி

பூசித்த பேருக்கு யோசித்த வரமுண்டு
வாசிக்கும் பொழிற்குன்றை மாமலை நாதனைப் (பூசித்த)

சரணங்கள்

1 காலா காலத்தெழுந்து கங்கையிற் ஞனம் பண்ணி
ஆலய மெல்லாஞ் சுற்றி ஐயனை நெஞ்சிலெண்ணிப்
(பூசித்த)

2 சன்னிதியினின்று தானே மிகத்துதித்து
வன்ன மயிலோனை மனதிற் பதித்துப் (பூசித்து)

3 குன்ருக் குடிவளர் குருபர நாதனை
நன்ருகக் காத்து ரட்சிக்கும் பாதனைப் (பூசித்த)

## 288. குதித்துக் குதித்து ஆடு மயிலா

ராகம்: சங்கராபரணம்

பல்லவி

குதித்துக் குதித்து ஆடு மயிலா கூரிய வயிலா (குதித்து)

அநுபல்லவி

துதித்துத் துதித்தன்பர் பணியுந் தூயனே கனிவாயனே
(குதித்து)

சரணங்கள்

1 தண்டைச் சிலம்பு ஒலிக்க வேசதங்கை யொலிகள்
கலிக்கவே
கொண்டை முடியுஞ் சிறையுஞ் சிறக்க கொக்கரித்துக்
கொண்டலடித்துக் (குதித்து)

2 அந்தரதுந்துபி தொனிக்கவே யடையவர் மிகுபயஞ்
செனிக்கவே
கந்த மலர்களை யண்டர் கடுவக்கதி கொண்டு சுற்றி
கலகல வெனவே (குதித்து)

3 இந்திர பிரமாதிகள் செயஞ் செயமென வெதிர்த்த
தானவர் பயம்பயமென
வந்து கூடியவர் கொந்து கொந்தாய் நிற்க வையகமுந்
திரிபுவன முந்தொழ (குதித்து)

## 289. ஏது குறை செய்தாலும்

பல்லவி

ஏது குறை செய்தாலு மென் மீது குறைசெய்ய வேண்டாம்
(ஏது)

அநுபல்லவி

போது நிறைபொழிற் குன்றைப் பூபனே மலர்நீபனே (ஏது)

சரணங்கள்

1 கானக மயிலி புணர் தோளா வுயர் வானக வமரர் பணிதாளா (ஏது)

2 வஞ்சக வரக்கரை வெல் சூரா யென்றன் நெஞ்ச மகிழ வருதாரா (ஏது)

3 சங்கர ரருளு முருகேசா குன்றைத் துங்கமலை வளரும் பிரகாசா (ஏது)

## 290. தருணமிது தயவு செய்வாய்

பல்லவி

தருணமிது தயவு செய்வாய்
திருவளர் பொழிலுறை செகண்டி மலையரசே (தருண)

சரணங்கள்

1 சங்கர சம்பு தந்தருள் சேயா மங்களகர நய வளமிகு நேயா (தருண)

2 மருமலரிதழ் நீப மாலை யணிபுயா வருமவுணனை யுயிர்வதை புரியுஞ்செயா (தருண)

3 சரவணபவ குக சண்முக நாதா அரகர வெனவன்பர் அருச்சிக்கும் பாதா (தருண)

## 291. நினையா திருக்கலாமோ

பல்லவி

நினையா திருக்கலாமோ என்னையனை (நினையா)

அநுபல்லவி

அனையா யெவருக்கு மன்பு வைத்தாள் பவனை (நினையா)

சரணங்கள்

1 நித்தமு மன்பரை ரட்சிக்கும் கர்த்தனை
அத்தனருளிய வானந்த நிர்த்தனை (நினையா)

2 சங்கர சம்பு சதா சிவ புத்திரனை
துங்க முனிவர்கள் துதி செய்யு மித்திரனை (நினையா)

3 தோகை மலை வளர் தூய சண்முகவனை
வா(கு)குறமகள் மருவிய சுகனை (நினையா)

## 292. ஐயனை நினைந்துகொள்

பல்லவி

ஐயனை நினைந்துகொள் மனமே - முரு
கையனை நினைந்துகொள் - மனமே (ஐயனை)

சரணங்கள்

1 துய்யனைப் பன்னிரு கையனை யென்னுடை
சருவதயாபர சரவணபவனைப்
பருவ மதியணி பரமசிவனை (ஐயனை)

2 வானவர் பணி தருமா மலர்ப்பாதனைத்
தேனலரணிபுயத் தேவர்கள் தேவனை (ஐயனை)

3 குன்றைமலை வளர் குக குருபரனை
நன்றதை யடியர்க்கு நல்கிய வரனை (ஐயனை)

## 293. தேடித் தேடிக கொள்ளுவாய்

பல்லவி

தேடித் தேடிக் கொள்ளுவாய் - மனமே (தேடித்)

அநுபல்லவி

ஆடித் திரியு மயிலாண்டவனைத் தினமே (தேடித்)

சரணங்கள்

1 பங்கய பாதனை மங்கள நாதனை
துங்க மெய்வேதனை யெங்கும் பிரக்யாதனைத் (தேடித்)

2 தோகை மலையனை வாகைபுனை புயனை
ஓகை புனை நயனை டாகையுள்ள சேயனைத் (தேடித்)

3 குன்றைமலை வாசனை நன்றருள் பிரகாசனை
கொன்றையணி யீசனை என்றுங் குகேசனைத் (தேடித்)

## 294, கருத்தி லெண்ணு மலிருக்கலாமோ

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

கருத்தி லெண்ணுமலிருக்க லாமோ
திருத்தமாகிய முடியிலகிய
செகண்டி மேரிலுறை யகண்ட பூரணனைக் (கருத்தி)

சரணங்கள்

1 எங்கும் நிறைந்தருள் தங்கும் பிரகாசனை
மங்கள குறமகளிங்கித நேசனைக் (கருத்தி)

2 அருண வண்ணனைக் கருணை வாரியைத்
திருவடியவர்க்கு அருளுதாரியைக் (கருத்தி)

3 பூரண புராதன வாரண வாதியை
நாரணன் மருகனைக் காரண சோதியை (கருத்தி)

## 295. எப்படியும் என்மேல் இரக்கம்

பல்லவி

எப்படியு மென்மே லிரக்கம் வைத்தாள வேணும்
மைப்படியும் பொழின் மயின் மலைநாதா (எப்படி)

சரணங்கள்

1 வேதனுக்குப தேச குருவே – எங்கும்
விளங்கும் விளங்கும் பராபர வுருவே
காதலுக் கிசையன்பர் திருவே யார்க்குங்
காணக் கிடையாத காரண வுருவே (எப்படி)

2 எங்கும் நிறைந்த பராபரனே - யெனக்
கென்று மருளிய வீஸ்வரனே
துங்கமிகுங் கூரயில் கரனே – யாடுந்
தோகை மயிலேறித் துலங்குஞ் சுந்தரனே (எப்படி)

3 குன்றைக் குடிவளர் கந்தனே – யருள்
கொண்ட திருஞான சம்பந்தனே
மன்ருடிய ருளு மைந்தனே – நீப
மாமல ரானசுகந்தனே (எப்படி)

## 296. எந்நாளும் மறவாதே

ராகம்: ஆனந்தபைரவி

பல்லவி

எந்நாளு மறவாதே – மனமே
யுனக்கிச்சை யெல்லாம் வருந்தினமே (எந்)

அநுபல்லவி

பொன்னுர் முடியுறை பொழிற்குன்றை மலைவளர்
பூபன் மலரிலுயர் நீப னிருபதத்தை (எந்)

சரணங்கள்

1 சருவ தயாபர சாமி சண்முக சகல சனரட்சக
சங்கரன் மகனே
வருமடிய வருடை மனதுறை குகனே
மாது தெய்வானை வள்ளி மருவிய சுகனே (எந்)

2 சத்துரு சங்கார வயிறனே யணிகரனே
தமிழ்கொடு துதிப்பவர் தமக்கருள் வரனே
சித்து விதங்கள் செயுஞ் சித்தனே யரனே
தேவர்கள் மூவர்கள் தேடரும் பரனே (எந்)

3 மஞ்சார் பொழிற் குன்றை மாமலை நாயனே
மதுரையிற் சமணரை மாய்த்திடுஞ் சேயனே
நெஞ்சார வடியருணினைத் திடுந் தூயனே
நித்தனைப் பணிபுரி பத்தர்கள் நேயனே (எந்)

## 297. தோத்திரஞ் செய்குவாய் மனமே

பல்லவி

தோத்திரஞ் செய்குவாய் மனமே (தோத்)

அநுபல்லவி

க்ஷேத்திரந் தனிலுயர் செகண்டி மலையோனைத் (தோத்)

சரணங்கள்

1 அண்டர் முனிவர்க ளனுதினம் பணிபவனை
யெண்டிசை புகழ்கின்ற வெம்பெருமான் சிவனைத் (தோத்)

2 கானக மடமயில் காதல் கொள்ளும் புயனைத்
தானவர்க் கரசனைத் தான் செயிக்குஞ் செயனைத் (தோத்)

3 குமர சரவண குருபர வேலை
சமர வேலாயுதத் தானிருதாளைத் (தோத்)

## 298. எவராலு மறியலாமோ

பல்லவி

எவராலு மறியலாமோ நின்பெருமையை (எவ)

அநுபல்லவி

தவரான முனிவோர்கள் தாம்புகழ் குன்றைமலை
தன்னில் வளருமயில் பன்னிரு கையோனே (எவ)

சரணங்கள்

1 வேதாந்த வானந்த மேலான பொருளே (எவ)
நாதாந்த மாகிய நாடரும் பொருளே

2 ஆனந்தக் கூத்தனே யற்புத வடிவே
ஞானந் தவரு வன்பர் நசையிருள் விடிவே (எவ)

3 குன்றுக் குடியில்வளர் கோல வுல்லாசனே
நன்றான குறவள்ளி நாயகி நேசனே (எவ)

## 299. சாமி சித்த மிரங்க வேணும்

பல்லவி

சாமி சித்த மிரங்க வேணும்
பூமிபுகழுங் குன்றைப் புண்ணிய தலத்தில் வளர் (சாமி)

சரணங்கள்

1 கங்கையணி சடைக் கர்த்த ரருளும் பாலா
மங்கை தெய்வானை வள்ளி மருவிய புயலோலா (சாமி)

2 சொர்ன வடிவான துங்கமயில் வாகா
வர்னவேல் கொடுமாவை வதைத்திடும் வாகா (சாமி)

3 சங்கர சண்முத தற்பரா பரனே
மங்கள சுபதீப மலரணி தரனே (சாமி)

## 300. நித்தந் துதித்துக் கொண்டு

பல்லவி

நித்தந் துதித்துக்கொண்டு நின்றால் மனமே
சுத்தமினி யுனக்குண்டு (நித்தந்)

சரணங்கள்

1 அத்து விதத்தின் முடிவை யன்பர் சித்த மயக்கின் விடிவை (நித்தந்)

2 சங்கர சம்பு சிவேசனை ஆடுந் துங்கமயிற் குகேசனை (நித்தந்)

3 குன்றையம்பதி நாதனை யினி நன்றை யருளும் பாதனை (நித்தந்)

## 301. நினைத்துக் கொள்ளுவாய்

பல்லவி

நினைத்துக்கொள்ளுவாய் — மனமே
நினைத்துக்கொள்ளுவாய் (நினைத்)

அநுபல்லவி

சினைப் பொழில் வளர் செகண்டி மலையோனை (நினைத்)

சரணங்கள்

1 பொல்லாத தீவினை தீர வினி யெல்லாத் தாகமுஞ் சேர (நினைத்)
2 பாவ வினைகள் போக மன தாவலுடனே யாக (நினைத்)
3 அகண்ட பூரணவேளை யுயர் செகண்டி மலையானருளை. (நினைத்)

## 302. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் மயின் மகேசனே (தயவு)

அநுபல்லவி

கானக வாசா ஞானவர் நேசா (தயவு)

சரணம்

தேவர்கள் தேவே மூவர்கள் கோவே
குன்றையி னுதா நன்றருள் வேதா (தயவு)

## 303. ஆதரவு செய்குவாய்

பல்லவி

ஆதரவு செய்குவாய் சீதளப் பொழில்வளர் செகண்டி
மலையோனே (ஆதரவு)

அநுபல்லவி

உந்தன் றனையிச்சித்துப் பணியு மென்றன்மேற் பட்சம்
வைத்து (ஆதரவு)

சரணம்

தாபத்திரியங் கண்டு எந்தா னுபத்தைத் தீர்த்துக் கொண்டு
குன்றைமலையில் வாசா அன்பர்க்கு நன்றருள் பிரகாசா
(ஆதரவு)

## 304. மனது வைக்க வேணும்

பல்லவி

மனது வைக்க வேணும் தனது குன்றைமலைச் சாமியே
யுன்னுடைய (மனது

அநுபல்லவி

கருத்து வைத்துப் பணி கருத்தனெனது
பருத்த வினைதீரப் பண்ணி யுனது (மனது)

சரணம்

தஞ்சம் வேறில்லை யென்று தானே முப்போதுங்
கஞ்ச மலரடியைக் காண்போருக் கிப்போது
குன்றுக் குடிவளர் குகவன்பு பூணும்
நன்றான வடியரை ரட்சிக்க வேணும் (மனது)

## 305. ஒருகாலும் மறவாதே

பல்லவி

ஒருகாலும் மறவாதே – குன்றை
ஒருத்தனை மயிலேறுந் திருத்தனை மனமே (ஒரு)

அநுபல்லவி

சானகி மருவிய சாமிதன் மருகனை
வானவர் ஞான முனிவரர் பணிமுருகனை (ஒரு)

சரணம்

தீராத வினை யெல்லாந் தீர்த்திடுபரனை
தானவரை வெல்லும்வேல் தரித்திடுகரனை
தோகைமலை வருசுந்தர கந்தனை
சாகர மாந்தமிழ்ச் சாஸ்திர சம்பந்தனை (ஒரு)

## 306. சஷ்டி விரத பலன்தருவாய்

பல்லவி

சஷ்டி விரத பலன் தருவாய் மயில் தன்னிலேறி யென்முன்
வருவாய் (சஷ்டி)

அநுபல்லவி

அஷ்ட லெட்சுமி நிறைந்தாளுங் குன்றைமலை
ஐயனே பன்னிரு கையனே (சஷ்டி)

சரணங்கள்

1 விடியமுன் னெழுந்து மெல்லிய ஸ்நானஞ் செய்து
படியில் வளரும் புஷ்பம் பலபல கொய்து
முடியிற் கைகூப் பியுன்னை முற்றும் பூசைபண்ணி
அடியன் கொள்ளு நேமமதனை மனதிலெண்ணி (சஷ்டி)

2 குககுருபரனே குமர சண்முகனே
மகதேவரரருளிய வடிவுறு மகனே
அகமகிழ் முனிவரரடி தொழுபவனே
செகதீச வன்பர்கடேடி சிவனே (சஷ்டி)

3 தோகைமலைக் குகந்த துரைக் குபேரனே
வாகைபுனையு மாவை வதைத்திடுவோனே
ஓகைபுனை யுல்லாச வுயர் முருகையனே
பாகைநிகர் மொழிப் பாப்புக லய்யனே (சஷ்டி)

## 307. கஞ்சமலர்ப் பதந்தந்தாள்வாய்

பல்லவி

கஞ்ச மலர்ப்பதந் தந்தாள்வாய் - யெந்தன்
நெஞ்ச மகிழமுன் வந்தாள்வாய் (கஞ்ச]

சரணங்கள்

1 மாயப் பிறவியில் மயங்கி யலையுமெந்தன்
காயத்துக்கே யொரு கலக்கம் வராமலுந்தன் (கஞ்ச)

2 இந்திர பிரமாதிய ரெல்லோருந் தேடிய
சுந்தர மயிலேறித் தொந்தோ மென்ருடிய (கஞ்ச)

3 சுககுக குருபர துரைமுருகேசா
மகபதி பணி சிகிமலைவளரீசா (கஞ்ச)

## 308. குககுரு பரனே

பல்லவி

குககுரு பரனே தடுவயிற் கரனே (குக)

அநுபல்லவி

வானவர் பணிசரணு தேனல ராபரணு (குக)

சரணம்

ஆரண மறைமுடிவே நாரணர் மருள்விடிவே
குன்ருக்குடிக் குமரா நன்ருகக் காக்குமரா (குக)

## 309. மனதுக் கிசைந்த வரந்தருவாய்

பல்லவி

மனதுக் கிசைந்த வரந்தருவாய்
கனகமுடிப் பொன் செகண்டிமலை நாதா (மனதுக்)

அநுபல்லவி

வாசமிகுந்த நீபமாலை யணியும் வாகா
நேச மிகுந்த குறநேரிழை யொருபாகா (மனதுக்)

சரணம்

தானவர் குலம்விழச் சாய்த்திடும் வேலா
வானவ ரனுதினம் வணங்கிய காலா
தோகைமலை வளர் சுந்தர நாதா
ஓகைபுனை யொயில் உல்லாச கோலா (மனதுக்)

## 310. வயிற்று வலியைத் தீர்ப்பாயே

பல்லவி

வயிற்று வலியைத் தீர்ப்பாயே – உன்
பங்கயத்தை நேர் கண்ணல் பார்ப்பாயே (வயிற்று)

சரணங்கள்

1 உந்தனையல்லால் தெய்வ முலகிலில்லை யென்பது
எந்தன் மனதிலெண்ணி யிருப்பது
எந்த விதத்திலும் வந்து அனுக்கிரகித்து (வயிற்று)

2 அடியவரை ரட்சிக்கும் ஆண்டவ னீயென்று
முடிமிசை கரங்கூப்பி மொழிந்து சன்னிதி நின்று
முக்கியமதாகத்துதிக்கு மெந்தனுட (வயிற்று)

3 குன்றுக் குடிவளர் குமர குகேசனே
மன்றுடி யருள வரும் பிரகாசனே
வானோர் பணியுந் தேவ சேனுபதியே (வயிற்று)

## 311. கருத்த னீயல்லால்

பல்லவி

கருத்த னீயல்லா லொருத்த னுண்டோ
திருத்தகு சோலைச் செகண்டி மலையிற் (கருத்த)

அநுபல்லவி

சங்கரருக்கொரு பங்கமர் மெய்க்கொடி
யங்கயற் கண்ணருள் மங்கள புத்திரா (கருத்த)

சரணம்

நிர்த்தன மாடிய சித்திர மயில்வரு
பத்தர்களுக் கிசை முத்தி யருளிய
கொம்படரு நீப வம்பலர் சூடுஞ்
சம்பிரம தேவ வும்பர் கனையக (கருத்த)

## 312. சாமியை மறவாதே

பல்லவி

சாமியை மறவாதே மனமே கந்த சாமியை மறவாதே

அநுபல்லவி

பூமியிற் கயிலாசம் போலுங் குன்றைமலைச் (சாமியை)

சரணங்கள்

1 வானோர் பணிதேவ சேனாபதியை
ஞானோர் மனத்தினிற் ருனானிதியை
அடியவர் தம்முட குடிகாக்கு மையனை (சாமியை)
2 வடிவுறு புனக்குறக் கொடிபுணர் மெய்யனை
கொண்டல் படியுஞ் செகண்டிமலை யோனை
அண்டர் முனிவரர் தொண்டர் பெருமானை (சாமியை)

## 313. இதுவே கயிலாசம்

ராகம் : காம்போதி

பல்லவி

இதுவே கயிலாசங் குன்றைமலை யிதுவே கயிலாசம்
(இதுவே)

அநுபல்லவி

மதுவேறிய நீப மாலை யணிபுய
வாசன் குமர குகேச னிருப்பதால் (இதுவே)

சரணங்கள்

1 மெய்யன்பருடனே விளையாடித் திரிந்தும்
செய்வன வெல்லாஞ் செய்து சிந்தை பரிந்தும்
சிறக்கு மய்யனங்கே துறக்கந் தருவதால் (இதுவே)

3 அண்டர் முனிவர ரனுதினஞ் சூழ்வதால்
தொண்டர் களியாவருந் துலங்க வாழ்வதால்
சேரலைசேர் தெய்வ வாலய மாதலால் (இதுவே)

## 314. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சிந்தந் திரும்ப வேணும் ஐயனே சித்தந் திரும்பவேணும்

அநுபல்லவி

பத்தனிவனென்று தெரியாதோ - கிருபை
பண்ணுதற் குமனந் தரியோதோ (சித்தந்)

சரணங்கள்

1 வனசமலர்ப் பதம் வாழ்த்திய வெந்தன்
மனதின் படியருள் வரந்தர வுந்தன் (சித்தந்)
2 சருவதயாபர சங்கர புத்திரா
கெருவ வவுணரைக் கெடுக்கும் வேலத்திரா (சித்தந்)
3 செகண்டிமலைப் பரதேசிகள் காவலா
அகண்ட பரிபூரண வற்புதப் பாவலா (சித்தந்)

## 315. காக்க வேணுமய்யனே

பல்லவி

காக்க வேணுமையனே
வார்க்குங் குன்றைமலை வருமுரு கையனே (காக்க)

சரணங்கள்

கடம்ப மலரணி புயனே யடஞ்செய் சூரை வெலுஞ் செயனே (காக்க)
1 வருத்தஞ் செயு நோயைத் தீர்த்து
2 கருத்தி லென்னைக் கண்ணுற் பார்த்து (காக்க)
3 அனுதின மடியவர் தம்மை மனதினினைக் குமையா வென்னைக் (காக்க)

## 316. நித்தந் தரிசித்துக் கொண்டு

பல்லவி

நித்தந் தரிசித்துக் கொண்டு பாராய் - நெஞ்சே யுனக் கதிலுண்டு (நித்தந்)

அநுபல்லவி

அத்தன் குன்றைமலே ஐயனே மெய்யனே (நித்தந்)

சரணங்கள்

1 இந்திர பிரமாதியர்க் கிசைந்திடு நாதனே
சந்திர சடாதரர் தருசிவ போதனே (நித்தந்)

2 வன்ன மயிலேறி மகிழ்ந்திடும் லோலனே
முன்ன மெதிர் சூரனே முடித்திடும் வேலனே

3 ஆறுபடை போன்ற குன்றை யதில்வளர் தூயனே
நீறுபுனையும் புயநிர்மல நாயனே (நித்தந்)

## 317. வருத்தப் படுத்தலாமோ சாமி

பல்லவி

வருத்தப் படுத்தலாமோ சாமி
திருத்தமிகுங் குன்றைத் தேவர்கள் தேவா (வருத்த)

அநுபல்லவி

துன்பசா கரத்தினிற் றுயரப் படுமென்னே
இன்பசா கரத்தினிலிருக்கச் செய்யாம லென்னே (வருத்த)

சரணம்

மாயப் பிறவியின் மடிந்து வுறங்கவே
நேயப் பெண்ணூர் மயலின் நெஞ்ச மிறங்கவே
குன்ருத பாசக் கருக்குழி யினிநாடாமல்
நன்ருக வென்னேச் சாமி ரட்சிக்கத் தேடாமல் (வருத்த)

## 318. எந்தனேக் காப்பது

பல்லவி

எந்தனேக் காப்பது பாரமோ உந்தனக் கெந்தன் மேற்
காரமோ (எந்தனே)

சரணங்கள்

1 தீராத வினே யெல்லாந் தீர்த்து என்னுட நேராக வந்து
கண் பார்த்து (எந்தனே)

2 தாவாத நோய்தனே நைத்து இனி ஆவலுடன் கிருபை
வைத்து (எந்தனே)

3 குன்ருக் குடியிருலிருந்து மயின்மே னன்ருக யென்முனம்
வந்து (எந்தனே)

## 319. கண்டு கொள்ளுவதே

பல்லவி

கண்டு கொள்ளுவதே யரிது கொண்டு பணிவதே பெரிது
(கண்டு)

சரணங்கள்

1 லீலாவிதத் தெய்வ யானை மாது கோலாகல முருகோனைக்
(கண்டு)

2 சரவணபவ சிவகுருவை விட வரவணியும் பரம வுருவைக்
(கண்டு)

3 குன்றை மலைக்கிசை பொருளை யன்பர்க் கென்று
மனுக்கிரகிக்கு மருளைக் (கண்டு)

## 320. எந்தை தாய்

பல்லவி

எந்தை தாய் குரு தெய்வ மென்பது நீயே
கந்த மலர்ப் பொழிற் செகண்டி மலை நாதா (எந்தை)

அநுபல்லவி

சத்தியணி பன்னிரு கரனே – யன்பர்க்கு
முத்தி தரும் பராபரனே (எந்தை)

சரணம்

தற்பர ஞான சொரூபா – நல்ல
வெற்புயர் மணமலி நீபா
கோகன காசனன் குருவே – யெங்கு
மாக நிறைந்தரு ளுருவே (எந்தை)

## 321. ஆறுமுகத் தெய்வமல்லாது

பல்லவி

ஆறுமுகத் தெய்வ மல்லாது வேறுண்டோ (ஆறு)

அநுபல்லவி

மாறு முகச்சூரை வதைத்திடும் வல்லவர் (ஆறு)

சரணங்கள்

1 துங்கமிகு மழவிடையார் - தெய்வ
கங்கையணி கனசடையார் – அருள்
தங்க வொளியயிற்படையார் - குற
மங்கை மயிலின்ப முடையார் (ஆறு)

2 மதுரித கலேபயில் வாயர் – திவ்விய
துதிசொல்லடியர் சகாயர் – நல்ல
சது மறையறியாத சேயர் – தவ
முதுமுனிவர்கள் மன நேயர் (ஆறு)

3 ஓகை புனேயுமுல்லாசர் – முடித்
தோகை மலேமுருகேசர் – செய
வாகை புனேபுய விலாசர் செகன்
மோகவமோகப் பிரகாசர் (ஆறு)

## 322. கருணு நிதியே

பல்லவி

கருணு நிதியே திருநாவலர் புகழ்சிகிமலே மகிபா (கருணு)

அநுபல்லவி

எப்படியு மெனேக் காப்பது நீயே
அற்புத ஞான வானந்தனு நீயே (கருணு)

சரணங்கள்

1 தற்பரமரூப சண்மு கனீயே
யப்பனே யெந்தனே யாண்டருள் வாயே (கருணு

2 தவமுனிவர் பணிதழைத்டு பாதா
பவவினே களேத்தீரப் பண்ணிய நாதா (கருணு)

3 நவபுவன முழுதும் ரட்சிக்கு நீதா
எவனமிகு குறமி னிங்கித சங்கீதா (கருணு)

4 சந்திர சடாதரர் தந்தருள் பாலா
இந்திர பிரமாதிய ரிச்சிக்குஞ் சீலா (கருணு)

5 வந்த வசுரனே மாய்த்திடும் வேலா
எந்தனிதயத்திலிருக்கும் மேலா (கருணு)

## 323. துதிசெய்து கொள்ளுவாய்

பல்லவி

துதிசெய்து கொள்ளுவாய் மனமே – குன்றைப்
பதியில் வளரும் பராபரனேத் தினந் (துதி)

அநுபல்லவி

பொல்லாத பாத கந்தீரவே நோயெல்லாந் தீர்ந்து
நயஞ் சேரவே
நில்லாது தீவினை சோர்வே யுல்லாச மனமன் பாற் சாரவே
(துதி)

சரணம்

வாசமிகு நீபதரனே பிரகாச மிகுங் குருபரனே
நேச வன்பர்க் கருளீசுவரனே சகல தேச ரட்சக
சுபகரனே
அண்டமுயர் சோலை சூழுஞ் செகண்டிமலை மிசை வாழும்
தொண்டர் சொலுந்துதி நீளும் நீல கண்டரருள் குகனே
நாளுந் (துதி)

## 324. சிங்கார மயிலேறி வருவாய்

ராகம் : சங்கராபரணம்

பல்லவி

சிங்கார மயிலேறித் தங்காமல் வருவாய் (சிங்கார)

அநுபல்லவி

கொங்கார் பொழிற்குன்றை மங்காத மலைநாதா (சிங்கார)

சரணங்கள்

1 வாசக் களபமுலை நேசக்குற மின்னுடன்
மாசற்ற தெய்வானை யாசைக் குயிலுடன் (சிங்கார)
2 சதங்கை யொலிகள் வெகு விதங்களுடன்
கதங்கொள வுணர் கண்டு பதங்களஞ்சலிக்க (சிங்கார)
3 நாலான மறைவல்லோர் மேலானதுதியாக
வேலாயுத பாணி கோலாகல மாக (சிங்கார)

## 325. இருபோது மையனை மறவாதே

பல்லவி

இருபோது மையனை மறவாதே – நெஞ்சே
ஒருபோது மின்பங்கள் துறவாதே (இருபோது)

சரணங்கள்

1 சங்கர சம்பு தருமொரு மகனே பங்கசமல ரயன்
பணிந்தருள் குகனே
துங்க முனிவரர் துதிக்குஞ் சண்முகனே மங்கள குறமகள்
மருவிய சுகனே (இருபோது)

2 பஞ்சாட்சரதளம் படிந்திடு மய்யனை அஞ்சாதவ வுணர்க்
கொல்லயிலணி கையனை
நெஞ்சார நினைப்போர் நினைவுறுந்துய்யனை மஞ்சார்
பொழிற் குன்றைமலை முருகையனை (இருபோது)

3 அடியவர் தங்களை யாண்டருள் நாயனை வடிவிலனேக
வடிவுளமாயனை
படியினிலெவரையும் பரிக்குஞ்ச காயனை கடிய நோயை
யுந்தீர்த்துக் காத்தருள் சேயனை (இருபோது)

## 326. தண்டாயுத முன் குண்டு

ராகம் : காம்போதி

பல்லவி

தண்டாயுத முன் குண்டு நெஞ்சே நீ
கொண்டாடிக் கொள்ளதைக் கண்டு (தண்டா)

அநுபல்லவி

கண்டு தவத்தினுற் கனிவொடு பரத்திற்
கொண்டன்பர் பணி செயுங் குகனிறை கரத்தில் (தண்டா)

சரணங்கள்

1 மண்டிய படைதனைமாய்த்திட வுரத்திற்
பண்டவுணரைக் கொல் பன்னிரு கரத்தில் (தண்டா)
2 பைந்தினை வனம்வளர் பாவை குறவர் மங்கை
தந்திடு மயலுக்குத் தான் மகிழ்புயன் கங்கை (தண்டா)
3 சந்திர சடாதரர் சங்கரி யுமை நங்கை
மைந்தனடியவர்க்கு வரந்தரு மலர்ச்செங்கை
(தண்டா)
4 நாலான மறை யினுவின் வேதருக்கும்
மாலான பொன்னகர் வளுரும் வானருக்கும் (தண்டா)
5 ஆலால முண்டவ ரருளிருவருக்கும்
மேலான குன்றையய்யன் விளங்குகையிருக்கும்
(தண்டா)

## 327. எடுத்த செனனம்

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

எடுத்த செனன மிதற்கென் றனுகூலமோ (எடுத்த)

அநுபல்லவி

தொடுத்த வினைகளெல்லாந் தொலைவதெக் காலமோ
(எடுத்த)

சரணங்கள்

1 பொல்லாத மூடம் பொதிந்திடு மூட்டையாய்
கல்லாத வறிவு கட்டிய கோட்டையாய்
கரும வசத்தால் வந்து ஒரு வயிற்றிற் பிறந்து (எடுத்த)
2 பாவி மடவியர்கள் பந்தத்திற் சுகப்பட்டு
ஆவி தூண்டில் மீன்போ லாசையிலகப் பட்டு
அவதிகள் கொள்ளவு மெவர்களு மெள்ளவும் (எடுத்த)
3 குன்ருக் குடிவளர் குககுமரேசா
நன்ருக வுலக மெங்கும் பிரகாசா
நத்தர் மகிழ்மருகா சித்தர் பணிமுருகா (எடுத்த)

## 328. இதுவே கயிலாசம்

பல்லவி

இதுவே கயிலாசம் குன்றை மலை யிதுவே கயிலாசம்
பதுமாசனன் முதற் பண்ண வருந் தொழும் (இதுவே)

சரணங்கள்

1 அண்ட முகடுற வளர்ந்து ஓங்கிக்
கொண்டதின் மேன்முடி கிளர்ந்து
வண்டலர் மிகுகன தண்டலை நிறைவள (இதுவே)
2 நினைத்த வரங்களைத் தருதலால் அன்பின்
முனிக் குழாம் பணிய வருதலால்
அனைத்து லகும்புகழு மினத்தின் மணிதிகழும் (இதுவே)
3 வள்ளியம்மை தெய்வானை லோல
புள்ளி மயிலேறுஞ் சீல
வளளலங் குறைதலால் தெள்ளிதினிறைதலால்
(இதுவே)

## 329. குன்ருக் குடியை மறவாதே

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

குன்ருக் குடியை மறவாதே - யுனக்கு
ஒன்ருகிலுங் குறைவராதே (குன்ருக்)

அநுபல்லவி

மாயப் பிறப்பில் விழுத் தாட்டாதே - யுந்தன்
காயத்தைத் துன்பத்துக்குக் காட்டாதே (குன்ருக்)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 நோயிற் கிடந்தலைய மாட்டாதே வினைத்
தீயிற் கிடந்தலைந்து போய்விட வோட்டாதே (குன்ருக்)

2 மேலான பொருளை யுண்டாக்குமே யுனக்
கேலாத காரியத்தைப் போக்குமே (குன்ருக்)

3 ஆலால நஞ் சமுதாய்த் தேக்குமே
நாலாம் பதவியின் மேலாய்ச் சேர்க்குமே (குன்ருக்)

4 துதித்துக் கொண்டாலது கனமே நெஞ்சிற்
பதித்துக் கொண்டாற் தரிசனமே (குன்ருக்)

5 மதித்துக் கொள்வாயினித் தினமே யன்பி
லுதித்துக் கொள்வாயின்னங் கதித்துக் கொள்வாய்
மனமே (குன்ருக்)

## 330. மனதே சும்மா நீ யிருக்காதே

பல்லவி

மனதே சும்மா நீ யிருக்காதே - நவமணிக்
கனக முடிச் செகண்டிக் கர்த்தனிருக்க விப்போதே
(மனதே)

சரணங்கள்

1 ஐயனை நினைப்பதே முத்தி - யனுதின
மெய்யிளுற் பணிவதே பத்தி - யந்தத்
துய்யனைக் காண்பதே சித்தி - துதி
செய்யு மதுவே வெகுசித்தி (மனதே)

2 நடன மயிலேறி வருவான் - வந்து
உடல் குளிர வருளைத் தருவான் - பொல்லா
அடரும் வினைகடம்மைப் பொருவான் - உந்த
னிடமதிலொருகாலு மொருவான் (மனதே)

3 சோலைச் செகண்டிமலைத் தேனை - நீப
மாலைப் புயத்துமுருகோனைத் - தடஞ்
சேலைப் பொரும் விழித் தெய்வானை - வள்ளி
லீலைக் கிசைந்த மயலோனைப் பணிவாயே (மனதே)

## 331. சூர சங்காரா

பல்லவி

சூர சங்காரா தீர சங்காரா (சூர)

அநுபல்லவி

படையை யெடுத்து அடலைத் தொடுத்து
பகட்டிச் சண்டைபுரி மகத்தைச் செய்து திரியும் (சூர)

சரணம்

வான்வளர் தேவரை நான் மறை மூவரை
மனது கலங்கப் பண்ணுந் தினமு மடத்தை யெண்ணும்
அவுணர்கள் குலத்துச் சௌரிய பெலத்து
அலையுங் கிரவுஞ்ச மலை வளரும் வஞ்ச (சூர)

## 332. வருவினை தீராயோ

பல்லவி

வருவினை தீராயோ தீர வொருவரந் தாராயோ (வரு)

அநுபல்லவி

கோகன கத்திலுறை வேதா - வெகு
தாகமுடன் பணியும் பாதா (வரு)

சரணம்

சரவணபவ குருபரனே - விட
வரவணியுஞ் சடா தரனே
அண்டர் பணியுங் குன்றைக் கிரியா - நல்ல
கொண்டை மயிலெனும் பரியா (வரு)

## 333. காணக் கிடைக்கலையே

பல்லவி

காணக் கிடைக்கலையே யென்னையனைக்
காணக் கிடைக்கலையே (காணக்)

அநுபல்லவி

பூணிற் பொலியுங் குன்றைப் புண்ணியனென் சாமியைக்
(காணக்)

சரணங்கள்

1 வரதனைச் செக மாயனை விட வரவணிதரு சேயனை
யன்பர்
பரவ வரிய நாயனை குக சரவணபவ தூயனை
கானகமான் மணாளனை அந்த வானவர் பணிதாளனை
யெதிர் (காணக்)

2 தானவனை வேய்த் தோளனை
அருளும் பன்னிரு நேத்திரனை நாளுந் தெருளுஞ்சகல
சாத்திரனை
மறைப் பொருள் முனிவர்க்கருள் தோத்திரனை குன்றைத்
திருமலை யெனுமுயர் க்ஷேத்திரனைக் (காணக்)

## 334. தீருமைய்யா

பல்லவி

தீருமையா வந்து துன்பத்தை ஆரும்படி யருளின் பத்தைத்
தாருமையா (தீருமை)

சரணங்கள்

1 அடியேனுனை நாளு மடுத்தவனய்யா
கடிகமழ் நீப மணிக் கதிர் மிகு மெய்யா
வடிவுறு மறுமுகா பொடியணிபுய குகா (தீருமை)

2 அந்தர வானவரன் பொடு பணிபவா
சந்திரசடாதர சம்புண்பதே சிவா
சிந்தை மகிழ வந்து தந்தருள்வாயு கந்து (தீருமை)

3 சோலை வளஞ் சிறந்த தோகைமலை யாளா
பாலைப் பழிக்குமொழிப் பாவையர் பணிதோளா
வேலையணி கரனே ஞாலந்துதிபரனே (தீருமை)

## 335. தண்டாயுத பாணியே

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

தண்டாயுத பாணியே நீப வண்டார் மலர் பூணியே
(தண்டா)

சரணங்கள்

1 மாயப் பிறவிக் கடலினி லாழ்ந்து (தண்டா)
ஆயச் சமுசார மதனில் வீழ்ந்து
அலையாமல் நெஞ்சங் குலையாமல்லருள் (தண்டா)

2 வந்திடுந் துன்பத்தையோட விலக்காயோ
நைந்திட வெதிரியை நாடிக் கலக்காயோ
நன்னய மிகுந்த வுன்னருள் தருவால் (தண்டா)

3 சோலை நிறைந்திடு தோகை மலைக்குகனே
மாலை நிறைந்திடு மங்கையர் சுகனே
வன்ன மயிலாளா சொன்ன வடிவேலா (தண்டா)

## 336. எப்போது காண்பேனே

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

எப்போது காண்பேனோ குன்றக்குடிக் கிசைந்திடு
முருகையனை (எப்போது)

அநுபல்லவி

முப்போதுந்துதி செய்து அன்பர்கள் கூடி முன்னம்பணியுஞ்
சன்னிதி தன்னை (எப்போது)

சரணங்கள்

1 எங்கணுநிறை பரம வெளியாய் தங்குஞ் சூரியப்
பிரகாச வொளியாய்
தழைக்குங் கருணை விளக்கு நாதனை
நாதவிந்துங் கடந்த பொருளாய் போதநிறை
புண்ணியப் பொருளாய் (எப்போது)

2 பொங்கிய வானந்தத் துங்கப் பிரவாகத்தை
மஞ்சடர் பூம்பொழில் வளங்கள் நாளும் விஞ்சிய
குன்றையின் மேவி வாழும்
விண்ணவரைக் காக்கு மண்ணல் மகேசனை (எப்போது)

## 337. எந்த வினையானாலுஞ் சாமி

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

எந்த வினையானாலுஞ் சாமி வந்து தீர்க்கவேணும்
அந்த மிகுங் குன்றை மலையய்யனே மெய்யனே (எந்த)

அநுபல்லவி

வாடிப் பழுத்துத் தேக மாய்வதுவானாலும்
நாடிப் பார்ப்பதற்கு நயமில தானாலும் (எந்த)

சரணங்கள்

1. தேடிப் பார்ப்பவர்கள் சீச்சீ யென்றாலும்
ஓடிப் பிழைப்பதற்கு வுதவாத தானாலும் (எந்த)
2 துன்ப சாகரமான துயர்க் கடலானாலும்
இன்பமிடு மதனிடு மடலானாலும் (எந்த)
3 நம்புதலில்லாத நாறுடலானாலும்
வம்பு செய்ய நிதம் வருங்கேட தானாலும் (எந்த)
4 குன்றையின்மலைவளர் குருபரனே பின்னை
யென்று நினையாமலினி துடனே யுன்னை (எந்த)
5 மன்றல் மலர் சூழ வாழ்த்தி நல்லடி தன்னை
யென்றும் பணிய வருமெளியனாகிய வென்னை (எந்த)

## 338. தீராத வினையெல்லாந் தீர்க்கு மையனே

ராகம்: சங்கராபரணம்

பல்லவி

தீராதவினை யெல்லாந் தீர்க்குமையனே
வாராததென்ன சாமி மயின் மீதிலையனே (தீராத)

அநுபல்லவி

கங்கை தரித்த சடைக் கர்த்தரருளும் பாலா
மங்கைகுறக் கொடியை மருவிய லோலா (தீராத)

சரணம்

ஆனந்த மயமாகிய பொருளே
ஞானந்த வருதவர் நாடிய வருளே
குன்றையின் மலைவளர் குகேசனே
நன்றருளடியர்க்கு நல்கு மகேசனே (தீராத)

## 339. இன்னமுந் தயவு வராதது

ராகம்: கல்யாணி

பல்லவி

இன்னமுந் தயவு வராதது என்னமோ வறியேன்
பொன்னங் குடுமிச் சிகரக் குன்றைப்
பூமலி சோலை மாமலை ஐயா (இன்ன)

சரணங்கள்

1 வந்து பணிய மாட்டே னென்று மாறுபாடு செய்தேனே
பைந்தமிழாற்றுதி செய்து பாடி படிக்கச் சோம்பினேனே
வுந்தனை நிதந்தியா னித்து மனதுரு காதிருப்பேனே
அந்தண்மலர் கொண்டுவுந்தன் ருளையருச்சியாப் பிழை
தானே (இன்ன)

2 பங்கய தள நேத்திர ரூபபாவை வள்ளி பாகனே
அங்க முருக்குந் தொண்டராகிய வன்பர்க்கருளுந்தி
யாகனே
துங்க முனிவரா னந்தத்துடன் துதிக்குந் தோத்திர
யோகனே
செங் கணவுணர் குல மழிந்திடச் செய்யும் வேற்கை
விசாகனே (இன்ன)

3 அகமகிழ்வொடு வன்பர் அன்பானனு தினஞ் செய்யுந்
தோத்திரனே
மகபதி யிமையோர்கள் மேலன்பு வைத்தருள் செய்யு
நேத்திரனே
புகலரியதோர் சகலமான பூரண புனித சாஸ்திரனே
இகபர சாதன மருளி யிலங்குங் குன்றை க்ஷேத்திரனே
(இன்ன)

## 340. இன்னஞ் செனன மெடுப்பானேன்

ராகம்: சங்கராபரணம்

பல்லவி

இன்னஞ் செனன மெடுப்பானே - னெடுத்துப்
பின்னு மயில் வலையிற் படுப்பானே (இன்னஞ்)

சரணங்கள்

1 வேலணி கையனே நூலணி மெய்யனே
வீடருள்பரனே நாடருமரனே (இன்னஞ்)

2 கோலாகலனே மேலா நலனே
குமர குகேசனே யமரர் விஸ்வாசனே (இன்னஞ்)

3 தோகை மலையோனே வாகை புனைவோனே
தூய முருகோனே மாயன் மருகோனே (இன்னஞ்)

## 341. எத்தனை நாட்செல்லுமோ

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

எத்தனை நாட் செல்லுமோ – என்னையாள
எத்தனை நாட் செல்லுமோ - என்னையாள (எத்தனை)

அநுபல்லவி

பத்தர்கள் பணி குன்றைப் பதியில் முருகையனே
(எத்தனை)

சரணங்கள்

1 உந்தனைத்தானே யுறுதியா யெண்ணி
வந்தனையோடும் பூசை மனமாரப் பண்ணி
மதித்து நெஞ்சமதில் பதிக்கு மெனையாள (எத்தனை)

2 சரவணபவ சிவசங்கரா வென்று
அரகர வெனவே முன்பா நின்று
அன்புடனே துதித்து இன்புறு மெனையாள (எத்தனை)

3 குன்றுக் குடிவளர் குமர குகேசனே
பொன்று தன் பருக்கருள் புரியும் பிரகாசனே
புனை மலர் நீபனே யெனையாளவே யினி (எத்தனை)

## 342. அலையாதே மனதே

ராகம் : காம்போதி

பல்லவி

அலையாதே மனதே – துலையாத வுடலென்னுஞ்
சுருக்குளகப்பட்டு (அலையா)

அநுபல்லவி

போதமறியாது தியங்கியே நல்லமாதர் மயக்கினில்
மயங்கியே
மறுபடி செனன மறுபடி தேடாமல் (அலையா)

சரணம்

மாமலரயன் குருபரனை - கொன்றைத்
தாம மணியு மீசுரனைத் தற்பரனையினி யற்பொடு பணியாமல்
மஞ்சார் பொழிற் குன்றையானை திவ்விய - பஞ்சாக்ஷர
புயவோனை
பஞ்சாட் சரணனை செங்கையாற் பணியாமல் (அலையா)

## 343. சருவ சீவ தயாபரனே

பல்லவி

சருவசீவ தயாபரனே திரு மருவிய செகண்டி
மலையோனே (சருவ)

அநுபல்லவி

ஆடிய மயிலேறு மய்யனே அன்பர் - தேடிய பூதி மெய்யனே
(சருவ)

சரணங்கள்

1 பங்கய மலரிரு சரணு மணத் துங்கமிகு நீபா பரணு
(சருவ)
2 தோகை மலைதனிலுறைவாய் செய வாகை புனை
விண்ணோர்க்கிறைவா (சருவ)

## 344. முத்தி யடையலாமே

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

முத்தியடையலாமே சத்தியுயர் கந்தசாமியைப் பணிந்தால்
(முத்தி)

சரணங்கள்

1 எங்கும் நிறைவாக விருக்கின்ற வொளியை
தங்கும் பிரகாசமாய்த் தழைக்கின்ற வெளியை
தான்றுதிப்போரெல்லாம் யான்றுதிக்கும்படி (முத்தி)
2 காணக்கிடையாத காரண ரூபனை
தோணத் தேன்றுளிக்குந் தென்றூய மலர்நீபனை
தோத்திரஞ் செய்து நேர்த்தியதான (முத்தி)
3 மாமலர்ச் சோலை மயின்மலை வருவோனை
தாமன் பொடு மன்பர் தம்மிடம் வருவோனை
தழைக்கு மனதிலன்பு விளைக்கும்படி பணிந்தால் (முத்தி)

## 345. தீராத தெல்லாந் தீருமே

பல்லவி

தீராத தெல்லாம் தீருமே மேலுஞ் சேராத தெல்லாஞ்
சேருமே
(தீராத)

அநுபல்லவி

காரார் பொழில்வளர் குன்றுக் குடிவளர்
கர்த்தனை யுயர் பரிசுத்தனைக் கண்டால் (தீராத)

சரணங்கள்

1 பங்கய மலரயன் பணிய வருகுருவை
கங்கு கரையில்லாப் பிரகாச மிகுமுருவை
கருத்தினினைத்தால் திருத்தமதாகவே (தீராத)

2 ஆனந்த நடன மாடிய பாதனை
ஞானந் தவருதவர் நாடரும் போதனை
ரஞ்சிதமாகவே நெஞ்சினினைத்தால் (தீராத)

3 சங்கர ரருளிய தற்பரானந்தனை
பொங்கு செந்தமிழ் புகலுஞ் சம்பந்தனை
போற்றிப்பணி செய்தால் மாற்றரிதாகிய (தீர்த)

## 346. சரணமதைப் பணிகொண்டு

ராகம் : கல்யாணி

பல்லவி

சரணமதைப் பணிகொண்டு பெறுவாய் நெஞ்சே
அரணமலி குன்றை ஐயனைக் கண்டு (சரண)

அநுபல்லவி

வாகைபுனை திறவேலனை நல்ல ஓகை புனையுமினுர்
லோலனை
யுத்த முன்னின்று சித்திபெற வேணுமென்று (சரண)

சரணம்

சகலபுவன ரட்சகனை யன்ப ரகமுறை யாறுமுகனை
ஆண்டவனை யன்பாக வேண்டி நின்று முன்பாக
தோகைமலைப் பெருமானை கன டாகைபுனை முருகோனை
நன்னய மாயின்று சன்னதியிற் சென்று (சரண)

## 347. பாத தரிசனஞ் செய்குவாய்

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

பாத தெரிசனஞ் செய்குவாய் – நெஞ்சே
ஆதர வுனக்குண்டு வுய்குவாய் (பாத)

அநுபல்லவி

வானவர் முனிவர் கடானவர் முதலினர்
வந்து பணிபுரியுங் கந்தனு பயமலர்ப் (பாத)

சரணங்கள்

1 சங்கர சிவசம்பு மங்கள கரவுமை
மைந்தனுயர் ஞான சம்பந்தனு பயமலர்ப் (பாத)
2 சோலைநிறை செகண்டி வாலை மதில்வளர்
சுக குமரேச குகனு பயமலர்ப் (பாத)

## 348. தயவு செய்யாத தென்னசாமி

பல்லவி

தயவு செய்யாத தென்ன சாமி
நயமிகுங் குன்றைமலை நாதனே நீதனே (தயவு)

அநுபல்லவி

கங்கையணி சடைக்கர்த்தருதவு மைந்தா
சங்கையில் லாத தமிழ்தான் புகல் சம்பந்தா (தயவு)

சரணம்

காரண காரிய கருணைப் பிரவாகா
நாரணனுர் மருகா மிக்கு அமோகா
சோலை நிறை செகண்டித் துங்கமலை நாதா
மாலையிலுயர் நீப மாலை யணியும் போதா (தயவு)

## 349. என்றைக்கும் மறவாதே

பல்லவி

என்றைக்கும் மறவாதே மனமே குன்றைக்குடிக்கு வாய்த்த
குருபரன்றன்னை நீ (என்றைக்)

சரணங்கள்

1 பைந்தினை வனம் வளர் பாவை குறமகள்
தந்திடு மின்பமாந் தழைக்குஞ்சலதியில்
தான்முழுகும் பெருமான் மலரடியை (என்றைக்)
2 தானவர் குலத்திற் றங்கிய வீரனை
வானரைச் சிறை மாட்டிய சூரனை
மாய்க்கும்படியாகத் தேய்க்கும் வல்லாளனை (என்றைக்)

3 மஞ்சார் பொழிலுறை மயின்மலை முருகோனை
பஞ்சாரடி மலர்ப்பாவை மருகோனை
பதும சரணனை – மதுமலர் நீபனை (என்றைக்)

## 350. கண்டு கொள்வதே கனமே

பல்லவி

கண்டு கொள்வதே கனமே – யன்பு
கொண்டு பணி செய்வாய் மனமே (கண்டு)

சரணங்கள்

1 அந்தக் கிரவுஞ்ச வெற்பனை யெதிர்
வந்தடல்புரி சூர பற்பனை உயிர் (யுயர்)
மாறுபடச் செய்திடுங் கூறுபடு வேலோனைக் (கண்டு)

2 ஈராறு பண்ணிரண்டு தோளனை – மலர்த்
தாரும் வள்ளி மணாளனை - யருள்
தங்கும் பிரகாசனை - பொங்குங் கிருபேசனைக் (கண்டு)

3 குன்றுத வளஞ்செறி குன்றையம்பதியனை - நாளும்
நன்றுக முனிவரர் நாளுந் துதியனை - யன்பர்
நாடிய பாதனை – ஆடிய மயிலனை (கண்டு)

## 351. இன்னஞ் செனனங்க ளெடுப்பானேன்

ராகம் : காம்போதி

பல்லவி

இன்னஞ் செனனங் களெடுப்பானே - னெடுத்
திச்சையினற் றுன்பப் படுப்பானே (இன்னஞ்)

அநுபல்லவி

வன்னமயிற் குன்றை மாமலை வருகுகன்
வாசத்திரு வடியைப் பூசித்தடையாமல் (இன்னஞ்)

சரணங்கள்

1 சருவ சங்காரவுக்கிர வயிலோனை - நிர்த்தந்
தானே நடிக்குந் தோகை மயிலோனை
பருவ வள்ளி யெனுங் குயிலோனை - மக
பதிம கட்கினிய வொயிலோனைக் - கண்டு
பாதத்தைப் பணிந்து - போதத்தை யடையாமல்
(இன்னஞ்)

2 வாச மலர் நீப ஆரனே பணி - வானவர்க்கருளுதாரனே
நேச மடவியர் சிங்காரனே யெதிர் - நிருதரை வெல்லுங்
கோரனே – கண்டு
நித்தம் பணி செய்து முத்தியடையாமல் (இன்னஞ்)

3 சோலே நிறையுங் குன்றைப் பதியோனே - யன்பர்
தொழுதிறைஞ்சிச் செய்யுந் துதியோனே
மேலுஞ் சரவண நதியோனே - யார்க்கும்
வேண்டிய படியருணி தியோனேக் கண்டு
விருத்தி பெறுங்கன - சித்தியடையாமல் (இன்னஞ்)

## 352. யாதொரு குறைவும் வாராதே

பல்லவி

யாதொரு குறைவும் வாராதே - குன்றை
மீதொரு குகன் பதமே பணிந்தாலிப்போதே (யாதொரு)

அநுபல்லவி

கந்தனே மனதிற் பதித்தால் - அவனிரு
சந்த மலர்ப்பதத்தைத் துதித்தால் (யாதொரு)

சரணம்

ஆண்டவனேத் துதித்துக் கொண்டால் – அன்பால்
வேண்டி நடந்துடன் கண்டால்
கஞ்ச வடியை முடிமேற் புனேந்தால் - ஐயனே
நெஞ்சினி லொருபோது நினேந்தால் (யாதொரு)

## 353. மனதுக்கொரு திடஞ்சொல்வாய்

ராகம் : ஆனந்தபைரவி

பல்லவி

மனதுக்கொரு திடஞ் சொல்வாய் - தீய
வினேகளெல்லாந் தீர்க்க வல்லாய் (மனதுக்)

சரணங்கள்

1 புள்ளி மயிலேறுங் கோலாகலா - வள்ளி மருவிய
லோலா
தெள்ளிய தமிழ்பயில் வாயா வுயர் - வெள்ளியம்
பலரருள் சேயா (மனதுக்)

2 பரத நடன மலர்ப்பாதா நல்ல வரத சண்முக குருநாதா
அரகரவெனத் துதித்துன்றன் இரு - சரண மலரைப்
பணி யென்றன் (மனதுக்)

3 வன்ன மயிலின் மலை வாசா திவ்விய சொன்ன
வேலணி முருகேசா
நன்னயமாகவே யுனது பதந்தன்னை பணி செயு
மெனது (மனதுக்)

## 354. வருத்த முனக்கு வாராதே

பல்லவி

வருத்தமுனக்கு வாராதே நெஞ்சே – குன்றைப்
பருப்பதந் தன்னில் வளர் பரமனைப் பணிந்தால் (வருத்த)

அநுபல்லவி

மனது தனிற்றுறக்காமல் அன்பாய் - அனுதினமு
மறக்காமல்
துதி செய்யு மன்பருக்கருள் குகன்றனைப் பதந் தொழுதால்
(வருத்த)

சரணங்கள்

1 காரணகாரிய வடிவாய் – அன்பர்க்கு
நேரிடும் வினைக்கொரு விடிவாய் – யாரையும்
ரட்சிக்கு மையனை யிச்சையுடன் பணிய (வருத்த)

2 குனருக்குடி வளர் கந்தன் - குறமயின்
மின்ருன் புனைபுய மைந்தன் - அருள்
விர்த்தியுள்ளவனை - நித்தியந் துதித்தால் (வருத்த)

## 355. தீராத வினையெல்லாந் தீர்த்து வைப்பாயே

பல்லவி

தீராத வினையெல்லாந் தீர்த்து வைப்பாயே
காராரும் பொழிற் குன்றைக்கன மலையோனே (தீராத)

அநுபல்லவி

ஆதிபராபர ரூபமே யெங்குஞ் - சோதி மயமான தீபமே
தோகை மலை வாகனே - வாகை புனை போகனே (தீராத)

சரணங்கள்

1 சகல புவன ரட்சகனே யன்பர் அகமகிழ்ந்திடக்
காக்குங் குகனே
யெனக் காதவராகவே காதலருடனே (தீராத)
2 அண்டர் முனிவர் தொழுந்துதியா - யொருசெ
கண்டி யெனுங் குன்றைப் பதியாய் - யென்னைக்
கருத்தினில் வைத்துடனு ரித்தாக வெண்ணியே
(தீராத)

## 356. பாலகனே

பல்லவி

பாலகனே யென்னை யாளாய்
ஞாலம் புகழுஞ் சிவநாயகி யருளிய (பாலகனே)

சரணம்

அந்தரி யாமளை சுந்தரியுமை மாது
சங்கரி சவுந்தரி மங்கை கல்யாணி
மாது சங்கரர் காதலி யருளிய (பாலகனே)

## 357. உந்தன் தயவு வரவில்லையோ

பல்லவி

உந்தன் தயவு வரவில்லையோ - வினி
எந்தனிடத்திலருள் தல்லையோ (உந்தன்)

சரணம்

சங்கர சடாதர மைந்தா தமிழ் துங்க ஞானசம்பந்தா
உம்பர் தூயமலர் மகள் மருகா வன்பர் நேயமுடன்
பணி முருகா
சோலைச் சிகிமலை வாசா மலர் மாலைக் குழல் வள்ளி நேசா
(உந்தன்)

## 358. என்னை யாளாய்

பல்லவி

என்னை யாளாய் வான் மாமயில் மலை முருகேசா (என்னை)

சரணங்கள்

1 தோத்திரஞ் செய்து தொழுது நின்றுள மலர்
மாத்திம் நினைவோரை வாழ்விப்பா யிவ்வேளை
மயின் மீதேறி யொயிலுடன் வந்து (என்னை)

2 சகல வுலகில் வளர் சகல சன ரட்சகா
மகபதி முதலிய வானவர் பணி குகா வடிவேலாயுதா
அடியார்கள் நேயா (என்னை)

3 குன்றையம் பதிவளர் குருபர நாதா
நன்றியை யடியர்க்கு நல்கிய பாதா
நன்னயமாகவே நின்னருள் புரிந்து நீ (என்னை)

## 359. நாடக மயிலா

ராகம் : பைரவி

பல்லவி

நாடக மயிலா எனை ரட்சிப்பா யொயிலா
ஏடவிழ் மணமலிந்திருக்குஞ் செகண்டி நாதா (நாடக)

சரணங்கள்

1 கானகத் தினைப் புனத்தைக் காக்கின்ற குறமாது
வானகத் தரசனருண் மங்கையிவர்கன் மீது
மால் கொள்ளு முருகையா வேல்கொள்ளு மிருகையா
(நாடக)

2 மோதிய படையொடு முழங்கிவரும் வீரனை
பாதிமதி போல் தந்தம் படைத்திடுஞ் சூரனை
பகைத்துடன் வென்றவா நகைத்துட னின்றவா (நாடக)

3 சோலை நிறைந்து வளர் தோகை மலைக்குகந்த
மாலைநிறைந்த புயவா குமரேச கந்தா
வரந்தர வேணும் நிரந்தரம் பூணும் (நாடக)

## 360. நம்பின பேர்களை

ராகம் : புன்னுகவராளி

பல்லவி

நம்பின பேர்களை நட்டாற்றில் விடலாமோ
ரட்சிக்க வேணு மையனே (நம்பின)

அநுபல்லவி

வம்பவிழ் மலர்ப்பொழிலும் பருலகினீடு
மயின்மலை மீதுவளர் குமரேசனே (நம்பின)

சரணங்கள்

1 அனந்த தெய்வங்க ளிருந்தாலு முன்போ
லாதரிப் போருண்டோ மேலும்

மனந்தனிலே நினைப்போர் தம்மை நாளும்
வாழ்விக்குங்கர்த்த னென்று வந்து பணிந்துன்னை
(நம்பின)

2 கானக மடவன மானே தன்னைக் காதலுடன் புணர்தேனே
வானவர் பணிசரணேசா சரவண பவனே கருணேசா
(நம்பின)

3 தோகை மலைக் கிசைந்த வொளியே - நாளுந்
துதிக்கு மன்பர் நெஞ்சிருள் வெளியே
வாகைபுனை நெடிய வேலா - வேண
வரந்தர வேணுமுமைபாலா (நம்பின)

## 361. முருகையா பன்னிருகையா

பல்லவி

முருகையா பன்னிருகையா
உருகுமன்பர் வினையை யோட்டி வைக்கு மய்யனே (முரு)

அநுபல்லவி

கங்கைச் சடைமுடிக் கர்த்த ரருளுமைந்தா
மங்கை குறக்கொடி மருவிய கந்தா (முரு)

சரணம்

எதிர் வருசூருட லிரு பிளவாக்கும்
கதியிலா வன்பர்க்குக் கதியை யுண்டாக்கும்
சோலைவளஞ் சிறந்த தோகைமலை யோனே
மாலையணியும் புயவானவர் கோனே (முரு)

## 362. ஏனலைகிருய் மனமே

பல்லவி

ஏனலைகிருய் மனமே ஏனலைகிருய் (ஏன்)

அநுபல்லவி

தேனலர்ப் பொழிற் செகண்டி மாமலைத்
தேவனிருக்கத் தேச தேசம் போய் (ஏன்)

சரணங்கள்

1 அஞ்சாதே பயப்படாதே யென்றுனக் காதரவு செய்து
மாதயவுடனே
மிஞ்சாது மாய்கையை வேரை யறுத்து நான்
மேலான வருள் செய்ய வேலாயுத னிருக்க (ஏன்)

மிஞ்சாது மாய்கையை வேரறுத்து – நன்
மேலான அருள்செய்ய வேலாயுதனிருக்க (ஏன்)

2 மாயப் பிறப்பெனும் வஞ்சக் கடலினில்
மாய்ந்து போகாம லாய்ந் தெடுத்து
தூய கருணையெனுந் துளியின் முழுக்காட்டித்
துயர்களைத் தீர்த்தருள் செயமுரு கனிருக்க (ஏன்)

3 பத்தனிவ னென்று பரிவுட னழைத்து
பார்த்துக் கண்ணாலே நேர்த்தி யாகவே
சித்த மிரங்கியே தீராதெல்லாந் தீர்த்துச்
செய்ய வரந்தர வய்ய னிருக்கவே (ஏன்)

## 363. நினையா திருக்கலாமோ

பல்லவி

நினையா திருக்கலாமோ – இருந்தால்
நெஞ்சிற் றுயரம் போமோ (நினை)

அநுபல்லவி

கனைகடற் புவிசூழ் செகண்டிமலை யோனை (நினை)

சரணங்கள்

1 ஞான நாயக வென்மோன முனிவர் கண்டு
வானவருடன் கூடித் தேனலர் மலர்கொண்டு
வந்து பணிபுரியுங் கந்தனுபய தாளை (நினை)

2 கலைமதி புனை சடைக் கர்த்தன் பாலனை
சிலை நுதலாள் வள்ளி தெய்வானை லோலனை
சித்திர மயிலோனைப் பத்தர் பணிபாதனை (நினை)

3 தோகை மலைக் கிசைந்த துரைமுருகோனை
வாகைபுனை புயனை வளரெம்பிரானை
வர்ச்சித வதனனை யிச்சையுடன் றெழுது (நினை)

## 364. ஆதரிப்பாய் ஐயனே

பல்லவி

ஆதரிப்பாய் ஐயனே
போதலர் பொழிற் குன்றைப் பொருப்பி லுறைபவனே
(ஆதரிப்)

சரணம்

வள்ளி மனோகரா தெள்ளிய வேற்கரா
மாதவர் தோத்திரா சீதள நேத்திரா
குன்றையம் பதியாய் அன்பர் கடுதியாய் (ஆதரிப்)

## 365. தந்தது போதுமய்யா

பல்லவி

தந்தது போதுமையா இந்தவுடலி லுயிரிருக்கும்போது
சாமி (தந்தது)

சரணங்கள்

1 எந்தவிதத்திலு முந்தன் பதம் பணிந்தேலாத துன்பமும்
போகவே வினையால்
வந்த துயரைக் களைந்து நலமாக வைத்துச் சுகாந்தமாகவே
(தந்தது)

2 சய்யல் செய்யும் விழிமையல் மடவார்கள் தந்தகலவியின்
சுகத்திலே மத
னெய்யும் மயக்கத்தாற் றெய்யு மனதை யிலங்கும்படி
செய்து இகத்திலே (தந்தது)

3 அண்ட முயருஞ் செகண்டி மலைவள ரய்யனே பூதி
மெய்யனே நயங்
கொண்ட முனிவர்கள் தொண்டர் பணிபுரி குமர குருபர
துய்யனே (தந்தது)

## 366. கருத்தி னினையா தென்ன

பல்லவி

கருத்தி னினையாத தென்ன
மருக்குலவுங் குன்றை மாமலை வாசா (கருத்)

சரணங்கள்

1 ஒரு மனதாகவே யுன்னை நாளும்
கருதித்துதி செய்யு மென்னைக் (கருத்)

2 தருவளர் குறக்குலமானை தானே
மருவியவா வடியேனைக் (கருத்)

3 அண்ட பகிரண்டந் தாவிய செ
கண்டிமலைக் குகநாதா (கருத்)

## 367. தருணமிது சமயம்

பல்லவி

தருணமிது சமயம் ஒரு சிகிமலை நாதா (தருண)

சரணங்கள்

1 அண்டர் முனிவர்பணி வண்டலர் கரபாதா (தருண)
2 வந்திடு சூரனுயிர் சிந்திட விடுவேலா (தருண)
3 மன்றன் மலர்ச்சோலைக் குன்றைமலை வேளே (தருண)

## 368. எந்தனைக் காக்குந் தெய்வம்

ராகம் : புன்னாகவராளி

பல்லவி

எந்தனைக் காக்குந் தெய்வம் வேறேயென்
றெண்ணி யிருக்க லாமோ (எந்தனை)

அநுபல்லவி

உந்தனை யல்லாது வேறில்லை யென்
றுண்மை மனது றுதியா யெண்ணும் (எந்தனை)

சரணங்கள்

1 பத்திமுத் தியாகவுன் பதும மலர்த் தாளை
நித்தியம் நித்தியம் நினைப்பவனை யிவ்வேளை (எந்தனை)
2 தேகத்தில் வருகின்ற தீவினைகளைத் தீர்த்து
யோகத்தில் வீழாமன் முன்வந்து கண்பார்த்து (எந்தனை)
3 தேற்றியே தமிழ்மொழி செப்பியே யெப்போதும்
போற்றிப் பணிவிடை புரிபவனை யிப்போது (எந்தனை)

## 369. எனது துயர்களைர வெண்ணுவாயோ

பல்லவி

எனது துயர்களைர வெண்ணுவாயோ
கனகமலை நிகர் செகண்டிமலை முருகா (எனது)

அநுபல்லவி

மாயவனுருடை மனதுமகிழ் மருகா
தூய சரவண சுககுக முருகா (எனது)

சரணம்

அந்தர வானவ ரன்பர்கள் பணிகோவே
சுந்தர மிருகன சுபகர தேவே
தோகைமலைக் கிசைந்த துரைக் குமரேசா
வாகைபுனை புயவா வள்ளியி னேசா (எனது)

## 370. எண்ணு திருக்கலாமோ

பல்லவி

எண்ணுதிருக்க லாமோ
பண்ணுர் மொழிவள்ளி பங்கனை யிங்கனை (எண்ணு)

சரணங்கள்

1 மோதிய படைமிகு நீதியில் லாதமாவைப்
பாதியாய் வென்ற பிரக்கியாதியாகிய தேவை (எண்ணு)
2 விர்த்திபெற அருளை நித்தியந் தருவோனை
நிர்த்தன மயின்மீதில் பத்தர்முன் வருவோனை (எண்ணு)
3 திருமுனிவோர் பணிதரு குமரேசனை
யிருமட மாதர்கள் மருவிய நேசனை (எண்ணு)

## 371. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா அடியார் பணியுங் குன்றையாதிபனே நல்ல (வடி)

அநுபல்லவி

எதிர் வருசூரரை யிருகூறு செய்யும்
கதிர்முடிக் கிரவுஞ்சங் குமுறிட வெய்யும் (வடி)

சரணம்

வாச மிகுந்த நீபமாலை யணிந்த தோளா
நேச மிகுந்த குறநேரிழை மணவாளா
பத்தர்கள் பணிகுன்றைப் பதிவளர் நாதா
வித்தகனே யாள வேணும் நான்மறை வேதா (வடி)

## 372. இனியொரு தெய்வமுண்டோ

ராகம்: காம்போதி

பல்லவி

இனியொரு தெய்வ முண்டோ
கனிவுட னன்பரைக் காத்து ரட்சிக்குந் தெய்வம் (இனி)

சரணங்கள்

1 முப்போது மன்பர்கள் முனிவர்களானோர்
எப்போதுந் தாருவினிந் திரன்முதல் வானோர்
இச்சைப் படியருளவே பச்சை மயிலோனல்லாது (இனி)

2 கவலையைத் தீர்த்துக் கருணை மாரி பெய்து
அவரவர் மனப்படியாக வருள்செய்து
ஆதரிக்குங் குகநாதனிவ னல்லாமல் (இனி)

3 கனக மயமான கமழ் சிகிமலை நாதன்
தனதடியவரைத் தற்காக்கும் பாதன்
சரவண பவ சிவ குருபர னல்லாமல் (இனி)

## 373. நடன மயிலாளா

பல்லவி

நடன மயிலாளா வடவரை நிகர் சிகிமலை வடிவேலா (நடன)

அநுபல்லவி

வானவர் பணிதாளா தெய் வானையை யணைதோளா
(நடன)

சரணம்

அடலசுரர்கள் காலா வெகு தட நுனியிலை வேலா
அண்டர்கள் பணி சீரா உயர்சி கண்டியின் மலைமேரா (நடன)

## 374. தயவு வைத்தென்னை யாளாய்

பல்லவி

தயவு வைத்தென்னை யாளாய்
மயல்படு குறமகள் மருவிய தோளா (தயவு)

சரணங்கள்

1 ஞான மிகுங்குழல் நங்கையெனுந் தெய்
வானை மருவிய வரத சண்முகேசா (தயவு)

2 அடியவர் முனிவர ரன்புடன் வந்து
படிமிசை யுறப்பணி பதும சரணா (தயவு)

3 தோகைமலைக் கிசைந்த சுந்தர நாதா
வாகை புனைபுயவா வரமரு ணுதா (தயவு)

## 375. சரவணபவ நாதா

பல்லவி

சரவண பவ நாதா குமர குருபரா (சரவண)

அநுபல்லவி

அந்தர வானவர் வந்தடி பணியும் (சரவண)

சரணம்

தேனலரணி குழற் கானமினுதா
மன்றலர் பொழினிறை குன்றையின் மலையாய் (சரவண)

## 376. தரிசிக்காத சென்மம்

பல்லவி

தரிசிக்காத சென்மம் சன்மமோ
பரிசுத்தமான குன்றைப் பதிமுருகேசனை (தரிசிக்க)

சரணங்கள்

1 யாவர்க்கு மெட்டாத தேவர்க்குத் தேவனை
மூவர்க்கு முதலான சேவற் கொடியோனைத் (தரிசிக்க)
2 பச்சை மயிலேறும் செச்சை புனைபுயனை
கொச்சைக் குறமகள் இச்சைக் கிசைவோனைத் (தரிசிக்க)
3 மின்னிய நேர்த்திமிகு சொர்ன வடிவேலோனை
நன்னய அடியவருக் கின்னருள் செய்வோனைத் (தரிசிக்க)

## 377. ஆண்டவனே சரணம்

பல்லவி

ஆண்டவனே சரணம்
காண்டற்கரிய குன்றைக் கர்த்தனே முத்தனே (ஆண்ட)

சரணங்கள்

1 எந்த விதத்திலு முந்த னடிபணி எந்தனக்கு அருள்
தந்தருள்வாயே (ஆண்ட)
2 ரஞ்சிதமாய் வசனஞ் சொலுந் தேவியாள் குஞ்சரியாள்
புணரும் சண்முகா குகா (ஆண்ட)
3 மன்றலர் பொழில் சூழ்கின்ற மாமுடி குன்றையின்
மாமலை நின்றவனே யருள் (ஆண்ட)

## 378. என்றைக்கு அனுபூதி செய்வாயோ

பல்லவி

என்றைக்கு அனுபூதி செய்வாயோ
குன்றைக்கு வாய்த்த குருபர நாதா (என்றைக்கு)

சரணங்கள்

1 மகபதி மகிழு மருகேசா மூன்று செகமெலாம்
பணிமுருகேசா (என்றைக்கு)

2 ஞான முனிவரர் தோத்திரா வன்பர் தியான பன்னிரெண்டு
நேத்திரா (என்றைக்கு)
3 சங்கர ரருளிய புத்திரா வானிற் புங்கவர் பூசித மித்திரா
(என்றைக்கு)

## 379. காண்பதேயரிது

பல்லவி

காண்பதே யரிது பூண்பணிநீடு குன்றைப் பொருப்பில்
வளரய்யனே (காண்ப)

சரணங்கள்

1 தினைப்புன வொருமானை நினைத்திடும் பெருமானை
(காண்ப)
2 அண்டர்க் கரியோனை மிண்டர்ப் பெரியோனைக் (காண்ப)
3 குன்றைப் பதியானை யென்றன்பர் துதியானைக் (காண்ப)

## 380. நடன மாமயிலா

பல்லவி

நடன மாமயிலா சிகி தடவரை நாதா
நெஞ்ச மகிழ்ந்து வருவா யுந்தன் கஞ்சமலர்ப் பதந்தருவாய்
(நடன)

அநுபல்லவி

வாச மிகுந்த மலர் நீபா பிரகாச மிகுந்த வுயர் தீபா (நடன)

சரணம்

குன்றையம் பதிவளர் வேளனே யென்று
நன்றருள் வாய்முரு கோனே (நடன)

## 381. சங்கரி தருபாலா

பல்லவி

சங்கரி தருபாலா மங்களகர மிகு இங்கிதமாகிய (சங்கரி)

சரணங்கள்

1 இமைய மலையில் வருகுமரிதிரி புரையாள் (சங்கரி)
2 சீதரனுருடைய சோதரி யாகிய (சங்கரி)
3 சங்கரனுரொரு பங்கி லுறையுமை (சங்கரி)

## 382. குக குருபரனே என்று துதிப்பாயே

பல்லவி

குக குருபரனே யென்று துதிப்பாயே
அகமதி லன்புடன் பதிப்பாயே (குக)

சரணங்கள்

1 சரவணபவ குருபர நாதா - வேற்
கரதல வெனக் கருள் தாதா (குக)
2 தஞ்சம் வேறிலே யெனையா ளாயன்பர்
நெஞ்ச மகிழவருள் தாளா (குக)
3 குன்றுக் குடிவளர் தேவே யெனை
நன்ருகக் காத்தருள் கோவே (குக)

## 383. சரண மெந்தனைக் காக்க வேணும்

பல்லவி

சரண மெந்தனைக் காக்கவேணும் நீபா
பரணந்தனை யணியு மார்பா (சரண)

அநுபல்லவி

ஆசைக் கடலில் வீழாமல் பொல்லா
மோசப் பிறவியைச் சாராமல் (சரண)

சரணம்

இன்னல் மயலிற் சேராமல் வெகு
நன்னய மாது சேராமல்
குன்றைமலை வாசா குற
மின்றனக் காகிய நேசா (சரண)

## 384. கடவுளை நினைமனமே

பல்லவி

கடவுளை நினைமனமே - வடவரை
நிகர்மகா சிகிமலை வளருங் (கடவுளை)

அநுபல்லவி

யாவர்க்கு முயர்வா மனுக்கிரகந் தருவளர் சோலைதனில் வளர்மானை
மருவிய புயனை வரமருள் வோனை (கடவுளை)

சரணம்

சங்கர சண்முக சரவண பவனே துங்கநன் மயின்மிசை
துலங்கிய சிவனே
வானவர் முனிவர்கள் வணங்கு சண்முகனே
தானவர் குலந்தனைத் தகர்த்திடுங் குகனே (கடவுளே)

## 385. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் – உயர்
சிகிமலை வளருங் குமரேசா (தயவு)

சரணம்

கங்காதர சடாதரர் பங் கினுமை பாலா
துங்க மிகுந்த குறமங்கை மருவுபுய
அந்தரமுயர் குன்றை வந்த குகேசனே (தயவு)

## 386. உன்னையல்லாது வேறுண்டோ சாமி

பல்லவி

உன்னையல்லாது வேறுண்டோ சாமி (உன்னை)

அநுபல்லவி

பின்னை வேறு தெய்வ முண்டோ
பெருஞ் சிகிமலை வருங் குருபரா (உன்னை)

சரணங்கள்

1 ஆண்டவனே யென்று வேண்டின பேருக்கு
வேண்டிய வருள்செய்து ஆண்டருள் செய்ய (உன்னை)
2 தானே வந்து பெரு மானே யருளென்று
தேனுர் துதிசெய்யு ஞானேரைக் காக்க (உன்னை)
3 தங்கமுடி நிறைதுங்கமிகு சிகியங்கிரி வருகுக மங்கள குமரா
(உன்னை)

## 387. பரத நடன மயிலா

பல்லவி

பரத நடன மயிலா வரதனே குன்றை மாமலைவாசா (பரத)

சரணங்கள்

1 எள்ளளவாகிலுந் தயவு வையாமல்
விள்ளரிதாகிய வருள் செய்யாமல்
விருப்பமில்லாம லிருப்ப தேனய்யா (பரத)

2 எந்தக் காலமு முந்தனை யடுத்து சந்தப் பாத்துதிதானே
தொடுத்துந்
தன்னைப் பணி செய்யு மென்னைக் காக்க வேணும் (பரத)
3 கோல மாமயிற் குன்றைப் பதியாய் சீலமாதவர்
செய்யுந் துதியாய்
தெள்ளுந் தினைப்புன வள்ளி மனோகரா (பரத)

## 388. சித்த மிரங்க வில்லையோ

பல்லவி

சித்த மிரங்க வில்லையோ - பட்சம் வைத்து
ரட்சிக்க வரவில்லையோ (சித்த)

சரணங்கள்

1 சித்திர மயிலேறி வரவும் உந்தன் பத்தனுக்கு அருள்
தரவும் (சித்த)
2 அன்பனை யடிமை கொள்ளவும் நல்ல இன்புறு வசனம்
விள்ளவும் (சித்த)
3 குன்றை யம்பதி நாதா எனக்கு நன்றருள் செய்யும் பாதா
(சித்த)

## 389. சகலசன ரட்சகா

பல்லவி

சகலசன ரட்சகா - மகமுனிவோர்
பணி மயின்மலை வாசா (சகல)

சரணங்கள்

1 உன்னை நம்பின பேருக்குதவா திருக்க லாமோ
இன்னம் வியாகுலத்துக் கிடம் வைத்துருக்கலாமோ (சகல)
2 சங்கரருளிய சண்முக நாதா துங்க மயிலில் வருதூய
மலர்ப்பாதா (சகல)
3 குன்றை யம்பதி வரு குக குருபரனே நன்றடியவருக்கு
நல்கிய வரனே (சகல)

## 390. எனக்கிரங்காயோ

பல்லவி

எனக்கிரங்காயோ வனக்குறமயில் வாகா யோகா (எனக்)

சரணங்கள்

1 அஞ்சவேண்டா மென்று ஆதரவு செய்து
மிஞ்சு கருணை விழி மாரி பெய்து (எனக்)

3 காத்து ரட்சிக்குங் கடவுணீ யென்று
பார்த்திருந்த படிக்கினி யின்று (எனக்)

3 சோலை நிறைந்த தோகை மலைவாசா
மாலை நிறைந்த மார்ப குகேசா (எனக்)

## 391. எந்தன் மனப்படி யாகவே

பல்லவி

எந்தன் மனப்படி யாகவே யருள் தந்து ரட்சிப்பாய்
வெகுவாகவே (எந்தன்)

அநுபல்லவி

காதன் மிகு குறமாதுள் மேவு போதணியும் மலர்க்காதுள்
பொருந்திடவே மனம் விரும்பிய நாதா (எந்தன்)

சரணம்

தெள்ளிய தமிழ்புகல் வாயா ஆடும் புள்ளி மயிலில்
வருதூயா

பொற்பு நிறைபவா அற்புத முருகா
சோலை நிறைசிகி மேரா வெற்றி மாலைநிறை புயசூரா
மாயவன் மருகா தூய பிரகாசா (எந்தன்)

## 392. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா கூடிய தினைப் புனக்குறமின் பங்காளா
(ஆடிய)

சரணங்கள்

1 அந்தரவான ரனைவருஞ்சூழ விந்திரன் முதலின
ரெல்லோரும் வாழ (ஆடிய)

2 தித்திமித் திமிதிமி யென்று சுத்தமதாகவே தொம்மென
நின்று (ஆடிய)

3 சோலை நிறைந்திடு தோகையின் மேரா மாலை நிறைந்
திடு வாகையின் மாரா (ஆடிய)

## 393. கர்த்தனைக் காண்பாய்

பல்லவி

கர்த்தனைக் காண்பாய் மனமே நிர்த்தனஞ் செய்யு
நீலமயிலனைக் (கர்த்த)

சரணங்கள்

1 வெள்ள மாமவுணர் மீறிய படைதன்னை வெல்லு
நெட்டிலை வேலனைக் (கர்த்த)

2 செகத்தின் மன்னிய வுயிருக் கெல்லா மருள் செய்து
ரட்சிக்கு நாயனைக் (கர்த்த)

3 மகத்துவ மிகு ஞானமுனிவரர் வானவர்க்குச் சகாயனைக்
(கர்த்த)

4 மதுரித சோலை நிறை செகண்டி மாமலை நாதனை
சதுர்வித மறை புகலிருபத சரவண பவனைக் (கர்த்த)

## 394. கண்ட பேர்க்கு மோட்சமுண்டு

பல்லவி

கண்ட பேர்க்கு மோட்ச முண்டு
விண்டல முயர் குன்றை மேரில் வருமையனைக் (கண்ட)

சரணங்கள்

1 கோகனக மலராகிய பாதனை வாகுதிகழ் குறமின்
மோகனை நாதனைக் (கண்ட)

2 அடியவர் மிடி தீர்த்தாதரிப் போனை வடிவுறு வேல்கரம்
வாழு மெம்மானைக் (கண்ட)

3 குன்றை யம்பதிவளர் குக குருபரனை யென்று மன்பரைக்
காத்தினி தருளரனைக் (கண்ட)

## 395. செய்ய வேணுமையா

பல்லவி

செய்ய வேணுமையா ஐயனே அன்பர்க்கு வனுக்கிரகம்
யாவையும் (செய்ய)

அநுபல்லவி

மாதவர் பணி முருகா மாயன் காதல் கொள்ளு மருகா
(செய்ய)

சரணம்

கூரிய வடிவேலா வள்ளி சேரு முயர் கோலா
குன்றுக்குடி நாதா வன்பரை நன்றாக வாளீதா (செய்ய

## 396. சண்முக சாமியை நினைமனமே

பல்லவி

சண்முக சாமியை நினைமனமே
விண்முக முயர் குன்றை மேருவில் வாழும் (சண்முக)

சரணங்கள்

1 யாவர்க்குங் கிட்டாத வய்யனை மெய்யனை
மூவர்க்கு முதலான மூர்த்தியைச் சீர்த்தியை (சண்முக)

2 மாதவன் மகிழு மருகனை முருகனை
தாதவிழ் நீபத் தாமனை நேமனை (சண்முக)

3 தோகைமலைக் கிசைந்த தூயனை மாயனை
வாகைபுனை கின்ற வாகனை யோகனை (சண்முக)

## 397. சங்கர சண்முக சருவேசா

பல்லவி

சங்கர சண்முக சருவேசா மங்கள சுபகர வரத கணேசா
(சங்கர)

அநுபல்லவி

அந்தர வானவரன்பர்கள்பணியுஞ்
சந்த மிகுந்தமிழ்ச் சம்பந்த தேவே (சங்கர)

சரணம்

தாதவிழ் நீப மென்றாரணி மார்பா
காதலி குறமகள் கருணைகொள் நாதா
சோலையின் மலர்மிகு தோகையின் மேரா
கோல மயிலில் வரு குருபர நாதா (சங்கர)

## 398. வரவேணுஞ் சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி வந்து தரவேணுஞ் சாமி
காட்சி பெறவேணும் பெற்று மாட்சியுறவேணும் (வரவே)

சரணங்கள்

1 பாலனெனத் தேறியே தேறி நீலமயிலேறியே (வரவே)
2 நன்றாய் முடிதிருந்து உயர் குன்றாக் குடியிருந்து (வரவே)

## 399. ஒருகாலும் மறவாதே

பல்லவி

ஒருகாலும் மறவாதே பெருக்கான குன்றை மலைப்பெம்மானை
யெம்மானை (ஒருகா)

அநுபல்லவி

வானவர் பணி தாளனை கானமின் மணவாளனை (ஒருகா)

சரணம்

நீலமாமயில் வாகனை வேலனை விசாகனை
குன்றையம் பதியானை என்று மன்பர் துதியானை (ஒருகா)

## 400. இந்த வேளை வந்தருளுவாய்

பல்லவி

இந்த வேளை வந்தருளுவாய்
கந்த மேவு சோலை நிறை செகண்டி மலையோனே (இந்த)

சரணங்கள்

1 மதியணி முடிச்சடையார் வெகு கதிமிகுந்திடும் விடையார்
அருள் கர்த்தனே பரிசுத்தனே (இந்த)
2 ஆடிய பச்சை மயிலா வன்பர் தேடிய வெகு வொயிலா
சேவலா விண்ணோர் காவலா (இந்த)
3 அண்டர் பணியுஞ் சரணு நீப வண்டர் படியாபரணு
யென்கண்
மணியே யன்பர்க் கணியே (இந்த)

## 401. சூர சங்காரனே

பல்லவி

சூர சங்காரனே தாரணி புய குக சண்முக நாதா (சூர சங்)

சரணங்கள்

1 வன்ன மயிலேறு நாதா துய்யா நல்ல சொர்ன
வேலணி கையா (சூர சங்)
2 வாச மிகுநீபா வன்பர் நேச மிகுபூபா (சூர சங்)
3 சிகிமலை வாழ்குகனே யருள் மகிமை கொளறு முகனே
(சூர சங்)

## 402. சத்தி வேலனே

பல்லவி

சத்தி வேலனே கர்த்தனே செகண்டி மலைவாழ் (சத்தி)

அநுபல்லவி

ஆடிய மயிலாளனே யன்பர் தேடிய மலர்த்தாளனே (சத்தி)

சரணம்

கொஞ்சுங் குறமினுயனே தமிழ் மிஞ்சு செங்கனி வாயனே
வாகை புனையும் வாகனே குன்றைத் தோகை மலையின்
யோகனே (சத்தி)

## 403. எனக்கொரு வரந்தருவாய்

பல்லவி

எனக்கொரு வரந்தருவாய் வனக்குற மயிலியை மருவிய
வுருவாய் (எனக்)

அநுபல்லவி

உன்னை யடுத்தவனுனே யாகையா லென்னை யினி
ரட்சித் தெம்பெருமானே (எனக்)

சரணம்

அடுத்தவ னுனில்லையா வடியேன் தொடுத்திடு காரியஞ் சுகம்
பெறச் சொல்லையா
சோலை நிறை சிகிபா வெற்றி மாலை புனைபுய வானவர் மகிபா
(எனக்)

## 404. ஏதுக்கு அருளக்கண் பாராதிருப்பது

பல்லவி

ஏதுக்கு அருளக்கண் பாரா திருப்பது
வாதுக்கு வருமாவை மாய்த்திடு சூரா (ஏதுக்கு)

அநுபல்லவி

தேடிய வுனக் குரியாரவரைக் காக்கும்
ஆடிய மயிற்பரியா யெனக் காதரவு செய்ய வேறுதுணை
யுண்டோ (ஏதுக்)

சரணம்

சங்கர சண்முகனே வானவர்க் கிங்கித மிகுகுகனே தன
திச்சைக் கிசைந்திடுங் கொச்சைக் குறத்தி பாகா
கதிர் பெறுமுடி மேவு நலமான மதிதவழ் பொழில் தாவும்
குன்றை
மாமலை வாழ்தரு பூமலி வேலா (ஏதுக்)

## 405. பாரா திருக்கலாமோ

பல்லவி

பாரா திருக்கலாமோ – குன்றை
மேராளியாகிய ஐயனை மெய்யனைப் (பாரா)

சரணங்கள்

1 வானவர் முனிவர்கள் தேடும் சரணனை
தானவர் குலமதைச் சாடும்படி வேலைத்
தானெய்யும் வீரனைத் தேனெய்யும் நீபனைப் (பாரா)

2 கானகந்தனில் வளர்மானை மேவும்
நானமிகு புயவோனை யண்டர்
கர்த்தனை யுயர்பரி சுத்தனைக் கண்ணுறைப் (பாரா)

3 தேனொழுகிய பொழில் சேரும் அந்த
வானுயர் சிகிமலையாரும் சொர்ன
மாமயில் வாகனை சோம வதனனைப் (பாரா)

## 406. குன்றுக் குடியான் முன்னின்று

பல்லவி

குன்றுக் குடியான் முன்னின்று மனமே நன்றுப் பணிந்து
கொளின்று (குன்றுக்)

சரணங்கள்

1 தண்டைச் சிலம்பொலிகலுங்க பணி கொண்ட பன்னிரு
புயங்குலுங்க
மயின்மேற் கூத்துடன் அன்பரைக் காத்திடவே வரும்
(குன்றுக்)

2 கோப வசுரரை வெல்வேன் மின்ன நீப மலர்மார்
பினிற் பின்ன மயின்
மேனின்று விளையாடி யென்றும் வருகிற (குன்றுக்)

3 தொண்டர் முனிவர் சூழ அந்த அண்டரவுணர்கள் தாழ
மயின்மேல்
ஆடி யிருவருடன் மோடியுடன் வரும் (குன்ருக்)

## 407. அடியவனிவ னென்று அறியாயோ

பல்லவி

அடியவனிவ னென்று அறியாயோ
படியிலுயர் குன்றைப் பதியில் வரு நாதா (அடியவ)

சரணங்கள்

1 கந்தாகுகா நல்ல கார்த்திகேயா
இந்தா வென வன்பர்க்கினிதருள் தூயா
தந்தார் கரதல நாதரருள் சேயா
சிந்தாத் தமிழ்பயில் செங்கனி வாயா (அடியவ)

2 எதிரிடு சூரனை யெய்திடும் வேலா
மதிநுதல் வள்ளியை மருவிய லோலா
கதிர் முடியிமையவர் காத்திடுங் காலா
மதுரையிற் றமிழ்ப் பொருள் வழுத்திடும் பாலா (அடியவ)

3 துங்க மலர்ச்சோலைத் தோகையின் மேரா
தங்க மயிலேறுந் தழைக்குஞ்சிங் காரா
எங்கும் பிரகாசமா யிருக்கும் வசீரா
பொங்குமண நீபப் பூமலர் மார்பா (அடியவ)

## 408. குருபரா சரணம்

பல்லவி

குருபரா சரணம் திருமருவிய செகண்டி மலைவளர் (குருபரா)

அநுபல்லவி

நீல மயிலாளா வள்ளி கோல மணவாளா (குருபரா)

சரணம்

சங்கரர் பாலா இங்கித லோலா
நன்ருர் பொழினீடுங் குன்ருக் குடிவாழுங் (குருபரா)

## 409. சகலசன ரட்சகா

பல்லவி

சகலசன ரட்சகா மகபதி பணிசரணு (சகல)

அநுபல்லவி

வேதாந்தப் பொருளே நாதாந்த வருளே (சகல)

சரணம்

அன்பர் சகாயா யென்மன நேயா
சிகிமலை யாரணு குககுரு காரணு (சகல)

## 410. குருவே யுனை நம்பினேன்

பல்லவி

குருவே யுனை நம்பினேன் - அருவே யுருவே (குருவே)

அநுபல்லவி

சந்த மிகுந்திடு தமிழ்ச்சொல் வாயா
அந்த மிகுந்திடு மழகிய தூயா (குருவே)

சரணம்

ஆதரவெனக் கினியா ரிருக்கிரு ரையா
தாதவிழு நீபத் தாரணி மெய்யா
சங்கையில் லாமலர்த் தடம்பொழில் சூழுந்
துங்க மிகுந்திடு தோகைமலை வாழும் (குருவே)

## 411. பாத தரிசனம் மறவாதே

பல்லவி

பாத தரிசெனம் மறவாதே - மனமே
ஆதர வுனக்கினி யேதிருக்குது வையன் (பாத)

சரணங்கள்

1 மாது குறமகண் மருவிய நேசன்
பூதல வுயர்களைப் புரக்குஞ்சர் வேசன் (பாத)
2 தானவர் குலமதைத் தகர்த்திடு கோபன்
நான மிகுந்த விதழ்நறுமது நீபன் (பாத)
3 சோலை வளமிகுந்த தோகையின் மலையோன்
மாலை நிறைந்தபுய மதுரித கலையோன் (பாத)

## 412. நீ யறியாயோ

பல்லவி

நீ யறியாயோ மனமே நாயன் செகண்டிமலை நாதன்றன்னை
(நீயறி)

அநுபல்லவி

அண்டர் கடம்மை யாதரிப்போனே வண்டலர் நீபமலர்
தரிப்பேரினே (நீயறி)

சரணம்

வாட்டிட வெதிர் மாவை வெல்வோனே யாடிடுமயில் தனில்
செல்வோனே
சோலை நிறைந்த தோகை மேரனே மாலை நிறைந்தவர்ச்சித
மாரனே (நீயறி)

## 413. கடவுளைக் காணுவாய்

பல்லவி

கடவுளைக் காணுவாய் மனமே தடமுடிச் சிகிதனில் வளருங்
(கடவுளை)

சரணங்கள்

1 ஆருதாரத்துக் கப்புற நீடிய வேருதாரத்தில் விருப்பொடு
கூடிய
மேலாகிய மறை நாலா விளங்கிய (கடவுளை)

2 அண்ட பகிரண்டம் யாவும் நிறைந்து மிண்டு முலகினில்
மெள்ள மறைந்தும்
விளக்கிய சோதியைத் துளக்கமில் முழுதற் (கடவுளை)

3 தூய பொழிலுறை தோகையின் மேரில் நாயக மாகவே
நாளுஞ் சீரில்
நன்னயமாகிய யென்னையளுகிய (கடவுளை)

## 414. செய்ய வேணுமையா

பல்லவி

செம்ய வேணுமயைா வனுக்கிரஞ் செய்ய வேணுமையா
(செய்ய)

அநுபல்லவி

மையுலாவும் பொழிலுறையுங் குன்றை வரைக் குகந்திடு
துரைக்குருபரா (செய்ய)

சரணங்கள்

1 அண்ட மதிர்ந்திட வாடிய மயிலா மண்டிப் படைமாவை
வதைத்திடு மயிலா (செய்ய)

2 வனச மயின் மகிழு மாயவன் மருகா எனதிதய மலர்க்
கிசைந்திடு முருகா (செய்ய)

3 குன்றை மாமலைக் குருபர நாதா மன்றன் மிகுந்த
மாமலர்ப் பாதா (செய்ய)

## 415. சிவ குருபரனே

பல்லவி

சிவகுருபரனே நவவேற் கரனே (சிவகுரு)

அநுபல்லவி

வேதாந்தப் பொருளே நாதாந்த வருளே (சிவகுரு)

சரணம்

மயினடத்திய சூரா ஒயின் மிகுத்திடு தீரா
குன்றையம் பதியா வென்றன்பர் துதியா (சிவகுரு)

## 416. சாமி சித்த மிரங்க வேணும்

பல்லவி

சாமி சித்த மிரங்க வேணும் பூமி புகழுங் குன்றைப் பூபனே
நீபனே (சாமி)

சரணங்கள்

1 என்னுளு மையனே யடுத்தவன் தினமு
முன்னுமத் தியானந் தொடுத்தவன் உயர்
பொன்னுடர் புகழு மென்னுயகனே (சாமி)

2 மந்திர முனிவர்கள் தோத்திரா நல்ல
சுந்தரவாறு படை க்ஷேத்திரா மலர்க்
கந்தமிகு புயா வெந்தனை யாதரிக்க (சாமி)

3 தினந்தினமுந்தனை வந்து தோத்திரம்
மனந்தடுமாருது புகழ்ந்து பணியும்
இனங்களை யாதரிக்குங் கனங்கொள் சிகியாளா (சாமி)

## 417. எப்படியு மருள்செய்ய வேணும்

பல்லவி

எப்படியு மருள்செய்ய வேணு மென்றெண்ணிப் பாராயோ
(எப்படி)

அநுபல்லவி

மைப்படியுஞ் சோலை மேவிய குன்றைமலைக் குகந்திடுதலைக்
குருபரா (எப்படி)

சரணங்கள்

1 பன்னிரு கண்ணாலே பார்த்து இனி என்னை யடியரொடு
சேர்த்து
பத்தி மானிவ னென்று சித்தந்தனிலிரங்கி (எப்படி)

2 ஆதரவு செய்து இன்று எந்தன் மீது தயவாகி நின்று
செய்து
மெத்த மெத்தவுன் சித்த மிரங்கியே (எப்படி)

3 குன்றை மாமலை மேரில் வாசம் என்றும் செய்பவா எந்தன்
பேரில் அன்புற
எத்தேச காலமும் சித்த மிரங்கியே (எப்படி)

## 418. எந்தன்மேற் றயவில்லாத தேதய்யா

பல்லவி

எந்தன்மேற் றயவில்லாத தேதய்யா
கந்தமலர்ப் பொழிற் செகண்டி முருகையா (எந்தன்)

சரணங்கள்

1 சூரபத்மன் படையோட சூரன் மார்பைப் பிளந்தா
வியோட வீர
வச்சிர வயில் விடு செச்சை யணிபுயா (எந்தன்)

2 கானக் குறத்தி யெனுமாதை யவள் மேனத்தியவள்
பாதப் போதைக் கண்டு
விரும்பி மயிலொடு திரும்பி மருவுவாய் (எந்தன்)

3 சோலை நிறைந்த தோகையாய் நீப மாலை நிறைந்த
வ்ாகையாய் யென்முன்
வந்து வனுதினம் எந்த விதத்திலும் (எந்தன்)

## 419. ஒருநாளும் மறவாதே

பல்லவி

ஒருநாளும் மறவாதே – மனமே
திருமாதுறையுஞ் செகண்டிமலை யோனை (ஒருநா)

அநுபல்லவி

வள்ளி மனோகர லோலனை யாடும் புள்ளி மயிலில்
வருகோலனை (ஒருநா)

சரணம்

அன்பர்கள் பணிபதாம் புயனை யன்பர் முன்பு வந்தருள்
முருகையனை
தோகையெனுங் குன்றைப் பதியை வெற்றி வாகைபுனை
கிருபா நிதியை (ஒருநா)

## 420. தஞ்சம் வேறில்லை ஐயா

பல்லவி

தஞ்சம் வேறில்லை ஐயா வுந்தன் நெஞ்சம் வைத்தாளுவை
மெய்யா (தஞ்சம்)

அநுபல்லவி

மாங்குயில் வள்ளிமிமேவு பங்காளா
பூங்குயில் குஞ்சரியாள் புணர்தோளா (தஞ்சம்)

சரணம்

அன்பர்கள் மனத்திலுறையும் பொருளே
அன்புடனெங்கும் நிறையு மருளே
குன்றுக் குடியில் வாழ் முருகேசா
நன்றாய்க் காத்தருள் பிரகாசா (தஞ்சம்)

## 421. யாதொரு தெய்வமுண்டோ

பல்லவி

யாதொரு தெய்வமுண்டோ
போதொருமித்திடும் பொழிற்குன்றையா னல்லால்
(யாதொரு)

சரணங்கள்

1 அடியவர் தங்களுக் காதரவு செய்ய
அடியவர் தங்களுக் கருண்மழை பெய்ய (யாதொரு)
2 துதி செய்பவர்கட்குத் துயர்தனைத் தீர்க்க
கதியில் லாதவர்க்குக் கடைக்கண்ணாற் பார்க்க
(யாதொரு)
3 அடுத்திடு மன்பரை யருள்செய்தாதரிக்க
தொடுத்திடும் வினைகளைத் துலைத்துடன் பரிக்க
(யாதொரு)

## 422. இது சமய மருள்வாய்

பல்லவி

இது சமய மருள்வாய் விதியுடன் பணியன்பர்மே லன்பு
வைத்தாள (இது சம)

சரணங்கள்

1 காத்திருக்கும் பத்தர்க்கு தீர்த்தருள் செய்திட (இதுசம)
2 அடுத்திடு மன்பர்க்கு தொடுத்தினி தாட்கொள் (இதுசம)
3 குருபரகுக நாதா வருமடியவரைக் காக்க (இதுசம)

## 423. எந்தத் தெய்வம்

பல்லவி

எந்தத் தெய்வமிந்தத் தெய்வம் போலிருக்குமோ - மனமே
கந்தப் பொழில்சேர் குன்றை மாமலைக்
கருத்தன் பொன்மயி லொருத்தன் போல (எந்தத்)

சரணங்கள்

1 வாசமேவிய நீபமாகிய மாலையணியு மார்பனை
மோசமான படைகளுடனே வரு முடுக்கிடவரு சூரனை விழ
முக்கிய வேல் விடுமுக் கிரர் போலவே (எந்தத்)
2 கானத்தினி லுறையுங் குறக்காதன் மங்கைதன் பாகன்
வானகத்திலு றையுந் தேவர் வந்தடி பணியோகன்
நாளும்
வையம்பு கழுமையன் போல (எந்தத்)
3 மந்திகள் குதிபோடுஞ் சோலை மாமலையின் வாசன்
பந்தி பந்தியா யடியவர் வந்து பணியும் பிரகாசன் கூர்ந்து
பார்க்கும் பொழுது ஏற்கும்படியே (எந்தத்)

## 424. சாமி சித்த மிரங்காதோ

பல்லவி

சாமி சித்த மிரங்காதோ பூமி பரவுங் குன்றைப்
பொருப்புறை நாதா (சாமி)

சரணங்கள்

1 அல்லுபகலு நெஞ்சில கலாமற் பதிக்கும்
சொல்லும் பொருளுஞ் சேரச் சொல்லியே துதிக்கும்
தூய வன்பரைக் காக்க நேயமதாகவே (சாமி)

2 பரவு மடிய வரைப் பாங்குடன் காக்க
விரைவுட னவரைக் கணமெல்லா நலன்பார்க்க
விருப்புட னவர்களைச் சுருக்குடன் ரட்சிக்க (சாமி)

3 குன்றைமலைக் கிசைந்த கோலமா மயிலன்
மன்றன் மலரையணி வாளொளிய யிலன்
மாலுடனன்பருக் கேலும் படியருள் (சாமி)

## 425. பாதத்தைத் பணிந்தேன்

பல்லவி

பாதத்தைத் பணிந்தேன் ஐயன் பாதத்தைப் பணிந்தேன் (பாதத்)

அநுபல்லவி

போதத்தை மிகுந்த முனிப் புண்ணியர்கள் பணி (பாதத்)

சரணங்கள்

1 அண்டர் முதலினோர் வந்து அருச்சனை புரியும்
தொண்டர் முதலினோர் வந்து தூய மலர் சொரியும் (பாதத்)

2 தண்டைச் சிலம்புகள் தவ்விய சதங்கை கிண்கிணியும்
விண்டொளியுடனே காந்தி விளங்கவே யணியும் (பாதத்)

3 குன்றைமாமலை வருங் கொற்றவன் வாழும்
என்றுமே யகலா நல்ல வெழின்மலர் சூழும் (பாதத்)

## 426. அடுத்தவனுன் முருகையா

பல்லவி

அடுத்தவ்னுன் முருகையா வருள் கொடுத்தருள் பன்னிரு
கையா (அடுத்த)

சரணங்கள்

1 மாயப் பிறவியிலே யற்ப வாழ்க்கையிலே
போயப் பழ வினையாயத்தை நீக்கவே (அடுத்த)

2 சீதள திவ்விய பாத பங்கேருக
போதலர் மேலன்பிலா தரவாகவே (அடுத்த)

3 குன்றையம் பதியினின் றருணுதா
யென்றுனது தாளையே ஒன்றிட வேண்டியே (அடுத்த)

## 427. தரவேணுஞ் சாமி

பல்லவீ

தரவேணுஞ் சாமி மயின் மீதுவர வேணுஞ் சாமி (தரவே)

அநுபல்லவி

அண்ட மெல்லாமும் நிறைந்தவனே யன்பின்
றொண்டர் மனதி லுறைந்தவனே யருள் (தரவே)

சரணம்

மருவு லாவு மலர்ப்புயனே மனம்
பொருதிய சரணும்புயனே
துங்கமயின் மலையோனே யன்பர்
தங்களைக் காக்கும் பெம்மானே (தரவே)

## 428. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே வேறுமுகம் பாராமலடியேன்
மீதுமுகம் பார்க்க வேணும் (ஆறு)

அநுபல்லவி

சங்கரர் பாலனே யிங்கித லோலனே
துங்கயில் வேலனே பொங்கனு கூலனே (ஆறு)

சரணம்

சத்துரு சங்காரா சித்தலங்காரா
பத்தர்க்குதாரா மொய்த்திடு தாரா
குன்றையின் வாசா துன்றும் பிரகாசா
நின்றருளீசா யென்றுஞ்சர் வேசா (ஆறு)

## 429. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா தமிழ் பாடிய ஒயிலா (ஆடிய)

அநுபல்லவி

பங்கய பாதா நான்கு துங்க நல்வேதா (ஆடிய)

சரணம்

சங்கரர் பாலா நல்ல இங்கித லோலா
குன்றை மாமலையா நாளு நன்றுள கலையா (ஆடிய)

## 430. சண்முக குருவே

பல்லவி

சண்முக குருவே விண்முகமுயர் குன்றை மேருவில்
வளரும் (சண்முக)

சரணங்கள்

1 மறுவறு செந்தமிழை மனதினிற்றேறிய
குறுமுனிக் குபதேசங் கூர்மையாய்க் கூறிய (சண்முக)

2 அண்டர்கள் முனிவர் களன்புடன் துதிக்கும்
தொண்டர்கள் மனதினிற் றுலங்கவே பதிக்கும் (சண்முக)

3 மகர வேலையிற்றுயின் மாயவன் மருகா
சிகர மிகுந்தபொழிற் செகண்டியின் முருகா (சண்முக)

## 431. என்று காண்பேனையனே

பல்லவி

என்று காண்பேனையனே நானென்று காண்பேன் (என்று)

அநுபல்லவி

நன்றுலவுங் குன்றை மலை நாதனை மெய்ப்போதனை
(என்று)

சரணங்கள்

1 ஆடிய மயிலோனை வள்ளி நாடிய வொயிலோனை (என்று)

2 சூர சங்காரனை உக்கிர வீர சிங்காரனை (என்று)

3 தோகை மலையாளனை வெற்றி வாகை யணி தோளனை
(என்று)

## 432. துணை செய்யவேணும்

பல்லவி

துணை செய்யவேணும் அடியனுக்குத் துணை செய்யவேணும்
(துணை)

அநுபல்லவி

இணையடிதனை விடாதிருக்கு மடியனுக்குத் (துணை)

சரணங்கள்

1 ஒரு கதியில்லை யென்றுன்னைத் துதித்திருக்கு
மரியதவங்களைச் செய்த வன்படியருக்குத் (துணை)

2 முக்கால முமுணரு முனிவர் சகாயா
வெக்காலமும் நம்பி யிருப்பவர்க்குத் தூயா (துணை)

3 குன்றை யம்பதி வளர்குக குருபரனே
யென்றுன்னைப் பணிபவர்க் கினிதுள்ள வரனே (துணை)

## 433. கதி யேதய்யா

பல்லவி

கதி யேதய்யா நின்னை யல்லால் கதி யேதய்யா
மதிதவழ் சோலை மயின்மலை நாதா (கதி)

சரணங்கள்

1 மைக்குழல் வள்ளியை மருவிய லோலா
கைக்கிசை வாகிய கனகமின் வேலா (கதி)

2 நிர்த்தன மயிலேறு நிர்மல ரூபா
பத்தர்கள் பணி பாதா பணியெனு நீபா (கதி)

3 திருச்சிகி மலைவளர் சேவலங் கொடியா
மருக்குலவு மலர்சேர் மாலையின் முடியா (கதி)

## 434. செகதீசா ரட்சிப்பாய்

பல்லவி

செகதீசா ரட்சிப்பாய் மகபதி பணி தோகை
மலைவளர் நாதா (செக)

சரணங்கள்

1 சங்கணி கரனுர் கங்கைகொள் சிரனுர்
துங்கமெய்ப் பரனுர் மங்கள வரனுர்
மகிழ்ந்தருள் பாலா – சுகம் பெறு கோலா (செக)

2 கண்டு முன்னுருகா – தொண்டர் பாலருகா
விண்டுதன் மருகா – தண்டமிழ் முருகா
தாமரைப் பாதா – மாமலர் வேதா (செக)

3 தோகையின் மேரா - வாகுள தாரா
யோகவ சீரா - சோகமில் வீரா
சொன்ன மயிலாளா - யென்னை யிங்கன மாளாய் (செக)

## 435. தேட்டம் வைப்பாய் மனமே

பல்லவி

தேட்டம் வைப்பாய் மனமே - சொர்ன
கோட்டணி குன்றைமலைக் குருபரனைத் தினமே (தேட்டம்)

சரணங்கள்

1 ஐயனைப் பூதியணி மெய்யனைத் - திவ்விய
துய்யனை வேலணி கையனைநெஞ்சே (தேட்டம்)

2 சேவலனைப் பாடும் பாவலனை யண்டர்
காவலனை வெல்லு மாவலனை நெஞ்சே (தேட்டம்)

3 முருகனை யண்டர் பொருகனை - யமர் வெல்வோன்
மருகனை மயிலெனுங் குருகனை நெஞ்சே (தேட்டம்)

## 436. வந்த விதியைத் தீராய்

பல்லவி

வந்த விதியைத் தீராய் சுந்தரமயில் மேல் வாராய் (வந்த)

சரணங்கள்

1 ஆண்டவனே யென்று உன்னை வேண்டிச் சன்னதி
நின்று
விரும்பின வனுக்கின்று (வந்த)

2 பாதந்தனைத் துதித்துப் பாதப் போதை நெஞ்சினில்
வைத்துப்
போற்று வோருக்கு விதித்து (வந்த)

3 குன்றையம் பதியோனே யினி நன்றருள் புரிவோனே
நம்பினேன் பெம்மானே (வந்த)

## 437. இந்தச் செனன மேதுக்கு

பல்லவி

இந்தச் செனன மேதுக்கையனே
பந்தத்தி லகப்பட்டுழன்று பரதவித்திடும் பாவமாகிய (இந்த)

சரணங்கள்

1 ஆசைக் கடலென் றறிந்து கண்டு மோசப்பட்டு
முழித்துக் கொண்டு
முனகித்தின மனங்கெட்டலே (இந்த)

2 கால தூதர்கள் கயிற்றிற் பிடித்து மேலுங் கொண்டோடி
மிகவு மடித்து
வீணிற் கொல்லுங் காணக்கிடையா (இந்த)

3 பெண்டு பிள்ளை பெருக்க மென்றும்
பண்ட பதார்த்தம் பருக்க மென்றும்
பறக்கத் திரிந்து இறக்கு மென்ற (இந்த)

## 438. காக்க வேணுமையா

பல்லவி

காக்க வேணுமையா யருட்கண் பார்க்க வேணுமையா (காக்க)

சரணங்கள்

1 துன்பத்துட் போகாமல் பொல்லா வின்பத்துட்
சாகாமல் (காக்க)

2 ஆசையில் வீழாமல் வீழ்ந்து மோசமாய் மாளாமல் (காக்க)

3 குன்றை யாளனே சூரை வென்ற தோளனே (காக்க)

## 439. பாத தரிசனஞ் செய்வாய்

பல்லவி

பாத தரிசனஞ் செய்வாய் – குன்றை
மீது வளரும் விமல முருகையன் (பாத)

சரணங்கள்

1 சங்கர ரருளிய பாலன் - நல்ல
துங்க மிகுந்திடு வேலன் (பாத)

2 வாசவனுருட மருகன் - பிர
காச மிகுந்தருள் முருகன் (பாத)

3 குன்றை யம்பதி வருகோவை - நன்மை
என்று மருள் செயுந் தேவை (பாத)

## 440. காணுவதே நயம்

பல்லவி

காணுவதே நய மனுபூதி பூணுவதே செயம் (காணு)

சரணங்கள்

1 ஓயாது சன்னிதியைக் கண்டு – காப்பாய்
தாயார் போலன்பு கொண்டு (காணு)

2 சனங்களுடனே பின்றொடர்ந்து ஐயாவுன்மேல்
மனங்கனிந்து வழியினடந்து (காணு)

3 ஓகையுடன் மனந்தேறி - சிகித்
தோகை மயிலின் மீதேறி – வரக் (காணு)

## 441. போலக் கிடையாதே

பல்லவி

போலக் கிடையாதே மனமே சாலப் பணிவாயே (போலக்)

சரணங்கள்

1 முருகேசனை மாயன் மருகேசனைப் (போலக்)
2 கந்தனை ஞானசம் பந்தனைப் (போலக்)
3 முத்தனைச் சிகிமலைக் கர்த்தனைப் (போலக்)

## 442. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே – ஐயனை
நெஞ்சே மறவாதே (நெஞ்சே)

அநுபல்லவி

மஞ்சார் பொழிலுறை மயின்மலை முருகனை (நெஞ்சே)

சரணங்கள்

1 பன்னிரு கையனை மின்னிய துய்யனை (நெஞ்சே)
2 அன்புறு நாதனை யின்புறு வேதனை (நெஞ்சே)
3 வாகைபுனை புயனை தோகை மலையனை (நெஞ்சே)

## 443. இந்த வேளை வந்திரங்குவாய்

பல்லவி

இந்த வேளை வந்திரங்குவாய்
கந்தமேவு குன்றை மாமலைக் கர்த்தனே பரிசுத்தனே (இந்த)

சரணங்கள்

1 ஆசை வலையில் மயங்குகிறேன் தேச
மயக்கிலுயங்குகிறேன் (இந்த)
2 துன்ப நோயின் மெலியுதே யின்ப நோயும் நலியுதே
(இந்த)
3 குன்றை மாமலையாளனே மன்றற் குறமினாளனே சாமி
(இந்த)

## 444. ஐயனைக் கண்டுகொள் மனமே

பல்லவி

ஐயனைக் கண்டுகொள் மனமே – உனக்குத்
துய்ய நலமுண்டு தினமே (ஐயனை)

அநுபல்லவி

வாசனே முருகேசனே தமிழ் வாயனே வள்ளி நேயனே
(ஐயனே)

சரணம்

மாயனே யருள் சேயனே நல்ல
வன்ன வேலனேச் சின்ன மயிலோனே
தோகை மலேயோனே வாகை புனேவோனே
பரி சுத்தனே யானந்த நிர்த்தனே (ஐயனே)

## 445. ஆண்டவனைக் கண்டு நீ

பல்லவி

ஆண்டவனேக் கண்டு நீ வேண்டிய வரம் பெறலாமே
யதுகனமே (ஆண்ட)

சரணங்கள்

1 உல்லாச மாகவே யிருக்காதே நமக் கெல்லா
முண்டென்று செருக்காதே
கொண்டை யுச்சிதமாகிய மாமயிற் பட்சியி லேறிய
(ஆண்ட)

2 பெண்டு பதார்த்தங்களேக் கண்டு எல்லா முண்டென்று
இறுமாப்புக் கொண்டு
மெத்தப் பேசாமல் மனங் கூசாமலினி (ஆண்ட)

3 தோகை மலேக் கிசைந்த ஐயனே வெற்றி வாகை
புனேயும் வேற்கையனே தமிழ்ச்
சுந்தர ஞானசம் பந்தனே யன்பாய் (ஆண்ட)

## 446. செகதீசனைக் காணத் துணிவாய்

பல்லவி

செகதீசனேக் காணத் துணிவாய் - கண்டு
முகமலர்ந் தன்புடன் பணியாய் (செகதீச)

சரணங்கள்

1 ஆனந்தக் கூத்தாடிய ஐயனே நாளும்
ஞானந் தவருது துய்யனே சுக ரஞ்சித குறவள்ளி
கொஞ்சிடும் லோலனே
நனவிலுங் கனவிலும் நினேவிலு மனமே (செகதீச)

2 மாமறையோர் பணி தாளனே நீபத்
தேமலரணியும் பொற்றோளனே
சீதரனு மலர்வேதனுமே யனு
தினமும் பணிபவனைக் கனமுடன் மனமே (செகதீச)

3 சோலை நிறையுங் குன்றை மலையோனே படிக
மாலை நிறையும் பலகலையோனே வெற்றி
வால வடிவேலோனே கோல மயிலோனே
மயிலனே மங்கைய ரொயிலனே மனமே (செகதீச)

## 447. இன்னஞ் செனன மேதுக்கையனே

பல்லவி

இன்னஞ் செனன மேதுக்கையனே – யன்பினுடனே
யென்னைக் காக்க வேணு மெய்யனே (இன்னஞ்)

அநுபல்லவி

வானவர் வந்து பணியும் பாதனே வெகு
ஞானவர் வந்து துதிக்கும் வேதனே (இன்னஞ்)

சரணம்

நீலவாம் பரியான மயிலனே கானக்குறத்தி
கோல வாசையின் மேவு மொயிலனே
குன்றை மாமலை வாழு மீசனே நீபமான
மன்றன்மாலை சூடும் வாசனே (இன்னஞ்)

## 448. தருணந் தயவு செய்குவாய்

பல்லவி

தருணந் தயவு செய்குவாய் வருணமுடியிலகு
மயின்மலை நாதா (தருணந்)

சரணங்கள்

1 கடிக்கு மரவுங் கொன்றைக் கண்ணியும் விதுவே
முடிக்கு மரனருள் முதல்வா யிதுவே (தருணந்)

2 கதிக்கும் படியே யெந்தக் காலமு முப்போது
துதிக்கு மன்பர்க் கருள் துரையே யிப்போது (தருணந்)

3 மன்னிய முடிக்குன்றை மலைவளர் சிவனே
மின்னிய நெட்டிலை வேலணி பவனே (தருணந்)

## 449. தோத்திரம் செய்வாய் மனமே

பல்லவி

தோத்திரம் செய்வாய் மனமே தினமே யிச்சென்மத்தை
மாற்றிடலா மனமே மாயவன் மருகனைத் (தோத்)

அநுபல்லவி

சேயவன் முருகனை வரதனை யயிலணி கரதலனைக் கண்டு (தோத்)

சரணம்

கௌரிதன் மைந்தனைச் சௌரிய கந்தனை
கனக மயிலேறிய வனச மலர்ப்பாதனை
குன்ருக்குடிக் குமரனை வென்ரூர்த் தெழுஞ்சமரனை
கோலனைக் குறமயில் லோலனைப் பார்த்துத் (தோத்)

## 450. போற்றுவாய் மனமே

பல்லவி

போற்றுவாய் மனமே – யுன்னைத்
தேற்றுவாய் தினமே (போற்று)

சரணங்கள்

1 என்னையனைக் கண்டு முன் நின்றன்பு கொண்டு (போற்று)
2 நன்னய மாகவே யுன்வினை போகவே (போற்று)
3 தோகை மலையானை வாகை புனைவானைப் (போற்று)

## 451. துதித்துக் கொள்ளுவாய்

பல்லவி

துதித்துக் கொள்ளுவாய் ஐயனை நெஞ்சிற் பதித்துக்
கொள்ளுவாய் (துதித்)

சரணங்கள்

1 ஐயனைப் பூதியணி மெய்யனை நலமிகு
துய்யனைப் பன்னிரு கையனை மனமே (துதித்)

2 கந்தனை ஞானசம் பந்தனைப் பாடலிற்
சந்தனைப் பார்வதி மைந்தனை மனமே (துதித்)

3 கண்டனு தினமன்பிற் ரெண்டர்கள் பணிதரு
தண்டலை யுயருஞ் செகண்டிமலை யோனைத் (துதித்)

## 452. அருள் தரவேணும்

பல்லவி

அருள் தரவேணும்
திருவளர் மலர்ச்சோலைச் செகண்டிமலை யோனே (அருள்)

சரணங்கள்

1 நித்தமு முந்தனைப் பத்தியுடன் பணி
பத்தனிவ னெனச் சித்தமிரங்கியே (அருள்)

2 அந்த மயின்மிசை வந்து வுளதருள்
விந்தை புரிந்து சிந்தை மகிழ்ந்து (அருள்)

3 அண்டர்கள் பணியும் செகண்டி மலைவளர்
வண்டரடரு நீபங் கொண்ட புயனே (அருள்)

## 453. கனக மயிலில் வரு குமர குருபரனை

பல்லவி

கனக மயிலில் வரு குமர குருபரனை
மனமே மறவாதே (கனக)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புன வள்ளி மணாளனைத்
தித்திதி மிதியென நிர்த்தன மிட்டிடுங் (கனக)

2 என்புரு கிடவே யன்பர்கள் பணிய
விச்சை யெல்லா மருள் பச்சை வடிவான (கனக)

3 தானவர் முனிவரர் வானவர் பணியுந்
தண்டைச் சரணனைக் கொண்ட கலாபக் (கனக)

## 454. பத்தனிடம் வருவாயே

பல்லவி

பத்தனிடம் வருவாயே – வந்தருள்
மெத்தவினித் தருவாயே (பத்த)

சரணங்கள்

1 ஆடிய பம்பரம் போலே துன்ப நீடிவில்லறத் தாலே
ஓடிமெலிந்து மேலே மனம் நாடிவந்தே னுருகாலே
சாமி (பத்த)

2 துன்பமாகிய சாகரத்தில் வீழா தன்பெனு முந்தனு தரத்தில்
இன்புட னெடுத்துந்தன் கரத்தில் எடுப்பாய்
நம்பின வனையா வரத்தில் சாமி (பத்த)

3 தக்க புகழ்சேர் குன்றைநாதா வன்பர் மிக்கவே பணி
மலர்ப்பாதா
மைக்குறமயிலி சமேதா வருள் இக்கண மலர்நீபப் போதா
(பத்த)

## 455. சமயஞ் சமயமையா

பல்லவி

சமயஞ் சமயமையா — அமரர் பணி
செகண்டி ஐயா மெய்யா (சமய)

சரணங்கள்

1 கோபவவுணரைக் கொலும் வேலா துய்யு
நீபமணி மார்பா நின்கிருபை செய்யச் (சமய)

2 ஆண்டவனே விண்ணோரளவற்ற முடியோர்க்கு
வேண்டிய வய்யனே விரும்பிய யடியேற்கு (சமய)

3 குன்றையின் மலைவளர் குருபர நாதா
நன்றருளடியர்க்கு நல்கிட நீதா (சமய)

## 456. கண்டபோது மோட்சம் உண்டு

பல்லவி

கண்டபோது மோட்சம் உண்டு அண்டர்பிரான் பதத்தைக்
(கண்ட)

அநுபல்லவி

ஆதியுமந்தமு மாகி நல்ல நீதிய நீதியுமாகி வளர்
நிர்மல ரூபனை நன்மலர் நீபனைக் (கண்ட)

சரணங்கள்

1 ஆனந்த மயமான யோகனை தினைக்
கானந்தனில் மயில் வாகனை பன்னிரு
கையணி வேலனை தையலர் கோலனைக் (கண்ட)

2 செகண்டி மலைவள ராரணனை யெங்கும்
அகண்டமாம் பரிபூரணனை மனத்
தாசையுடன் சென்று நேசமுட னின்று (கண்ட)

## 457. எந்த வினை வந்தாலும்

பல்லவி

எந்த வினை வந்தாலு மந்த வினையைத் தீர்க்க
வென்னை யனையல்லா துண்டோ (எந்த)

அநுபல்லவி

கந்த மதுமலர் மீறும் பொழில் சூழுஞ்
செகண்டி மலையினை யண்டின பேருக்கு (எந்த)

சரணங்கள்

1 போற்றின பேர்க்கருள் புரிகின்ற புண்ணியனை
மாற்றுயர் பொன்மயின் மேல்வருஞ் சுப்பிரமண்ணியனை
நீற்றினிறைந்த புண்டரீகனை - கண்ணியனை
நீதனை யம்புய பாதனைக் கண்டால் (எந்த)

2 தேவரு முனிவருந் தேடருஞ் சரணனை
மூவரு மருள்செயு முடிமா வல்லரணனை
யாவருஞ் சொல்வென்ற வணிநீபா பரணனை
அன்புடனே மனத் தென்புடனே கண்டால் (எந்த)

3 கொண்டல் படியுங் குன்றைக் குடிமலை வாழ்வோனை
தண்டலையிலோர் பெண்டன்னை முன்றாழ்வோனை
அண்டர் முதலினோ ராரையுமாள் வோனை
யாசையினுன் மன நேசமதாய்க் கண்டால் (எந்த)

## 458. சூது செய்யாதருள்வாய்

பல்லவி

சூது செய்யாதருள்வாய், வாது புரியுஞ்
சூரை மாய்த்திடும் சூரா (சூது)

சரணங்கள்

1 கங்காளர் பாலா கானச் சிங்காரி லோலா
எங்கும் பிரகாசமாயிருக்கு மென்னையனே
துங்க மலர்ப்பதத்தைத் துதிக்கு மடியவர்க்கு (சூது)

2 தோகை மயில் கந்தனே வெற்றி வாகை புனை
மைந்தனே
ஓகை புனை யுல்லாசா வோங்கு மெய்ஞ்ஞான
பாகைநிகர் மொழியார் பங்கிலுறை குகேசா (சூது)

## 459. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே யொன்றுக்கு மயங்காதே மனமே

அநுபல்லவி

நயங்கிடைக்குங் குன்ருக் குடிவளர் நாதன் மணக்கும் பூம்
பாதனிருக்கையில் (மயங்கா)

சரணங்கள்

1 ஒன்றுக்கும் யோசனை செய்யாதே - நீ என்றைக்
குமெண்ணத்தை வையாதே
நன்றி நமக் கினியென்று வருமென்று - நத்தியே
யுன்றன் சித்தமே யினி (மயங்கா)

2 மெத்த நரகினிற் போவோமோ – மோட்
சத்தினிற் போகாமற் சாவோமோ
எத்திற் போவோ மென்று உற்றுப்பார்த் தெண்ணவே
சித்தங் கண்ணவே - யினி (மயங்கா)

3 மன்றன் மாறிய போதிலே நிறை - குன்றை மாமலை
மீதிலே
என்றும் வளரும் நன்றியருளு மெம்பிரான் கருத்திற்
றம்பிரானிருக்க (மயங்கா)

## 460. ஆட்கொள்ள வேணுமையா

பல்லவி

ஆட்கொள்ள வேணுமையா
தாட்கொண்டவனென்று தயவு வைத்தென்னை
(ஆட்கொள்ள)

சரணங்கள்

1 கச்சை முலையார்கள் கண்வலையிற் சிக்கி
யிச்சையினுே டெல்லாம் வரத்துக்கித்
திருக்காமலென்னைக் கருக்காமல் வந்து (ஆட்கொள்ள)

2 தஞ்ச மலர்ப்பதங் கண்டு துதித்து
நெஞ்சிற்பாதத்தை நிற்கப் பதித்து
நீங்கிடா திருக்கவென் பாங்காக வந்து (ஆட்கொள்ள)

3 குன்ருக்குடி மலைக்குருபர நாதா வென்ருர்ப்
பவர்கருளிய மலர்ப்பாதா
யிச்சை யொயிலா பச்சை மயிலா (ஆட்கொள்ள)

## 461. எத்தனை நாளானாலும்

பல்லவி

எத்தனை நாளானாலு மிதயத்தி லெண்ணுரோ
பத்தர்களே குன்றைப் பதியில் வளருமையன் (எத்தனை)

சரணங்கள்

1 காலம் வெகு காலஞ் சென்றுலுமையன்
மேலன்பு வைத்து முன் னின்றுலும்
ஏலவே தவங்களைச் செய்தாலும் - மேலும்
எத்தேசமு மையன் மேற் சித்தம் வைத்திருந்தாலும்
(எத்தனை)

2 அடியவர்க் கெளிய வென்னையன் - வந்த
மிடியர்க்குவினை தீர்க்கு மெய்யன்
குடிகாங்குங் குலதெய்வமான - எங்கள்
குமர குருபரன் சமர வேலாயுதன் (எத்தனை)

3 தோகை மலைக் குகந்த கந்தன் - வெற்றி
வாகை புனைபுய மைந்தன்
ஓகை புனையுல்லாச நாதன் - யாரு
முய்யும்படி கண்கண்ட தெய்வா மாகையினுலே (எத்தனை)

## 462. வாரதே யரிது

பல்லவி

வாரதே யரிது வந்தே தேறும் வரந் – தாரதே யரிது
(வாரதே)

சரணங்கள்

1 விரிக்கு மிதழிலங்கு மெல்லிய நீபப்போது
தரிக்கும் பன்னிரு புயன்ருண்டு மயின் மீது (வாரதே)

2 நீளும் பொன் வடிவேற்கை நிர்மல நாதனுய்
வாழுங் குக குமரன் வள்ளி சமேதனுய் (வாரதே)

3 நன்னய மலர்ப்பொழில் நாள்தோறுந் திரிந்து
வன்னமுடி சேர் குன்றை மாமலை யிலிருந்து (வாரதே)

## 463. இருக்கிருன்

பல்லவி

இருக்கிருன் உனக்கென்ன குறை மனமே
மருக்குலாவிய சோலை சூழு மயின் மீது
ஒயின் முருகையான் (இருக்)

சரணங்கள்

1 தெள்ளிய கலையோன் வள்ளி மணாளன்
அள்ளிலை வேலன் புள்ளி மயிலான் (இருக்)

2 கந்தன் ஞான சம்பந்தன் பார்வதி மைந்தன்
நீபமென் கொந்தனறுமுகன் (இருக்)

3 தோகை மலைவளர் ஓகை புனையய்யன்
வாகை புனைபுயன் ஆகையினாலவன் (இருக்)

## 464. நான் சொன்னபடி கேளு

பல்லவி

நான் சொன்னபடி கேளு மனமே
கான் பயில் குன்றைமலைக் கர்த்தனிடந் தினமே (நான்)

சரணங்கள்

1 கர்த்தனைத்தான் கண்டு மெத்தவு மன்பு கொண்டு
கதிதர வேணு மென்று துதியுனை ரட்சிப்பான் (நான்)

2 மாத மாதம் நடந்து பாதை வழிகடந்து
வாக்கினாற் றுதித்தால் யோக்கிய முண்டாம் (நான்)

3 வானோர் தானே சூழுஞ் சேனாபதியை நாளும்
வன்ன வடிவேலவன் சந்நிதியைப் போற்றி (நான்)

## 465. ஆட்கொள்ள வேணுமையா

பல்லவி

ஆட்கொள்ள வேணுமையா
தாட் கொள்ளுமடியவர் தங்களைத்தானே (ஆட்கொள்ள)

சரணங்கள்

1 சூர சங்காரனே நீபத் தாரணி மார்பனே
சுத்த மெய்ஞ்ஞான பத்தர்களை யின்னே (ஆட்கொள்ள)

2 சங்கர சண்முகா நாளும் மங்கள மிகுங்குகா
துன்றிய பலகலையா குற்றமில்லாத மனப்
பத்தர்களை யின்னே (ஆட்கொள்ள)

## 466. இதுவே சமயமையா

பல்லவி

இதுவே சமயமையா மதுவேமிகு பொழின் மயின்மலை
நாதா (இதுவே)

அநுபல்லவி

கங்கையணி சடையார் செங்கண் மழவிடையார்
கருணையுள்ள பாலா - பொருது நல்ல வேலா (இதுவே)

சரணம்

பைந்துழாயணி தூயன் சந்தத மிகுமாயன்
பங்கய மனைவேதா மங்கள துதிபாதா
நன்றுள முடிசூழும் குன்றையின் மலைவாழும்
நன்னய மிகுதேவே வன்ன மயிற்கோவே (இதுவே)

## 467. நயந்தர வேணும்

பல்லவி

நயந்தர வேணும் பயன்பெறுங் குன்றைப் பரமபதத்தாய்
(நயந்)

அநுபல்லவி

மாலிகை தனையணி புயத்தாய் சூரன் மேலிரு கூறு செய்
செயத்தாய் (நயந்)

சரணம்

வால சண்முக குரு நாதா மூன்று ஞாலமும்
புகழ்மலர்ப்பாதா
துடியிடைக் குறமகள் தனக்கு இசை வடிவுடையா
யெந்தனுக்கு (நயந்)

## 468. கந்தனே யருள்வாய்

பல்லவி

கந்தனே யருள்வாய் ஞானசம் பந்தனே யருள்வாய்
(கந்தனே)

அநுபல்லவி

வாசனே வள்ளி நேசனே ராசனே முருகேசனே (கந்தனே)

சரணம்

ஐயனே வேற்கையனே பூதிமெய்யனே திவ்விய துய்யனே
சேயனே யன்பர் நேயனே யண்டர் நாயனே புகழ்மாயனே
(கந்தனே)

## 469. முருகா வுனை நம்பினேன்

பல்லவி

முருகா வுனை நம்பினேன் ஒருகாலு நெஞ்சிலுருகா
திருக்காமல் (முருகா)

அநுபல்லவி

வள்ளியம்மை நேயா தெள்ளு செந்தமிழ் வாயா (முருகா)

சரணம்

வானவர் பணியோகா தேனலரணி வாகா
குன்றுக்குடி மலைவாசா வென்றூர்ப் பர்க்கருளீசா (முருகா)

## 470. கனிவுடன் வாராய்

பல்லவி

கனிவுடன் வாராய் எந்தன் மனது போற்றூராய்
(கனிவுடன்)

சரணங்கள்

1 தாரணி புயனே வென்றிப் போரணி செயனே
(கனிவுடன்)
2 தாதவிழ் நீபா சூருடன் வாதடர் கோபா (கனிவுடன்)
3 குன்றையின் மலையா பொருள் துன்றிய கலையா
(கனிவுடன்)

## 471. சரவணபவனே

பல்லவி

சரவணபவனே அரவணிபவ ரருளிய பாலா சரவணபவனே

அநுபல்லவி

நிர்த்தன மயின்மேற் பத்தர்களுடனே
சத்தியணி கையனே கர்த்தனே வருவாய் (சரவண)

சரணம்

கானக மயிலி பானன்மயல்கொள் வானவர் முதல்வ
ஞானநன் முருகா
கோகனகமினுள் தாகமோ டுறையுந்
தோகையின் மலைவாழ் ஓகை புனைபவா (சரவண)

## 472. ஒருபோதும் மறவாதே

பல்லவி

ஒருபோதும் மறவாதே நெஞ்சே ஒருபோதும் மறவாதே (ஒருபோது)

அநுபல்லவி

இருபோது மன்பர்பணி யெழிற்குன்றை மலையோனை (ஒருபோது)

சரணங்கள்

1 துடியொடு வந்தெதிர்த்த சூரனை – வேலாற்
படிமீது வீழவென்ற வீரனை (ஒருபோது)
2 லீலா விநோத வள்ளி மோகனை - நாளுங்
கோலா கலமான யோகனை (ஒருபோது)
3 குன்றை யம்பதி வளர்பவனை - யெனக்
கென்று மருளிய சிவனை (ஒருபோது)

## 473. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் குன்றை நயமிகு பவனே (தயவு)

சரணங்கள்

1 ஆண்டவனே நீபம் பூண்டவனே யினித் (தயவு)
2 சங்கரனே வேற் செங்கரனே யினித் (தயவு)
3 நன்றவனே சூரை வென்றவனே யினித் (தயவு)

## 474. உந்தன் பாதந் தரவேணும்

பல்லவி

உந்தன் பாதந் தரவேணும் கந்தமிகு பொழிற் செகண்டிமலை நாதா (உந்த)

அநுபல்லவி

கானக வள்ளி பங்காளா வுயர் வானவர் பணியுங் கங்காளா (உந்தன்)

சரணம்

கடம்ப மலரணி மார்பா சூர னுடம்பினை வென்றிடுஞ் சூரா
ஆதரவெனக் கருள்வாயே மூன்று பூதலம் பணிபவ நீயே (உந்தன்)

## 475. முக கமலத்தைக் காண்பாய்

பல்லவி

முக கமலத்தைக் காண்பாய் மனமே
செகதலமெல்லாம் பணி செகண்டி மலை ஐயன் (முக கம)

சரணங்கள்

1 தாதவிழ் நீபத் தாரணி புயன்
போதடர் மலரயன் போற்றிய முருகையன் (முக கம)

2 கந்தமலர்க் கொன்றைக் கண்ணிய ரருள் மைந்தன்
பைந்தமிழ்த் தேவாரப் பதிக ஞானசம்பந்தன் (முக கம)

3 திருவளருங் குன்றைச் செகண்டி மலையோன்
மருவளரும் பொதிய மலையற்குச் சொல்கலையோன்
(முக கம)

## 476. வனச மலர்ப்பதந் தாராய்

பல்லவி

வனச மலர்ப்பதந் தாராய் - சாமி
கனக மலைநிகர் செகண்டிமலை யோனே (வனச)

அநுபல்லவி

ஆனந்த நடராசரருளிய மகனே
ஞானந் தவருதவர் நாடறு முகனே (வனச)

சரணம்

மகபதி முதலினர் வணங்குறு பதனே
செதலம் படைக்குந் திவ்விய வற்புதனே
கொங்கலர் பொழிலுறை குன்றை யம்பதியா
மங்கள கரவள்ளி மலர்ப்பதந் துதியா (வனச)

## 477. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே சூழும் பொழிற்குன்றை துலங்கு மெய்யனே
(ஆளுமை)

சரணங்கள்

1 தீராத வினையெல்லாந் தீர்த்து எந்த வேளராக வந்து
கண் பார்த்து – யெனை
ரட்சிக்கவே பச்சை மயிலோனே (ஆளுமை)

2 பன்னிருகையில் வேலேந்தி நல்ல வுன்னத மயிலேறித்
தோந்திமி - யென்று
ஓகையுடனுடித் தோகை மயிலில் வந்து (ஆளுமை)
3 சங்கரனுரருள் பாலா கானி லிங்கித மயிலிதன் மாலா
நான்
எண்ணியபடி செய்ய நண்ணி யென்முன்வந்து
(ஆளுமை,

## 478. பாத தரிசனஞ் செய்வாய்

பல்லவி

பாத தரிசனஞ் செய்வாய் நெஞ்சே பாத தரிசனஞ்
செய்வாய்
ஏத மெல்லாந் தீருமஞ்சேல் நெஞ்சே (பாத தரி)

சரணங்கள்

1 கனக மயிலிலேறித் தினமுமடியவர்க்கு
மனது மகிழ்ந்தருளுந் தினகர வடிவாளன் (பாத தரி)
2 மூவர் முதலினர் தேவரடியவர் மாவலவுணர்கள் யாவரும்
பணியும் (பாத தரி)
3 தங்க முடிகளுயர் துங்க மயின்மலை யெங்களறு முகன்
பங்கய மிலகிய (பாத தரி)

## 479. காண வேணும்

பல்லவி

காண வேணுமென்று நினைப்பாய் - நெஞ்சே
பூணு முடிக்குன்றைறப் பொன் வடிவேலனைக் (காண)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புனங் காத்து வளர்
வள்ளி மின்னுள் தனைப்பார்த்து - புணர்
வாகனை யோகனைக் (காண)
2 சூரனை ரணக்களத் தன்று - வேலாற்
போரினிற் பொருதியே வென்று வரும் பூபனை நீபனைக்
(காண)
3 கடிமலர் கொடுபதந்தொழுது நிற்கும் அடியவர் வம்மிச
முழுதும்
காக்கும் ஐயனை மெய்யனைக் (காண)

## 480. காணுவதே பெரிது

பல்லவி

காணுவதே பெரிது கண்டு மனம் பூணுவதே யரிது (காணு)

சரணங்கள்

1 சித்தந்தனை யொருமித்து எந்தன் கர்த்தன் தனைத்
தரிசித்துக் (காணு)

2 பஞ்சாட்சரந்தனை யணிந்து திவ்விய அஞ்சாட்சரஞ்
சொல்லித் துணிந்து (காணு)

3 ஒன்றாத பாவத்தைக் கடந்து மாமுடிக் குன்றுக் குடிக்கு
நடந்து (காணு)

## 481. மயில் வாகனத்தில் வருவாய்

பல்லவி

மயில் வாகனத்தில் வருவாய்
செயில் வாளைபாயுங் குன்றைத் தென்மலையோனே (மயில்)

அநுபல்லவி

பரம்பரமா யெங்கு நிரந்தர வடிவே
வரந்தரவே யருள் சுரந்திடவே யென்முன் (மயில்)

சரணம்

வானக மயிலியுங் கானக வொயிலியும்
மேனல மாயணை தேனலர் மார்பனே
மன்றன்மலர்ப் பொழினின்றுலாவிய கன
குன்றையின் மலையவ நன்றருள் புரிய (மயில்)

## 482. எத்தனைநாள் செல்லுமோ

பல்லவி

எத்தனை நாள் செல்லுமோ
பத்தனிவ னென்று பார்த்தனுக் கிரகிக்க (எத்தனை)

அநுபல்லவி

காமக் குறத்தி மாலா வுமை தாமக் குழலிபாலா
கருத்தி னினைத்தாள (எத்தனை)

சரணம்

அன்பரைக் காக்குங் கோவே - யாடும்
பொன் மயிலேறுந் தேவே - ஆதரவுடனே
குன்றை யம்மலை வாசா யாவர்க்கு நன்றருள் செயுமீசா
குணமுடனென்னை யாள (எத்தனை)

## 483. சரவணபவனே

பல்லவி

சரவணபவனே வரமருள் சிவனே (சரவண)

சரணங்கள்

1 தாரணி புயனே போரணி செயனே (சரவண)
2 சங்கரன் மகனே துங்க சண்முகனே (சரவண)
3 வருசிகி மலையா பொருணிறை கலையா (சரவண)

## 484. தரிசிக்கா திருக்கப் போமோ

பல்லவி

தரிசிக்கா திருக்கப் போமோ – இருந்தால்
பரிசுத்த முனக்குண் டாமோ (தரிசிக்)

சரணங்கள்

1 சங்கர னருளிய சேயனை குறமங்கை மருவிய நாயனை
துங்க மிகுதமிழ் வாயனை யன்பர் தங்கட்கருளிய
சகாயனை (தரிசிக்)
2 மாது தெய்வானை மணாளனை பத்தும் போது நிகரிரு
தாளனை - சமர்
மோது மசுரனை வெல் தோளனை மொய்த்த
பேதமில் கிருத்திகை நாளனைத் (தரிசிக்)
3 குன்றையின் மாமலை மேரனை யார்க்கு
நன்றியருளு முதாரனை துன்றி யெதிர் வருசூரனை
வேலால்
வென்று செயம்பெறு வீரனைத் (தரிசிக்)

## 485. ஐயனைப் போற்றிக் கொள்

பல்லவி

ஐயனைப் போற்றிக் கொள் நெஞ்சே யுந்தன்
மெய்யினைத் தேற்றிக் கொள் (ஐயனை)

சரணங்கள்

1 வாசனைப் பிரகாசனை வள்ளி நேசனை செகதீசனை (ஐயனை)

2 சேயனை யன்பர் நாயனை தமிழ் வாயனை யார்க்குந் தூயனை (ஐயனை)

3 சூரனைச் சிகி மேரனை அலங்காரனை நீபத்தாரனை (ஐயனை)

## 486. மறவாதே மனமே

பல்லவி

மறவாதே மனமே குன்றுக்குடி யிறையோனைத் தினமே (மறவாதே)

அநுபல்லவி

வள்ளி தெய்வானை மருவுமணாளனை
புள்ளி மயில்நடத்தும் புகழ்ப் பெல தோளனை (மறவாதே)

சரணம்

கனகதண்டை சதங்கை கலீரிடுங் காலனை
வனசமலர் வதன வர்ச்சித லோலனை
அனவரதமு மன்பர்க் கருள் முருகேசனை
தினகர வொளிவிடுந் தேகப் பிரகாசனை (மறவாதே)

## 487. தேடாத நாள் நல்ல நாளோ

பல்லவி

தேடாத நாள் நல்ல நாளோ நாளும்
வாடாத பொழிற்குன்றை மாமலை யானைத் (தேடாத)

சரணங்கள்

1 எங்கும் பராபர வெளியாய் கூடித் தங்கும் பிரகாச வொளியாய் - தானே
தழைக்கு மன்பருக்கருள் விளைக்குங் குகேசனைத் (தேடாத)

2 சகல சீவதயாபரியாய் அகிலமதில் யாவர்க்குஞ் சரியாய் வரும்
ஐயனைப் பூதியணி மெய்யனை நாளும் (தேடாத)

3 ஈனந்தனை வெளியிற் போக்கி யன்பருக்
கானந்த மயமே யாக்கி காக்கும்
ஆண்டவனைக் குன்றை வேண்டின மயிலோனைத் (தேடாத)

## 488. துரைமுருகா எனையாளாய்

பல்லவி

துரைமுருகா எனையாளாய் - குன்றை
வரை வளரடியர் பங்காளா (துரைமுரு)

சரணங்கள்

1 வானவருட சகாயா கானமின்னுட நேயா
தேனலரணியுறு சேயா பானல மொழியின் வாயா
(துரைமுரு)

2 தேவருக்கு மரியாய் மூவருக்கும் பெரியாய்
யாவருக்குந் தெரியாய் காவருக்கு முரியாய் (துரைமுரு)

3 குன்றையின் மலையாய் நன்றுள கலையாய்
என்று நன்னிலையாய் யின்றெனக்குச் சொல்லையா
(துரைமுரு)

## 489. நித்தமும் மறவாதே

பல்லவி

நித்தமும் மறவாதே நெஞ்சே பத்தியைத் துறவாதே
(நித்தமு)

அநுபல்லவி

வால சண்முக வடிவேலனைக் கோலனை
நீல மயிலேறுஞ் சீலனை வேலனை (நித்தமு)

சரணம்

பத்தர் மனத்துறை முத்தனை சித்தனை
கொத்தலர் மார்பனை நித்தனைக் கர்த்தனை
யோகனை வள்ளிதன் பாகனை மோகனை
வாகனைச் சிகிமலே யேகனை சினேகனை (நித்தமு)

## 490. கந்தனை நினைவாயே

பல்லவி

கந்தனை நினைவாயே மனமே யுந்தனக் கிசைவாயே
(கந்தனை)

சரணங்கள்

1 பஞ்ச பூதமெனும் வடிவை யன்பர் நெஞ்ச விருளின்
விடிவைக் (கந்தனை)

2 ஆருதாரப் பொருளே பணியா வேரு மனத்தரிருளேக்
(கந்தனே)
3 குன்றை மாமலே ஐயனே நாளு நன்றருளுமய
மெய்யனேக் (கந்தனே)

## 491. சோதியே சுடரே

பல்லவி

சோதியே சுடரே குன்றை மீதிலே வளர் வேலவனே
(சோதி)

அநுபல்லவி

வானுடர் தேவ சேனுபதியே தேனுர் மலரின் காளுள்
துதியே (சோதி)

சரணம்

அரவு சூடிய பரமர் பாலா சுரர் களடியர் பரவு காலா
மன்றலிதழ் சூழ்கின்ற நீபா குன்றை மலேயினின்ற பூபா
(சோதி)

## 492. வாரா திருக்கலாமோ

பல்லவி

வரா திருக்கலாமோ வரந்தாரா திருக்கலாமோ (வாரா)

அநுபல்லவி

சந்திரசடாதரனே யருளிய மைந்த கணேசுரனே
சுந்தர சண்முக வெந்தனிடமாக (வாரா)

சரணம்

தோகைக் குறப்பெண் பாகா வெற்றி வாகைக் கிசையும்
வாகா
பாகைப் பழிக்குமொழி யோகைக் குமரேசா
வம்பணிபவ னென்றே யசுரனே வெம்பிடவே யன்றே
கும்புடனே வென்ற சம்பிரம நாதனே (வாரா)

## 493. பார்த்து ரட்சிப்பாயே

பல்லவி

பார்த்து ரட்சிப்பாயே யென்னேக் காத்து ரட்சிப்பாயே
(பார்த்து)

சரணங்கள்

1 சீதள சந்திர சடையார் நான்கு பாதகிண்கிணி யொலி
விடையார்
பூதநிறைந்திடு படையார் அருள் நாதருமையிட
முடையார் தரு நாதனே நீதனே (பார்த்து)

2 தண்டையணிந்திடு காலா வலு அண்டர் பரவிய சீலா
வண்டணி குழலியர் மாலா வுயர்செகண்டி
மலைவருகோலா (பார்த்து)

3 வேத வேதாந்த வடிவே பரவு போதா மனவிருள்
விடிவே
நாத நாதாந்த முடிவே பணியுங் கோதறுபவர் மனப்
படிவே (பார்த்து)

## 494. குக குருபரனே

பல்லவி

குக குருபரனே குன்றைச் சிகிமலை யரனே (குககுரு)

சரணங்கள்

1 ஆரண முடிவே யாகிய சிவனே நாரணன் முனிவோர்
நாடரும் பரனே (குககுரு)

2 அருளெனும் பயிர் விளைவாகிய வித்தே மருளெனுமதை
நீக்கி வைக்குமோ சித்தே (குககுரு)

3 குன்றை மலைக்கிசை குமர சண்முகனே நன்றருள்
விளங்கிய நாயகர் மகனே (குககுரு)

## 495. வஞ்சகஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சகஞ் செய்யாதே என்குற்றத்தை நெஞ்சினில்
வையாதே (வஞ்சகஞ்)

அநுபல்லவி

கானக் குறத்திதோளா தெய்வானைக்கிசை மணவாளா
(வஞ்சகஞ்)

சரணம்

திருவடியவர் கும்பே நிறைந்திடு அருள் பழுத்திடு
கொம்பே
ஆகமத்தின்னுரையே சிகரத் தோகைமலைத் துரையே
(வஞ்சகஞ்)

## 496. சண்முக தயாநிதியே

பல்லவி

சண்முக தயா நிதியே விண்முக முயர்ந்த குன்றை
மீதினில் வரைவரு (சண்முக)

அநுபல்லவி

கங்காசடாதரனுர் சங்கா ரொருகரனுர் தரு
பாலகனே யருளே நிறையும் குக (சண்முக)

சரணம்

வேலாயுத பாணியே நாயர்கலை வாணியே
நன்னய மிலகுஞ் சொன்னமின் மயிலா
குன்ருக்குடி நீதா என்ருர்ப்பவர் நாதா
எந்தனையாதரி யுந்தனை நம்பினேன் (சண்முக)

## 497. கருத்தனே

பல்லவி

கருத்தனே யெனக் கொருத் தருண்டோ நீயே
மருமலர் மண்டவன திருமகள் கொண்டவன
மருகனே யெனை யாளாய் முருகனே நம்பினேன்...
(கருத்தனே)

சரணங்கள்

1 வானவர் பணிவோன் தேனலரணிவோன்
மைந்தனே ஞானசம்பந்தனே யருள்வாய் (கருத்தனே)

2 கலங்கிட வீரனை நலங்கிடச் சூரனைக்
கண்டடல் வென்றவா அண்டர் தொழுங்குகா
(கருத்தனே)

## 498. சாமியை நினைமனமே

பல்லவி

சாமியை நினைமனமே கந்த சாமியை நினைமனமே
(சாமியை)

அநுபல்லவி

பூமிபுகழுங் குன்றைப் பொருப்பில்வளருங்குக (சாமியை)

சரணம்

வாசமிகு நீபனை வள்ளி நேச மிகுபூபனை
ஆனந்த வொயிலனை திவ்விய மோனங்கொள் மயிலனை
குன்றை மேரார் நன்றருள் சீரார் (சாமியை)

## 499. எப்போது தயவு வைப்பாயோ

பல்லவி

எப்போது தயவு வைப்பாயோ
முப்போது மன்பர் பணி மூர்த்திகரா அரா (எப்போது)

சரணங்கள்

1 காரணனே முருகேசா நாரணனார் மருகேசா
கர்த்தனே முத்தனே சித்தனே பத்தன்மேல் (எப்போது)
2 வள்ளி தெய்வானை பங்காளா தெள்ளு தமிழோர்
பணிதாளா
வாசனே நேசனே யீசனே நேசன்மேல் (எப்போது)
3 குன்றுக் குடிமலை வேலா நன்றுயன்பரைக் காக்குஞ்சீலா
குகனே செகனே சுகனே மகன்மேல் (எப்போது)

## 500. தயவு வைப்பதே யரிது

பல்லவி

தயவு வைப்பதே யரிது அன்பர் நயம் விளைப்பதே யரிது
(தயவு)

சரணங்கள்

1 கானகத்தினில் வருமான் தெய் வானையற்புறு பெருமான்
கருத்தினில் வைத்து உரித்தாகத் (தயவு)
2 சக்கர பாணியின் மருகன் நாளுந் துதிக்குமன்பருக்
கருகன்
சந்தோஷமாக்வே வந்தோர் மயின்மீது (தயவு)
3 தோகை மலைமகேசன் வெற்றி வாகைபுனை குகேசன்
துதிக்கு மன்பரை யாரு மதிக்கும் படியாகத் (தயவு)

## 501. தீராத வினையுண்டோ

பல்லவி

தீராத வினையுண்டோ தாரார் புயனெங்கள் சண்முகனைப்
பணிந்தால்
(தீராத)

சரணங்கள்

1 கண்டவுடனிருகைகளைக் குவித்து கொண்டு
பஞ்சாட்சரங் குறைவறச் செபித்துக்
கர்த்தனைப் பணிசெய்தால் பத்தர்களிடத்தில் (தீராத)

2 ஒரு மனதாகவே யுண்மையாய்ச் சென்று திருவுருவினை
முன்னே சேவித்து நின்று
உத்தமனைத் துதித்தாற் பத்தர்களிடத்தில் (தீராத)

3 குன்றைமலைவரு குககுருபரனை நன்றடியர்க்கருள்
நல்கிய வரனை
கோலனைத் துதித்தால் ஞாலத்தி லன்பர்க்குத் (தீராத)

## 502. மறக்க வொண்ணுதே

பல்லவி

மறக்க வொண்ணுதே குன்றை மணியை யிப்போதே
துறக்க நாடரும் வந்து துதிக்குந் தெய்வத்தைக் கண்டு
(மறக்க)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை மாய்த்திடுவோனை
சூதுக்குநிகர் கொங்கைத் துரைப்பெண் பங்கோனை
(மறக்க)

சரணம்

அடியவர் மனப்படி யாயருள் பவனை
தடவறுவரைவளர் சண்முக சிவனை
தண்டைச் சிலம்புகள் சதங்கை யணிபதனை
அண்ட பகிரண்ட மாளுமற்புதனை (மறக்க)

## 503. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி அடியன்முன் வரவேணுஞ் சாமி
(தரவேணுஞ்)

சரணங்கள்

1 கையினில் வேல்பிடித்து மயிலேறி தைதையென
நடித்து சந்தோஷமாகத் (தரவேணுஞ்)

2 காவிக் கலைதரித்து குறமாதை மேவிக் கலைவிரித்து
அனுபூதி (தரவேணுஞ்)

3 கந்தனே யன்பாலே நயம்பட வெந்தன் மனம் போல
அனுக்கிரகம் (தரவேணுஞ்)

## 504. அருளெனக்குத் தருவாய்

பல்லவி

அருளெனக்குத் தருவாய் மயின்மேலுரு நிறக்க வருவாய்
குககுரு நாதா அகமலர் பாதா (அருளென.

சரணங்கள்

1 பன்னிரு கையா வென்னிடம் ஐயா (அருளெனக்
2 சங்கரர் குமாரா துங்க மயின்மேரா (அருளெனக்

## 505. இந்த வேளையைப் பார்ப்பாய்

பல்லவி

இந்த வேளையைப் பார்ப்பாய் – மயின் மீது வந்து
வேளையைக் காப்பாய் (இந்த வேளை)

சரணங்கள்

1 வள்ளிதெய்வானை புணரொயிலா நடனம்
புள்ளி யிலகுஞ் சிறை மயிலா
புண்ணியனே யன்பரெண்ணியபடி செய்ய
(இந்த வேளை)

2 எல்லா வுலகும் பணிபவனே நால்வர்க்குச்
சொல்லாமற் சொல்லிய சிவனே
தோத்திரஞ் செய்யு மன்பர் நேர்த்தியா யருள் செய்ய
(இந்த வேளை)

3 குன்றைமலை வளர் வாசா வன்பர்க்கு
என்று மனுக் கிரகஞ் செய் நேசா
இச்சையுடனே தான் பச்சை மயிலேறி (இந்த வேளை)

## 506. செகண்டிமலை முருகா

பல்லவி

செகண்டிமலை முருகா அகண்ட பரிபூரணா
செகன்மோகனா சிகிவாகனா குககுமரா கொடுஞ்சமரா
(செகண்டி)

சரணங்கள்

வள்ளி லோலனே வடிவேலனே தெள்ளுஞ் சீலனே
சிவபாலனே (செகண்டி)

அண்டர் நாதனே அருள் வேதனே தொண்டர்
போதனே துதி பாதனே (செகண்டி)

## 507. கருணைக் கடலைக் கண்டு

பல்லவி

கருணைக் கடலைக் கண்டு துதிப்போர்க் கருளும்
வித்தையுமுண்டு (கருணை)

சரணங்கள்

1 அடியரைக் காக்கும் பொருளை யவர் குடியை ரட்சிக்கு
மருளை
படியிற் பணியார்க் கிருளை யிருள் விடிவாகிய நல்ல
தெருளை (கருணை)

2 எங்கும் நிறைந்த வெளியை யெங்குந் தங்கும் பிரகாச
வொளியை
பொங்குங் கன பேரளியை நாளுஞ் சொங்குமானந்தத்
துளியை (கருணை)

3 குன்றை மாமலைக் குகனைக் குற மன்றலங் குழல் சுகனை
குன்றவில்லிதன் மகனை நாளும் நன்றருள் செய்
சண்முகனை (கருணை)

## 508. வருவாய் வருவாய் மயின்மேல்

பல்லவி

வருவாய் வருவாய் மயின்மேல் (வருவாய்)

அநுபல்லவி

உருவாய் விளங்கிய அருவா யென்றுதுதி
உண்மை யடியார் காண வண்மையுடனிப் போது
(வருவாய்)

சரணங்கள்

1 கானக் குறத்தியை மோகத்துடன் புணர் காதலனே
பிரகாசனே
வானத் தமரர் முனியீசருமே பணி மாமலர்ப்பாத
முருகேசனே (வருவாய்)

2 தண்டைச் சிலம்புகள் சதங்கை கிணி கிணி மணிதானே
கலகல வென்னவே
பண்டை வினையிருள் தீரும்படி யாயடியவர் பரிவாய்த்
தோத்திரம் பண்ணவே (வருவாய்)

3 தேமலர்ச் சோலைநிறை செகண்டி மலையில்வரு
தேவர்கள் தேவர் சிவேசனே
மாமலர்க் கனமணமலி கடம்பணி யணி மார்பா வெந்தனை
யாளுமீசனே (வருவாய்)

## 509. நம்பிக் கொள்வாயே

பல்லவி

நம்பிக் கொள்வாயே மனமே – நம்பிக் கொள்வாயே
தும்பிக்கையோனது துணைமுருகோனை நீயே (நம்பிக்)

சரணங்கள்

1 ஆடரவுபுனை நேத்திர பாலன் பர
நாடகங் காட்டிய காலன் அருள் நாதனை வேதனை
(நம்பிக்)

2 நீலமேக நன்மெய்யன் வட வாலிலையிற் றுயிலய்யன்
மருகனை துய்யனை (நம்பிக்)

3 குன்றை மலைவரு வாசனை மன்றலங் குழலிதன்
நேசனை யருள் மாயனை சேயனை (நம்பிக்)

## 510. அடியரே

பல்லவி

அடியரே மனத்தைத் தேற்றுங்கள் - குன்றுக்
குடிவளர் பவனைப் போற்றுங்கள் (அடியரே)

சரணங்கள்

1 நித்தமும் பேரின்பங் கண்டு ஞானத்தாயன்பு கொண்டு
பத்தியதாகவே தொண்டு செய்து பரகதி யடையத்
திரிவது யெதற்கு (அடியரே)

2 காயகற் பங்களைத் தின்றும் ஒரு காலை யூசிலூன்றி
நின்றும்
மாயத் தொழில்களை வென்றும் வெகு மார்க்கமாய்த்
தவஞ் செய்து ஏற்கவே திரியும் (அடியரே)

3 பஞ்ச விந்திரியத்தை யடைந்தும் கவன பாதையதா
யெங்கு நடந்தும்
அஞ்சமும்மலத்தையுங் கடந்தும் வெகுவாகவே
யக்கியானம் போகவே யலையும் (அடியரே)

## 511. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே வெகு தீர்க்கமான முடிச்சிகிமலை
மெய்யனே (காக்க)

சரணங்கள்

1 வருக்கமான விதழ் மலர்கொடு வந்தனை
யருச்சனை செய்கின்ற வடியவனெந்தனைக் (காக்க)
2 பரம பதம்பெறப் பத்தியுட னென்னைச்
சிரகரங்களுடன் தரிசிக்கு மென்னைக் (காக்க)
3 ஆதர வென்றைக்குமாக வேணுமென்று
பாதமலர் தன்னைப் பணியு மென்னையின்று (காக்க)

## 512. பதந் தரவேணும்

பல்லவி

பதந் தரவேணும் உந்தன் பதந் தரவேணும்
நிதந்தமிழோர் பணி நீள் சிகிமலையா (பதந்)

சரணங்கள்

1 வந்தடுத்தோர் தங்கள் மாய்கையை நீக்கும்
எந்த விதத்திலு மேழையைக் காக்கும் (பதந்)
2 பலபல விமையவர் பண்ணவர் பணியும்
இலகிய நவமணி யெழிற்சிலம் பணியும் (பதந்)
3 மத்தள தாள மறை சுதிநீடும் தத்தளங்கு தாகுதி
யென்றாடும் (பதந்)

## 513. மனமே மயங்காதே

பல்லவி

மனமே மயங்காதே – நீதான்
தினமே தியங்காதே (மனமே)

சரணங்கள்

1 பூண்ட வினையெல்லாங் கீண்டிடுமே பைய
ஆண்டவ னிருக்கிறார் வேண்டிய வரஞ் செய்ய (மனமே)
2 சொன்ன மயின்மீது உன்னிடம் வருவார்
வன்ன வேலவனு னக்கின்னமுந் தருவார் (மனமே)

3 அண்ட முயருஞ் செகண்டியி லிருப்பார்
தொண்டனென வுன்னை யண்டியே யிருப்பார் (மனமே)

## 514. என்குறை தீராயோ

பல்லவி

என்குறை தீராயோ பன்னிரு உன்கணுற் பாராயோ
தாமரை மலர்ப்பாதா கூரி ஞம் வேற்குக நாதா (என்குறை)

சரணங்கள்

1 நாரணன் மருகேசா நான்கு ஆரண முருகேசா (என்குறை)
2 குன்றையின் மலைவேலா அன்பர்க்கு நன்றருளுஞ் சீலா (என்குறை)

## 515. எந்நேரமும் நினைந்து கொள்வாய்

பல்லவி

எந்நேரமும் நினைந்து கொள்வாய் – கொண்டு நெஞ்சே
முன்னே நின்றுதுதி விள்வாய் (எந்நேர)

சரணங்கள்

1 கங்கையணி சடையர் பாலனைக் கையிலணியுங் கதிர்வேலனை
மங்கை தெய்வானை வள்ளி லோலனை யெதிர்
வருமவுணர்கள் குல காலனை (எந்நேர)
2 அடியவர்க் கருளிய கரனை திவ்விய வானந்த மயமா மீசுவரனை
படியிலெவ் வுயிருக்கும் வரனைச் செய்யும் பரமனை முடியாறு சிரனை (எந்நேர)
3 குமர குருபர நாதனை நல்ல கோகனக மலர்ப்பாதனை
செகரட்சக மறைவேதனை வளர் செகண்டிமலை வரு நீதனை (எந்நேர)

## 516. காணுவதே யரிது

பல்லவி

காணுவதே யரிது – கண்டு மனம்
பூணுவதே யரிது (காணு)

சரணங்கள்

1 அண்டர் பணிசெய்யு மம்புயத் தாளனை
வண்டனெனுஞ் சூரை மாய்த்திடு தோளனைக் (காணு)

2 கானக மாதைக் கலந்திடு மேலோனை
வானவர் முனிவர்கள் வாழ்த்திய சீலனைக் (காணு)

3 குன்றை மலைவளர் குககுமரேசனை
நன்றடியார்க் கருள் நல்கிய வரசனைக் (காணு)

## 517. மனமே யஞ்சாதே

பல்லவி

மனமே யஞ்சாதே - குகன்
தினமே ரட்சிப்பா ரய்யன் (மனமே)

சரணங்கள்

1 மாதவர் தேடுந் தாளன் கான் மாதுசேர் மணவாளன்
ஆதரவாய் உன்னைக் காப்பார் (மனமே)

2 வந்துவரஞ் செய்வா ருந்தனக் கினி
செந்திரு மாயன் மருகன் யார்க்கும் வந்தருளும்
வேல் முருகன் உன்னை
மங்களமாகவே யிங்கிதமாய்க் காப்பார் (மனமே)

3 வந்தவர்க்கருளும் வேலவன் குன்றை வந்த குருபர சீலன்
உன்முன்
வந்துவரஞ் செய்வார் சிந்தை மகிழவே (மனமே)

## 518. எவ்விதமோ தெரியாதே

பல்லவி

எவ்விதமோ தெரியாதே - ஐயன் செயல்
எவ்விதமோ தெரியாதே (எவ்வித)

அநுபல்லவி

செவ்விதமாகிய சொர்ன முடிவளர் செகண்டிமலை வருமகண்ட
பூரணன் செயல் (எவ்வித)

சரணங்கள்

1 கானக் குறத்தியைக் கலந்தணையும் புயன்
ஞானத்தவ முனிவர் நாடரும் பொருளையன்
நன்னயமாகிய வன்ன வேலவன்செயல் (எவ்வித)

2 பதஞ்சலிவியாக் கிரபர் பரவிய காலன்
நிதஞ் சலியாத நன்னிர்த்தன பாலன்
நின்மல ரூபன் சின்மயன் செயல் (எவ்வித)

3 குன்ருக் குடிவரு குமரகுகேசன் நன்ருக வடியர்க்கு
நல்கிய கரன்
ரஞ்சிதிமாங் குறவஞ்சிபங்கன் செயல் (எவ்வித)

## 519. குகனே குகனே யென்று கூறுவாய்

பல்லவி

குகனே குகனே யென்று கூறுவாய் - மனமே யாறு
முகனே முகனே யென்று மொழிகுவாய் தினமே (குகனே)

சரணங்கள்

1 சிவனே சிவனே யென்று செப்புவாய் நிதமே சரவண
பவனே பவனே யென்று பகருவாய் சதமே (குகனே)

2 வரனே வரனே யென்று வாழ்த்துவாய் சித்தமே
யெங்கும் பரா பரனே பரனே என்று பகருவாய் நித்தமே
(குகனே)

## 520. பாத தரிசனந் தருவாய்

பல்லவி

பாத தரிசனந் தருவாய் - குன்றை
யாதிபனே யென்முன் வருவாய் (பாத)

அநுபல்லவி

தாதவிழ் நீபமலர்த் தாரா வள்ளி மாதரசி புணர்வசீரா (பாத)

சரணம்

கங்கை யணிபவர் பாலா நல்ல துங்கமிகு மயிற் கோலா
குன்றைமலே வருகோவே யன்பர் நன்றுபெற வருள்தேவே
(பாத)

## 521. வடிவுருவா

பல்லவி

வடிவுருவா குன்ருக்குடி முருகா
பத்தனே யாளாய் கானக்குறத்தி மணுளா (வடி)

சரண்ங்கள்

1 செகநாயகனே தமிழ்ப் புகழ் வாயனே (வடி)
2 மடநீபனே சூர்மே லடர் கேயனே (வடி)

## 522. இரங்க வேணுமையா

பல்லவி

இரங்க வேணுமையா மனமிரங்க வேணுமையா
பரங்குன்ற முதலாறு படை வீட்டினரசே (இரங்க)

சரணங்கள்

1 பாவ வினைதனிற் போகாகல் பொல்லா நோவதில் நின்று சாகாமல்
கருவயிற்றில் வந்து பிறக்காமல் செல்வப்
பெருமை தானிற் கெட்டிறக்காமல் (இரங்க)

2 மன்றன் மலர்ப்பொழி னித்தம் வளருங்
குன்றை மலையா யுன் சித்தம் (இரங்க)

## 523. சங்கரர் குமரா

பல்லவி

சங்கரர் குமரா வலு துங்வற் சமரா (சங்கரர்)

அநுபல்லவி

காரண முருகா நீல நாரணன் மருகா (சங்கரர்)

சரணம்

சூர சங்காரா வலங்கார சிங்காரா
குன்றை யினுதா வரு ணன்றருள் வோதா (சங்கரர்)

## 524. அடியவர்க் கருளுரையே

பல்லவி

அடியவர்க் கருளுரையே – செயுங் குன்ருக்
குடியில் வளர்துரையே (அடியவர்)

சரணங்கள்

1 விரைசெய் நீபமாலை மேவிய புயனே
கரையிலவுணர் தங்களை வென்ற செயனே யென்று
கண்டு பணிந்தன்பு கொண்டு துதிக்கும் (அடியவர்)

2 ஆனந்த மயமான வற்புதப் பொருளே யென்று
அரிய தவத்துடன் பரிவொடு துதிக்கும் (அடியவர்)

3 குன்ருக் குடிவளர் குருபர நாதா
மன்ருடிக் கிசை மைந்தா நீதா வென்று
மன்றன் மலர்கொடு நின்று துதிக்கும் (அடியவர்)

## 525. சமயஞ் சமயமையா

பல்லவி

சமயஞ் சமயமையா - அந்த
அமரர் பணியுங் குன்றை யாண்டவனே யிது (சமயஞ்)

சரணங்கள்

1 பொல்லாத வைந்து புலன்களிலே நின்று
நில்லாது வருமாசை நீங்கிடவே யின்று
நின்னருள் புரியவே யிந்நேரமே யிது (சமயஞ்)

2 முந்திய தீவினை முழுவது மோடவே யுந்தனடிய
ரடியவர்க் குன்னருள் நீடவே யுத்தமனே பரிசுத்தனே
யிதுவே (சமயஞ்)

3 குன்றுக் குடிவளர் குமர குருபரா
நாரணன் மருகா ஆரண முருகா (சமயஞ்)

## 526. இருவினை தீராய்

பல்லவி

இரு வினை தீராய் மயிலில் அருட ர வாராய் (இரு)

சரணங்கள்

1 சங்கர ரருளிய விங்கித பாலா
மங்கள மிகுகுறப் பைங்கிளி மாலா (இரு)

2 வாது புரியசுரரை மோதிய வயிலா
கோதுகிளிமொழித் தெய்வானை யிணையிலா (இரு)

3 திருவளர் சிகிமலை வருகுக முருகா
அருமறை புகழ்தரு மொருவிறன் மருகா (இரு)

## 527. உந்தன் பதாம்புய வுபயமலர்

பல்லவி

உந்தன் பதாம்புய வுபய மலர் தந்து
எந்தனை யாட்கொள்வா யிச்சையுடன் வந்து (உந்தன்)

சரணங்கள்

1 அண்டர் பணி செய்ய வருளிய பாதா
தொண்டர்கள் பழவினை தொலைத்திடு நீதா (உந்தன்)

2 குன்றை மலைவரு குககுரு பரனே
வென்றி புனையயில் விளங்கிய கரனே (உந்தன்)

## 528. கதியில்லையே

பல்லவி

கதியில்லையே யுந்தனையல்லாற் கதியில்லையே
மதிதவழுங் குன்றை மாமலைக் கிறைவா (கதி)

சரணங்கள்

1 திரிபுரதகனே யருளிய மகனே (கதி)
2 சருவ தயாபரா அருமறை புகழ் அரா (கதி)
3 தோகை மலைக்குக் கோவே வாகைபுனை தேவே (கதி)

## 529. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ திவ்விய வித்தகனே குகனே (சித்த)

சரணங்கள்

1 தானவர்குல காலா வானவர் பணிகாலா (சித்த)
2 சுக குருபரனே நகுமயிற்கரனே (சித்த)
3 சிகிமலைவாசா மகிபர் சர்வேசா (சித்த)

## 530. யோசனை செய்யாதே

பல்லவி

யோசனை செய்யாதே மனமே யோசனை செய்யாதே
வாசனை மிகுகுன்றை மலைக்குகனிருக்க (யோசனை)

அநுபல்லவி

ஆடிய மயின்மேலனுதினம் வருவார்
தேடியுன் வினையெல்லாந் தீர்த்தருள் தருவார் (யோசனை)

சரணம்

எந்த விதத்திலு மிச்சையைச் சொல்லுவார்
வந்தபொல்லாப் புகழை மாறியே வெல்லுவார்
விண்ணவர் பணிகுன்றை மீதினி லிருப்பார்
எண்ணியுன் மனதினி லென்றைக்கு மிருப்பார் (யோசனை)

## 531. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே சூழு மன்பர்கள் துதிக்கு மெய்யனே
(ஆளு)

அநுபல்லவி

இருவர் மணாளனே அன்பர் பரவிய தாளனே (ஆளு)

சரணம்

அண்டர் நாதனே பணி கொண்ட பாதனே
குன்றை வாசனே யன்பர்க் கென்று நேசனே (ஆளு)

## 532. இன்னம் வரஞ்செய்யாத தென்னமோ

பல்லவி

இன்னம் வரஞ்செய்யாத தென்னமோ சாமி
வன்ன மயின்மலை வளருங் குருபரா (இன்னம்)

அநுபல்லவி

தாதவிழு நீபத்தாம மணிபுயா கோதடருஞ் சூரைக்
கொன்றதொரு செயா (இன்னம்)

சரணம்

செங்கரத்திலணி திடமிகு வயிலா பைங்கிளி குறத்தியின்
பங்குறை யொயிலா
வன்னமயிலேறி வருஞ் சண்முகனே மின்னிய முடிச்
சிகிமேல் வருங்குகனே (இன்னம்)

## 533. சோதியே யெனையாளாய்

பல்லவி

சோதியே யெனையாளாய் வாதடர் சோலைசூழ் மயின்
மலை நாதா (சோதியே)

சரணங்கள்

1 கண்ணுக்குக் காட்சி தரவேணும் மன தெண்ணுக்
கிசைவாக வரவேணும் (சோதியே)

2 தேகத்துக்கு நயஞ் செய்யவேணும் உயிர் சாகத்துக்
கில்லாது உய்ய வேணும் (சோதியே)

3 அன்புக் கிசைவதாயிருக்க வேணும் எந்தன் முன்புக்
கினியே வந்து தங்கவேணும் (சோதியே)

## 534. மனதே குன்றுக்குடியை மறவாய்

பல்லவி

மனதே குன்றுக்குடியை மறவாய்
கனமேவிய வெங்கள் கந்தனை நிதமும் (மனதே)

சரணங்கள்

1 சஞ்சல மதனாலே தானே தடுமாறி நெஞ்ச முழலாது
  நித்தனைக் கூறி (மனதே)
2 எந்த விதத்திலும் மிம்மிசைப்பட்டு வந்தபோதுந்
  தீர்க்கு மயிலோனைக்கும்பிட்டு (மனதே)
3 பத்தியதாகவே பாடி முப்போது சித்த மகிழ்ந்து
  தரிசித்து எப்போதும் (மனதே)

## 535. வால வடிவேலவா

பல்லவி

வால வடிவேலவா ஞாலம் புகழுங் குன்றை நாயகனே
  சாமி (வால)

அநுபல்லவி

வள்ளி யொயிலோனே புள்ளி மயிலோனே (வால)

சரணம்

வானவர் நயனே தானவர் செயனே
சகல சற்குருவே செக நிறையுருவே (வால)

## 536. பலன் தரவேணும்

பல்லவி

பலன் தரவேணும் நலந்திகழ் குன்றை நாதனே
  போதனே (பலன்தர)

சரணங்கள்

1 மாயமாகிய பொல்லா வாழ்வினில் மடியாது
  தேயவருந் துன்பத்தினிற் பட்டுத் துடியாது (பலன்தர)
2 சஞ்சிதப்புலி யென்னைத் தாவியே பாயாது
  மிஞ்சுங் குழியில் வீழ்ந்தின்னஞ் சாயாது (பலன்தர)
3 தோகைமலைக் கிசைந்த துரைமுருகேசா
  வாகை புனைபுய மால்மருகேசா (பலன்தர)

## 537. ஐயா வெனைக்காப்பாய்

பல்லவி

ஐயா வெனைக்காப்பாய் செய்யாளுறை குன்றைத்
  தேவதேவ முரு (கையா)

சரணங்கள்

1 எங்கு நிறைந்தே யிருக்கும் பராபர வுருவே நாளும்
பொங்குங் கருணை புரியடியர்க்கருள் தருவே (ஐயா)

2 ஆடகப் பொன்னம் பலந்தனினின்று திவ்விய
நாடகரருள் நம்பவெனக் கருளின்று (ஐயா)

3 காரண காரியங்கட்கு மொன்றுவது நீயே நான்கு
ஆரண நிறை பொருளாக விருப்பது நீயே (ஐயா)

## 538. எந்தனை யாள வருவாய்

பல்லவி

எந்தனை யாளவருவாய் வந்தென் சிந்தனைப்படி தருவாய்
(எந்தனை)

அநுபல்லவி

ஈசா முருகேசா சருவேசா வள்ளி நேசா சாமி (எந்தனை)

சரணம்

நீதா குருநாதா மலர்ப்பாதா மறைவேதா சாமி
சீரா நீபத்தாரா வலங்காரா வேல் வீரா சாமி (எந்தனை)

## 539. தரிசிக்க வேணுமே

பல்லவி

தரிசிக்க வேணுமே பரிசுத்தமான குன்றைப் பதிவளர்
நாதனை (தரிசிக்)

சரணங்கள்

1 கானக மங்கையைக் கலந்தவனை வாகனை தேனலர் நீபத்
திவ்விய போகனைத் (தரிசிக்)

2 ஆதிபராபர வானந்த மயனை சோதி மகேசனைச்
சுப முருகையனைத் (தரிசிக்)

3 அகமிகு சூரனை யழித்திடு கோவனை சிகிமலை வாழ்தரு
தேவர்வள் தேவனைத் (தரிசிக்)

## 540. சொல்லுவதே பெரிது

பல்லவி

சொல்லுவதே பெரிது அல்லும் பகலுங் குன்றை
யாண்டவனைத் துதி (சொல்லுவ)

சரணங்கள்

1 அத்தனைப் பரிசுத்தனைச் செய்யுஞ் சித்தனை
மயினித்தனைத் துதி (சொல்லுவ)

2 துய்யனை முருகையனை வேற்கையனைப் பூதி
· மெய்யனைத் துதி (சொல்லுவ)

3 வாசனை வள்ளி நேசனைப் பிரகாசனை முருகேசனைத் துதி
(சொல்லுவ)

## 541. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணு மையனே பார்க்க நயக்குங் குன்றைப்
பழமலையா வென்னைக் (காக்க)

சரணங்கள்

1 வந்தனை புரிந்துந்தன் மலரடிகளைக் கண்டு
சிந்தனை செய்யு மென்னைத் தினமு மகிழ்ந்து கொண்டு
(காக்க)

2 தீராத வினை யெல்லாந் தீர்த்து நயமாக
தராத வருளெல்லாந் தந்துன் வயமாக (காக்க)

3 மன்றன் மலர்ச்சோலை வளங்களெல்லாம் பொருந்து
குன்றையின் மலைதனிற் குடியிருப்பாயிருந்து (காக்க)

## 542. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா தேடிய வன்பர்க்குத் தீவினை தீராய்
(ஆடிய)

சரணங்கள்

1 அண்ட மதிலுயர் மூதண்ட மெலாமுலாவி
கொண்டர வினைக்கொத்திக் குதித்துக்குதித்துத் தாவி
(ஆடிய)

2 அட்ட திசைகளெங்கு மசைந்திடவே நின்று
கொட்டமிட்டுக் கொண்டு கூவிக் கலகலென்று
(ஆடிய)

3 அழகிய நீபமாலை யணிந்திடு புயனே
பழமலியுங் குன்றை மலைவளர் நடனே (ஆடிய)

## 543. இதுவே சமயமையா

பல்லவி

இதுவே சமயமையா மதுவேறிய பொழின் மயின்மலே
நாதா (இதுவே)

சரணங்கள்

1 நல்லிசைசேர் மறை சொல்லிய வோன் நறை
மெல்லிய பூவுறை வேதா பணிதரு பாதா வருள்
செய்ய (இதுவே)
2 தேனலர் போது தானணி மாது கானமின் மீது காதல்
கொள் நாதா நீதயவாள (இதுவே)
3 அடியவர் போற்று படியணி நீற்றுப் பொடி புனேயேற்றுப்
புண்ணியர் பாலா நானெண்ணியபடி செய்ய (இதுவே)

## 544. ஆதரிப்பாய் ஐயனே

பல்லவி

ஆதரிப்பாய் ஐயனே பூதலம் புகழ் குன்றைப்
புண்ணியனே சாமி (ஆதரிப்)

அநுபல்லவி

வாது புரிசூரனே மோது படையாள் (ஆதரிப்)

சரணம்

காரண முருகா நாரணன் மருகா
குன்றையின் மலேநாதா நன்றருள் புரிபாதா (ஆதரிப்)

## 545. ஆதாயந் தருவாய்

பல்லவி

ஆதாயந் தருவாய் போதார் பொழிற்குன்றைப்
பொருப்பினில் வருவாய் (ஆதாயந்)

சரணங்கள்

1 வள்ளி மணுளா தெள்ளு பூந்தாளா வாசனே மலர் நீபா
யோசனே செய்யாமல் (ஆதாயந்)
2 மற்புய வீரன் விற்கர சூரன் மடிபட வென்றவா அடியவ
னென வெண்ணி (ஆதாயந்)
3 அருமறை வடிவே தெருள்மனவிடிவே ஆண்டவனே
குன்றைத் தாண்டவனே யின்று (ஆதாயந்)

## 546. எந்த வினையையுந் தீர்

பல்லவி

எந்த வினையையுந் தீர் குன்றை வந்த குருபர நாதா
(எந்த)

அநுபல்லவி

ஆடு மயிற் பரியாளா வன்பர் தேடு மலர்க்கிணை தாளா
(எந்த)

சரணம்

செந்தமிழ் புகல் சம்பந்தா கொன்றைக் கொந்தலர்
சூடிதன் மைந்தா
தோகை மலர் வளர் வாசா வள்ளி ஓகை புனையுமுல்லாசா
(எந்த)

## 547. சித்திர மயில்வாகா

பல்லவி

சித்திர மயில் வாகா வள்ளி முத்து நகையாள்பாகா
எந்தனையாள வருவாய் வந்து செந்தமிழ்ப் பாடல்
தருவாய் (சித்திர)

சரணம்

கங்கை யணியுஞ் சடையார் அருள் திங்களொளி
விடையார் பாலா
நிர்த்தன மிடுமயிலா அடியவர் சித்த மகிழ்செயொயிலா
(சித்திர)

## 548. நீயே துணை

பல்லவி

நீயே துணை ஐயா தாயே குன்றை மலைச்சாமி
யினி யெனக்கு (நீயே)

அநுபல்லவி

கானக மயில் மாலா அந்த வானவர் பணிகாலா (நீயே)

சரணங்கள்

1 எங்கும் நிறை பராபரனே கதிர் பொங்கு மயிலணிதரனே
(நீயே)
2 பத்தர்கண் முனிவர்கள் தோத்திரா அவர்க்குச்
சித்த மகிழ்ந்தருள் நேத்திரா (நீயே)

## 549. கதி யொன்று மில்லை

பல்லவி

கதி யொன்றுமில்லை ஐயா குன்றைப் பதியென்றும்
வாழ்பவனே (கதி)

அநுபல்லவி

தானவர் குலகாலா அந்த வானவர் பணி சீலா (கதி)

சரணம்

நான்மறை துதிபாதா திவ்விய பான்மதி முகநாதா
குன்றைமலைத் தேனே யன்பர்க்கு நன்றருள் புரிவோனே
(கதி)

## 550. வாராய் குருபரனே

பல்லவி

வாராய் குருபரனே வந்து வரந் தாராய் திரிபுரனே
(வாராய்)

அநுபல்லவி

சங்கரர் உருவே வள்ளிக் கிங்கிதமிகு கோவே (வாராய்)

சரணம்

அருமறை புகழ்பவனே யெதிர் பொரு சூரை வென்றவனே
முடி யறுமுகனே குன்றைக் குடிவளர் குகனே (வாராய்)

## 551. தரிசிக்க வேணும்

பல்லவி

தரிசிக்க வேணும் குன்றைப் பரிசுத்தனைக் கண்டு
தரிசிக்கவேணும்

சரணங்கள்

1 கருத்தில் நினைத்துக் கொண்டு திருத்தத் துதிகள் விண்டு
(தரிசிக்)

2 அன்புடனே சென்று முன்பு தென்புடனே நின்று
(தரிசிக்)

3 நன்றுடன் மனந்தேறி அந்தக் குன்றையின் மலையேறித்
(தரிசிக்)

## 552. வேருதரவுண்டோ

பல்லவி

வேரு தரவுண்டோ உன்னை யல்லால் வேரு தரவுண்டோ
மாருத பொழிற்குன்றைமலை வேலவா யெனக்கு (வேருத)

சரணங்கள்

1 அஞ்சாய் பயப்படாதே யென் ருதரவு சொல்லி
மிஞ்சாத் தீவினைகளை வேரோடேகல்லி
வேதாந்த நயத்தை நீதான் சேர்ந்தாளாமல் (வேருத)
2 காரண காரிய கருணை நிதியே நாரணன் முதலோர்கள்
நடத்திய துதியே
நந்தாதனுக்கிரகந்தந்தா தரித்திட (வேருத)
3 குன்றையின் மலைவளர் குக குருபரனே நன்றிதனை
யெனக்கு நல்கிய வரனே
நானு மனுக்கிரகம் வாழும்படி செய்ய (வேருத)

## 553. காணவென்ருல்

பல்லவி

காணவென்ருல் லெட்சங்கண் வேணும்
பூணிற் பொலி பூப பொழிற் குன்றை மலையோனைக் (காண)

சரணங்கள்

1 மூவர்க்கு முதலான மூர்த்திகரனைதேவர்க்கு முனிவர்க்குந்
தேடரும் பரனைக் (காண)
2 அஞ்சாதே யென்றன்பரை யாண்டருள்பவனை
மஞ்சார் பொழிற் குன்றை மலைவளர் சிவனைக் (காண)
3 கானக மயில்புணர் கருணை நிதியை
வானவ ரடியவர் மகிழ்ந்துசெய் துதியைக் (காண)

## 554. சாமி சித்த மிரங்க வேணும்

பல்லவி

சாமி சித்த மிரங்க வேணும் பூமி புகழுங் குன்றைப்
பொருப்பில் வளருங் கந்த (சாமி)

சரணங்கள்

1 கந்த மிகுந்த நீபக் கண்ணியணி புயனே
சந்த மிகுந்த செந்தமிழ் புகனயனே
வந்தெதிர் சூருடல் மாய்த்திடு செயனே
சொந்தடியார் முனிவர் தோத்திர கேகயனே (சாமி)

2 சரசரஞ்சித குறத் தையன் மணாளா
சுரர்கள் பணிந் தேந்தும் தூயமலர்த் தாளா
அரிவை யெவ்வனத் தெய்வானை பங்காளா
கரதல வேலா கார்த்திகை நாளா (சாமி)

3 வால சூரியனைப் போல் விளங்கிய தேகா
நீல மயிலேறு நிர்மல யோகா
ஞால மதிலன்பர்க்கு நல்கிய தியாகா
ஆலமுண்ட கண்டத்தரருளும் விசாகா (சாமி)

## 555. மதுரிதத்தமிழ் சொல்லும் வாயா

பல்லவி

மதுரிதத்தமிழ் சொல்லும் வாயா – எழுதாச்
சதுர்வித மறைதுதி சேயா (மதுரித)

சரணம்

நாரணனுர் மருகேசா செகக் காரணனே முருகேசா
தேனலர்க் கடம்பணி தோளா தினைக் கானமயிலி
மணவாளா (மதுரித)

## 556. ஏதுக்குத் தாமதமய்யா

பல்லவி

ஏதுக்குத் தாமதமய்யா அருள ஏதுக்குத் தாமதமய்யா

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை வதைத்திடுங் கையா (ஏதுக்கு)

சரணங்கள்

1 கற்புயருங் குறமினுளா மவளற்பொடு மேவிய தோளா (ஏதுக்கு)
2 பன்னிரண்டு திருப்புயனே பணிவோர் முன்னிடுபவருட
நயனே (ஏதுக்கு)
3 ஆடிய மயிலேறுங் கோவே தன்னைத் தேடியவர்க்
கருடேவே (ஏதுக்கு)

## 557. ஒருவனே கதி

பல்லவி

ஒருவனே கதி நெஞ்சே யுந்தன் னிருதயத்திற்பதி (ஒருவனே)

சரணங்கள்

1 பரம்பரமான நாதன் மறை நிறைந்திடு மலர்ப்பாதன்
குக நீதன் அவன் (ஒருவனே)
2 தவமுனிவர் பிரத்தியக்ஷன் போற்றுபவர்களுக்
கெல்லாம் பட்சன்
மூவர்க்குச்சன் அவன் (ஒருவனே)
3 குன்றை மாமலே வாசன் - என்னை யென்றைக்குங்
காக்கும் வாசன்
குமரேசன் அவன் (ஒருவனே)

## 558. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே சிறப்பான குன்றை மலேத்தேவனைத்
தினமே (மறக்காதே)

அநுபல்லவி

நடமிடுந் திவ்விய பொன்னய மிகு மயிலனை
மடவரல் குறமகள் மருவிய வொயிலனை (மறக்காதே)

சரணம்

எதிரிடு சூருயிரினை வெல்லும் வேலனை
மதிதவழ் முடியரன் மகிழ்தரு பாலனை
சோதி மயமாகத் துலங்கிய வொளியை
ஆதியந்தமு நிறைவாகிய வெளியை (மறக்காதே)

## 559. சோதியே சுடரே

பல்லவி

சோதியே சுடரே குன்றைக் காதியே யருளே (சோதி)

சரணங்கள்

1 பார்வதி புத்திரா பணிவோர் புகழ் மித்திரா (சோதி)
2 தொண்டர்கள் நாதா வெதி ரண்டர்கள் சேதா (சோதி)
3 பார்க்கவேவேணும் அருளினல் யார்க்குமே தோணும்
(சோதி)

## 560. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா குன்றை வரைக்கிசை யீசா (துரைக்)

அநுபல்லவி

வானவர் முனிவர்கள் வணங்கிய சரணு
நானமிகுந்த நீப நலங்கொளா பரணு (துரைக்)

சரணம்

சந்திரவதன சண்முக நாதா
வந்தடியரைக் காத்து வாழ்விக்கு நீதா
குன்றை மலைக்கிசைந்த குமர குருபரா
மன்றன் மிகுகொன்றை மலர்புனையு மரா (துரைக்)

## 561. குக குமரேசா.

பல்லவி

குக குமரேசா சுகவமரேசா குக குமரேசா

சரணங்கள்

1 வாரணி முலையாள் நெற்றிச் சீரணி சிலையாள்
வனக்குற மடமான் றனக்கிசை பவனே (குக கும)

2 வால சண்முகனே சொர்ன வேலவ சேகனே
மருமலர்ப் புயனே யருளெனக் குதவாய் (குக கும)

3 ஆடிய மயிலா அன்பர் தேடிய வொயிலா
அடியனைக் காப்பாய் குன்றைக்குடிமலைக் காயருள் (குக கும)

## 562. நாதனே குக நாதனே

பல்லவி

நாதனே குக நாதனே வேதனே ஞான போதனே

சரணங்கள்

1 மருமலர் புனை திருமினள் மருகனே யடியேற்கருள்
செய்வாய் (நாதனே)

2 ஆண்டவனே நீபம் பூண்டவனே தாண்டவனே
யெங்கும் நீண்டவனே (நாதனே)

3 சீரனே குன்றை மேரனே தாரனே தமிழ்ச் சாரனே
(நாதனே)

## 563. நித்தமும் மறக்காதே

பல்லவி

நித்தமும் மறக்காதே மறந்தாற் சித்தம் நிறக்காதே (நித்த)

சரணங்கள்

1 வாதுக்கு வருசூரனை யெதிர் மோதிச் செயிக்கும் வீரனை
(நித்த)

2 காக்குங் கருணேசனை குறமின் சேர்க்கும்புய நேசனை
(நித்த)

3 முடிபுனை யறுமுகனை குன்றுக் குடிவளரருள் குகனை (நித்த)

## 564. வித்தையைத் தரவேணும்

பல்லவி

வித்தையைத் தரவேணும் மயின்மேல் நித்தமும் வரவேணும்
(வித்தை)

சரணங்கள்

1 கெங்காதரருள் பாலா வொளி மங்காத வகலிலே வேலா
(வித்தை)

2 திவ்விய செங்கமலத்தாளா யெனக் கவ்வியந் தீர்த்தென்னை
யாளாய் (வித்தை)

3 அண்டமுயர் சிகிமேரா பணி தொண்டர்க் கருளு முதாரா
(வித்தை)

## 565. சமயஞ் சமயமையா

பல்லவி

சமயஞ் சமயமையா யிதுவே சமயஞ் சமயமையா (சமயஞ்)

அநுபல்லவி

அமையின் மந்தி கர்னங்களாடும் பொழிற் குன்றை
ஆண்டவனே யெனக்கு வேண்டிய படிசெய்யச் (சமயஞ்)

சரணங்கள்

1 வானவர் வந்துபணி நெருக்கமும் அவர்
மகுட மணிகளுதிர் பெருக்கமும்
மோன முனிவர் துதி யுருக்கமும் இந்த முழக்கமுங் கண்டு
உளக் கனிவான் முதல்வனே யருள விதுவே (சமயஞ்)

2 படியில் வந்து பின்பு சாகாமல் காதலினுல் மெலிந்து
நோகாமல் வெகு
கருத்துடனே நல்ல வுரித்துடனே யினிக்
கருணையுடனே வேணவருள் செய்யவே யிது (சமயஞ்)

3 தாமரை மாமலர்ப் பாதனே சூரைச் சங்கரிக்கும்
பிரக்கியாதனே
தேமலரா நீபப் போதனே கிரி தீபனே யன்பர் பூபனே
யருள்
செய்யவே யன்பனுய்யவே யிது (சமயஞ்)

## 566. குமர குருபரன்

பல்லவி

குமர குருபரன் பாத தரிசனங் கொள்ளுவதே பெரிது
பமரமிசைக்கும் பொழிற் பாங்குள குன்றைமலைக் (குமர)

சரணங்கள்

1 நானக் குழலியென்னுங் கானக்குறக்கொடியை நாடித்
திரிந்தலையும் பாதன்
வானவருக் காகத் தானவர் குலங்களை மடிய வடிக்கும்
பிரக்கியாதன் (குமர)
2 திருவளரிந்திரன் திருமுடி வீழ்ந்திடத்தான் செய்யு
முக்கிர குமாரன்
மருமலர் கொடுபணி யுரிமை யடியவர்க்கு ரட்சிக்குமு
தாரன் (குமர)
3 சஞ்சித வினைகளையஞ் சிடவே செயுந்தற்ப ராபர
முருகேசன்
பஞ்சினு மெல்லடி வஞ்சியுமை யுதவு பாலகனுமமரேசன்
(குமர)

## 567. செய்ய வேணுமையா

பல்லவி

செய்ய வேணுமையா வனுபூதி செய்ய வேணுமையா
வையமதில் பல் பேர் ஐயனே தோணும் (செய்ய)

சரணங்கள்

1 கானக் குறத்திதன் பாகா அவள் காதற்கிசைந்திடு
மோகா
ஞானக் கடம்பணி வாகா பூதி நாடித்தரித்திடு தேகா
(செய்ய)
2 பாதமலர்ப் பங்கயனே சூரைப் பார்த்தமர் செயுஞ் செயனே
கோதறு சின்மயனே யனுகூலஞ் செயுமிருதயனே (செய்ய)

3 தண்டை யொலிகளாட நீபத் தாரில் வண்டொலிகள்
கூடத் தொண்டர்கள் தோத்திரம் பாட வந்து துலங்க
வனுக் கிரக நீட (செய்ய)

## 568. குகனே யென்று செபித்துக்கொண்டாய்

பல்லவி

குகனே யென்று செபித்துக் கொண்டா லுனக்குக் குறை
வருமோ மனமே (குகனே)

அநுபல்லவி

செக மேழும் புகழும் யுக காலமும் வளர் செகண்டிமலை
மீது வரு மகண்ட பூரணனைக் கண்டு (குகனே)

சரணங்கள்

1 அடியவர் தங்களுட குடிகளை ரட்சித்து ஆண்டவனைப்
பரத தாண்டவனை நாளும்
கடிகமழ் மலர்புனை சம்பந்தக் கடவுள் தனை நய நடன
மயிலோனை (குகனே)

2 மங்கைய ரிருவர்கள் பங்கிலுறைபவனை மாலையணியுங்
கரனை வேலை யணியுமரனை
சங்கை யில்லாத வருளெங்கும் பொழிபவனை சத்துரு
சங்காரனை மித்துரு பரிபாலனை (குகனே)

3 தானவனுடன் வருசேனையை வெல்வோனை சகல
வுயிர்களுக்குஞ் சுகமது செய்வோனை
வானவர் முதலோ ரன்பானவர் பணிபுரி மன்றன்மலர்
பதனைக் குன்றை மலையோனை (குகனே)

## 569. எப்படியு மெனைக் காப்பாய்

பல்லவி

எப்படியு மெனைக்காப்பாய் - மைப்படியுங்
குன்றைமலைக் குமரேசா (எப்படி)

அநுபல்லவி

தானவர் குலகாலா வுயர் வானவர் பணிகாலா (எப்படி)

சரணம்

சங்கர ரருள்பாலா சூரன் அங்க மதடு வேலா
குன்றைமலை நாதா வன்பர்க்கு நன்றருள் புரிபாதா (எப்படி)

## 570. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே நாளும் சிறப்பான குன்றை மலைத்
தேவனைத் தினமே (மறக்)

அநுபல்லவி

வள்ளி மனோகரனைக் கூரி னள்ளிலை வேல்தரனை (மறக்)

சரணம்

தெய்வானை லோலனை மயில் மை வாகன சீலனை
குன்றுக்குடி யோனை யன்பரை நன்றுளும் அடியோனை (மறக்)

## 571. அடியவர்க் கிரங்கையா

பல்லவி

அடியவர்க் கிரங்கையா – குன்றுக்
குடிவளர் முருகையா (அடிய)

அநுபல்லவி

எங்கு நிறைந்த பரமானந்தனே மகா
சங்க நிறைந்திடு சம்பந்தனே (அடிய)

சரணம்

சகரெட்சக காரண வித்தே நூறு
மகரட்சகன் பணியும் சித்தே
நாதாந்த வடிவான தேவே நல்ல
வேதாந்த வடிவான கோவே (அடிய)

## 572. குமர குருபர நாதா

பல்லவி

குமர குருபர நாதா – விண்
அமரர் பணி யிருபாதா (குமர)

அநுபல்லவி

தேமலர் நீபமணி தோளா தெய்வக்
கோமகளாள் மணவாளா (குமர)

சரணம்

அன்பரைக் காக்குங் கிருபேசா வன்பர்
முன்பு வந்தாட்கொள்ளு நேசா
தோகை மலையில் வளர் தேவே வெற்றி
வாகை புனையுறுசெய் கோவே (குமர)

## 573. தேவ தேவா

பல்லவி

தேவ தேவா மகா தேவ தேவா
ஆவலாக வந்து ஆண்டருள்வாய் (தேவ)

அநுபல்லவி

கங்கை சூடியொரு பங்கில் வாழு மங்கை மாது தரு
மிங்கிதனே (தேவ)

சரணம்

ஞான முனிவோர்கள் வானவர்கள் தானவர்கள் பணிமான
வேலா
அண்டர் மேவிய செகண்டி மேரா தொண்டனை யாளவருள்
கொண்ட நாதா (தேவ)

## 574. தெண்டனிடாம லிராதே

பல்லவி

தெண்டனிடாம லிராதே செகண்டிமலையை யிப்போதே
(தெண்ட)

அநுபல்லவி

மாறு பாடில்லாமற் றினமே வெகு கூறு பாடாக மனமே
(தெண்ட)

சரணம்

அண்ட நிறை பராபரனை யருள் கொண்ட செகதீசுவரனை
மாதவர்கள் தோத்திரனை யருள் போதலர் போலு
நேத்திரனைத் (தெண்ட)

## 575. சண்முகேசனே

பல்லவி

சண்முகேசனே விண்முக முயர் குன்றை மேவுங் குமரேசா
(சண்மு)

சரணங்கள்

1 ஆண்டவனே நீபம் பூண்டவே யினி
ஆதரவாகவே நீதயவே செய்வாய் (சண்மு)

2 அன்பனிவ னொன்று தென்புடனே யின்று
ஆவலுடன் வந்து சேவடி யிலாள்வாய் (சண்மு)

3 நீல மயிலேறும் வேலவனே நின்னை நித்தம் பணிபுரி
பத்தனை ரட்சிப்பாய் (சண்மு)

## 576. நயந்தர வேணுமையனே

பல்லவி

நயந்தர வேணுமையனே செயந் தருங் குன்றைமலைச்
செய்யனே துய்யனே (நயந்)

அநுபல்லவி

கானமினுள் மணவாளா வானவர் பணிதாளா (நயந்)

சரணம்

சங்கர ரருள்பாலா இங்கித மிகுலோலா
ஞான சம்பந்தனே மானவேற் கந்தனே (நயந்)

## 577. தாரா திருக்கலாமோ

பல்லவி

தாரா திருக்க லாமோ வனுபூதி தாராதிருக்க லாமோ
சீராருங் குன்றைச் செகண்டி மலையோனே (தாரா)

அநுபல்லவி

வானுடர் பணிதேவ சேனுபதி யோனே (தாரா)

சரணம்

வண்டடரும் மணத் தண்டலர் புனையும்
கொண்ட புயவ செகண்டி மலையோனே
தேமலரணி யுயர் நாம வடிவேலா
தாமரை நிகர்தாளா பூமலி மயில்நாதா (தாரா)

## 578. அனுபூதி தரவேணும்

பல்லவி

அனுபூதி தரவேணும் – மயின்மீது
மனதாக வரவேணும் (அனுபூதி)

சரணங்கள்

1 வடிவேலணியுங் கையா குன்றுக் குடிவாழு முருகையா
(அனுபூதி)

2 உந்தனைப் பணிவேற்கு முன்பு வந்தருண்மிகு வாக்கு
(அனுபூதி)

3 சோதியே சுடரொளியே யந்த ஆதியே பரவெளியே
(அனுபூதி)

## 579. காட்சி தந்தருளுவாய்

பல்லவி

காட்சி தந்தருளுவாய் நீட்சியான குன்றை மாமலைதனில்
வெகு
நேர்த்தியான தொரு கார்த்திகைத் திருநாளில் (காட்சி)

சரணங்கள்

1 அடியருக் குள்ளிவ னடியவன் தானென்று
ஆசைவலையினி லலையாம லின்று
வடிவுடையாருட மயல்தனிலே சென்று
மயங்காம லினிவந்தென் முனே நின்று (காட்சி)

2 தாதவிழ் தார்புனே தோளா சகல புவனங்களுந்தான்
புகழ்தாளா (காட்சி)
மாதரசி வள்ளி மங்கை மணாளா
வந்தடியர்க்கருள் வழங்குங் கணாளா (காட்சி)

3 தான வினைவென்று தழைத்திடும் வேலா
சருவ வுயிர்களைத்தான் காக்குஞ் சீலா
வானவர் முதலினேர் வணங்கிய காலா
வாலசண்முக நாதா மாதுமை பாலா (காட்சி)

## 580. செகதீசனே யாளாய்

பல்லவி

செகதீசனே யாளாய் வள்ளி சுகமாது மணாளா (செகதீச)

அநுபல்லவி

காரண வஸ்தே ஆரண வித்தே (செகதீச)

சரணம்

அந்தர வெளியே சுந்தர வொளியே
குன்றை யினாதா நன்றருள் பாதா (செகதீச)

## 581. வருத்த முனக்கேது

பல்லவி

வருத்தமுனக் கேது மனமே வருத்தமுனக் கேது
திருத்தமான குன்றைத் தேவனிருக்கும் போது (வருத்த)

சரணங்கள்

1 மாயப் பிறவியில் மாறிவீழாமல்
தீயதுன்பக் கடலில் சேர்ந்து முழுகாமல்
தீர்த்துக் கடைக் கண்ணால் பார்த்துக் கனவரஞ்
செய்து வருணமழை பெய்து ரட்சிப்பான் (வருத்த)

2 சாகரமாஞ் சமுசாரத்தின் மயங்கி
தேகமெல்லாந் துன்பத் தீயிற் றியங்கி
திரியுமதை நீக்கி யுரிமையுடன் வரஞ்
செய்து வருணமழை பெய்து ரட்சிப்பான் (வருத்த)

3 ஆவலுள்ள வள்ளியம்மை தன்னுதன்
தேவர் முனிவர்பணி சீர்மலர்ப்பாதன்
சித்திர மயிலிலேறும் சத்துரு சம்மாரன் அருள்
செய்து வருணமழை பெய்து ரட்சிப்பான் (வருத்த)

## 582. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் - விருப்பாக
மயின்மேல் வரவேணும் (திருப்)

சரணங்கள்

1 பயப்படாதே யென்று நயப்பட வின்று (திருப்)
2 ஒருத்தனே யெந்தன் கருத்தனே யுந்தன் (திருப்)
3 குன்றையின் மேரா நன்றருள் தீரா (திருப்)

## 583. வந்து வந்து அருள்செய் தாளாய்

பல்லவி

வந்து வந்து அருள்செய் தாளாய்
பந்துமுலை வள்ளிபாவை பங்காளா (வந்து)

சரணங்கள்

1 கனக தண்டையாடக் கதியடியர் கூட
எனது சிந்தை தேட எந்தனக்கு நலநீட (வந்து)
2 ஆதரவு செய்ய அடியனரி னியுய்ய
போதமிகு வய்ய தேவர் பூமழை பெய்ய (வந்து)
3 குன்றைமலைக் காதியே கூறரிய நீதியே
நன்றுநீள் சோதியே நாடவுணர் வாதியே (வந்து)

## 584. மயின்மீது வருவாய்

பல்லவி

மயின்மீது வருவாய் அடியேன்முன் மயின்மீது வருவாய்
குயின்மேவு பொழிற்குன்றைக்குடிக் குமரேசா (மயின்)

சரணங்கள்

1 ஆனந்தத் தாண்டவ ரருளிய பாலா வானந்தத் தேவர்கள்
வணங்கிய காலா (மயின்)

2 தானவருடனமர் சாடிய வீரா ஞானவரனுதினம் நாடிய
சீரா (மயின்)

3 ஆதிவஸ்து வாயமர்ந்திடு நாதா சோதிமயமாகத் துலங்கிய
கியாதா (மயின்)

## 585. சண்முகனை நம்புவாய்

பல்லவி

சண்முகனை நம்புவாய்
விண்முக முயருங் குன்றை மேரில் விளங்கிய (சண்முகனை)

சரணங்கள்

1 பாடிய பேர்க் கருடரும் நல்ல ஆடிய மயின்மீது வரும்
(சண்முகனை)

2 தறுகட் சூரனை வெல்லும் பணிந்த குறுமுனிக் குபதேசஞ்
சொல்லும் (சண்முகனை)

3 செந்தமிழதனையே கற்கும் குன்றை அந்த
மலைதனி னிற்கும் (சண்முகனை)

## 586. தந்ததே போதும்

பல்லவி

தந்ததே போதும் கந்தமிகு மலர்ப்பூங்கா வனஞ்சூழுஞ்
செகண்டி மலையானிவ னென்றெண்ணி (தந்ததே)

சரணங்கள்

1 பன்னாளு நின்னைப் பாடித் துதிப்பப்
பின்னாற் செய்வதெல்லாம் பிசகோ நிசமோ யிப்ப
(தந்ததே)

2 ஆண்டவனே யென்று அடிபணிந்து நின்று
வேண்டினவனையாம் விரும்பி விரும்பியின்று (தந்ததே)

3 சரவணபவ குக சத்குரு சங்காரா
பவளவிதழ்க் குறமின் பங்கிலுறை சிங்காரா (தந்ததே)

## 587. வருவாய் குகனே

பல்லவி

வருவாய் குகனே மகா வுருவாய் விளங்கிய வொளிரறு
முகனே (வருவாய்)

அநுபல்லவி

தாண்டவம் புரிமயிலா ஆளும் ஆண்டவனே யொயிலா
(வருவாய்)

சரணம்

சங்கரர் நற்புதனே சுக விங்கித வற்புதனே
தோகைமலைக் கரனே வெற்றி வாகை புனைதரனே
(வருவாய்)

## 588. உன் பாதமே நம்பினேன்

பல்லவி

உன் பாதமே நம்பினேன் என்பால் வரஞ் செய்வாயே
(உன்பாதமே)

சரணங்கள்

1 தண்டைச் சிலம்புகளணியும் அந்த அண்டர் முதலினர்
பணியும் (உன்பாதமே)

2 முனிவரர் முதலினோர் துதிக்கும் அன்பர் கனிவுடன்
நெஞ்சிற் பதிக்கும் (உன்பாதமே)

3 எங்கும் நிறைந்திடு தீபா மணந் தங்கு தமிழ்மலர் நீபா
(உன்பாதமே)

## 589. நயந்தர வேணும்

பல்லவி

நயந்தர வேணும் செயந்தகுந் தோகையிற் சேவகனேசாமி
(நயந்)

அநுபல்லவி

மங்கையுமை பாலா தங்க வடிவேலா (நயந்)

சரணம்

வள்ளி மணவாளா தெள்ளு தமிழாளா
தோகைமலை யோகா வாகைபுனை வாகா (நயந்)

## 590. நம்பின பேரைக் காப்பாய்

பல்லவி

நம்பின பேரைக் காப்பாய் பாத அம்பொன்மலரிற்
சேர்ப்பாய் (நம்பின)

சரணங்கள்

1 வானுடர் பணி தேவ சேனுபதியே கானுள் புணர்
புயதேனுர் நீபா (நம்பின)
2 யோகா முனிவரர் மோகா வதி ரூப வாகா பொடியணி
தேகா வுன்றனை (நம்பின)
3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றைமலை வளர் வென்றி
புனைவேலா நன்றி பெறவுனை (நம்பின)

## 591. சாமி தயவு செய்குவாய்

பல்லவி

சாமி தயவு செய்குவாய் பூமி புகழுங் குன்றைப்
புண்ணியனே சுப்பிர மண்ணியனே யெந்தன் (சாமி)

அநுபல்லவி

நடனராச ராசரருள் புத்திரா பணியுந் திடமிக்க வும்பர்
மித்திரா (சாமி)

சரணம்

மொய்குழற் குறமாது பாகா கிரண துய்ய வுதய சூரிய
தேகா
நன்றறி வுடையோர்க்குதாரா பொழில் மன்றல்மிகு
குன்றை மேரா (சாமி)

## 592. காத்து ரட்சிக்க வேணும்

பல்லவி

காத்து ரட்சிக்க வேணும்
நேர்த்தியுள்ள குன்றை நிர்மலனே யென்னைக் (காத்து)

அநுபல்லவி

சங்கர சண்முக சரவண பவனே
மங்கள கரமிகு வடிவுறுஞ் சிவனே (காத்து)

சரணம்

சோதியே சுடரே சுடரொளி வடிவே
ஆதியே யன்பர் நெஞ்சடரிருள் விடிவே
தோகை மலைவளர் சோதி சின்மயனே
வாகைபுனை வேலணி மன்னிய கையனே (காத்து)

## 593. சித்த மகிழ்ந்தருள்வாய்

பல்லவி

சித்த மகிழ்ந்தருள்வாய் முத்தியருள் குன்றை மூர்த்தி
கரா வரா (சித்த)

சரணங்கள்

1 கொச்சைக் குறமகளிச்சைக் கிசைந்திடு
பச்சை மயிற் குமரேசா யீசா (சித்த)
2 வம்பவிழ மேவு கடம்பணி மார்பமுன்
நம்புமடியார்க் கருள் வேலா லோலா (சித்த)
3 பொன்னுமலைநிகர் மின்னு மணிமுடி
துன்னு சிகிமலை வாசா பிரகாசா (சித்த)

## 594. மருக்குலவிய நீபா

பல்லவி

மருக்குலவிய நீபா திருப்பதம் பணிதரு தேவர்க்குப் பூபா
(மருக்)

சரணங்கள்

1 சந்திர முக விலாசா இந்திர மருகேசா
வந்தனுபூதிகள் தருவாயே (மருக்)
2 தேவர் சேனுபதியே மூவருட துதியே
யாவலா யடியேனைக் காவலாய் ரட்சிப்பாய் (மருக்)
3 குன்றுக் குடியோனே நன்றுறு முடியோனே
யின்றுதரவுசெய் மன்றுர் தருபுத்திரா (மருக்)

## 595. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் நயமிகுந்த குன்றை நாதனே
வேதனே
(தயவு)

அநுபல்லவி

அண்டர் முனிவரர் பணிபாதா நீபத் தண்டளிர் மாலையணி
நீதா (தயவு)

சரணம்

கானக மயிலி மணாளா திவ்விய நாண்மலரிணைத் தாளா
குன்ருக்குடிக்கொரு தேவே யென்னை நன்ருட்கொள
வருங்கோவே (தயவு)

## 596. வந்தாதரஞ் செய்குவாய்

பல்லவி

வந்தாதரஞ் செய்குவாய் கொந்தாரு மலர்ப்பொழிற்
குன்றைமலை நாதா (வந்தா)

சரணங்கள்

1 வாகன மடந்தையுங் கானக மடந்தையு மருவிய
புயனே யருளது புரிய (வந்தா)

2 வஞ்சக வசுரனை நெஞ்சம் விரிய வடிவேல் தொடுதேவா
அடியே னிடத்தினில் (வந்தா)

3 தழைத்திடும் பொழில்கள் விளைத்திடு குன்றை
தன்னில் வருமுருகா என்னிடமாகவே (வந்தா)

## 597. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா குன்ருக்குடி மேலவா (வடிவே)

சரணங்கள்

1 திருமகள் மருகா அருள் செய்குவாய் முருகா (வடிவே)

2 கையில் வரந்தருவாய் மயின்மிசை வருவாய் (வடிவே)

3 கனிவுடன் பரிவா யினி வரம் புரிவாய் (வடிவே)

## 598. பதந்தர வேணும்

பல்லவி

பதந்தர வேணும் நிதந்தயவாய் வந்து நின்னடியேனுக்குப்
(பதந்)

சரணங்கள்

1 சோதி மயமாகத் துலங்கிய வொளியே
ஆதியனுதியா யமர்ந்திடு வெளியே (பதந்)

2 அண்ட பகிரண்டம் யாவுமாய் நிறைந்தாய்
எண்டிசையும் வெளி யெங்குமாய் மறைந்தாய் (பதந்)

3 மாமலர்ப் பொழினிறை வளர்குன்ருக் குடியாய்
தேமலரணியாறு சேர்ந்த முடியாய் (பதந்)

## 599. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே தீர்க்கமானதொரு செகண்டிமலே
நாதா (காக்க)

சரணங்கள்

1 மூவர்க்கு முதலான மூர்த்தியே யாவர்க்கு மேலான
சீர்த்தியே (காக்க)

2 மிஞ்சிய மயிலேறி வந்து கஞ்சமலர்ப் பதந்தந்து (காக்க)

3 வானவர் தேடுந் தேட்டமே ஞானவர் நாடு நாட்டமே
(காக்க)

## 600. நாயகனே யெனேயாளாய்

பல்லவி

நாயகனே யெனேயாளாய் சேயனே யன்பர்கள் தேடிய
தாளா (நாயக)

அநுபல்லவி

கொங்குயர் செங்கடம்பங் கொண்டிடு புயனே
பொங்குமருட்கடற் புனித வென்னேயனே (நாயக)

சரணம்

தண்டைகளாட நிர்த்தனஞ் செயுமயிலா
அண்டர்கள் பணிசெயு மானந்த வொயிலா
கோகன கானனக் குளிர் மலர்ப்பாதா
மாகமுலாவு குன்றைமலேக் குகநாதா (நாயக)

## 601. தேடித் தேடிக் கண்டு கொண்டேனே

பல்லவி

தேடித் தேடிக் கண்டு கொண்டேனே
நாடித் திரிந்தேன் வெகுநாளா யிப்போது
நடிக்குமயிற் குன்றைக்குடிக்குளென்னையனைத் (தேடித்)

சரணங்கள்

1 அடுத்த பேர்களை யாதரித்து ரட்சிக்கும் ஐயனைப்
பன்னிரு கையனை
தொடுத்த படையுடன் வந்தெதிர்த்திடு சூரனை
வென்றிடு வீரனைத் (தேடித்)

2 திங்களணிசடிலத் தேவனருளிய சேயனைச் செந்தமிழ்
வாயனைத்
மங்களகர மிகு மைக்குழற் குறமயில் மாலனை வெகு
லோலனைத் (தேடித்)

3 வாசமிகுந்திடு மலர்ப்பொழிலுறை குன்றை மலையனை
ஞான கலையனை
நேசமிகுந்த வன்பர் நித்தியம் பரவிய நீதனை மலர்ப்
பாதனைத் (தேடித்)

## 602. எந்த விதத்திலும்

பல்லவி

எந்த விதத்திலு முந்தன் பதத்தினை யெப்போது
மறவேனே (எந்த)

அநுபல்லவி

கந்தமலர்க் குழற்பைந் தொடியாள் குறக்கன்னியை
யணைவோனே (எந்த)

சரணம்

போதில் வளரயன் காதிலுப தேசம் போதிக்குங் கனிவாயா
வாதின் மிகு சூரன் மீதிலயில் தொட்டு மார்பைப்
பிளக்குஞ்சேயா
கஞ்ச மலரடியை நெஞ்சினினைப்பவரைக் காத்து
ரட்சிக்கு நாதா
வஞ்சக வினைதனைப் பஞ்சு பஞ்சாய்ச் செய்து வாதிக்கு
மனுநீதா (எந்த)

## 603. சகல சீவ ரட்சகா

பல்லவி

சகலசீவ ரட்சகா செக அடியர்கள் பணி சிகிமலையானே (சகல)

அநுபல்லவி

வானவரடி தொழு மலர்ப் பதனே
தேனலர் கொன்றைமுடிச் சிவனருள் சுதனே (சகல)

சரணம்

சித்தர்கள் முத்தர்கள் தேடிய பொருளே
பத்தர்கள் சுத்தர்கள் பாடிய வருளே
தோகை மலைக்கிசைந்த சுந்தர ரூபா
வாகை புனைபுயவா மணமலி நீபா (சகல)

## 604. காண வேணும் நெஞ்சே

பல்லவி

காண வேணும் நெஞ்சே - கண்டு அன்பு பூண வேணும் நெஞ்சே (காண)

சரணங்கள்

1 தேடக் கிடையாத திவ்விய திரவியத்தை
நாடக் கிடையாத நலம்பெறும் வித்தைக் (காண)

2 எங்கு மொளிமயமா யிருக்குஞ் சின்மயனை
பொங்கு மன்பருக்கருள் புரியு நயனைக் (காண)

3 திருமலர்ப் பொழிலுறை தென்சிகி வாசனை
மருமலர் குழற்குற மாதுதன் நேசனைக் (காண)

## 605. தோத்திரஞ் செய்மனமே

பல்லவி

தோத்திரஞ் செய் மனமே தோத்திரஞ் செய்வது
மாத்திரம் போதும் (தோத்தி)

சரணங்கள்

1 கண்டருமையுடன் தொண்டர்கள் பணிபுரி
யண்டர் நாயகனைத் தண்டமிழாற் பாடித் (தோத்தி)

2 சித்தர் முனிவரர் முத்தரிமையவர்
பத்தர் பணிதரு கர்த்தனை வாயால் (தோத்தி)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றை மலைக்குகன்
நன்றருள் புரிவான் என்றும் நலம்பெறத் (தோத்தி)

## 606. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே வேறு துணையில்லையே (ஆறு)

சரணங்கள்

1 யாரிருக்கிருரெனக்கு நானடிமையைல்லவா வுனக்கு
தாரிருக்கும் புயனே யென்னைத் தானே ரட்சிப்
பையனே (ஆறு)

2 கொன்றையணியுஞ் சடையார் நாளுங் கோல மிகுந்த
விடையார்
நன்றியுள பாலா கதிர் நகும் வடிவேலா (ஆறு)

3 தோகை மலைக்குகந்தா ஆடுந் துங்கமயிற் கந்தா
வாகை புனையுந்தோளா என்முன் வந்தருள்
மலர்த்தாளா (ஆறு)

## 607. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா உனக்கடங்காத மேரை யொப்புஞ்
சிகேசா (துரைக்)

அநுபல்லவி

அனைத்துயிரையுங் காத்தருளுந் தயாளா
தினைப்புன மாதுக்காகத்திரிந்திடுந் தாளா (துரைக்)

சரணங்கள்

வணங்குமன்பர்களுக்கு மனவிருள் விடிவே
நுணங்கு மிடையார்கள் நோக்கிய வடிவே
சித்தர் முனிவர்கள் தியானிக்கு முருவே
பத்தர்கள்மிடிதீரப் பரிந்தருள் திருவே (துரைக்)

## 608. குகனே குகனே

பல்லவி

குகனே குகனே யாறு முகனே முகனே
அன்பு கொண்டருள்வாய் ஐயனே (குகனே)

சரணங்கள்

1 செகனே செகனே யரன் மகனே மகனே யருள்
செய்து ரட்சிக்க வேணும் (குகனே)

2 வேலா வேலா வுமை பாலா பாலா யெந்தன்
மீது தயவு செய்குவாய் (குகனே)

3 கோலா கோலா வள்ளி மாலா மாலா யென்முன்
கூர்ந்தருள் செய்ய வேணும் (குகனே)

4 கந்தா கந்தா ஞான சம்பந்தா பந்தா யென்னைக்
காத்துக் கதிதருவாய் (குகனே)

5 இந்தா யிந்தாவென்று சிந்தா சிந்தா குலமென்றைக்குத்
தீர்த்தருள்வாய் (குகனே)

## 609. என்னை யாள்வதெப்பய்யா

பல்லவி

என்னை யாள்வதெப்பய்யா பொன்னை நேருங் குன்றைப்
பொருப்புறை மெய்யா (என்னை)

சரணங்கள்

1 தாதவிழு நீபத்தாமமணிபுயனே
போத மெய்ஞ்ஞானர்க்கருள்புரி யிருதயனே (என்னை)

2 குன்றவில்லி யருள் கூர்ந்திடு புத்திரா
நன்றி செயும் பத்தர்க்கு நாடரு மித்திரா (என்னை)

3 குன்றை மலைக்குமர குருபர தேசிகா
என்று மன்பரைக் காக்குமெழின் முருகேசா (என்னை)

## 610. ஆறுமுக சிவனே

பல்லவி

ஆறுமுக சிவனே வேறு துணை யில்லார்க்கு மேன்மை
செய்பவனே (ஆறு)

சரணங்கள்

1 கண்டு பணிந்தே னென்னைக் காத்து ரட்சிப்பாயே
உண்டு பணியழிக்கு முண்மையவனீயே (ஆறு)

2 அடுத்திடும் பேர்க்கெல்லா மாதரப் பொருளே
தொடுக்கு மக்கியானியர்க்குத் தோன்றிய விருளே
(ஆறு)

3 கோடுயர் மலர்ப்பொழிற் குன்றை யின்றுரையே
தேடு மெந்தனக்கருள் செய்வதற்குரையே (ஆறு)

## 611. வானுயர் தோகை வரையாளா

பல்லவி

வானுயர் தோகை வரையாளா கானுயர் வேடமாது
கண்ணுளா (வானுயர்)

சரணங்கள்

1 ஆடகவரை விலாளி தருபாலா ஏடக மலரினீப
வெழில் வேலா (வானுயர்)

2 சமர சூரனுவிதகர்வோனே குமர வுல்லாச வார்த்தை
பகர்வோனே (வானுயர்)

## 612. ஒருதரம் சொன்னுற் போதும்

பல்லவி

ஒருதரஞ் சொன்னுற் போதும் நெஞ்சே நெஞ்சே
தருவனஞ் சூழுங் குன்றைச் சாமீ சாமீ யென்று (ஒருதரம்)

சரணங்கள்

1 கொங்கலர் நீபக் குளிர் மலரணி புயா
அங்கமிகு படைமாய வலறிட வென்ற சேயா
ஐயனே ஐயனே யென்று (ஒருதரம்)

2 ஆடிய மயிற்பரியதில் வருங்கோவே
தேடிய வன்பர்க்கருள் செய்திடுந் தேவே
செயனே செயனே என்று (ஒருதரம்)

3 பூங்கா வனமெங்கும் பொருந்து குன்ருக்குடியா
பாங்கான மலர் புனேபவ வாறு முடியா
பரனே பரனே யென்று (ஒருதரம்)

## 613. வன்னமயில் வாகனு

பல்லவி

வன்னமயில் வாகனு என்னை யாளுமையனே (வன்ன)

அநுபல்லவி

ஆரண வேதா அன்புகொள் பாதா
பூரண போதா புண்ணிய நாதா (வன்ன)

சரணம்

மாமலர்த் தாளா வள்ளி மணாளா
தேமலர்தோளா தென்றமிழாளா
சரு வதயாபரா சாமி குமரா
பருவமிகு மரா பார்வதி குமரா (வன்ன)

## 614. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே தீர்க்கமான குன்றைத் தேவனே
துய்யனே (காக்க)

சரணங்கள்

1 ஆளும்படி செய்யு மாண்டவனு நீயே
வாழும்படி செய்யு மன்னவனும் நீயே (காக்க)
2 அடியார்க் கெளியனுவது நீயே
குடி காக்கு மெந்தன் குலதெய்வமு நீயே (காக்க)
3 குன்ருக்குடிமலைக் கோவாவது நீயே
நன்ருகப் பார்த்தென்னை ரட்சிப்பது நீயே (காக்க)

## 615. எந்த வரம்

பல்லவி

எந்த வரம் வேணு மென்ருலு மந்த வரந்தருவார்
சொந்தமிகுங் குன்றைமலைக் கந்தசாமி யுந்
தன் மனம்போல (எந்த)

சரணங்கள்

1 தண்டைச் சதங்கையாட வுச்சிக் கொண்டையது வாட
மயில்மேற் சந்தமிக வந்து வுந்தன் மனப்படி (எந்த)
2 அன்பரெல்லாம் பணிந்து நிற்ப தென் கடப்ப மணிந்து
கொண்டு அந்தமுடன் வந்து வுந்தன் மனப்படி (எந்த)
3 குன்றை மலையிலிருந்து வெகு நன்றியுடனே வந்து
கரிய குந்தங் கையிலேந்தி யுந்தன் மனப்படி (எந்த)

## 616. தேடா திருக்காதே

பல்லவி

தேடா திருக்காதே மனமே தேடா திருக்காதே
வாடாத பொழிற்குன்றை வாழு மென்னையனைத் (தேடா)

சரணங்கள்

1 கங்கையைச் சூடிய கர்த்தருள் பாலனை
மங்கை குறமாது மருவிய லோலனைத் (தேடா)

2 வாசக் கமலனுக்கு வழுத்துபதேசனை
நாசப் படச்சூரை நைக்கும் பிரகாசனைத் (தேடா)

3 பொன்ருத மெய்ஞ்ஞானர் போற்றிய குகனை
குன்ருக் குடிமலைக் குமர சண்முகனைத் (தேடா)

## 617. பன்னிரு கையோனே

பல்லவி

பன்னிரு கையோனே உன்னிதமான குன்றைக்
குரியோனே (பன்னிரு)

சரணங்கள்

1 சூர பராக்கிரமத் தோடே யிறுமாந்தும்
வீரஞ் செயுஞ்சூரை வென்றிட வேலேந்தும் (பன்னிரு)

2 அடியவர் தங்களை யன்புடனே யுய்யும்
படியாய்த் தயவு பண்ணியருள் செய்யும் (பன்னிரு)

3 தென்புடனே வந்து தியானந் தினம்பண்ணும்
அன்பர்கள் தங்கட்கு ஆதரவு நண்ணும் (பன்னிரு)

## 618. நெஞ்ச மலையாதே

பல்லவி

நெஞ்ச மலையாதே – ஐயன்
தஞ்சமுண் டலையாதே (நெஞ்ச)

சரணங்கள்

1 பாதாம்புய சீலன் நான்கு வேதாந்த குணுளன் அவன்
வேண்டியபடி செய்து ஆண்டு கொள்வா னுன்னை
(நெஞ்ச)

2 வள்ளி மணவாளன் ஆடும் புள்ளி மயிலாளன் நல்ல
புண்ணியன் மனதிலெண் ணியபடி செய்வான் (நெஞ்ச)

3 குன்ருக்குடி குமரன் அன்பரை நன்ருட் கொளுதாரன் நீதா
ஞடிய படியாகத் தேடி வந்தருள் செய்வான் (நெஞ்ச)

## 619. எக்காலம் வருவாரே

பல்லவி

எக்காலம் வருவாரோ – வந்து
எந்தக் காலம் வரந்தரு வாரோ (எக்காலம்)

அநுபல்லவி

முக்காலமு முணர்முனிவரர் பணிபுரி
மூர்த்திகரன் குன்றை நேர்த்தியனே யெந்தன்முன் (எக்காலம்)

சரணங்கள்

1 எங்கும் பராபர வெளியாய் நிறைந்
திருக்கு மெய்ஞ்ஞான தீப வொளியாய்த்
தங்குங் கிருபா நிதி பொங்குங் கருணாநிதி (எக்காலம்)

2 சத்துரு சங்கார வேலன் மித்துரு பரிபாலன்
பாருல கெங்கணு நிறைந்தோன் அண்ட பகிரண்டப்
பரப்புஞ் சிறந்தோன்
தாரிலுயருநீப மாரிலணிந்திடும் தற்பர வொருசாமி
மெய்ப்பர குருசாமி (எக்காலம்)

3 ஆலய மாறிலு மிருப்போன் குன்றை யந்நகர் தன்னிலும்
விருப்போன்
வேலையணி கரத்தோன் சேலையுரு வெடுத்த விருத்தி
சேருங் கந்தன் (எக்காலம்)

## 620. என்னையா மெய்யனே

பல்லவி

என்னையா மெய்யனே மின்னையாளு முடிவிளங்குங்
குன்றைமலை
மீதில் வரு துய்யனே கோதிலருள் மெய்யனே (என்னையா)

சரணங்கள்

1 கானக் கரிய குழற்கன்னி மணாளனே
வானத்தவர் பணியு மாமலர்த் தாளனே
நானக் கடப்ப மெனு நகுமலர்த் தோளனே
மீனத்திலுயர் கீர்த்தி மேவிய நாளனே (என்னையா)

2 சங்கரற் கருளிய சாமி குருபரனே
மங்களகரர் உமை மாது புதல்வனே
துங்க வடிவேல் தங்கிய கரனே
துங்க வடியவர்க்கு சொல்லு நல்வரனே (என்னையா)

3 தொண்டர்கள் முனிவர்கள் தோத்திரப் பிரியனே
தண்டமிழ்ப் பொருள்கள் தங்கு மிருதயனே
வண்டனெனுஞ் சூரனை வதைக்குந் தயிரியனே
கொண்டல் படியுங் குன்றைக் குமர சின்மயனே (என்னையா)

## 621. பன்னிரு கரதலனே

பல்லவி

பன்னிரு தரதலனே – கடைக்கண்
பார்த்தருள்வாய் நலனே (பன்னிரு)

அநுபல்லவி

உன்னிதமான முடியுலவுங் குன்றைமலைக்
கொருத்தனே யெந்தன் கருத்தனே சாமி (பன்னிரு)

சரணங்கள்

1 சத்துரு சங்கார வேலாயுதனே நல்ல வுத்தமி யுமையவள்
சுதனே
சித்த மகிழ்ந்தரு ளற்புதனே பரிசுத்தனே மாமலர்ப் பதனே
(பன்னிரு)

2 புள்ளி மயிலேறுங் கோவே திவ்விய தெள்ளிய முத்தமிழ்ப்
பாவே
வள்ளி மருவிய தேவே யன்பர் அள்ளி முடித்திடும் பூவே
(பன்னிரு)

3 வனச மலரை நிகரடியாய் நீப மெனுமல ரணிதரு முடியாய்
கனக நவரெத்தினத் தொடியாய் ஒளி
யினமணி நகுங் குன்றுக் குடியாய் (பன்னிரு)

## 622. என்றைக்குனக்குக் கரிசனமோ

பல்லவி

என்றைக் குனக்குக் கரிசனமோ – அந்த
குன்றைக்கு வாய்த்த குகன் தெரிசனமே (என்றை)

சரணங்கள்

1 அன்புடனே யனுதினமே வெகு தென்புடனே யினி
மனமே (என்றை)

2 சென்ம மெடுத்து வந்தையே யந்த வன்மந் தீர்ந்திடச்
 சிந்தையே (என்றை)
3 மின் றயங்கிய மஞ்சை யுடைய மலையி னெஞ்சே (என்றை)

## 623. எந்தனை யாளாயோ

பல்லவி

எந்தனை யாளாயோ வுந்தனையே நித்தம் வந்தனை புரியும்
 (எந்தனை)

சரணங்கள்

1 முத்தே யொளியே நவரத்தினமே ரச முக்கனியே தேனே
 யென்று
 எத்தேச காலமும் போற்றிப் பணிபவர்க் கேற்கும்
 பெருமானே (எந்தனை)
2 சந்த மிகுந்திடு தண்டமிழ்ப் பதிகஞ் சாற்றிய சம்பந்தனே
 திவ்விய
 கந்த மிகுந்திடு கொன்றை மலரணி காரணனுர் மைந்தனே
 (எந்தனை)
3 மாலை முடித்தலை வானவர்களன்ர்கள் வந்து பணியடியாய்
 மலர்ச்
 சோலையில் மந்தி குதிக்கச் செந்தேன் கடுளிக்குங்
 குன்ருக் குடியாய் (எந்தனை)

## 624. எம்பெருமானே

பல்லவி

எம்பெருமானே நம்பினே ஞனே
அண்டர்கள் முனிவர்கள் துதிக்கும் (எம்)

அநுபல்லவி

அண்டர்கள் முனிவர்க ளன்புடன் துதிக்கும்
தொண்டர்கள் மனத்தினிற் றுலங்கவே யுதிக்கும் (எம்)

சரணம்

தண்டமிழ்ப் பதிகந்தான் சொலும் வாயா
வண்டனெனுஞ் சூரை வதைத்திடும் சேயா
குன்ருக் குடியிற் குமர குகேசா
மன்ருடியருளும் வளரும் பிரகாசா (எம்)

## 625. சகசலன ரட்சகனே

பல்லவி

சகலசன ரட்சகனே சுகமிகு முனிவரர் தோத்திரனே
(சகல)

சரணங்கள்

1 வஞ்ச வரக்கர்க ளஞ்ச வடர்த்திடு
மிஞ்சு மயிற்கர தஞ்சமெனக் கருள் (சகல)

2 வன்ன நிறைத்திடு சின்ன மயிற்பரியின் னலமுற்றவ
வுன்னருளைச் செய்வை (சகல)

3 மங்கள வற்புத துங்க வுமைக்கொடி
திங்கள் தரித்திடு சங்கரர் புத்திரா (சகல)

## 626. கருணா நிதியே

பல்லவி

கருணா நிதியே பொருணா வல்லவ ரன்புடன் துதிக்குந்
துதியே (கருணா)

அநுபல்லவி

கஞ்சமலரை நிகர்தாளா எனக்குத் தஞ்சமில்லை யினியாளாய்
(கருணா)

சரணம்

கானக மயிற்கொருபாகா அந்த வானக மயிற்கொரு பாகா
அடியவர் தங்களைக் காக்குங் குன்ருக் குடியிலிருந் தருட்கண்
பார்க்கும் (கருணா)

## 627. எத்தனை தெய்வங்க ளிருந்தாலும்

பல்லவி

எத்தனை தெய்வங்க ளிருந்தாலுங் - குன்றைக்
கர்த்தனைப் போல வருமோ (எத்தனை)

அநுபல்லவி

கர்த்தனைப் போல வருமோ
முத்தமிழாற்றுதி பத்தர்க்கருள் செய்ய (எத்தனை)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 உய்யவே யருள் செய்ய வேமுரு கையன் போலவே
வையமீ தினில் (எத்தனை)

2 துதிக்குந் தனது நெஞ்சிற் பதிக்கு மடியவர்க்கு
மதிக்கும்படி யருள் கதிக்கும்படி செய்ய (எத்தனை)
3 தண்டமிழாற்றுதி கொண்டனு தினம்பணி
தொண்டர வாவினைக் கண்டருள் புரிய (எத்தனை)

## 628. எந்தனிடத்தினில்

பல்லவி

எந்தனிடத்தினில் வருவாய் - வந்து
உந்தன் மலர்ப்பதந் தருவாய் (எந்த)

சரணங்கள்

1 விற்பன முனிவர்கள் தோத்திரா அருள்
அற்புதப் பன்னிரு நேத்திரா (எந்த)
2 செய்ய கடம்பணி தோளா வன்பர்
கொய்மலர் கொடுபணி தாளா (எந்த)

## 629. எத்தனை துன்பங்க ளிருந்தாலும்

பல்லவி

எத்தனை துன்பங்க ளிருந்தாலும் சாமி
அத்தனையும் பொடியாக்கிட வேணும் (எத்தனை)

சரணங்கள்

1 சொல்லினிய வள்ளி பங்கா பொருட்
பல்கலைக் கியானப் பிரசங்கா
துல்லிய மாகிய கங்கா தரர்
நல்மகவாய் வருதுங்கா (எத்தனை)
2 மாயவனுர் மகிழ் மருகா பத்தர்ச
காயவனுக் கிரக முருகா
தூய முனிவருக் கருகா வருள்
செயமயிற் பரிக் குருகா (எத்தனை)
3 தடவரைக் குன்றையி லிருந்து அன்ப
ரிடமனது வைத்து வந்து காக்கும்
நடனமயின் மீது சிறந்து இனி
அடியனிடத் தினிலு வந்து (எத்தனை)

## 630. வருவாய் குருபரனே

பல்லவி

வருவாய் குருபரனே வந்துவரந் தருவாய் குருபரனே
(வருவாய்)

அநுபல்லவி

சீராய கண நாதனே யுந்தன் கடைக்கண் பாராய் கண
நாதனே (வருவாய்)

சரணம்

ஆளாய் குமரேசனே யன்பர் பணி தாராய் குமரேசனே
கலையாய் பரநாதனே தென் செகண்டிச் சிலையாய் பரநாதனே
(வருவாய்)

## 631. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் அது வெனக்கு மெத்த நலமாகத்
தோணும் (சித்தந்)

அநுபல்லவி

கங்கை யணிபவர் புத்திரா துதித்து வணங்குமடியவர்கள்
மித்திரா (சித்தந்)

சரணம்

நித்திய சுபகர விலாசா நுனைச் சத்தியணி கரகுகேசா
பாங்கில் வளர் குறமானே புணர் ஓங்கிய குன்றை
மலைத்தேனே (சித்தந்)

## 632. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே கடைக்கண் பார்க்க வேணுமையனே
(காக்க)

அநுபல்லவி

பூதியணியுந் தோளனே குறமாதுதன் மணாளனே (காக்க)

சரணம்

என்னை யாளுந் தேவே தேவர் தன்னை யாளுங் கோவே
குன்றை மலைத்தேனே வெகு நன்றுயர் பெருமானே
(காக்க)

## 633. உய்ய வேணுமையனே

பல்லவி

உய்ய வேணுமையனே வையம் புகழுங் குன்றைமலை
வாசனே (உய்ய)

அநுபல்லவி

தாதவிழு நீபமலர்த் தாரனே மோதுமா சூரை முடித்திடும்
வீரனே (உய்ய)

சரணம்

சங்கரனு ரருளுந்திருப் பாலனே மங்கள குறமின் மேவிய
லோலனே
குன்றை மலைதனில் வந்திடு நாதனே நன்றரு ளன்பர்கள்
சிந்தித பாதனே (உய்ய)

## 634. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் பன்னிரு சுந்தரத் தோளாய் சங்கர பாலா
(எந்தனை)

அநுபல்லவி

சங்கரர் பாலா விரண்டு மங்கையர் லோலா (எந்தனை)

சரணம்

செந்திரு மருகா வென்முன் வந்தருள் முருகா
நன்றுள கலையா சிகரக் குன்றையின் மலையா (எந்தனை)

## 635. தரவேணு மையனே

பல்லவி

தரவேணு மையனே மயின்மீது வரவேணும் மெய்யனே (தர)

அநுபல்லவி

எதிர்சூரனை வெல் வேலவனே யன்பர் துதிபூமலர்க்
காலவனே (தர)

சரணம்

தூய கடம்பின் வாகனே குற நாயகி யாள்தன் பாகனே
தோகை மலைக்குகனே நல்ல ஓகைபுனை யுல்லாசனே (தர)

## 636. எனக்கருள்வாயே

பல்லவி

எனக்கருள்வாயே தனக்கிசை குன்றை மலைச்சாமி
யென்றுயே (எனக்)

அநுபல்லவி

கானகக் குறமானே புணர் தேனலர்ப் புயவோனே (எனக்)

சரணம்

அடியவர் தொழும் பாதா குன்றுக் குடிவளர் குருநாதா
பங்கய மயின் மருகா தமி ழிங்கித மிகுமுருகா (எனக்)

## 637. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் அப்ப கர்த்த னென்பது தோணும்
(சித்தந்)

அநுபல்லவி

அடியவர் துதி தோத்திரா குன்றுக் குடியெனுமொரு
க்ஷேத்திரா (சித்தந்)

சரணம்

வானவர் பணி சரணு நீப நாண்மலரா பரணு
கொண்டமயில் வாகா குறத்தி கண்டு மொழியாள் பாகா
(சித்தந்)

## 638. எந்தனை யாதரிப்பாய்

பல்லவி

எந்தனை யாதரிப்பாய் சுந்தர மிகுந்தோகை மலை நாதா
(எந்தனை)

அநுபல்லவி

பல்லுயிர்களைக் காக்கும் பரனே வேதஞ்
சொல்லரி தாகிய வரனே (எந்தனை)

சரணம்

அண்டர்கள் முனிவர்கடியானு திவ்விய
தண்டமிழ் முதவிய கியானு
வாகைபுனை சூரை வெல்கோவே முடித்
தோகை மலைக்கிசைந்த தேவே (எந்தனை)

## 639. வஞ்சகஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சகஞ் செய்யாதே மனமே மிஞ்சிய பொழிற்குன்றை
வேலனைப் பணிய (வஞ்ச)

சரணங்கள்

1 தருவன முனிவர்கள் தாந்தின மதிக்க
வருகுரு பரனையே வணங்கியே துதிக்க (வஞ்ச)

2 ஆண்டவனே யென்னு மன்பர்களுய்ய
வேண்டிய வரஞ்செய்யும் வேலனைத் துதிசெய்யு (வஞ்ச)

3 தீவினைகளை வெகு திறமுடனே மாற்ற
ஆவலுடனருள வன்புடன் போற்ற (வஞ்ச)

## 640. தேவர் தேவனே

பல்லவி

தேவர் தேவனே அந்த மூவர் மூவனே (தேவர்)

சரணங்கள்

1 கந்தனே கந்தனே ஞானசம்பந்தனே பந்தனே (தேவர்)

2 மேலனே மேலனே அரன் பாலனே பாலனே (தேவர்)

3 குகனே குகனே யாறு முகனே முகனே (தேவர்)

4 வீரனே வீரனே குன்றை மேரனே மேரனே (தேவர்)

## 641. கதிர் வேலனே

பல்லவி

கதிர் வேலனே யுமா பதிபாலனே வள்ளி மணாளனே (கதிர்)

அநுபல்லவி

வள்ளி மணவாளனே புள்ளி மயிலாளனே (கதிர்)

சரணம்

அன்பர்கள் சகாயனே யின்றமிழ் சொல்வாயனே
குன்றைமலை வாசனே நன்றுள பிரகாசனே (கதிர்)

## 642. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணு மினி யெந்தன் மனது தோணும்
(உந்தன்)

அநுபல்லவி

பன்னிரு கரதலனே கானக் கன்னி மருவு நலனே (உந்தன்)

சரணம்

சந்தத் தமிழ் சொல்வாயா செய்ய கந்தக் கடம்பணி சேயா
தோகை மலைக்குகேசா வெற்றி வாகை புனையுல்லாசா
(உந்தன்)

## 643. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் - நீப
வுருப்பொலியு மயில்மேலு வந்தென்முன் வரவேணும்
(திருப்)

சரணங்கள்

1 சாரங்கபாணி தன் மருகேசா மூன்று
பாரெங்குந் துதி கொள்ளுமுரு கேசா (திருப்)

2 அந்தர வானவர் கோவே வெகு
சுந்தர மாகிய தேவே (திருப்)

3 மன்றன் மலரணி தோளா தென்
குன்றையுறை மலர்த் தாளா (திருப்)

## 644. அடியவனையா

பல்லவி

அடியவனையா – குன்றுக்
குடிவளருந் துய்யா (அடியவ)

சரணங்கள்

1 பாவ முயற்சியைப் பண்ணுமலெந்தன்
ஆவலின் படியினியாதரிப்பா யுந்தன் (அடியவ)

2 கனக வடிவை நிதங்கருத்தினில் மதிக்கும்
தனது பதாம் புயந்தனை நிதந் துதிக்கும் (அடியவ)

3 குன்றுக்குடி மலைக்குக் குருபரனே
நன்றுட் கொண்டென்னை ரட்சிப்பாயய்யனே (அடியவ)

## 645. பாதத்தைக் கண்டு கொள்வாய்

பல்லவி

பாதத்தைக் கண்டு கொள்வாய் – மனமே
போதத்தை மிகுகுன்றைப் புண்ணியனைக் கண்டு (பாதத்)

சரணங்கள்

1 வள்ளிக் கிசைந்தோனை மயிற் புள்ளுக்குயர்ந் தோனைக் கண்டு (பாதத்)
2 அத்தி யுரித்தோனை நுனைச் சத்தி தரித்தோனைக் கண்டு (பாதத்)
3 குன்றையங் கிரியோனை மூவர்க் கென்றும் பெரியோனைக் கண்டு (பாதத்)

## 646. எப்படியும் வரந்தரவேணும்

பல்லவி

எப்படியும் வரந்தரவேணும் - நாளும்
ஒப்பரு மயின்மேலுடன் வரவேணும் (எப்படி)

அநுபல்லவி

ஆதி பராபர ரூபா மணத் தாத விழுமலர் நீபா (எப்படி)

சரணம்

சங்கர ரருளிய பாலா குற மங்கை மருவிய லோலா
சோலை நிறைந்த குன்றை மேரா மலர் மாலை நிறைந்த வலங்காரா (எப்படி)

## 647. எத்தனை நாளாய் நானடுத்தேன்

பல்லவி

எத்தனை நாளாய் நானடுத்தேன் - அடுத்து
முத்தமிழ் சொல்ல நான் தொடுத்தேன் (எத்தனை)

சரணம்

பத்ம சரணத்தைக் கண்டேன் கண்டு
நற்கருணையருள் கொண்டேன்
அடி தொழுவே னென்று துணிந்தேன் துணிந்து
முடியுறவே வீழ்ந்து பணிந்தேன்
தோகை மலைமுருகேசா வெற்றி
வாகைபுனை வள்ளி நேசா (எத்தனை)

## 648. கண்டான் முத்தி

பல்லவி

கண்டான்முத்தி யன்புடன் கொண்டான் சித்தி
வண்டார் பொழிற் குன்றைமலை முருகேசனைக் (கண்டான்)

அநுபல்லவி

வாச மிகுந்த நீப மாலை யணிபுயனை
நேச மிகுந்த வள்ளி நேரிழை நாயனைக் (கண்டான்)

சரணம்

கங்கையணி சடைக் கர்த்தர்தம் பாலனை
செங்கையினுற் சூரைச் செயித்திடும் வேலனை
மாமலர்ப் பொழிலுறை மயின்மலை நாதனைத்
தேமல ராகிய திவ்விய பாதனைக் (கண்டான்)

## 659. என்னைக் காக்க வேணும்

பல்லவி

என்னைக் காக்க வேணும்
பொன்னைப் போலுங் குன்றைப் பொருப்பிலு றைபவனே (என்னை)

அநுபல்லவி

மாமலர் நீபமென் மாலை யணிபுயனே
தாமரை மலர்நிகர் சரவண முருகையனே (என்னை)

சரணம்

அந்தர வான வரடியவர் பணி பாதா
சுந்தரமுக மலர்த் தூய சண்முக நாதா
திருமுடி யுலவிய சிகிமலை வாசா
மருவுலவிய குறமயில் மகிழ்நேசா (என்னை)

## 650. எப்படியு மருள்வேலா

பல்லவி

எப்படியு மருள்வேலா
மைப்படியுங் கண்டர் மகிழ்தரு பாலா (எப்படி)

சரணங்கள்:

1 உந்தன் திருவடியே பணியும்
எந்தன் மனப்படியே (எப்படி)
2 சங்கையிலா வொளியே அண்ட
மெங்கு நிறை வெளியே (எப்படி)
3 குன்றுக்குடியோனே அன்பரை
நன்றுட் கொளடி யோனே (எப்படி)

## 651. அருடர வேணும்

பல்லவி

அருடர வேணும் – எந்தன் மன
விருடீர வேணும் (அருடர)

சரணங்கள்

1 கானக மாது மேவிய ஞான விப்போது (அருடர)

2 சங்கரர் பாலா யென்னையாளா யிங்கித லோலா (அருடர)

3 அடியவனையா குன்ருக் குடிமலை மெய்யா (அருடர)

## 652. ஆண்டவனே யென்னையாளாய்

பல்லவி

ஆண்டவனே யென்னையாளாய் – நிதநிதம்
வேண்டிய பேர்க்கருள் தாளாய் (ஆண்ட)

சரணங்கள்

1 தற்பரமாகிய ரூபா வெங்கு நிறை அற்புதமாகிய தீபா (ஆண்ட)

2 குமர குருபர குகனே வானத்து அமரர் பணியாறு முகனே (ஆண்ட)

3 தோகைமலை தனக்கிசைந்த வெற்றி யெனும் வாகை புனைபுய சொந்த (ஆண்ட)

## 653. திருப்பதந் தருவாய்

பல்லவி

திருப்பதந் தருவாய்
தருப்பொலி குன்றைய வென்றன் முன் வருவாய் (திருப்)

சரணங்கள்

1 தஞ்சம் வேறில்லை யென்சாமி யினி யெந்தன்
நெஞ்சினினைத்தபடி நிர்மலனே யுந்தன் (திருப்)

2 கோதண்ட மேந்திய கோவிந்தன் மருகா
மூதண்டமும் புகழ் மூர்த்திக முருகா (திருப்)

3 குன்ருக் குடிமலைக் குமர குருபரா
நன்ருட் கொளவேணும் நாதா மகேசுவரா (திருப்)

## 654. ஆதரித்தென்னை யாளுவாய்

பல்லவி

ஆதரித்தென்னை யாளுவாய் – குன்றை
மீதிலற்பொடு வாழுவாய் (ஆதரித்)

அநுபல்லவி

அதிக விச்சையை நாடுவாய் திவ்விய பதிக முத்தமிழ்
பாடுவாய் (ஆதரித்)

சரணம்

எங்கும் நிறைந்த பரனே சோதி தங்குஞ் சிறந்த வரனே
குன்றை மலையின் றேனே நாளும் நன்றிசேர் பெருமானே
(ஆதரித்)

## 655. அருடர வேணும்

பல்லவி

அருடர வேணும் பார்க்கும்
பெருமிதந் தோணும் (அருடர)

அநுபல்லவி

மறைபுகழ் பாதா வென்றன்
குறைதீர நாதா (அருடர)

சரணங்கள்

1 ஆரணப் பொருளே பணிவோர்
காரணத்தெருளே (அருடர)

2 கோதண்டர் மருகா சிகியெனும்
வேதண்ட முருகா (அருடர)

## 656. தரவேணு மையனே

பல்லவி

தரவேணு மையனே யடியன்முன்
வரவேணு மெய்யனே (தரவே)

அநுபல்லவி

ஆலமுண்டவர் பாலா மருகனென
ஞால முண்டவர் மாலா (தரவே)

சரணம்

ஆடுஞ் சிறைமயிலா கானத்தில்
கூடுங்குற மிஞெயிலா
தோகை மலேக் கந்தா மாவை வென்று
வாகை புனே சம்பந்தா (தரவே)

## 657. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனதே - கரிய
மஞ்சார் குன்றைமலே மன்னவன்றனதே (அஞ்சாதே)

சரணங்கள்

1 வானவர் தங்களதிபன் பரவும்
ஞானவர்தங்கணிதிபன்
மயின்மிசை வருவான்
கையில் வரந்தருவான் (அஞ்சாதே)

2 சங்கர ரருள் பாலன் திவ்விய
விங்கிதமிகும் லோலன்
தயவுடன் காப்பான்
நயமுடன் பார்ப்பான் (அஞ்சாதே)

3 அடியவர் மஞேகரன் குன்ருக்
குடிவளர் குருபரன்
அடல் வேலனுருக்க
முடஞக விருக்க (அஞ்சாதே)

## 658. சித்தந் திரும்பையா

பல்லவி

சித்தந் திரும்பையா - நல்ல
உத்தமனே ஐயா (சித்தந்)

சரணங்கள்

1 ஞான சம்பந்தா வுமை
மானருள் மைந்தா (சித்தந்)

2 அண்டர்கள் நாதா அன்பர்
தண்டஞ் செய்பாதா (சித்தந்)

3 குன்றையின் மேரா நாளும்
நன்றிசேர் தீரா (சித்தந்)

## 659. அதுபோதும் நெஞ்சே

பல்லவி

அதுபோதும் நெஞ்சே - குன்றைப்
பதிவளரு மையன் பாத முண்டஞ்சேல் (அது)

சரணங்கள்

1 வஞ்ச வினைகளை மாற்றுவான்
அஞ்சும் பிறவியைத் தூற்றுவான் (அது)

2 பொல்லாத நோய்களைப் போக்குவான்
செல்லா தெல்லாந் தேக்குவான் (அது)

3 வன்ன மயின் மீது வருவான் உன் தன்னுட
மனம் போற்றருவான் (அது)

## 660. சரணஞ் சரண மென்றேன்

பல்லவி

சரணஞ் சரண மென்றேன்
பிரணவத்தின் பொருளே துய்யா (சரணஞ்)

சரணங்கள்

1 கால தூதர் வருமுன்னே
சீல முடனுக வுன்னைச் (சரணஞ்)

2 ஐயமுந்தும் போதே யென்றன்
நொய்யதாவிபோ முனுந்தன்னை (சரணஞ்)

3 மன்றல் மலர்ப் பொழிலுந்து
குன்றைமலை யினில் வந்து (சரணஞ்)

## 661. நம்பினேனையா

பல்லவி

நம்பினேனையா உந்தன்
அன்பனுனையா (நம்பி)

அநுபல்லவி

கான மயிலி தோளா
வானவர் பணிதாளா (நம்பி)

சரணம்

செச்சை யணியும் வாகா
பச்சை மயிலின் யோகா
தோகை மலையின் வாசா
ஓகை புனையுல்லாசா (நம்பி)

## 662. ஐயா வுனை நம்பினேன்

பல்லவி

ஐயா வுனை நம்பினேன்
மெய்யாரப் பணிந்தருள் செய்யாய் செய்யா யென்று (ஐயா)

சரணங்கள்

1 கருமுகிலான தொரு கண்ணுதிரு
மருமகனென வருவடிவேலவா முரு (ஐயா)

2 அடியவர் மனதினிலனுதின மெண்ணிய
படியனுக்கிரகம் பண்ணு சுப்பிரமணிய (ஐயா)

3 பாகுன் மொழிக் குறப்பாவை மணாள வடி
வாகிய முடிநிறை மருவிய குன்ருக்குடி (ஐயா)

## 663. எந்தன் முன் வருவாய்

பல்லவி

எந்தன் முன் வருவாய் வந்து
முந்தருள் தருவாய் (எந்தன்)

அநுபல்லவி

பரம பதத்தோனே யடியவர்
சிரமந் தவிர்த்தோனே (எந்தன்)

சரணம்

கொச்சைக் குறத்தி பாகா அன்பர்க
ளிச்சைக் கிசைந்த யோகா
தோகை மலைத்துரையே யெந்தனிடம்
ஓகைதனையுரையே (எந்தன்)

## 664. நயந்தர வேணும்

பல்லவி

நயந்தர வேணும் பெருமானே
செயந்தர மாவினைச் செயித்திடு வோனே (நயந்)

அநுபல்லவி

ஆடிய மயிற் பரியா யன்பர் தேடிடவே யரியாய்
வாடிடை மானுக்குரியாய் நாடிட மூவர்க்கும் பெரியாய்
(நயந்)

சரணம்

அள்ளிலை நெட்டயிலோனே தெள்ளுதமிழ்ப் பெருமானே
வள்ளலே முருகோனே விள்ளரிய தேவோனே
குன்றுக் குடியாளா யென்றுட் கொளுவை மாளா
தின்று தரிதாளா மின்றுனிகர் தோளா (நயந்)

## 665. அத்தனே யென்னையாளாய்

பல்லவி

அத்தனே யென்னை யாளாய் முத்தனே மலர்த்தாளா
(அத்தனே)

அநுபல்லவி

காப்பதே பெரிது என்னைச் சேர்ப்பதே யரிது (அத்தனே)

சரணம்

தொண்டர் நாதனே யருள் கொண்ட பாதனே
குன்றை வாசனே மின்னூர் துன்று நேசனே (அத்தனே)

## 666. ஆண்டவனைப் பணிவாய்

பல்லவி

ஆண்டவனைப் பணிவாய் நெஞ்சே யுண்டு
வேண்டிய தெல்லாந் துணிவாய் (ஆண்ட)

அநுபல்லவி

கோதண்ட பாணியன் மருகனை யிந்த மூதண்ட முந்துதி
முருகனை (ஆண்ட)

சரணம்

கானக் குறத்திபுணர் லோலனை சூருடல் தானத்திட
விடுவேலனை
தோகை மலைக்குள் மின்னுந் தீபனை வெற்றி வாகையுடன்
புனை நீபனை (ஆண்ட)

## 667. திருப்பதந்தனைத் தருவாய்

பல்லவி

திருப்பதந்தனைத் தாராய் – குன்றைப்
பொருப்பிலிருந்து வாராய்
புள்ளிமயிலின் வாகா வள்ளியம்மை பாகா (திருப்)

சரணங்கள்

1 மாயவனுர் மருகேசா அன்பர் நேயமிகு முருகேசா (திருப்)

2 குன்ருக் குடிமலை வாசா நன்ருட்கொளும் பிரகாசா (திருப்)

## 668. ஐயனை மறவாதே

பல்லவி

ஐயனை மறவாதே மனமே மெய்யனைக் குன்றைமலை
வேலனைத் தினமே (ஐயனை)

சரணங்கள்

1 சூருடன் எதிர்த்த துலங்கிய வயிலனைப்
பாருடன் மூவுலகும் பரவிய மயிலனை (ஐயனை)

2 சங்கர ரருளிய சரவணபவனை
திங்கள் தனை யணி திவ்விய சிவனை (ஐயனை)

3 தோகைமலைக் கிசைந்த தூய சண்முகனை
வாகை தரித்த புய மற்புய குகனை (ஐயனை)

## 669. தந்ததே போதும்

பல்லவி

தந்ததேபோதும் எந்தன்முன் வந்ததே போதும் (தந்ததே)

சரணங்கள்

1 வாசமிகுந்த நீப மாலை யணியுந்தோளா
நேச மிகுந்த வள்ளி நேரிழை மணவாளா (தந்ததே)

2 எங்கும் நிறைவாக விருக்கின்ற வொளியே
தங்கும் பிரகாசந் தழைக்கின்ற வெளியே (தந்ததே)

3 குன்ருக் குடிமலைக் குமர குருபரா
நன்ருட் கொண்டருணல்குமரகரா (தந்ததே)

## 670. வேருதரவுண்டோ

பல்லவி

வேருதரவுண்டோ மாருய் வருஞ் சூரை மாய்த்தவனே
சாமி (வேரு)

சரணங்கள்

1 வதைப்பே னென்றுடல் சிதைக்க வந்தாலும்
உதைப்பே னென்றுடன் பதைக்க வந்தாலும்
உந்தனையல்லாது எந்தனை ரட்சிக்க (வேரு)

2 ஏவல் பில்லி சூனியந் தாவச் செய்தாலும்
பாவ வினையது மேவச் செய்தாலும்
பரனே யுன்னுடைய வரனே யல்லாது (வேரு)

3 தீய பிணி வந்து சாயினுஞ் சாயினும்
காய மக்கியானத்திற்ருேயினுந் தோயினும்
கர்த்தனே யுன்னுட சித்த மல்லாது (வேரு)

## 671. ஆறுமுகச் சிவனே

பல்லவி

ஆறுமுகச் சிவனே கூறுஞ் சரவணனே (ஆறு)

அநுபல்லவி

பஞ்சாட்சர வடிவே யன்பர் நெஞ்சாரிருள் விடிவே (ஆறு)

சரணம்

உத்தமியுமை புத்திரனே ஞான வித்தெனும் யோகர்
மித்திரனே (ஆறு)
தோகை மலைக்கிறையே வெற்றி வாகைய ஞான மறையே
(ஆறு)

## 672. ஆரு துணை ஐயனே

பல்லவி

ஆரு துணை ஐயனே சீரருள் குன்றைமலைத் தேவனே
(ஆரு)

சரணங்கள்

1 கந்தமலர் நீபா தேவர்க்கு சொந்தமிகு பூபா (ஆரு)
2 அஞ்ச வேண்டாமென்று சொல்ல நெஞ்ச மகிழ்ந்தின்று
(ஆரு)

3 ஐயனே மெய்யனே குன்றையின்வேற் கையனே
துய்யனே (ஆரு)

## 673. முருகையா வுனை நம்பினேன்

பல்லவி

முருகையா வுனை நம்பினேன் - பன்
னிருகையால் வேலெடுத் தென்றன் முன்வந்தருள்
(முருகையா)

சரணங்கள்

1 பாத பங்கயந்தனைப் பத்தியாய் நித்தியம்
சீதமலர் கொண்டருச் சிப்பவர்க்கற்புத (முருகையா)

2 அடுத்தவர் தங்களை யாண்டருளாண்டவ
தொடுத்த வினைகளை யெல்லாந் தூள் செய்தாளுபவ
(முருகையா)

3 அந்த மிகுந்த குன்றை ஐயனே மெய்யனே
சொந்த வடியவர்கள் தோத்திரனே க்ஷேத்திரனே
(முருகையா)

## 674. ஆபத்தைத் தீரய்யனே

பல்லவி

ஆபத்தைத் தீரய்யனே ஞானத்
தீபத்தை நிகரான தேவ கண் பாரய்யனே (ஆபத்தை)

சரணங்கள்

1 தெள்ளு தமிழ்ச் சொல்வாயா குறவள்ளி மருவு நேயா
(ஆபத்தை)

2 சங்கத்திலொருத்தனாய் வந்தாய் வந்து
அங்கவர்க்கருளினிது தந்தாய் (ஆபத்தை)

3 மங்கள மிகுந்த சிசேசா ஆடுந் துங்க மயிலின் குகேசா
(ஆபத்தை)

## 675. இந்த வேளை வந்தருள்

பல்லவி

இந்த வேளை வந்தருள் செய்வாய்
அந்த வேளை வென்ற வனருளையனே மெய்யனே (இந்த)

சரணங்கள்

1 ஆடு மயிலேறி விளையாடு முருகையா
தேடு மயிலாள் குறமின் கூடு நல மெய்யா (இந்த)

2 சங்கர சண்முக குமரதுங்கமிகு நாதா
திங்கள் நிறைவதன நய செங்கமலப்பாதா (இந்த)

3 மன்றன் மலர்ச்சோலை நிறை குன்றைமலை வாசா
நன்றிதனை யன்பர்க்கு என்று மருளீசா (இந்த)

## 676. சமயஞ் சமயமய்யா

பல்லவி

சமயஞ் சமயமய்யா அமரர் பணி குன்றையாதிபா
நீதிபா (சமயஞ்)

அநுபல்லவி

சங்கரரருள் புத்திரா பணி செய்யுந் துங்கவடியர் மித்திரா
(சமயஞ்)

சரணம்

தண்டமிழ் பாடிய வாயா குற வண்டணி குழன் மினுள் நேயா
உன்னையல்லால் கதியில்லையய்யா வினி நன்னயவொரு
வார்த்தை சொல்லையா (சமயஞ்)

## 677. நித்தந் தரிசனந் தருவாய்

பல்லவி

நித்தந் தரிசனந் தருவாய் எந்தன் சித்த மனப்படி தருவாய்
(நித்தந்)

சரணங்கள்

1 சுத்தமிகு வுந்தனுக்கு நாளும் பத்தனுன எந்தனுக்கு
(நிந்தந்)

2 அன்பர் பணிதரு பாதா நல்ல வின்பமிகு செகநாதா
(நித்தந்)

3 வேலாயுதா வுயர் விண்ணுக்கு முடி மேலார் சிகியவென்
கண்ணுக்கு (நித்தந்)

## 678. நெஞ்ச மிரங்கவில்லையா

பல்லவி

நெஞ்ச மிரங்கவில்லையா வுந்தன் தஞ்சமொருசொல்
சொல்லையா (நெஞ்ச)

அநுபல்லவி

அருமறை புகழ் சரணு நீப மருமல ராபரணு (நெஞ்ச)

சரணம்

எந்தனைக் காக்கு நாதனே யன்பர் வந்தனை புரிபாதனே
குன்றைக்குடி வாசனே குற மன்றற் குழலிநேசனே (நெஞ்ச)

## 679. தயவுசெய் ஐயனே

பல்லவி

தயவு செய் ஐயனே சின் மய சொருப மெய்யனே (தயவு)

அநுபல்லவி

அண்டர் பணி நாதனே நல்ல தொண்டர் பணி பாதனே
(தயவு)

சரணம்

தெள்ளு தமிழாளனே திவ்விய வள்ளி மணவாளனே
குன்ருக்குடி வாசனே யெனை நன்ருட் கொளு நேசனே
(தயவு)

## 680. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் யன்பர் வந்தனை செயுந்தாளா (எந்தனை)

சரணங்கள்

1 கருத்தினினைத்த தெல்லாம் விருப்பொடுதவி செயு
மொருத்தனே நடஞ்செயும் பருத்த மயிலில் வந்து
(எந்தனை)
2 கோகனகமலர் போகிய விருதாளா
மோகமிகும் வள்ளி சினேகிதமுடன் வந்து (எந்தனை)
3 திங்கட வழுஞ்சோலை யெங்கும் வளாஞ் செறியும்
தங்கமயமாங்குன்றைத் துங்கமலையிருந்து (எந்தனை)

## 681. இன்னந் தயவு செய்வாய்

பல்லவி

இன்னந் தயவு செய்வாய்
பொன்னங்கிரி போலப் பொருந்துங் குன்றைமலையாய்
(இன்னந்)

சரணங்கள்

1 பத்தினி குறமகள் லோலா முல்லை முத்து நகை
யுமை பாலா
(இன்னந்

2 கூறுபடு வேலாலன்றோ வெதிர் மாறுபடு சூரை வென்றாய் (இன்னந்)

3 மங்கள மலர் நீப முடியாய் மிகுந்த கொங்கலர் பொழிற் குன்றக்குடியாய் (இன்னந்)

## 682. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் மருக்குலவு நீப மார்பா முன் வருவாய் (திருப்)

சரணங்கள்

1 தேனலர் முடிவானவனருள் மானனேய தெய்வானை மணாளா (திருப்)

2 கண்டருளோடு வண்டலர்கொடு அண்டர் முனிவரர் தொண்டர் பணியுந் (திருப்)

## 683. எந்த வேளையும் வந்தருள் செய்குவாய்

பல்லவி

எந்த வேளையும் வந்தருள் செய்குவாய் (எந்த)

அநுபல்லவி

இந்த வேளை யெந்தன் அடியனென்று நினைந்து நன்றுடன் (எந்த)

சரணங்கள்

1 வாசக்குழலி நேசக்குறத்தி ஆசைக்கிசை பிரகாசத் துரையே (எந்த)

2 கர்த்தனே பரிசுத்தனே யினி மெத்தவுனது சித்தமிரங்கி (எந்த)

3 கலைக்குறு முனி நிலைக்குபதேசா சிலைக்குயர் குன்றை மலைக் குமரேசா (எந்த)

## 684. நெஞ்சிரங்க வேணும்

பல்லவி

நெஞ்சிரங்கவேணும் மஞ்சு சூழ் சிகிமலைக் குமரேசா (நெஞ்சி)

அநுபல்லவி

ஞானவர் முதலினர் பூசிதா வானவர் முதலினர் நேசிதா (நெஞ்சி)

சரணம்

கஞ்ச மலரிணைப் பாதா தஞ்சமினியில்லை நீதா
வாகை புனைபுயத்தேவே தோகைமலை வருகோர்வே (நெஞ்சி)

## 685. வரந்தர வேணுமையனே

பல்லவி

வரந்தர வேணுமையனே நிரந்தரமான துய்யனே. (வரந்)

அநுபல்லவி

செந்தமிழுந்து வாயனே குறமாது சொந்தமிகுந்த நேயனே (வரந்)

சரணம்

எங்கு மிலங்கு நாதனே யனுக்கிரகம் பொங்கு மெய்தங்கும் பாதனே
வாகை கொண்டாகை வேலனே யென்னுளும் ஓகை கொள் தோகை மேலனே (வரந்)

## 686. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே மஞ்சார் குன்றைமலை மன்னனிருக்கத் தினமே (அஞ்சா)

சரணங்கள்

1 ஓகை புனை யொயிலோன் தோகை புனை மயிலோன்
சுந்தர வேளிருக்க எந்த வேளையும் நீ (அஞ்சா)

2 துலங்கிய வேலன் இலங்கிய கோலன்
என்னை யனிருக்கப் பின்னையொன்றுக்கு நீ (அஞ்சா)

3 அமரர் பணியரன் குமர குருபரன்
குன்றை மலையன் என்று மிருக்க நீ (அஞ்சா)

## 687. காணுவ தெந்நாளோ

பல்லவி

காணுவ தெந்நாளோ ஆளுங் குன்றைமலை ஐயனை மெய்யுனைக் (காணு)

சரணங்கள்

1 பத்தர்களுக் கருளுத்தமனைப் பரி சுத்தனை மிகுந்த
கர்த்தனைக் கண்ணுற் (காணு)

2 சேவலங் கொடி யோனைப் பாவலனை யன்பர்
காவலனை மூவர் தேவர் கடேவனைக் (காணு)

3 ஈசனை யருட் குமரேசனை யிலங்கும் பிர
காசனைக் குன்றைமலை வாசனைக் குறமகள் நேசனைத்
தினமே (காணு)

## 688. எந்தனை யாளுமையனே

பல்லவி

எந்தனை யாளுமையனே - குன்றைச்
சொந்தமலை வாழு மெய்யனே (எந்தனை)

அநுபல்லவி

கானக் குறத்தி மாலா அந்த வானத்தவர் பணி கோலா
(எந்தனை)

சரணம்

அன்பனென வெண்ணிச் சேர்த்து வெகு
தென்புடன் கடைக்கண் பார்த்து
தங்கமெனும் பிரகாசா குன்றைத் துங்க மலையின் வாசா
(எந்தனை)

## 689. உத்தரந் தனிற்றுனே

பல்லவி

உத்தரந் தனிற்றுனே யெனக்கொருத் தரஞ்சேன் மானே
(உத்தரந்)

சரணங்கள்

1 தஞ்சமெனக் கினியில்லையா வென்னிட மிஞ்சிய நோய்தனை
வெல்லையா (உத்தரந்)

2 தோகை மலையின் வாசனே வெற்றி வாகைபுனை
குகேசனே (உத்தரந்)

3 அண்டர் முனிவர் நாதனே சேர்ந்த தொண்டர் பரவும்
பாதனே (உத்தரந்)

## 690. உந்தன் பாதமலர் தாராய்

பல்லவி

உந்தன் பாதமலர் தாராய் - எனக்கு
வந்த உபத்திரத்தைத் தீராய் (உந்தன்)

அநுபல்லவி

சந்த மிகுந்த நாவலனே குறத்தி சொந்த மிகுந்த காவலனே (உந்தன்)

சரணம்

வானவர் பணிபுரி தாளனே ஞானத் தமிழ்சொல்லும்
வாயனே
இனி யெந்தப் படியுமருள் சேயனே குன்றைமலைக்
குமரேசனே அன்பரை
என்றைக்குங் காக்கும் அமரேசனே (உந்தன்)

## 691. எந்தன் மனப்படி வருவாய்

பல்லவி

எந்தன் மனப்படி வருவாய் - உந்தன்
சிந்தை யிசை வுப்படி தருவாய் (எந்தன்)

அநுபல்லவி

வர்ன மயிற் பரியாளா நாளும் என்னை யாண்டருள் தயாளா (எந்தன்)

சரணம்

காக்குந் தெய்வ மெல்லாம் நீயே காத்துண் டாக்கும்படி
வந்தாயே
அடியவர் தங்கள் சகாயா குன்றுக் குடிவளருங் கார்த்திகேயர (எந்தன்)

## 692. ஏது தயவு செய்யுமோ

பல்லவி

ஏது தயவு செய்யுமோ வதுபோதும் போதுமய்யனே
எந்தன் மனக்கவலை தீர (ஏது)

அநுபல்லவி

எந்தன் மனக்கவலை தீர வென்றும் – உந்தன்
பதாம்புயஞ் சேர (ஏது)

சரணம்

துன்பமெல்லா மொழிந்திருக்க நல்ல வின்பமெல்லா
நிறைந்து பெருக்க
குன்றுக் குடிவரு தேவே யன்பரை நன்றுட் கொளுமெந்தன்
கோவே (ஏது)

## 693. செகண்டிமலே யாரணு

பல்லவி

செகண்டிமலே யாரணு அகண்ட பரிபூரணு ஆதிபராபரனே
(செகண்டி)

அநுபல்லவி

ஆதிபராபரனே யெங்குஞ் சோதிமிகு மரனே (செகண்டி)

சரணம்

கரையிலா வருள் வெள்ளமே கண்டு உரையிலா
ருடவுள்ளமே
தேடக் கிடையாத தேனே பெரியோர் நாடக் கிடையா
மானே (செகண்டி)

## 694. எப்ப மனம் வருமோ

பல்லவி

எப்ப மனம் வருமோ – ஐயனெனக்
கெப்பவருள் தருமோ (எப்ப)

சரணங்கள்

1 எந்த விதத்திற் காக்குமோ வெந்தனே
எந்த விதத்திற் சேர்க்குமோ (எப்ப)
2 எந்நாளெனக் கருளுமோ என்சாமி
எந்நாளெனக்குத் தருமோ (எப்ப)

## 695. மனக் கவலேயைத் தீராய்

பல்லவி

மனக் கவலேயைத் தீராய் பனிக்கமல மலரின் பன்னிருகண்
பாராய் (மனக்)

அநுபல்லவி

ஆறிரு புயனே வீறுள செயனே ஆண்டவனே யுன்னே
வேண்டின வனேயா (மனக்)

சரணம்

கானக் குறத்தி தோளா வானத்தர் பணிதாளா
கடைக்கண்ணுற் பாருந் தனடைக் கலநாளையா
வாகைபுனே வேலா ஓகைபுனே கோலா
வன்ன மயிலிற் பரியாய் உன்னை நம்பினேன் (மனக்)

## 696. அடியருக் காதாரா

பல்லவி

அடியருக் காதாரா - வடியயில் வீரா
அடியருக் காதாரா (அடிய)

சரணங்கள்

1 வானவர் பணியுங் கந்தா ஞானவர் பணி சம்பந்தா
மதுரிதச் சொல்லா சதுர்மறைப் பொருளே (அடிய)
2 ரஞ்சிதத் தமிழ் (நூல்) வாயா கொஞ்சுங்குற மினேயா
நடமிடு மயிலா கடகரி துணேவா (அடிய)
3 குன்றையின் மலேயாய் நன்றுள கலேயாய்
கோலாகலப் பிரபுவே மேலான சித்தனே (அடிய)

## 697. நெஞ்சிரக்க மில்லேயா

பல்லவி

நெஞ்சிரக்க மில்லேயா தஞ்சமேது சொல்லேயா (நெஞ்)

அநுபல்லவி

மாதர் பங்கனு நீயே யன்பரை யாதரிக்குந் தாயே (நெஞ்)

சரணம்

அடியர் சகாயா படிபுகழ் சேயா
நின்ருடு மயில்வாகா சிகரக் குன்ருக்குடி யோகா (நெஞ்)

## 698. போற்றி போற்றி மெய்யனே

பல்லவி

போற்றி போற்றி மெய்யனே – யென் துன்பத்தை
மாற்றி மாற்றி வை மெய்யனே (போற்றி)

சரணங்கள்

1 கந்தா கந்தா வென்னே யாள்வாய் அரன் மைந்தா
மைந்தா நின்னேப் (போற்றி)

2 தேவே தேவே யென்று வந்துன்பர்கள் கோவே
கோவே யின்று (போற்றி)

3 முருகா முருகா நிதமே யாள்வாய் மாயன் மருகா மருகா
பதமே (போற்றி)

## 699. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணும் - அப்ப
எந்தன் மனதிற் றேணும் கங்கை தரித்தவர் பாலா (உந்தன்)

அநுபல்லவி

கங்கை தரித்தவர் பாலா குற மங்கை
மகிழ்ச்சிகொள் லோலா (உந்தன்)

சரணம்

வானவர் பணிபதாம் புயனே யெனக்
கானபடி ரட்சிக்கு நயனே
குன்றுக்குடிக் குமரேசா வன்பரை
நன்றாய்க் காக்குமமரேசா (உந்தன்)

## 700. என்னையன் பாதத்தை மறவாதே

பல்லவி

என்னையன் பாதத்தை மறவாதே – மனதே
பின்னை வேறே யொன்று நிறவாதே (என்னை)

சரணங்கள்

1 காழிப் பதியில் வந்த கருணை ஞானசம் பந்தன்
வாழியமணர்களை மாய்த்திடு மைந்தன் (என்னை)

2 மாறிவரு மவுணர் வளைய வருஞ்சூரன்
கூறுபட வென்ற கூரயில் வீரன் (என்னை)

3 இன்றுதர மன்பர்க்கே செய்யு நாதன்
குன்றுக் குடிவரு குகன் மலர்ப்பாதன் (என்னை)

## 701. கிட்ட விருக்குது

பல்லவி

கிட்ட விருக்குது குன்றுக்குடி கிட்டவிருக்குது
வட்ட வுலகிற் றலங்கள் சுற்றி
வாதை பேதுக்குப் பேதை நெஞ்சமே (கிட்ட)

சரணங்கள்

1 காசியிற் போய் மூழ்கி தோஷந் தீர்த்துப் பிர
காசியாவோ மென்று யோசனே யேதுக்கு (கிட்ட)

2 சாலுநிதியைச் சேர்க்க நாலு திசையு மோடி
காலுமயர்ந்து பின்மேலு மயர்ந்தேன் போகிருய் (கிட்ட)

3 நவத்துவாரத்தை யொடுக்கிச் சிவத்தினிலே யிருந்து
தவத்தை மிகச் செய்து அவத்தினி லேன் போகிருய் (கிட்ட)

## 702. எந்தனே யினியாளாய்

பல்லவி

எந்தனே யினியாளாய் கந்தமலர்த் தாளாய் (எந்தனே)

சரணங்கள்

1 நாதாந்த வடிவே வேதாந்த முடிவே (எந்தனே)

2 நெஞ்சார வின்று அஞ்சாதே யென்று (எந்தனே)

3 செகண்டி யாரணனே யகண்ட பூரணனே (எந்தனே)

## 703. உன்னிரு பாதத்திற் சேர்க்க வேணும்

பல்லவி

உன்னிரு பாதத்திற் சேர்க்க வேணும்
பன்னிரு கண்ணுற் பார்க்க வேணும் (உன்னிரு)

சரணங்கள்

1 மாயப் பிறப்பினி மீளவேணும் அன்பர்
நேயத்தினி லென்றுஞ் சூழவேணும் (உன்னிரு)

2 வஞ்ச வினைகளை நீக்க வேணும் என்னை
அஞ்சவேண்டா மென்று காக்க வேணும் (உன்னிரு)

3 குன்றை மலையில் வரவும் வேணும் எனக்கு
என்றும் நயத்தைத் தரவும் வேணும் (உன்னிரு)

## 704. எனக்காதர வாரய்யா

பல்லவி

எனக்காதர வாரய்யா – உனக்கான
பத்தனென்று பாரய்யா (எனக்)

சரணங்கள்

1 வாது புரிசூரனை வென்றவா அவனுடன்
மோது படையுங் கூடக் கொன்றவா – கொன்று
கோதிலா மயின்மேல் நின்றவா தெய்வ
மாது மணம் செயச் சென்றவா (எனக்)

2 மங்கள கரவுமை பாலா வானத்
திங்களணி வதன கோலா கான
இங்கிதமான மாது லோலா அன்பர்
தங்களுக் கென்று மனுகூலா (எனக்)

3 குன்றுக் குடிமலை வாசா தன்னிடம்
சென்றோர்க்கருள் புரிநேசா நன்று யன்பர்க் கருள்குகேசா
என்னை என்றுதரிப்பது பிரகாசா (எனக்)

## 705. அண்டர் பணியுஞ் சரணு

பல்லவி

அண்டர் பணியுஞ் சரணு – நீப
வண்டின் மலராபரணு (அண்டர்)

அநுபல்லவி

கங்கை யணிவோர் மாலா - மேரு
மங்கை யருளும் பாலா (அண்டர்)

சரணம்

புனமடந்தை தன்பாகா - எந்தன்
மனது போலருள் யோகா
தோகை மலையினையனே வெற்றி
வாகை புனை புயனே (அண்டர்)

## 706. சகல சீவ தயாபரனே

பல்லவி

சகல சீவ தயாபரனே இந்த அகிலமும் புகழு மரனே (சகல)

அநுபல்லவி

ஆரணத்தினோர் பொருளே - எதுக்குங்
காரணத்தி னோரருளே (சகல)

சரணம்

எங்கும் நிறைந்த வொளியே யெங்கும் பொங்குகின்றதோர்
களியே
குன்றை மலைக் குகேசா வன்பர்க் கென்று நலத்த நேசா
(சகல)

## 707. பதந்தர வேணும்

பல்லவி

பதந்தர வேணும் உந்தன் பதந்தர வேணும் (பதந்)

அநுபல்லவி

சுதந்தர வன்பர்க்குத் தூய மலரான (பதந்)

சரணங்கள்

1 அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் தேடிய (பதந்)
2 மானனை யார்க்காகக் கானகத் தலைகின்ற (பதந்)
3 குன்றை மலைதனி னின்ற குருபரா (பதந்)

## 708. என்றைக்குக் காப்பதோ

பல்லவி

என்றைக்குக் காப்பதோ குன்றைக்கு வாய்த்த குமரனே
யெனை (என்றை)

அநுபல்லவி

கங்கைச் சடையர் பாலா குற மங்கைக் கிசைந்த லோலா
(என்றை)

சரணம்

கடம்பை யணியுந் தோளா மயின்மே நடம்புரியுந்தாளா
குன்றுக்குடி வாசா அன்பரை நன்றுட் கொளுநேசா
(என்றைக்)

## 709. எப்படியு மருள்புரிவாய்

பல்லவி

எப்படியு மருள் புரிவாய் மைப்படியுங்
குன்றை மலைக் குருநாதா (எப்படி)

அநுபல்லவி

தாண்டவம் புரியு மயிலா வென் னுண்டவனே கூரயிலா
(எப்படி)

சரணம்

கோதண்டபாணியன் மருகா விந்த மூதண்டமும் புகழ்
முருகா
குன்றுக்குடிக் கொரு தேவே யென்னை நன்றுட்
கொளவருந் தேவே (எப்படி)

## 710. திவ்விய லோலா

பல்லவி

திவ்விய லோலா கவ்விய பாம்பணி கடவுளர் பாலா
(திவ்விய)

சரணங்கள்

1 சித்தனே முத்தனே நித்தனே கர்த்தனே (திவ்விய)
2 ஐயனே மெய்யனே துய்யனே செய்யனே (திவ்விய)
3 ஓகையா தியாகையா வாகையா தோகையா (திவ்விய)

## 711. என்னை ரட்சிப்பாயே

பல்லவி

என்னை ரட்சிப்பாயே குருபரனே
அன்னை எனக்குத் தாயை் வருபரனே (என்னை)

சரணங்கள்

1 பத்தர்கள் வினைதீர்க்கும் பரம்பொருளே எந்தன்
சித்த மகிழும்படி செய்யுந் தெருளே (என்னை)
2 வஞ்சகஞ் செயுஞ்சூருடல் மாய்த்தவனே தன்பால்
தஞ்சமென் போர் வினையைக் காய்த்தவனே (என்னை)
3 குன்றுக்குடி மலையில் வாழ்பவனே யென்றும்
நன்றுட் கொண்டெவரையும் ஆள்பவனே (என்னை)

## 712. என்னைத் தெரியவில்லையே

பல்லவி

என்னைத் தெரியவில்லையே
முன்னைப் பின்னைத் தெரியா மூடனுன் சொல்லையே
(என்னை)

சரணங்கள்

1 பித்தனோ பேயனோ யெவனோ
பரிசுத்தனே பொய் சொல்லுவனோ (என்னை)
2 சாதியி னல்லவன்றனோ புத்தி
பேதமே யினியேனோ (என்னை)

3 சிகிமலே வாழுங் குகேசா
அண்ட பகிரண்டமு நிறையீசா (என்னே)

## 713. சாமியைப் பணிவாய்

பல்லவி

சாமியைப் பணிவாய்
நெஞ்சே கந்த சாமியைப் பணிவாய் (சாமி)

சரணங்கள்

1 பூமி புகழுங் குன்றை மாமலே வாழும் புண்ணியன்
சுப்பிரமண்ணியனை (சாமி)
2 வந்த பிறவிதனே மடிந்திடத் தீர்க்கும் அந்த மிகுந்த
பகிரண்டமுங் காக்கும் (சாமி)
3 வானவர் முனிவர்கள் மலர் கொடர்ச்சிக்கும்
தேனலரணிந்து திவ்விய மாயிருக்கும் (சாமி)
4 மன்றன் மலர்ப்பொழின் மாவளஞ் சிறக்கும்
குன்றை மலேவளர் குகனருள் திறக்கும் (சாமி)

## 714. எத்தனே நாட்செலுமோ

பல்லவி

எத்தனே நாட்செலுமோ சாமி
குற்றத்தைத் தள்ளிக் குன்றைக் கிரிக்கிது
பெற்ற பிள்ளே யென்று சித்த மிரங்க (எத்தனே)

சரணங்கள்

1 பச்சை மயிலேறிச் செச்சைப் புயமேவு
கொச்சைக் குறத்தியோ டிச்சையுடன்வர (எத்தனே)
2 கந்தனே யுன்னடிச் சொந்த மென்றே வரு
மெந்தன் மனப்படி வந்தருள் புரிய (எத்தனே)
3 மன்றன் மலர்ப் பொழினின்றசைந்தாடிய
குன்றையில் வாழ்பவ வின்றருளே செய (எத்தனே)

## 715. ஒரு பொருளேக் கண்டேன்

பல்லவி

ஒரு பொருளேக் கண்டேன் திருமருவு முடிச் சிகிமலே மீது
(ஒரு)

சரணங்கள்

1 பொல்லாத மாயப் பிறவியில் வீழ்ந்து
போகாமல் காக்கு நாதனை (ஒரு)

2 எல்லா வுயிர்க்குயிராகி யிருக்கு
மெய்ஞ்ஞான போதனை (ஒரு)

3 பொங்கிய கருணை வெள்ளத்தை
யன்பர்க்குப் புகட்டி வளர்க்குந் தாயை (ஒரு)

4 மங்கை யுமையவள் பங்கிலுறைகின்ற
மாகேசுரனருள் சேயை (ஒரு)

5 வாகைபுனை சூரன் சதுரங்கசேனை
மாய்ந்திடச் செய்யும் வேலனை (ஒரு)

6 தோகை மலையிலனுதினம்
வாழ்தரு சுந்தரமாகிய லோலனை (ஒரு)

## 716. எப்போது அருள் கிட்டுமோ

பல்லவி

எப்போது அருள் கிட்டுமோ
முப்போது மன்பர்பணி மூர்த்திகர பார்த்திபா (எப்போது)

சரணங்கள்

1 கந்த மலரடி பணிந்தனுதினம் வளருந்தனல்லடியர்
போலெந்தன் மனப்படி (எப்போது)

2 என்னிடத்தி லக்கியான மென்னுமிரு ளகற்றிப்
பின்னும் நலம்பெற்று உன்னிடத் திருக்கவே
(எப்போது)

3 வரிமலர்ப் பொழினிறை யுரிய சிகிமலையில்
கரிசன முடனே தரிசனஞ் செய்யவே (எப்போது)

## 717. ஆடு மயின்மேல் வருவாய்

பல்லவி

ஆடு மயின்மேல் வருவாய்
வந்து தேடும் பொருளைத் தருவாய் (ஆடு)

சரணங்கள்

1 அண்ட முழுதுமதிர அதின் மண்டு நட்சத்திரமுதிர
எண்டிசைகளும் பிதிர முளைத்துக் கொண்ட சிறைகள்
விதிர (ஆடு)

2 பாதச் சிலம்பொலி மீற பெருகு மோதக் கடல் கணீற
வாதடையலர் மாற நாளுஞ் சாதக பரதந்தேற
(ஆடு)

3 அடியவர் கூட்டங் கூட பணியும் மிடியவர் கலியோட
முடியின் வானவர் தேட குன்ருக் குடியிலருள் கணீட
(ஆடு)

## 718. அற்புத சரணு

பல்லவி

அற்புத சரணு நீபப் பொற்பிஞுபரணு
கர்த்தனே சித்து வித்தனே தேவே
அர்த்தலர் அணி புத்திரனே கோவே (அற்புத)

சரணங்கள்

1 ஐயனே பூதி மெய்யனே தாயே
செய்யனே வேற்கையனே சேயே (அற்புத)

2 என்றுயரை யின்றுதீர் நாதா
குன்றைமலே யினின்றிடு வேதா (அற்புத)

## 719. எந்தனேக் காப்பது அரிதோ

பல்லவி

எந்தனேக் காப்பது அரிதோ - எந்தனே
யுந்தனிடஞ் சேர்ப்பது பெரிதோ (எந்தனே)

சரணங்கள்

1 ஆரணப் பொருளாக நிறைந்து மந்தக்
காரணப் பொருளாக மறைந்து எங்கும்
பூரண மாகவே யுறைந்து நின்ற
புண்ணியனே சுப்பிரமண்ணியனே சாமி (எந்தனே)

2 அண்ட முழுவது மேத்து அதிற் கொண்ட
வுயிரெல்லாங் காத்து
யென்றும் புண்டரீக பதத்திற் சேர்த்து அருளும்
போதனே சிவ நாதனே சாமி (எந்தனே)

3 ஆதி பராபரப் பொருளாய் அறியாப்
பேதையர் மனமருளாய் மகா
போதர்கன மனத்தெருளாய் நின்ற
பூபனே மண நீபனே சாமி (எந்தனே)

## 720. எப்போது தரிசனமாகுமோ

பல்லவி

எப்போது தரிசனமாகுமோ வினி
யிப்போது தீவினை போகுமோ (எப்போது)

சரணங்கள்

1 அதியாசைப்பட்டதினாலும் வாயாற்
றுதியாலனந்தஞ் சொன்னாலும் அந்த
ஐயன் பூதியணி மெய்யன் பன்னிரண்டு கையன்
கடம்பணி துய்யன் சந்நிதி நின்று (எப்போது)

2 யோகாப் பியத்தைக் கொண்டாலும் அந்த
யேகாட்சரத்தைக் கண்டாலும் அந்த
வுத்தமனன்பர்க்குச் சித்த மகிழ்ந்திட
வித்தருள் புரிவல்ல சித்தன் சந்நிதி நின்று (எப்போது)

3 அஞ்சாட் சரத்தைப் பேசினாலும் மெய்யெல்லாம்
பஞ்சாட்சரத்தைப் பூசினாலும் அந்த
ஆடுமயிலோன் பத்தர் தேடுங் குமரனித்தம்
நீடும் பொழில்சேர் குன்றைக் கோடுதனிலுற்று
(எப்போது)

## 721. இன்னொரு மந்திரம் வேணுமோ

பல்லவி

இன்னொரு மந்திரம் வேணுமோ நெஞ்சே யுனக்குப்
பின்னொரு மந்திரந் தோணுமோ நெஞ்சே யுனக்கு
(இன்னொரு)

சரணங்கள்

1 கந்தன் சிவனருள் மைந்தன் சொன் ஞான
சம்பந்தனிலகிய
நந்தன் மருகனை கர்த்தனே கர்த்தனே கர்த்தனே
யென்று சொல்ல (இன்னொரு)

2 ஆண்டவ னீபமலர் பூண்டவனுல கெங்கு
நீண்டவன் மயின்மீது தாண்டவஞ் செய்வோனை
ஐயனே ஐயனே ஐயனே யென்று சொல்ல (இன்னொரு)

3 நாரணனுயர் பரிபூரணன் சகலஞ் செய்
காரண னொரு நான்கு ஆரண னவன்றன்னை
நாதனே நாதனே நாதனே யென்று சொல்ல
(இன்னொரு)

## 722. மனதே நீ மோசம் போகாதே

பல்லவி

மனதே நீ மோசம் போகாதே
கனகாசலச் செகண்டிக் கர்த்தனிருக்க விப்போதே
(மனதே)

சரணங்கள்

1 மாயப் பிறவிதனில் வீழ்ந்து கெட்டுப்
போயிச்சை மாதரொடு சூழ்ந்து அந்தக்
காயக் கராசை தன்னில் ஆழ்ந்து கொண்டு
கர்த்தனை நினையாமல் மெத்தவு மயங்கி (மனதே)

2 பொய்வார்த்தை சொல்லி யேசாதே நல்ல
மெய்வார்த்தை சொல்லக் கூசாதே யார்க்கும்
மைவார்த்தை யொன்றையும் பேசாதே யிருந்து நீப
வாசனைக் குமரேசனை நினையால் (மனமே)

3 ஆதரவோடு தாயதைப் பாரு பார்த்தையன்
பாத பங்கயத்தினைச் சேரு சேர்த்தினி
மோது தீவினைகளைத் தீரு சிவமா
மூர்த்திகனைக் குன்றைமலைப் பார்த்திபனை நினையாமல்
(மனமே)

## 723. இன்னந் தயவு வல்லையா

பல்லவி

இன்னந் தயவு வல்லையா
சின்னஞ் சிறியோர்க்கருள் சேதியொன்று சொல்லையா
(இன்னந்)

அநுபல்லவி

சித்திர மயின்மேலேறி நிர்த்தனஞ் செய்வோனே
பத்தர்களுக் கருணிதியம் பெய்வோனே (இன்னந்)

சரணம்

வானவர் தவயோக தானவர் தோத்திரா
மாநலமிகு குன்றையானதோர் க்ஷேத்திரா
சூடியமுடி மாவைச் சாடிய கோபா
வாடிடாத விதழ் கூடிய நீபா (இன்னந்)

## 724. காணக் கூடலே

பல்லவி

காணக் கூடலே தோணச் சிகிமேலைய்யன் றுலங்க வாடு
மாடலைக் (காண)

சரணங்கள்

1 காலிற் சிலம்பு கலீர் கலீரென்ன மேலிற் பணிகள்
சொலீர் சொலீரென கான மயிலின் மேனடஞ்
செய்வதைக் (காண)

2 எட்டுத் திசைகளெங்கு மதிர கட்டுக் கற்பக்கர
மலருதிர இச்சையுடனையன் பச்சை மயிலாடலைக்
(காண)

3 கோலமுடனன்பர் கூட்டங் கூடவே
மேலானவர் விர்த்தி பாடவே
குன்றுக்குடி மலைமேனின் றுடுமாடலைக் (காண)

## 725. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ பொல்லாப் பாவியென் றோராயோ
(தீவினை)

சரணங்கள்

1 காலங் கலியென்றோ வினி மேலுந் தேடாதனன்றோ
(தீவினை)

2 சித்த மிரங்கவிலையோ வுந்தன் பத்தன் முன் வரத்
தெரியலையோ (தீவினை)

3 குன்றையில் வருவோனே யார்க்கு நன்றருள்
பெருமானே (தீவினை)

## 726. ஏது குற்றங்கள் செய்தாலும்

பல்லவி

ஏது குற்றங்கள் செய்தாலுஞ் சாமி – இப்
போது ரட்சிப்பாய் மென்மேலும் (ஏது)

அநுபல்லவி

அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் மறைவேதர்
மண்டல முந்துதி கொண்ட பங்கய பாதா (ஏது)

சரணம்

வாதுபுரியசுரர் மோது படைகள் முந்த
தாதுகு வேலினல் கோது புரியு மைந்தா
மன்ருடிய பாதா தன்ருதைக் குபதேசா
நன்ரூர் பொழிலுறை குன்ருக்குடி வாசா (ஏது)

## 727. வந்தெனைக் காப்பாயே

பல்லவி

வந்தெனைக் காப்பாயே - கிருபை
தந்தெனைப் பார்ப்பாயே (வந்தெனை)

அநுபல்லவி

தெள்ளுதினைப் புன வள்ளி கண்ணாளா
துள்ளி நடமிடு புள்ளி மயிலா (வந்தெனை)

சரணம்

சூரசம் மாரவல வீரப்பிரதாபா
ஆரமது நிறைந்த சிங்கார மிகுநீபா
ஈசா குன்றைக்குடி வாசா பிரகாசா
தேசாதிபர் பணி நேசா விலாசா (வந்தெனை)

## 728. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும்
எந்தன் மேற்பட்சம் வைத்து விரும்ப வேணும் (சித்தம்)

அநுபல்லவி

பத்தர்கள் முனிவர்கள் நித்தம் பரவு குன்றைப்
பதியில் வளருயரற்புத முருகா வுந்தன் (சித்தம்)

சரணங்கள்

1 கானக மடந்தையைக் காதலாய் மேவு தோளா
வானக மடந்தையு மருவு மணாளா
வானவர் முதலினேர் வணங்கிய தாளா
தேனலரணிகின்ற தேகா வைபோகா வுன் (சித்தம்)

2 எங்கணுமாக நிறைந்திருக்கும் பராபரா
திங்கள ணியுஞ்சடா தேவதேவா வரா
மங்கள கரவுமை மாதுதன் புத்திரா
தங்களடிமையென்று தாகம தாகவுன் (சித்தம்)

3 மன்றுடி யருளிய வால குகேசா
குன்றுக் குடிவளர் குருபர யீசா
நின்று டொழுமன்பர் நித்திய நேசா
நன்றூர் புனைபுயா நாளும் பிரகாசா (சித்தம்)

## 729. பார்க்க வாயிரங் கண்கள் வேணும்

பல்லவி

பார்க்க வாயிரங் கண்கள் வேணும் – பழவினை
தீர்க்குங் குன்றைமலைத் தேவன் மகிமையைப் (பார்க்க)

சரணங்கள்

1 தன்னை யடுத்தவர் தங்களுக்கே யருள் தந்து
ரட்சிக்கு மருமையும் மேலும் அன்னை யெனப்
பலாயிரங்கோடி அண்ட மெல்லாங் காவல்
கொண்ட மகிமையைப் (பார்க்க)

2 ஏவல் பில்லி சூனிய முதலாகவே யினி
யெல்லாந் தீர்க்குஞ் சம்பிரதாயமும் வெகு
ஆவலுட னெல்லோர் களுக்குந் தய
வாக வாண்டருள் சினேக மகிமையைப் (பார்க்க)

3 சோலையின் மந்திக டொந்தோ மென்று டிடத்
தொம்மெனக் கனியுகுஞ் சிறப்பும் ஓங்க
மேலுமுடியுயர் குன்றை மலைவளர்
வீரப் பிரதாப சிங்காரனைப் (பார்க்க)

## 730. வள்ளி மணவாளா

பல்லவி

வள்ளி மணவாளா புள்ளி மயிலாளா (வள்ளி)

அநுபல்லவி

நடராசரருள் பாலா திடமான புயசீலா (வள்ளி)

சரணம்

தானவரடு சூரா வீரா வானவர் பணிபுரி தீரா
தென்சிகி மாமலை வாசா அன்பர்கள் பூசித நேசா (வள்ளி)

## 731. கந்தனே

பல்லவி

கந்தனே யுந்தனை நானடுத் தேனினி
யெந்தனை வந்துடன் காப்பாய் (கந்தனே)

அநுபல்லவி

வாலப் பருவ நீலக் குழலி
சாலக் குறமயில் கோலக் கணவனே (கந்தனே)

சரணம்

மீனை நிகர் விழி தேனை நிகர் மொழி
மானை நிகருந் தெய்வானை கணவனே
அயில் துலங்கிய கையில் விளங்கருள்
ஒயில் நிறைந்திடு மயிலெனுங்கிரிக் (கந்தனே)

## 732. எந்தனைக் காப்பது பெரிதோ

பல்லவி

எந்தனைக் காப்பது பெரிதோ – என்முன்
வந்தருள் செய்வது மரிதோ (எந்தனை)

சரணங்கள்

1 பல்லுயிர்களை யெல்லாம் நல்லுணவுகளூட்டி
அல்லும் பகலுங் காத்த வல்லவனே சாமி (எந்தனை)

2 தானவர் குல சூரனவ னிரங்க
சேனையுடன் வென்று வானவரைக் காத்தவா (எந்தனை)

3 மன்றன் மலர்ப்பொழினின்று கனியுகு
சென்று ரசநிறை குன்றை மலையோனே (எந்தனை)

## 733. தரிசித்துக் கொள்ளுவாய்

பல்லவி

தரிசித்துக் கொள்ளுவாய் - மனமே
பரிசுத்தமாகிய பரமனை தினமே (தரிசித்)

சரணங்கள்

1 கொன்றையஞ்சடைக் கோமான் மைந்தனை
நன்று புரியு ஞான சம்பந்தனைத் (தரிசித்)

2 பதும பாதனைப் பஞ்சாட்சரனை மதுமிகு நீப மாலிகா
பரனை
என்றைக்கு மன்பர் அருச்சிக்கு மையனை
குன்றைக்கு வாய்த்த குருபர மெய்யனைத் (தரிசித்)

## 734. கதியில்லை ஐயனே

பல்லவி

கதியில்லை ஐயனே - வேறு
கதியில்லை ஐயனே (கதி)

அநுபல்லவி

கருணைச் சாகரனே வருணத்தார் தரனே (கதி)

சரணம்

கார்த்திகேயனே தெய்வப் பார்த்திப நாதனே
வான நாதனே திவ்விய ஞான வேதனே (கதி)

## 735. தேடிக்கொள் மனமே

பல்லவி

தேடிக்கொள் மனமே - ஐயனைத்
தேடிக்கொள் மனமே (தேடிக்)

சரணங்கள்

1 கர்த்தனைப் பரிசுத்தனைத் தினமே (தேடிக்)
2 ஐயனைப் பன்னிரு கையனைத் தினமே (தேடிக்)
3 ஆண்டவனை நீபம் பூண்டவனைத் தினமே (தேடிக்)

## 736. கார்த்திகேயன் தரிசனமே

பல்லவி

கார்த்திகேயன் தரிசனமே யெல்லார்க்கு நேர்த்தியாகுமே
பார்த்தபேருக்கிரு நேத்திரங் குளிரும் (கார்த்தி)

சரணங்கள்

1 அண்ட முழுது நிறைந்து திரும்ப அண்ட முழுதும்
மறைந்து நின்ற ஐயன் பன்னிரு கையன் விளங்கிய
(கார்த்தி)

2 எங்கும் பராபர வெளியாய் மறுத்தெங்கும் பராபர
வெளியாய் நின்ற
எம்பெருமானது தம்பெருமையுள்ள (கார்த்தி)

3 குன்றுக்குடியில் விளங்கி அந்தக் குன்றுக்
குடியிற் றுலங்கிநின்ற
குமர குருபரனமர பயங்கரன் (கார்த்தி)

## 737. நெஞ்ச மிரங்க வேணும்

பல்லவி

நெஞ்ச மிரங்க வேணும் ஐயனே
தஞ்சம் வேறில்லை சரவணபவனே (நெஞ்ச)

சரணங்கள்

1 வன்ன மயிலேறியாடி கையில் பொன்னின் வேலேந்தி
யென்னைத் தேடி
வந்துமணக்கு நீபமணி குணக்குஞ் சரமேயுன் (நெஞ்ச)

2 வானவர் பணி சேனுபதியே யென்றும் ஞானவர்
தேடிய நிதியே யிந்த
வையகம் புகழ்பூதி மெய்யனே யுன்னுட (நெஞ்ச)

3 வாச மிகுந்த சோலை சூழும் உயர்ந்த வா
காச மிகுந்த குன்றை வாழும் அருள்
வல்லவனே சூரை வெல்பவனே யுந்தன் (நெஞ்ச)

## 738. ஏது வருமோ

பல்லவி

ஏது வருமோ அறியேனிப்போது வொன்று மறியேன்
முருகா (ஏது)

அநுபல்லவி

கஞ்ச மலர்ப்பாதந் தருவாய் மயிலில் நெஞ்ச மகிழ வருவாய்
(ஏது)

சரணம்

சங்கர ரருளும் புத்திரா முனிவ ரிங்கித மிகுந்த மித்திரா
குன்றைமலை வருதேனே யென்பால் நன்றருளும்
பெருமானே (ஏது)

## 739. தயவு வேணுமையா

பல்லவி

தயவு வேணுமையா வயல்கள் சூழுங் குன்றை மலை
முருகையா (தயவு)

சரணங்கள்

1 ஐயனே பன்னிரு கையனே விபூதி மெய்யனே
திவ்விய துய்யனே யென்றன்மேல் (தயவு)

2 பன்னிரு கையோனே யுன்னித மயிலோனே
கன்னியர் மகிழ் லோலா யின்னிதய மதுபோல் (தயவு)
3 மன்றன்மலர்ப் பொழிற் குன்றைமலை வரு
நன்றி புரியன்பர் யென்றும் பணிவோனே (தயவு)

## 740. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே மகா தேவ தேவனே
மூவர் முதலே மூர்த்திகரனே (தேவ)

அநுபல்லவி

தோகையுள்ள மயிலா வெற்றி வாகை புனையொயிலா (தேவ)

சரணம்

மாதுமையாள் பாலா குறத்தி மீது மிகுமாலா
குன்றுக்குடித் துரையே நான் நன்றாகத் தானுரையே (தேவ)

## 741. அஞ்சாதே யென்று சொல்லுவாய்

பல்லவி

அஞ்சாதே யென்று சொல்லுவாய் வஞ்சகரை
மிஞ்சாதே யென்று வெல்லுவாய் (அஞ்சாதே)

சரணங்கள்

1 பாதிப் பிறையை முடித்தோன் முப்புரத்தை
மோதிச் சமரிலடித்தோன் அருளிய
பாலகனே வடிவேலவனே யென்னை (அஞ்சாதே)
2 மாமலர் மாதுபாகன் காயாம் பூமலிகின்ற தேகன் அன்புயர்
மருகனே சண்முக முருகனே யெந்தனை (அஞ்சாதே)
3 கானக வள்ளி மாது தெய்வ யானை யென்றும் பெண் மீது
மிகுந்த காதலனே சகல பூதலனே யென்னை (அஞ்சாதே)

## 742. சமயத்தி லுதவி செய்வாய்

பல்லவி

சமயத் திலுதவி செய்வாய் குன்றைக்
கமழ்மலையாய் வந்து கனிவுடனீயே (சமயத்)

சரணங்கள்

1 அண்டர்கள் கண்டுபணி தொண்டர்கள் தொண்டுசெயும்
ஆண்டவனே நீபம் பூண்டவனே யிது (சமயத்)

2 பிரமலர்ப்பாதா பூமலிநாதா அருள்
வன்ன மயிலோனே நன்னயமாக யிது (சமயத்)

3 சிகிமலைவாசா நிறை பகிரண்ட வீசா சகல
தேவர்கள் தேவா நலமிகு மூவர்கள் கோவே (சமயத்)

## 743. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே
வார்க்குங் குன்றை மலைவாழ் முருகேசனே (காக்க)

அநுபல்லவி

கானக மாது தன்ருேளா வுயர் வானகத்தோர் பணிதாளா
(காக்க)

சரணம்

கனக மயிலில் வரு கந்தனே குகனே சினவர வணிதரு
சிவனருள் மகனே
அஞ்சாதே யென்று ஆள்வா யென்னையனே
மஞ்சார் பொழிற் குன்றை மலைவளர் துய்யனே (காக்க)

## 744. மனதுக்குத் திடஞ்சொல்லுவாய்

பல்லவி

மனதுக்குத் திடஞ்சொல்லுவாய்
மனமுற்ற துயரை மாய்த்தினி வெல்லுவாய் (மனது)

சரணங்கள்

1 பொல்லாத நோய்தனைப் போக்க செய்வாயே
நல்லாயிருப்பதை நல்குவை நீயே (மனது)

2 குன்ருக் குடிமலைக் குருபர நாதா
நன்ருட் கொண்டென்னை ரட்சிப்பாய் நீதா (மனது)

## 745. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் உன்னுட பத்தன்மேல் விரும்ப
வேணும்
(சித்தந்)

சரணங்கள்

1 கானக மயிலி தோளா அந்த வானவர் பணிதாள (சித்தந்)

2 சங்கர ரருள்பாலா அன்பர்க ளிங்கித மிகுலோலா (சித்தந்)
3 குன்றுக் குடிக்கோவே பத்தரை நன்றுட் கொளுதேவே (சித்தந்)

## 746. முருகா உன் பாதம் நம்பினேன்

பல்லவி

முருகா வுன்பாத நம்பினேன்
திருவாழ் குன்றைக்குடிச் சேயனே மாயனே (முருகா)

அநுபல்லவி

ஆதியந்தமு நீயே வேதவித்துவு நீயே
ஆண்டவனே திவ்விய தாண்டவனே சாமி (முருகா)

சரணங்கள்

1 வள்ளி மனோகரனே அள்ளிலை வேற்கரனே (முருகா)
2 வன்ன மயிலோனே நன்னய வொயிலோனே (முருகா)
3 தோகை மலையோனே வாகை புனைவோனே (முருகா)
4 தூய சண்முகனே சேய விங்கிதனே (முருகா)

## 747. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும்
பத்தர்கள் பணி குன்றைப்பரனே யரனே (சித்த)

அநுபல்லவி

மூவர்க்கு முதலான தேவே தேவர்க்கு முதலான கோவே (சித்த)

சரணம்

பன்னிரு கரதல வேலா அன்பன் என்னை யினிக் காப்பாய் சீலா
சிகிமலை யிலினிக்குந் தேனே அண்ட பகிரண்டமும் புகழ்வோனே (சித்த)

## 748. காத்தருள்வாயே

பல்லவி

காத்தருள்வாயே சீர்த்திசேர் குன்றையாளா (காத்தருள்)

சரணங்கள்

1 ஆரணனே சாமி பூரணனே யென்னைக் (காத்தருள்)
2 முருகேசனே மாயன் மருகேசனே யென்னைக் (காத்தருள்)
3 குன்றவில்லி தன்பாலா குன்றை மலையினுதா வென்னைக் (காத்தருள்)

## 749. செய்ய வேணுமையனே

பல்லவி

செய்யவேணு மையனே
வையம்புகழ் குன்றை மாமலை ஐயனே (செய்ய)

சரணங்கள்

1 வன்ன மயிலாளா கன்னியர் தோளா (செய்ய)
2 வானவர் பணிதேவே ஞானவர் பணிகோவே (செய்ய)
3 குன்றுக் குடியோனே நன்றுட் கொளுவோனே (செய்ய)

## 750. சாமி தயவு வேணும்

பல்லவி

சாமி தயவு வேணும் கந்தசாமி தயவு வேணும்
பூமி புகழுங்குன்றைப் புண்ணியா வென்றன் (சாமி)

சரணங்கள்

1 தீராத வினையெல்லாந் தீரவும் வினையால்
சேராத நயமெல்லாஞ் சேரவும் கந்த (சாமி)
2 துன்பமெல்லாம் விலகிப் போகவும் நல்ல
வின்பமெல்லாஞ் சேர்ந்தாகவும் கந்த (சாமி)
3 குன்றுக்குடி மலையிலேறவும் இனி
நன்றான புத்தியது தேறவும் (சாமி)

## 751. எந்தன் மனதைத் திருத்துவாய்

பல்லவி

எந்தன் மனதைத் திருத்துவாய் - என்பால்
வந்த பிணியை வருத்துவாய் (எந்தன்)

அநுபல்லவி

பாசமதனை யோட்டுவாய் – எனக்கு
மோசஞ் செய்வோரை வாட்டுவாய் (எந்தன்)

சரணம்

பஞ்ச பாவத்தைத் தள்ளுவாய் எந்தன்
நெஞ்ச மலரினை விள்ளுவாய்
காலன் வரவை நீக்குவாய் குன்றை
வேலவ வுன்னுட னுக்குவாய் (எந்தன்)

## 752. வருத்தத்தை நீக்குவாய்

பல்லவி

வருத்தத்தை நீக்குவாய் பொல்லாக் கருத்தைப் போக்குவாய்
திருத்தமான குன்றைத் தேவே கோவேயென் (வருத்)

சரணங்கள்

1 பொல்லாத தீவினை யானைந்து நிலை நில்லாத வுடலெல்லா
நொந்து கெட்டுப்
போகாமலே யுயிர் சாகாமலே யெந்தன் (வருத்)
2 கடம்பை யணியும் புயனே யெதிர்த் தடஞ் செய்தான்
செயனே நல்ல
கர்த்தனே சித்தனே யெந்தன் (வருத்)
3 பத்தர்கள் பணிபாதனே அன்பர்க்கு நித்தம் வரஞ்செய்
நாதனே நிறை
பரனே யரனே யெந்தன் (வருத்)

## 753. மலர்ப்பாதந் தரவேணும்

பல்லவி

மலர்ப்பாதந் தரவேணும் - தலத்திலுயர் குன்றைச் சாமி
யென்முன் வரவேணும் (மலர்ப்)

சரணங்கள்

1 எங்கும் பராபர வெளியாய் எங்குந் தங்குங் கன சுட
ரொளியாய் வளர்
சத்தி வடிவேலா புத்தி யெனக்கருள் (மலர்ப்)
2 அண்டபகிரண்ட வடிவாய் இருக்கும் தொண்டர் பணி
வேதாந்த முடிவாய் வளர்
துய்யனே பன்னிரு கையனே உன்னுட (மலர்ப்)
3 துங்க மிகுந்த குன்றை மலையாய் யெங்கு மிலங்கிய
கலையாய் வளர்
என்னையனே யருள் பொன்னையனே உந்தன் (மலர்ப்)

## 754. தயவுசெய்ய வேணும்

பல்லவி

தயவுசெய்ய வேணுமையனே நயமிகுந்த குன்றை நாதனே
நீதனே (தயவு)

அநுபல்லவி

அண்டர் பணிகின்ற நாதனே யுயர் தொண்டை
யிதழ் வள்ளி நேசனே
பரி சுத்தனே மகா சித்தனே சாமி (தயவு)

சரணம்

தேடக் கிடையாத நிதியே யாரும் நாடக் கிடையாதபதியே
திவ்விய ரஞ்சிதனே யிரு வஞ்சியர் நேசனே
குன்றுக்குடி மலைவாசா அன்பானந்தற் கருளீசா நட
நாட்டியம் புரிமயில் தாட்டிகனே சாமி (தயவு)

## 755. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் பத்தர் பணிகுன்றைப் பரனே
யரனே யுன் (சித்தந்)

சரணங்கள்

1 சதுர்விதத் சேனையொடும் வந்து முன்னே
யெதிருடன் போர்செய முந்து சூரைச்
சாய்த்தவனே யுயிரை மாய்த்தவனே யுந்தன் (சித்தந்)
2 அண்டர்கள் திவ்விய மலர்கொண்டு அருச்சித்து
மண்டலமதில் வந்துதொண்டு செயுமற்புத
பாதனே பொற்புயர் நாதனே (சித்தந்)
3 குன்றுக்குடி மலையோனே அன்பரை நன்றுட்கொளும்
பெருமானே
தெய்வக் குகனே அருளாறு முகனே யுன் (சித்தந்)

## 756. பட்சம் வையய்யா

பல்லவி

பட்சம் வையய்யா தெட்சண குன்றைத் தேவே கோவே
(பட்சம்)

சரணங்கள்

1 அண்டர்தொழு நாதா தொண்டர் தொழும்பாதா (பட்சம்)

2 சங்கர ரருள்பாலா மங்கையர் புணர்கோலா (பட்சம்)
3 பைங்கடம் போனே யிங்கித வோனே (பட்சம்)

## 757. செகதீசா சரணம்

பல்லவி

செகதீசா சரணம் மகபதி பணிகுன்றை மலைக்குமரேசா
(செகதீசா)

அநுபல்லவி

சங்கர சண்முக சரவண பவனே
மங்கள சுபகர வரமருள் சிவனே (செகதீசா)

சரணம்

சருவதயாபர சடாட்சரப் பொருளே
வருமடியார்கள் பவமாற்றிய வருளே
வானுயர் குன்றைமலை வளர் குருபரனே
தேனுயர் நீபமணி தெய்வீக நாதனே (செகதீசா)

## 758. ஐயமேதய்யா

பல்லவி

ஐயமேதய்யா என்னையாள ஐயமேதய்யா
வையம்புகழுங் குன்றை மாமலை வாசனே
யன்பர் நேசனே சாமி (ஐயமே)

சரணங்கள்

1 எங்கு நிறைந்த பரனே நாளும் பொங்குங் கருணையரனே
யருள் புண்ணியனே சுப்பிர மண்ணியனே சாமி (ஐயமே)
2 வானவர் பணியும் பதனே கொன்றை தேனலர் புனைவார்
சுதனே
மாயன் மருகனே யருள் முருகனே சாமி (ஐயமே)
3 குன்றுக்குடி மலையோனே யெனை நன்றுட்கொள
வருவோனே
தெய்வக் குகனே யருள்சண் முகனே யென் சாமி
(ஐயமே)

## 759. மயிலேறிய சண்முகனே

பல்லவி

மயிலேறிய சண்முகனே யொயிலாகிய வருள் குகனே (மயி)

சரணம்

கானக மயிலிதோளா வானவர் பணியுந் தாளா கங்
காதர ரருள்பாலா சிங் காதனமுயர் கோலா
சூர சங்காரப் பிரகாசா தாரணிபுய வன்பர் நேசா (மயி)

## 760. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா தண்மலர்ப் பாதா சண்முக நாதா (சண்முக)

சரணங்கள்

1 தேனலர் நீபா வானவர் பூபா வேலணி கையா நூலணி
மெய்யா (சண்முக)
2 குன்றையின் க்ஷேத்திரா நன்றுள தோத்திரா (சண்முக)

## 761. கண்டுகொள் மனமே

பல்லவி

கண்டுகொள் மனமே செண்டுக்கு நிகர் முலைத் தெய்வானை
தோழனைக் (கண்டு)

சரணங்கள்

1 எந்தக் காரியமும் முடியும் அதிற் சொந்தக் காரியமும்
விடியும்
யார்க்கு மிச்சையனை நல்ல பச்சை மயிலனைக் (கண்டு)
2 அண்ட பகிரண்ட மெங்கும் நிறை கொண்டடியார் மனந்
தங்கும்
எங்களையனைப் பூதிமெய்யனைத் தினந்தோறும் (கண்டு)
3 நிறை பரமானந்தப் பொருளை நாளு மறைபுகழ் மெய்ஞ்
ஞானவருளை
குன்றை நீதிபனைப் பிரக்யாதிபனைத் தினம் (கண்டு)

## 762. வந்தாள வேணுமையா

பல்லவி

வந்தாள வேணுமையா மேலும் வரந் தந்தாள
வேணுமையா (வந்தாள)

சரணங்கள்

1 கானமின் மேவு தேகா திவ்விய ரூப வானமின்னாள்
தன்பாகா (வந்தாள)

2 ஆறுபடையின் வீடோனே செந்நெல் விளைந்து
தேறு நன்மேல் நாடோனே (வந்தாள)

3 அடியவர் பணி பாதனே முடிகுன்றுக் குடிவளர்க்கும்
நாதனே (வந்தாள)

## 763. ஆண்டருள்வாயே

பல்லவி

ஆண்டருள்வாயே நீபம் பூண்டவ நீயே (ஆண்ட)

சரணங்கள்

1 சமர கோலாகலா அமரர் பணியுலாச கருணை நாதா
சுககுமரேசா (ஆண்ட)

2 சங்கர சண்முகா மங்களமிகு குகா சருவ தயாபரா
பருவ மதிமுகா (ஆண்ட)

3 சோலை நிறைந்த குன்றை மேலில் வளர்வாய் கொன்றை
சூடியவர் பாலா ஆடிய மயில்வாகா (ஆண்ட)

## 764. ஆராதரவய்யா

பல்லவி

ஆராதரவய்யா சீரார் குன்றைமலைத் தேவதேவ தூய்யா
(ஆராதர)

சரணங்கள்

1 தொந்தோந் தொந்தோ மென்றாடு மயிலேறி
வந்தோமென் றெனை முன்னாடு நல்ல
சுககுரு பரசெய குகமுருகய்ய வெனக்கு (ஆராதர)

2 சமராட வருவீரனை வானவர்க் கெமனாக வருசூரனை
மாய்த்திடு
சரவணபவ வயிற்கரதல நயவெனக்கு (ஆராதர)

3 குன்றுக்குடிக் குமரேசா வன்பரை நன்றாட் கொண்டாளு
நன்னேசா மலர்க்
கோகன கானன மாகிய தேவ எனக்கு (ஆராதர)

## 765. சற்குருவே நமகா

பல்லவி

சற்குருவே நமகா விற்சிகி மலைக்குகா (சற்குரு)

சரணங்கள்

1 கங்கைச் சடாதரர் பாலா குற மங்கைக் கிசைந்திடு லோலா (சற்குரு)

2 சரவணபவ குமரேசா நீபக குரவின் மலரை யணியீசா (சற்குரு)

3 தோகைமலைக் கிசைந்த யோகா நல்ல ஓகைபுனையு மன்பர்
தியாகா (சற்குரு)

## 766. நீயே துணை ஐயனே

பல்லவி

நீயே துணை ஐயனே என் தாயே
நீ மெய்யனே (நீயே)

சரணங்கள்

1 பாகாகிய சொல்லாய் வள்ளி மோகா வினைவெல்லாய் (நீயே)

2 வானுடர் பணிபாதா வென்னைத் தாளுள வேணும் நாதா (நீயே)

3 ஓகை புனையுல்லாசா வெற்றி வாகைபுனை குகேசா (நீயே)

## 767. இந்த வேளை வருவாய்

பல்லவி

இந்த வேளை வருவாய் எந்த வரமுந் தருவாய் (இந்த)

சரணங்கள்

1 கானிலலையுஞ் சரணு தில்லை நானநீப ஆபரணு (இந்த)

2 பொல்லா வினையைத் தீர்க்க வின்ன லல்லா வருட்கண்
பார்க்க (இந்த)

3 மண்டு பொழில்கள் சூழ வளர்செகண்டியா யெனையாள (இந்த)

## 768. வரவேணுமையனே

பல்லவி

வரவேணுமையனே - வரம்
தரவேணுமையனே (வர)

சரணங்கள்

1 சகலசன ரட்சகனே நல்ல சுகமிகுந்த குகனே (வர)
2 வானவர் பணிதாளா வள்ளி மானனையாள் தோளா (வர)
3 குன்றுக் குடியோனே யன்பரை நன்ருட்கொள் பெருமானே (வர)

## 769. சிவ சரவணபவனே

பல்லவி

சிவ சரவணபவனே – நவமணி
முடிக்குன்றை நாதனே நீதனே (சிவ)

சரணங்கள்

1 அந்தர வானவர் கொந்தலர் மலர் கொடு
வந்தடி பணிசெயும் சுந்தர சண்முக (சிவ)
2 ஆதியும் நீயே யனாதியு நீயே சோதியும் நீயே
நன்னீதியும் நீயே (சிவ)
3 மைப்படி பொழிற்குன்றை மெய்ப்பழமலைவளர்
ஒப்பரிதாகிய சுப்பிரமணிய குகேசா (சிவ)

## 770. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் - குன்றைப்
பொருப்பாய் நீ வரவேணும் (திரு)

சரணங்கள்

1 எந்தனைச் சேர்க்க வேணும் உந்தன்
மைந்தனைப் பார்க்க வேணும் (திரு)
2 சோதியே சுடரொளியே அந்த
ஆதியே யண்ட வெளியே (திரு)
3 அஞ்ஞான விருள்விடிவே திவ்விய
மெய்ஞ்ஞான மெனும்வடிவே (திரு)

## 771. வேறு துணையில்லையே

பல்லவி

வேறு துணையில்லையே கூறுபடைவேற் குமரேச ரல்லாமல் (வேறு)

சரணங்கள்

1 கந்தன் காழி ஞானசம் பந்தனருள் மைந்த னடியவர்க்குச்
சொந்தனவ னல்லாமல் (வேறு)

2 வேலன் குறமகள்தன் லீலன் அடியவர்கள்
மாலன் மயிலேறு கோலனவ னல்லாமல் (வேறு)

3 ஐயனனுக் கிரகக் கையன் பொடியணி
மெய்ய னடியவர்க்குத் துய்யனவ னல்லாமல் (வேறு)

## 772. நம்புவாயே மனமே

பல்லவி

நம்புவாயே மனமே அம்புவியிற் குன்றை யாண்டவனையினி (நம்பு)

சரணங்கள்

1 நித்திய சதாசிவ சுத்த மயமான கர்த்தனருள்புரி வித்தனை
யினி (நம்பு)

2 குககுருபர சகல ரட்சகன் சுகமுருகையன் மிகவருள்
செய்வான் (நம்பு)

3 மதகெசமுகனித சகோதரன் வதன சந்திரன் பதமலர்தனை (நம்பு)

## 773. பதந் தரவேணும்

பல்லவி

பதந் தரவேணும் நிதம் பணி
செய்திட நீதா வென்னுதா வுன் (பதந்)

சரணங்கள்

1 அண்டர் முனிவர்க ளெண்டிசை யோர்களும்
கண்டலர் கொடு வந்து தெண்டனிடு மலர்ப் (பதந்)

2 அன்பர்க ளனுதினம் தென்புடனே வந்து
இன்புறு துதிசொல்லி முன்பு பணிசெய்யும் (பதந்)

3 மத்தள தாளங்கள் சத்த மிலங்கிட
தித்திமி திமியென நிர்த்தமிடு மலர்ப் (பதந்)

## 774. அருமறைப் பொருளே

பல்லவி

அருமறைப் பொருளே - தருவளர்
குன்றைச் சண்முக குகனே (அருமறை)

சரணங்கள்

1 தேனலர் நீபா வானவர் பூபா (அருமறை)
2 அண்டர்கள் கோவே தொண்டர்கள் தேவே (அருமறை)
3 குன்றையின் மலையா நன்றுள கலையா (அருமறை)

## 775. கதியேதய்யா

பல்லவி

கதியேதய்யா – வேறு
கதியேதய்யா முருகா குகா (கதி)

சரணங்கள்

1 துதியே செய்தன்பர் பரவுந் தூய சரண நீயல்லாது (கதி)
2 சக்கர பாணியன் மருகா வா றக்கரனே யருள் முருகா (கதி)
3 சிக்கன வாடிய குருகா வினி சிந்தை மகிழ்ந்தருளுந்
தனையல்லாது (கதி)
4 எங்கும் நிறைந்த பரனே யொளி தங்குநற் குருபரனே (கதி)
5 பொங்கு மன்பர்க்கு வரனே பரி பூரணனே நான்கு
ஆரணனே யினிக் (கதி)
6 தோகை மாமலை வாசா வெற்றி வாகைபுனை பிரகாசா
வெனக் குள்ளபடி யெந்தன் வள்ளலே நீயல்லாற் (கதி)

## 776. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் - பொடி
மெய்யனே மலர்த் தாளாய் (ஐயனே)

சரணங்கள்

1 வேலனே யனுகூலா தண்டைக் காலனே யருள் சீலா (ஐயனே)
2 சேயனே சிங்காரா தமிழ் வாயனே சுத்த வீரா (ஐயனே)
3 தோகை மாமலை வாசா வெற்றி வாகைபுனை குகேசா (ஐயனே)

## 777. வாரா திருக்கலாமோ

பல்லவி

வாராதிருக்கலாமோ வந்து வரந் தாராதிருக்கலாமோ (வாரா)

சரணங்கள்

1 கானுர் குடிக்குட் சிறந்தாள் அந்த வானுடரசிற் பிறந்தாள்
விருவர் மருவிய வாகா திருவளர் தேகா (வாரா)
2 அம்மையுமைதன் பாலா யுத்தத்திற்
செம்மையுடைய வேலா வன்பர்கள்
தேடிய பாதா பாடிய நாதா (வாரா)
3 தருமலர்ச் சோலை சூழும் குன்றை
யொருமலை தன்னில் வாழும் நாளும்
ஓகைகொளயிலா வாகைகொள் மயிலா (வாரா)

## 778. செய்ய வேணுமையா

பல்லவி

செய்யவேணுமையா மையுலவுங் குன்றை மலைமுருகையா (செய்ய)

சரணங்கள்

1 பரம்பரமான பொருளே யெங்கு நிரந்தரமான வருளே (செய்ய)
2 காரணமான வடிவே நான்கு ஆரணமான முடிவே (செய்ய)
3 குன்றைப்பதிக் கந்தனே நாளும் நன்றுற்றிடு சம்பந்தனே (செய்ய)

## 779. குகனே யெனையாளாய்

பல்லவி

குகனே யெனையாளாய் சிகிமாமலை வாழாய் (குகனே)

சரணங்கள்

1 கதியே நீ தருவாய் மயின்மேல் துதியே மிகவருவாய் (குகனே)
2 அடியார் பணிபாதா வன்பர் மிடியே தவிர் நாதா (குகனே)
3 இருமாதர் புணர்லோலா வுமையாள் தருசிறுநய பாலா (குகனே)

## 780. குமர குருபரா

பல்லவி

குமர குருபரா அமரர் பயங்கரா மாதவர் பணியுந் தாளா (குமர)

சரணங்கள்

1 மாதவர் பணியுந் தாளா குறத்தி சூதடர் முலைசேர் தோளா (குமர)
2 அருமறை புகழதேவே யெதிர் வருமவுணர்கள் கோவே (குமர)
3 திருவள்ளர் சிகிமேரா நாளும் அருளுய ரலங்காரா (குமர)

## 781. வரவேணு மையனே

பல்லவி

வரவேணு மையனே - தரவேணு
மெய்யனே பத்தி, முருகா (வரவே)

சரணங்கள்

1 ஆண்டவனே யணி பூண்டவ நோய்தணி (வரவே)
2 பைந்தமிழ் வாயா வந்தருள் சேயா (வரவே)
3 குன்றையின் மேரா மன்றலர் கொள்தாரா (வரவே)

## 782. துதிப்பவர்க் கருள்செய்யுந் துரையே

பல்லவி

துதிப்பவர்க் கருள்செய்யுந் துரையே - நெஞ்சின்
மதிப்பவர்க் கருளாததே னுரையே (துதிப்)

சரணங்கள்

1 தூயமலர் தேடிக் கொண்டு வந்து வாயினுன் மந்திரம் விண்டு
அருச்சித்து மனமகிழ்வா யனுதினமு மறவாமல் (துதிப்)

2 பத்தி முத்தியாக வந்து நின்னைச் சுத்திவந் துன்பிறைந்து
நின்று சொல்லு முறையாக வல்லும் பகலாகத் (துதிப்)

3 குன்றுக் குடிமலையைத் தேடி நம்மை நன்றுக்குவ ரென
வோடி
வந்து நாதா நகுமலர்ப் பாதா வென்றுன்னைத் (துதிப்)

## 783. துதித்துக்கொள் மனதே

பல்லவி

துதித்துக் கொள் மனதே ஐயனை நெஞ்சில் பதித்துக்
கொள்ளுனதே (துதி)

சரணங்கள்

1 நாளுக்கு நான்றுளாகும் உன்னை சூழிக்குஞ் சூழ்வினை
போகும் (துதி)

2 பொல்லாப்பும் பொய்களு மாறும் வந்த வெல்லாப்
பிழைகளு நீறும் (துதி)

3 குன்றுக்குடி யாறுமுகனை உன்னை நன்றுட் கொண்டிடு
குகனைத் (துதி)

## 784. அஞ்சாதே மனதே

பல்லவி

அஞ்சாதே மனதே மஞ்சார் பொழிற்குன்றை மலையோனு
னதே (அஞ்சாதே)

சரணங்கள்

1 மடக்கொடி குறமாது மணவாள னிருக்க
திடப்படு மயிலேறு சேவகனிருக்க (அஞ்சாதே)

2 வானவர் நிதம்பணி மலர்ப்பாத னிருக்க
தானவர் குலகால சண்முக னிருக்க (அஞ்சாதே)

3 மன்றல் மிகுநீப மலர்ப்புய னிருக்க
குன்றை மலைவரு குருபர னிருக்க (அஞ்சாதே)

## 785. இப்போது வருவாயோ

பல்லவி

இப்போது வருவாயோ வந்து எப்போதருள் தருவாயோ
(இப்)

சரணங்கள்

1 எங்கும் நிறைந்த தேவா வெங்குந் தங்குமமரர் கோவே (இப்)

2 பண்கொண்ட கனிவாயா குறத்தி கண்கொண்ட மயனேயா (இப்)

3 குன்ருக்குடிக் குமரா சண்டைக்கு நின்ருர்க்கிசை சமரா (இப்)

## 786. எந்த வேளை வருவாரோ

பல்லவி

எந்த வேளை வருவாரோ வந்தருளை எந்த வேளை தருவாரோ
மாலையிலுயர் நீபமெனு மாலையணி புயனுர் (எந்த)

சரணங்கள்

1 சோலையிலுயர் கிளியெனுங் குறத்தோகைக் கிசை நயனுர் (எந்த)

2 சிந்தை மகிழ்ந்து வானவர் பணி திவ்விய மலர்ப் பதனுர் (எந்த)

3 சொந்த வடியார்க்கு வேண்டி வாக்குச் சொல்லு நாதனுர் (எந்த)

4 வன்ன மிகுந்த தோகை யாடு மயிலினுடை லார் (எந்த)

5 மன்னுஞ் செகண்டியாதிபர் நயம் வழங்கும் பாடலார் (எந்த)

## 787. ஒருபோதும் மறவாதே

பல்லவி

ஒருபோதும் மறவாதே நெஞ்சே கேள்
இருபோது மன்பர் சேவடி பணிய (ஒரு போது)

அநுபல்லவி

விச்சை யெல்லாந் தரும் பச்சை மயிலோனை (ஒரு போது)

சரணங்கள்

1 கிட்டாத வரமெல்லாங் கிட்டுமே தினமே
கட்டாத தெல்லாம் வந்து கட்டுமே மனமே (ஒரு போது)

2 எல்லாப் பாவமுந் தொலையுமே நெஞ்சே
பொல்லாப் பழிகளு மலையுமே யஞ்சேல் (ஒரு போது)

3 குன்ருக் குடிமலே வளரும் வாசனே
நன்ருட் கொளுமன்பர்க் கிசையு நேசனே (ஒரு போது)

## 788. தேருத மனத்தைத் தேற்றுவாய்

பல்லவி

தேருத மனத்தைத் தேற்றுவாய் முருகா
ஆருத மனத்தை யாற்றுமால் மருகா (தேருத)

சரணங்கள்

1 வஞ்சக ரிட்ட தீயை மறித்திடு வாய் குகா
நெஞ்சக மகிழவருள் நீ செய்வாய் ஆறுமுகா (தேருத)
2 பொல்லாப் பிள்ளே யென்ருலும் பொறுத்துக் கொள்ளு
வாயய்யா
யல்லாப் பிழை செய்தாலு மாதரிப்பாய் துய்யா (தேருத)
3 நின்ருட் கதியென்றே நீ யருள்வாய் அரா
குன்ருகக் குடிவரு குமர குருபரா (தேருத)

## 789. மனம் வரவில்லேயா

பல்லவி

மனம் வரவில்லேயா மனம் வரவில்லேயா
தினமன்பர்கள் பணியுஞ் செகண்டி மலேயில் வளர்
சேயனே யுன்னுட நேயனேராய்வர (மனம்)

சரணங்கள்

1 நித்த நித்தமுந்தன் சித்தஞ் சித்த மிரங்கி
மெத்த மெத்தப் பணியும் பத்தன் பத்தனென்று (மனம்)
2 தஞ்சம் வேறில்லே யெனறுன் கஞ்ச மலர்ப்பதத்தை
நெஞ்ச மகிழ்ந்து பணிவேனே யஞ்சலென் றெதிர்வர
(மனம்)
3 தேனுகு பூஞ்சோலே வானுயர் குன்றைமலே
மோனவர் பணி ஞான நாயக வுந்தன் (மனம்)

## 790. நோய் தீர வேணும்

பல்லவி

நோய் தீர வேணும் வாய்தீரப் பாடுஞ் சம்பந்தனே கந்தனே
(நோய்)

சரணங்கள்

1 கையினில் வேலேந்தி யூற்றுக் கருணைப் பிரவாக நீந்தி
கனக மயிலிலேறி யெனதுமுன் வந்தெந்தன் (நோய்)

2 கடப்ப மாலை தரித்து வள்ளி மடக்கொடி கூடப் பரித்து
வனச மலர்ப்பாதா வுனது மனதிரங்கி (நோய்)

3 குன்றுக்குடி மலையிருந்து நாயனீ யின்றே தானினி மருந்து
எந்தனிடத்தில் வந்து மகிழ்ச்சியாய் (நோய்)

## 791. துதிப்பாயே மனமே

பல்லவி

துதிப்பாயே மனமே ஐயனை நெஞ்சிற் பதிப்பாயே தினமே
(துதிப்)

அநுபல்லவி

தீராத வினையெல்லாந் தீருமே சாராத நயமெல்லாஞ் சாருமே
உம்பர் வணங்கு முபய சரணனை யன்புரு வானவரந்தக்
கரணனைத் (துதிப்)

சரணம்

பரமோபதேசம் பகர்ந்த மெய்வாயனை
அரம்பையர் பணியுந் தெய்வானைதன் நேயனை
ஆலம்விதை போலுஞ் சச்சிதானந்த ரூபனை
மூலமாயை கடந்த முதன்மை மெய்ப்பிரதாபனைத் (துதிப்)

## 792. சும்மா யிருக்காதே

பல்லவி

சும்மா யிருக்காதே நெஞ்சே சும்மா யிருக்காதே
பெம்மான் குன்றைமலைப் பெருமானைத் தொழுதுகொள்
(சும்மா)

சரணங்கள்

1 தாதவிழ் நீபமாலை தன்னை யணிபுயக் கானக
மாதரசாகி வருவள்ளிபுணர் நயத்தான் வனச
மலரடியைத் தினமும் பணிவதற்குச் (சும்மா)

2 வானவர் நிரைநிரை வந்து பணியும் பாதன்
தானவர் குலம்விழச் சாடிய நாதன்
தன்து பதமலரைத் தினமும் பணிசெய்யாமல் (சும்மா)

3 மணிமுடிவளர் குன்றைமலை வருவாசன்
அணிகிளர் மயிலேறி யாடும் பிரகாசன்
ஐயன் மலரிணைச் செய்ய பதந்தொழச் (சும்மா)

## 793. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ பரிசுத்த
மலர்ச்சோலை சூழ் தோகை மலைக்குமரா (சித்த)

அநுபல்லவி

வண்டணி மலர்க் கூந்தல் வள்ளி மனோகரா
தொண்டர் பணிசெய்யும் சுப ஆறுசேகரா (சித்த)

சரணம்

என்றனக் கிடர் வரா தென்றைக்குங் காவைய்யா
வுன்றனக் கடிமை யென்றுண்மையாய்ப் பாரய்யா
ஒருவர்க்குங் கிட்டிடாத வுபயமலர்ப் பாதா
திருவுற்றிடுங் குன்றைத் தென்மலை வருநாதா (சித்த)

## 794. ஏதுக்குச் செனன மெடுத்தேன்

பல்லவி

ஏதுக்குச் செனன மெடுத்தேன் நெஞ்சே யெடுத்து
யாதுக்கு முதவாமற் கெடுத்தேன் (ஏதுக்கு)

சரணங்கள்

1 வன்னவடி வேலனைக் கண்டு வேண்டும்
வரங்களெல்லாம் பெற்றுக் கொண்டு
இன்னம் பலபல பண்டு வினையெல்லாந் தீருமென்பது
வுண்டு என்றெண்ணி யிச்சையுடன் பணிந்து சொச்ச
வினை தீராமல் (ஏதுக்கு)

2 ஐயனை மனதில் மதித்து நிதம் அன்புடன் மலர்
கொடு துதித்து கையிற் சூல மெடுத்துக் கொதித்து
வரு காலனையோடிடக் கதித்து வென்று
கதியை யடைவதற்கு மதியை யறியாமல் (ஏதுக்கு)

3 குன்றைமலை வருவாசன் நல்ல கூர்வடிவேற் பிரகாசன்
நன்றுள்ள வள்ளிதன்னேசன் அன்பரை
நாளும் ரட்சிக்குங் குகேசன் தனைக்கண்டு
ரஞ்சிதமாகவே மிஞ்சிப் பணியாமல் (ஏதுக்கு)

## 795. இப்பிறப்பில் அருள்வாயோ

பல்லவி

இப்பிறப்பி லருள்வாயோ வினி
யெப்பிறப்பி லருள்வாயோ குகா (இப்பிறப்பில்)

சரணங்கள்

1 வானத்தவர்களும் ஞானத்தவர்களும்
தேனலப் பூமலர் கொடுதானற் புறப்பணி பாதா
(இப்பிறப்பில்)

2 சுகவடிவாகிய குககுருபரனே
அகமகிழ்வாய் நலமிக வருளேசெய் (இப்பிறப்பில்)

3 மன்றன் மலர்ப் பொழிற் குன்றை மலைநாதா
வென்றி யடியர்க்கு நன்றியை யுதவ (இப்பிறப்பில்)

## 796. எந்தன் மேற் றயவு செய்வாய்

பல்லவி

எந்தன் மேற் றயவுசெய்வாய்
சந்தமிகு குன்றை தன்னில் வருகுகா (எந்தன்)

சரணங்கள்

1 பூங்காவனத்துத் தினைப்புனத்துப் பரண்மேலே
தாங்காக் கிளியோட்டும் வள்ளிதனைப் புணர்தோளா
(எந்தன்)

2 அஞ்ச வேண்டாமென்று ஆர்சொல்வாரய்யனே
தஞ்சமினி வேறில்லை தற்காப்பாய் மெய்யனே (எந்தன்)

3 தானவர் பணிதரு சண்முக நாதனே
வானிலுயர் குன்றை மாமலையின் வேதனே (எந்தன்)

## 797. காத்துக் கொண்டேனய்யா

பல்லவி

காத்துக் கொண்டேனய்யா - வென்னைப்
பார்த்து ரட்சியய்யா (காத்து)

சரணங்கள்

1 ஆடு மயிலாளா அன்பர் தேடுமிரு தாளா (காத்து)

2 வள்ளி மனோகரனே தகட்டள்ளிலை வேற்கரனே
(காத்து)

3 குன்றுக் குடிவாசனே யன்பரை நன்றுட்கொளு
நேசனே (காத்து)

## 798. தயவுசெய் ஐயா

பல்லவி

தயவுசெய் ஐயா – நயமிகுங்
குன்றை நாதனே மெய்யா (தயவு)

சரணங்கள்

1 அமரர் பணிமலர்ப் பாதா செய
சமரச வயிற்கர நீதா (தயவு)

2 வாரண முகர் சகோதரா நான்கு
ஆரணம் புகழ் சிவவரா (தயவு)

3 தோகை மலைக் குருபரனே
வெற்றி வாகை புனைபுய வரனே (தயவு)

## 799. அண்ட நாயகனே

பல்லவி

அண்ட நாயகனே அன்பர் பணி
கொண்ட சீர்குகனே (அண்ட)

சரணங்கள்

1 ஆண்டவனே நீபமலர் பூண்ட பன்னிரு புயனே (அண்ட)
2 ஐயனே செக நாதனே பூதியணி மெய்யனே
மலர்ப்பாதனே (அண்ட)
3 குன்றக்குடிக் குமரனே அன்பரை நன்றுட்கொளும்
பரனே (அண்ட)

## 800. பாலகா பாலகா

பல்லவி

பாலகா பாலகா நீலமாமயிலேறும் நாயகா
நித்தனுர் பரிசுத்தனுரருள் (பாலகா)

சரணங்கள்

1 சந்திர சடாதரியாள் கர்த்தர் பால் வந்திடு முரியாள்
(பாலகா)

2 தெள்ளுதினைப் புனத்தாள் குறவள்ளி கன தனத்தாள் (பாலகா)

3 சுகமிகு தேனுள் அந்த மகபதி மாஞள் (பாலகா)

## 801. எப்போது வரந்தருவாய்

பல்லவி

எப்போது வரந்தருவாய்
முப்போது மன்பர் பணி முருகா (எப்போது)

சரணங்கள்

1 சூரரிலு மகா சூரன் முடி வீழ வார சேனை யெல்லா
மடிந்தவை தாழ
வதைக்க வதைக்க வுயிர்கள் பதைக்க பதைக்க வென்றவா
(எப்போது)

2 வாசமிகு நீபமாலை யணிந்த புயா நேசவன்பர்கள்
பணி நிதிய குணதயா
நிர்மல வடிவாளா கர்ம சேதன கோபா (எப்போது)

3 தங்குமுடி நிரைதங்குங் குன்ருக் குடியாய்
எங்கணு நிறைவாக விருக்குஞ் சண்முடியாய்
இச்சைக் கிசைந்தவன்பர் தம்பால் பட்சம் வைத்தருள்
குகா (எப்போது)

## 802. கதி வேறில்லை ஐயா

பல்லவி

கதி வேறில்லை ஐயா – மதிதாவிய
குன்றை மாமலை ஐயா (கதி)

அநுபல்லவி

வேத முடிவாலும் விளங்கரும் பொருளே
நாத வேதாந்தத்தி ஞடிய வருளே (கதி)

சரணம்

தேடக்கிடையாத தித்திக்குந் தேனே
நாடக் கிடையாத நலப் பெருமானே
குன்ருக்குடி வளர் குருபர நாதா
நன்ருயெனைக் காக்கும் நன்மலர்ப் பாதா (கதி)

## 803. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ ஐயாவுன் சித்த மெப்படியோ
பத்தர் பணி குன்றைப் பரனே யரனே (சித்த)

சரணங்கள்

1 வால சண்முககுக ஞாலம் புகழ்பவ மேலவர் பணிபவ
சீல குமரேசா (சித்த)

2 அந்தரவானவர் வந்தடி பணிபவ சந்தமிகு மயிற்கந்த
குருபர (சித்த)

3 மாமலர்ச் சோலைகள் பூமலரே பொழி தூமணி முடி
நிறை தேமலி சிகிமேரா (சித்த)

## 804. இதுவே சமயமய்யா

பல்லவி

இதுவே சமயமய்யா உனது சித்த மிரங்கி யருள (இதுவே)

அநுபல்லவி

விது தாவிய குன்றை மேரில் வருபவ
வித்தகனே யினி மெத்தவருள் செய்ய (இதுவே)

சரணங்கள்

1 சத்துரு சங்கார வேலா நிதம் பத்தர் பணி செயுங்காலா
பட்சம் வைத்தடியன் மேலிச்சை வைத்தருள (இதுவே)

2 தானவர் குலகாலா திவ்விய ஞானவுமை தருபாலா
ரஞ்சித மாகவே மிஞ்சிய வருள்செய்ய (இதுவே)

3 குன்றுக்குடிக் குமரேசா பத்தரை நன்றுட்கொள
வருநேசா நாயகனே யினித் தூய வருள்செய்ய
(இதுவே)

## 805. தண்டாயுத பாணி யென்றுல்

பல்லவி

தண்டாயுத பாணியென்று லண்டாது நோய் நாணி
(தண்டா)

சரணங்கள்

1 வஞ்சக வினைசோரும் நல மிஞ்சிய வருள்சேரும்
(தெண்டா)

2 பொல்லாப் பழிபோகும் இனியெல்லாப் பயனுமாகும்
(தண்டா)

3 ஞானத்துடன் சென்று குன்றைச் சந்நிதானத்திலே
நின்று (தண்டா)

## 806. நெஞ்சிரங்குவாய்

பல்லவி

நெஞ்சிரங்குவாய் மஞ்சிசூழ் குன்றை மாமலை வாசா
(நெஞ்சிரங்)

சரணங்கள்

1 கானக் குறத்தி தோளா நல்ல வானக் குயிலி யாளா
(நெஞ்சிரங்)

2 என்னைக் காக்குந் துரையே யென்றன்னைப்
பார்த்தருளுரையே (நெஞ்சிரங்)

3 தோகைமலை யற்புதனே வெற்றி வாகைபுனையும் பதனே
(நெஞ்சிரங்)

## 807. என்னை மறக்காதே

பல்லவி

என்னை மறக்காதே குகனே யுன்னை யடுத்தேனே
(என்னை)

சரணங்கள்

1 வேதத்துக்கு மெட்டா வுந்தன் பாதத்திற்கே யடிமை
கோதற்ற வருளாலே யெந்தன் பேதத்தைத் தள்ளியே
(என்னை)

2 வஞ்சக நோயகற்றி பொல்லா நெஞ்ச மலர்ச்சி
செய்தே
தஞ்சம் வேறில்லையய்யா வுந்தன் கஞ்சப் பதந்தந்தே
(என்னை)

3 பாகைப்பழி மொழியாள் குறத்தி ஓகைக் கிசைவடிவாய்
வாகைக் கனபுயனே யுயர்ந்த தோகைக் கிரி முருகா
(என்னை)

## 808. ஆதரிக்க வேணும்

பல்லவி

ஆதரிக்க வேணும் வந்து ஆதரிக்கவேணும் (ஆதரிக்க)

அநுபல்லவி

பூதலத்தோர் போற்றிய குன்றைமலைப் புண்ணியனே
சுப்பிரமண்ணியனே யென்னை (ஆதரிக்க)

சரணம்

1 களபகுங்கும முலைக்கன்னிகுறமாது கருத்துக் கிசைந்த
வொருத்தனே சாமி
யுளமகிழ்ந் தருளிய விந்திரன்மாது உகந்து மருவிய
சுகந்தமணி புயனே (ஆதரிக்க)

2 சதுரங்க சேனையுடன் சூரபத்மன் தனக்கிடர் செய்த
கனக்குமயில் வேலா
மதுநின்று ஒழுகிய சேயிதழ் நீபமென் மாலையணிந்திடு
கோலமிகும் புயா (ஆதரிக்க)

3 சோலை நிறைந்திடு மலைத்துரைக் குமரேசா பொன்
வரைப்பரமேசா (ஆதரிக்க)
பாலைப் பழிக்கு மொழிப் பரமேசுவரி யருள் பாலகனே
நடஞ்செய் நீலமயிலோனே (ஆதரிக்க)

## 809. ஐயனைப் பணிவது ஞாயம்

பல்லவி

ஐயனைப் பணிவது ஞாயம் குன்றக்குடி
ஐயனைப் பணியாம வலைவது மாயம் (ஐயனை)

சரணங்கள்

1 காத காதம் போயலைந்தாலும் வந்து வேதனை தனை
மிலைந்தாலும் நல்ல
வித்தகனைப் பரிசுத்தனை முத்தனை (ஐயனை)

2 காசித் தீர்த்தத் திலாடினாலும் மேலும் வாசிவேலையைத்
தேடினாலும் பொல்லா
மாயனைப் பத்தர்கணேயனைச் சேயனை (ஐயனை)

3 மெத்தத் தவங்களைச் செய்தாலும் சகல வித்தைக
ளெல்லா மெய்தாலும்
கூர்மை வேலனை யுமையவன் பாலனைக் கோலனை
(ஐயனை)

## 810. இப்படிச் செய்யலாமோ

பல்லவி

இப்படிச் செய்யலாமோ மைப்படியுங் குன்றை வள்ளி
மணாளா (இப்படி)

சரணங்கள்

1 மாயப் பிறப்பில் வந்து பிறக்கவும் மறுபடி வீழ்ந்து மாய்ந்து
இறக்கவும்
தேயும் பிணிதனுற் சிக்கிக் கொண்டலையவும்
சித்தங் கலங்கித் தேகமுலையவும் (இப்படி)

2 கரும வினையிற் கலந்துதுள்ளவும் கண்ட பேரெல்லாங்
கசந்து எள்ளவும்
பெருமிதத்தினுற் பேச்சுக் கிடைக்கவும் பித்துக் கொண்டா
னென்று பிடித்து அடிக்கவும் (இப்படி)

3 சாமி செகண்டிமலைச் சண்முக நாதா சருவ தயாபரா
சண்முக நீதா
பருவ மதிபுனை பரமரருள் பாலா பதும மலர்ச்சரண
பச்சைமயில் வேலா (இப்படி)

## 811. அற்புத மற்புதம்

பல்லவி

அற்புத மற்புதம் விற்கொடு முடிக்குன்றை மெய்யன்
தரிசனம் (அற்புதம்)

சரணம்

1 வள்ளி மணாளன் சுப்பிர மண்ணிய நிர்த்தன்
புள்ளி மயிலேறும் புண்ணியன் தரிசனம் (அற்புதம்)

2 வடிவேலாற் சூரனை வன்புடன் வென்றேன்
அடியவர் தங்களுக் கன்பன் தரிசனம் (அற்புதம்)

3 குன்றுக் குடிவளர் குமர குருபரன்
பொன்னார் புனைபுய பூசிதன் தரிசனம் (அற்புதம்)

## 812. குகனை மறவாதே மனமே

பல்லவி

குகனை மறவாதே மனமே மகபதி தொழுங் குன்றைமாமலை
வாழுங் (குகனை)

சரணங்கள்

1 அந்தர வானவர் வந்தடி பணியுங் (குகனை)
2 தொண்டர்கள் துதிக்கும் அண்டர் கணுதனை (குகனை)
3 பைந்தமிழ் சொலுஞ் சம்பந்தனைக் கந்தனை (குகனை)

## 813. இந்தச் செனன மேதுக்கு

பல்லவி

இந்தச் செனன மேதுக்கு பந்தத்திலே யகப்பட்ட (இந்த)

அநுபல்லவி

பந்தத்திலே யகப்பட்டுக் கெட்டுத் திரியும் (இந்த)

சரணங்கள்

1 வந்து கருவிற் பிறந்து திரும்ப நொந்து அலைந்து
இறந்து போகும் சாகும் (இந்த)
2 மாத ராசையிற்றிரிந்து திரும்ப மோது மோகத்திற்
பிரிந்து சேரும் சோரும் (இந்த)
3 மன்றன் மலர்ப்பொழில் சூழும் உயர்ந்த குன்றைமலைக்
கிரிவாழும் குகனே குகனே (இந்த)

## 814. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா குன்றை வரைக்குகா யீசா (துரைக்)

சரணங்கள்

1 வந்த வினையைத் தீரா யுந்தன்கடைக் கண்பாராய்
(துரைக்)
2 குறை தவிர்த்திடுவாய் கறை தவிர்த்திடுவாய் (துரைக்)
3 தோகைமலை நாதா வாகை புனையு நீதா (துரைக்)

## 815. கருணைக் கடலை நாடிக்கொள்

பல்லவி

கருணைக்கடலை நாடிக்கொள் நெஞ்சே குன்றை
வருமற்புதனைத் தேடிக்கொள் (கருணை)

அநுபல்லவி

வாசக் கடம்பணி புயாசல நாதனை
நேசக் குறமின் சேருமுல்லாச பூம்பாதனை (கருணை)

சரணம்

தேவர்க்கு நலநிறை மூவர்க்கு மீசனை
யாவர்க்கும் வரஞ்செய்யுஞ் சேவற் குகேசனை
அடியவர் தங்களை மிடிதீரப் பார்த்தோனை
படிபுகழுங் குன்ருக் குடிவளர் மூத்தோனை (கருணை)

## 816. வருத்த மென்ன சொல்லுவாய்

பல்லவி

வருத்த மென்ன சொல்லுவாய் - மனமே
திருத்தமான குன்றைத் தேவனைப் பணிய (வருத்த)

சரணம்

1 வஞ்சகம் பேய் பில்லி போகுமே யுனக்கு
மிஞ்சிய செல்வ முண்டாகுமே (வருத்த)
2 ஆசைக் கடலைவிட்டு நீக்குமே பொல்லா
மோசத்தில் வாரதெல்லாம் போக்குமே யுனக்கு (வருத்த)
3 அடியவ ரனைவரு மதிக்க வுயர் குன்றைக்
குடிவள ரய்யனைத் துதிக்க வுனக்கு (வருத்த)

## 817. தீராத வினைதீர்ப்பாய்

பல்லவி

தீராத வினைதீர்ப்பாய் - கடைக்கண்ணுல்
நேராக வந்து பார்ப்பாய் (தீராத)

சரணங்கள்

1 மெய்யனே பன்னிரு கையனே யெங்கு நிறை
துய்யனே சாமி (தீராத)
2 அந்தர வானவர் (அடி) வருடி பணிபுரி
கந்தனே ஞான சம்பந்தனே சாமி (தீராத)
3 மன்றலம் பொழிலுறை குன்றையின் மலைவளர்
நன்றருள் புரிகுக குன்றைவில்லி புதல்வா (தீராத)

## 818. இப்படி யலையலாமோ

பல்லவி

இப்படி யலையலாமோ - சென்மமெடுத்து இப்படி
யலையலாமோ (இப்படி)

அநுபல்லவி

மைப்படியுங் குன்றைமலைக் குமரேசா நான் (இப்படி)

சரணம்

1 பெண்டு பிள்ளைகள் பண்டம் பதார்த்தமென்றும்
கண்டதெல்லாமினிக் கொண்டிட வேணுமென்றும்
(இப்படி)

2 பொல்லாத தீவினை யெல்லா மனுபவித்தும்
இல்லாத காரியம் எல்லா மனுபவித்தும் (இப்படி)

3 மகிமை யடியவர்க்கு மிகவு மருள் புரியும்
அகில மெல்லாந்துதி சிகிமலை வருநாதா (இப்படி)

## 819. பாத தரிசனந் தருவாயே

பல்லவி

பாத தரிசனந் தருவாயே - யெந்தன்
மீது தயவு செய்ய வருவாயே (பாத தரி)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை லோலா நடனப் புள்ளி மயில்
வேலா நீப
வாசனே யன்பர் கணேசனே சாமி (பாத தரி)

2 அடியவர் தஞ்சகாயா குன்றுக் குடிவளர் கனிவாயா நல்ல
குகனே யாறுமுகனே சாமி (பாத தரி)

3 சங்கர ரருணுதா நாளுமிங்கித நீதா யார்க்கும்
இச்சையனே யாடும் பச்சை மயிலோனே (பாத தரி)

## 820. நினைத்ததெல்லாம் வருமே

பல்லவி

நினைத்ததெல்லாம் வருமே குன்றை
வணக்குக குருபரன் மலரடி கண்டால் நெஞ்சமே (நினைத்)

சரணங்கள்

1 அந்தர வானவர் மிடிதீர எதிர் வந்த வசுரன்
செயலெல்லாஞ் சேர சாக வதைத்தவனைக் குடியைச்
சிதைத்தவனைத் துதித்தால்
(நினைத்)

2 தொண்டர்கள் தீவினை போகவே யந்த எண்டிசையு
மதிராகவே காலால் எட்டி நடனமிடுங் கெட்டி
மயிலாளனை
(நினைத்)

3 வடியுறு வேலவணி கையனைக் குன்றுக் குடிவளர் பூதியணி
மெய்யனை யருள் குமரனை யெதிர்பவர் சமரனைத் துதித்தால்
(நினைத்)

## 821. எனக்காதர வாரய்யா

பல்லவி

எனக்காதர வாரய்யா புனச்சோலையின் பூபா (எனக்)

அநுபல்லவி

புனச்சோலையின் குன்றைப் பூபா காண்டீபா (எனக்)

சரணங்கள்

1 தேவாதி தேவர் பணி பாதா கற்பகக்
காவான வருக்கிசை நாதா
பாவாற் பதிகம் பாடு நாவா வருள் செய்ய (எனக்)

2 சங்கர ரருளிய பாலா நய விங்கித குறமகள் லோலா
பங்கச மலர்நிகர் துங்க மலரடியாய் (எனக்)

3 வால வடிவுள்ள வயிலா திவ்விய கோல நிறைந்திடு மயிலா
மாலயன் தேடிய சீலமிகு சிகியா (எனக்)

## 822. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் மாயோன் மகிழ் மருகா முருகா
(நீயே)

சரணங்கள்

1 மண்ணவர் பணிதாளனே யுயர் விண்ணவரரசாளனே
(நீயே)

2 கங்காதரர் பாலனே நாளு மங்காதவர் கோலனே (நீயே)

3 மாகமுயர் தோகையாய் வள்ளி மோகமிகு மோகையாய்
(நீயே)

## 823, சஞ்சல மேதுனக்கு

பல்லவி

சஞ்சல மேதுனக்கு மனமே (சஞ்சல)

அநுபல்லவி

மஞ்சடர் பொழிற்குன்றை மன்னன்ற னடிபோற்று (சஞ்சல)

சரணங்கள்

1 கால பயமுனக்கு வாராதே யினி மேலும் பிணி யுனக்குச்
சேராதே
ஐயனைக் கண்டு மிகுந்தன்பு கொண்டு பணியவே (சஞ்சல)

2 ஏவல் பிணி சூனிய மண்டாதே மற்ற நோவுகளு முன்னிட
மிண்டாதே யினி
நூருயிரந்தர மாருமற் போற்று (சஞ்சல)

3 தோகை மலைக் குருபரனை வெற்றி வாகை புனையு
மயிற்கரனை நீப
வாசனைக் குறவள்ளி நேசனைப் போற்றுவாய் (சஞ்சல)

## 824. சற்றே கடைக்கண் பார்க்க லாகாதோ

பல்லவி

சற்றே கடைக்கண் பார்க்க லாகாதோ
கர்த்தனே குன்றைமலை முத்தனே சித்தனே (சற்றே)

சரணங்கள்

1 உன்னைப் பணியத் தவம் செய்யாதவ னானாலும்
என்னைத் தயவு வைத்து இன்பமுடன் மேலும் (சற்றே)

2 அறியாத புத்தியினாலே தேடாவிட்டாலும்
குறியாதுனை யன்பு கொண்டு நாடா விட்டாலும் (சற்றே)

3 ஐயனே யன்பருக் கருளிய நேசனே
துய்யனே குன்றைமலைத் துரைக்குமரேசனே (சற்றே)

## 825. நெஞ்சே வேறொன்று மோகியாதே

பல்லவி

நெஞ்சே வேறொன்று மோகியாதே (நெஞ்சே)

அநுபல்லவி

கஞ்ச மலரோன் போற்றுங் குன்றுக் குடிவளர்
கர்த்தன் பதமலரை நித்தந் துதித்துக் கொள் (நெஞ்சே)

சரணங்கள்

1 காசிக்குப் போவோ மென்றெண்ணி பதற யோசித்துப்
பயணம் பண்ணி
யலையாதே உத்தமன் பாதத்தை நித்தந் துதித்துக் கொள்
(நெஞ்சே)

2 ஊசியைப் பூமிதனி னிறுத்தி யதன்மேல் வாசி யடக்கி
விரலுறுத்தி
அந்த மாதவஞ் செய்தென்ன நாதனைப் பணிந்துகொள்
(நெஞ்சே)

3 தலங்கடோறு மோடிப்போய்த் திரிந்து அங்கையின்முன்
இலங்குடனி லன்பாய்ப் பரிந்து பணிந்து
நிற்பதிற் குன்றை மலையப்பனைப் பணிவாய் (நெஞ்சே)

## 826. குகனே சரணமய்யா

பல்லவி

குகனே சரணமய்யா யாறு முகனே சரணமய்யா (குகனே)

அநுபல்லவி

அடியவருட பொருளே யடியவர் மிடிதவிர்த்திடு மருளே
(குகனே)

சரணம்

கான மின்னுள் தோளா திவ்விய ஞானவர் பணிதாளா
மாயவனுர் மருகா குன்றை நாயக சண்முக முருகா (குகனே)

## 827. இதைப்பார்க்க மந்திர முண்டென்றேன்

பல்லவி

இதைப்பார்க்க மந்திரமுண்டென்றேன் செபிக்கிருய்
நெஞ்சே (இதை)

அநுபல்லவி

விதைப் பார்க்கு முடிக்குன்றை வேலனுமை மிருக்க (இதை)

சரணங்கள்

1 குகனே குகனே குகனே யென்றெருதரங் கூறுவாய்
நெஞ்சே
செகனே செகனே செகனே யென்றெரு தரம் செப்புவாய்
நெஞ்சே (இதை)

2 சிவனே சிவனே சிவனே யென்றெருதரம் செலுத்துவாய்
நெஞ்சே
தவனே தவனே தவனே யென்றெருதரம் சாற்றுவாய்
நெஞ்சே (இதை)

3 அரனே யரனே யரனே யென்றுருதர மலறுவாய்
நெஞ்சே
பரனே பரனே பரனே யென்றுருதரம் பழகுவாய்
நெஞ்சே (இதை)

## 828. தரிசித்துக் கொள்ளுவாய்

பல்லவி

தரிசித்துக் கொள்ளுவாய் – நெஞ்சே துதி
பரிசுத்தமாய் விள்ளுவாய் (தரிசித்து)

அநுபல்லவி

நடன மயிலாளனை குற மடமயில் தோளனைத் (தரிசித்து)

சரணம்

மதிமுடியோன் பாலனை யன்பர் துதிபெறு மலர்க் காலனை
தோகை மலையோகனை வெற்றி வாகைபுனை வாகனைத்
(தரிசித்து)

## 829. ஆண்டவன் செயலெப்படி

பல்லவி

ஆண்டவன் செயலெப்படி யென்று நானறியேன்
குறியேனே (ஆண்ட)

அநுபல்லவி

தாண்டவம் செயுந்தோகை மயிலேறும்
தற்பர ஞான மெய்ப்பொருளான (ஆண்ட)

சரணங்கள்

1 இன்னங் கருவிற் செனன மெடுத்து
இறக்கச் செய்யுமோ பிறக்கச் செய்யுமோ
முன்னமெடுத்தது போது மென்றினி
முத்தி யளிக்குமோ சித்தி யளிக்குமோ (ஆண்ட)

2 தரித்திர மென்னும் சமுத்திரத் தென்னை
தாழச் செய்யுமோ மீளச் செய்யுமோ
அரித்திடும் பொல்லாப் பாவ வினைக்கு
ளலையச் செய்யுமோ தொலையச் செய்யுமோ (ஆண்ட)

3 நன்றாக வன்பர்கள் தங்களை நாளும்
ரட்சித் தன்புட னிச்சித் தாளும்
குன்றக் குடிவளர் குமரகுரு பரன்
கோலமஞ்ஞையன் வேலவன் குக (ஆண்ட)

## 830. நினைத்துக் கொள்வாய்

பல்லவி

நினைத்துக் கொள்வாய் மனமே அனைத்துலகும் போற்று
மய்யனை மெய்யனை (நினைத்)

அநுபல்லவி

வானுடர் பணிதேவ சேனுபதியை
மானுளாகிய கானுள் நிதியை (நினைத்)

சரணம்

புள்ளி மயிலேறு மள்ளிலே வேற்கையனை
துள்ளிய மயிலேறுந் தெள்ளிய பூதி மெய்யனை
ஆதியைத் திவ்விய செக சோதியை மேலான
நீதியைக் குன்றைமலே யாதியை யெப்போதும் (நினைத்)

## 831. என்ன கதி சொல்லையா

பல்லவி

என்ன கதி சொல்லையா வடியேனுக்கு என்ன
கதி சொல்லையா (என்ன)

அநுபல்லவி

வன்னமயிற் பரியாய் பொன்னின் சிகிக்கிரியாய் (என்ன)

சரணம்

1 இந்தப்படிசென்ன மெடுக்கச் சொல்வாயோ வல்லது
அந்தப் படிக்காகா தென்றதனை வெல்வாயோ (என்ன)
2 வம்புள்ள நோயதனை மாற்றி வைப்பாயோ வல்லது
இன்புறு கதியினி லேற்றி வைப்பாயோ (என்ன)
3 மன்ருடிய வையன் மகிழ்தருபாலா முடிக்
குன்ருக்குடி வருகோல மயில்வேலா (என்ன)

## 832. வன்ன மயிலாளா

பல்லவி

வன்ன மயிலாளா மின்னு சிகியாளா
காரணப் பொருளே ஆரண வருளே (வன்ன)

சரணங்கள்

1 அண்டர் நாதனே தொண்டர் நீதனே (வன்ன)
2 குன்றையில் வருவாய் நன்றியைத் தருவாய் (வன்ன)

## 833. எக்காலமுந் துதிப்பாய்

பல்லவி

எக்காலமுந் துதிப்பாய் - நெஞ்சே
எக்காலமுந் துதிப்பாய் (எக்கால)

அநுபல்லவி

முக்கால மண்டர் பணி மூர்த்தியை நேர்த்தியாய் (எக்கால)

சரணங்கள்

1 சமராடிய சூரன் றளங்கள் பொடிபடத் தாக்கிய
வடிவேலனை யன்பர்க்கு
நமனுர் வரும்போது அணுகாத படிக்கு நசுக்கிய
பொற்காலனை (எக்கால)

2 நடனமயிலி குற நாயகியாளுக்கு ரஞ்சிக்கு மணவாளனை
நல்ல
அடியவர் முதலின ரனுதினம் பரவிய வழகிய மலர்த்
தாளனை (எக்கால)

3 தோகைமலைக் கிசைந்த துரைக்குமரேசனைச் சுந்தர
முருகேசனை வெற்றி
வாகை யணிகின்ற பன்னிரு புயவேரனை மாயவன்
மருகேசனை (எக்கால)

## 834. மறக்காதே நெஞ்சே

பல்லவி

மறக்காதே நெஞ்சே சிறப்பான குன்றைமலைச் சேயனை
நாயனை (மறக்)

சரணங்கள்

1 வாசமலர்க் கடப்பமாலை யணிபுயனை
நேசமிகு குறத்தி நேரிழை சேர்புயனை (மறக்)

2 அடம்புரி சூருடனடல் புரிவேலனை
நடம்புரி மாமயிலுதனைக் கோலனை (மறக்)

3 அடியவர் தங்களை யாளும் சண்முகனை
படிபுகழ் குன்றைமலைப் பரமனைக் குகனை (மறக்)

## 835. என்றைக்குக் காண்பேனய்யா

பல்லவி

என்றைக்குக் காண்பேனய்யா
குன்றைக்கு வாய்த்திடுங் குருபர நாதனை (என்றை)

சரணங்கள்

1 பொற்பொருளாகிய தற்பரா பரனை
மைக்கண் சிறைமயிற் சைக்கன வேலனை (என்றை)
2 எங்கும் நிறைந்திடுந் தங்கப் பிரகாசனை
மங்கள மிகுந்த வலங்கிருத லோலனை (என்றை)
3 மருமலருகு பொழில் திருமுடி யுலவிய
அருமறை புகழ் சிகியொரு மலைவாசனை (என்றை)

## 836. அனுதின மையனைப் பணிந்துகொள்

பல்லவி

அனுதின மையனைப் பணிந்துகொள் - மனமே (அனு)

சரணங்கள்

1 கரும வினைகளைப் போக்குவார் நல்ல
பெருமித நயத்தை யுண்டாக்குவார் (அனு)
2 பொல்லாப் பழிகளை யோட்டுவார் இனி
யெல்லாப் பிழையையும் வாட்டுவார் (அனு)
3 மஞ்சார் பொழிற் குன்றை ஐயனை வாச
மிஞ்சார் பொடியணி மெய்யனை (அனு)

## 837. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே – யுன் பாதங்
கண்டாலது போதுங் காணியே (தண்டா)

சரணங்கள்

1 மாமலர்ச் சோலையிலே மகிழ்வார்கள் தேனே வெகு
காமலர் கிரியுடனே மணம்புரி பெருமானே (தண்டா)
2 அண்டர்கள் முனிவர் தொண்டர்கள் பணிதரு சரணு
எண்டிசையு மண மண்டியமலர் நீபாபரணு (தண்டா)
3 தங்க முடியுறை துங்க மயின்மலை நாதா
செங்கர வடிவேலா மங்கள கரகுக நீதா (தண்டா)

## 838. பத்தனிவனென்று எண்ணலையோ

பல்லவி

பத்தனிவனென்று எண்ணலையோ சாமி சித்த மகிழத் தயவு
பண்ணலையே (பத்த)

சரணங்கள்

1 வாசக்கடம்பணி புயனே நல்ல நேசக் குறத்திக்கிசை
நயனே என்னைப்
பாசத்தை நீக்கிப் பிரகாசப் பதவி செய்யப் (பத்த)

2 வந்த வசுரன் படைவீழ எதிர் முந்தியவனுயிர் தாழ
வென்ற
வல்லவனே யன்பர்க்கு நல்லவனே யினிப் (பத்த)

3 தோகை மலைக்கொரு வாசனே நாளும்
ஓகை புனையு முல்லாசனே என்னை
உரிமை யுடனே காத்தருளும்படிக்கையனே (பத்த)

## 839. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே அமரர் பயங்கரனே (குமர)

அநுபல்லவி

வடிவேல் முருகையனே பணியும் அடியார்க்கருள்
துய்யனே (குமர)

சரணம்

வீரப் பிரதாபனே யெதிர் சூரனையடு கோபனே
மலைக்குறமகள் தோளா குன்றைமலைத் துரையே யெனை
யாளாய் (குமர)

## 840. வேருதரவுண்டோ

பல்லவி

வேருதரவுண்டோ மாருடிய சூரை வதைத்தவா
சிதைத்தவா (வேருதர)

அநுபல்லவி

எந்தன் மனப்படி யினியருளள் புரித்திட வுமை
மைந்தனே பார்த்தென் மனமாரத் தெரிந்திட (வேருதர)

சரணம்

நீலமயிலேறு நிர்மல ரூபனே திவ்விய
வால சண்முக குக மாமலர் நீபனே
பொன்ருத மதுமலர்ப் பொழின்மிக மேவா முடிக்
குன்ருக்குடி வளர் குருபர தேவா (வேருதர)

## 841. நெஞ்சமே மறவாதே

பல்லவி

நெஞ்சமே மறவாதே மஞ்சார் பொழிற் குன்றைமலை
முருகேசனே (நெஞ்சமே)

அநுபல்லவி

கங்கை தரித்தவர் பாலனை நல்ல தங்க மயிலேறு கோலனை
(நெஞ்சமே)

சரணம்

வானவர் பணிதரு தாளனை தினைக் கானக மயில்புணர்
தோளனை
தோகை மலைக்கிசை வாசனை வெற்றி வாகை தரித்த
முருகேசனை (நெஞ்சமே)

## 842. மனதுக் கிசைந்தபடி தருவாய்

பல்லவி

மனதுக் கிசைந்தபடி தருவாய் திவ்விய கனக மயிலேறி
வருவாய் (மனதுக்)

சரணங்கள்

1 வாச நீறு புனையுந் தேகா எங்கும் பிரகாசமாய் விளங்கும்
யோகா (மனதுக்)
2 தாதவிழ் நீபமலர் வாகா வேடர்தன் மாதரசினிடப் பாகா
(மனதுக்)
3 தோகை மலைக்கிசைந்த மணியே வெற்றியின் வாகை
தரித்த புயவணியே (மனதுக்)

## 843. தயவு எப்போது வருமோ

பல்லவி

தயவு எப்போது வருமோ - வன்பர் வேண்டும்
நயமு மெப்போது தருமோ (தயவு)

சரணங்கள்

1 அமராடிய சூரனுயிர் கெடுத்து அந்த அமரேசனுக்கரசு
கொடுத்து ஆண்ட ஐயன் பன்னிரண்டு கையன்
பொடி யணி மெய்யன் எங்கணு நிறை துய்யன்
அடியர் மீது (தயவு)

2 வேலை சுவறத் தொட்ட வேலன் காதில்
ஓலை தரித்த மங்கை லோலன்
மிகுந்த உருக்கமுடன் கருணைப் பெருக்கமுடன் திவ்விய
விருப்பமுடன் பாசத் திருப்பதந் தந்திடத் (தயவு)

3 நன்னய ஞானசம்பந்தன் நடன
வன்ன மயிலேறுங் கந்தன் குன்றை வாசன்
மெய்ஞ்ஞானியர் நேசனிலகிய பிரகாசன்
குமர முருகேசன் அடியர் மீது (தயவு)

## 844: குக குருநாதா

பல்லவி

குக குருநாதா ஆறுமுக வருள்பாதா (குக)

சரணங்கள்

1 வாதடரயிலா ஆடிய கோதகல் மயிலா (குக)
2 அற்புத யோகா தூயதோர் பொற்புயர் தேகா (குக)
3 நின்ருட் கடியாரவர் தொழுங் குன்ருக் குடியா (குக)

## 845. வந்தாள வேணுமய்யா

பல்லவி

வந்தாள வேணுமய்யா – வனுக்கிரகந்
தந்தாள வேணுமய்யா (வந்தாள)

அநுபல்லவி

மயிலேறிய வீரா நாளும் ஒயிலாகிய தீரா (வந்தாள)

சரணம்

வானவர் பணி கோவே யினிய ஞானவர் பணி தேவே
உன்ருட் கடியர் நேசா முடியுயர் குன்ருக் குடியின் வாசா
(வந்தாள)

## 846. சாமி தயவே பெரிது

பல்லவி

சாமி தயவே பெரிது நெஞ்சே - கந்த
சாமி தயவே பெரிது
நேமிநாடனைப் போற்றி நிற்பதே அரிது (சாமி)

சரணங்கள்

1 பரப்பிரமமான வெளியை ஞானவன்
பருக்கிருளோட்டு மொளியை யந்தக் கந்த
(சாமி)

2 மாதவத்தவர் பொருளை வேத
வேதியர்க்கருளருளை யந்தக் கந்த (சாமி)

3 குன்றுக்குடிக் குகனை மலர்போன்
மென்றாட் குமர சண்முகனை யந்தக் கந்த (சாமி)

## 847. வந்தருடர வேணும்

பல்லவி

வந்தருடர வேணும் கந்தமலர்ப்
பொழிற் செகண்டியா யண்டினேன் (வந்தரு)

அநுபல்லவி

வானவர் சேனைபதியே ஞானவர் தேடிய நிதியே
தேனலர் மலரணியே ஞான சிகாமணியே (வந்தரு)

சரணம்

மங்கள வுமைதரு பாலா தங்க மயிலேறு கோலா
திங்கள் நிறைவதன சங்கரர் குருபரா
மன்றன் மலர்ப்பொழில் சூழும் குன்றைமலைக் கரசாளும்
வென்றி வடிவேலா நன்றருள் புரிந்திட (வந்தரு)

## 848. பாத தரிசனங் காணுவாய்

பல்லவி

பாத தரிசனங் காணுவாய் - ஐயனைக்
காதலுடன் மனதிற் பூணுவாய் (பாத)

சரணங்கள்

1 தீராத வினையெல்லாந் தீருமே
தீர்ந்து சேராத நலமெல்லாஞ் சேருமே
சாராத வினமெல்லாஞ் சாருமே
சேராத வினையெல்லாஞ் சோருமே ஐயனைப் (பாத)

2 இன்னங் கருவினிற் பிறக்காதே சொர்க்கம்
என்னுமது வொழிய விறக்காதே
சொன்ன சடாட்சரத்தை மறக்காதே துதிக்கும்
அன்ன சரித்திரத்தைத் துறக்காதே ஐயனைப் (பாத)

3 ஆடு மயிலேறி வருவாரே யெமனுடும்
பொழுதவனைப் பெருவாரே
தேடிய பொருளெல்லாந் தருவாரே
நீடிய நாளெல்லா மொருவாதே ஐயனைப் (பாத)

## 849. திருப்பாத தரிசனஞ் செய்குவாய்

பல்லவி

திருப்பாத தரிசனஞ் செய்குவாய் – மனமே
யுருப்பாழாகாம லினியுய்குவாய் (திருப்)

சரணங்கள்

1 நெஞ்சாரப் பொய் சொல்லலாகாதே யெங்கும்
அஞ்சாமற் றிரிந்து நீசாகாதே
கஞ்சாங் கலாதியாய்ப் போகாதே யெங்கள்
கர்த்தனைப் பரிசுத்தனைக் கண்டு (திருப்)

2 சங்கரர்க்குபதேச குருவை மகா
துங்க முனிவர் பணியுருவை
எங்கணு நின்றரு ளருவை யுன
திச்சையுடனந்தப் பச்சை மயிலோனை (திருப்)

3 குன்றுக்குடி வருவாசனை பத்த ரின்றும் விருட்கோர்
பிரகாசனை யன்பரை நன்றாக வாளுமுருகேசனை
வேத நாதனை திவ்விய போதனைக் கண்டு (திருப்)

## 850. கனக மயில்வாகனு

பல்லவி

கனக மயில்வாகனு தனன தனனதன திமிதிதிமிதிதிமி
யெனவு நடனமிடு வனமுலவிய செய (கனக)

சரணங்கள்

1 அண்டமு முயர்பகிரண்டமுமதிரிட
வெண்டிசையு நிறைய மண்டிய சிறை விரி (கனக)

2 அட்டகுல பர்வதமெட்டுங் கிடுகிடெனச்
சட்டமுட னடன மிட்டிடு சரணக் (கனக)

## 851. வடிவேலாயுதனே

பல்லவி

வடிவேலாயுதனே குன்றுக்குடி யரனுர் சுதனே (வடி)

சரணங்கள்

1 சூரன் படைகள் வீழ அவனுட
வீர மெல்லாந்தாழ அவன்றன்
மார்பது தான் போழ தொடுத்த
வன்ன மிலகிய மின்ன லொளியுயர் (வடி)

2 கூரது சிறக்கவே கடனீரது
வறக்கவே யதிலுள்ள
தோரெல்லா நிறக்கவே தொடுத்த
வுருவ மேறிய திருவுளாவிய (வடி)

3 வஞ்ச வவுணர்கள் களேக்க அந்த
மிஞ்சு மமரர்கள் கிளேக்கக் கிரவுஞ்ச
கிரிதனேத் துளேக்கத் தொடுத்த
ஓங்கும் பன்னிருகை யிற்றுங்குங் கிரணமிகு (வடி)

## 852. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் நின்னுடப் பத்தன்மேல்
விரும்ப வேணும் (சித்தந்)

சரணங்கள்

1 கந்தனே ஞான சம்பந்தனே சாமியினி
எந்தவிதமுமையா விந்த வேலேயருள (சித்தந்)

2 கூறு படையயிலா மீறுபடுமசுரரை வேறுபடச்
செயித்த ஆறுமுகக்குகாவுன் (சித்தந்)

3 மண்டிய பொழில்வளங் கொண்டிடு பணிமுடி
யெண்டிசையு மொளிர்செகண்டிமலே முருகா (சித்தந்)

## 853. மனதுக்கொரு திடஞ்சொல்வாயே

பல்லவி

மனதுக்கொரு திடஞ்சொல்வாயே மின்னுங்
கனக மயிலில் வந்து காத்தருளி நீயே (மனதுக்)

சரணங்கள்

1 கஞ்ச மலரிலகு சரணு மண மிஞ்சிய விதணிபாபரணு
பஞ்சினு மெல்லடியாளின் சொற்குயின் மொழியாள்
ரஞ்சித நயகுறவஞ்சி மணுளா (மனதுக்)

2 யாவர்க்கும் வரஞ்செய்யு மெய்யனே கூ.வுஞ்
சேவற் கொடியை யேந்துங் கையனே
தேவற்கிமிசை செய்யுங் காவற் படையோடெதிர்
மாவைக் கதிர் வேலினுற்ருவச் செயுநாதனே (மனதுக்)

3 வண்டின மதுவுண்டு சொலிக்கும் அதைக்
கண்டிளங் குயிலின மொலிக்கும்
மண்டிய சோலை வளங் கொண்டிடு முயர் பொற்செ
கண்டிமலை முருகா தொண்டனிவனென் றெண்ணி
(மனதுக்)

## 854. சமுகேசனே

பல்லவி

சமுகேசனே சாமி குமுகுமென வருவி கொண்ட
செகண்டி வாழும் (சமுகே)

சரணங்கள்

1 அண்டர்கள் கதிக்குந் தொண்டர்கள் துதிக்கும் (சமுகே)
2 வாராதோர் வந்தோர்க்குந் தீராதெல்லாந் தீர்க்கும்
(சமுகே)
3 முன்புதுதிகள் சொல்லும் அன்பர் வினையை
வெல்லும் (சமுகே)

## 855. இன்னமொரு தெய்வமுண்டோ

பல்லவி

இன்னமொரு தெய்வமுண்டோ நெஞ்சே குன்றைப்
பொன்னகர் தனில்வரு பொருப்பனிருக்க (இன்ன)

சரணங்கள்

1 நினைத்த படிக்கு முன்வந்து நாளு
முனக்கிசைந்த வருடந்து காக்கும்
வனக்குயிலான தனக்குறமாதை
மருவு முல்லாசன்போல் திருமுருகேசன் போல் (இன்ன)

2 கஞ்ச மலரடியைக் கண்டு திவ்விய வின்சொற்றுதி
பலவிண்டு
நெஞ்சுருகுமன்பரை தஞ்சமென ரட்சிக்கும்
என்னையனைப் போலப் பொன்னை யனைப்போல (இன்ன)

## 856. காக்க வேணும்

பல்லவி

காக்கவேணும் கடைக்கண் பார்க்க வேணும் (காக்க)

சரணங்கள்

1 காரணப் பொருளே சாமி ஆரணப் பொருளே (காக்க)
2 கந்தனே சாமி ஞானசம் பந்தனே சாமி (காக்க)
3 குலக் குகேசனே குன்றை மலைக்குகேசனே (காக்க)

## 857. கடைக்கண்ணுற் பாரய்யனே

பல்லவி

கடைக்கண்ணுற் பாரய்யனே
மடைக்கண்போல மலர்மது வழியுயர் வன
மண்டிய முடிசேர் செகண்டிமலை முருகா (கடைக்)

சரணங்கள்

1 பற்ம பதத்தனே யற்புத சித்தனே தற்பரமக்குக விற்பன
வித்தக (கடைக்)
2 நேசக் குறப்பெண்சேர் வாசக் கடம்பணி
யீசர்க்கருளும் பிரகாசக் குருபரா (கடைக்)
3 மங்கள வுமைதரு துங்கமிகு புதல்வா
தங்க மயிமா யிலங்கிய சிகிமலையா (கடைக்)

## 858. துதித்துக்கொள் மனமே

பல்லவி

துதித்துக்கொள் மனமே – ஐயனைப்
பதித்துக்கொள் மனமே (துதி)

சரணங்கள்

1 தேடிக்கொள் மனமே ஐயனைப் பாடிக்கொள் மனமே
(துதி)

2 தூண்டிக்கொள் மனமே ஐயனை வேண்டிக் கொள் மனமே (துதி)

3 துணிந்துகொள் மனமே ஐயனைப் பணிந்துகொள் மனமே (துதி)

## 859. புகல் வேறில்லையே

பல்லவி

புகல் வேறில்லையே யந்த மகபதி பணி குன்றை மலைக்குரு
நாதா (புகல்)

சரணங்கள்

1 வானவர்க் கிடர் செய்யும் தானவர் படையெல்லாம்
கானடைந்திட வென்ற மான நற் கதிர் வேலா (புகல்)

2 பத்தர்கள் பரிவொடு சித்தர்கள் பணிபுரி
சுத்த நவரெத்தின மொய்த்த தண்டைக்காலா (புகல்)

3 கொண்டல் தவழ்பொழில் மண்டி வளரும்செ
கண்டிமலை வரும் அண்டர்தம் நாயகா (புகல்)

## 860. பார்க்க வேணுமய்யனே

பல்லவி

பார்க்க வேணுமய்யனே கடைக்கண்ணுற் பார்க்க வேணு
மய்யனே (பார்க்க)

சரணங்கள்

1 எந்தன் வினைதீர வுந்தன் கடைக்கண்ணுற் (பார்க்க)

2 என்னிரு வினைதீரப் பன்னிரு கடைக் கண்ணுற் (பார்க்க)

3 அகண்ட பரிபூரணு செகண்டி மலையாய் கடைக்கண்ணுற் (பார்க்க)

## 861. சரவண பவவென மதிப்பாயே

பல்லவி

சரவண பவவென மதிப்பாயே நெஞ்சே ஐயனைக்
கரமலர் முகிழ்த்தினிது துதிப்பாயே (சரவண)

சரணங்கள்

1 பஞ்சாட்சர மணிமெய்யனை யொரு
பன்னிரண்டாகிய கையனை
மிஞ்சக மில்லாத் திரதுய்யனை யருள்
விளங்கு மற்புத முரு கையனைச் (சரவண)

2 வேதாந்த முடிவின் பொருளை யதற்கு
மேலாகிய தொருவருளை
நாதாந்த முடிவான தெருளை யணிய
நாடாத வன்பர் மனவிருளைச் (சரவண)

3 குன்றுக்குடி மலைவாசனை யாடுங் கோலமயிற் பிரகாசனை
நன்றான யன்பர்க்கிசை நேசனை செக
நாதனைக் குக குமரேசனைச் (சரவண)

## 862. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் விருப்பாக மயின்மீது வரவேணும்
(திருப்)

சரணங்கள்

1 குமர குருபரனே யமரர் பயங்கரனே (திருப்)

2 சங்கர சண்முகா மங்கள மிகுகுகா (திருப்)

3 அரவணி சிவனே சரவண பவனே (திருப்)

## 863. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே மஞ்சார் பொழிற்குன்றைமலை
முருகேசனை (நெஞ்சே)

அநுபல்லவி

ஆடிய சிறைமயில் வாகனை யன்பர் தேடிய வரிதான
யோகனை (நெஞ்சே)

சரணம்

கானக மாதுதன் னேசனை யந்த வானவர்க்கிசையுள வாசனை
தோகை மலைக்குருபரனை வெற்றி வாகைபுனை புயவரனை
(நெஞ்சே)

## 864. கண்டுகொள் மனமே

பல்லவி

கண்டுகொள் மனமே ஐயனைப் பணி தொண்டுகொள்
மனமே (கண்டு)

சரணங்கள்

1 வாதடர் சூரனை மோதிய வீரனைக் (கண்டு)
2 கூரிய வேலனைச் சீரிய கோலனைக் (கண்டு)
3 ஆடிய மயிலனை மோடிக்கை யயிலனைக் (கண்டு)

## 865. வித்தகனே குகனே

பல்லவி

வித்தகனே குகனே நிதம் பத்தர் பணியுங் குன்றைப்
பரனே திரனே (வித்தகனே)

அநுபல்லவி

அண்டின பேரைக் காக்குமய்யனே மெய்யனே
தொண்டர்கள் தம்மைக் காக்குந் தூயனே நாயனே
(வித்தகனே)

சரணம்

சாடிவரு சூரொடு சமரனே குமரனே
தேடிய குறமயில் சீலனே லோலனே
குன்றுக்குடிவளர் கோலனே வேலனே
நின்றாடிய மயில் நீதனே நாதனே (வித்தகனே)

## 866. சுப்பய்யா அருள்வதெப்பய்யா

பல்லவி

சுப்பய்யா அருள்வதெப்பய்யா (சுப்பய்யா)

சரணங்கள்

1 வேலனே வள்ளி லோலனே (சுப்பய்யா)
2 கந்தனே ஞானசம்பந்தனே (சுப்பய்யா)
3 குமரனே சூருடன் சமரனே (சுப்பய்யா)

## 867. சொன்ன மயிலின் வாகா

பல்லவி

சொன்ன மயிலின் வாகா மின்னு பஞ்சாட்சரந் துன்னிய
தேகா
(சொன்ன)

சரணங்கள்

1 கனக தண்டைக்காலா வனமயிலின் மாலா (சொன்ன)
2 வாகை புனையுந் தோளா டாகை புனையுந் தாளா (சொன்ன)
3 குன்றுக்குடி வேலாவின்றாட் கொள்வை சீலா (சொன்ன)

## 868. சாமி சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சாமி சித்தந் திரும்ப வேணும் இந்தப்
பூமி புகழுங் குன்றைப் புண்ணிய சுப்பிரமண்ணிய (சாமி)

சரணங்கள்

1 எங்கும் நிறைந்தொளி யாயிருக்கும் நாளும்
பொங்குங் கருணை தானே பெருக்கும் (சாமி)

2 முன்னிகல் புரிசூரன் றுடிக்கும் படியாகப்
பன்னிருகையில் வேலைப் பிடிக்கும் (சாமி)

3 என்றைக்கு மன்பரிட முறையும் முடிக்
குன்றைக் கிரியதனி லுறையும் (சாமி)

## 869: சித்தந் திரும்பவில்லையா

பல்லவி

சித்தந் திரும்ப வில்லையா வுன்னுட
பத்தனிடம் வார்த்தை சொல்லையா (சித்தந்)

சரணங்கள்

1 நடனமிடு மயில்வாகா குற மடமகளாளிடப்பாகா
அடமுள சூருடனுடல் பிளந்திடும் வேலா (சித்தந்)

2 வாச மிகுந்திடு நீபா முருகேச வமரர் பணிபூபா
ஈசர் தமக்கு வுபதேச குருநாதா (சித்தந்)

3 மண்டிய மலர்ப் பொழிற் சீரும் அந்த
எண்டிசையும் புகழ்சேரும்
கொண்டல் தவழுஞ் செகண்டிமலைநாதா (சித்தந்)

## 870. மறக்க வேண்டாம் நெஞ்சமே

பல்லவி

மறக்க வேண்டாம் நெஞ்சமே துறக்க நாடர் பணிதுரைக்
குமரேசனை (மறக்க)

சரணங்கள்

1 சமரசவுரிய பலசூரனை மார்புதான் பகர்ந்திடச்செய்
வேலனை
குமரசண்முக குக நாதனை சிவ குருபர சரவண
சீலனை (மறக்க)

2 திவ்விய லட்சண ரூபனை குறத் தேவியை மேவிய
தோளனை
அவ்விய மெல்லாந் தீர்த்து அன்பரை (யின்புட)
ஞுண்டருளுந் தண்டைத் தாளனை (மறக்க)

3 மலர்முகைவிண்டு தேனொழுகும் அதில் வளருஞ்
சென்னெல் விளை நாடனை
யலர்தலை யுலகெங்குந் துதிக்குங் குன்றை யம்பதி
யறுபடை வீடனை (மறக்க)

## 871. ஆறுமுக வொயிலா

பல்லவி

ஆறுமுக வொயிலா ஏந்துங் கூறுப்டை யயிலா (ஆறுமுக)

அநுபல்லவி

அன்பர் மகிழ மிக வின்ப மதாகவே
முன்பு வந்தினியருள் தென்புடனே செயும் (ஆறுமுக)

சரணங்கள்

மிஞ்சிய வழகுள ரஞ்சித மாகிய
வஞ்சி குற மகளிற் கெஞ்சிய மயலாளா
படிமிசை யுயர்கின்ற முடிபுனை யுயர் குன்ருக்
குடிவளர் குருபர வடியனை யாண்டருள் (ஆறுமுக)

## 872. தத்துவப் பொருளே

பல்லவி

தத்துவப் பொருளே பணியா சுத்தியின் மருளே (தத்துவ)

சரணங்கள்

1 ஆரண வடிவே யன்பர் பூரண விடிவே (தத்துவ)
2 அண்டர்கள் நாதா வணி தொண்டர்கள் நீதா (தத்துவ)
3 குன்றையின் மேரா சூரனை வென்றிடு சூரா (தத்துவ)

## 873. சண்முக குருவே

பல்லவி

சண்முக குருவே விண்முக வுருவே
பரகதி தருவாய் உரமயில் வருவாய் (சண்முக)

சரணம்

சங்கரர் பாலா விங்கித வேலா
குன்றையம் பதியாய் யென்றவர் நிதியாய் (சண்முக)

## 874. கண்டுகொள் மனதே

பல்லவி

கண்டுகொள் மனதே கண்டுதுதி விண்டுகொள் தனதே
(கண்டு)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப் புனவள்ளி மருவிய
புள்ளி மயிலேறும் அள்ளிலை வடிவேலனைக் (கண்டு)

2 விதுதவழ் சடைமுடி முதுபரம் பொருளருள்
மது மலரணிபுய பதும சரணனைக் (கண்டு)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றையின் மலைக்கிசை
யென்று மடியருக்கு நன்றருள் செய்வோனைக் (கண்டு)

## 875. பாலகா குமரா

பல்லவி

பாலகா குமரா ஞாலம் புகழுங் குன்றைக்குடி நாதனே
மலர்ப்பாதனே யரன் (பாலகா)

சரணங்கள்

1 சந்திர சடாதரனுர் மான் மழு வுந்தரிக்குங் கரனுர்
நந்தியில் வருமரனுர் எங்குநிரந்தரமாம் பரனுர் (பாலகா)

2 பஞ்சாட்சர மெய்யனுர் செபிக்கும் அஞ்சாட்சரத் தூய்யனுர்
மிஞ்சாழியின் கையனுர் நதியுமை யுஞ்சாரருளையனுர்
(பாலகா)

3 செய்யுமகா தபோதனுர் அன்பிற் பணிசெய்யு மலரின்
பதனுர்
வையம் புகழும் நாதனுர் அருளிய மெய்யன்புடைய நீதனுர்
(பாலகா)

## 876. செய்ய வேணுமையா

பல்லவி

செய்ய வேணுமையா வனுக்கிரகஞ் செய்ய வேணுமையா
(செய்ய)

சரணங்கள்

1 வையம் புகழுங்குன்றை மாமலை வந்த சாமி யென்
கந்தசாமி நீ (செய்ய)
2 உந்தனடிமை யெந்தனிடத்தில் வந்தனுபூதி
யிந்த வேளை நீ (செய்ய)
3 எத்தனை நாளோ பத்தனாய் வந்தேன் கர்த்தனே யருள்
சித்தமிரங்கி (செய்ய)
4 மன்றல் சேர் பொழில் துன்று தோகையின் குன்றை
மலையினின்ற நாயகா (செய்ய)

## 877. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ குன்றைக் கர்த்தனே யிருளாயோ (சித்த)

சரணங்கள்

1 பராபரப் பொருளே பணி சுராசுரற் கருளே (சித்த)
2 ஞான வந்திதனே யன்பர் தியான சிந்திதனே (சித்த)
3 குன்றை யினுதா வெனக்கரு ளின்றுசெய் நீதா (சித்த)

## 878. பார்க்க வேணுமையனே

பல்லவி

பார்க்க மேணுமையனே கடைக்கண் பார்க்க வேணுமையனே
(பார்க்க)

சரணங்கள்

1 தீர்க்கமானமுடி யோக்கியமாகிய செகண்டிமலை முருகா
அகண்ட பரிபூரணா (பார்க்க)
2 எந்த நலமும் சேர வந்த வினைகள் தீர
எல்லா நலமுண்டாக பொல்லா வினைகள் போக
தோகைமலை யினின்று ஓகைபுனை நின்று (பார்க்க)

## 879. குகனே குகனே

பல்லவி

குகனே குகனே யாறு முகனே முகனே (குகனே)

சரணங்கள்

1 வரதா வரதா சஷ்டி விரதா விரதா (குகனே)
2 குமரா குமரா சூரன் சமரா சமரா (குகனே)
3 கலையா கலையா குன்றை மலையா மலையா (குகனே)

## 880. தஞ்சம் வேறில்லை ஐயா

பல்லவி

தஞ்சம் வேறில்லை ஐயா – மஞ்சுநிறை குன்றைமலைக்
குருநாதா (தஞ்சம்)

சரணங்கள்

1 கொந்தலர் நீபமென் கோலமலர்த் தோளா
வந்தடியவர் பணிவனச மென்ருளா (தஞ்சம்)

2 கானக மாமயிற் கன்னிதன் பாகா
வானக மயிலுக்கு வாய்த்திடு யோகா (தஞ்சம்)

3 தொண்டர்கள் நிதமடி தொழும் சிகிநாதா
வண்டனெனுஞ் சூரனை மாய்த்திடும் சூதா (தஞ்சம்)

## 881. கண்டு தரிசனம் செய்வாய்

பல்லவி

கண்டு தரிசனம் செய்வாய் – நெஞ்சே
வண்டுலவிய சோலை மயின்மலை யரசைக் (கண்டு)

சரணங்கள்

1 அண்டர் பணியும் சண்முகேசனைப் பணியுந்
தொண்டர்க் குகந்திடு நன்னேசனைக் (கண்டு)

2 சங்கர சண்முக நாதனை வாசப்
பங்கய மலரிணைப் பாதனைக் (கண்டு)

3 மங்கள குககுரு பரனை யுயர்
துங்க மயின்மலை யரனைக் (கண்டு)

## 882. இதுபோதும் நெஞ்சே

பல்லவி

இதுபோதும் நெஞ்சே இதுபோதும் (இது)

அநுபல்லவி

மதுமலர்ச் சோலைநிறை மயின்மலை ஐயன் பாதம் (இது)

சரணங்கள்

1 நேர்த்தியின் மலர்கொடு சாத்தி யடியர்துதி
யேத்திப் பணியுமையன் பூர்த்திகள் சரணந் (இது)

2 அண்டர் முனிவர்கள் கண்டனு தினம்பணி
வணடலர் மலர்நீபங் கொண்ட புயன்சரணம் (இது)

3 கந்தன் காழி ஞானசம்பந்தன் உமையவள்தன்
மைந்தன் குன்றுக்குடி வந்த குகன் சரணம் (இது)

## 883. கருத்தனே யென்னையாளாய்

பல்லவி

கருத்தனே யென்னை யாளாய் கருத்தனே யாளாய் (கருத்தனே)

அநுபல்லவி

திருத்தமாகிய குன்றைச் சேயனே மாயனே (கருத்ததனே)

சரணங்கள்

1 எங்கணு மணுவடிவா யிருக்கும் பராபரனே
பங்கய பாதமலர் பணிவோர்க் கருளரனே (கருத்னே)

2 வந்த வினையைத் தீர்த்து வைத்தருள் தருவாய்
தொந்தமென நின்றுடன் தோகைமேல் வருவாய்
(கருத்தனே)

3 சரவண பவகுக சண்முக குருவே
அரவணி சடையர னருளிய வுருவே (கருத்தனே)

## 884. பாதத்தை நம்பினுல் மனமே

பல்லவி

பா தத்தை நம்பினுல் மனமே - புத்தி
போதத்தைக் கொடுக்குந் தினமே (பாதத்தை)

சரணங்கள்

1 ஆதியனுதியு மாகி மகா நீதிய நீதியு மாகி
நித்திய சுபகர கர்த்த குருபரன் (பாதத்தை)

2 அண்ட பகிரண்டந் தானுய் இந்த வெண்டிசை யெங்கணுந்
தானுய் வளர்
எம்பிரா னறுமுகத் தம்பிரா னருளிய (பாதத்தை)

3 குன்றைமலைக் கிறை யய்யன் அன்பர்க் கென்று நலம்புரி
மெய்யன் வெகு
இச்சை யுள்ளவனுடும் பச்சைமயில் வாகன் (பாதத்தை)

## 885. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ - கந்தா யெந்தன்
ஆவியைக் காவாயோ (தீவினை)

சரணங்கள்

1 பங்கய பாதனே யன்பர்க் கிங்கித நாதனே (தீவினை)
2 அண்டர் சகாயனே பணி தொண்டர் கணேயனே (தீவினை)
3 தோகை மலையனே வெற்றி வாகை புனைபுயனே (தீவினை)

## 886. திருவருடருவாய்

பல்லவி

திருவருடருவாய் தருமலி சிகிமலை தனின் மிசை வருவாய் (திரு)

அநுபல்லவி

ஆனந்தத் தாண்டவஞ் செய்தாளனே குறத்தி
நாணங்கொள் குழலி பங்காளனே (திரு)

சரணம்

தண்டைச் சிலம்பணி காலனே திவ்விய
கொண்டை மயில் வருவேலனே
தோகைமலைக் கிசைந்த வாசனே வெற்றி
வாகை தரித்த குமரேசனே (திரு)

## 887. தயவு நீ செய்குவாய்

பல்லவி

தயவு நீ செய்குவாய் - நயமிகு குகனே
தயவு நீ செய்குவாய் (தயவு)

சரணங்கள்

1 கானக மாதுபங்கா வானமரர் பணிதுங்கா (தயவு)
2 அடியவர் பணிகாலா வடிவுறு கனவேலா (தயவு)
3 குன்றை மலையினுதா நன்றன்பர்க்கருள் பாதா (தயவு)

## 888. மாலை மார்பனே

பல்லவி

மாலை மார்பனே நீப வால வடிவேலனே (மாலை மார்பனே)

சரணங்கள்

1 காணக் கிடையாத வுருவே நெஞ்சிற்
பூணக் கிடையாத வருவே (மாலை மார்பனே)
2 மிஞ்சு மறுமுக வடிவே யன்பர்
நெஞ்சி னிருளறு விடிவே (மாலை மார்பனே)

3 அடியவர் மன நேசனே குன்றுக்
குடிவளர் முருகேசனே (மாலே மார்பனே)

## 889. வருவ தென்றைக்கோ

பல்லவி

வருவ தென்றைக்கோ வந்து வரந்தருவ தென்றைக்கோ
(வருவ)

சரணங்கள்

1 கனக தண்டையணி பாதன் திவ்விய வெவ்
வனமிகுந்திடு நாதன் (வருவ)
2 செங்கைக் கிசைந்த வேலன் சுககுற
மங்கைக் கிசைந்த லோலன் (வருவ)
3 குன்றுக்குடியில் வாசன் பத்தரை
நன்றுட் கொள்ளு மீசன் (வருவ)

## 890. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் கர்த்தனே யருள் செய்ய (சித்த)

அநுபல்லவி

தண்டைச் சிலம்பணி பாதா வன்பி னண்டர் பணிபுரி நாதா
(சித்த)

சரணம்

பாம்பணி பரமர்தம் மைந்தா வன்பர்
தாம்பணிபுரி செயுங் கந்தா
நாரணனுர் மகிழ்மருகா மகா
காரணனே குன்றை முருகா (சித்த)

## 891. நயஞ்செய்ய வேணும்

பல்லவி

நயஞ்செய்ய வேணும் – செயஞ்
செய்யுங் கூரிய திவ்விய வடிவேலா (நயஞ்)

அநுபல்லவி

அருமறை துதிபாதனே குறமாதைத்
திருமணம் புரிநாதனே (நயஞ்)

சரணம்

செகரட்சக குகேசனே நாள் தோறுஞ்
சுகவற்புத விலாசனே
மஞ்சடர் குன்றை யாளனே
சூரனை மிஞ்சடர் கனதோளனே (நயஞ்)

## 892. குகனே குகனே

பல்லவி

குகனே குகனே வருவாய்
ஆறுமுகனே முகனே தருவாய் (குகனே)

சரணங்கள்

1 வாது செய்து சமர் மோது மசுரனை மார்பின்
மீது வயிலைத் தொடுத்தேது களாக்கிய (குகனே)

2 சங்கர நாயகர் பங்காகு மாதுமை
துங்கமிகு புதல்வா மங்களகர (குகனே)

3 தும்புரு நாரதரும் புகழ் பொழிலுறை
சம்பிரமமிகு சிகியம்பதி தனில்வரு (குகனே)

## 893. மன்னுயிர்த் துணைவா

பல்லவி

மன்னுயிர்த் துணைவா மின்னுஞ்சிகிக் கிரியாய் (மன்னுயிர்)

சரணங்கள்

1 நீலமயிலில் வருவீரா வேலணி கரதல தீரா (மன்னுயிர்)

2 அண்டர் முனிவர் பணிபாதா வண்டலர் நீப பொன்னுதா
(மன்னுயிர்)

3 அகண்டபரி பூரணத் தேவே செகண்டி மலையில்
வருகோவே (மன்னுயிர்)

## 894. செய்ய வேணுமையனே

பல்லவி

செய்ய வேணு மையனே – வையகம்
புகழுங் குன்றை மலைமுருகேசா (செய்ய)

அநுபல்லவி

மாதுகுற வள்ளி லோலா திவ்விய போது மலர்நிகர் காலா
(செய்ய)

சரணம்

செகரட்சக சருவேசா நூறு மக முற்றவன் மருகேசா
தோகை மலைக்கிசை கோவே வெகு ஓகை புனை தரு தேவே
(செய்ய)

## 895. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் அதுவே பத்தர்களுக்கு வேணும்
(சித்தந்)

சரணங்கள்

1 அற்புத மலர்ப்பாதனே மணமலி பத்ம மலரின்
வேதனே (சித்தந்)

2 பச்சை மயிலின் முருகா நீலநிற வச்சுதன் மகிழ் மருகா
(சித்தந்)

3 அடியவர் பணிசரணு முடிகுன்றுக் குடிவளர் நீபா பரணு
(சித்தந்)

## 896. வால வடிவேலவா

பல்லவி

வால வடிவேலவா ஞாலம் புகழுங் குன்றை நாரணு பூரணு
(வால)

சரணங்கள்

1 சஞ்சித வினையைத் தீராய் கடைக்கண் பாராய்
நெஞ்சின் விசாரத்தைப் பேராய் மயிலில் வாராய் (வால)

2 தீவினை தன்னையே போக்காய் நயத்தை யுண்டாக்குவாய்
சாவினைக் காலனைத் தாக்காய் செனன நீக்காய் (வால)

3 குன்றுக் குடிக்கந்தனே ஞான சம்பந்தனே
மன்றுடியின் மைந்தனே நீப சுகந்தனே (வால)

## 897. சேவிக்க நினைமனமே

பல்லவி

சேவிக்க நினைமனமே (சேவிக்க)

அநுபல்லவி

ஆவிக்கு நயமுண்டு ஐயனு முருகையன் பாதத்தைச் (சேவிக்க)

சரணங்கள்

1 புகலு மன்பர்க்குப் பொருந்திய விதத்தைச்
சகலமுஞ் செய்யுந் தற்பரன் பதத்தைச் (சேவிக்க)

2 குறிய தாயெழுதிக் கொள்ளொணு வேத
மறியப் படாததோரற்புத பாதத்தைச் (சேவிக்க)

3 நீடிய வாசங் கொணீபா பரணத்தைச்
சூடியன வயன்றன் றுய்ய சரணத்தைச் (சேவிக்க)

## 898. எந்தனக் கொருவரம்

பல்லவி

எந்தனக் கொருவரம் வந்தரு ளினியே
பைந்தளிரிலகு சுகந்த மணிபுயனே (எந்தனக்)

சரணங்கள்

1 பத்தர் சகாயனே சித்திர மயிலோனே
சத்திசேருங் கரதலத்தோனே குகனே (எந்தனக்)

2 துங்க மிருந்திடு மங்கள கரமிகு
தங்கமுடிச் செகண்டி யங்கிரி வருபவா (எந்தனக்)

3 வன்ன மயிலிற் பிரசன்ன முடன்வரு
பன்னிரு புயநய வின்னருள் புரிவாய் (எந்தனக்)

## 899. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா எந்தன்முன் னேடிவா வொயிலா (ஆடிய)

சரணங்கள்

1 நாரணன் மருகா நான்கு ஆரண முருகா (ஆடிய)
2 சங்கரர் மைந்தா நீபமென் றுங்க சுகந்தா (ஆடிய)
3 முனிவர் சகாயா குறமக ளினிய நன்னேயா (ஆடிய)

## 900. தரவேணு மய்யனே

பல்லவி

தரவேணு மய்யனே யெந்தன்முன் வரவேணு மய்யனே (தரவே)

சரணங்கள்

1 வள்ளி மணாளனே மலர் எள்ளிய தாளனே (தரவே)
2 ஆடிய மயிலனே யன்பர் தேடிய வொயிலனே (தரவே)

## 901. சிவ சுப்பிரமணியனே

பல்லவி

சிவ சுப்பிரமணியனே தவமுனிவோர்கள் பணி சரண
புண்ணியனே (சிவ)

சரணங்கள்

1 மண்டல மெல்லாஞ் சுற்றுங் கொண்டை மயில்வாகனு
வண்டலர் மலர்நீபங் கொண்ட பன்னிரு புயா (சிவ)
2 ஒருவரு மறியாத விருபத சரணு
அருமறை துதிசெயுங் குருபர குமரா (சிவ)
3 சொன்ன மலையை நிகர் வன்னமயின் மலையாய்
நன்னய வன்பர்க்கு பிரசன்ன வடிவேலவா (சிவ)

## 902. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் உயர் செகண்டிமலை யொருத்தனே
கருத்தனே (தயவு)

அநுபல்லவி

தித்திதிமிதியென நிர்த்தன மிடுமயிற்
சுத்த வீரனே யரு ளுத்தமனே சாமி (தயவு)

சரணம்

வாரிதி சுவறிட சூரன்மார்பு கிழிபட
நேரடர் புரிசெய வீரசூர வேலவா
பொருப்பிலுயர் செகண்டி தருப்பொலி மலைவளர்
வருத்து மடியருக்கு அருட்செயு மமரேசா (தயவு)

## 903. என்றைக்குக் காப்பாயோ

பல்லவி

என்றைக்குக் காப்பாயோ குன்றைக்கு வரய்த்திடு
குமர குருபரா (என்றைக்கு)

சரணங்கள்

1 ஆதியந்த முமாக நிறைந்தவா காணுமற்
பேதிக்கு மடியாக மறைந்தவா (என்றைக்கு)

2 கானக மாது பங்காளா திவ்விய
ஞானவர் பணிபுரி தாளா (என்றைக்கு)

3 குன்றை யம்பதிவளர் தீபா அன்பரை
யென்றைக்குங் காத்திடு நீபா (என்றைக்கு)

## 904. நெஞ்சிரங்காயோ

பல்லவி

நெஞ்சிரங்காயோ மஞ்சடர் சிகிமலை வரு குருபரனே
(நெஞ்சி)

சரணங்கள்

1 வானவர் தேடிய பாதா அந்த ஞானவர் பாடிய நாதா
(நெஞ்சி)

2 பத்ம பத மலரய்யா நல்ல அற்புதமிகு திவ்விய துய்யா
(நெஞ்சி)

## 905. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா அன்பர் தேடிய வொயிலா (ஆடிய)

சரணங்கள்

1 கொஞ்சிய வாயா குறவள்ளி ரஞ்சித நேயா (ஆடிய)

2 பத்தர்கள் மித்திரா ஆனந்த நிர்த்தனர் புத்திரா (ஆடிய)

3 எங்கும் பிரகாசா எங்குந் தங்குங் கிரு பேசா (ஆடிய)

4 குன்றையினுதா அற்புத மின்றளிர்ப் பாதா (ஆடிய)

## 906. பத்தனுக் கருளாய்

பல்லவி

பத்தனுக் கருளாய் முத்தமிழ் பாடிய மூர்த்திகரா வரா
(பத்தனுக்)

சரணங்கள்

1 ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி (பத்தனுக்)

2 ஐயனே பொடியணி மெய்யனே சாமி (பத்தனுக்)
3 தோகையனே வெற்றி வாகையனே சாமி (பத்தனுக்)

## 907. குகனே குகனே

பல்லவி

குகனே குகனே - அருள்வாய் ஆறு முகனே முகனே
அருள்வாய் (குகனே)

சரணங்கள்

1 அரனே யரனே அருள்வாய் பன்னிரு கரனே கரனே
யருள்வாய் (குகனே)
2 ஐயனே ஐயனே யருள்வாய் பூதியணி மெய்யனே
மெய்யனே யருள்வாய் (குகனே)
3 கலையாய் கலையாய் அருள்வாய் குன்றையின்
மலையாய் மலையாய் அருள்வாய் (குகனே)

## 908. தருண மறிந்து செய்வாயே

பல்லவி

தருண மறிந்து செய்வாயே - சண்முகேசனே (தருண)

அநுபல்லவி

வருண நிறைந்த குன்றைமலைச் சண்முகேசனே (தருண)

சரணங்கள்

1 அண்டர் பணிசெயுஞ் சரணு ராக வண்டணி
நீ பாபரணு (தருண)
2 மாது குறவள்ளிதன் பாகா மணப் பூதி யணிகின்ற
தேகா (தருண)
3 குன்றுக்குடிக் குமரேசா வன்பரை நன்றுட் கொள்ளும்
பிரகாசா (தருண)

## 909. ஐயனே அருளாயோ

பல்லவி

ஐயனே அருளாயோ துய்யனே குன்றைமலைத் துரைக்
குமரேசா (ஐயனே)

சரணங்கள்

1 சங்கர ரருளிய பாலா நல்ல விங்கிதமிகு கனலோலா (ஐயனே)

2 வாதுசெய் சூருடல் சம்மாரநாளும் கோதிலா
நலமிகு குமாரா (ஐயனே)

3 தோகை மலைக்கிசைந்த நாதா வெற்றி வாகை தரித்த
புய நீதா (ஐயனே)

## 910. திருப்பாதந் தருவாய்

பல்லவி

திருப்பாதந் தருவாய் பொருப்பாருங் குன்றைப்
பூபா நீபா (திருப்)

சரணங்கள்

1 பத்தர்களு முயர் முத்தர்களும் நல்ல சித்தர்களுமன்பாய்
நித்தமும் பணியும் (திருப்)

2 கெண்டை நிகரும் விழித்தொண்டை யிதழ்க்குறக்
கொண்டை மயிலி நாதா தண்டைச் சிலம்பணியும் (திருப்)

3 மின்ருவியமுடி நின்ருடிய கொடிக் குன்ருக்குடியா
நன்ருகிய மலர்த் (திருப்)

## 911. எந்தனைக் காப்பாய்

பல்லவி

எந்தனைக் காப்பாய் உந்தனைப் பணியு முண்மை யடியனுன் (எந்தன்)

சரணங்கள்

1 நிர்த்தனம் புரியு மயிலா நல்ல பத்தர்கள் பணியு
மொயிலா (எந்தனைக்)

2 சொர்ன மயமான வேலா யெவ்வர்ன வள்ளி புணர்
லோலா (எந்தனைக்)

3 குன்ருக்குடிக் குமரேசா யென்னை நன்ருட்கொளுஞ்
சருவேசா (எந்தனைக்)

## 912. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனதே – மஞ்சார் பொழிற் குன்றைமலைக்
குகனிருக்க (அஞ்சாதே)

சரணங்கள்

1 கண்டு பணிவோருக் கண்டுமோதீவினை
துண்டு துண்டாக வகன்று போகுமே யினி (அஞ்சாதே)
2 பொல்லாத துயரமுங் கல்லாத மூடமும்
அல்லாத வெவைகளும் நில்லாது தீருமே (அஞ்சாதே)
3 ஐயன் குருபர மெய்யன் குககுமர
துய்யன் குன்றைமலை வேற்கை யனிருக்கவே (அஞ்சாதே)

## 913. தரிசித்துக் கொள்ளுவாய்

பல்லவி

தரிசித்துக் கொள்ளுவாய் மனமே தரிசித்துக்
கொள்ளுவாய் (தரிசித்து)

சரணங்கள்

1 பரிசுத்தமான குன்றைப் பரனை யரனைத் (தரிசித்து)
2 ஆடிய மயிலோனை நீடிய வயிலோனைத் (தரிசித்து)
3 வேதாந்த வித்தை நாதாந்த சித்தைத் (தரிசித்து)
4 வென்றிகொள் தோளனைக் குன்றைமலை யாளனைத்
(தரிசித்து)

## 914. தேவாதி தேவனே

பல்லவி

தேவாதி தேவனே யந்த மூவாதி மூவனே (தேவாதி)

அநுபல்லவி

அரியன் முதலானோர் பொன்னகர்க் குரியரான வானோர்
வந்து உய்யும் படிதுதி செய்யு மிருபாதா (தேவாதி)

சரணங்கள்

1 ஞானந் தவருத பத்தர்கள் மெய்ஞ்ஞான
ஆனந்தக் கடலாடுஞ் சித்தர்கள் வந்து
ஆண்டவனே யென்று வேண்டித் துதி செய்யும்
(தேவாதி)

2 நின்ருடிய மயிற்பரியாய் முடிக் குன்ருக்குடிமலைக்
குரியாய் அருட்
குமர குருபரா வமரர் பயங்கரா (தேவாதி)

## 915. நம்பினேன் சாமி

பல்லவி

நம்பினேன் சாமி அன்பர் பணியு மையனே மெய்யனே (நம்பி)

அநுபல்லவி

பத்தர்கள் பணியுஞ் சரணு பரி சுத்தமிகு நீபபரணு (நம்பி)

சரணம்

ரஞ்சித கனிவாயா குற வஞ்சியைப் புணர் நேயா
தோகை மலைவாசனே நல்ல ஓகைபுனை யுல்லாசனே (நம்பி)

## 916. வந்தெனைக் காப்பாய்

பல்லவி

வந்தெனைக் காப்பாய் வந்து எந்தனைக் காப்பாய் (வந்தெனை)

சரணங்கள்

1 செந்தமிழ் வாயா குறத்திக் குகந்தருள் நேயா (வந்தெனை)

2 செங்கையின் வேலா வுமையெனு மங்கைதன் பாலா (வந்தெனை)

3 தோகைக் கிரீசா தினந்தினம் ஓகைக் குல்லாசா (வந்தெனை)

## 917. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா விண்முகமுயர் குன்றை மேரில்
வருமையனே (சண்)

அநுபல்லவி

கூருள வேலணி கையா வாசா நீறு புனைகின்ற மெய்யா (சண்)

சரணம்

சூருடனெதிர் கனவீரா நீபத் தாரணி புயகுக மாரா
குன்றுக்குடிமலே நாதா அன்பரை நன்றுட்கொளு
மலர்ப்பாதா (சண்)

## 918. கந்தனே யெந்தன் முன் வந்தருள்

பல்லவி

கந்தனே யெந்தன்முன் வந்தருள் தந்தருள் (கந்தனே)

சரணம்

ஞானனே தேனலர் தானணி வானவர்
நின்றுயர் குன்றையாய் உன்றய வொன்றுதா (கந்தனே)

## 919. திருப்பாதந் தருவாயே

பல்லவி

திருப்பாதந் தருவாயே விருப்பா யென்முன் மயில்
மீதினில் வருவாயே (திருப்)

சரணங்கள்

1 சஞ்சித பிராரத்து வந்தம்மை விலக்குமே
மிஞ்சிய வினையெல்லாம் வெருண்டோடக் கலக்குமே
விதுமுன மலரி நற்பதுமமலர் போலுந்தன் (திருப்)
2 பொல்லாத நோய்தனைச் சொல்லாது போக்குமே
எல்லாக் கலேஞானத்தை நல்லா யுண்டாக்குமே
பூபனே மணமிகு நீபனே யினியுந்தன் (திருப்)
3 குன்றுக்குடிமலேக் குருபர குகனே
யின்றுதரவுசெய் யெந்தை சண்முகனே
யிச்சிக்கு மன்பரை ரட்சிக்கு மருளுந்தன் (திருப்)

## 920. ஆராகிலு முண்டோ

பல்லவி

ஆராகிலு முண்டோ வெனக்கு வேறு
பேராகிலு முண்டோ (ஆரா)

சரணங்கள்

1 தானவர் குலகாலா பணிசெயும்
வானவர் குலசீலா (ஆரா)

2 சங்கரரருள் புத்திரா தவமிகு துங்கு
முனிவர் மித்திரா (ஆரா)

3 குன்றுக்குடி நாதா வன்பரை
நன்றுட் கொளும் பாதா (ஆரா)

## 921. இன்ன மிரங்காயோ

பல்லவி

இன்ன மிரங்காயோ யெவ்
வர்ன மயிற்பரி தன்னிலேறிவர (இன்ன)

அநுபல்லவி

தையல் குறத்தி லோலா பன்னிரு
கையிற் பிடித்த வேலா (இன்ன)

சரணம்

பொற்பணியணி தோளா மணமிகு பத்ம நிகர்த்த தாளா
குன்றுக்குடிக் குமரா சூருடன் நின்றுடிய சமரா (இன்ன)

## 922. என் குலதெய்வமே

பல்லவி

என் குலதெய்வமே குன்றுக்குடி
யின் கிரிவாசனே பொன் சிகிவாசனே (என்குல)

அநுபல்லவி

குக சரவண பவனே சிவனே மகபதி பணிபவனே
(என்குல)

சரணம்

பங்கயமிகு காலனே கோலனே
துங்கவடி வேலனே கோலனே
குன்றுக்குடி நாதனே போதனே
நன்றுட்கொளும் பாதனே போதனே (என்குல)

## 923. கடைக்கணால் வந்து பாரய்யா

பல்லவி

கடைக்கணுல் வந்து பாரய்யா - யெந்த
னிடத்திலேயதனைத் தீரய்யா (கடைக்)

அநுபல்லவி

வனச மண்டப நல்வேதா பணியும்
கனக தண்டை யணி பாதா (கடைக்)

சரணம்

ஆடிய மயிற் பரிவீரா சமர்
சூடிய சூர சங்காரா
குன்றுக்குடி வருசேயே யன்பர்க்கு
நன்றுன வற்றை யருள்வாயே (கடைக்)

## 924. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி மயின் மீது
வரவேணுஞ் சாமி வந்து (தரவே)

அநுபல்லவி

குக சரவண நாதா ஆறுமுக மலரிணைப் பாதா (தரவே)

சரணம்

அடல்புரி செயவீரா வெதிர் சமரிடு சூரை யடுதீரா
சிகிமலை வருகோவே நலமிகு பகிரண்டம் பணிதேவே
(தரவே)

## 925. துதித்துக் கொள்ளுவாய்

பல்லவி

துதித்துக் கொள்ளுவாய் மனமே குகனை நெஞ்சிற்
பதித்துக் கொள்ளுவாய் மனமே (துதித்து)

சரணங்கள்

1 அண்ட பகிரண்ட நிறைந்தோனை யெங்கும்
எண்டிசையுங் கூடி யுறைந்தோனைத் (துதித்து)
2 வால சூரிய சோதியை யெல்லா ஞாலமும்
பிரக்கியாதியை
தோகை மலைக்குகேசனை நாளும் ஓகைபுனை யுல்லாசனைத்
(துதித்து)

## 926. கருணை கடாட்சனே

பல்லவி

கருணை கடாட்சனே - திருமாமுடிக்
குன்றைத் தேவனே மூவனே (கருணை)

அநுபல்லவி

கருத்த முகில்வண்ணன் மருகா நாளும்
திருத்த மிகுந்த மயிற்குருகா (கருணை)

சரணம்

வாச மிகுந்த செய்ய நீபா குறத்தி
நேச மிகுந்த வருட்டீபா
குன்றுக்குடிக் குருபரனே யன்பரை
நன்றாய்க் காக்கும் பன்னிரு கரனே (கருணை)

## 927. இந்த சமயத்தில் வருவாய்

பல்லவி

இந்த சமயத்தில் வருவாய் - வந்து
சிந்தை மகிழ்வாகத் தருவாய் (இந்த)

அநுபல்லவி

எங்கும் நிறைந்த வருட்சத்தியே
கருணை பொங்குங் கடலான சித்தியே (இந்த)

சரணம்

மங்கள குறமகள் லோலா எதிர்
துங்க வசுரரை வெல்வேலா
செகண்டிமலை முருகோனே யெங்கும்
அகண்ட பூரண பெருமானே (இந்த)

## 928. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனதே – மஞ்சாருங்
குன்றைமலை வந்த கந்தனிருக்க (அஞ்சாதே)

சரணங்கள்

1 கோல மயிலிலேறும் வேலனன்பர்க்கனு
கூலன் குறத்தி மயிலிலோலனிருக்கிறான் (அஞ்சாதே)

2 சத்துரு சம்மாரன் பத்தர் சகாயன் மெய்ச்
சித்தி யெவர்க்கு மருளுத்த மனிருக்க (அஞ்சாதே)

3 தூய குருபரன் சேய சண்முக குகன்
மாயன் மருகன் குன்றைச் சேயனிருக்கிறான் (அஞ்சாதே)

## 929. ஐயனை மறவாதே

பல்லவி

ஐயனை மறவாதே – மெய்யனைக்
குன்றைமலை வேலனைக் கோலனை (ஐயனை)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரனை யெதிர்த்து
மோதி வெல்லும் வீரனை (ஐயனை)

சரணம்

சங்கர சம்பு பாலனை நம்புந்
துங்க வன்பர்க் கனுகூலனை
அடியவர்கள் சகாயனை குன்றுக்
குடிவளரும் பொன்சேயனை (ஐயனை)

## 930. வந்தாதரி குகனே

பல்லவி

வந்தாதரி குகனே மந்தாகினி மகனே (வந்தா)

சரணங்கள்

1 கந்தா குருபரனே தந்தாதரி யரனே
தூய சரவணனே சேயா தெய்வகணனே (வந்தா)

2 மாயோன் மருமகனே தாயா மறுமுகனே
சிகிமாமலை முருகா பகிர்வாய் மயிற்குருகா (வந்தா)

## 931. இன்னந் தயவு வரவில்லையா

பல்லவி

இன்னந் தயவு வரவில்லையா – வினி
யுன்னிதய மென்ன சொல்லையா (இன்னந்)

அநுபல்லவி

செகதலம் பணிசெய்யுஞ் சரணு வாச
வகவிதழினீபாபர சரணம்ஞு (இன்னந்)

சரணம்

சுத்தரண விசய சூரா திபனுடன் யுத்தஞ்செயுங்கன தீரா
அகண்ட பரிபூரண நாதா சொர்ணச் செகண்டி மலையில்
வருநீதா (இன்னந்)

## 932. சிவனே யறுமுகச் சிவனே

பல்லவி

சிவனே யறுமுகச் சிவனே சிவனே - சரவண
பவனே சரவண பவனே பவனே (சிவனே)

சரணங்கள்

1 குகனே குருபர குகனே குகனே அரனருள்
மகனே யுமையவள் மகனே மகனே (சிவனே)

2 பரனே யருள்புரி பரனே பரனே பன்னிரு
கரனே வேலணி கரனே கரனே (சிவனே)

3 ஐயனே குன்றைமலை ஐயனே ஐயனே
மெய்யனே யன்பர்க்கு மெய்யனே மெய்யனே (சிவனே)

## 933. ஒருகாலும் மறப்பேனோ

பல்லவி

ஒருகாலு மறப்பேனோ குன்றைப்
பொருப்பிலுறையு மகா புண்ணியன் சுப்பிரமண்ணியனை
(ஒருகாலும்)

அநுபல்லவி

நானக்குழலி தினைக்கானக் கருங்குயிலி
மேனட் புடனலையு மானக் கதிர் வேலனை (ஒருகாலும்)

சரணம்

மானைக் கயிலை வருமீனைப் பொருவிழியின்
தேனைப் பழிமொழி தெய்வானைக் கிசை லோலனை
ஈசனை யன்பர்கள் நேசனை யருள் முருகேசனைச்
சிகிமலை வாசனை ராசனை (ஒருகாலும்)

## 934. நெஞ்சே யோசனைகள் செய்யாதே

பல்லவி

நெஞ்சே யோசனைகள் செய்யாதே
மஞ்சேறும் பொழிற்குன்றை வாசனிருக்க விப்போதே
(நெஞ்சே)

சரணங்கள்

1 வானத்தவர்கள் பணி பாதன் மெய்ஞ்
ஞானத்தவர்கடுதி நாதன் தினைக்
கானக் குறத்திதன் மேதன் உனக்கு
ஈனத்தைத் தீர்த்து மோனத்தை யருள்வான் (நெஞ்சே)

2 சங்கர ரருளிய பாலன் எதிருந்
துங்க வசுரரை வெல்வேலன் ரூப
மங்கை யரிருவர்கள் லோலன் உந்தன்
சங்கை யெல்லாந் தீர்த்து இங்கிதஞ் செய்வான்
(நெஞ்சே)

3 மேக மெல்லாம் மழைகள் பேயும் போலவ
னேக மதுக்கள் வந்து பாயும் அந்தப்
பாகமளாவி யெங்குந் தோயும் பொழிலுயர்
தோகை மலையோன் வெகுவாகவுந் தனைக் காப்பான்
(நெஞ்சே)

## 935. எந்நாளுங் கண்டு தரிசிக்க வேண்டும்

பல்லவி

எந்நாளுங் கண்டு தரிசிக்க வேண்டும் (எந்நாளுங்)

அநுபல்லவி

மின்னா ரிருவர்கள் சமேதனை நாதனை (எந்நாளுங்)

சரணங்கள்

1 போற்றுவார்க் கருளிய புண்டரீகத் தாளனை
நீற்றுவார் குழைதவழ் நீடிய தோளனை (எந்நாளுங்)
2 அஞ்சிய சூரன்முன் போராடிய வேலனை
பஞ்சினு மெல்லடிப் பார்வதி பாலனை (எந்நாளுங்)
3 நின்ருட் கதியென் போரை ரட்சிக்கு மெய்யனை
குன்ருக்குடி மலைக்குக முருகையனை (எந்நாளுங்)

## 936. ஐயனே மெய்யனே

பல்லவி

ஐயனே மெய்யனே பன்னிரு கையனே (ஐயனே)

அநுபல்லவி

துய்யனே பரனே யரனே யயில்தரனே வரனே (ஐயனே)

சரணம்

செகனே குகனே யாறு முகனே சுகனே
வாசனே யீசனே குன்றை ராசனே நேசனே (ஐயனே)

## 937. இந்த வேளை வந்து ரட்சிப்பாய்

பல்லவி

இந்த வேளை வந்து ரட்சிப்பாய் யென்சாமி (இந்த)

அநுபல்லவி

எந்த வேளையு மன்பர் கந்த வேளே யென்னும்
உந்தன் பாதத்தைப் பணியு மெந்தனை யாள்வாய் (இந்த)

சரணங்கள்

1 மகபதி முதலாயந்தச் சகல தேவரும்
அகமலர் கொண்டே பணியும் பகவனே குகனே (இந்த)
2 தேவர் தேவர்க் குமருள் மூவர் யாவர்க்கும்
காவலானவர் செய்ய சேவலா பாவலா (இந்த)
3 ஐயனே பூதியணி மெய்யனே குன்றைத்
துய்யனே வேலேந்து மலர்க்கையனே செய்யனே (இந்த)

## 938. கண்டு கொண்டேனே

பல்லவி

கண்டு கொண்டேனே மெய்ப்பொருளைக் கண்டு
கொண்டேனே (கண்டு)

சரணங்கள்

1 அண்டர் முனிவர் தெண்டமுடனே யன்புடன் பணியு
மின்புறு பொருளைக் (கண்டு)
2 பத்தர்க் கினிய முத்தியைச் செய்யும் சித்தியைப்
புரிகர்த்தனை யினிக் (கண்டு)
3 கற்பனை செய்யு மற்புதமான பொற்புறுகன நற்பரமனைக்
(கண்டு)
4 ஈசனைக் குன்றை வாசனை முருகேசனைச் செகராசனை
யினிக் (கண்டு)

## 939. எந்தன் மனம்போலே

பல்லவி

எந்தன் மனம்போலே யுந்தன் மனமிரங்கி
வந்தருள் செய்குவாய் கந்தனே யென்சாமி (எந்தன்)

சரணங்கள்

1 தேசுமிகு முனிவோர் களன்புடன்
வாசனை மலர்கொடு பூசிதனே சாமி (எந்தன்)
2 எப்படியுமென தப்பனெனை வந்தடுப்பவர்க் கருள்
செய்யுந் தற்பரனே சாமி (எந்தன்)

3 அகண்டபரி பூரண செகண்டிமலை முருகா
கதம்ப மணிபுயவா சுகந்தர வேணுஞ் சாமி (எந்தன்)

## 940. நாயகனே சரணம்

பல்லவி

நாயகனே சரணம் நாயகனே சரணம் (நாயகனே)

அநுபல்லவி

தூய பொழில்களுயர் சொர்ணமுடிக் குன்றை (நாயகனே)

சரணங்கள்

1 அற்புத மிகு மலராகிய சரண பொற்புயர் நீபமாம் புனித
வாபரண (நாயகனே)
2 வந்த வடியவர்க்கு வரமருள் தேவே
சந்தமுலைக் குறத்தி தனக்கிசை கோவே (நாயகனே)
3 பொன்னுலகந் துதிக்கும் புண்ணிய குகேசா
மின்னுமுடிக் குன்றைமேல் வருமீசா (நாயகனே)

## 941. இன்னம் ரட்சிக்க மனமில்லையா

பல்லவி

இன்னம் ரட்சிக்க மனமில்லையா
சொர்ன முடிக்குன்றைத் துரைக்குமரேசா (இன்னம்)

சரணங்கள்

1 வானவர்களு மெய்ஞ்ஞானவர் களுந்தேடி
வந்து வந்து பணியும் பாதனே
கானகமாதுந் தெய்வானையு மேவிய
காதல்கொள் திவ்விய விநோதனே (இன்னம்)

2 வண்டனெனுஞ் சூரை மண்டிய படைவீழ
வதைத்திடு கூரிய வேலா
கண்டு பணியுமுந்தன் றொண்டர்க்கருள் செய்யுந்
தண்டைச் சதங்கை யணிகாலா (இன்னம்)

3 அந்தர முயர வளர்ந்திடு பொழிலுயர்
ஆணிப் பொன்னொளிர் குன்றை யாளா
சந்தநிறை ஞான சம்பந்தனே யென்குரு
சாமி யருள் பன்னிரு தோளா (இன்னம்)

## 942. திருவருள் தருவாயே

பல்லவி

திருவருள் தருவாயே மருவுலவுங் குன்றைமலைக்
குமரேசா (திருவருள்)

சரணங்கள்

1 பதும மலர்ச்சரணம் பணிந்தேன் அந்த
மதுமலர்ச் சரணையென் மனதினி லணிந்தேன்
(திருவருள்)

2 சின்னஞ் சிறுசுமுதற் றொடர்ந்தேன் (அதுமுதல்)
சன்னதி வாசலிற்றுனே நடந்தேன் (திருவருள்)

3 குன்றுக் குடிமலை வாசா மலைபோல
வுன்றுட் கடிமை நாளெளிரும் பிரகாசா (திருவருள்)

## 943. நடனமயில் வாகனு

பல்லவி

நடனமயில் வாகனு வடவரை நிகர் குன்றைமலைக்
குமரேசா (நடன)

அநுபல்லவி

அடியவர் தங்களுட குடிகாக்குந் தெய்வமே
கடிமலர் கொடுதூவி முடியிமையோர் பணியும் (நடன

சரணம்

மதுவொழுகிய விதழ்ப்பதும மலர்ச்சரணு
சதுமறை தேடரிய விதுமுக குகனே
சோதியே சுடரே நீதிய நீதியே
மோதிய பொழிற்குன்றை மீதினில் வருபவா (நடன)

## 944. எந்தனக் கொருதிடஞ் சொல்லையா

பல்லவி

எந்தனக் கொருதிடஞ் சொல்லையா யினி வந்த தீவினை
தீர வெல்லையா (எந்த)

சரணங்கள்

1 கஞ்ச மலர்ப்பதத்தாளா குற வஞ்சி மருவு மணாளா
மிஞ்சு மண நீபத் தோளா சர்வ
விற்பனனே திவ்விய வற்புதனே சாமி (எந்த)

2 மாது வுமைதரு பாலா சூரன் மோது படையை
வெல்வேலா சோதிச் சிலம்பணி காலா நல்ல தூயனே
செந்தமிழ் வாயனே யென் சாமி (எந்த)

3 வாச மலர்ச்சோலை நீளும் வெகு நேச வடியார்கள் சூழும்
தேசரனேகர்கள் வாழும் குன்றைச் சேயனே
செங்கனி வாயனே யென்சாமி (எந்த)

## 945. ஐயனை மறவாதே

பல்லவி

ஐயனை மறவாதே - நெஞ்சே முருகையனை மறவாதே
(ஐயனை)

அநுபல்லவி

மெய்யன்பர் பணிசெய்யும் வேதனை நாதனை (ஐயனை)

சரணங்கள்

1 அண்டர்கள் தேடி யறியாத சோதியை
தொண்டர்க் கரியதாய்த் தோன்றிய நீதியை (ஐயனை)

2 தற்பரானந்த சாட்சாத் காரனை
அற்புத மெய்ஞ்ஞான வித்வித சீரனை (ஐயனை)

3 முத்தியருள் குன்றை மூர்த்திகரனை
சித்திவினையாடு திவ்விய வரனை (ஐயனை)

## 946. காத்து ரட்சிப்பா யய்யனே

பல்லவி

காத்து ரட்சிப்பா யய்யனே (காத்து)

அநுபல்லவி

கீர்த்தி பெறுங்குன்றைச் சேயனே நாயனே (காத்து)

சரணங்கள்

1 ஐம்பெரும் பூதங்களால் வருநோயைத்
துன்பமதை யகற்றிச் சுகஞ்செய்திடு சேயே (காத்து)

2 அண்ட பகிரண்ட மகன்றிடுந்தேவே
யெண்டிசையும் பரவியின்புறு கோவே (காத்து)

3 நின்றாட் பணிபவர்க்கு நீதி யணிபவனே
குன்றக்குடிமலைக் குருபரசிவனே (காத்து)

## 947. கந்தனை மறவாதே

பல்லவி

கந்தனை மறவாதே மனமே குன்றைக் கந்தனை மறவாதே (கந்தனை)

அநுபல்லவி

எந்த விதத்திலு முந்த னிடத்தினில்
வந்த தீவினை தனை யிந்தக் கணமே தீர்க்குங் (கந்தனை)

சரணங்கள்

1 பன்னிரு கையிலேந்து மின்னிய வேலோனை
யுன்னிய பேர்க்கருள் கன்னி வள்ளி லோலனை (கந்தனை)

2 வேதாகம ஞான பாதாம் புய தூய
தாதார் மலர்நீபனை வாதாடிய சூரனை (கந்தனை)

3 அண்டின பேர்க்கருள் வண்டினிசைபயில்
மிண்டிய பொழில் சேர் செகண்டிமலையோனை (கந்தனை)

## 948. சும்மா யிருக்காதே மனதே

பல்லவி

சும்மா யிருக்காதே மனதே சும்மா யிருக்காதே (சும்மா)

அநுபல்லவி

எம்மா நிலமும்புகழ் குன்றை மா நகர்
எந்தையைக் கண்டு சிந்தை செய்யாமற் (சும்மா)

சரணங்கள்

1 பொல்லாத வாசா பாசமும் உலகில்
இல்லாத பாவ தோஷமும் உனக்
கிக்கணமே தீரப் பட்சம் வைப்பார் போபோ (சும்மா)

2 இனிமேலெடுக்குங் கருக்குழியும் வெகு
அநியாயமுங் கேடும் பழியும் தீர்த்தாண்டருள்
வாரய்யனை வேண்டிக்கொள் போபோ (சும்மா)

3 குன்றுக்குடி வருநாதனை பத்தரை
நன்றுட்கொளு மலர்ப்பாதனை யெந்த
நாளுந் துதிசெய் வாயுனை வாழும்படி செய்வார்
போபோ (சும்மா)

## 949. செனன மெடுத்த வேளை

பல்லவி

செனன மெடுத்த வேளை பொல்லா வேளையோ
தெரிய வெனக்குச் சொல்லையா (செனன)

அநுபல்லவி

கனக மலைக்குநிகர் செகண்டிக் கிசைந்த
கந்தனே ஞான சம்பந்தனே யடியவன் (செனன)

சரணங்கள்

1 ஆசைக் கடற்குள் விழுந்தலைந்து இல்லின்
பாசத்தி லகப்பட்டுத் தொலைந்து இந்தப்
படியே யுழலு மடியே னடியேன் (செனன)

2 கடனுக் கிறுத்த குடியாகி யினி
யுடலுக்குட்டுன்பமாய்ப் போகி தாள
வுத்தமனே யுந்தன் பத்தன் பத்தன் யான் (செனன)

3 குறியா துன்னையுங் கல்லா முழு
வறியாமை யாற்றிரிந்தேன் செல்லா துன்னிடம்
அண்டினேனல்லன் றெண்டன் றெண்டன் யான்
(செனன)

## 950. தோத்திரஞ் செய்வாய் தினமே

பல்லவி

தோத்திரஞ் செய்வாய் தினமே யுனக்கது
மாத்திரம் போது மனமே (தோத்திரஞ்)

சரணங்கள்

1 க்ஷேத்திரங்களில் வெகு நேர்த்தியதாகிய குன்றைச்
செகண்டி வாழு மகண்ட பூரணனைத் (தோத்திரஞ்)

2 நிர்த்தனைக் கனபரிசுத்தனை யமரர்க்கு
கர்த்தனை வல்ல சித்தனைக் கண்டுநீ (தோத்திரஞ்)

3 கற்பனையா முலகிற் பல்லுயிர்க்கருள்
அற்புத மிலகிய பத்ம பதத்தனைத் (தோத்திரஞ்)

4 அலைக்கும் வினைகளை யெல்லாம்
தொலைக்கும்படி செய்யும்
கலைக்குன்றை மலைக்குரிசிலை யன்பாய்த் (தோத்திரஞ்)

## 951. திடஞ்சொல்ல வேணுமையா

பல்லவி

திடஞ்சொல்ல வேணுமையா எனக்கொரு திடஞ்
சொல்ல வேணுமையா (திடஞ்)

அநுபல்லவி

நடஞ்செய்யு மயிலேறித் தடஞ் செய்யும் புவியெல்லாம்
நாடி யோடி விளையாடிய சாமி (திடஞ்)

சரணங்கள்

1 இன்னஞ் செனனங் களெடுக்காமல் இனிப்
பின்னுங் கருமங்கள் தொடுக்காமல் நாளும்
மன்னும் பிணியினுற் படுக்காமல் என்
றன்னுடலை யிங்கே கெடுக்காமல் சாமி (திடஞ்)

2 காலர்கள் பாசத்தாற் பிடிக்காமல் பிடித்து
மேலும் பிடித்திழுத் தடிக்காமல் பொல்லா
ஆல வரவுகள் கடிக்காமல் அலங்
கோலமாக வுயிர் துடிக்காமல் சாமி (திடஞ்)

3 துள்ளு மயிலேறுங் கோலனே கான
வள்ளி தெய்வானை லோலனே யெழுதாத்
தெள்ளிய மறைநாலனே குன்றை
வள்ளலே யுமை பாலனே சாமி (திடஞ்)

## 952. முருகையா

பல்லவி

முருகையா பன்னிரு கையா
திருவளர் குன்றைமலைச் சேயா தூயா (முருகையா)

சரணங்கள்

1 தருவனத் தையல்புணர் சலட்சண ரூபா
பொருமசுரரை வென்று பொடிசெயுங் கோபா
(முருகையா)

2 கங்காதர ரருள் கருணை நிதியா
மங்காத பொழிற்குன்றை வாழும் பதியாய் முருகை

3 அமரர்கள் பணி மலரம்புய பாதா
குமர சண்முக சுககுக குருநாதா (முருகையா)

## 953. கதி வேறில்லையையா

பல்லவி

கதி வேறில்லை யையா வுயர்குன்றைப்
பதிவாழ் பன்னிரு கையா (கதி)

அநுபல்லவி

மறையோர் பணி பாதா வின்னங்
குறையோர் துதி நீதா (கதி)

சரணங்கள்

1 ஆனந்த தாண்டவனே திவ்விய
ஞானங் கொளாண்டவனே (கதி)
2 கனக மயிலாளா குறத்தி
மன மகிழ் மணவாளா (கதி)
3 தோகை மலைச் சிவனே வெற்றி
வாகை புனைபவனே (கதி)

## 954. ஈசனே முருகேசனே

பல்லவி

ஈசனே முருகேசனே கந்தனே ஞானசம் பந்தனே (ஈசனே)

சரணம்

தேவனே தானவர் கோவனே குகனே ஆறு முகனே
தோகையாய் வெகு ஓகையாய் (ஈசனே)

## 955. வந்து வரந்தரவேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் மனதுகந்து வரந்தரவேணும் (வந்து)

சரணங்கள்

1 அண்டர் வானவர் பணி பாதா தொண்டர் பணி
செக நாதா (வந்து)
2 சூர சங்கார வேலோனே சாரமிகு கானுள் லோலனே (வந்து)
3 குன்றுக்குடிக் கந்தனே நன்றுட் கொள்
ஞான சம்பந்தனே (வந்து)

## 956. மயிலேறிய வீரா

பல்லவி

மயிலேறிய வீரா – எந்தன்முன்
ஞெயிலா யருடாராய் (மயிலேறிய)

சரணங்கள்

1 தாதவிழ் மலர்நீபா நாளுஞ் சோதியிலகுதீபா (மயிலேறிய)

2 வானவரின் சகாயா திவ்விய மெய்ஞ் ஞானவர்
தன்னேயா (மயிலேறிய)

## 957. பாத தரிசனஞ் செய்குவாய்

பல்லவி

பாத தரிசனஞ் செய்குவாய் செய்து நெஞ்சே
காதலுட னிருந்து வுய்குவாய் (பாத)

சரணங்கள்

1 அண்டர்கள் பணிசெய்ய மெய்யன் தனது
தொண்டருக்கருள் முருகையன் (பாத)

2 கானக மாதுக்கும் லோலன் அந்த வானக மாதுக்குங்
கோலன் (பாத)

3 தோகை மலேயில் வருவாசன் வெற்றி வாகை
புனே பிரகாசன் (பாத)

## 958. காக்கவேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே கடைக்கண் பார்க்க வேணு
மெய்யனே (காக்க)

சரணங்கள்

1 சகல சனபரிபாலா வன்பர்க் கக மகிழு மனுகூலா (காக்க)

2 மதுரிதத் தமிழ்சொலும் வாயா நாளுஞ் சதுர்மறை
துதிசெயுந் தூயா (காக்க)

3 சிகிக்கிரி வாழும் பிரகாசா வெகு மகுத்துவம் மிகு
முருகேசா (காக்க)

## 959. வந்து வரஞ்செய்ய வேணும்

பல்லவி

வந்து வரஞ் செய்யவேணும் இனி (வந்து)

சரணங்கள்

1 பன்னிரு கடைக்கண் பாராய் பார்த்து
என்னிதயத் துன்பந் தீராய் (வந்து)

2 கஞ்ச மலர்ப்பதங் காட்டாய் காட்டி
நெஞ்சத் துன்பமதை யோட்டாய் (வந்து)

3 குன்ருக் குடிமலே வாசா அதில்
நின்ருடு மயிற் பிரகாசா (வந்து)

## 960. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் உத்தமனே குன்றைக் கர்த்தனே
சாமி (சித்தந்)

அநுபல்லவி

பரம பதத்தனே யன்பர்க்கு வரமருள் சித்தனே (சித்தந்)

சரணம்

தேவர் கடேவனே யந்த மூவர்கண் மூவனே
தோகைமலே வாசனே வெகு ஓகைகொளு முலாசனே
(சித்தந்)

## 961. பத்ம பதாம்புயா வற்புத கருணுகரா

பல்லவி

பத்ம பதாம்புயா வற்புத கருணுகரா (பத்ம)

சரணங்கள்

1 பஞ்சாட்சர பூபா அஞ்சாட்சர ரூபா (பத்ம)

2 பூரண நேத்திரா ஆரண தோத்திரா (பத்ம)

3 மயின்மலே நாதா வொயிலுள்ள கியாதா (பத்ம)

## 962. வருவாய் குருபரனே

பல்லவி

வருவாய் குருபரனே வந்து வரந்தருவாய் பன்னிரு
கரனே (வரு)

சரணங்கள்

1 வஞ்சி குறத்தி மணவாளா திவ்விய செஞ்சிலம் பணி
தாளா (வரு)

2 அண்ட ரண்டமும் பணிதேவே யுனது தொண்டர்களும்
பணிகோவே (வரு)

3 குன்ருக்குடி மலைக்கந்தா வன்பரை நன்ருய்க் காக்குஞ்
சம்பந்தா (வரு)

## 963. இதுவே சமயமய்யா

பல்லவி

இதுவே சமயமய்யா மதுமலர்ச் சோலை சூழுஞ் செகண்டி
மலை வந்தவனே யெனக் குகந்தவனே சாமி (இதுவே)

சரணங்கள்

1 வாசமலர்க் கடம்ப மாலையணியும் புயா
வீசுங் கிரண வடிவேலா பன்னிரு கையா (இதுவே)

2 ஆராதனை செய்யு மன்பாலிருந்தே
தீராத வினையெல்லாந் தீர்த்திடு மருந்தே (இதுவே)

3 குன்ருக் குடிமலைக் குருபர நாதா
வுன்ருட் கடியவர்க் குதவிசெய் நீதா (இதுவே)

## 964. கருத்து வைத்தாளாயோ

பல்லவி

கருத்து வைத்தாளாயோ வடியேனைக் (கருத்து)

அநுபல்லவி

திருத்து பொன்முடி குன்றைத் தேவா தேவர்க் கிறைவா
(கருத்து)

சரணங்கள்

1 மதுரிதத் தமிழ்சொல்லும் வாயா திவ்விய
சதுர்மறைத் துதிபெறு தூயா (கருத்து)

2 கங்காதர ரருள்பாலா அன்பர்க்கு
மங்காத வரமருள் சீலா (கருத்து)

3 வடியுறு மயிலணிகையா குன்ருக்
குடிமலைவரு முருகையா (கருத்து)

## 965. கெட்டுப் போகாதே

பல்லவி

கெட்டுப் போகாதே நெஞ்சே நாளும்
மட்டவிழ் பூம்பொழிற் குன்றை மாமலை வாசனை
நினையாமற் (கெட்டுப்)

சரணங்கள்

1 ஐயனைப் பன்னிரு கையனைப் பூசித்து அந்நிலை
நில்லாமல் பூதி
மெய்யனைப் பரிசுத்த துய்யனைத் தோத்திரம் வேண்டியே
சொல்லாமல் (கெட்டுப்)

2 ஆண்டவனைப் பணிபூண்டவனைக் கண்டவனடி
வீழாமல் மயில்
தாண்டவனை யெங்கு நீண்டவனைச் சந்நிதானத்தில்
தாழாமல் (கெட்டுப்)

3 சுக குருபர குககணேசனைத் தோத்திரஞ் செய்யாமல்
அகமகிழ்ந்தாறு முகனை யடுத்து அனுதின முய்யாமல்
(கெட்டுப்)

## 966. வந்த வினையைத் தீராய்

பல்லவி

வந்த வினையைத் தீராய் பனனிரு கந்த மலர்க்கண்
பாராய் (வந்த)

சரணங்கள்

1 கருணைக்கடல் வெள்ளமே யன்பர்க்குத் திருவருளு
முள்ளமே (வந்த)

2 ஆடு மயிலாளனே கானத்திற் கூடுமின் மணவாளனே
(வந்த)

3 குன்றுக்குடி வாசனே வினையைத் தீர்த்தென்றுட்
கொள்வாய் பிரகாசனே (வந்த)

## 967. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ முத்தமிழ் சொலும் வாயா (சித்த)

சரணங்கள்

1 வால வடிவேலனே யனுகூல சண்முக லோலனே
(சித்த)

2 அடியவர் பணிபாதனே குன்றுக் குடிவளர்
குருநாதனே (சித்த)

3 இருவினை தீராயோ வினியருள் விழி பாராயோ (சித்த)

## 968. சரவணபவ குகனே

பல்லவி

சரவணபவ குகனே வரமரு ளறுமுகனே (சரவண)

சரணங்கள்

1 சங்கரரருள் பாலா வள்ளிக் கிங்கிதமிகு லோலா
தங்க நிறமிலகு வங்க வடிவேலவா (சரவண)

2 சாரச தமிழ்வாயா நீபத் தாரணி புயசேயா
கோர ரூபகன சூர சங்காரனே (சரவண)

3 பத்தர்கள் பணிதாளா ஆடுஞ் சித்திர மயிலாளா
சுத்தமான குன்றைக் கர்த்தனே குருபரா (சரவண)

## 969. ஈசனே குன்றைமலை வாசனே

பல்லவி

ஈசனே குன்றைமலை வாசனே யெங்கும் பிரகாசனே
யருள் முருகேசனே (ஈசனே)

சரணங்கள்

1 அனவரதமுந் திவ்விய கனக மயிலிலேறி
மனது மகிழவந்து எனது துயரந் தீராய் (ஈசனே)

2 தத்தை மொழி பயில் குறத்தியை மருவிய
கர்த்தனே யென்று யரத்தை நீ தீர்ப்பாய் (ஈசனே)

3 உன்மத்தனுகிய சூரன் பட்டிடச் செய்சூரா
கன்மத்தையுந் தீர்த்தென் றுன்பத்தையுந் தீர்ப்பாய்
(ஈசனே)

## 970. கந்தா குகா கார்த்திகேயா

பல்லவி

கந்தா குகா கார்த்திகேயா வருள் தந்தா தரித்தருள்
பைந்தாரணி மார்பா (கந்தா)

சரணங்கள்

1 தீராத வினையெல்லாந் தீர்த்தவனே சாமி (கந்தா)

2 காவாத பேரை யெல்லாங் காத்தவனே சாமி (கந்தா)

3 சொர்னமய மயிலாளா வினி யின்னேர வேளை வந்து
ஆளாய் (கந்தா)

4 குன்ருக் குடிமலை நாதா வெனை நன்ருகக் காத்தருள்
நீதா (கந்தா)

## 971. எந்தன் மனக்கவலை தீராயோ

பல்லவி

எந்தன் மனக்கவலை தீராயோ சாமி
யுந்தன் மனமகிழ்ந்து வாராயோ (எந்தன்)

சரணங்கள்

1 கனக சதங்கை பணிதாளா வள்ளி
மனதுக் கிசைந்த மணவாளா
சினவ சுரனை யன்று பாழாய் விழச்
செய்யும் அயிற்பன்னிரு கையனே யென்சாமி (எந்தன்)

2 செந்தமிழ்ப் பதிகஞ் சொல்வாயா ஞானசம்
பந்தனே மெய்ஞ்ஞான தூயா
வந்தடுத் தோர்க்கருள் சேயா பச்சை
வன்ன மயிலேறிப் பிரசன்னமாக வந்து (எந்தன்)

3 கல்லாத மூடனுனாலும் என்றும்
நில்லாத துயரங்க ளானாலும்
எல்லாந் தீரும்படி தானுனாலும் தீர்க்கும்
இங்கிதனே யருள்சே ரங்கித ணீபனே (எந்தன்)

## 972. வஞ்சகஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சகஞ் செய்யாதே யடியேற்கு வஞ்சகஞ் செய்யாதே
(வஞ்சி)

அநுபல்லவி

நெஞ்சகந் தன்னிலே யுந்தன் பதமலரை
நித்தியம் நினைக்கும் பத்தியுள்ள வனையா (வஞ்ச)

சரணங்கள்

1 மாயவன் மருகையனே யன்பர்க்கு
வரமருள் முருகையனே மயில்
தூயநற் குருகையனே துலங்கு பன்னிரண்டு கையனே
(வஞ்ச)

2 வந்த துயரந் தீராமல் உந்தன் மலர்க் கண்ணுற் பாராமல்
சாமி
யெந்தன்முன் வாராமல் வந்து இந்நேரங் காவாமல்
(வஞ்ச)

3 சாதி விருட்சங்கள் சூழும் வெகுவாய்த் தானே மலர்ப்
பொழில் சூழும் நாளும்
சோதிச் சிகிமலே வாழும் கந்தசாமி நீ யெந்நாளும் (வஞ்ச)

## 973. ஐயனேப் போற்றுவாய்

பல்லவி

ஐயனேப் போற்றுவாய் நெஞ்சே நோயை மெய்யினில்
மாற்றுவாய் (ஐயனே)

சரணங்கள்

1 ஆண்டவனேத் துதிப்பாய் துதித்து வேண்டி மனநிற்
பதிப்பாய் (ஐயனே)

2 முருகனேப் பணிகுவாய் மாயன் மருகனே யணிகுவாய்
(ஐயனே)

## 974. சாமி தயவு செய்குவாய்

பல்லவி

சாமி தயவு செய்குவாய் பூமி புகழுங் குன்றைப் பொருப்பில்
வளருங் கந்த (சாமி)

அநுபல்லவி

வாசமலர்க் கடம்ப மாலேயணியுந் தோளா
ஆசை மிகுந்த குறப்பெண்ணுள் மணவாளா (சாமி)

சரணம்

ஆறுமுகச் சிவனே யாண்டவனே குகனே
நீறுபுனேயு நாதா நின்மல சுகனே
மஞ்சடர் பொழிற் குன்றை மலேக் குரு நாதா
நெஞ்சிற் றுயரந் தீர்ப்பாய் நிலேமலர்ப் பாதா (சாமி)

## 975. சண்முக நாதனே

பல்லவி

சண்முக நாதனே யென்முகம் பாராய்
விண்முகமுயர் குன்றை வேலனே கோலனே (சண்முக)

சரணங்கள்

1 அரியதவத் தோர்க்கிறைவா வன்பர்க் குரிய மனத்தி
னிறைவா (சண்முக)

2 தூய சரவண பவனே துளப மாயன் மருக சிவனே
(சண்முக)

3 குன்ருக் குடிக்குமரா வெதிர் நின்ருர்க் கடுசமரா (சண்முக)

## 976. நோய்க்கொரு மருந்து சொல்லாய்

பல்லவி

நோய்க்கொரு மருந்து சொல்லாய் சொல்லித்
தேய்த்ததை யுடனே வெல்லாய் (நோய்க்)

அநுபல்லவி

மடமயில் குறத்தி பாகா மலர்க் கடம்பணி பன்னிரு வாகா
(நோய்க்)

சரணம்

மாயவனுர் தம்மருகா ஆடுந் தூய சிறைமயின் குருகா
தோகை யெனுமலை வாசா நாளும் ஓகைபுனையு முல்லாசா
(நோய்க்)

## 977. எந்தவினை வந்தாலும்

பல்லவி

எந்தவினை வந்தாலுமுந்த னடியார்க்கு அந்த வினைகளைக்
தீராயோ (எந்த)

அநுபல்லவி

கந்தமலர்க் கடப்பஞ் செந்தல ரணிபுயா
அந்த மயிலிலேறி வாராயோ (எந்த)

சரணங்கள்

1 வாசமலர்க் குழலி நேசக் குறமயிலி
ஆசைக் கிசைந்த மணவாளனே
மோசப்பட வசுரர் நாசப்பட வெதிர் பிர
காசக் கதிர்வேல் விடுதோழனே (எந்த)

2 மங்கள கரவுமை சங்கர ரருளிய
துங்க மிகுந்த தொரு பாலனே (எந்த)

3 தங்க முடியிலகு எங்கும் பிரபலமிகு
திங்கள் தவழ் சிகண்டி வேலனே (எந்த)

## 978. ஐயனே சரணம்

பல்லவி

ஐயனே சரணம் முருகையனே சரணம் (ஐயனே)

சரணங்கள்

1 மெய்யினேயைத் தீர்த்து உய்யும்படி செய்வாய் (ஐயனே)
2 வானவர் சேனபதியே மெய்ஞ்ஞானவர் தேடிய நிதியே (ஐயனே)
3 சரவண பவகுக நாதா வன்பர் பரவவருமலர்ப்பாதா (ஐயனே)
4 குன்றுக்குடிக் குமரேசா என்னை நன்றுட் கொளவேணு மீசா (ஐயனே)

## 979. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே என்னைக் கண் பார்க்க வேணு மையனே (காக்க)

சரணங்கள்

1 கொந்தடர் சிறை விரி சுந்தரமயின்மீது
எந்தனிடத்தில் வந்தருளைச் செய்து (காக்க)
2 தேனலர் நீபமென் நாண் மலரணியும் வானவனே யினித்
தானருளைச் செய்து (காக்க)
3 மன்றன் மலர்ப்பொழின் மின்றவழ் மாமுடிக்
குன்றை மலையிருந் தின்புற வருள்செய்து (காக்க)

## 980. பயப்படாதே நெஞ்சே

பல்லவி

பயப்படாதே நெஞ்சே யொன்றுக்கும் பயப்படாதே நெஞ்சே (பயப்)

சரணங்கள்

1 அடுத்த பேர்களுக்குத் தொடுத்தபடிக் கருள்
கொடுத்து ரட்சித்துத் தடுத்தாட் கொள்ளுவார் (பயப்)
2 முந்தை வினையினால் வந்த பிணியையும்
எந்த விதத்திலுந் தவிர்த்தருளுவார் (பயப்)

3 வாரா வருத்தங்கள் தீராத் துயரங்கள்
ஓராத குற்றங்கள் சேராது ரட்சிப்பார் (பயப்)

## 981. வரஞ்செய்ய வேணும்

பல்லவி

வரஞ்செய்ய வேணும் நான் பெற்று மகிழ்ந்துய்ய வேணும் (வரஞ்)

அநுபல்லவி

புரந்தரன் முதலான தேவர்கள் மலர்கொண்டு
பூசிக்குங் குன்றைமேல் வாசிக்குங் குகனே (வரஞ்)

சரணங்கள்

1 நிட்கள நின்மயமான சொரூபா
நித்திய கல்யாண மணமலி நீபா
சொற்கடங்காத திவ்விய சோதி கொரூபா
சுத்த பரிசுத்த பத்தர் பிரதாபா (வரஞ்)

2 அம்பலத் துனின்றுடிய பாதா
அன்பர் மன துனின்றுடிய நாதா
நம்பின பேருக் கருள் செய்யு நீதா
நாரணனு ரறியா சுபவேதா (வரஞ்)

3 கோடி சூரியப் பிரகாச தேகா
குன்றை மாமலையினின் றருள் போகா
சூடிய பூதிப் பொடியணி வாகா
தோகை குறவள்ளி மாணுட மோகா (வரஞ்)

## 982. வடிவுறு குறத்தி தோளா

பல்லவி

வடிவுறு குறத்தி தோளா குன்றுக் குடிவளர் மலர்
கொடாளா (வடி)

அநுபல்லவி

எதிரசுரர்கள் கலகா ஆடிக் குதிகொளு மயிலின் வாகா (வடி)

சரணம்

வடியுறு கூரின்வேலா நாளும் அடியவர் பணிசெய் காலா
சிகிமலை வளரு நாதா அண்டர் மகிப குகேச நீதா (வடி)

## 983. நெஞ்சமே மறவாதே

பல்லவி

நெஞ்சமே மறவாதே மஞ்சடர் பொழிற்குன்றை மன்னன்
றன்னடி தன்னை (நெஞ்சமே)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி தோளன் கானக நேசக்குறத்தி
மணவாளன் அன்பர்
நித்தம் பணிசெயுங் கர்த்தனிருதாளை (நெஞ்சமே)
2 சங்கரர் தமக்குப தேசன் அண்ட மெங்கு நிறைந்த
பிரகாசன் அன்பர்
என்றும் பணிபுரியு நன்றுள விருதாளை (நெஞ்சமே)
3 தங்க வயிலை யணிகரனர் குன்றைத் தங்கமலையின்
வருபரனர் அன்பர்
சகலரும் வந்து பணியுங் கமலத்தாளை (நெஞ்சமே)

## 984. அஞ்சாதே மனதே

பல்லவி

அஞ்சாதே மனதே நாளு மஞ்சடர் பொழிற்குன்றை
மலை முருகேசனுனதே (அஞ்சாதே)

சரணங்கள்

1 வாதின்மிகு வசுரன் மோதியப்படை விழச்
சோதியயில்தொடு பிரக்கியாதி பனிருக்க (அஞ்சாதே)
2 தெள்ளியதினைப் புனத்தின் வள்ளியம்மை மருவிய
அள்ளிலை வேற்கரதலன் புள்ளி மயிலோனிருக்க
(அஞ்சாதே)
3 தேசம்புகழ் குன்றைக் குகேசன் கடப்பமெனும்
வாச மலரணி புயா சலனிருக்க (அஞ்சாதே)

## 985. மருத்துவஞ் செய்யாயோ

பல்லவி

மருத்துவஞ் செய்யாயோ ஒருத்தர் துணையுமில்லை (மருத்)

அநுபல்லவி

வருத்தும் பிணியைத் தீர்க்க மருத்துவஞ் செய்யாயோ
(மருத்)

சரணங்கள்

1 இருபது வருடமா யொரு பிடியாகவே
கருவினைப் பயனாலே வருவயிற்று வலிக்கு (மருத்)

2 தொந்த வியாதி யென்றனந் தம்பேர் சொல்லும்படி
எந்தன் வயிற்றுக்குள்ளே வந்த வலியைத் தீர்க்க (மருத்)

3 மதுமலர்க்காவின் மந்தி குதி விளையாடிடவே
புதுமலருங் குன்றை முதுமலை முருகையா (மருத்)

## 986. குன்றுக் குடியானைத் துதிப்பாயே

பல்லவி

குன்றுக்குடி யானைத் துதிப்பாயே யதை
நன்றாக நெஞ்சினிற் பதிப்பாயே (குன்றுக்)

சரணங்கள்

1 கருக்குழி வீழா மற்றடுக்குமே காமச் செருக்கினில் வீழாமற்
கெடுக்குமே அருள்
தன்னை யெந்நாளுங் கொடுக்குமே யென்
ஆண்டவன் மாமயிற் றாண்டவனிருக்கும் (குன்றுக்)

2 பரகதி தன்னிற் கொண்டு சேர்க்குமே பொல்லா
நரகதிற் செல்லாமற் றீர்க்குமே
சிரசிற் றீவா மெழுத்தைத் தூர்க்குமே செய்ய
சேவலன் றேவர்கள் காவலனிருக்கும் (குன்றுக்)

3 தீராத நோய்களைப் போக்குமே நாளும்
தேராத தெல்லாமுந் தேக்குமே
வாராததெல்லாம் வரவுண்டாக்குமே மாயன்
மருகனனு தின முருகனிருக்கும் (குன்றுக்)

## 987. சங்கரனார் சுதனே

பல்லவி

சங்கரனார் சுதனே யன்பர் தங்கள் மனோரதனே (சங்கர)

அநுபல்லவி

சித்தந் திரும்ப வேணும் என்னை மெத்த விரும்ப வேணும்
(சங்கர)

சரணம்

ஆடு மயிலாளனே வள்ளி கூடு மொயிலாளனே
குன்ருக்குடி யய்யனே யென்னை நன்ருய்க் காப்பாய் மெய்யனே
(சங்கர)

## 988. எனக்கொரு வரந்தருவாய்

பல்லவி

எனக்கொரு வரந்தருவாய் முருகையனே (எனக்)

அநுபல்லவி

வனக்குற மயில் தனக்கிசைவுள தனத்தின் மேவுமெவ்வனக்
குகேசனே (எனக்)

சரணம்

வக்கிர வெயிறுடன் உக்கிரமிகு மெதிரிக்கிசைவான
சூரைக் கிழிவேலா
தித்திமியென நிர்த்தமிடுகின்ற சித்திர மயிலேறு
வித்தகனே சாமி
மண்டிய நால்வகை வண்டினமே மிகு மிண்டிய பொழில்
சூழ் செகண்டிமலை நாதா (எனக்)

## 989. சகலசன ரட்சகா

பல்லவி

சகலசன ரட்சகா - சுக குமரேசா சகலசன ரட்சகா (சகல)

சரணங்கள்

1 தண்டமிழ்ப் பதிகஞ் சொல்வாயா நாளும்
அண்டர்கள் பணிசெயுந் தூயா (சகல)
2 மாயவனுர் மருகேசா உமை சேய சண்முக முருகேசா
(சகல)
3 குன்ருக்குடிக் குருபரனே யென்னை நன்ருய்க் காத்தருள்
சீர்தரனே (சகல)

## 990. தயவுசெய்ய வேணும்

பல்லவி

தயவுசெய்ய வேணும் நயமிகுந்த குன்றை நாதனே
வேதனே (தயவு)

சரணங்கள்

1 கனக தண்டைக்காலா சூரன்றனை முன்வென்ற வேலா (தயவு)
2 கான மங்கை பாகா நீபத் தேனலங்கல் வாகா (தயவு)
3 தோகை மலைவாசா நாளு மோகை கொளுமுலாசா (தயவு)

## 991. மனதே அஞ்சாதே

பல்லவி

மனதே அஞ்சாதே சொன்னேன்
சொன்னேன் (மனதே)

அநுபல்லவி

தனதே குன்றுக்குடிச் சண்முக னிருக்க (மனதே)

சரணங்கள்

1 கானக மயிலேறுங் கருத்தன் அன்பர்
தினமன்பர்க் கருளிய வொருத்தன் நீபச்
செய்ய மலரணி யய்யனிருக்க (மனதே)
2 அண்டர் பணி தண்டைக் காலன்
நாளுந் தொண்டர் பணிசெயும் வேலன்
பரிசுத்தன் பனிரெண்டு அத்தனிருக்க (மனதே)
3 சோலைநிறை குன்றை வாசன்
திவ்விய மாலையணி வள்ளி நேசன்
மால்மருகனருளியல் முருகனிருக்க (மனதே)

## 992. சித்த மிரங்க வில்லையா

பல்லவி

சித்த மிரங்க வில்லையா விரங்கா விட்டால்
மெத்த வுனக்குச் சொல்லையா (சித்த)

அநுபல்லவி

கந்தா குகா கார்த்திகேயா ஞானசம்
பந்தா குருபர சேயா (சித்த)

சரணம்

சரவணபவ குருநாதா திவ்விய பரத நடன மலர்ப் பாதா
அகண்ட பரிபூரண வீசா முடிச் சிகண்டிமலை முருகேசா
(சித்த)

## 993. மனதுக்கொரு திடஞ்சொல்வாயே

பல்லவி

மனதுக்கொரு திடஞ்சொல்வாயே - கனக
முடிச் செகண்டிக் கர்த்தனே நீயே (மனதுக்)

சரணங்கள்

1 வானவர் சேனாதி பதியே
ஞானவர் தேடிய நிதியே (மனதுக்)

2 அற்புத பாதாம் புயனே
விற்பனே மிகுசுப நயனே (மனதுக்)

3 ஆனந்த கருணாகரனே
ஞானங் கமழுஞ் சடையரனே (மனதுக்)

4 சிகிமலை வரு முருகேசா
சுகமிகு ஞானப் பிரகாசா (மனதுக்)

## 994. இத்தனையாவது சித்த மிரங்காததென்ன

பல்லவி

இத்தனையாவது சித்த மிரங்காத
தென்ன வென்ன ஐயா (இத்தனை)

அநுபல்லவி

வித்தகனே பரிசுத்தனே குன்றைக்
கர்த்தனே பூதி மெய்யா (இத்தனை)

சரணம்

உந்தன் மனதிரங்கி யெந்தனிடத்தில் வந்தருள்
செய்குவாயே
கந்தமலர் களணிந்தபுய ஞானசம் பந்தனே யருணியே
தேனலரும் பொழில் வானுலாவிய மாநலம் புரிதோகையா
கானக நாயகி தானணை புயமானவேற் கரவாகையா
(இத்தனை)

## 995. சாமி சித்த மென்னமோ

பல்லவி

சாமி சித்த மென்னமோ அறியேன் (சாமி)

அநுபல்லவி

பூமி புகழ் குன்றமலைப் புண்ணியன் சுப்பிரமண்ணியன்
(சாமி)

சரணங்கள்

1 வேத முடிவாகி நாத வடிவாகி
போத மயமாயார்க்கும் ஆதரவான கந்த (சாமி)

2 அஞ்சலி கரங்களாக நெஞ்ச முருகிநின்று
தஞ்ச மெனுமன்பருக் கஞ்ச லென்றருளிய (சாமி)

3 வம்பவிழ் மலர்ப் பொழிலும் பருலகிலுயர்
சம்பிரம மிகுகுன்றையம் பதிதனில் வரு (சாமி)

## 996. நித்தந் துதிமனமே

பல்லவி

நித்தந் துதிமனமே யதுவே நிலைக்கும்
பொருடினமே (நித்தம்)

அநுபல்லவி

பத்தர் பணியுங் குன்றைமலை வரு
பன்னிரு கையனை மின்னிய மெய்யனை (நித்தம்)

சரணங்கள்

1 மங்கள கரசுப விங்கித மிகுநய
வள்ளி மருவிய புள்ளி மயிலோனை
துங்கமிகு சதுரங்க படையுடன்
சூரபதுமனை வென்ற வீரப்பிரகாசனை (நித்தம்)

2 வாச மலரணி புயாசல சண்முக
மயிலேறு துய்யனை யயிலேறு கையனை
ஈசரருள் முருகேச குருபரனை
யிச்சையன் பர்க்கருள் பச்சை மயிலோனை (நித்தம்)

3 வான மளாவிய கானக மேவிய
வண்ணச் சிகரநிறை குன்னக் குடியோனை
மானை நிகர் கண்டெய் வானை மணாளனை
வாலவடி வேலோனை மேலவர் பணிவோனை (நித்தம்)

## 997. ஏனலைகிறுய் நெஞ்சமே

பல்லவி

ஏனலைகிறுய் நெஞ்சமே வானளாவுங்
குன்றை மாமலை வாசன் முருகேசனிரு
மலாப்பதத்தைப் போற்றி செய்து நலத்தை யனுபவிக்காமல்
(ஏனலை)

சரணங்கள்

1 சாகர சமுசாரத்தினுலே வெகு வாகமெலிந்தே
பஞ்சை போலே நாளு மயங்காமல் மனந்தியங்கா மலந்த
வன்ன வடிவேலன்றன்னடியைத் துதி செய்வாய் (ஏனலே)

2 கொஞ்ச வறிவு கொண்டு பரிந்து பொல்லா
வஞ்சகருடன் கூடித் திரிந்து
மனம் மன்னிய குருபரன் றன்னடி துதி செய்வாய் (ஏனலே)

3 கூன் பெருமந்தி குதிபோடும் காவில்
தேன் பெருக்காக வெங்கு மோடும் குன்றைத்
திருப்பதந்தனைத் துதித்திருப்பது நயநயம் (ஏனலே)

## 998. சாமி யெந்தனை ரட்சிப்பாய்

பல்லவி

சாமி யெந்தனை ரட்சிப்பாய் சரவண பவகுக (சாமி)

சரணங்கள்

1 பூமி புகழவரு நேம நாடாளுங் குன்றைப்
புண்ணியனே சுப்பிரமண்ணியனே கந்த (சாமி)

2 வனச மாமலர் முகமானுள் திவ்விய கனதன வடிவுள்ள
காணுள்
அவளைக் கண்டு அதிக மயல்கொண்டு மருவிய வென்
(சாமி)

3 சமர சம்மார வடிவேலா வன்பரமரர் பணியுந்
தண்டைக் காலா
முருகையனே பன்னிரண்டு கையனே யருளுமென் (சாமி)

4 பதுமலர்ப் பூங்கா வனஞ் சூழும் குன்றை
முதுமலை தன்னி லெந்நாளும்
அந்த மூவர்க்குந் தேவர்க்கும் யாவர்க்கும்
முதல்வ வென் (சாமி)

## 999. இத்தனை நாளாக

பல்லவி

இத்தனை நாளாகக் கர்த்தனே யுன்னுட பத்தன் மேற்றயவு
இத்தனை யாகிலு மில்லையா வதைச் சொல்லையா (இத்தனை)

அநுபல்லவி

சுத்தரண விசய சத்துரு செய சம்மார
நிர்த்த மயில் பரிசுத்தனே யருள் தூயனே கனிவாயனே
(இத்தனை)

சரணங்கள்

1 நேச மின்னுருட வாசை வலைதனிலே
மோசப் படாமலே தாசற் கருள்செய்ய
நினையாயோ வென்னனையாயோ
ஈசரருளு முருகேசனே யெங்கும் பிர
காசனே நீபமலர் வாச மிகுந்த புய
வென்னிரு வினைதீர்ப்பாய் பன்னிரு கரதலா (இத்தனை)

2 சகலசனர்கள் ரட்சக பரிபால குககுரு பரவர மகபதி
மருகா சரவணபவனே யரகர சிவனே
இகல்புரி சூருட அகமது தணிய பகரிட மார்பினுள்
முக வயிலேவிய என்னையனே யருள் பொன்னையனே
(இத்தனை)

3 அண்டர் களுந்துதி கொண்டவரு நல்ல
தொண்டர்களு வந்து தெண்டனிடு பாத
ஐயனே பூதி மெய்யனே
வண்டரிசைகள் பயில் தண்டலை வளமிகு
எண்டிசையும் புகழ் செகண்டி மலையிற் கும
ரேசனே மெய்ப் பிரகாசனே (இத்தனை)

## 1000. எப்போது பட்சம் வைப்பாயய்யா

பல்லவி

எப்போது பட்சம் வைப்பாயய்யா – சாமி (எப்போது

அநுபல்லவி

முப்போது மன்பர் பணிகுன்றை மலையில் வரு
மூர்த்திகனே திருக் கார்த்திகேயனே சாமி (எப்போது)

சரணங்கள்

1 அரவிந்த நிகர் மலர்ப்பாதா அந்தச் சுரர் தங்கண்
மிடிதீர்க்கு நீதா
பன்னிரு அத்தனே விளையாடுஞ் சித்தனே யென்சாமி
(எப்போது)

2 முத்தமிழ் பாடுங் கனிவாயா பத்தர்
சித்த முருகிய நன்னேயா செய்ய
சேவலனே விண்ணவர் காவலனே யென்சாமி
(எப்போது)

3 மதுமலர்க்காவிற் குதிபோடு மந்தி விது விளைத் தாவி
விளையாடும்
தோகை மயின் மலைதனில் வருமயின் முருகா யென்சாமி
(எப்போது)

## 1001. மனதுக்கொரு திடஞ்சொல்லுவாய்

பல்லவி

மனதுக் கொரு திடஞ்சொல்லுவாய் குகநாதா
வல்பிணிகளை யினி வெல்லுவாய் (மனது)

அநுபல்லவி

உனது பதமலரைக் காட்டுவாய் அதை
யுண்மையா யென்முடியிற் சூட்டுவாய் (மனது)

சரணம்

1 பில்லி சூனியங்களை விலக்குவாய் மற்றப்
பேய் பிசாசுக ளெல்லாம் கலக்குவாய்
நல்லிசை மொழி வள்ளி நாதனே வரம்
நாடின பேர்க்கருள் கியாதனே (மனது)

2 சோதி சின்மயமான ரூபனே யெந்தன்
றுயரத்தைத் தீர்த்தருள் பூபனே
ஆதி பராபரக் கர்த்தனே மயிலதின்
விளையாடிய நிர்த்தனே (மனது)

3 குன்றுக் குடிமலை யய்யனே வேல்
கொண்டிடும் பன்னிரு கையனே
இன்றுதரவுசெய் கந்தனே தமி
ழிசைபயில் ஞானசம் பந்தனே (மனது)

## 1002. இன்னொரு செனன மேதுக்கையனே

பல்லவி

இன்னொரு செனன மேதுக் கையனே - சாமி
யிந்தச் சென்மம் போது மெய்யனே (இன்னொரு)

அநுபல்லவி

முன்னொரு செனன வினையினாலே வந்து
மூண்டுதே பாவம் பர்வதம் போலே (இன்னொரு)

சரணங்கள்

1 தித்திக்கும் ரச திவ்விய கல்கண்டு போலச் சொல்லும்
சேயிழையா ராசையிற் கொண்டு
மெத்த மயங்கிச் சேதிகள் விண்டு அவருடைய
மின்னும் பின்னு மின்னு மலையவோ (இன்னொரு)

2 கெட்ட நோயிற் பட்டுடனுழன்று தனக்குள்ள
கண்ணிய மெல்லாந் தானே கழன்று
துட்டத் தரித்திர வாவியிற் சுழன்று மனம் கலங்கித்
துயர முயர வயர வலையவோ (இன்னொரு)

3 அந்த வான முந்திட நீளும் மாமலர்ப் பொழில்
அங்கு மிங்கும் எங்கும் சூழும்
சுந்தர நிறை குன்றையில் வாழும் கர்த்தனே பரி
சுத்தனே முத்தனே பத்தனலையவோ (இன்னொரு)

## 1003. திரும்ப வேணுமையா

பல்லவி

திரும்ப வேணுமையா சித்தம் திரும்ப வேணுமையா
(திரும்ப)

அநுபல்லவி

அருந்தவர் முதலினோர் விரும்புங் குன்றைமலை
யாண்டவனே மயிற்றூண்டவனே சித்தந் (திரும்ப)

சரணங்கள்

1 கொத்தலர் நீபந்தொடுத்த கண்ணியை யணிதோளா
சித்தர்கள் பரிவுள பத்தர்கள் பணிசெயுந் தாளா (திரும்ப)
2 வானவரிரு ணிறத்தானவர் நிதந்துதி பாதா
ஞானவர் தேடரிய தானகுகேச குருநாதா (திரும்ப)
3 அற்புதமாகிய நற்சிகிமலை வளர்தேவே
தற்பர சிவசிவ சிற்குண சரிதவென் கோவே (திரும்ப)

## 1004. போதும் போதுமையா

பல்லவி

போதும் போதுமையா இந்தச் செனனம் (போதும்)

அநுபல்லவி

மோதும் பொழில்கள் சூழும் குன்றை
மாமலே முருகனே மாயவன் மருகனே (போதும்)

சரணங்கள்

1 நோயில கப்பட்டுத் திரிந்து கொண்டு
நொந்து வெந்து தேகங் கரிந்து
சேயிழையார்களைப் பரிந்து மயலிற்
சிக்குப் பட்டுழன்றிடும் வெக்கங் கெட்ட செனனம்
(போதும்)

2 தாயார் வயிற்றிற் பிறந்து திவ்விய தற்பரனுர் தனைமறந்து
ஓயாமலினி யிறந்துபோய் யுலேந்து மங்குமிங்கு
மலேந்திடும் செனனம் (போதும்)

3 குன்ருக்குடிமலே வாசா யெனே நன்ருய்க் காத்தருளீசா
மன்ருடிய சண்முகேசா விந்த வையகத்திற் பொல்லாச்
செய்கையுள செனனம் (போதும்)

## 1005. சிவ சரவணபவனே

பல்லவி

சிவ சரவணபவனே - இப்ப
அவசியம் வந்தெனக் கருள் செய்வாய் குருபரா (சிவசர)

சரணங்கள்

1 சஷ்டி விரதந்தனிலேயனே - யெனது
துஷ்ட வியாதி தீர்ப்பாய் துய்யனே (சிவசர)

2 தானவர் சூரசம்மாரனே – திவ்விய
ஞான மிகுந்த நீபத் தூரனே (சிவசர)

3 செகண்டி மலேயில் வரு கந்தனே யெங்கும்
அகண்ட பரிபூரண னந்தனே (சிவசர)

## 1006. நடனமயில் வாகா

பல்லவி

நடனமயில் வாகா – யோகா
நடனமயில் வாகா (நடன)

அநுபல்லவி

வடவரை தனைநிகர் மயின்மலே நாதா (நடன)

சரணங்கள்

1 உன்னடி நம்புவோர்க் கின்னமும் மருள்செய்யா
தென்ன வையாயினி நன்னய முதவுவாய் (நடன)

2 சங்கர னருள் துங்க வடிவேலா
மங்கள கரமுக விங்கிதனே சாமி (நடன)

3 அண்டர் பணிபுரி கொண்டல் படிதரு
மண்டலம் புகழுஞ் செகண்டி மலைமுருகா (நடன)

## 1007. கருத்தனே யாளாய்

பல்லவி

கருத்தனே யாளாய் - (கரு)த்தனே யாளாய் (கருத்)

அநுபல்லவி

ஒருத்தர் துணையுமில்லை திருத்தமான குன்றை
யுத்தமனே பரிசுத்தனே யென்சாமி (கருத்)

சரணங்கள்

1 வாசமலர்க் கடப்ப மாமல ரணிபுயா
மோசஞ் செயும்சூரனை முடித்திடுங் கனசெயா (கருத்)

2 அடியவர்க்கு வினைதீர்த்து ஆண்டருள் வாயே
வடிவுற்ற வேற்கரவர நன்னேயா (கருத்)

3 சிகரகிரிச் செகண்டித் தேவர்கள் தேவா
அகரவுகர வடிவாகிய கோவே (கருத்)

## 1008. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே மூவர் முதல்வனே (தேவ)

சரணங்கள்

1 பன்னிரு கையனே யருட் சன்னிதி மெய்யனே
உன்னிரு தாள்தொழு மென்னையாளு மையனே (தேவ)

2 நிர்த்தன மயிலனே கானக் குறத்திக்கு வொயிலனே
வித்தகனே குகனே பத்தர் சகாயனே (தேவ)

3 மன்றற் பொழினீடும் குன்றைமலை வாழும்
வென்றி வடிவேலவா நன்றி யுதவுவாய் (தேவ)

## 1009. நெஞ்சே யொன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

நெஞ்சே யொன்றுக்கு மஞ்சாதே (நெஞ்சே)

சரணங்கள்

1 செஞ்சாலி வயல்சூழுஞ் செகண்டிமலை முருகைய
னகண்ட பூரண னிருக்க (நெஞ்சே)

2 தானவரைச் செயித்து வானவரை ரட்சித்த
தற்பரனூர் தமிழ் விற்பன னூரிருக்க (நெஞ்சே)

3 சங்கரனு ரருளு மிங்கித புதல்வனும்
சரவண பவனெங்கள் அரகர சிவனிருக்க (நெஞ்சே)

4 நின்ருடிய பொழிற் குன்ருக் குடிவளர்
நித்திய சுபகரனும் வித்தக னிருக்கையில் (நெஞ்சே)

## 1010. பாதத்தைக் கண்டுகொள் மனமே

பல்லவி

பாதத்தைக் கண்டுகொள் மனமே - நீ தினமே (பாதத்தை)

அநுபல்லவி

பரிபுரந்தரி பொரநடம்புரி (பாதத்தை)

சரணங்கள்

1 போதத்தை மேவு மெய்ஞ்ஞானத் தாயர வரும்
போற்றுங் குன்ருக்குடிக் கேற்றிடு மையன்றன்
(பாதத்தை)

2 வனச மலரெனும் போதன் சரஸ்வதி
தனக்கிசையு நாதன்
மனதிற் செபித்திடும் வேதன் – பணி
மலரற்புத நலமுற்றிய (பாதத்தை)

3 எங்கும் பிரகாசிக்கும் சோதி - யன்ப
ரிடையூறு தீர்த்த ருணீதி
பொங்கு மரக்கர்க்கு வாதி யான
புண்ணியனும் சுப்பிரமண்ணிய சாமி (பாதத்தை)

4 சமர சம்மார வேலன் இந்தத்
தாரணியோர் பணிசீலன்
குமர குருபரலோலன் நாளுங்
குன்றை மலைக்குகனன் றருளுந் திவ்விய (பாதத்தை)

## 1011. தரிசித்தபேர்க் கருளுண்டு

பல்லவி

தரிசித்தபேர்க் கருளுண்டு - நாளும் (தரிசித்த)

அநுபல்லவி

பரிசுத்தமான குன்றைப் பரமனைக் கண்டு (தரிசித்த)

சரணங்கள்

1 அண்டமெலா நிறைந்த சோதி பணி
தொண்டரை ரட்சிக்குங் கியாதி
யான சுப்பிரமணியனை யெப்பவுங் கண்டு (தரிசித்த)

2 சங்கரருக் கினிய பாலன் வெகு
மங்கள கரசுப லோலன்
தன்னை வந்தவர்க் கருள்புரி கந்தனைக் கண்டு (தரிசித்த)

3 குன்றுக்குடிக் கொரு நாதன் அன்பரை
நன்றாய்க் காத்திடும் பாதன்
செக ராசனருள் முருகேசனைக் கண்டு (தரிசித்த)

## 1012. மயில்வாகனத் தெய்வமே

பல்லவி

மயில்வாகனத் தெய்வமே - யயிலா
யுதத்தினு லசுரனைச் செயித்திடும் (மயில்)

சரணங்கள்

1 சித்தம் நெகிழ்ந்து பரிசுத்த வெனவு
நித்தந் துதிசெயும் பத்தன் மிடியைத் தீர்ப்பாய் (மயில்)

2 தேனலரணி குழற்பானல மொழியினுள்
கானக மயிலியைத் தானணை புயகுகா (மயில்)

3 தஞ்சமென்போருக்கு அஞ்சலென் றருள்
மஞ்சடர் பொழிற் குன்றை ரஞ்சக குமரேசா (மயில்)

## 1013. மருந்தாவது சொல்லையா

பல்லவி

மருந்தாவது சொல்லையா - வல்லது
மார்க்கமாவது சொல்லி வெல்லையா (மருந்தா)

அநுபல்லவி

பொருந்தாது நோய் வயிற்றிலிருந் தாதரம் செய்து
போகாத நோய்போக வாகா வழியாக (மருந்தா)

சரணங்கள்

1 அண்ட பகிரண்டமும் போற்றும் ஞான
ஆனந்தக் கடன்முழுகித் தேற்றும்
தொண்டர்கள் தீவினை மாற்றும்
பரிசுத்தனே வயிற்றுவலி
யத்தனையுந் தீர்ந்திட (மருந்தா)

2 பத்தர்கண் மிடிதீர்க்கு நாதா
திவ்விய பத்ம மலரைநிகர் பாதா
சித்த மிரங்கி யருணீதா வருள்
சேயனே யெந்தன் வயிற்று
நோய் தவிர்ந்திட (மருந்தா)

## 1014. சித்தந் திரும்பவில்லையா

பல்லவி

சித்தந் திரும்பவில்லையா - யடியனுக்
குற்றதிது வென்று சொல்லையா (சித்தம்)

அநுபல்லவி

வாசக் களபப் புயலோலா நாளு
நேசக் குறத்திக் கிசைமாலா (சித்தம்)

சரணம்

நேர்த்தியாம் பூசத்திரு நாளா அன்பர்
தோத்திரமிகு தண்டைத் தாளா
குன்றுக் குடிமலை வாசா வெனை
நன்றுட்கொள வருமீசா (சித்தம்)

## 1015. தஞ்சம் வேறில்லை

பல்லவி

தஞ்சம் வேறில்லை நீயே - யிப்ப
வஞ்சகம் செய்யாதே தாயே (தஞ்சம்)

சரணங்கள்

1 சங்கர ரருளிய பாலா சுக
விங்கித மிகும் வள்ளி லோலா
பங்கயமலர்த் தண்டைக் காலா நல்ல
பச்சை மயிலேறும் செச்சைப் புயசீலா (தஞ்சம்)

2 அண்டர் பணிசெயும் பாதா நாளும்
தொண்டர் கடுதிசெயு நாதா
வண்டர் படியும் மலர்ப்பாதா பணிய
வருகுரு பரனே முருகையனே சிவனே (தஞ்சம்)

3 தோகைமலைக் கிசைந்த தேவே வெற்றி
வாகை தரித்த தேவர் கோவே
யோகர் முடியிற் சூடும் பூவே நல்ல
வுத்தமனே பரிசுத்தனே யென்சாமி (தஞ்சம்)

## 1016. நடன மயிலேறி வருவாயே

பல்லவி

நடன மயிலேறி வருவாயே (நடன)

அநுபல்லவி

தடமுடி யிலகிய வடவரை நிகருள
செகம் புகழுங் குன்றைச் செகண்டி மலைமுருகா (நடன)

சரணங்கள்

1 சூரசம் மார வடிவேலா
சொர்ன்ன சார சிம்மாசன மேலா
ஆர நீபாபரண கோலா யெங்களாறுமுகத் தெய்வமே
வேறுமுகம் பாராமல் (நடன)

2 சகல பல்லுயிருக்கு மாதாரா விரு
சுகமகளிர்க் கலங்காரா
மகபதிதுதி செயுந்தீரா வன்பர்
வந்தடி தொழும்பாதா எந்த னிடத்தினில் (நடன)

3 அந்தர மீதினி னுலாவும்
அதனிலிருந்து மயில் குயில்கள் கூவும்
கொந்தலர் வனமெங்கு மேவும்
வளங்கொண்ட நலமுயர் செகண்டிமலைக் குமரா
(நடன)

## 1017. எந்தன் மனப்படி

பல்லவி

எந்தன் மனப்படி வந்தருளைத் தருவாயே – திவ்விய
கந்தமலர்ப் பொழிலுந்து குன்றைமலை வருவாய் (எந்தன்)

சரணங்கள்

1 நடன மயின்மிசை திடமுடனேறிய முருகா வெதி
ரடமுள்ள தானவரிடர்பட வெல்மாயன் மருகா (எந்தன்)

2 பத்தர்மிடி தீர சித்த மகிழ்ந்தரு ணுதா சுப
வித்தகனே பரிசுத்த சரவண நீதா (எந்தன்)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றைமலைக் குமரேசா வாசப்
பொன்றளிர் நீடிய கொன்றையணி சடையீசா (எந்தன்)

## 1018. வஞ்சகஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சகஞ் செய்யாதே மனமே வஞ்சகஞ் செய்யாதே
(வஞ்சகஞ்)

அநுபல்லவி

மஞ்சடர் குன்றை மலை மன்னனைத்துதி செய்ய (வஞ்சகஞ்)

சரணங்கள்

1 கானக் குறத்தி பாகன் அந்த வானவர்க் கருளும்
யோகன் தன்னையே வந்து மனது உவந்து பணிசெய
(வஞ்சகஞ்)

2 கஞ்ச மலரின் பாதன் அன்பர் நெஞ்ச மகிழு நாதன்
தன்னையே ஆசையுடன் முருகேசனைப் பணிய (வஞ்சகஞ்)

3 தோகைமலைக் குகேசன் நாள்தோறு மோகை புனையுமுல்
லாசன் தன்னையே குன்றை யுயர் மலையேறி வெகு
நயமுடன் பணிய (வஞ்சகஞ்)

## 1019. பராமுகமா யிருப்பதேதய்யா

பல்லவி

பராமுகமா யிருப்பதே தய்யா பராமுகமா யிருப்பதேதய்யா
(பராமுக)

அநுபல்லவி

அராவரா வென்று துதியன்பரை ரட்சிக்கப் (பராமுக)

சரணங்கள்

1 சங்கர சடாதரர் பாலா நாளுஞ் சிங்காரமிகு திவ்விய
கோலா மங்காத சோதிவடி வேலா மூன்று வையகம்
புகழ் முருகையனே யன்பர்மேற் (பராமுக)

2 ஆசைக் கடல்தனில் வீழ்ந்து எழும் போது அழுங்கி
யழுங்கிக் கொண்டு வாழ்ந்து மோசப்பட்டு லகினிற்
ருழ்ந்து அலேந்திட முருகா மாயன் மருகா வருளாமற்
(பாராமுக)

3 சோதிமுடிச் செகண்டி நாதா மகா வேதவேதியர்
புகழ் நீதா மாது குறத்தி சமேதா சூரனே வதைத்தவா
குலத்தைச் சிதைத்திடு வயிலா (பாரமுக)

## 1020. சரவணபவனே

பல்லவி

சரவணபவனே யென்முன் வரவேணுஞ் சிவனே
(சரவண)

சரணங்கள்

1 பாதாம் புயனே வள்ளி மாதாள் நயனே (சரவண)

2 குமர குகேசா பணியும் அமரர் விஸ்வாசா (சரவண)

3 ஞான சம்பந்தா குன்றைக் கியானதோர் கந்தா (சரவண)

## 1021. பரனே யருள்தருவாய்

பல்லவி

பரனே யருள்தருவாய் தரமிகு குன்றைமலேச்
சண்முக நாதா (பரனே)

சரணங்கள்

1 வாதுபுரி சூரனே மோது படையை வென்ற (பரனே)

2 கங்கை தரித்தவரன் பங்கிலுமை பாலா (பரனே)

3 குன்ருக்குடிவளர் நின்ருடு மயிலா (பரனே)

## 1022. பதந்தர வேணும்

பல்லவி

பதந்தர வேணும் – உந்தன்
பத்தன் முன் வரவேணும் (பதந்தர)

அநுபல்லவி

நிதமன்பர்பணி குன்றை நீதனே நாதனே (பதந்தர)

சரணங்கள்

1 கஞ்ச மலரில் வளருஞ் சதுமறைபயில்
ரஞ்சித வயன்பணி மிஞ்சிய மணமலர்ப் (பதந்தர)

2 திங்கணி றைந்தமுக மங்கள குறமக
ளிங்கித மிகுகன துங்கவடி வேலவா (பதந்தர)

3 அண்டரசுரர் நய தொண்டர் பணிய வரு
மண்டிய பொழில்சேர் செகண்டிமலை முருகா (பதந்தர)

## 1023. வால சண்முகனே

பல்லவி

வால சண்முகனே ஞாலம் புகழ் குகனே (வால)

அநுபல்லவி

சரவண பவனே யன்பர் பரவிய சிவனே (வால)

சரணம்

அண்டர்கள் பணிபாதா ஞானத் தொண்டர்கள் துதிநாதா
குன்றுக்குடி வேலா மயிலினி னின்றுடிய கோலா (வால)

## 1024. இன்றைக்குத் தீருமோ

பல்லவி

இன்றைக்குத் தீருமோ - விந்த வியாதி
யென்றைக்குத் தீருமோ (இன்றைக்)

அநுபல்லவி

குன்றைக்கு வாய்த்த குமர குருபரா (இன்றைக்)

சரணங்கள்

1 கந்தமலர்க் குழலாள் சந்தமிகு முலையாள்
செந்தினைப்புனம் வளருந் திருவள்ளி தோளா (இன்றைக்)

2 பத்தர்கள் பணிபாதா வித்தக முருகேசா
சித்தியும் வேண்டி முத்தியு முதவிசெய் (இன்றைக்)

3 நின்றுடு மயிலா நின்றுடுணையய்யா
மன்றுடிய பாதா குன்றுக்குடி நாதா (இன்றைக்)

## 1025. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ கர்த்தனே குன்றைமலைக்
கந்தனே யுந்தனுட (சித்த)

சரணங்கள்

1 பரம்பரமாகிய பொருளே யெங்கு நிரந்தரமாகிய வருளே (சித்த)

2 கோகனகமலர் வேதா பணி மாகனக தண்டைப் பாதா (சித்த)

3 அண்டின பேர்க்கருணீதியே செகண்டிமலை வருபதியே (சித்த)

## 1026. ஒன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

ஒன்றுக்கு மஞ்சாதே – மனமே
யொன்றுக்கு மஞ்சாதே (ஒன்றுக்கு)

அநுபல்லவி

யென்றுக்குமிகு சோதிக் குன்றைக் குகனிருக்க (ஒன்றுக்கு)

சரணங்கள்

1 வாச மிகுந்த நீபமாலை யணியும் புயன்
மோச மிகுந்த சூரை முடித்திடு வலுசெயன்
முருகையன் மாயன் மருகைய னிருக்க (ஒன்றுக்கு)

2 வேத வேதியர்கள் விரும்பிய பாதன்
மாதவர் முனிவர்கள் வாழ்த்திய நாதன்
வந்தவர்க் கருளுஞ் சம்பந்த னிருக்க (ஒன்றுக்கு)

3 சோதி மயமாகத் துலங்கிய மணிமுடி
சாதி விருட்சச் சோலை தங்குங் குன்றுக்குடி
தன்னிலரசு செய்யும் என்னைய னிருக்க (ஒன்றுக்கு)

## 1027. சரணஞ் சரணமையா

பல்லவி

சரணஞ் சரணமையா தரமிகு குன்றைமலைச் சண்முக நாதா (சரணஞ்)

சரணங்கள்

1 வானவர் சேனைபதியே நல்ல பாவலனே நிதியே (சரணஞ்)

2 வாது புரிசூரனை வீழ மோது மயில்வீரனே (சரணஞ்)

3 குன்றுக்குடி வாசா வள்ளி மின்றுனைனை நேசா (சரணஞ்)

## 1028. வந்து வரந்தருவாய்

பல்லவி

வந்து வரந்தருவாய் தோகை யுந்து
மலைமேல் வருவாய் (வந்து)

அநுபல்லவி

மாமல ராகிய நீபனே கன ஞான வேலா
மெய்ஞ்ஞான தீபனே (வந்து)

சரணம்

அண்ட ரண்டம் புகழு நாயனே நாலு
மெண்டிசையு நிறைந்த மாயனே
தோகை மலைக் கிசைந்த நாதனே வெற்றி
வாகை தரித்த புய நீதனே (வந்து)

## 1029. கண்டேனே நானே

பல்லவி

கண்டேனே நானே தண்டாயுதபாணி
சீர்பாதந்தனைக் (கண்டேனே)

சரணங்கள்

1 வேதவேதனை நாத நாதனை காதலுட னெப்போதுந்
தரிசிக்கக் (கண்டேனே)

2 நாய நாயனை மாய மாயனை சேயனை யன்பர்
சகாயனைத் தரிசிக்கக் (கண்டேனே)

3 தேவர் தேவனை மூவர் மூவனை ஆவலுடனே சேவலனைக்
(கண்டேனே)

## 1030. உன் பாதமே தருவாய்

பல்லவி

உன் பாதமே தருவாய் – அன்பர்
பணிகுன்றை யிலையனே வருவாய் (உன்)

சரணங்கள்

1 வானவர் மிடியெல்லாந் தீர்த்து அவர்கள்
தானமுறவுடன் காத்து
ரட்சிக்குந் தற்பரனே வெகு அற்புதனே சாமி (உன்)

2 வள்ளி மின்னுளுடன் கூடி திவ்விய
புள்ளி மயிலில் விளையாடி வரும் புண்ணியனே
சுப்பிரமண்ணியனே சாமி (உன்)

3 நன்ருய்ப் பலபொழில் சூழும் நீடிய
குன்ருக்குடி மலை வாழும்
குமர குருபரனே மாயன் மருகனே சாமி (உன்)

## 1031. இன்னந் தயவு வரவில்லையா

பல்லவி

இன்னந் தயவு வரவில்லையா – அது
என்னத்திஞ லெனக்குச் சொல்லையா (இன்னந்)

அநுபல்லவி

சொர்ன முடிமேவு நன்னயப் பொழில்தாவுந்
தோகைமலைக் கிசைந்த வோகை புனையுல்லாசா
(இன்னந்)

சரணங்கள்

1 வருத்தும் பிணியினுலே நொந்து கெட்டு
மாய்ந்துடனக் கினியில் வெந்து
திருத்தமா மனேக பந்து சனங்கள்
சேர்ந்து சேர்ந்து கொண்டு வந்து கூடிச்
சில்லென விரையாமல் நல்லனுபூதி செய்ய (இன்னந்)

2 ஆசா பாசத்திஞலே பொல்லா வலைந்து அலைந்து
பேயன் போலே
மோசமாயினேன் மென்மேலே முழு
மூடனுக்குன் கிருபையாலே நல்ல
முத்தியருள் செய்யச் சித்த மிரங்கிட (இன்னந்)

3 சுத்த பரிசுத்தமான தேன்றுளிக்கு மலர்ப் பொழில் வான்
முற்றுவளர் குன்றையாதீன நித்தமுனக் கடிமை
செயன்பான பத்தர்க் கருமையுடன் வெகுவா
யுரிமை யுடனருள (இன்னந்)

## 1032. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ – மேவிய
பொழிற்குன்றை மீது வருகுகனே (தீவினை)

சரணங்கள்

1 அண்டர் பணிசெயும் பாதா நல்ல தொண்டர் துதி
செயுநாதா
வண்டடரு மலர்வேதா தனக்கு மந்திர வுபதேச
கொந்தல ரணிபுயா (தீவினை)

2 மதுமலர் நீபமென் வாகா திவ்விய விதுமுக
வள்ளிதன் பாகா
துதிசெயு மன்பர்கள் மோகா தித்தி தொந்தொ
மென்றுடி வந்த மயிலா (தீவினை)

3 சொன்ன மாமுடி நீளும் வாச நன்னயப் பொழில்சூழும்
வன்னமயின் மலைவாழும் அருள் வால வடிவேலா
ஞால ரட்சக தேவா (தீவினை)

## 1033. கனக சதங்கைக் காலா

பல்லவி

கனக சதங்கைக் காலா - வுனது
தயவு செய்வாயுயர் சிகிவேலா (கனக)

அநுபல்லவி

அந்தர வானவர் வந்தடி பணியும்
கந்த மலரணி சுந்தர புயனே (கனக)

சரணம்

வாசக் குழல் நயநேசக் குறமகள்
ஆசைக் கிசைபுய வீசர்க்கிசை புதல்வா
நின்றுடிய மயிற் குன்றுக் குடிவளர்
நன்று யருள்புரி மன்றுடிய பாதா (கனக)

## 1034. கந்தனை நினைமனமே

பல்லவி

கந்தனை நினைமனமே ஞானசம்பந்தனை
நீப சுகந்தனைத் தினமே (கந்தனை)

அநுபல்லவி

தினைப்புன வள்ளி மணாளனைக் கண்டு
நினைப்பவர்க் கருளிய தாளனை (கந்தனை)

சரணங்கள்

1 மனத்துயர் காக்குந் தயாளனை ஐயனைப் பன்னிரு
    கையனை மெய்யனை
  அண்ட மெங்கு மாதாரனை நாளுந் தொண்டர்கள்
    பணி சிங்காரனை
  மிண்டிய சூரனை வெல்வீரனை வேலனைச் சதங்கைக்
    காலனைக் கோலனை (கந்தனை)

2 தெள்ளு தமிழ்சொல்லும் வாயனை சொர்னப்
  புள்ளி மயிலேறுஞ் சேயனை வெள்ளிமலைக் குன்றை
    நாயனை
  வீரனைச் சூர சங்காரனைச் சீரனை (கந்தனை)

## 1035. சிந்தை மகிழ்ந்து வரந்தருவாய்

பல்லவி

சிந்தை மகிழ்ந்து வரந்தருவாய் – ஆடு
மந்த மயிலேறி வருவாய் (சிந்தை

சரணங்கள்

1 வாசக் கடம்பணி புயனே நல்ல
  நேசக் குறத்தி நன்னயனே (சிந்தை)

2 ஆழி துயிலு மாயன் மருகா
  பாழிய சொர்னவயின் முருகா (சிந்தை)

3 தருமலர்ப் பொழிற் சிகிநாதா நாளும்
  அருளுதவு மலர்ப் பாதா (சிந்தை)

## 1036. கஞ்ச மலர்ப்பாதா

பல்லவி

கஞ்ச மலர்ப்பாதா வேறு தஞ்சமில்லை நாதா (கஞ்ச)

சரணங்கள்

1 பாதக மலத்தைப் போக்குவாய் மகா
  போத ஞானத்தை யுண்டாக்குவாய் (கஞ்ச)

2 வானவர் பணிபுரி கோவே மெய்ஞ்
  ஞானவர் தேடிய தேவே (கஞ்ச)

3 தோகைக் கிரி முருகேசனே நாளும்
  ஓகைக் குறமகளுலாசனே (கஞ்ச)

## 1037. வன்ன வடிவேலவா

பல்லவி

வன்னவடிவேலவா கன சொர்ன மயிற்கோலா (வன்ன)

சரணங்கள்

1 வாருலவுங் கனதனத்தாள் நாளு மங்களமிகு நல்ல
வினத்தாள்
தாருலவிய சோபனத்தாள் குறத்தையல் மருவிய
வைபோக நாதா (வன்ன)

2 அண்டர் பணிபாதாம் புயனே யெனக் காதரவுசெய்
நயனே
வண்டன் சூரனை வெல்செயனே யுமை வாலை திரிபுரை
தன் பால குகனே (வன்ன)

3 மதுமலர்ப் பொழிலெங்கு நீடும் அதில் வானரங்கள்
குதி போடும்
விதுதவழ் மாமுடி சூடும் என்று விர்த்தி பெறுங் குன்றைக்
கர்த்தனே சாமி (வன்ன)

## 1038. வரவேணுஞ் சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி - வந்து
வரந் தரவேணுஞ் சாமி (வரவே)

சரணங்கள்

1 கொந்தலரணி புயனே யயனே
வந்தருள் புரிபவனே சிவனே (வரவே)

2 நெஞ்சக் குறத்தி மணாளா பொற்றாளா
வாசக் கடம்பணி மாரா சீரா (வரவே)

3 குன்றுக் குடிமலை வாசா ராசா
நன்றாட் கொளும் வடிவேலா கோலா (வரவே)

## 1039. சாமி சித்தந் திரும்பாதோ

பல்லவி

சாமி சித்தந் திரும்பாதோ சாமி சித்தந் திரும்பாதோ (சாமி)

அநுபல்லவி

பூமி புகழுங் குன்றைப் பொருப்பிலு றையுங் கந்த (சாமி)

சரணங்கள்

1 அண்ட பகிரண்ட நிறைந்த சோதி
மண்டல வுயிர்களைக் காக்கு நீதி
மன்னிரு குருபர பன்னிருகைக் கந்த (சாமி)
2 கானக மாது மேலாசை கொள்கோலன்
தானவர்களை வென்ற கூரிய வேலன்
சரவணபவ வர வர வர கந்த (சாமி)
3 குன்றுக் குடிமலை மீதினில் வாசன்
நின்றுட் டுணையென்பரை ரட்சிக்கும் ராசன்
நித்திய சுபகர கர்த்தனுயர் கந்த (சாமி)

## 1040. எந்தன் கருத்துப் போலருள் செய்வாய்

பல்லவி

எந்தன் கருத்துப் போலருள் செய்வாய் - குன்றை
வந்த குருபர கந்தவேளே சாமி (எந்தன்)

சரணங்கள்

1 வாசக் கமல வேதனுர் பணிகுகனே நல்ல
நேசக் குறத்தி மருவிய சண்முகனே (எந்தன்)
2 கங்கை யணியும் பரமர்தன் பாலனே வெள்ளைச்
சங்கை யணிபவர் மருகா வேலா (எந்தன்)
3 மயின்மலைக் கிசைநாதனே நயனே மாங்
குயின்மொழித் தெய்வமான் புணர்நேயனே (எந்தன்)

## 1041. பாத தரிசனம் செய்வாயே

பல்லவி

பாத தரிசனம் செய்வாயே – மனமே
பாத தரிசனம் செய்வாயே (பாத)

அநுபல்லவி

சீதமதி தவழுஞ் செகண்டிமலைக் குமரன் (பாத)

சரணங்கள்

1 தஞ்சமெனு மன்பரைத் தற்காக்கு மையன்
கஞ்சமலர்ச் சரண கமழ்மலர் மெய்யன் (பாத)
2 வாச மென்னீப மலர்மாலிகை வாகன்
நேச மிகுந்த குறநேரிழை பாகன் (பாத)

3 அகண்ட பரிபூரண வானந்த சோதி
செகண்டி மலையில்வளர் சீர்பெறு நீதி (பாத)

## 1042. சகலசன ரட்சகா

பல்லவி

சகலசன ரட்சகா சிகிமலைதனில்
வருதேவர்கள் தேவா (சகல)

அநுபல்லவி

ஞானந் தவரூத நான்மறை வாயா
ஆனந்த நாயக ரருளிய சேயா (சகல)

சரணம்

அண்டர் பணிசெயு மற்புத நாதா
தொண்டர்கள் துதிசெயுந் தூயமலர்ப் பாதா
தோகை மலைக்கிசை பவனே
வாகை புனைபுய சிவனே (சகல)

## 1043. சித்தந் தெளிய வரந்தருவாய்

பல்லவி

சித்தந் தெளிய வரந்தருவாய் – குன்றை
வித்தகனே யுந்தன் பத்தன்முன் வருவாய் (சித்தந்)

சரணங்கள்

1 கானக மாது பங்காளா அந்த
வானக மாது மணாளா (சித்தந்)

2 சானகி மாயவன் மருகா மெய்ஞ்
ஞானவர் தேடிய முருகா (சித்தந்)

3 குன்றுக் குடிமலை வாசா நித
முன்றுட் கடிமையர் நேசா (சித்தந்)

## 1044. சமயம் சமயமையா

பல்லவி

சமயம் சமயமையா - பமர மலர்ச்
சோலை பணைத்த குன்றுக்குடியாய் (சமயம்)

சரணங்கள்

1 வாசக் கமலமலர் வேதா பணியும்
தாசற் கருளிய பொற்பாதா (சமயம்)

2 தஞ்சமென்போர் முன்னம் வருவாய் எந்தன்
நெஞ்ச மகிழ வரந்தருவாய் (சமயம்)

3 சூரசம்மார வடிவேலா தமிழ்ச்
சார மிகுந்த நயசீலா (சமயம்)

## 1045. சித்திர வடிவேலா

பல்லவி

சித்திர வடிவேலா குன்றைக் கர்த்தனே யடியேற்குக்
காட்சி தந்தருள் சீலா (சித்திர)

சரணங்கள்

1 வாசக் கமலமலர் வேதா குறத்தி
நேசத்துக் கிசைந்திடு நாதா (சித்திர)

2 அண்ட பகிரண்டங் கூடும் எங்கணு
கொண்ட சிறையை விரித்தாடும் மயிற் (சித்திர)

3 கோலாகலத் திருமால் மருகா சகல
நாலாங்கலை தெரிந்த முருகா (சித்திர)

## 1046. வரந்தர வேணும்

பல்லவி

வரந்தர வேணும் தரங்கொளுங்
குன்றைமலைச் சண்முக நாதா (வரந்)

சரணங்கள்

1 வன்ன மயிற்பரி வீரா சூரன்
றன்னை வென்றிடு கன சூரா (வரந்)

2 ஆசைக் கடலின் முழுகாமல் பெண்கள்
நேசத்திலே விழுகாமல் (வரந்)

3 குன்றுக் குடிக்கிசை பவனே
யன்பரை நன்றுட்கொள் சண்முகனே (வரந்)

## 1047. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் - நாளும்
நயமிகுங் குன்றைமலை நாதனே நீதனே (தயவு)

அநுபல்லவி

அண்டர்கள் முனிவர்கள் பணிபாதா
மகாதொண்டர்கள் தானவர் துதி நீதா (தயவு)

சரணம்

ஞான சற்குண குருதேவே யந்த
வானவர்க்காக்குஞ்ஞான தேவே
சொர்ன முடிச் செகண்டி வாசா
நல்ல வன்ன வடிவேற் பிரகாசா (தயவு)

## 1048. துங்க வறுமுகனே

பல்லவி

துங்க வறுமுகனே நறுஞ்சடைச்
சங்கரனார் மகனே (துங்க)

அநுபல்லவி

மங்களகர குகனே குறமயிற் கிங்கிதமிகு சுகனே (துங்க)

சரணங்கள்

1 ஞான சருவேசுரனே சகல மானவருள் வரனே
வானவர் பணிபரனே யன்பர்க்குத் தானருள் மலர்க்
கரனே (துங்க)

2 மாயவன் மருகேசனே குன்றைமலே சேயநன்
முருகேசனே
தூயபொற் குருகேசனே வள்ளி நாயகி யருகேசனே
(துங்க)

## 1049. மறைபயில் வாக்காய்

பல்லவி

மறைபயில் வாக்காய் குறைதனை நீக்காய் (மறை)

சரணங்கள்

1 வானவர் துதியே ஞானவர் நிதியே (மறை)

2 குன்றையின் மலையாய் நன்றுள கலையாய்

3 எந்தனைக் காப்பாய் உந்தன் கண்பார்ப்பாய் (மறை)

## 1050. நெஞ்சே மலையாதே

பல்லவி

நெஞ்சே மலையாதே - யொன்றுக்கு
மஞ்சே லலையாதே (நெஞ்சே)

சரணங்கள்

1 மஞ்சார் பொழிற்குன்றை வன்ன வடிவேலன்
தன் சார்பிருக்கத் தயங்கி மயங்கி (நெஞ்சே)

2 கானக் குறத்தியைக் காதலுடன் சேரும்
வானத் தனிருக்க மயங்கித் தியங்கி (நெஞ்சே)

3 வாசக் கடம்பமென் மாலையணி மார்பன்
தேசுற்றவ னிருக்கத் தியங்கி மயங்கி (நெஞ்சே)

## 1051. பொன்மயில் வாகா

பல்லவி

பொன்மயில் வாகா – தென்மயிற்
குன்றைமலைச் சேயனே நாயனே (பொன்)

சரணங்கள்

1 வாசகக் கடப்பமலர் மாலையணியுந் தோளா
நேசக் குறத்தியெனும் நேரிழையாள் பங்காளா (பொன்)

2 வன்ன வடிவேல் தன்னை வைத்திடுங்கையா
நன்னயத் தமிழ்சொல்லும் ரஞ்சித துய்யா (பொன்)

3 வாலையுமை கௌரி மகிழ்ந்தருள் பாலா
சோலை நிறைமுடித் தோகை மலையின் வேலா (பொன்)

## 1052. கருத்தனே

பல்லவி

கருத்தனே யுனைப் போலொரு தெய்வங்
காண்கிலேன் காண்கிலேன் (கருத்தனே)

அநுபல்லவி

திருத்தமான குன்றை மாமலைச் சேயனே
செங்கனி வாயனே (கருத்தனே)

சரணங்கள்

1 நடம்புரியுந் தோகை மயிலா நாம நெட்டிலைச் சொர்ன
வயிலா கடம்ப மலரணியு மொயிலா கந்தனே
ஞான சம்பந்தனே சாமி (கருத்தனே)

2 கானக வள்ளி மேவு புயனே கருது மன்பர்க்கருளு நயனே
தானவர்களை வென்ற செயனே
சரவணபவனே யரகர சிவனே (கருத்தனே)

3 சகல புவன ரட்சகனே சங்கரனு ரருளிங்கித மகனே
சிகியெனுங் குன்றை வளருங் குகனே
சீலனே யனுகூலனே சாமி (கருத்தனே)

## 1053. சரவணபவ குருபரனே

பல்லவி

சரவணபவ குருபரனே அரகர வரனே (சரவண)

அநுபல்லவி

பரவிய வடியவர் பழவினை தவிரப்
பண்ணிய சிகிமலை நண்ணிய குகனே (சரவண)

சரணங்கள்

1 துங்கமான சதுரங்க சேனைமிகு சூரனை
மாவை வெலும் வீரவடி வேலனே
அங்கமானதொரு தங்கமாமயில்
அண்டர்கள் சூழவரு தொண்டர்கள் கோலனே
(சரவண)

2 உந்தனடியவர்க்கு வந்த வினைகள் தீர
உத்தமனே யருள்செய் வித்தகனே யயனே
சந்தநிறைந்தபொருட் பைந்தமிழ் பாடிய
சங்க நாவலர்கள் பங்கிலுறை மெய்யனே (சரவண)

3 வாதுலாவு மலர்ப்போது லாவுபொழில்
மண்டி நீடிய செகண்டிமலை முருகா
சூதுமீறு தனமாது கோகனகத் தோகைமாயன்
மகிழ் ஓகைபுனை மருகா (சரவண)

## 1054. கந்தனே யுந்தனை யடுத்தோர்க்கு

பல்லவி

கந்தனே யுந்தனை யடுத்தோர்க்கு
வந்தருள் தந்தாளுவாய் (கந்தனே)

சரணங்கள்

1 சேயனே கனிவாயனே யன்பர்
நேயனே திவ்விய தூயனே சாமி (கந்தனே)

2 பத்தர் பணியு முத்தமனே யருள்
வித்தகனே நயமுத்தயனே சாமி (கந்தனே)

3 தொண்டினைச் செய்து அண்டினேர்க் கருளுந்
தண்டலைசூழ் செகண்டிமலைவாழ் (கந்தனே)

## 1055. பாத தரிசனஞ் செய்வாயே

பல்லவி

பாத தரிசனஞ் செய்வாயே – மனமே (பாத)

அநுபல்லவி

கோதறு குன்றைமலைக் குருபரன் றரும் பாலன் (பாத)

சரணங்கள்

1 பதஞ்சலி பூசித பரமர்தன் பாலன்
நிதஞ்சலியாதன்பர் நேயபொன் வேலன் (பாத)

2 மாதவ முனிவர்கள் வாழ்த்திய யோகன்
காதலி குறமயில் கலந்திடு வாகன் (பாத)

3 வானுயர் முடிக்குன்றை மாமலை வாசன்
கானுயர் மயிலேறு கர்த்த னுல்லாசன் (பாத)

## 1056. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா விண்முகமுயர் குன்றை
மேரில் வளரு நீதா (சண்முக)

சரணங்கள்

1 வேதாந்த மயமே நாதாந்த நயமே
வீடார்ந்த தீபமே தோடார்ந்த நீபமே (சண்முக)

2 மாதவர் தேடிய போதவர் நாடிய
வன்ன மயிலின் மேலா சொன்ன வடிவின் வேலா
(சண்முக)

3 மாமது தருநீளும் தேமலர்ப் பொழில் சூழும்
மயின்மலை வருவோனே யொயிலுள முருகோனே
(சண்முக)

## 1057. நடமயிற்பரி முருகையா

பல்லவி

நடமயிற்பரி முருகையா தடவயிலேந்து பன்னிருகையா (நட)

சரணங்கள்

1 நான்மறை தேடிய சரணும் புயனே
நறும் விபூதி புனையுந்தேக பொன்மயனே
வான்மதி முகக்குற மயிலி நன்னயனே
வந்தடு சூருயிரைச் சிந்திடு செயனே (நடன)

2 மதுரிதத் தமிழ்சொல்லுஞ் செங்கனி வாயா
மனதினி லனுதினந் தியானிப்போர் நேயா
புதுமலர்க் கடம்பணி வாகுள சேயா
புண்ணியனே சுப்பிரமண்ணியனே தூயா (நடன)

3 அகண்ட பரிபூரண வானந்த ரூபா
அண்ட மதிரிடக் கொண்டிடு கோபா
செகண்டி மலைக்கொரு திவ்விய தீபா
சின்மய மாகிய நன்மைகொள் பூபா (நடன)

## 1058. ஐயனே குமர குருபரனே

பல்லவி

ஐயனே குமர குருபரனே - வெகு
துய்யனே குன்றைமலைச் சுக சுபகரனே (ஐயனே)

சரணங்கள்

1 பாதாம் புயந்தனைப் பன்மலர் கொண்டு
நாதாந்த மேயென்ன நற்றுதி விண்டு
நாளு மன்பர் பணியு நீளும் வடிவேலவா (ஐயனே)
2 சரவண பவகுக சண்முக நாதா
அரகர முருகைய வற்புத பாதா (ஐயனே)
3 மதுதவழ் மலர்ப்பொழில் வானிலு நீளும்
நிதிபெறு குன்றையெனு நிலமலை வாழும்
நிர்த்தனருளிய புத்திரனே யெந்தன் (ஐயனே)

## 1059. தரிசிக்க வேணு மனனே

பல்லவி

தரிசிக்க வேணு மனனே தரிசிக்க வேணு மனனே (தரிசிக்க)

அநுபல்லவி

தரிசிக்க வேணு மனனே
பரிசுத்தமான குன்றைப் பருப்பதந்தனை விருப்பமாய்த்
(தரிசிக்க)

சரணங்கள்

1 தாதவிழ் நீப மலர்த்தாரன் மாமலர்ப் பாதபங்கய வசீரன்
மோதிய சதுரங்க சூரன் வீழ்ந்திட மூட்டிய கூரிய
தாட்டிக வேலனைத் (தரிசிக்க)

2 சினைக் கருமுகிற் குழற்காருள் மதுரித திவ்விய வசன
மெனுந் தேனுள்
தினைப்புனங் காத்திடு மேனுள் மருவிய தேவர்கடேவனை
மூவர்கள் மூவனைத் (தரிசிக்க)

3 அண்டமுய ருங்குன்றை வாசன் அண்டமெண்டிசையு
நிறை பிரகாசன்
தொண்டர் துதித்த முருகேசன் நல்ல தூயனை யன்பர்
சகாயனை நாயனைத் (தரிசிக்க)

## 1060. சித்தம் கனிந்தருள் செய்வாயே

பல்லவி

சித்தம் கனிந்தருள் செய்வாயே நாளும் (சித்தம்)

அநுபல்லவி

பத்தர் பணியுங் குன்றைப் பரனே யரனே (சித்தம்)

சரணங்கள்

1 தானவர் படை வீழ்ந்துபோக அந்த வானவர் குல
நலமாக தொட்ட
வால வடிவுள்ள வேலவனே யுந்தன் (சித்தம்)

2 உந்தன் பதமலரை நாளும் மனதார வந்தனை செய்யு
மன்பர் வாழும்படியாக வரந்தருவா யெங்கும் நிரந்தர
மானவா (சித்தம்)

3 இருமாதர் புணர்லோலா குன்றைக் கிரிமீது
வருசீலா நயக்
குமரேசா வருள் அமரேசா சாமி (சித்தம்)

## 1061. எந்தன் மனப்படி வந்தருள்வாயே

பல்லவி

எந்தன் மனப்படி வந்தருள்வாயே (எந்தன்)

அநுபல்லவி

கந்தமலர்ப் பொழிலுந்து செகண்டி மலைக்
கர்த்தனே வெகுபரி சுத்தனே நீயே (எந்தன்)

சரணங்கள்

1 அரிதரிதாகிய ஆரணப் பொருளே பரிவினையடியர் மனம் பழகிய தெருளே

2 சாரச மிகுந்த செந்தமிழ்க் கனிவாயா பாரசகரதனப் பாவையர் நேயா

3 திருமுடி மேவிய செகண்டி மாமலையா மருமலரணிபுய மதுரித கலையா (எந்தன்)

## 1062. காக்க வேணுமையனே

பல்லவி

காக்கவேணுமையனே - யெனைக் கடைக்கண் பார்க்க வேணுமையனே (காக்க)

சரணங்கள்

1 உந்தன் மருமலர்ப் பாதந் தந்தெனை யெந்நாளும் வந்தனை புரிகின்ற வெந்தனை யன்பாகக் (காக்க)

2 சின்ன மயிலேறி வன்னவடி வேலோடு நன்னயமாய்ப் பிரசன்னமதாய் வந்து (காக்க)

3 சூதடருந்தன மாதரிருவருடன் சீதள சிகிமலை நாதா வென்முன் வந்து (காக்க)

## 1063. நினைத்த வரந்தரவேணும்

பல்லவி

நினைத்த வரந்தரவேணும் நினைத்த வரந்தரவேணும் (நினைத்த)

அநுபல்லவி

அனைத்து லகுந்துதிக்குமினத்து மணி நிறைக்கும் அகண்ட முடியுலவுஞ் செகண்டிமலை முருகா (நினைத்த)

சரணங்கள்

1 உன்னை யல்லாதுலகிற் பின்னை வேறுண்டோ வென் அன்னையே மனம் வைத்தென்றன்னை ரட்சிக்கும்படி (நினைத்த)

2 செகத்தி லுள்ளோர்களும் கத்திலுள்ளோர்களும் சுகத்தில் வந்து பணியுங் குககுமரேசனே (நினைத்த)

3 மன்றல் மலர்ப்பொழில் சேர்குன்றை மாமலை வேலா இன்று வந்தென்னைக் காக்க நின்றயவு செய்து(நினைத்த)

## 1064. மதுமலர்ச் சரணு

பல்லவி

மதுமலர்ச் சரணு புதுமலர்ச் சோலை பொருந்திய குன்றை
அதில் வளர்துரையே அருள்தர வுரையே (மதுமலர்)

சரணங்கள்

1 கங்கை தரிசித்த சடைக் காரணனுரிட
மங்கையுமை கவுரி வாலைதன் பாலா (மதுமலர்)
2 வெள்ளிமயில் மீதினில் மின்னு மயிலேந்தியே
வள்ளி மயிலாளோடும் வந்து வரந்தருவாய் (மதுமலர்)
3 மன்றன் மலர்ச்சோலை வளர் தருமுடி சேர்
குன்றைமலை வாழுங் குருபர நாதா (மதுமலர்)

## 1065. சண்முக நாதா

பல்லவி

சண்முகநாதா பண்முகத் தமிழ்பாடும் பாவலா காவலா
(சண்முக)

அநுபல்லவி

கடகரி சோதரனே யன்பர்க் கிடர்தீர் பராபரனே (சண்முக)

சரணம்

வானுடர்கள் சகாயனே தினைக் கானுன் மருவிய நேயனே
கனக மலையை நேரா யகன்ற புனமென் செகண்டி மேரா
(சண்முக)

## 1066. எந்தவித மென்றறியேன்

பல்லவி

எந்தவித மென்றறியேன் – கொந்தலர் மலர்ப்பொழிற்
குன்றைமலை வாழுங்
குருபர னெந்தனை யருமையாய் ரெட்சிப்பது (எந்த)

சரணங்கள்

1 பத்தர்கள் தன்னுட சித்தமிசைவு போல்
மெத்த வருள் செயுங் கர்த்த னெனைக் காப்பது (எந்த)
2 பைந்தமிழ் பாடுஞ் சம்பந்தன் கடம்பணி
சுந்தரப் பன்னிரு தோள் எந்தனெனைக் காப்பது (எந்த)

3 மாதண்ட சூருடல் தீதண்ட வென்றவன்
பூதண்டம் புகழ்குன்றை வேதண்டன் காப்பது (எந்த)

## 1067. உந்தனை நம்பினே னெந்தினைக்காப்பாய்

பல்லவி

உந்தனை நம்பினே னெந்தனைக் காப்பாய் (உந்தனை)

அநுபல்லவி

சுந்தர மயிலேறு கந்தனே குகனே (உந்தனை)

சரணங்கள்

1 வானவர் முனிவரர் தான வரவுணர்கள்
ஞானவர்பணி செயுங் கானமின் மயலா (உந்தனை)
2 சத்துரு சம்மார மித்துரு பரிபாலா
சித்து விளைக்கு நாதா முத்து நகையின் வாயா (உந்தனை)
3 வண்டடரு மலர்த் தண்டலை மருவிய
கொண்டல் தவழுஞ் செகண்டி மலையின் வாழ்வே
(உந்தனை)

## 1068. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே அடியேனுக்கு வேறு துணை
யில்லையே (ஆறு)

அநுபல்லவி

பத்தர் பணியும் பாதனே சூர சத்துரு சங்கார நாதனே
(ஆறு)

சரணம்

நாம வடிவேற்கரனே கொன்றை மாமலரணியரனே
அகண்ட சின் மயரூபனே மாமுடிச் செகண்டிமலை வாழ்
பூபனே (ஆறு)

## 1069. வரந் தரவேணும்

பல்லவி

வரந்தரவேணும் நிரந்தரமா யெங்கு நிறைந்த வாவுரைந்
தவா (வரந்)

சரணங்கள்

1 கங்காதரர் பாலா வன்பர்க்கு மங்கா தருள் வேலா (வரந்)
2 வன்ன மயிலின் வருநன்னய முருகேசா (வரந்)
3 தித்திக்குங் கனிவாயா எத்திக்கும் புகழ் சேயா (வரந்)
4 தாதவிழ் சோலை சூழும் குன்றை மீதனு தினம் வாழும் (வரந்)
5 விண்ணவனே குகனே பண்ணவனே செகனே (வரந்)

## 1070. சரவண பவனே

சரணம்

சரவண பவனே யரகர சிவனே (சரவண)

அநுபல்லவி

பரவிய வடியார் வழவினை தவிர்ப்பணுணிய வருள் சுப்பிர
மண்ணிய சாமி (சரவண)

சரணங்கள்

1 எங்கு நிறைந்த பராபரனே யினி யென்று மிலங்கு
சுபகரனே
கொங்குயர் மலர் நீபதரனே யனுகூலனே வடிவேலனே
சாமி (சரவண)
2 வச்சிரபாணி மருகேசனே செக மன்னுயிர்க் கருள்
முருகேசனே
பச்சை மயிற் குருகேசனே சம்பந்தனே யுமை மைந்தனே
சாமி (சரவண)
3 வெள்ளி யங்கிரி போல வுன்னிய நாளு மேலான
மலர்ப்பொழில் துன்னிய
தெள்ளிய சொர்னமுடி மின்னிய அந்தச் செகண்டிமலை
வளரும் கண்ட பூரண சாமி (சரவண)

## 1071. அஞ்ச வேண்டா மனமே

பல்லவி

அஞ்சவேண்டா மனமே மஞ்சார் பொழிற்குன்றை
வாசனிருக்கவே (அஞ்ச)

சரணங்கள்

1 வாசமாமலரணி புயனே குறத்தி நேசமிகுந்த
நன்மையனே
மயில் நித்த கனலயிலேந்து சித்தனிருக்க (அஞ்ச)

2 வனச மண்டபம் வளர் வேதன் பரவிய
கனக தண்டையணி பாதன் யார்க்கும்
கர்த்தனிலகு பரிசுத்தனிருக்கவே (அஞ்ச)

3 குன்றுக்குடிக் கிசை கந்தன் அன்பரை
நன்றுட் கொளுஞ் சம்பந்தன் தெய்வ
நாயனுமாபதி சேய னிருக்க (அஞ்ச)

## 1072. சுக குரு நாதா

பல்லவி

சுக குரு நாதா பகரரு நீதா ஆதிபரா பரனே போதணிய
ரனே (சுக குரு)

சரணங்கள்

1 பன்னிரு கையா நன்னய துய்யா (சுக குரு)

2 நாதாந்தப் பொருளே வேதாந்த வருளே (சுக குரு)

3 மயின் மலே வாசா வொயில் முருகேசா (சுக குரு)

## 1073. கண்டு கொண்டேன்

பல்லவி

கண்டு கொண்டேனே அண்டர் போற்றுங் குன்றை
யாதிபனை நீதிபனை (கண்டு)

சரணங்கள்

1 சாத்திர முனிவோர்கள் தோத்திரனையருள் நேத்திரனை
குன்றை க்ஷேத்திரனையின்று (கண்டு)

2 தூயனைச் சம்பிரதாயனை யன்பர் சகாயனை வானவர்
நேயனை நானின்று (கண்டு)

3 மெய்யனைப் பன்னிருகையனை மயிலேறுமையனை
யருள்புரி செய்யனை யினியின்று (கண்டு)

## 1074. துதித்துக்கொள் மனதே

பல்லவி

துதித்துக்கொள் மனதே அய்யனை நெஞ்சிற் பதித்துக்
கொள் உனதே (துதித்)

சரணங்கள்

1 அண்டர்கள் பணிபாதனை நாளுந் தொண்டர்கள் துதி நாதனை (துதித்)

2 பத்மபாதாம் புயனை யாவர்கு மற்புதமான நயனை (துதித்)

3 செகண்டி முருகேசனை யெங்கு மகண்ட பூரண வாசனை (துதித்)

## 1075. வடிவேலா வடியேனைக் காப்பாய்

பல்லவி

வடிவேலா வடியேனைக் காப்பாய் (வடிவே)

சரணங்கள்

1 சூரசம்மாரா வீரவகோரா (வடிவே)

2 சங்கரர் பாலா இங்கித லோலா (வடிவே)

3 சிகிமலை நீதா சுககுரு நாதா (வடிவே)

## 1076. கந்தனே யெந்தனை யாளாய்

பல்லவி

கந்தனே யெந்தனை யாளாய் (கந்த)

அநுபல்லவி

கொந்தலர் மலர்ப்பொழிற் குன்றை மாமலையா (கந்த)

சரணங்கள்

1 கானக் குறத்தி பங்காளா அந்த வானத்தவர் பணியுந் தாளா (கந்த)

2 கனக தண்டை புனையுஞ் சரணு வாசப் புனம் வளர் நீபா பரணு (கந்த)

3 அகண்ட பூரணமான வருளே நாளுஞ் செகண்டிமலை வளரும் பொருளே (கந்த)

## 1077. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்தமிரங்கவேணும் உத்தமனே குன்றைக் கொருத்தனே திருத்தமாக (சித்த)

அநுபல்லவி

சங்கரனருள் பாலா சூரனை யங்க மிரு கூறு செய்வேலா
(சித்த

சரணம்

அண்ட நிறைந்த பராபரனே நாளுந் தொண்டர்
பணியுமருளரனே
தோகைக் கிரியிற் குமரேசா வெற்றி வாகைக் கிசைந்த
புய தேசா (சித்த)

## 1078. தரிசிக்க வேணு மனமே

பல்லவி

தரிசிக்க வேணு மனமே பரிசுத்தமான குன்றைப் பரனை
யரனை (தரிசிக்க)

சரணங்கள்

1 சுத்த நிட்களமான வத்துவித முடிவான
நித்திய பரிபூரண கர்த்தனை நாளுந் (தரிசிக்க)
2 தேனலரணிகதிர் மான வடிவேலவ
ஞானசம்பந்தனை தானனு தினமாக (தரிசிக்க)
3 அண்டமுலர்விய தண்டலை நீடு செ
கண்டி மலை வரும கண்ட பரிபூரணனை (தரிசிக்க)

## 1079. முருகையா இருகையால் வேலெடுத்து

பல்லவி

முருகையா - இரு கையால் வேலெடுத்து எந்தனைக்
காப்பாய் (முருகையா)

அநுபல்லவி

திரிபுர சம்மார வரியர வம்புனை விரிசடைய ரனருள்
பரிவுள புதல்வா (முருகையா)

சரணம்

கற்பக மலர்புனை பொற்புறு கனவானனே யற்புத மருகா
விற்பன துரையே
வேதாந்த மயமே பாதாம்புயனே போதார்ந்த பொழிற்
குன்றை மீதார்ந்த வொளியே (முருகையா)

## 1080. பன்னிரண்டு கையனே

பல்லவி

பன்னிரண்டு கையனே யடியேற்கு நின்னிதியருள்
துய்யனே (பன்னிரண்டு)

சரணங்கள்

1 அண்டிற்கிசை துரையே யுன்னுட தொண்டற்கு நல
முறையே (பன்னிரண்டு)
2 நாரணன் முருகேசா நான்கு ஆரண முருகேசா
(பன்னிரண்டு)
3 துதி பெறு சிகிமலையா நாளும் அதிக நற்பல கலையா
(பன்னிரண்டு)

## 1081. உனது தயவு செய்ய வேணுமையா

பல்லவி

உனது தயவு செய்ய வேணுமையா – குன்றைத்
தனது பதியில் வளர் சண்முக அய்யா (உனது)

சரணங்கள்

1 கோடேந்திய மலர்த் தாமரை வேதா தொழ
வுபதேசஞ் செயுஞ் செககுரு நாதா
ஏடேந்திய செய்ய கடம்பெனும் போதா
இச்சிக்கு மன்பர் பூக்கொண்டர்ச்சிக்குமிரு பாதா
(உனது
2 தானவர் சேனை சூழ வெதிரிட வந்து
சமர் செயுஞ் சூரபத்மன் மேனி யெல்லாம் நொந்து
வானவர் பூமழை யுயரச் சொரிந்து
வாழ்த்திடவே யவனைத் தாழ்தவனே சாமி (உனது)
3 மந்திதாவும் விசையி லொன்றேடொன்று சாய்ந்து
மதுரரசக் கனியின் றேனது பாய்ந்து
முந்திய குன்றை யெனு மாமலை தோய்ந்து
முக்கியமாய் வளரு முக்கிர வடிவேலோனே (உனது)

## 1082. உனக்கடிமையானேனே

பல்லவி

உனக்கடிமையானேனே – அந்த
வனக்குற மயிலி பங்கா வரத சண்முகா வரனே (உனக்)

சரணங்கள்

1 எந்தவிதத்திலுஞ் சொந்த மிவ னென்று
அந்த மயிலிலேறி வந்தருள் செய்ய வேணும் (உனக்)

2 செச்சை புனைபுயனே பச்சை மயில் வாகனே
கச்சை யணி குறப் பெண்ணிச்சைக் கிசை பவனே (உனக்)

3 கூனற் குரங்கறியா வானத் துயருகின்ற
கானற் பொழிற் செகண்டி மேனத் திவளர் குகனே (உனக்)

## 1083. திருமுக தரிசனே தருவாயே

பல்லவி

திருமுக தரிசனே தருவாயே - நாளும் (திருமுக)

அநுபல்லவி

மருவளருங் குன்றை மலையினில் வருவாய் (திருமுக)

சரணங்கள்

1 பங்கய மலர் நிகரிருதாளா செய்ய நீ
பம்மலரணியும் பன்னிரு தோளா
மங்கை குறத்திபுணர் மணவாளா - வன்ன
மயிலில் வரு நன்னய முருகேசா (திருமுக)

2 வந்த வினைகளெல்லாந் தீரவே பொல்லா
மாயவக்கியான மெல்லாந் தூரவே
நொந்திடு நோய் களெல்லாஞ் சோரவே
நுண்ணிய தமிழ்ச் சுப்பிரமணிய சுவாமி நீ (திருமுக)

3 சோதிச் சொருபமான வொளியே திவ்விய
தூய பரமானந்த வெளியே
போதடர் பொழிற் குன்றை யளியே
போதனே செக நாதனே சாமி - நீ

## 1084. முருகையா

பல்லவி

முருகையா மயிற் குருகையா (முருகையா)

சரணங்கள்

1 ஈசனே குன்றை வாசனே
வானவர் மெய்ஞ் ஞானவா (முருகையா)

2 தூயனே யன்பர் நேயனே
தோகையா வெற்றி வாகையா (முருகையா)

## 1085. காண்பதே பெரிது

பல்லவி

காண்பதே பெரிது குன்றக்குடிக் - கர்த்தனை முத்தனைக்
(காண்ப)

அநுபல்லவி

பூண் புனைந்திடு பன்னிரு புயனைப் புண்ணியனைச்
சுப்பிரமணியனைக் கண்ணால் (காண்ப)

சரணங்கள்

1 ஆறுமுகத் தம்பிரானை யிந்த வண்டர் பணியும்
பெருமானைக்
கூறுபடை வேற்கையோனை யனு கூலனை
வள்ளிலோலனைக் கண்ணால் (காண்ப)
2 ஆதியான பராபரனை யன்பர்க் கனுக்கிரகஞ் செய்யுமீ
சுரனை
சோதி மயமான வைங்கரனை நல்ல தூயனை யருள்
சேயனைக் கண்ணுற் (காண்ப)
3 வானவர் சேனுபதியைக் குன்றை மாமலைக் கிசை
நிதியை
ஞானியர் புகழ் பதியை யிந்த வையம் பணியுமையனைக்
கண்ணுற் (காண்ப)

## 1086. எந்தக் காலமையா

பல்லவி

எந்தக் காலமையா - வருள்
செய்வ தெந்தக் காலமையா (எந்தக்)

சரணங்கள்

1 சொந்தக் காரனிவ னென்றறிந்தே மனதிற்
ரேணவே யார்க்குங் காணவே வந்து (எந்தக்)
2 வாசக் கடம் பணிபுயனே நாளு நேசக் குறத்திக்கு
நன்மையனே (எந்தக்)
3 நாடகம்புரி மயிலா துணை நீடகண்டித வயிலா
குன்றை மாமலை யரனே யன்பர்க் கென்று முதவு பரனே
(எந்தக்

## 1087. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா அடியவர் பணிகுன்றுக்
குடிவளர் குகனே (வடிவே)

சரணங்கள்

1 தான வருடனே சதுரங்கஞ் சூழ ஈனனெனுஞ்
சூரனெதிரெதிர் மாள
எடுத்துக் கையாற் றெடுத்து வென்ற (வடிவே)
2 நவமணி கொழிக்கு நளிர் சமுத்திரத்தில்
கவனமதாகக் கருதியே யுரத்தில்
கனத்துடனே வெகு சினத்துடனே தொட்ட (வடிவே)
3 குன்றுக்குடி வரு குருபர நாதா
நின்றுட்டுனேயென்பரை ரெட்சிக்கு நீதா
நித்திய சுபகல்யாண பத்தர் பணியுஞ் சீலா (வடிவே)

## 1088. தரவேணுமையனே

பல்லவி

தர்வேணுமையனே – மயில் மேல்
வரவேணுமையனே (தரவே)

அநுபல்லவி

அண்டர் பணிதேவே நாளுந்
தொண்டர் துதி கோவே (தரவே)

சரணம்

கானக் குறத்தி தோளா நல்ல ஞானத்தர் புகழ் தாளா
அகண்ட பரிபூரணா முடிச் செகண்டி மலையாரணா (தரவே)

## 1089. சித்தா சித்தா சித்தா

பல்லவி

சித்தா சித்தா சித்தா செகண்டி மலைக்
கர்த்தா கர்த்தா கர்த்தா (சித்தா)

சரணம்

ஈசா வீசா வீசா யறுபடை வாசா வாசா வாசா
முருகா முருகா முருகா மயிலான குருகா குருகா குருகா
வேதா வேதா வேதா பத்தர் பணி பாதா பாதா பாதா
வேலா வேலா வேலா குன்றுக்குடிச் சீலா சீலா சீலா
(சித்தா)

## 1090. திருவருள் புரிவாயே

பல்லவி

திருவருள் புரிவாயே - பெருவளமோங்கு
குன்றைப் பெருமானே நீயே (திரு)

அநுபல்லவி

கந்தா குமாரா கடம்பா கார்த்திகேயா
செந்தாமரைப் பாதா தேவர் சகாயா (திரு)

சரணம்

மதுரிதத் தமிழனை வழுத்திய நாவா
சதுமறை தேடருந்தனிப் பெருந்தேவா
நன்ருக வன்பரை ரட்சிக்கும் பாதா
குன்ருக்குடி வருகுரு பரநாதா (திரு)

## 1091. ஒருக்காலு மறக்காதே மனமே

பல்லவி

ஒருக்காலு மறக்காதே மனமே - திருக்கா வுலாவுங்
குன்றைச் சேயனை நாயனை (ஒருக்காலும்)

சரணங்கள்

1 வாசக்கடம்பணி மாரனைச்சீரனை நேசக்
குறத்திக்கு நேயச்சேயனை (ஒருக்காலும்)

2 சருவதயாபர சாமியை நேமியை நிர்மலனை வெகு
நீதனை நாதனை (ஒருக்காலும்)

3 குன்ருக்குடிவர் குமரனைச் சமரனை நின்ருடிய
மயில் நிர்த்தனைச் சுத்தனை (ஒருக்காலும்)

## 1092. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் - அடியற்கு நய மென்பது தோணும்
(தயவு)

சரணங்கள்

1 அண்டை பகிரண்டம் தங்கும் நிறைந்த எண்டிசை
புவனமெங்கும் ஆடிக்
கொண்டு விளையாடுஞ் செகண்டியில் வருவோனே
(தயவு)

2 வானவர் தேடிய நிதியே நல்லமெஞ் ஞானவர் பாடிய
துதியே கடம்பத்
தேனலரணி மார்பா தானவர் குலகாலா (தயவு)

3 தருண மாதர் புணர் தோளா திவ்விய அருண மலர்
நிகர்தாலா மருமலர்ப் பொழிற்குன்றைத் திருமலைக்
கிசைப்பவா (தயவு)

## 1093. வாது செய்யாதே

பல்லவி

வாது செய்யுதே பொல்லாவினை வாது செய்யுதே (வாது)

அநுபல்லவி

போது செயு மலர்ப் பொழிற்குன்றை நாதா (வாது)

சரணங்கள்

1 பைந்தளிர்த் திவ்விய கடம்ப மலரணிபுயா அந்த
மிகுந்த வள்ளியம்மைக்கு நன்மையா (வாது)

2 போது கொய் தருச்சனை புரியுமன்பர் கணுதா
வாது செயுஞ் சூரரை வதைத்திடு நீதா (வாது)

3 மன்ருடிய வரன் மகிழு மன்புறு பாலா
குன்ருக்குடி வளர் குருபர கோலா (வாது)

## 1094 கருணு கடாட்சனே திருமாது

பல்லவி

கருணு கடாட்சனே திருமாது விளையாடு மருமா மலர்ப்
பொழிற் (கருணு)

அநுபல்லவி

செகண்டி மலைவரு மகண்ட பரிபூரணு (கருணு)

சரணங்கள்

1 சித்திரமிரங்கி யுன் பத்தன் மேற்றயவு வைத்தனு
பூதி செய் யுத்தமனே குகனே (கருணு)

2 செய்ய கடம்பெனுந் துய்யமலரணி ஐயனே பூதியணி
மெய்யனே சாமி (கருணு)

3 நின்ருள் பணியன்பர் நன்ருக ரெட்சிக்கும் மின்ருவிய
முடிக்குன்ருக் குடிநாதா (கருணு)

## 1095. கூறு படை வேலவா

பல்லவி

கூறுபடை வேலவா வேறு கெதியில்லை (கூறு)

அநுபல்லவி

மீறுங் குன்றை மலை வேந்தனே யருள் சேந்தனே சாமி (கூறு)

சரணங்கள்

1 அண்டரண்டங் கடந்தப் பால் நிறைந்த வா
தொண்டர் மனதினிற் றேூண வுறைந்த வா (கூறு)

2 நீலக் கடலிற்றுயி னெடுமான் மருதா
மாலைக் குறத்தி மருவிய முருகா (கூறு)

3 செகண்டிமலை வரு திவ்விய குகேசா
அகண்ட பரிபூரணு வற்புத வீசா (கூறு)

## 1096. துதித்துக் கொள்வாய் மனமே

பல்லவி

துதித்துக் கொள்வாய் மனமே மதிக்குஞ் செகண் மலை
முருகேசனைத் (துதித்துக்)

அநுபல்லவி

வாசக் கடம்பணி தோளனை காண நேசக் குறத்தி
மணவாளனை (துதித்துக்)

சரணம்

வால சண்முக குருநாதனை வெற்றி வேலனை மெஞ்ஞான
போதனை
நிர்க்குதன மயிலேறு வீரனை பணி பத்தருக்கருள் புரி தீரனை
(துதித்துக்)

## 1097. தோத்திரஞ் செய் மனமே

பல்லவி

தோத்திரஞ் செய் மனமே நல்ல
க்ஷேத்திரமான குன்றைச் சேயனை நாயனைத் (தோத்தி)

சரணங்கள்

1 அண்டர் சகாயனைத் தொண்டர்கள் நேயனைத் (தோத்தி)

2 பங்கய பாதனை யிங்கித நாதனைத் (தோத்தி)
3 வளர் தோளனைக் கிளர் குன்றை யாளனைத் (தோத்தி)

## 1098. ஐயனே பன்னிரு கையனே

பல்லவி

ஐயனே பன்னிரு கையனே ஐயனே பன்னிரு கையனே (ஐயனே)

சரணங்கள்

1 ஆரணுசாமி பரி பூரணு காப்பாய் (ஐயனே)
2 நாதனே கமல மலர்ப் பாதனே யாளாய் (ஐயனே)
3 தோத்திரனே குன்றைமலை க்ஷேத்திரனே (ஐயனே)

## 1099. துரைக் குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா குன்றை வரைக் குமரேசா (துரைக்)

சரணங்கள்

1 திருப்பதந் தருவாய் மயின்மேல் விரும்புடன் வருவாய் (துரைக்)
2 கடம்பணி புயனே சூரன் திடங்கொளுஞ் செயனே (துரைக்)
3 துதிபெறு பாதா குன்றைக் கதிபதி நாதா (துரைக்)

## 1100. துதித்தேன் துதித்தேன்

பல்லவி

துதித்தேன் துதித்தேனே - ஐயனை நெஞ்சிற்
பதித்தேன் பதித்தேனே (துதித்தேன்)

அநுபல்லவி

பணிந்தேன் பணிந்தேனே ஐயன் பாதத்தை
யணிந்தேன ணிந்தேனே (துதித்தேன்)

சரணம்

போற்றினேன் போற்றினேனே யென் கலியை
மாற்றினேன் மாற்றினேனே
கண்டேன் கண்டேனே குன்றையிலன்பு
கொண்டேன் கொண்டேனே (துதித்தேன்)

## 1101. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே
சிறப்பாகுங் குன்றைமலைச்சேயனை நாயனை (மறக்காதே)

சரணங்கள்

1 கொங்கலரணி நீபக் கொந்தலர் தோளனை
மங்களகர குறவள்ளி மணாளனை (மறக்காதே)

2 சதுரங்கசேனை சூழுந்தானவர் கோபனை
மதுமலர்த்தருவளர் வானவர் பூபனை (மறக்காதே)

3 அகண்ட பரிபூரண ஆரணப் பொருளை
செகண்டி மலையிலன்பர் தேடிய வருளை (மறக்காதே)

## 1102. எவ்விதங் காண்பேனோ

பல்லவி

எவ்விதங் காண்பேனோ
திவ்வியமான குன்றைச் செகதீசனை நான் (எவ்விதங்)

சரணங்கள்

1 தத்துவப் பொருளாய் நிலைத்திடுஞ் சோதியை
சுத்த பரிசுத்தக் கர்த்தனைக் கண்ணார் (எவ்விதங்)

2 ஆதிபராபர நீதி யனாதியைப் பாதிமதி சூடுஞ்
சோதியருள் வேலனை (எவ்விதங்)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றைமலையோனை
யென்று மெங்கு நிறைவாய் நின்ற சருவேசனை
(எவ்விதங்)

## 1103. கருத்தனே

பல்லவி

கருத்தனே திருத்தமான குன்றைத் தேவ தேவனே
(கருத்தனே)

சரணங்கள்

1 ஞான நீப தோளா
சரண மின் மணவாளா (கருத்தனே)

2 மயிலான குருகா
ஒயிலாக வருவாய் (கருத்தனே)

3 குன்றை மலை நாதா
மன்றன் மலர்ப்பாதா (கருத்தனே)

## 1104. சோதியே சுடரே

பல்லவி

சோதியே சுடரே – ஆதியே
யனாதியே குன்றைச் (சோதி)

அநுபல்லவி

ஆண்டவனே மயிற்
றூண்டவனே செக (சோதி)

சரணங்கள்

1 வஞ்சனை செயுஞ் சூரனை பெல
மிஞ்சசு சேனையின் வீரனை வென்ற
வேலனே வெகு
கோலனே செக (சோதி)

2 தெள்ளுதமிழ் நாதா சிறந்த
வள்ளி மிணைநாதா
மாயன் மருகனே வேலு
முருகனே செக (சோதி)

3 அண்டமு கட்டினிற் றுவுஞ் சோலைத்
தண்டலைகளெங்குமேவும் குன்றை
தன்னில் வருமருளுன்னிதவா செக (சோதி)

## 1105. ஐயா செகதீசா

பல்லவி

ஐயா செகதீசா - பன்னிரு
கையா வடியேனுன் காண்பதெந் நாளோ (ஐயா)

சரணங்கள்

1 தேவர்கள் சேனாதிபதியே யன்பர்
ஆவல் கொள்ளுஞ்சேம நிதியே (ஐயா)

2 தேடக் கிடையாத திரவியமே யன்பர்
நாடக் கிடையா யொளிர் மயமே (ஐயா)

3 குன்றுக்குடி குமரனே யன்பர்
நன்றாய் புகழுமீசுரனே (ஐயா)

## 1106. பாத தெரிசனம் செய்குவாய்

பல்லவி

பாத தெரிசனஞ் செய்குவாய் – மனமே
ஆதரவு அதுதானுய்குவாய் (பாத)

சரணங்கள்

1 தண்டை சிலம்பணி
தொண்டர் பணி செயும் (பாத)

2 வானவர் தானவர்
ஞானவர் பூசித (பாத)

3 குன்றை மலையின் மீது
நின்றிடு கிண்கிணிப் (பாத)

## 1107. மயில் வாகனு

பல்லவி

மயில் வாகனு –
ஒயிலாகக் குன்றைமலைக் குகந்தவனே சாமி (மயில்)

சரணங்கள்

1 ஆனந்த நடராசா
ஞானந்தவருதவா (மயில்)

2 அண்டரண்டங் கடந்
தெண்டிசையும் புகழும் (மயில்)

3 தோகை மலையில் வளர்
ஓகைபுனையுல்லாசா (மயில்)

## 1108. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே – சிகரம்
பூண்டிடுங் குன்றை மலைப் புண்ணியனே குகனே (ஆண்ட)

அநுபல்லவி

பரமசிவ குரு நாதா மகா சரவணபவ தவ வேதா (ஆண்ட)

சரணம்

பங்கய மலர் மனைவேதா பணியு
மிங்கித மிகு நயநீதா
தோகை மலையிலேறு மொயிலா வெகு
ஓகை புனையுல்லாச வயிலா (ஆண்ட)

## 1109. பத்தன் மேற்றயவு

பல்லவி

பத்தன் மேற்றயவு
வைத்திளியாள் வாய் (பத்தன்)

அநுபல்லவி

வித்தகனே பரி
சுத்தனே குன்றை யாள்வாய் (பத்தன்)

சரணங்கள்

1 வானவர் தேடிய ஞான சொரூபா
தானமுகிலினிற் தானவர் கோபா (பத்தன்)
2 சங்கர சண்முகச் சரவணபவனே
கொங்கலரணி சடைக்குரு பரசிவனே (பத்தன்)
3 நின்ருளன்பர்க்கு நிசவருணுதா
குன்ருக்குடி மலைக் குளிர் மலர்ப்பாதா (பத்தன்)

## 1110. வந்து வரந்தருவாய்

பல்லவி

வந்து வரந் தருவாய் மயிற்
தந்து மிசை வருவாய் (வந்து)

அநுபல்லவி

வாச மலர்ப்புயனே குறத்தி
நேசமிகு நயனே (வந்து)

சரணம்

அமரர் பயங்கதனே சூர
சமரமிகும் பரனே
அகண்ட பரிபூரண முடிச்
செகண்டி மலைநாரண (வந்து)

## 1111. தாவிய மயிலா

பல்லவி

தாவிய மயில் வாகா — குன்றையில்
மேவிய வருள் யோகா (தாவிய)

அநுபல்லவி

தண்டை யணியுங் காலா சூரன்மேல்
மண்டிய வடிவேலா (தாவி

சரணம்

குருபரகுரு நாதா
அருமறை புகழ் வேதா
வள்ளிமின் மணவாளா நீபந்
துள்ளு பன்னிரு தோளா
எண்டிசை நிறை சோதியே யுயருஞ்
செகண்டியில் வளர் நீதியே (தாவிய)

## 1112. கண்டானன்னய முண்டாகும்

பல்லவி

கண்டானன்னய முண்டாகும் - குன்றை
வண்டாகு நீபமாலை யணி புயனைக் (கண்டா)

சரணங்கள்

1 செங்கையில் வேலேந்தும் வீரனை ரூப
மங்கையர் மேவிய சீரனைக் (கண்டா)

2 நாடக திவ்விய மயிலனை நாளு
மாடக குன்றை மலை யொயிலனை (கண்டா)

3 ஞான சண்முக விலாசனை தவ
மோன முனிவர் பணி யீசனை (கண்டா)

## 1113. அதுவே உனக்கு நல்லது

பல்லவி

அதுவே யுனக்கு நல்லது (அதுவே)

அநுபல்லவி

மதுவேறும் பொழிற் குன்றை
வரதா வரதா வென்பது (அதுவே)

சரணங்கள்

1 அருளே யருளே யென்று அலறுவாய் மனமே வேதப்
பொருளே பொருளே யென்று போற்றுவாய் மனமே (அதுவே)

2 கந்தா கந்தா வென்று கதறுவாய் நெஞ்சே யீசன்
மைந்தா மைந்தா வென்று வடுத்துவாய் நெஞ்சே (அதுவே)

3 புண்ணியா புண்ணியா வென்று புலம்புவாய் மதியே
சுப்பிரமண்ணியா மண்ணியா வென்று வருந்துவாய் மதியே
(அதுவே)

## 1114. வருந்தாதே மனமே

பல்லவி

வருந்தாதே மனமே
திருந்தார் பணியுங் குன்றைத் தேவனிருக்க (வருந்)

சரணங்கள்

1 பாதாம் புயநாதன் அந்த
நாதாந்தமான போதனிருக்க (வருந்)
2 நயமிகு கந்தன் ஈசன்
சுயமிகு மைந்தனிருக்க (வருந்)
3 வடிவுறுகின்ற வேலன் குன்றுக்
குடிவளர் லோலனிருக்க (வருந்)

## 1115. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே - கடைக் கண்
பார்க்க வேணுமையனே (காக்க)

அநுபல்லவி

வார்க்கமுடிச் செகண்டிமலைக் குருபரனே (காக்க)

சரணங்கள்

1 தன்னை யடுத்தவரைத் தற்காத்து ரெட்சிக்கும்
வன்ன மயிலேறும் வரத சண்முகனே (காக்க)
2 அண்டர் முனிவோர்களனை வோர்க்குங் காரணு
தொண்டரியத் திற்றுலங்கிய நாதா (காக்க)
3 சமர வடிவேற்றரிக்குங் கரதலா
பமரமுலவு நீபா பார்வதி புதல்வா (காக்க)

## 1116. சித்திக்குமென நினை மனமே

பல்லவி

சித்திக்குமென நினை மனமே (சித்தி)

அநுபல்லவி

எத்திக்கும் புகழ் குன்றை யீசனிரு பாதஞ் (சித்தி)

சரணங்கள்

1 நாதாந்த நாதன் போதாந்த நீதன்
வேதாந்த முடிவாக விளங்கிய சோதி பாதம் (சித்தி)

2 சொற் பொருள் கடந்த வற்புதமான
தற்பரமானந்த சாமி யிரு பாதம் (சித்தி)

3 சுகந்த மேவுபுய வகண்ட பரிபூரண
செகண்டி மலையில் வரு தேவ தேவன் பாதஞ் (சித்தி)

## 1117. சகதல ரட்சகா

பல்லவி

சகதல ரட்சகா
மகபதி மகிழ் மருகா முருகா முருகா (செகதல)

அநுபல்லவி

தத்திமி யெனவாடு மயிலா வடியார்
நித்தியம் பரவிய வொயிலா (செகதல)

சரணம்

வாசமலர்ப் புயனே பிர காச மிகுமயிற் கையனே
குன்ருக் குடிச் சரவண பவனே யடியரை
நன்ருய்க் காக்குமருட் சிவனே (செகதல)

## 1118. நாடக பாதா

பல்லவி

நாடக பாதா தேடரு நாதா (நாடக)

சரணங்கள்

1 காரணப் பொருளே ஆரணத் தெருளே (நாடக)

2 மாயவன் மருகா சேய பொன் முருகா (நாடக)

3 ஆகண்ட பூரணனே செகண்டி நாரணனே (நாடக)

## 1119. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும்
பத்தர் பணியுங் குன்றைப் பரனே யரனே (சித்த)

அநுபல்லவி

மதுரிதத் தமிழ் சொல்லும் வாயா
வெழுதாச் சதுர்வித மறைபயில் சேயா (சித்த)

சரணம்

நாடக நடன மயிலா வாடிடை யாட்கிசை யொயிலா
தோகைமலை வருகோவே வெற்றி வாகை புனைபுய நாதா
(சித்த)

## 1120. வால வடிவேலவா

பல்லவி

வால வடிவேலவா
ஞாலம் புகழுங் குன்றை மேலனே (வால)

அநுபல்லவி

வானவர் பணிசரண திவ்வியத்
தேனலர் நீபா பரண (வால)

சரணம்

சரவண குருபரனே பன்னிரு
கரதல வருளரனே
குன்றுக் குடிவாசனே யன்பரை
நன்றுய்க் காக்கு நேசனே (வால)

## 1121. செய்ய வேணும்

பல்லவி

செய்ய வேணும் - கிருபை யுய்ய வேணும் (செய்ய)

சரணங்கள்

1 வாச நீபா குறத்தி நேசரூபா (செய்ய)
2 கந்தனே ஞானசம் பந்தனே (செய்ய)
3 குமரனே சூருடன் சமரனே (செய்ய)

## 1122. ஆனந்த நடன மயிலா

பல்லவி

ஆனந்த நடன மயிலா
தேன் விண்டமலர்ப் பொழிற்
செகண்டி மலையில் வரும் (ஆனந்த)

சரணங்கள்

1 வாச நீப மலர் வேதா வுப தேச குருவான போதா
(ஆனந்த)

2 பங்கய மாமலர்ச் சரணு வாசத் தொங்கல் நீபா பரணு
(ஆனந்த)

3 செகண்டிமலை வரு வாசா நூறு மகஞ் செய்பவன்
பணி வாசா (ஆனந்த)

## 1123. காப்பாத்த வேணுஞ் சாமி

பல்லவி

காப்பாத்த வேணுஞ் சாமி
ஏய்ப்பான குன்றை மலையா (காப்பாத்த)

சரணங்கள்

1 வேலணிகையா நூலணி மெய்யா (காப்பாத்த)
2 மாமலர்த் தாளா பூமலர்த் தோளா (காப்பாத்த)
3 குன்றையின் மலையா நன்றுள கலையா (காப்பாத்த)

## 1124. மயில் வாகனு

பல்லவி

மயில் வாகனு
அயிலேந்துங்கையா (மயில்)

அநுபல்லவி

அடியேனுக்கருள்வா யண்டர் பணியும் பாதா (மயில்)

சரணங்கள்

1 தண்டையணியும் பாதா தொண்டர்க் கிரங்க வேணும்
சண்டப் பிரசண்டவுக்கிர (மயில்

2 காணப் புறத்தியை மானக் குறத்தியை
யேனற் புனத் வாணிற் பறக்குமுக்கரு (மயில்)

3 மண்டலஞ் சூளுந் தண்டலை வாழும்
எண்டிசை புகழுஞ் செகண்டியின் வாகா (மயில்)

## 1125. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் – திருப்பாதந் தரவேணும்
(திருப்பா)

அநுபல்லவி

பொருப்பாருங் குன்றைமலைப்
புண்ணியனே சுப்பிரமண்ணியனே சாமி (திருப்பா)

சரணங்கள்

1 ஆலாலவிட முண்டவரருள் பாலா
கோலாகலா கிருபை கொடுத்தருள் சீலா (திருப்பா)
2 அஞ்ச வேண்டா மென்று அருள் குருபரனே
மிஞ்சிய கூரயில் வேலணி கரனே (திருப்பா)
3 தருவளர் பொழிற்குன்றைச் சண்முக நாதா
திருவளர் மலரயன் தேடிய போதா (திருப்பா)

## 1126. சித்த மிரங்கவில்லையோ

பல்லவி

சித்த மிரங்கவில்லையோ – விரங்குவது
மெத்த வுனக்குத் தொல்லையோ (சித்த)

அநுபல்லவி

அம்புயமலர் போலும் பாதா வதனையே
நம்பின பேர்க்கரு ணுதா (சித்த)

சரணம்

பரிசுத்த வானவர் கோவே யென்றுதான்
தரிசிப்போரைக் காக்குந் தேவே
குன்றுக்குடிப் பரனே யன்பரை
நன்றுய்க் காக்கும் வேல் தரனே (சித்த)

## 1127. கண்டு தரிசித்தேனே

பல்லவி

கண்டு தரிசித்தேனே கண்டு தரிசித்தேனே (கண்டு)

அநுபல்லவி

வண்டினஞ் சூழ்பொழிற் செகண்டி மலையரசைக் (கண்டு)

சரணங்கள்

1 பத்தர்கண் மிடிதீர்க்குங் கர்த்தனை வெகு பரி
சுத்தனை யருளுக்கோர் வித்தனைச் சித்தனைக் (கண்டு)
2 மகபதி முதலினர் பகவனீயென்று பணி
யகமலர் நிகர் பாதச் சுக குருபரனைக் (கண்டு)
3 நின்றுள் துதிசெயச் சென்றுர் மிடிதீர்க்கும்
நின்றுடிய பொழிற் குன்றுக்குடி யோனைக் (கண்டு)

## 1128. வாரா திருப்பதென்ன சொல்லையா

பல்லவி

வாரா திருப்பதென்ன சொல்லையா - வந்த நோயைத்
தீரா திருப்பதென்ன சொல்லையா (வாரா)

சரணங்கள்

1 பூதி யணியுந்திரு மெய்யனே வாசத்
தாதவிழ் நீபமலர்த் துய்யனே நல்ல
தித்திமி திமியென நிர்த்தன மயின்மேல் (வாரா)

2 சகல பல்லுயர்களை விதிக்கும் வான
மகபதி முதலினோர் துதிக்கும் பூந்தா
மரைச்சரணு சிறை நிரைச்சிகி மீது (வாரா)

3 மந்திக னின்று விளையாடும்
விசையிலு திர்ந்து கனிகடேனுரேடும் சோலை
யண்ட முயருஞ் செகண்டி மலையினின்று (வாரா)

## 1129. இன்னநந் தயவு வரவில்லையா

பல்லவி

இன்னந் தயவு வரவில்லையா - வுன்மன
தென்ன வெனக்குத் தரஞ் சொல்லையா (இன்னந்)

சரணங்கள்

1 உன்னைச் சதமே யென்றெண்ணி யதற்குகந்தபடி பூசை
பண்ணி
நன்னய தமிழ்பாடி முன்னந் துதி செய்து
என்று மறவாத வென்னை ரட்சிப்பதற்கு (இன்னந்)

2 எந்தெந்த வேளையுந்தானே யெந்த னிதய
மலரொழுகுந்தேனே
கந்த மலர்நீபா சுந்தரத் தாளா
வந்த வினை தீர்த்து எந்தனை யாள (இன்னந்)

3 தோகைமலைக் கிசைந்த சிவனே யென்று
தோத்திரஞ் செய்பவர்க் கருள்பவனே
வாகை புனையுந்தோளா வோகைபுனை யுல்லாசா
வேகமுட னெனக்காக மயிலில்வர (இன்னந்)

## 1130. அரவர சிவனே

பல்லவி

அரவர சிவனே – திரி
புரகரனருளிய சரவணபவனே (அரவர)

சரணங்கள்

1 பத்தி முத்தி வயிராக்கியா – மகா
சித்தியுற்றிடு சிலாக்கியா பரிசுத்த மலர்கடுவி
நித்தம் பணிபுரியும் (அரவர)

2 கானக மாது புணர்தோளா வந்த
வானக நாதன் றுதிதாளா ரசத்
தேனலரணிபுயா
தூனலமிகு குகா (அரவர)

3 அண்ட மெல்லா நின்று தாவும் அதிற்
கொண்டை மயில்கள் நின்று கூவும் மலர்த்
தண்டலை சூழுஞ் செகண்டி மலைவளர் (அரவர)

## 1131. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி – மயிலேறி
வரவேணுஞ் சாமி (தரவே)

அநுபல்லவி

தண்டை யணியுந்தாளா நடனமிடுங்
கொண்டை மயிலாளா (தரவே)

சரணம்

வேதாந்த முடிவே யிருளவிழ்க்கும்
போதாந்த விடிவே
நின்றுட் கடியேனைக் காக்க வேணும்
குன்றுக் குடியோனே (தரவே)

## 1132. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே
மூவர் பரவு மாறுமுகனே குகனே (தேவ)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனே குன்றை
உன்னிதமான தலனே (தேவ)

2 சரவணபவ குருவே அன்பர்
பரவிய வெழிலுருவே (தேவ)

3 கோகன கானனே குறத்திக்
காகிய சோபனே (தேவ)

## 1133. தீர்க்க வேணுமையனே

பல்லவி

தீர்க்க வேணுமையனே – கடைக்கண்
பார்க்க வேணுமெய்யனே (தீர்க்க)

அநுபல்லவி

வன்ன வடிலோனே கிருபை
பண்ணவேணுஞ் சீலனே (தீர்க்க)

சரணம்

பன்னிரண்டு கையனே எனக்கு
உன்னடியருள் துய்யனே
களையான முருகோனே குன்றைமலை
விளையாடுங் குருகோனே (தீர்க்க)

## 1134. ஆதாரம் செய்ய வேணும்

பல்லவி

ஆதாரம் செய்ய வேணும்
வாதாற் பொழிற் குன்றைமலை முருகேசனே (ஆதா)

சரணங்கள்

1 கந்தமலரை நிகர்க்கு முந்தன் மலர்ப்பதத்தை
வந்தனு தினம்பணி யெந்தனை ரட்சிக்க (ஆதா)

2 முத்தமிழ் பாடிய கர்த்தனே சாமி
வித்தகனே யுந்தன் பத்தனை ரட்சிக்க (ஆதா)

3 வேலை வளைந்திடு சோலை நிறைந்திடு
ஞாலம்புகழ் செகண்டி வேலவனே ரட்சிக்க (ஆதா)

## 1135. செய்ய வேணுமையா

பல்லவி

செய்ய வேணுமையா
மையுலாவுங் கண்ணி வள்ளி மணவாளா (செய்ய)

அநுபல்லவி

அண்டமெங்கும் பறவை கொண்டிடுங் குருகேசா
கொண்டவயிலாயுதத் தண்டமுரு கேசா (செய்ய)

சரணம்

நானமிகு குழலி கானக மாதுபுணர்
வானவர் பணிசரணு தானவர் குலகாலா
தண்டலை யுயர்கின்ற தொண்டர் பணிகின்ற
அண்டமுயருஞ் செகண்டிமலை நாதா (செய்ய)

## 1136. துரைக்குமரேசனே

பல்லவி

துரைக்குமரேசனே - குன்றை
மலைக்குறும் வாசனே (துரைக்)

அநுபல்லவி

அண்ட பகிரண்ட மெங்கும் நிறை
யெண்டிசை யெங்குந் தங்கும் (துரைக்)

சரணம்

வாச மிகுந்த நீபனே குறத்தி
நேச மிகுந்த பூபனே
செகண்டிமலை நாரணு அருளும்
அகண்ட பரிபூரணு (துரைக்)

## 1137. குக குமரேசா

பல்லவி

குக குமரேசா சிகிமலை வாசா (குககும)

சரணங்கள்

1 சரவண பவனே அரகர சிவனே (குககும)
2 காரண முருகா நாரணன் மருகா (குககும)
3 சிகிவரை நாதா சுகமலர்ப் பாதா (குககும)

## 1138. காத்தருள்வாயே

பல்லவி

காத்தருள்வாயே – நோயைத்
தீர்த்தருள்வாயே (காத்தருள்)

சரணங்கள்

1 தோணவே வருவாய் அடியேன்
வேணது தருவாய் (காத்தருள்)
2 அமரர் பணியுங் காலா வெல்லுஞ்
சமர வடிவேலா (காத்தருள்)
3 தோகைமலே ஐயனே வெற்றி
வாகைபுனே புயனே (காத்தருள்)

## 1139. கந்தனே சாமி

பல்லவி

கந்தனே சாமி ஞானசம் பந்தனே சாமி (கந்தனே)

சரணங்கள்

1 சரவண பவனே யருளு
மரகர சிவனே (கந்தனே)
2 வால சண்முகனே தண்டைக்
காலனே குகனே (கத்தனே)
3 குன்றை வாசனே யன்பர்க்
கென்றும் நேசனே (கந்தனே)

## 1140. வாசனே குன்றைமலே ராசனே

பல்லவி

வாசனே குன்றைமலே ராசனே
காரணு நான்கு ஆரணு (வாசனே)

சரணம்

நாதனே தண்டைப் பாதனே
தோகையா வெகு ஓகையா (வாசனே)

## 1141. குகனே குகனே குகனே

பல்லவி

குகனே குகனே குகனே யாறு முகனே முகனே முகனே
(குகனே)

சரணங்கள்

1 முருகா முருகா முருகா மயிற் குருகா குருகா குருகா
(குகனே)
2 குமரா குமரா குமரா வெல்லுஞ் சமரா சமரா சமரா (குகனே)
3 கலேயா கலேயா கலேயா குன்றை மலேயா மலேயா மலேயா
(குகனே)

## 1142. வால வடிவேலவா

பல்லவி

வால வடிவேலவா
ஞாலம் புகழுங் குன்றை நாதனே நீதனே (வால)

அநுபல்லவி

கனக தண்டை யணியுங் காலா வென்று
முன்கிருபை செய்வாய் சீலா (வால)

சரணங்கள்

நேசக் குறத்தி மணவாளா நல்ல
வாசக் கடம்பணியுந் தோளா
குன்றுக்குடி மலைநாதா நாளும்
நின்றுட் கடியேனைக் காநீதா (வால

## 1143. ஐயனே பன்னிரு கையனே

பல்லவி

ஐயனே பன்னிரு கையனே
பூரணா செக காரணா (ஐயனே)

சரணங்கள்

1 புண்ணியனே சுப்பிர மண்ணியனே (ஐயனே)
2 நேசனே குன்றைமலை வாசனே (ஐயனே)

## 1144. சங்கர சண்முகனே

பல்லவி

சங்கர சண்முகனே
மங்கள கரவுமை மைந்தனே கந்தனே (சங்கர)

அநுபல்லவி

நடம்புரி கனகமய மயிலோனே வாசக்
கடம்பணி பன்னிரு தோளொயிலோனே (சங்கர)

சரணம்

பொன்னகர் மன்னனகமகிழ் மருகா வெகு
நன்னயத் தமிழ்புகல் முருகா
குன்றுக்குடி மலையின் வாசா நாளு
நின்றுட் கன்பரைக் காநேசா (சங்கர)

## 1145. கனக மயிலின் வாகா

பல்லவி

கனக மயிலின் வாகா வனு
தினமு மருள்செய் யோகா (கனக)

சரணங்கள்

1 கங்கை தரித்தோன் பாலா புன
மங்கை குறத்தி லோலா (கனக)

2 ஆனந்த நடராசனே நாளு
ஞானந் தவரூர் நேசனே (கனக)

3 தோகை மலையின் வாசா மகா
ஓகை புனையுல் லாசா (கனக)

## 1146. ஆதாரஞ் செய்ய வேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் உந்தன்
பாதாம்புய மலர் பணியு மெந்தனக்காக (ஆதாரஞ்)

சரணங்கள்

1 உந்தன் பதமலரை யுண்மை யென்றெண்ணி
வந்தே னெனக்கு வரமருள் செய்து (ஆதாரஞ்)

2 நித்தமலர்கள் கொண்டு நிர்மல ரூபாவென்று
பத்தியுடன் றுதிக்கும் பத்தன் றனக்கினி (ஆதாரஞ்)

3 மாமலர்ச் சோலைகள் மண்டி வளருகின்ற
சேம மிகுந்த குன்றைத் திருக்குமரேசா (ஆதாரஞ்)

## 1147. நலந்தர வேணும்

பல்லவி

நலந்தரவேணும்
தலம்புகழ் குன்றைமலைச் சண்முக நாதா (நலந்)

அநுபல்லவி

பங்கயமலர் நிகரிங்கித பாதா
மங்களகர வள்ளி பங்கிலுறையு நாதா (நலந்)

சரணம்

உன்னத வடிவேற் பன்னிரு கரனே
சின்ன மயிலேறு நன்னய தரனே
குன்றுக்குடிமலை நின்ருடு மயிலா
நின்ருட் பணிவோர்க்கு நன்ருளு மொயிலா (நலந்)

## 1148. கண் பார்த்தருள் புரிவாய்

பல்லவி

கண்பார்த்தருள் புரிவாய்
விண்பார்க்குங் குன்றைமலை வேந்தனே சேந்தனே
(கண்பார்)

சரணங்கள்

1 எத்திக்கும் பரவு முத்திக்கு முதல்வா
கொத்திக் குலாவியே சத்திக்கு மயிலா (கண்பார்)
2 வாசக் கரிய குழனேசக் குறத்திபங்கா
தேசத் தன்பர்க்கருள் பிரகாசக் குருபரனே (கண்பார்)
3 முந்திய பொழிலேறி மந்திகள் குதிபோடும்
அந்திசு மிகுகுன்றை வந்திடு குகநாதா (கண்பார்)

## 1149. காணுத கண்ணென்ன கண்

பல்லவி

காணுத கண்ணென்ன கண்
சேணுடர் போற்றிய செகண்டிமலை யோனைக் (காணுத)

சரணங்கள்

1 அண்டர் பகிரண்ட நிறைந்தவனைப் பரந்த
வெண்டிசை யெங்கணு முறைந்தவனைக் (காணுத)
2 பரா பரமாகிய வெளியை நாளு
மரா வரா வென்போர்க ளொளியைக் (காணுத)
3 பகரரிதாம் வேத முடிவை யுயர்
சிகிமலை வாழ்வுறு வடிவைக் (காணுத)

## 1150. மறக்கலாமோ

பல்லவி

மறக்கலாமோ - வென்று
நிறக்குங் குன்றை மலை நீதனை நாதனை (மறக்கலாமோ)

அநுபல்லவி

ஆதி பராபரமாய் நின்றோனை நிறை
சோதி மயமாகச் சென்றோனை (மறக்கலாமோ)

சரணம்

சிற்ப ரானந்த ரூபனை வாசப்
பொற்பு நிறைந்திடு நீபனை
குன்றை மலைக்கொரு கருத்தனை பத்தர்க்
கென்றும் வரம்புரி யொருத்தனை (மறக்கலாமோ)

## 1151. துதித்துக் கொள்வாயே

பல்லவி

துதித்துக் கொள்வாயே - நெஞ்சே குகனை
மதித்துக் கொள்வாயே (துதித்துக்)

அநுபல்லவி

ஆரண முடிவை யன்பர்
பூரண விடிவை (துதித்துக்)

சரணம்

காணாத பொருளை நினையார்க்கு
பூணாத வருளை
சிகிமலை ஐயனை யெந்நாளு
மகிமை கொள் மெய்யனைத் (துதித்துக்)

## 1152. கந்தா குமர குருபரனே

பல்லவி

கந்தா குமரகுருபரனே
மயின்மேல் வந்தாதரி யீசுவரனே (கந்தா)

அநுபல்லவி

சங்கர சண்முகனே சடையிற்
கங்கையனருள் குகனே (கந்தா)

சரணம்

வேத னுபதேச குருவே நல்ல
நாத நயகுண வுருவே
தோகை மாமலை வேதா வெற்றி
வாகை தரித்த வாகா (கந்தா)

## 1153. நாடக மயிலா

பல்லவி

நாடக மயிலா ஆடக முடிக்குன்றை மாமலை (நாடக)

அநுபல்லவி

ஐயனே பூதியணி மெய்யனே (நாடக)

சரணங்கள்

1 தேடக் கிடையாத திவ்விய தேனே யன்பர்
நாடக் கிடையாத நம்பெருமானே (நாடக)

2 தித்திக்குஞ் செந்தமிழ் பாடிய வாயா நாளு
முத்திக்கு வினையாய் முளைத்திடு சேயா (நாடக)

3 தோகைக் கிரிக்குத் தோன்றிய நாதா வெற்றி
வாகைப் புயத்து மாமணியே நீதா (நாடக)

## 1154. பயப்படாதே நெஞ்சே

பல்லவி

பயப்படாதே நெஞ்சே நாளும்
பயப்படாதே நெஞ்சே (பயப்)

அநுபல்லவி

நயப்படுங் குன்றை மலை நாத னிருக்கையில் (பயப்)

சரணங்கள்

1 பத்தர்கள் மிடிதீர்க்குங் கர்த்தன் குமரேசன்
சுத்த மயிலேறுஞ் சித்தனிருக்கையில் (பயப்)

2 புள்ளிமயிற் சாயன் வள்ளி மனோகரன்
தெள்ளு தமிழ்க்கருள் வள்ளலிருக்கப் (பயப்)

3 ஈசன் குன்றைமலை வாசனடியவர்
நேசன் குக குமரேசனிருக்கப் (பயப்)

## 1155. உந்தனை யடுத்த பேர்க்கு

பல்லவி

உந்தனை யடுத்தபேர்க் கெல்லாஞ் சாமி
யெந்த வினையும் வாராது (உந்தனை)

அநுபல்லவி

பைந்தளிர்ப் பொழிற் குன்றையா யின்னல்
நொந்த நோய்களுஞ் சேராது (உந்தனை)

சரணங்கள்

1 வாச மிகுந்த நீபமா மலர்
வீசும் பன்னிரு தோளனே
மோச நோய்களைத் தீர்த்தருள் பிர
காசனே மகா தயாளனே (உந்தனை)

2 அரகரவர யீசனே திரி
புர காவர சூதனே
கரதல மணி வேலனே யன்பர்
பரவரு மலர்ப்பாதனே (உந்தனை)

3 மன்றலம் பொழில் சூழும் முடிக்
குன்றை மாமலை ஐயனே
பொன்றயங்கிய மயிலா பூதி
மின்றியங்கிய மெய்யனே (உந்தனை)

## 1156. அருடர வேணுமையனே

பல்லவி

அருடரவேணுமையனே – வேண
பொருடர வேணுமெய்யனே (அருடர)

அநுபல்லவி

வேத வேதாந்த முடிவே நல்ல
போத மெய்ஞ்ஞான வடிவே (அருடர)

சரணம்

சிற்ப ரானந்த வொளியே தியானிப்
போர் மனதின் வெளியே
சோலைச் செகண்டியாளா மண
மாலைக் கடம் பின்ரேளா (அருடர)

## 1157. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே சாமி
அமர பயங்கரனே (குமர)

அநுபல்லவி

சரவணபவ குகனே சாமி
யரனரு டிருமகனே (குமர)

சரணம்

வானவர் பணிபவனே நீபத்
தேனலரணி தவனே
சிகிமலைதனில் வாசனே சாமி மகிழ் குறமகள் நேசனே
(குமர)

## 1158. தஞ்சம் வேறில்லை சாமி

பல்லவி

தஞ்சம் வேறில்லை சாமி
மஞ்சடர் குன்றைமலை வரு குருபரனே (தஞ்சம்)

சரணங்கள்

1 தோகை மயில் வாகா ஓகை புனையுல்லாசா
சுந்தர மிலகிய கந்த சுவாமி (தஞ்சம்)

2 வள்ளி மனோகரனே தெள்ளுதமிழ் வாயனே
வானவர் பணிசெயு ஞான சருவேசா (தஞ்சம்)

3 குன்றுக் குடிவாசா நின்றுட் கன்பர்நேசா
கோலமிகு வுல்லாசா வாலவடி வேலவா (தஞ்சம்)

## 1159. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா படிபுகழ் குன்றைமலைப் பாவலா சேவலா
(வடி)

சரணங்கள்

1 சஞ்சித வினைதீராயோ பாத
கஞ்சமலர் கடாராயோ (வடி)

2 சரவணபவ குகனே திவ்விய
அரனரு ளறுமுகனே (வடி)

3 சிகிமலை வருதேனே மாதர்
சுகமிகு பெருமானே (வடி)

## 1160. மயிலேறும் பெருமானே

பல்லவி

மயிலேறும் பெருமானே யடியேன்முன் வந்தருள் புரிவேளே
(மயிலேறும்)

அநுபல்லவி

ஒயிலான புகழ்க்குன்றைக் குகந்தவனே நாளும் (மயிலேறும்)

சரணங்கள்

1 வாசக் கனமலர் மாமுடி மாது
நேசக் குறமக ணிருபனே குகனே
நிர்த்தனஞ் செய்துவரு சித்திர மாகிய (மயிலேறும்)

2 அடியவர் பணிசெயு மாண்டவனே குன்றுக்
குடிவளருங் குமர குருபரனே வெகு
கோல மிகுந்த வடிவேலனே பச்சை (மயிலேறும்)

3 மதுமல ரணிபுய நயனே திவ்விய
சதுர்மறை துதிசெயு நாதா வெகு
சற்குணனே புகழ் விற்பனனே சாமி (மயிலேறும்)

## 1161. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா விண்முகமுயர் குன்றை வேலனே கோலனே
(சண்முக)

சரணங்கள்

1 தாமரை மலர்ப்பாதா நீபத் தேமலரணி நாதா (சண்முக)
2 மதுரிதத் தமிழ் வாயா திவ்விய
சதுமறைப் பொருள்சேயா (சண்முக)
3 வளமலி குன்றை வாசா கான
விளமுலை வள்ளி நேசா (சண்முக)

## 1162. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே
வேறு துணை யில்லை (ஆறுமுக)

சரணங்கள்

1 தருவனஞ் சூழு மொருவனம் வாழும்
தையலை மேவிய துய்யனே சாமி (ஆறுமுக)

2 பத்தர்க் குதாரா சத்துரு சங்காரா
பன்னிரு கையா யுன்னித மயிலா (ஆறுமுக)

3 சிகிமலை வாசா குக குமரேசா
தித்திக்குந் தமிழா வெத்திக்கும் புகழா (ஆறுமுக)

## 1163. எந்தச் செனன மெடுத்தாலுஞ் சாமி

பல்லவி

எந்தச் செனன மெடுத்தாலுஞ் சாமி
யிந்தச் செனனம் வேண்டாம் (எந்த)

அநுபல்லவி

முந்தப் பழவினை வந்து புகுந்து
நொந்து அடிக்கடி நைந்து விழுகும் (எந்த)

சரணங்கள்

1 ஆசைக் கடலிற் புகுந்து பொல்லா ஐம்புலாதிகள் மிகுந்து நாளு
நாசப் படுத்தியு மோசப்படுத்தியு நலியுமே தினமேயிது (எந்த)

2 பொல்லாத நோவுகள் வந்து உடல்
நில்லா தென்றே மன நொந்து
வல்லாண்மைகள் கெட்டு
யுல்லாசமுங் கெட்டு (எந்த)
மாளுமே உயிர் நீளுமேயிது

3 சோலையின் மந்தி குதிபோடும் அதிற்
கோலச் செகண்டி வரை மீது
வருகுக வெப்போது மிதுவெனக்கு (எந்த)

## 1164. என்றைக்கு மறக்காதே

பல்லவி

என்றைக்கு மறக்காதே
வென்றிக் குமரேசன் மெல்லிய பாதத்தை மனமே (என்றைக்கு)

அநுபல்லவி

காணக் கிடையாத கர்த்தனை முத்தனை
பூணக் கிடையாத பூணனைக் கோணனை (என்றைக்கு)

சரணம்

நாடரி தாகிய நாதனை நீதனை
தேடரி தாகிய சேயனை நாயனை
குன்றுக் குடிவளர் குமரனைச் சமரனை
நன்று யன்பரைக் காக்கு நயத்தனைச் செயத்தனை (என்றைக்கு)

## 1165. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே பணி
பூண்டவ னருளிய புண்ணிய சண்முகனே (ஆண்ட)

சரணங்கள்

1 குறக்கொடி மருவிய தோளா வன்பர்க்குத்
துறக்க மருளிய தொன்மறை யாளா (ஆண்ட)

2 வானவர் பணிதரு பாதா நாளும்
ஞானவர் துதிசெயும் ரஞ்சித நாதா (ஆண்ட)

3 குன்றுக்குடிமலை வாசா வன்பரை
நன்றாய்க் காத்தருள் நயமுரு கேசா (ஆண்ட)

## 1166. வந்திட வேணும்

பல்லவி

வந்திட வேணும் அனுபூதி தந்திட வேணும் (வந்திட)

அநுபல்லவி

கந்த மலர்ப்பொழிற் குன்றைமலை வளர்
கர்த்தனே பரிசுத்தனே மயின்மேல் (வந்திட)

சரணங்கள்

1 வாசக் குழலி மன நேசக் குறமயிலி
ஆசைக் குகந்த குமரேசக் குருபரா
ஆடிய மயிலேறி வேடிக்கை யாகவே (வந்திட)

2 அன்பர்கள் வந்து தென்புடன் பணியும்
பொன்புரி மயிலேறி யென்றுயர் தீர்த்திட
புண்ணியனே சுப்பிர மண்ணியனே மயிலில் (வந்திட)

3 பன்னிரு கரதலா வென்னிதய மலர்
தன்னில் வளருநய வுன்னித முடிசேர்
தலம்புகழ் குன்றைமலை யிலங்கிய குமரா (வந்திட)

## 1167. கண்டுவந்த பேருக்குண்டுண்டு

பல்லவி

கண்டுவந்த பேருக்குண்டுண்டு ஆனந்தம் (கண்டு)

அநுபல்லவி

பண்டுள்ள முனிவரும்
தொண்டுசெய்குன்றையானைக் (கண்டு)

சரணங்கள்

1 துய்யவேற் பன்னிரு கையனை நலமிகு
செய்ய தாமரையான வையனிரு சரணம் (கண்டு)
2 சுற்றிய கருங்குழல் வெற்றியயில் விழி
பற்றிய குறமகளைத் தினஞ்சேர் வோனைக் (கண்டு)
3 தூவிய மலர்ப்பொழில் மேவிய குன்றையானை
கூவிய மயிலோனை பூவிலுயர் நீபனைக் (கண்டு)

## 1168. பரனே பரனே

பல்லவி

பரனே பரனே அரனே யரனே
பஞ்சாட் சரனே சரனே (பரனே)

சரணங்கள்

1 ஐயனே பூதியணி மெய்யனே மெய்யனே
துய்யனே பன்னிரு கையனே (பரனே)
2 வாசனே குறமங்கை நேசனே
யீசனே யன்பர் விசுவாசனே (பரனே)
3 பாதனே குன்றைமலை நாதனே நாதனே
நீதனே மெய்ஞ்ஞான போதனே போதனே (பரனே)

## 1169. அருடர வேணும்

பல்லவி

அருடர வேணும்
பொருடருங் குன்றைமலைப் புண்ணியனே சாமி (அருடர)

சரணங்கள்

1 பாதாம் புயனே வதன
சீதாம் புயனே (அருடர)
2 சமர சண்முகனே யருட்
குமர தென்குகனே (அருடர)
3 அடியவர் நேசா குன்றுக்
குடி முருகேசா (அருடர)

## 1170. கதிர் வேலனே

பல்லவி

கதிர் வேலனே
மதிதாவிய குன்றைமலே வாழும் (கதிர்)

சரணங்கள்

1 வந்துடன் சமரிடும்
முந்துசூர் படவிடும் (கதிர்)
2 சகலநன்னிதியம் பெய்யும்
அகழிமேன் முன்ன மெய்யும் (கதிர்)
3 அகண்ட பொழில்கள் சூழும்
செகண்டி மலேயில் வாழும் (கதிர்)

## 1171. தினந் தினந் தொழுவாய்

பல்லவி

தினந்தினந் தொழுவாய்
கனஞ்செறி குன்றைமலேக் கர்த்தனே முத்தனைத் (தினந்)

அநுபல்லவி

கானகக் குறமங்கை பாகனே யந்த
வானகத் துரைப்பெண் மோகனேத் (தினந்)

சரணம்

வஞ்சகச் சூரை வெல்லும் வேலனே யன்பர்
நெஞ்சகத் துறை மணக்கோலனே
குன்றுக்குடி மலே வாசனே சாமி
நின்றுள் கதியென்போர் நேசனேத் (தினந்)

## 1172. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா அன்பர்
தேடிய ஒயிலா (ஆடிய)

சரணங்கள்

1 அமரர்கள் பணிதாளா குறத்தி
குமரிதன் மணவாளா (ஆடிய)
2 அண்டருக் கரியோனே மெய்ஞ்ஞானத்
தொண்டருக் குரியோனே (ஆடிய)

## 1173. சிகிமலே நாதா

பல்லவி

சிகிமலே நாதா வருண்
மகிமை கொணுதா (சிகிமலே)

அநுபல்லவி

வாச மிகுந்த நீபா குறத்திக்
காசை சிறந்த ரூபா
அண்டர் சகாயா தொண்டர் கணேயா (சிகிமலே)

சரணம்

தானவர் குலகாலா நாளும்
வானவர் பணி சீலா
வாகை புனேயும்புயா ஓகை புனே நயா
குன்ருக்குடி வாசா மயின்மேல் நின்ருடிய யீசா
நிதிக் குருபரனே முதிச்சடையரனே (சிகிமலே)

## 1174. சூர சங்காரா

பல்லவி

சூர சங்காரா
வீர மிகுந்தபடை மிஞ்சிடவே வரு (சூர)

சரணங்கள்

1 கார்முகம் போலக் கரிய தளங்கள் மிகு
போர்முக மதிற்செயம் புரிந்திடுங் கனந்தரு (சூர)
2 அண்டரண்டம் புகழுமாதியே சோதியே
தொண்டர்கள் பணிசெயுந் துலங்கிய நீதியே (சூர)
3 சோலேகள் சூழுந் தோகையின் மேரா
மாலே கொணீப மதுமலர்த் தாரா (சூர)

## 1175. உன்முகம் பாராததேன்

பல்லவி

உன்முகம் பாரததேன் என்முகம் பாராய்
பொன்முக முடிக்குன்றைப் பூரணு ஆரணு (உன்முகம்)

அநுபல்லவி

விண்முக மதிபுனே வேணிய னருள்பாலா
சண்முக நாதா சத்தி வடிவேலா (உன்முகம்)

சரணம்

பாத பங்கயத்தைப் பணிபவர் நேயா
சீதள யிதண நீபா திவ்விய விங்கித சேயா
கதிர்முடிக் குன்றை மலைக் கர்த்தனே முத்தனே
துதிபெறு குருபர சுத்தனே சித்தனே (உன் முகம்)

## 1176. குறத்தி மணாளா

குறத்தி மணாளா - துறக்கத்திலுயர்
குன்றைத் தூயனே நாயனே (குறத்தி)

சரணங்கள்

1 வாதுசெய் சூரனை மாய்த்திடும் வேலா
போதுயரு நீபம் புனைந்திடு கோலா (குறத்தி)
2 குமர குருபரா குக சண்முகேசா
வமரர் பணியும் பாதா அகண்ட பிரகாசா (குறத்தி)
3 பத்தர்கள் மிடி தீர்க்கும் பன்னிருகையா
முத்தமிழ் வாயா முதுசிகி ஐயா (குறத்தி)

## 1177. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ
உத்தமனே குன்றைக் கொருத்தனே கருத்தனே (சித்த)

சரணங்கள்

1 அற்புதனே பன்னிரு பொற்புயனே சிவ
தற்பரானந்த வொரு மெய்ப்பொருளே யுந்தன் (சித்த)
2 அச்சுதன் மருகனே சச்சிதானந்தனே
செச்சை புனையும்புயா பச்சை மயிலோனே (சித்த)
3 அடிய வருடைய மடமன விருள்கள்
விடியுமாக்கனே குன்றுக்குடி வளர் குருபரா (சித்த)

## 1178. சித்தி தரவேணு மையனே

பல்லவி

சித்தி தரவேணு மையனே (சித்தி)

அநுபல்லவி

தத்து மயிலேறிய சத்தியணி கையனே (சித்தி)

சரணங்கள்

1 நானக் கருங்குழலி கானக் குறத்தி பங்கா
வானத்தமரர் பணி ஞானக் குருபரனே (சித்தி)

2 கந்தமலர்ப் பதத்தைச் சிந்தையில் தியானஞ்செய்
நொந்த வடியார்க் கருளுந் தயவாளனே (சித்தி)

3 உன்னதமான குன்றை தன்னில் மகிமைபெறு
பன்னிரு கரதலா நன்னய மாகிய (சித்தி)

## 1179. உன் பாதமே நம்பினேன்

பல்லவி

உன் பாதமே நம்பினேன்
பொன்முடி மேவிய தென்சிகி நாதா (உன்)

சரணங்கள்

1 பத்தர் சகாயா கானக் குறத்திதனேயா (உன்)
2 கடம்பணி யொயிலா தத்தியென நடம்புரி மயிலா (உன்)
3 சிகிமலை நாதா வெகுவாய் மகிமைகொள் பாதா (உன்)

## 1180. முருகையனே

பல்லவி

முருகையனே பன்னிரு கையில்
வேலெடுத் தெந்தனைக் காப்பாய் (முருகை)

சரணங்கள்

1 எள்ளள வேனுந் தொண்டன் மீது
இரக்கமினி யில்லையா
வள்ளலே யிதுவரைக்குந் தேடாத
மார்க்கமென்ன சொல்லையா (முருகை)

2 உள்ளபடியே யெந்தனைப் பார்த்து
லகிலுள்ள பேர் கல்லையா
விள்ளுவது கேட்டுக்கொள்ள
விதிவசமோ சொல்லையா (முருகை)

3 சரவண பவகுக குருபர சண்முக சிவநாதா
வரமுத விசெய் தடியவர் வினைமாற்றிடச் செயுநீதா
(முருகை)

4 அரவணி சடைமுடி யரனரு ளற்புதப் பிரக்கியாதா
விரவினடன மயிலிலேறியிவ் வேளை வந்தருள் போதா
(முருகை)

5 கந்த மலர்ச்சோலை யேறிக் கவிகள் கரணங்கள் போடும்
அந்த அதனில் கனிகளுதிர்ந்து ஆருய்ப் பெருகியோடும்
(முருகை)

6 இந்த வளமைக் குன்றை
மலையிலிருந்து வானவர் தேடும்
தொந்தமென்று மயிலேறித்
துலங்கவே விளையாடும் (முருகை)

## 1181. திருப்பாதந் தரிசிப்பாயே

பல்லவி

திருப்பாதந் தரிசிப்பாயே - நெஞ்சே (திருப்)

அநுபல்லவி

மருப்பொலியுங் குன்றை வாசனை நீயே (திருப்)

சரணங்கள்

1 சங்கரனருள் பாலனை நய
விங்கித மிகுகோலனை யன்ப
ரிச்சைக் கிசைந்ததோர்
பச்சை மயிலோனை (திருப்)

2 அண்டர்கள் பணிபாதன் ஞானத்
தொண்டர்கள் பணிநாதன் குறத்தி
ஆசைக் கிசைந்த முருகேசக் குருபரனைத் (திருப்)

3 பன்னிரண்டு கரதலன் அருள்
மன்னிய சுபகர நலன் நாளு
மன்றன் மலர்ப்பொழிற் குன்றைமலை யோனைத் (திருப்)

## 1182. மதுரித வாயா

பல்லவி

மதுரித வாயா சதுரிதத் தூயா (மது)

அநுபல்லவி

சரவண பவனே யரகர சிவனே (மது

சரணம்

பங்கய வதனு சங்கரி சூதனு
தோகையின் வாசா ஓகைபுனை யுல்லாசா (மது)

## 1183. வள்ளி மணவாளா

பல்லவி

வள்ளி மணவாளா நடனப் புள்ளி மயிலாளா (வள்ளி)

சரணங்கள்

1 கஞ்ச மலரின் மாதா வெந்தன்
நெஞ்சி லுறையு நாதா (வள்ளி)

2 வாச மலரினீபா சூரை நாசஞ் செய்யுங் கோபா (வள்ளி)

3 பஞ்சாட்சர மேலா குன்றைவா ழஞ்சாட்சர பாலா
(வள்ளி)

## 1184. சிந்திக்கத் தித்திக்குமே

பல்லவி

சிந்திக்கத் தித்திக்குமே (சிந்திக்க)

அநுபல்லவி

அந்தி வண்ணன் மகிழ்ந்தருளிய பாலனை
ஆண்டவனை மயில் தாண்டவனை நிதம் (சிந்திக்க)

சரணங்கள்

1 துங்கமிகுஞ் சதுரங்கப் படையுயர் சூரனை
வென்றிடு வீரப் பிரதாபனை
பங்கய வதன விங்கித லோலப்
பன்னிரு கரத்தனைச் சன்னிதியிற் கண்டு (சிந்திக்க)

2 வந்துபணி பத்தர் நொந்திடு தீவினை மடிந்திட
வேலாற்றடிந் திடுவோனை
செந்துவர் வாய் வள்ளியுந் துரைமானுஞ்
சித்த மகிழ்ந்தணை கர்த்தனை யனுதினம் (சிந்திக்க)

3 ஆடு மயிலினங் கூடுங் குயிலினம்
அடர்ந்திடு வானைக் கடந்திடு சோலை
நீடு நவமணிக் கோடு நிறைந்திடு நிதிக்
கனகுன்றைப் பதிக்கரசனைச் (சிந்திக்க)

## 1185. சரவணபவனே

பல்லவி

சரவண பவனே சண்முக சிவனே
பரவிய வன்பரைப் பார்த்தினிக் காத்திடும் (சரவண)

சரணங்கள்

1 தானவர் குலகாலா வந்த வானவர் குலசீலா
ஞானவர் பணிசெயு மோனவனே சாமி (சரவண)

2 அஞ்ச வேண்டா மென்று என்னுட நெஞ்ச மகிழவின்று
தஞ்சமுடனே வந்து அஞ்சலென் றருளுவாய் (சரவண)

3 மந்திகள் குதிபோடும் அதிற்கனி நொந்து
ரசங்களோடும்
முந்திய சோலைக் குன்றை வந்திடு துரைசாமி (சரவண)

## 1186. வடிவேலனே

பல்லவி

வடிவேலனே குன்ருக்குடி மேலனே (வடி)

சரணங்கள்

1 பன்னிரு தோளனே குறக் கன்னி மணாளனே
என்னித யத்தில் வளர் மின்னிய தாளனே (வடி)

2 பங்கய பாதா வருளுறு செங்கை யினுதா
துங்க விலாசா மங்கள போதா (வடி)

3 மன்றல் கொணரும் மென்பொழி னீளும்
பொன்றுகள் சூழும் குன்றையில் வாழும் (வடி)

## 1187. குகநாதா வருள் செகநாதா

பல்லவி

குகநாதா வருள் செகநாதா (குக)

அநுபல்லவி

குருநாதா மயிலில் வருநாதா (குக)

சரணம்

குமரேசா வானத் தமரேசா
முருகேசா மலைச் சிகிமேலா (குக)

## 1188. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா – குன்றை
வரைக்கிசை கிசை வாசா (துரை)

சரணங்கள்

1 இருக்காதி முனிவர்கள் பெருக்காக வந்துபணி
திருக்கா வுலாவிய பெருக்கான சிகிமலை (துரை)

2 உன்பத மலரிணை யன்புட னினைபவர்
தன்குடிதனைக் காக்கும் தென்சிகி மலைவரு (துரை)

3 வண்டின மலர்மது வுண்டிசை பாடிய
மண்டிய பொழில்சூழ் செகண்டியின் மாமலைத் (துரை)

## 1189. பரவாத பேருக்கென்ன முத்தி

பல்லவி

பரவாத பேருக்கென்ன முத்தி நாளும்
அரவா பரண ரருளைய்யனை மெய்யனைப் (பரவாத)

சரணங்கள்

1 கானகத் துறையு மானனையானை
தேனலர் புனைந்து தானனை பவனைப் (பரவாத)

2 மூவர்க்கு முனிவர்க்குந் தேவர்க்கு மடியவர்
யாவர்க்கு மெட்டாத சேவற் கொடியோனைப் (பரவாத)

3 விருப்புயர் சிகியெனும் பருப்பதந்தனிலே
யிருப்பவன் மலரிணைத் திருப்பதந்தனையே (பரவாத)

## 1190. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா அன்பர் தேடிய ஒயிலா (ஆடிய)

அநுபல்லவி

சரவண பவனே விட வரவணி பவனே (ஆடிய)

சரணம்

கான மினுளா அந்த வான மின்னோளா
பொற்சிகி மலையா திவ்விய நற்பொருட் கலையா (ஆடிய)

## 1191. எனைக்காக்க வேணும்

பல்லவி

எனைக்காக்க வேணும் நாளுமுன்
றனைக் காக்குமன் பன்றுனையா வெனையா (எனைக்)

சரணங்கள்

1 ரஞ்சிக்கு மொழியினாற் கொஞ்சிக் குலாவுங் குற
வஞ்சிக் குயிலினாளைக் கெஞ்சித் திரியுநாதா (எனைக்)
2 கூருள வேலினாற் சூருரங் கிழிசெய்யும்
பேரருள செயவீரா சீருயர் முருகேசா (எனைக்)
3 வண்டின மிசைபாடிக் கொண்டிரும் பொழில் சூழு
மெண்டிசை புகழுஞ் செகண்டி மாமலை வாழ்வே (எனைக்)

## 1192. ஐயனே பன்னிரு கையனே

பல்லவி

ஐயனே பன்னிரு கையனே
துய்யனே பூதியணி மெய்யனே (ஐயனே)

சரணங்கள்

1 வாசனே குறத்தி நேசனே
யீசனே பிரகாசனே (ஐயனே)
2 தருத்தனே மிகு விருத்தனே
ஒருத்தனே வெகு திருத்தனே (ஐயனே)
3 வேலனே பெண்கள் லோலனே
சீலனே குன்றை மேலனே (ஐயனே)

## 1193. சின்னச் சிறுமயிலா

பல்லவி

சின்னச் சிறுமயிலா வன்னச் சிறுவயிலா (சின்னச்)

சரணங்கள்

1 தத்தித் தாதியென தித்தித் தோதியென நிர்த்தன
மாடிய (சின்னச்)
2 அண்டர் களெதிரெதிர் கண்டடி பரவிய தண்டை
கலகலெனும் (சின்னச்)
3 மன்றல் மலர்ப் பொழிற்குன்றை மணிமுடியினின்று
நடனமிடு (சின்னச்)

## 1194. வருத்தத்தைத் தீராயோ

பல்லவி

வருத்தத்தை தீராயோ
திருத்தமான குன்றைச் சேயனே நாயனே (வருத்தத்தை)

சரணங்கள்

1 முருகா மாயவன் மருகா மாமயிற்
குருகா வதில் வந்து திருகாதென்மன (வருத்தத்தை)

2 அஞ்சாது சூருட னெஞ்சாரப் பொரு
மிஞ்சார் கதிர்வேலா அஞ்சாதென்மன (வருத்தத்தை)

3 நீடிய பொழிற்குன்றை சூடிய மலர்நீபா
தேடிய வனுதினம் நாடிய வென்மன (வருத்தத்தை)

## 1195. ஆடிக் கொண்டாரே

பல்லவி

ஆடிக் கொண்டாரே
பாடித் தொண்டர்கள் பணிந்து கண்டாரே (ஆடிக்)

சரணங்கள்

1 தித்தித் திமிதியென்ன
சுத்த நவரெத்தினச் சத்திகை மின்ன (ஆடிக்)

2 தங்கச் சிலம்பு சதங்கை முழங்க
மங்கை யரிருவர் பங்கில் விளங்க (ஆடிக்)

3 மன்றன் மாமலர் மணக்கும் பாதன்
குன்றை மாமலையி னின்ற நாதன் (ஆடிக்)

## 1196. ஈராறு கண்ணிணுற் பாராய்

பல்லவி

ஈராறு கண்ணிணுற் பாராய் - பார்த்து
தீராத வினையெல்லாந் தீராய் (ஈராறு)

சரணங்கள்

1 கடம்ப மலரணி தோளா தனங்
கடம்புரை வள்ளி மணாளா (ஈராறு)

2 சூர சங்கார வடிவேலா கொன்றைத்
தார சங்கர ரருள்பாலா (ஈராறு)

3 குன்ருக்குடிக் குமரேசா யென்னை
நன்ருய்க் காப்பாய் பிரகாசா (ஈராறு)

## 1197. ஐயனே முருகையனே

பல்லவி

ஐயனே முருகையனே மெய்யனே பூதி மெய்யனே
(ஐயனே)

சரணங்கள்

1 வாசனே வள்ளி நேசனே யீசனே பிரகாசனே
(ஐயனே)
2 கந்தனே சம்பந்தனே யந்தனே யுமை மைந்தனே
(ஐயனே)

## 1198. தரவேணும் சாமி

பல்லவி

தரவேணும் சாமி - மயின்மேல்
வரவேணும் சாமி (தரவேணும்)

சரணங்கள்

1 ஆண்டருள்வாய் முருகா நீபமலர்
பூண்டருள்வாய் முருகா (தரவேணும்)
2 வரந்தருவாய் குகனே யெங்கு
நிரந்தரமாங் குகனே (தரவேணும்)
3 அகண்ட பூரண நாதா முடிச்
செகண்டிமலை நாதா (தரவேணும்)

## 1199. தருணந் தயவு செய்குவாய்

பல்லவி

தருணந் தயவு செய்குவாய்
திருவுலவிய குன்றைச் சேயனே நாயனே (தருணந்)

சரணங்கள்

1 பச்சை மாமயிலேறு வீரனே செய்
செச்சை யணியும் புயதீரனே (தருணந்)
2 சந்திர சடாதரர் பாலனே யந்த
விந்திரன் முதலோர் பணிசீலனே (தருணந்)

3 குன்றுக்குடி மலை நாதனே யதனி
னின்றுடிய வருட்போதனே (தருணந்)

## 1200. மயிலேறும் பெருமாளே

பல்லவி

மயிலேறும் பெருமாளே
ஒயிலாளா குன்றைக் கொருத்தனே கருத்தனே
(மயிலேறும்)

சரணங்கள்

1 தானவர் குல காலனே – யந்த
வானவர் பணி சீலனே (மயிலேறும்)

2 தண்டை யணியுந் தாளா நீப
வண்டணி மலர்த்தோளா (மயிலேறும்)

3 குன்றையின் மலைநாதா திவ்விய
மன்றல் மலர்ப்பாதா (மயிலேறும்)

## 1201. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா
விண்முகமுயர் குன்றை வேலவனே சாமி (சண்முக)

சரணங்கள்

1 மதுமலர் நீப மலரணி தோளா
பதும மென்மலர் நிகர் பரிபுரதாளா (சண்முக)

2 சூர சங்கார துரை முருகேசா
வாரணி தனத்து வள்ளி நன்னேசா (சண்முக)

3 குன்றை மாமலையா குக குருநாதா
நன்றி யடியார்க்கு நல்கிய பாதா (சண்முக)

## 1202. அருடர வேணும்

பல்லவி

அருடர வேணும்
திருவளர் குன்றைமலைச் சேயனே நாயனே (அருடர)

சரணங்கள்

1 கருக்குழி வீழாமல் மாயப்
பெருக்குழி யாழாமல் (அருடர)

2 காயத்தை நையாமல் அனி
யாயத்தைச் செய்யாமல் (அருடர)

3 நீதிபனே சுகனே குன்றை
யாதிபனே குகனே (அருடர)

## 1203. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும்
கர்த்தனே செகண்டிமலே யுத்தமனே யுந்தன் (சித்த)

சரணங்கள்

1 அரியயன் தேடும் பரிபுர தாளா
விரியுங் கடம்பமலர் புரியுமணித் தோளா (சித்த)

2 தேடிய வன்பர் பணியாடிய மயிலா
சாடிய வுண்டை வள்ளி கூடிய ஒயிலா (சித்த)

3 மன்றன் மலர்ச்சோலைக் குன்றை யினுதா
துன்றிய மாமணி வென்றிகொள் பாதா (சித்த)

## 1204. வடிவேலவா குன்றுக்குடி மேலவா

பல்லவி

வடிவேலவா குன்றுக்குடி மேலவா (வடி)

அநுபல்லவி

மது நீபனே சூரை யெதிர் கோபனே (வடி)

சரணம்

அமரேசனே யருள் குமரேசனே
திருக்காலனே யுமையா ளருட்பாலனே (வடி)

## 1205. குன்றுக்குடியோனே

பல்லவி

குன்றுக்குடியோனே
மன்றுடி யருள்மைந்தனே (குன்றுக்)

சரணங்கள்

1 வால வடிவேலனே யனு
கூல் நய சீலனே (குன்றுக்)

2 சத்துரு சம்மாரனே யாடுஞ்
சித்திரமயில் வீரனே (குன்றுக்)

3 சரவண குருபரனே குன்றையில்
வருகுகனே யரனே (குன்றுக்)

## 1206. கதிர்வேலனே

பல்லவி

கதிர்வேலனே யன்பர் துதிசீலனே (கதிர்)

அநுபல்லவி

குமரேசனே பொல்லாச் சமரேசனே (கதிர்)

சரணம்

குகநாதனே யருள் சண்முக நீதனே
சிகிமேரனே சூரை யிகல் வீரனே (கதிர்)

## 1207. வன்னமயிற் குருகா

பல்லவி

வன்னமயிற் குருகா பத்தர்க்குப் பிரசன்னமாகு முருகா
(வன்ன)

சரணங்கள்

1 வாதுபுரி சூரனே மாய்ந்திடச்
சூது புரியும் வீரனே (வன்ன)
2 வள்ளி மனோகரனே கூரிய
வள்ளிலே வேற்கரனே (வன்ன)

## 1208. வருவாய் வருவாயய்யனே

பல்லவி

வருவாய் வருவாயய்யனே (வருவாய்)

அநுபல்லவி

திருமா மறைபுகழ் கருமா முகில்தவழ்
செகண்டிமலே வளர் அகண்ட பரிபூரணா (வருவாய்)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி தோளா மன
நேசக் குறத்தி மணவாளா
அன்ப ராசைக் கிசைந் தருள் தாளா வென்
னுண்டவனே மயில் தாண்டவனே யினி (வருவாய்)
2 கொஞ்சுகிளி தெய்வானை லோலா சூரை
மிஞ்சிய தண்டையணி காலா நாளும்
வேண்டியதருள் மயிற்றுண்டவனே சாமி (வருவாய்)

3 மந்தி குதித்துக் கரணம் போடும் அதில
திர்ந்து கனிகள் தேனூறூடும் உயர்
கொந்தலர் வனங்கள் சூடும் குன்றைக்
குக நாதனே சண்முக நாதனே சாமி (வருவாய்)

## 1209. இதுவே சமயமையா

பல்லவி

இதுவே சமயமையா
விதுமேவிய குன்றை மேலனே வேலனே (இதுவே)

சரணங்கள்

1 பங்கய மலர்போலும் பாதா வள்ளிக்
கிங்கித மிகுநய நாதா
சங்கையிற் படைப்புழி வேதா பணி
தற்பரனே யருளற் புதனே சாமி (இதுவே)
2 தான வருட குலகாலா நாளும்
வானவர் பணிதண்டைக் காலா
மோன முனிவர்க் கிசைசீலா பொருள்
முத்தமிழ்ப் பாவலா சித்த மிரங்கவே (இதுவே)
3 மன்றல் மலர்ப்பொழில் சூழும் முடிக்
குன்றை மலைக்கிரி வாழும் என்று
மன்பரைக் காத்தாளும் எனக்
கிச்சை யானபடி பட்சம் வைத்தருள (இதுவே)

## 1210. ரட்சிக்க வேணும்

பல்லவி

ரட்சிக்க வேணும்
பட்சம் வைத்தே குன்றைப் பருப்பதத் திருப்பவா (ரட்சி)

சரணங்கள்

1 ஆரணா பூரணா நாரணா காரணா (ரட்சி)
2 ஐயனே மெய்யனே துய்யனே செய்யனே (ரட்சி)
3 அற்புதா விற்பனா பொற்புயர் சற்குணா (ரட்சி)

## 1211. நீபம் பூண்டவனே

பல்லவி

நீபம் பூண்டவனே சுகனே நீபம் பூண்டவனே (நீபம்)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனே குன்றை உன்னிதமிகு தலனே (நீபம்)
2 தேவாதி தேவனே அந்த மூவாதி மூவனே (நீபம்
3 குன்றையம் பதியனே அன்பர் என்றுந் துதியனே (நீபம்)

## 1212. நீயே தயவு செய்வாயே

பல்லவி

நீயே தயவு செய்வாயே
தாயே குன்றைமலைச் சண்முகநாதா (நீயே)

சரணங்கள்

1 கருத்தி னினைத்த படியாக அன்பர்
வருத்த மெல்லாந் தீர்ந்து போக (நீயே)
2 அண்டரண்டம் வந்து போற்றிப் பணிபுரியும்
தொண்டர்க்குத் தீவினையை மாற்றி (நீயே)
3 மன்றன் மலர்ப்பொழில் சூழும் முடிக்
குன்றையின் மலைவாழும் (நீயே)

## 1213. கதி தரவேணும்

பல்லவி

கதி தரவேணும்
மதிசடையாளர் மைந்தனே கந்தனே (கதி)

சரணங்கள்

1 வானவர் பணிகுகனே
ஞானவர் பணிசெகனே (கதி)
2 மயிலேறிய வீரா
வொயிலாகிய தீரா (கதி)
3 குன்றையின் மலைநாதா
மன்றல் மென்மலர்ப்பாதா (கதி)

## 1214. முருகேசனே சரணம்

பல்லவி

முருகேசனே சரணம் மாயன் மருகேசனே சரணம் (முரு)

சரணங்கள்

1 குமரேசனே சரணம் எதிர் சமரேசனே சரணம் (முரு)

2 குகராசனே சரணம் தேவர் மகராசனே சரணம் (முரு)
3 ஈசனே சரணம் குன்றை வாசனே சரணம் (முரு)

## 2215. கருத்தனே யாளாய்

பல்லவி

கருத்தனே யாளாய்
திருத்தமான குன்றைக் கொருத்தனே சாமி (கருத்)

சரணங்கள்

1 இருமாதர் மோகா நடனத்
திருமா மாயில் வாகா (கருத்)
2 தெள்ளுதமிழ் வாயா வீர
அள்ளிலை வேற்சேயா (கருத்)
3 நிலைக்கும் பாஸ்கரனே குன்றை
மலைக் குருபரனே (கருத்)

## 1216. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் வயல்சூழ் குன்றை மலைக்குமரா (தயவு)

சரணங்கள்

1 ஐயனே பன்னிரு கையனே சாமி (தயவு)
2 குமரனே சூர சமரனே சாமி (தயவு)
3 ஈசனே குன்றை வாசனே சாமி (தயவு)

## 1217. தரிசிக்க வேணும்

பல்லவி

தரிசிக்க வேணும்
பரிசுத்தமான குன்றைப் பரனைப் புரனை (தரிசிக்க)

சரணங்கள்

1 வாசனை முருகேசனை வள்ளி
நேசனைப் பிரகாசனைக் கண்டு (தரிசிக்க)
2 ஐயனை வேற்கையனை வெகு
துய்யனைப் பூதி மெய்யனைக் கண்டு (தரிசிக்க)
3 சித்தனைப் பரிசுத்தனை மயில்
நிர்த்தனைக் குன்றைக் கர்த்தனைக் கண்டு (தரிசிக்க)

## 1218. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே கடைக்கண்
பார்க்க வேணுமெய்யனே (காக்க)

சரணங்கள்

1 சமர சத்துரு வேலா வருள்
குமர சற்குரு சீலா (காக்க)

2 வேத வேதாந்த நாதா ஞான
போத போதாந்த நீதா (காக்க)

3 செகண்டிமலைக் காரணா வெங்கும்
அகண்டித பரிபூரணா (காக்க)

## 1219. அருள்தர வேணும்

பல்லவி

அருள்தர வேணும்
பொருள் நிறையுங் குன்றைப் பொருப்பிலுறைபவா (அருள்)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி தோளா நல்ல
நேசக் குறத்தி மணாளா (அருள்)

2 பத்தர் மனதுக் குதாரா முழு
சித்தர் பணியுஞ் சிங்காரா (அருள்)

3 தோகைமலைக் கிசைசீலா வெற்றி
வாகை தரித்திடும்வேலா (அருள்)

## 1220. வருவாய் வருவாய்

பல்லவி

வருவாய் வருவாய் ஐயனே அருள்
தருவாய் தருவாய் மெய்யனே (வரு)

சரணங்கள்

1 பங்கய மலர்ப்பாதா வள்ளிக்
கிங்கித மிகுநாதா (வரு)

2 வானவர் பணிதாளா வெற்றி
தானணி மலர்த்தோளா (வரு)

3 குன்றையின் மலைமீது நாளும்
நன்றருள்வாயிப்போது (வரு)

## 1221. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே
மஞ்சார் பொழிற்குன்றை மன்னனை யின்னமும் (நெஞ்சே)

சரணங்கள்

1 ஆசைக் கடலிலகப்பட்டுக் கொள்ளாது
வாசக் கமல மலர்ப்பாதத்தை (நெஞ்சே)

2 மிஞ்சிய தீவினையில் வீழாமல் செய்யுஞ்
செஞ்சிலம் பார்த்திடுந் திவ்விய பாதத்தை (நெஞ்சே)

3 மன்றல் மலர்ப்பொழில் வாசங் கமழ்ந்திடுந்
குன்றை மலைக்கிசை கொற்றவன் பாதத்தை (நெஞ்சே)

## 1222. கருத்தனே யெந்தனை யாளாய்

பல்லவி

கருத்தனே யெந்தனை யாளாய் குன்றைக்
கொருத்தனே பன்னிரு தோளாய் (கருத்)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி வாகா நல்ல
நேசக் குறத்திதன் பாகா (கருத்)

2 கங்கை யுமாபதி பாலா மலர்
செங்கையி லேந்திய வேலா (கருத்)

3 எங்கு நிறைந்த பிரகாசா அருள்
தங்கிய குககும ரேசா (கருத்)

4 குன்றுக்குடி மலைநாதா என்னை
நன்றுகக் காக்கும் பிரக்கியாதா (கருத்)

## 1223. தேவாதி தேவனே

பல்லவி

தேவாதி தேவனே
காவாருங் குன்றைக் கருத்தனே யொருத்தனே (தேவாதி)

சரணங்கள்

1 வள்ளி மனோகரனே பச்சைப்
புள்ளி மயிலரனே (தேவாதி)

2 கங்கை யுதவும் பாலா வுமை
மங்கை யுதவுஞ் சீலா (தேவாதி)
3 தோகைமலை ஐயனே வெற்றி
வாகை புனை துய்யனே (தேவாதி)

## 1224. பதந்தர வேணும்

பல்லவி

பதந்தர வேணும்
நிதம்பரவுங் குன்றை நீதனே நாதனே (பதந்)

சரணங்கள்

1 பையரவம் புனைவோர் பாலா சூரை
யெய்யுங் கதிர்விடு பொன்வேலா (பதந்)
2 வானவர் பணி செயு மரனே மேலாம்
ஞானவர் பணி குருபரனே (பதந்)
3 மஞ்சாருங் குன்றைமலை நாதா வெந்த
னெஞ்சாரத் தியான நன்னீதா (பதந்)

## 1225. துதிப்பதே பெரிது

பல்லவி

துதிப்பதே பெரிது அதிலு நெஞ்சிற்
பதிப்பதே யரிது (துதிப்பதே)

அநுபல்லவி

மதிக்குயர் குன்றைமலை வாசனை யீசனைத் (துதிப்பதே)

சரணங்கள்

1 மாயவனுர் மருகேசனை நல்ல
தூயனை அன்பர்கள் நேயனைத் (துதிப்பதே)
2 ஈசர ருளிய பாலனை சூரை
நாசஞ் செய்யுங் கதிர்வேலனைத் (துதிப்பதே)
3 குன்றுக்குடி மலைத்தேனை என்னை
நன்றுய்க் காக்கும் பெருமானைத் (துதிப்பதே)

## 1226. வரத சண்முகனே

பல்லவி

வரத சண்முகனே
சுரர்கள் வந்து பணியுந் தோகை மலையில் வாழும் (வந்து)

சரணங்கள்

1 நதிச்சடைட வேணி மைந்தா அருள்
நிதிக்குமரேச கந்தா (வரத)

2 பரமேசுர சுரனே வேலணி
கரனே கங்கா தரனே (வரத)

3 சிகிமாமலைக் குகனே வெகு
சுகனே யறுமுகனே (வரத)

## 1227. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே
சமர வடிவேலவா சண்முக நாதா (குமர)

சரணங்கள்

1 பத்தர்கள் மிடிதீர்க்கும் பதுமமலர்ப் பாதா
சித்தர் தாள் பணிசெய்யுந் திவ்விய போதா (குமர)

2 தினைப்புனங் காக்கும் வள்ளி சேர்ந்திடுந் தோளா
நினைப்பவர் மனதினில் நிலைத்திடுந் தாளா (குமர)

3 தேனுயர் மலர்ப்பொழிற் சிறப்பொடு சூழும்
வானுயர் முடிக்குன்றை மாமலை வாழும் (குமர)

## 1228. எக்காலங் காண்பேனோ

பல்லவி

எக்காலங் காண்பேனோ
முக்காலு மன்பர்பணி முடிக்குன்ருக் குடிக்குகனை (எக்கா)

சரணங்கள்

1 வாசனை கமழ்மலர் வாசனைச் செவியுபதேச
குருபர பிரகாச முருகையனை (எக்கா)

2 நிர்த்தன மிகுசிறைச் சித்திர மயிலேறும்
சுத்தரண விசய சத்தி யணிபவனை (எக்கா)

3 மன்றன் மலர்ப்பொழில்கள் நின்று நிதமுலவு
குன்றைமலைக் குகந்த வென்றி வடிவேலனை (எக்கா)

## 1229. வந்தருள்வாயே

பல்லவி

வந்தருள்வாயே – அனுபூதி
தந்தருள் வாயே (வந்தருள்)

சரணங்கள்

1 திருப்பாதந் தந்தருள்வாயே - மயிலேறி
விருப்புடன் வருவாயே (வந்தருள்)

2 பங்கய பாதா வள்ளிக்
கிங்கித நாதா (வந்தருள்)

3 குன்றையின் வாசா அடியற்கு
நன்றருளீசா (வந்தருள்)

## 1230. வாராய் குருபரனே

பல்லவி

வாராய் குருபரனே - வந்து வரந்
தாராய் குருபரனே (வாராய்)

சரணங்கள்

1 பங்கய மலர்ப்பாதா அன்பர்க்
கிங்கித மிகுநாதா (வாராய்)

2 வானவர்க் கருணிதியே மகா
ஞானவர் நிதந் துதியே (வாராய்)

3 மண்டிய பொழில்சூழும் உயருஞ்செ
கண்டியின் மலைவாழும் (வாராய்)

## 1231. சரவணபவ குகனே

பல்லவி

சரவணபவ குகனே கொன்றை
யரவணிபவன் மகனே (சரவண)

சரணங்கள்

1 தாதவிழ் மலர்நீபா – நாளுஞ்
சோதி செய்யொளிர் தீபா (சரவண)

2 அண்டருக் கரியோனே போற்றுந்
தொண்டருக் குரியோனே (சரவண)

3 வானுயர் சோலை சூழும் குன்றைக்குத்
தானுயர்பவ வாழும் (சரவண)

## 1232. அருடர வேணும்

பல்லவி

அருடர வேணும் – நல்ல
பொருடர வேணும் (அரு)

சரணங்கள்

1 வரந்தர வேணும் நல்ல
தரந்தர வேணும் (அரு)

2 காத்திட வேணும் விழியாற்
பார்த்திட வேணும் (அரு)

3 தந்திட வேணும் மயின்மேல்
வந்திட வேணும் (அரு)

4 குன்றையினுதா அன்பர்க்கு
நன்றரு ணீதா (அரு)

## 1233. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் – கர்த்தனே
குன்றைமலை வித்தகனே சாமி (சித்த)

அநுபல்லவி

புராண புராதன வ்ராவணி சுப்பிரமணியனே சாமி (சித்த)

சரணங்கள்

1 வீரப் பிரதாப செயவேலனே சாமி
கோரவுக் கிரமயில் கோலனே சாமி (சித்த)

2 குன்றுக் குடிமலைக் குமரனே சாமி
தன்றுட் பணியார்க்குச் சமரனே சாமி (சித்த)

## 1234. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் மயின்மேல்
விருப்புடன் வரவேணும் (திருப்)

சரணங்கள்

1 மாதரிருவர் தோளா அன்பர்க்
காதரஞ் செயுந் தாளா (திரு)

2 பத்தர்க் கிரங்கு நாதா மகா
சித்தர்க் கிரங்கு நீதா (திரு)

3 மயில் மலை தன்னில் வாகா வெகு
ஒயிலுள்ள செகதீசா (திரு)

## 1235. ஆதாரம் செய்ய வேணும்

பல்லவி

ஆதாரம் செய்ய வேணும்
பூதலம் புகழ்குன்றைப் புண்ணியனே சாமி (ஆதாரம்)

சரணங்கள்

1 வேத வேதாந்தப் பொருளே நல்ல
நாத நாதாந்த வருளே (ஆதாரம்)

2 எங்குநிறைந்த பரனே யெங்கும்
தங்கு நிறைந்த வரனே (ஆதாரம்)

3 மயின்மாமலைக் கந்தனே நடன
வயிலேந்திய மைந்தனே (ஆதாரம்)

## 1236. என்னிரு கண்காண வருவாய்

பல்லவி

என்னிரு கண்காண வருவாய் (என்னிரு)

அநுபல்லவி

பன்னிரண்டு தோளு முன்னிரண்டு தாளும் (என்னிரு)

சரணங்கள்

1 கையிலணி வேலு
மெய்யிலணி நூலும் (என்னிரு)

2 கடம்பணி பயிலு
நடம்புரி மயிலும் (என்னிரு)
குன்றையிலிருக்கும்
நன்றுள செருக்கும் (என்னிரு)

## 1237. பச்சைமயில் வாகனு

பல்லவி

பச்சைமயில் வாகனு - வெந்த
னிச்சைக் கிசைந்தபடி பட்சம் வைத்தருள்வாய் (பச்சை)

சரணங்கள்

1 கனக தண்டையணி காலா வெந்தன்
மனதின் படியருள் சீலா (பச்சை)

2 வேத வேதாந்தப் பொருளே சோதி
நாத நாதாந்த வருளே (பச்சை)

3 குன்ருக்குடி மலைவாசா வன்பரை
நன்ருய்க் காத்திடும் பிரகாசா (பச்சை)

## 1238. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய்
நயமிகுந்த குன்றை நாயகனே சாமி (தயவு)

சரணங்கள்

1 வாசனைமிகு கமலாசனன் குருநாதா (தயவு)
2 எங்கணு நிறைந்தே யிலங்கிய பகவானே (தயவு)
3 அண்ட நிறைந்த செகண்டி மலைக்குகா (தயவு)

## 1239. எள்ளளவேனுந் தயவில்லையா

பல்லவி

எள்ளளவேனுந் தயவில்லையா
வள்ளலே குன்றைமலை வாசனே நேசனே (எள்ளள)

சரணங்கள்

1 பத்ம மலரைப் போலும் பொற்பத சரணு
அற்புதனே யெந்தன் சொற்ப வினையைத் தீர்க்க (எள்ளள)

2 கந்தனே ஞானசம்பந்தனே யரனருள்
மைந்தனே வருந்திய வெந்தன் வினையைத் தீர்க்க
(எள்ளள)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றை மலையில் வரு
நன்றருளைச் செய்து இன்றெனைக் காக்க (எளள்ள)

## 1240. கருமத்தைத் தீராயோ

பல்லவி

கருமத்தைத் தீராயோ
வருமத்தைச் செய்யாமல் மனதிரங்கி நீ (கருமத்தை)

சரணங்கள்

1 தேனார் பொழிற்குற மானுள் குறத்தி
தேவியை மருவிய கூவிய மயிலா (கருமத்தை)

2 அண்டர்கள் முனிவர்கள்
தொண்டர்கள் பணிகுகா
ஐயனே பன்னிரு கையனே சாமி (கருமத்தை)

3 மண்டிய பொழில்சேர்
செகண்டி மலையில் வருவாசனே குககுமரேசனே யெனது
(கருமத்தை)

## 1241. வந்தருள்வாயே

பல்லவி

வந்தருள்வாயே - வரந்
தந்தருள்வாயே (வந்தருள்)

சரணங்கள்

1 அரவணி சிவனே யருள்
சரவண பவனே (வந்தருள்)

2 அற்புத பாதா நல்ல
பொற்புயர் நாதா (வந்தருள்)

3 தேவர்கள் தேவா வந்த
மூவர்கள் மூவா (வந்தருள்)

## 1242. வருத்தத்தைத் தீராயோ

பல்லவி

வருத்தத்தைத் தீராயோ
திருத்தமான குன்றைத் தேவனே தேவனே (வருத்தத்தை)

சரணங்கள்

1 பதுமமென் மலர்ப்பாதா
விதுதவழ் சிகிநாதா (வருத்தத்தை)

2 நிருத்தஞ் செயு மயிலா குறத்தி
யொருத்திக் கிசையு மொயிலா (வருத்தத்தை)

3 தொண்டர்கள் பணிதேவே யந்த
அண்டர்கள் பணிகோவே (வருத்தத்தை)

## 1243. நெஞ்சமே யலையாதே

பல்லவி

நெஞ்சமே யலையாதே
மஞ்சார் பொழிற் குன்றைமலைக் குகனிருக்க (நெஞ்சமே)

சரணங்கள்

1 வானவர் பணிபாதன் ஞானவர் துதிநாதன்
மோனவ னிருக்க (நெஞ்சமே

2 அன்பர்கள் பணியும் வம்பல ரணியும்
தென்புய னிருக்க (நெஞ்சமே)

3 மன்றலர் சூழுங் குன்றையில் வாழும்
வென்றி வேலனிருக்க (நெஞ்சமே)

## 1244. மயிலேறும் பெருமானே

பல்லவி

மயிலேறும் பெருமானே
யொயிலான குன்றைமலைக் கொருத்தனே கருத்தனே
(மயிலேறும்)

சரணங்கள்

1 வஞ்சக னாகிய சூர சங்காரா
நெஞ்சில் நினைப்பவர்க்கு நிதியுதவுபகாரா (மயிலேறும்)

2 வானவர் பணிபுரி மலர்நிகர் பாதா
தானவர் குலகாலா சண்முக நாதா (மயிலேறும்)

3 மஞ்சடர் பொழிற்குன்றைமலைக் குருபரனே
செஞ்சிலம் பணிபாத திவ்விய வரனே (மயிலேறும்)

## 1245. காக்க வேணும்

பல்லவி

காக்க வேணும் கடைக்கண் பார்க்க வேணும் (காக்க)

சரணங்கள்

1 கந்தனே குகனே ஞானசம் பந்தனே செகனே (காக்க)

2 குமரனே யரனே சூர சமரனே தானே (காக்க)

3 குன்றையில் வாசனே யினி நன்றரு ணேசனே (காக்க)

## 1246. குன்றைக் குருபரனே

பல்லவி

குன்றைக் குருபரனே யென்னை
யென்றைக்குக் காப்பாயோ (குன்றை)

சரணங்கள்

1 மாயவனூர் மருகா குக நாயனே மயிற்குருகா (குன்றை)

2 கந்தனே யறுமுகனே
ஞானசம்பந்தனே யருள் குகனே (குன்றை)

3 தானவர் குலகாலா அந்த வானவர் பணிசீலா (குன்றை)

## 1247. நடக்கும் சிறைமயிலா

பல்லவி

நடக்கும் சிறைமயிலா – விந்தப்
படிக்குளுயருங் குன்றைப் பரனே யரனே (நடக்கும்)

சரணங்கள்

1 பாத பங்கயந் தன்னைக் கண்டு
சீத மலரினு லருச்சனை கொண்டு
சித்திக்கு மன்பரை முத்திக்கு ளேற்றும் (நடக்கும்)

2 இலங்கும் வடிவே லிருக்குங் கையா
துலங்கும் வெண்ணீறு சோதிக்கு மெய்யா
தூய சரவண சேய குருபரா (நடக்கும்)

3 இருக்காதி முனிவர்க ளேத்திய பாதா
பொருப்பான குன்றைமலைப் புண்ணிய நாதா
பூரணனே நிறை காரணனே சாமி (நடக்கும்)

## 1248. வேலு மயிலுந் துணையே

பல்லவி

வேலு மயிலுந் துணையே
மேலு மன்பர்கள் பணிகாலுந் துணையே (வேலு)

சரணங்கள்

1 வேதாந்தப் பொருளும் - நல்ல
நாதாந்தப் பொருளும் நாதனு நீதனும் (வேலு)

2 அண்டர்கள் பெருமானும்
தொண்டர்கள் பெருமானும் அய்யனு மெய்யனும் (வேலு)

3 குன்றையில் வருவோனும்
நன்றருள் தருவோனும் நாயனுந் தூயனும் (வேலு)

## 1249. கண்டேன் கண்டேனே

பல்லவி

கண்டேன் கண்டேனே தண்டார் பொழிற்குன்றைச்
சண்முக நாதனைக் (கண்டன்)

சரணங்கள்

1 வாசங் கமழுங் கமலாசன செவியுபதேசஞ் செய்யுங்
குமரேச னிருபதத்தைக் (கண்டேன்)

2 அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் பணிசெயும்
தண்டமிழும் புகழும் வண்டலர் மலர்ப்பதங் (கண்டேன்)

3 சொன்ன முடியிலகு வண்ண மயின்மலைவாழ்
நன்னய வன்பர்முன் பிரசன்ன வடிவேலனைக்
(கண்டேன்)

## 1250. ஐயனே போற்றி

பல்லவி

ஐயனே போற்றி பூதி - மெய்யனே போற்றி (ஐயனே)

அநுபல்லவி

வேலனே போற்றி மயிற் - கோலனே போற்றி (ஐயனே)

சரணம்

நாதனே போற்றி தண்டைப் - பாதனே போற்றி
தோகையா போற்றி வெற்றி - வாகையா போற்றி (ஐயனே)

## 1251. எப்பவும் மறவாதே

பல்லவி

எப்பவும் மறவாதே மனமே
செப்பமான குன்றைச் சேயனை நாயனை (எப்பவு)

சரணங்கள்

1 தேவர் கடேவனை மூவர்கள் மூவனை (எப்பவு)

2 வள்ளியுல் லாசனை யள்ளிலைவேல் வாசனை (எப்பவு)

3 குன்றை யினுதனை நன்றருள் பாதனை (எப்பவு)

## 1252. முருகையனே

பல்லவி

முருகையனே மாயன் மருகையனே (முரு)

அநுபல்லவி

குமரேசனே சூர சமரேசனே (முரு)

சரணம்

குகநாதனே யாறு முகநாதனே
கலையாளனே குன்றை மலையாளனே (முரு)

## 1253. அடியேனைக் காத்தருள்வாய்

பல்லவி

அடியேனைக் காத்தருள்வாய் குன்றுக்
குடிவளரு மெங்கள் குமர குருபரா (அடியேனை)

சரணம்

1 எங்கும் நிறைந்த பராபரனே
யெங்கும் தங்கும் பாணி யரனே (அடியேனை)

2 வாசக் கமலாசனன் குருவே குறத்திக்
காசைக் கிசைந்த நல்ல வுருவே (அடியேனை)

3 குன்றைக்கு வாய்த்த முருகேசா வினி
யென்றைக்குங் காக்கும் பிரகாசா (அடியேனை)

## 1254. வரந்தருவாயே

பல்லவி

வரந்தருவாயே கந்தனே நீயே வரந்தருவாயே (வரந்)

சரணங்கள்

1 அன்பர் சகாயா குறத்திக் கின்புறு நேயா (வரந்)

2 அண்டர்கள் நாதா பரவுந் தொண்டர்கள் கியாதா (வரந்)

3 தோகையின் மேரா வெற்றி வாகையின் மாரா (வரந்)

## 1255. கருத்தி னினைத்தபடி தருவாய்

பல்லவி

கருத்தி னினைத்தபடி தருவாய் குன்றைக்
கொருத்தனே மயின்மீது வருவாய் (கருத்)

சரணங்கள்

1 பங்கய மாமலர்ப் பாதா வள்ளிக்
கிங்கித மிகுந்திடு வாதா (கருத்)

2 பத்தரைக் காத்திடு சீலா சூரை
வெற்றி கொளும் வடிவேலா (கருத்)

3 குன்ருக்குடி மலையாளா வென்னை
நன்ருய்க் காத்திடு மலர்த்தாளா (கருத்)

## 1256 ஐயனே பூதியணி

பல்லவி

ஐயனே பூதியணி மெய்யனே (ஐயனே)

அநுபல்லவி

குமரனே சூர சமரனே (ஐயனே)

சரணம்

கோலனே வடி வேலனே
ஈசனே குன்றை வாசனே (ஐயனே)

## 1257. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே கடைக்கண்
பாக்க வேணுமையனே (காக்க)

சரணங்கள்

1 குமர சண்முக நாதா சூரசமர சண்முக நாதா (காக்க)

2 அண்டர் பணிதேவே நல்ல தொண்டர் பணிதேவே (காக்க)

3 குன்றை மலைக்குகனே நீப மன்றலணி குகனே (காக்க)

## 1258. குகனே யரனருள் மகனே

பல்லவி

குகனே யரனருள் மகனே சுக சரவண பவனே
தூயனே கார்த்திகேயனே (குகனே)

சரணங்கள்

1 வஞ்சக மிடியைத் தீர்ப்பாயே யுந்தன்
கஞ்சமலர்க் கண்பார்ப்பாயே (குகனே)

2 எந்தன் துயரைத் துலைப்பாயே எனக்கு
வந்த பிணியை யுலைப்பாயே (குகனே)

3 நன்றருடனைத் தருவாயே முடிக்
குன்றை மலையில் வருவாயே (குகனே)

## 1259. என்னை யாளுவாய்

பல்லவி

என்னை யாளுவாய்
பொன்னைநிகர் குன்றைப் பொருப்பில் வருபவா (என்னை)

சரணங்கள்

1 வாது புரிசூரை மாய்த்தவனே கான
மாது குறத்திக்கு வாய்த்தவனே (என்னே)

2 மங்கை யுமாபதி பாலனே மலர்ச்
செங்கை தனிலணி வேலனே (என்னே)

3 ஐயனே யகண்ட பூரணா தூய
மெய்யனே குன்றை நாரணா (என்னே)

## 1260. ஐயனே மெய்யனே

பல்லவி

ஐயனே மெய்யனே தூயனே நாயனே (ஐயனே)

சரணம்

ஈசனே வாசனே குமரனே சமரனே
தோகையா ஓகையா (ஐயனே)

## 1261. முருகையா

பல்லவி

முருகையா திருவளர் குன்றைமலைத் தேவா (முருகையா)

சரணங்கள்

1 கங்கை யணிவோர் பாலா செங்கைய யணியும் வேலா
(முருகையா)

2 கடம்பணி தோளா மடந்தையர் மணாளா (முருகையா)

3 நன்றருள் தேவே குன்றையின் கோவே (முருகையா)

## 1262. நினைப்பது பெரிது

பல்லவி

நினைப்பது பெரிது
சினைப்படு முகில்தாவு செகண்டி மலையோனை (நினைப்)

சரணங்கள்

1 வாலவடிவான வேலணிகரனை
மேலர்பணி தண்டைக் காலனை யரனை (நினைப்)

2 ஞானவரன்பர்கள் வானவர் தோழனே
தேனலர் நீபனைத் தீன தயாளனே (நினைப்)

3 எண்டிசை தாவுசிறை கொண்டிடு பரியோனே
மண்டிய பொழில்சேர் செகண்டியின் கிரியோனே (நினைப்)

## 1263. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே - வேண்டிய
வன்பர்பணி பூண்டவனே செகனே (ஆண்ட)

சரணங்கள்

1 கந்தனே ஞானசம்பந்தனே சாமி (ஆண்ட)

2 வடிவேலனே குன்றுக்குடி மேலனே (ஆண்ட)

3 அமரேசனே சூர சமரேசனே (ஆண்ட)

## 1264. அடியவர்க்கருள் புரிவனே

பல்லவி

அடியவர்க்கருள் புரிபவனே குன்றுக்குடி மலைதனில்
வருசிவனே (அடி)

சரணங்கள்

1 வானவர் பணிசெயுஞ் சரணு நீப மாநல மலையாபரணு
(அடி)

2 அஞ்சலென்றெனை யாளவருவாய் எனக்குத் தஞ்சமிலை
யருளைத் தருவாய் (அடி)

## 1265. என்னை யாளுவாய்

பல்லவி

என்னை யாளுவாய் - குன்றை தன்னி லாளுவாய் (என்னை)

சரணங்கள்

1 சமர வேலனே குக குமர சீலனே (என்னை)

2 கந்தனே குகனே யீசர் மைந்தனே செகனே (என்னை)

3 மின்னிய கரனே காக்கும் பன்னிரு கரனே (என்னை)

## 1266. ஆடிக் கொண்டு

பல்லவி

ஆடிக் கொண்டு மயின்மே லடியேன்முன்
வேடிக்கையாய் வருவாய் (ஆடிக்)

சரணங்கள்

1 பன்னிரு கரதல வெண்ணிரு வினைதீர
கன்னியருடன் கூடி மின்னிய வேலேந்தி (ஆடிக்)

2 தாதவிழுயர் நீபப் போதணி புயனே
வாதடர் சூருடன் மீதடரயிலா (ஆடிக்)

3 அடியவர் பணிபுரி முடியுயர் குன்ருக்
குடிவளர் குமரா வடிவுள குகனே (ஆடிக்)

## 1267. ஆராதர வையனே

பல்லவி

ஆராதர வையனே
சீராருங் குன்றைத் தேவா வடியேனுக்கு (ஆராதர)

சரணங்கள்

1 உந்தனை நெடுநாளாய்ச் சிந்தனையே செய்து
வந்தனை புரிகின்ற வெந்தனை யாண்டிட (ஆராதர)

2 அரவணிபவரருள் சரவணபவகுக
பரவரிய பன்னிரு கரதலனே யெனக்கு (ஆராதர)

3 மின்ருவியமுடிக் குன்ருக்குடிமலை
யின்ருயெனவரு முன்ருள் பணிவேற்கு (ஆராதர)

## 1268. குருபர நாதா

பல்லவி

குருபர நாதா
அருமறை தேடுங் குன்றை ஐயனே துய்யனே (குருபர)

சரணங்கள்

1 தொண்டர்கள் பணிபுரி பாதா வாச
முண்டக மலருறை வேதா (குருபர)

2 வாடிடை வள்ளி புணரொயிலா நடன
மாடிடு கொண்டையின் மயிலா (குருபர)

3 குன்றுக்குடி மலைவாசா வன்பரை
நன்றாய்க் காக்கும் பிரகாசா (குருபர)

## 1269. வருவாய் வருவாயய்யனே

பல்லவி

வருவாய் வருவாயய்யனே வரந்
தருவாய் தருவாய் துய்யனே (வருவாய்)

சரணங்கள்

1 கோலகல குமரா கரத்தின்
வேலாயுதச் சமரா (வருவாய்)

2 வள்ளி மனோகரனே சிறைப்
புள்ளி மயில் வீரனே (வருவாய்)

3 அடியவர் பணியரனே குன்றுக்
குடிவளர் குருபரனே (வருவாய்)

## 1270. சித்த மிரங்கவில்லையா

பல்லவி

சித்த மிரங்கவில்லையா பரி
சுத்தனே குன்றைமலைத் தூயனே நாயனே (சித்த)

சரணங்கள்

1 காய்கனி கிழங்குகள் புசித்து தவங்கண்டு
மெய்ஞ்ஞானத்தி லருச்சித்து
பாய் சயனங்களை வெறுத்து அந்தப்படி செய்ய வழி
செய்ய வறியாத வடியேனிடத்திற் (சித்த)

2 உந்தனடி வணங்க வறியேன் சாமி உன் பெருந்தகையுங்
குறியேன்
சிந்தையிலொரு நாளு நினையேன் எந்தன் தீவினை
தனைத் தீர்த்துப் பாவியேனிடத்தில் (சித்த)

3 பொன்னங் கொடுமுடி துலங்கும் வாச மின்னும் பொழில் களிலிலங்கும்
வன்ன மிருந்து குன்றை மலையில் நாளும் வாசனே முருகேசனே (சித்த)

## 1271. எந்தனைக் காப்பாயே

பல்லவி

எந்தனைக் காப்பாயே
சிந்தனை செயுமன்பர் தேவ தேவனே (எந்தனை)

சரணங்கள்

1 வாச மிகுந்த மலர் நீபனே பிர
காச மிகுந்ததோர் தீபனே (எந்தனை)

2 வள்ளி மடந்தை மனோகரா நல்ல
புள்ளி மயிலேறும் வசீகரா (எந்தனை)

3 குன்றுக்குடி மலைநாதா வடியரை
நன்றாய்க் காக்கும் பிரக்யாதா (எந்தனை)

## 1272. வர வேணுமையனே

பல்லவி

வர வேணுமையனே வரந்
தர வேணுமையனே (வர)

சரணங்கள்

1 வள்ளி மாது தோளனே யாடும்
முள்ளி மயிலாளனே (வர)

2 வானரைக் காப்பவனே நீபத்
தேனலரணி பவனே (வர)

3 குன்றைக்கு வாய்த்தவனே சூரனை
வென்றிக்கு மாய்த்தவனே (வர)

## 1273. காத்தருள்வாயே

பல்லவி

காத்தருள் வாயே கண்ணாலே
பார்த்தருள் வாயே (காத்தருள்)

சரணங்கள்

1 வஞ்சனை புரி சூரனை படையொடு
நஞ்சிட வருவீரனே (காத்தருள்)

2 பங்கச மலர்ப் பாதனே குறத்திக்
கிங்கித மிகுநாதனே (காத்தருள்)

3 குன்றை மலையின் வாசனே யெனக்கு
நன்றருள் முருகேசனே (காத்தருள்)

## 1274. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய்
நயமிகுந்த குன்றை நாதனே நீதனே (தயவு)

சரணங்கள்

1 நங்கையான குறமங்கை மருவிய
துங்கமிகுபுய தங்க மயிலா (தயவு)

2 வீரனாக வரு சூரனாவி விழ
தீரவேலைவிடு கோர சூரசெய (தயவு)

3 வாச மீறுபொழில் வீசு தோகை மலை
வாசனே குகப் பிரகாசனே யருளி (தயவு)

## 1275. சத்துரு சம்மார வேலா

பல்லவி

சத்துரு சம்மார வேலா நல்ல
மித்துருபரி பாலசீலா (சத்துரு)

அநுபல்லவி

1 வள்ளி மருவிய புயா ஆடும்
புள்ளி மயிலேறு செயா (சத்துரு)

2 பங்கய மலர்ப்பாதா அன்பர்க்
கிங்கிதஞ் செய்யும் நாதா (சத்துரு)

3 குன்றுக்குடிக் குமரேசா சொர்ன
மன்றுடியருள் பிரகாசா (சத்துரு)

## 1276. வந்த வினையைத் தீராய்

பல்லவி

வந்த வினையைத் தீராய் யென்னை
யெந்தநேரமுங் காவாய் (வந்த)

அநுபல்லவி

சரவணபவ குமரா சூரவ
சுரனுட னெதிர் சமரா (வந்த)

சரணம்

வெற்றிவேற் கரதலனே யருள்
முற்றிய ரசபலனே
கானக் குறத்தி பாகா குன்றை
யான மெய்க்கிரி யோகா (வந்த)

## 1277. வருவாய் வருவாயய்யனே

பல்லவி

வருவாய் வருவாயய்யனே வரந்
தருவாய் தருவாய் மெய்யனே (வருவாய்)

அநுபல்லவி

மங்கை குறத்தி மாலா பன்னிரு
செங்கை தரித்த வேலா (வருவாய்)

சரணம்

வானவர் பணிகோவே நீபத்
தானலரணி தேவே
அருமறை துதிநீதா குன்றை
யொருமலை வருநீதா (வருவாய்)

## 1278. என்றைக்கு மனம்வருமோ

பல்லவி

என்றைக்கு மனம் வருமோ வெந்தனைக் காக்க
என்றைக்கு மனம் வருமோ (என்றைக்கு)

அநுபல்லவி

குன்றைக்கு வாய்த்த குருபர சாமிக்கு (என்றைக்கு)

சரணங்கள்

1 சதுரங்க சேனையுடன் வந்து சவுரியமுடனே சமர்தந்து
மதுதங்குவிட்சி புனைந்து யெதிர் மாவுல் கீறிய சேவல
வீரற்கு (என்றைக்கு)

2 பங்கய விழியினுற் பார்த்து தனது பத்தர்கள் வினைகளைத்
தீர்த்து
அங்கவர்களை முத்தி சேர்த்து காக்கும் ஐயன் வடிவேலணி
கையன் குகேசனுக்கு (என்றைக்கு)

3 மன்றன் மலர்ப்பொழில் கடாவும் அதில்
மயில்குயில்கள் நின்று கூவும்
குன்றை மலையினுளுமேவும் நல்ல
கோல மயிலேறும் வால சண்முகனுக்கு (என்றைக்கு)

## 1279. அஞ்ச வேண்டாம்

பல்லவி

அஞ்ச வேண்டாம் மனதே அஞ்ச வேண்டாம் (அஞ்ச)

அநுபல்லவி

மஞ்சடர் பூம்பொழிற் குன்றைமலை வரு
வாசன் குருபர குகேசனிருக்கையில் (அஞ்ச)

சரணங்கள்

1 சமரிடு சூரசங்காரன் நல்ல
குமர சரவண வொய்யாரன்
கமழ்குழற் குறப்பெண் சிங்காரன்-னுளுங்
கர்த்தன் குருபர சித்தனிருக்க (அஞ்ச)

2 வேலைத் தரித்திடு கையன் பூதி
மாலைக் கிசைந்திடு மெய்யன்
காலைத் தொழுவோர்க்குத் துய்யன் அன்பர்
காவலன், கூவிய சேவலனிருக்க (அஞ்ச)

3 பங்கய வாவிகள் சூழும் இடம்
எங்கணும் மலர்ப்பொழில் நீளும்
தங்க மயின்மலே வாழும் பச்சைத் தோகையன்
செய வெற்றி வாகையா னிருக்க (அஞ்ச)

## 1280. முருகையா

பல்லவி

முருகையா வருடருவாய் பன்
னிருகையா வருடருவாய் (முருகையா)

அநுபல்லவி

வாசக் கமல மலர்வேதா தாதி
னேசத்திலருள் புரிநீதா (முருகையா)

சரணம்

வேத்மு மறியாதவனே ஞான
போத சரவண பவனே
ஓங்கிய பொழிற்குன்றை வாசா வன்பர்
பாங்கு வந்தருள் பிரகாசா (முருகையா)

## 1281. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே
வண்டார் மதுப்பொழி லுண்டாகிய குன்றை
வாசனே குமரேசனே சாமி (தண்டா)

சரணங்கள்

1 கன்னியர் தருமயல் தன்னிலுழலுகிற
வென்னிரு வினைதீர்ப்பாய் பன்னிரு கரதலா (தண்டா)

2 பொல்லா வினையில் வரு நில்லாத வாழ்வினிற்
செல்லாத மனவலு வல்லாளர் பணிபாதா (தண்டா)

3 வருந்து மன்பர்கள் அன்னமருந்தும் படிக்கருள்
திருந்துமுடிக் குன்றை யிருந்து வரசாளும் (தண்டா)

## 1282. மருந்து கண்டேன்

பல்லவி

மருந்து கண்டேன்
திருந்து முடிக்குன்றைச் செய்ய மலையின்மீது (மருந்து)

சரணங்கள்

1 பொல்லா வுடம்பினில் வல்லாண் மையால் வரும்
எல்லா வியாதியும் நில்லாது செய்விக்கும் (மருந்து)

2 பொன்னகரங்களிலும் எந்நகரங்களிலும்
தன்னடியரைச் சென்மமின்ன மெடாமற் செய்யும்
(மருந்து)

3 அண்டின பேர்களை யண்டின வினைதீரக்
கண்டிதஞ் செய்யுஞ் செகண்டி மலையின்மீது (மருந்து)

## 1283. சங்கரனருள் பாலா

பல்லவி

சங்கரனருள் பாலா - குறத்திக்
கிங்கிதமிகு லோலா (சங்கர)

அநுபல்லவி

வாசனை மிகுநீபா - சூரை
மோசஞ் செயுங்கோபா (சங்கர)

சரணம்

தஞ்சம் வேறில்லை யய்யா வருளுஞ் சண்முகா துய்யா
குன்றைமலை நாதா வருள்
மன்றன் மலர்ப்பாதா (சங்கர)

## 1284. எடுத்த சென்மத்துக்கு

பல்லவி

எடுத்த சென்மத்துக்கு இனியருள் புரிவாய்
முடிச்செகண்டிமலை மூர்த்திகரா வரா (எடுத்த)

சரணங்கள்

1 கந்தனே கந்தக் கடம்பணி மார்பா
செந்தமிழ்ப் பாடல் திருந்திய வாயா
நந்த திருக்கர நாதன் மருகா
முந்தச் செனன முயன்றிடும் வினையால் (எடுத்த)

2 நல்லா ரிமையவர் நாள்தோறும் பரவும்
வில்லார் நுதல்வள்ளி மேவிய புயனே
பொல்லா ரவுணரைப் பிளந்திடும் வேலா
வில்லாத பாவங் களியற்றிய தாலே (எடுத்த)

3 மன்றன் மலர்ப்பொழில் வாவிகள் சூழும்
குன்றை மலைக்குக் கொழுந்தென வாழும்
நின்று நடித்திடு நீள்சிறை மயிலா
அன்றுசெய் தீவினையாலேயிப் போது (எடுத்த)

## 1285. ஆபத்தைத் தீராயோ

பல்லவி

ஆபத்தைத் தீராயோ - பாவத்தை
மிகுந்த பாதகனானாலும் (ஆபத்தை)

அநுபல்லவி

கோபத்தைச் செய்யாமல் ரூபத்தைக் காண்பித்து (ஆபத்தை)

சரணங்கள்

1 சரவணபவகுக சண்முக நாதா
பரவு மன்பரைக் காக்கும் பங்கச பாதா
பட்சம் வைத்தென்னிடம் இக்ஷணம் வந்து (ஆபத்தை)

2 இபமுதற் படைகொடு மிகல்புரி வீரா
திபரொடும் வருசூரைச் செயித்திடு தீவரா
தென்புடன் பணிசெயு மன்பன்முன் வந்து (ஆபத்தை)

3 நின்ருடிய கனநீள் பொழில் சூழும்
குன்ருக்குடியெனும் குளிர்மலை வாழும்
கோலத்தனே வடிவேலத்தனே வந்து (ஆபத்தை)

## 1286. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே-கண்
பார்க்க வேணுமெய்யனே (காக்க)

சரணங்கள்

1 தூய்ய சரவணபவனே யன்பர்
உய்யவருள் குக சிவனே
தையல் குறவள்ளி மையல் கொள்பவனே (காக்க)

2 தேனலர் நீப மென்றோளா வுயர்
வானவர் பணியுந் தாளா
யானை மகள் மணவாளா தவ
மோன முனிவர் கடானவர் பணிதேவே (காக்க)

3 துங்க மலர்ப்பொழில் நீடும் நல்ல
தங்க முடிநிரை சூடும்
எங்கும் பிரகளை யாடும்
அங்கமிகு குன்றையங் கிரிவாசா (காக்க)

## 1287. சோதி சொரூபனே

பல்லவி

சோதி சொரூபனே
பாதிப் பிறையணி நாதர்க்கிசை பாலா (சோதி)

சரணங்கள்

1 கடிமலர் கொடு படிமிசைபணி
யடியவர் தங்கண்மிடிதனைத் தவிர்த்
தாண்டருளுமொளி தூண்டாத கன (சோதி)

2 வனசமலரிணையென வருசரணத்தை
யனவரதமும் வந்து மனதொடு பணிபவ
ரஞ்ஞானந் தீர்க்கு மெய்ஞ்ஞானமான (சோதி)

3 எண்டிசையும் புகழ் கொண்டிடு மாமுடி
மண்டியுயருஞ் செகண்டியின்மாமலை
வாசனே பிரகாசமாகிய (சோதி)

## 1288. உருக்கா வுன்மனது

பல்லவி

உருக்கா வுன்மனது
இருக்காதி முனிவர்கள் அருக்காக நிதம்பணி (உருக்கா)

அநுபல்லவி

யென்றைக்கு நலமிகு குன்றைக் குருபரா (உருக்கா)

சரணங்கள்

1 முப்பது வருடமாக யெப்பவு மறவாதேனை
யிப்பவாகிலுங் காவா திருப்பதினாலே
யென்சாமி (உருக்கா)

2 அரக்கர்குலம் வேரறுத்த சரக்கரிய மான்மருகா
புரக்க வடியவன்மீது இரக்கமில்லாதென் சாமி (உருக்கா)

3 வாசனை மிகுபொழில் வீசிய சிகிமலை வாழ்
ராசனே குருப ரகுகேச என்னைக் காவாதென்ன
(உருக்கா)

## 1289. தருணந் தயவு செய்குவாய்

பல்லவி

தருணந் தயவு செய்குவாய்
வருணமிகு செகண்டி மலைக் குமரேசா (தருணந்)

அநுபல்லவி

வாசக் கடம்பணி தோளா வெந்த
னாசைக் கிசைந்தருள் தாளா (தருணந்)

சரணம்

அண்டர் பணிதரு கோவே ஞான
வண்டர் பணிதரு தேவே
வருசிகி மலையின் மேலா போரிற்
பொருகனல் மீறிய வேலா (தருணந்)

## 1290. சித்தி தரவேணுஞ் சாமி

பல்லவி

சித்தி தரவேணுஞ் சாமி
பத்தியுடன் பணியும் பத்தர்கட்கு நித்தமுமே (சித்தி)

சரணங்கள்

1 மங்கள குறமயிற் கிங்கிதம் புரியும்
துங்க வடிவேலவா செங்கமல சரண (சித்தி)

2 நடம்புரி மயிலா கடம்பணி மார்பா
திடம்புரி சூரை யடர்ந்திடு கோபா (சித்தி)

3 நின்ருடிய பொழிற் குன்ருக்குடியா
வுன்ருள் பணிவோர்க்கு இன்ருதர வுடன் (சித்தி)

## 1291. அடியேனைக் காப்பாயே

பல்லவி

அடியேனைக் காப்பாயே
முடிபுனை குன்றைமலை மூர்த்திகரா நீயே (அடியேனை)

சரணங்கள்

1 எந்த வேளையுந் துயர் வந்த வேளையு
நானுந்தனை யல்லாது வேறு சிந்தனையுண்டோ
வென்சாமி (அடியேனை)

2 பங்கய சரணத்தைத் துங்க மலர்கள் தூவி
செங்கரங் குவித்துமுனங் கருத்தொடு பணி (அடியேனை)

3 உன்னித மிகுகுன்றை தன்னில் வளர வரு
பன்னிரு கரதலா சன்னிதி தனைப்பணி (அடியேனை)

## 1292. மனதுக்கொரு திடஞ்சொல்வாயே

பல்லவி

மனதுக்கொரு திடஞ்சொல்வாயே
கனமுற்ற குன்றைமலைக் கர்த்தனே நீயே (மனதுக்)

சரணங்கள்

1 ஆசா பாசத்தினுலே வெகு
காசார் முலேயார் மேலே மாயக்
கருத்துவைத்து இருக்குமெந்தன் (மனதுக்)

2 தீய வினேவந்து நலிந்து அதி
னேயது கொண்டுடன் மெலிந்து மிக
நொந்த வடியன்முன் வந்தருள் செய்தெந்தன்
(மனதுக்)

3 வாச மலர்ப்பொழில் சூழும் பிர
காசமிகு குன்றை வாழும் அருள்
கந்தனே யுனேப்பணி யெந்தனே ரட்சிக்க (மனதுக்)

## 1293. தேடா திருக்கலாமோ

பல்லவி

தேடா திருக்கலாமோ
வாடாத பொழிற்குன்றை வடிவேலா வடியேனேத்
(தேடா)

சரணங்கள்

1 உந்தன் முன்வந்து சிந்தனே யுடனே
வந்தனே புரியு மெந்தனே நாளுமே (தேடா)

2 எதிரிடு சூருடல் பிதிர்பட வயில்விடு
கதிமயின் மிசைவரு துதிபெறு சரணு (தேடா)

3 வடிவுறு மாமணி முடிபுனே யுயர்குன்ருக்
குடிவளர் குருபரா வடியனே யனுதினம் (தேடா)

## 1294. சித்தந் திரும்பாயோ

பல்லவி

சித்தந் திரும்பாயோ – வடியனே
மெத்த விரும் பாயோ (சித்தந்)

அநுபல்லவி

சுத்த மிகுந்த குன்றைத் துரைக்குமரேசா (சித்தந்)

சரணங்கள்

1 வாசக் களபமுலை மலைக்குற மானே
நேசத்துடனே நாளும் நினைக்குமெங் கோமானே (சித்தந்)

2 பங்கய மலர்க்கிணை பன்னிரு கையா
துங்க விபூதியணி சுந்தர மெய்யா (சித்தந்)

3 தோகைமலைக் கிசைந்து துலங்குங் குகேசா
ஓகை புனைந்திடு முயர்ந்த வுல்லாசா (சித்தந்)

## 1295. எப்படியோ அறியேன்

பல்லவி

எப்படியோ அறியேன்
அற்புதமான குன்றைக் கதிபனனுக்கிரகம் (எப்படி)

சரணங்கள்

1 சேவற் கொடியணி கையன் எந்த
ஞவற் கிசைந்திடு மெய்யன் அந்த
மூவர்க்கு மேலான துய்யன் அருள்
முருகேசன் மாயவன் மருகேச னனுபூதி (எப்படி)

2 மன்னுயிர்களைக் காக்கு நாதன் தண்டை
மின்னு மலர்க்கிணை பாதன் எங்கும்
துன்னும் பிரகாசஞ் செய்போதன் நல்ல
சுந்தர னிலகிய கந்தனனுக்கிரகம் (எப்படி)

3 நீடிய மலர்ப்பொழில் சூழும் முடி
கூடிய குன்றையில் வாழும் தமிழ்
பாடிய வன்பரை யாளும் எங்கள்
பரமனயன்பணி குரவனனுக்கிரகம் (எப்படி)

## 1296. திருப்பத தரிசனந் தருவாயே

பல்லவி

திருப்பத தரிசனந் தருவாயே – குன்றைப்
பொருப்ப தென்மயின்மிசை வருவாயே (திருப்பத)

அநுபல்லவி

வாசக் களபமுலை லீலா விதஞ்சேர்
நேசக் குறத்தி மணமாலா (திருப்பத)

சரணம்

பன்னிரு கரதல வேலா வடியேன்
றன்னிரு வினைதீர்ப்பாய் சீலா
குன்ருக்குடி மலைவாசா வெனை
நன்ருக வாட்கொள்வாய் பிரகாசா (திருப்பத)

## 1297. சூர சங்காரனே

பல்லவி

சூர சங்காரனே தாரணி மாரனே (சூரசங்)

சரணங்கள்

1 தானவர் படையாலன்று
வானவர் படையைவென்று
சயத்தினையும் பெற்றிடு
நயத்தினையு முற்றிடு (சூரசங்)

2 சதுரங்க தளத்தாலெதிர் கொண்டு சலத்தால்
இட்டப்படிக்கு வெல்லுங் கெட்டியிவனென்று (சூரசங்)

3 பூவிரி சோலை நாளும் மேவிய குன்றை வாழும்
புண்ணியனே சுப்பிரமண்ணியனே யெதிர் (சூரசங்)

## 1298. நீயே தயவு செய்குவாயே

பல்லவி

நீயே தயவு செய்குவாயே - குன்றைச்
சேயே யெனக்கருடாயே யென்சாமி (நீயே)

அநுபல்லவி

அண்டர் பரவிய பாதா நல்ல தொண்டர் துதிசெயு நீதா
(நீயே)

சரணம்

வாசக் கடம்பணி மாரா கான நேசக் குறத்திவசீரா
அகண்ட பரிபூரண தேவே முடிச் செகண்டிமா மலைக் கோவே
(நீயே)

## 1299. முருகேசனே

பல்லவி

முருகேசனே திருமால் முருகேசனே (முருகே)

சரணங்கள்

1 வதிநாதனே யன்பர் துதிபாதனே (முருகே)

2 வளளியொயிலா ஆடும் புள்ளிமயிலா (முருகே)

3 வடிவேலனே குன்றுக் குடிமேலனே (முருகே)

## 1300. சரவணபவனே

பல்லவி

சரவணபவனே யரவணிபவனே

சரணங்கள்

1 கீதசங் கீதனே யிருவர் காதலிங் கிதனே (சரவண)

2 மதுரித வாயா மணச் சதுர்வித தூயா (சரவண)

3 வானவர் கோவே யெதிரிடு தானவர் தேவே (சரவண)

4 குன்றையின் வாரையா சங்கத்தன்று சொல்லுரையா (சரவண)

## 1301. திருவருடர வேணும்

பல்லவி

திருவருடர வேணும்
தருவனஞ் சூழுங்குன்றை தன்னில்வளர் குருபரனே (திருவரு)

சரணங்கள்

1 வஞ்சனைபுரி சூரனெஞ்சிரு கூறுசெயுஞ்
சமரிடு வேலா தஞ்சம் வேறில்லை சாமி (திருவரு)

2 மதிபுனை சடையார் துதிபெறு புதல்வா
விதி யுபதேசா கதிதனை யருளத் (திருவரு)

3 மன்றலம் பொழில்சேர் குன்றையன் மலைமேல்
நின்று குலாவிய நன்றுறு மயிலா (திருவரு)

## 1302. சாமியைத் துதிமனமே

பல்லவி

சாமியைத் துதிமனமே - சமர
வடியயிற் குமர குருபரவென் (சாமியைத்)

அநுபல்லவி

பூமி புகழுங் குன்றைப் பொருப்பிலுயர்ந்து வளர்
புரவலனருள்புரி சரவண பவகுக (சாமியைத்)

சரணங்கள்

1 வானுடிலகு தேவ சேனுபதி சிறை
மயிலிலேறி வெகு வொயில தாகவரு
கானுர் குறமங்கை மானுள் மருவிய
கருணையாளனுயர் திருவிலாசனருள் (சாமியைத்)

2 சதுரங்க சேனையுடன் எதிர்வந்த சூரனைத்
தங்கவயில் கொடுடல் பங்குபட வமர் செய்
விதிகொண்டு வறிகோனும் மதிகொண்ட சடைமுடி
விமலனருள் புதல்வ கமல விருசரண (சாமியைத்)

3 எங்கும் மலர்ப்பொழில் கடங்குஞ் செகண்டிமலை
யினிலிலகிய குக பனிமல ரணிபுய
பொங்குங் கருணை துலங்கு திருவருள்
புரிந்து பத்தரைப் பரிந்து ரட்சிக்கும் (சாமியைத்)

## 1303. தரிசிக்க வேணுமே

பல்லவி

தரிசிக்க வேணுமே
பரிசுத்தமான குன்றைப் பரனை யரிரனைக் கண்டு (தரிசிக்க)

சரணங்கள்

1 கந்தனை ஞான சம்பந்தனை யரணருள்
மைந்தனைச் சகல பந்தனைக் கண்டு (தரிசிக்க)

2 வேலனை வள்ளிதன் மாலனை மயிலேறு
லோலனை மெய்ஞ்ஞான சீலனைக் கண்டு (தரிசிக்க)

3 நாயனைக் குன்றையின்
தூயனை யன்பர்
சகாயனை யருள்புரி சேயனைக் கண்டு (தரிசிக்க)

## 1304. இந்த வேளை வந்து

பல்லவி

இந்த வேளை வரது மயிலி லெந்தனை யாளாய் (இந்த)

அநுபல்லவி

கந்தமா மலர்ப்பொழில் சிகரமலைக்
கர்த்தனே பரி சுத்தனே சாமி (இந்த)

சரணங்கள்

1 எந்த வேளையு முந்தன் பதத்தை
வந்தனை செயுமெந்த னிடத்தில் (இந்த)

2 துன்னிய மாமலர்ப் பன்னிருகையினில்
மின்னிய வேல்கொண்டு என்னிடத்தி லன்பாய் (இந்த)

3 வடிவிலங்கிய சொர்ன்னமுடி துலங்கிய குன்றுக்
குடியிலிருந்துன தடியனிடத்தில் (இந்த)

## 1305. தயவு வர வேணும்

பல்லவி

தயவுவரவேணும் எந்தன் மீது தயவு வரவேணும் (தயவு)

அநுபல்லவி

நயமிகுந்த குன்றை நாதனே நீதனே (தயவு)

சரணங்கள்

1 கங்கை தரித்த வரன் மைந்தா மலர்ச்
செங்கை தரித்த வயிற்கந்தா (தயவு)

2 வாசக் கடம்பணி வாகா நல்ல
நேசக் குறத்திதன் பாகா (தயவு)

3 எங்கும் புகழ் குன்றை நாதா மது
பொங்கு மலரிணைப் பாதா (தயவு)

## 1306. அடியேனைக் காக்க வேணும்

பல்லவி

அடியேனைக் காக்கவேணும் - குன்றுக்
குடிவளரு மெங்கள் குககுருபரனே (அடியேனைக்)

சரணங்கள்

1 மதுரிதத் தமிழ்வாயா வுயர் சதுர் விதச் சுருதித் தூயா (அடியேனைக்)

2 மாயவன் மருகேசா வருள் சேயநன் முருகேசா (அடியேனைக்)

3 சங்கரரருள் பாலா குன்றைத் துங்கமின் மலைவேலா (அடியேனைக்)

## 1307. தரிசித்தேனருள் செய்குவாய்

பல்லவி

தரிசித்தேனருள் செய்குவாய்
பரிசுத்தமிகுங்குன்றைப் பதிக்குரு பரனே (தரிசித்

அநுபல்லவி

காலாயுதக் கொடியா நல்ல
வேலாயுதத் துடியா (தரிசித்)

சரணம்

கார்த்திகைத் திருநாளா தேவர்கள்
பார்த்திடு மலர்த்தாளா
சிகிமலை வருநாதா நீபச்
சுகமிகு மிதழ்ப்போதா (தரிசித்)

## 1308. அருடர வேணுமையனே

பல்லவி

அருடர வேணுமையனே
திருவளர் குன்றைமலைச் சிவனே சிவனே (அருடர)

அநுபல்லவி

கந்த மிகுந்த நீபனே யெதிர்வந்த
அவுணர் கோபனே (அருடர)

சரணம்

தஞ்சம் வேறில்லை நாதனே மலர்க் கஞ்ச மலரின் பாதனே
சிகிமலை தனில் வாசனே குறத்தி முகிழ்முலைக் கிசை
நேசனே (அருடர)

## 1309. கண்டு கண்டு

பல்லவி

கண்டு கண்டு போற்றினுலுண்டு வுண்டு அனுபூதி (கண்டு)

அநுபல்லவி

தொண்டர்கள் வந்தேபணி செகண்டிமலை வாழ்பதியைக்
(கண்டு)

சரணங்கள்

1 வானவர் மிடியைத் தீர்க்கு
மாமணி சிகாமணியைக் (கண்டு)

2 ஞானவர் தமக்குமெட்டா
நாதன் நீப போதணியைக் (கண்டு)

3 மாது குறவள்ளிதன் மனோகர வுல்லாசனை
தேவி யுமையவளருள் செய்யவனை மெய்ப்போதனைக்
(கண்டு)

## 1310. பாத தரிசனந் தருவாய்

பல்லவி

பாத தரிசனந் தருவாய்
நிதமன்பர் பணிகுன்றை நிதிபனே யுன்றன் (பாத)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனே தெய்வ கன்னியர்க் கினிய நலனே
(பாத)

2 அற்புத சரவணனே வெகு பற்பல சிவகணனே (பாத)

3 சிகிமலைதனில் வாசனே யெந்தனகமகிழ்ந் தருளீசனே
(பாத)

## 1311. சித்த மிரங்கவில்லையா

பல்லவி

சித்த மிரங்கவில்லையா - நல்ல
வுத்தம குன்றைக் கொருத்தனே கருத்தனே (சித்த)

சரணங்கள்

1 சங்கர சண்முக சிவனே குறத்திக் கிங்கிதம்
விளைத்திடுபவனே
பங்கய மலரிணைத் துங்க சரணனே (சித்த)

2 சதுமறை புகழ் குருநாதா திவ்விய விதுமுக
வானை சமேதா
புதுமலர் நீபமெனு மலரணிபுயா (சித்த)

3 குன்றுக்குடி மலைவாசா சாமி நின்றுட் கன்பர்விஸ்வாசா
வின்றுதர வுடனே பொன்றுத வருள்செயச் (சித்த)

## 1312. வேலாயுதக் கடவுளே

பல்லவி

வேலாயுதக் கடவுளே
நாலான மறைபுகழ் மேலான கடவுளே (வேலா)

சரணங்கள்

1 பத்தர்கள் மிடிதீர்த்து வைத்தருள் கடவுளே
நித்தருளும் பரிசுத்த மெய்க்கடவுளே (வேலா)

2 கானந்தனின் மயிற்குத் தானந்தக் கடவுளே
ஞானத்தவருத வானந்தக் கடவுளே (வேலா)

3 தன்றனி யன்பர்க்கு நன்றருள் கடவுளே
மின்றயங்கும் முடிக்குன்றையங் கடவுளே (வேலா)

## 1313. தயவிருக்குதோ வில்லையோ

பல்லவி

தயவிருக்குதோ வில்லையோ
வுயல்வினை குன்றைமலை வாசனே யீசனே (தய)

சரணங்கள்

1 தோகைப் பரிநடத்தும் வீரா வெற்றி வாகை தரித்த
புயசூரா
ஓகைபுனே யுல்லாசா வீகை மிகு விஸ்வாசா (தய)

2 கருணாகர வாகா அன்பர்க்கு குருவாகிய பராபரா
மருமலரணி தோளா வருள்புரி யிருதாளா (தய)

3 மருமலர்ப் பொழில் நிதநீடு மதிற் கதுமென மாமயிலாடும்
விதுதவழ் குன்றை நாதா பதும மலரின் வேதா (தய)

## 1314. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்தமெப்படியோ சரவண பவகுக (சாமி)

அநுபல்லவி

பூமி புகழுங் குன்றை புனிதமிகு குமர (சாமி)

சரணங்கள்

1 வானவர் நிரை நிரையே மலர்கொடு பணிசெயுந்
தானவர் குலகலக சண்முக குருபர (சாமி)

2 சங்கர ரருள்பால சமரமுக வயில்கொள்
செங்கைய செயவீர திருமறையவர் துதி (சாமி)

3 அகண்ட பரிபூரண அடியவர் பணிபுரி
செகண்டி மலையின் வாச திருவரி மருகைய (சாமி)

## 1315. இவ்வேளை வந்தருள் செய்வாய்

பல்லவி

இவ்வேளை வந்தருள் செய்வாய் – யுன்னை
யெவ்வேளையு நினைக்கு மெந்தனை யாண்டிட (இவ்)

சரணங்கள்

1 நான்மறை தேடிய பாதா - நல்ல
பான்மதி சூடிய நாதர் தந்தருள்
பாலனே வடிவேலனே சாமி (இவ்)

2 அசுரர்கள் குலகாலனே யாடும்
பசிய மயிலின் லோலனே யண்டர்
பார்த்திபனே வெகு கீர்த்திபனே சாமி (இவ்)

3 மதுமலர்ச் சோலை கணிறும் குன்றைப்
பதியி லனுதினம் வாழும் மலர்ப்
பாதனே கன நீதனே சாமி (இவ்)

## 1316. எந்தனிடத்தில் வருவாய்

பல்லவி

எந்தனிடத்தில் வருவாய் – வந்து
சந்தமிகு தமிழைத் தருவாய் (எந்த)

அநுபல்லவி

வாசக் கடம்பணிவாசா – திவ்விய
நேசக் குறத்திதன்பாகா (எந்த)

சரணம்

பரமரருளிய பாலா – வெந்தன்
சிரமந்தனைத் தவிர் சீலா
தோகைவரைக் கிசைந்த நாதா – வெற்றி
வாகை தரித்திடுபோதா (எந்த)

## 1317. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி மயிலேறி வரவேணுஞ் சாமி (தர)

சரணங்கள்

1 கந்தமலர்ப் புயனே யெனக்கருள்
வந்தருள் புரிதயனே (தர)

2 வாசக் கடம்பின் வாகா திவ்விய
நேசக் குறத்தி பாகா (தர)

3 மயின்மாமலை நாதா கூரி னயிலாயுத நீதா (தர)

## 1318. செகண்டிமலைக் குகனே

பல்லவி

செகண்டிமலைக் குகனே - நாளு
மகண்ட பூரண வறுமுகனே (செகண்டி)

சரணங்கள்

1 சரவணபவ குருபரனே - யன்பர்க்கு
வரமருள் சிவசிவ வரனே (செகண்டி)

2 கோதண்டபாணிதன் மருகா வந்த
மூதண்டமு நடத்து குருகா (செகண்டி)

3 தொண்டர்கள் மிடிதீர்க்குந் தேவே
வானத் தண்டர்களுக் கிசைந்த கோவே (செகண்டி)

## 1319. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் - குன்றை
யுத்தமனே யருள்கர்த்தனே யென்சாமி (சித்த)

அநுபல்லவி

மதுவொழுகிய மலர்நீபா சமரி
லெதிர்வரு மவுணர் கோபா (சித்த)

சரணம்

அற்புத மலரிணைத்தாளா குறக் கற்புடையவள் மணவாளா
பன்னிரு கரதல வேலா நாளு முன்னித சிகிமலை மேலா
(சித்த)

## 1320. சரவணபவ குகனே

பல்லவி

சரவணபவ குகனே யரவணிபவ சிவனருளிய மகனே
(சரவண)

சரணங்கள்

1 அவுணர் கடளமெல்லாமழித்து எதிர் சவுரியமாவுடல்
கிழித்து வரு (அவுணர்)
சத்துரு சம்மார வேலா சித்திர மயிலின் லோலா
(சரவண)

2 வாதுசெய் யமணரைப் பிடித்து நுனைச்சூதுள
கழுவினின் மடித்து வரு
தூய சம்பந்தனே சேய சுகந்தனே (சரவண)

3 தாதவிழ் சோலை கணீடும் வெகு காதலுடனன்பர்கள்
கூடும் குன்றைக் கர்த்தனே நாதா முத்தனே நீதா
(சரவண)

## 1321. உன் பாத தரிசனை தாராய்

பல்லவி

உன் பாத தரிசனை தாராய் – தந்து
நின்பார்வையிற் கடைக்கண் பாராய் (உன்)

சரணங்கள்

1 கஞ்ச மலரில் தவழுங் குஞ்சரியாகிய மஞ்சடருங்குழலி
செஞ்சரணியிலகும் (உன்)

2 மாதரசி குறமின் காதலுடன் மருவு போதலரணிபுய
நாத வெனையின்ருள் (உன்)

3 பாவியேன் முன்செய்த தீவினை யானுலும் தூவி
மயிலிலேறி தாவி யினிதாய் வந்து (உன்)

4 தொந்த வினையைத் தீர்த்து உந்தன் தயவு செய்து
சந்த மிகுந்திடு கந்தமலர் போலும் (உன்)

5 மாலை யடர்ந்திடு சோலை வளர்ந்திடு மேலை யமரர் பணி
வாலை மதி தவழும் (உன்)

6 விருத்திதகுங் குன்றைக் கருத்தனே யனுபூதி மெத்த
வருளிடச் சித்தமிரங்கியே (உன்)

## 1322. எண்ண மெப்படியோ என் சாமி

பல்லவி

எண்ண மெப்படியோ என் சாமி எண்ண மெப்படியோ (எண்ண)

அநுபல்லவி

வண்ண மிகுந்த குன்றைமாமலை வாசன் குமரேச
னென் சாமி (எண்ண)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை மருவிய லோலன்
புள்ளி மயிலேறும் புனித வடிவேலன்
பூபன் மலர்நீ பனடு கோபன் பிரதாபன் மன (எண்ண)

2 தஞ்சமில்லை யென்போர் தங்களை யடுத்தும்
அஞ்சவேண்டாமென் றனுக்கிரகங் கொடுத்தும்
ஆள்வோ னன்பர் சூழ்வோ னருள்
நீள்வோனுமை வாழ்வோன் மன (எண்ண)

3 பாங்கிலுயர் முடி பண்புடனே சூடும்
ஓங்கு குன்றைப் பொழிலுயர்ந்து நீடும்
ஒயிலன் வடியயிலன் தமிழயிலன்முடிமயிலன் மன (எண்ண)

## 1323. உன்னையல்லா லெனக்கு வேறுண்டோ

பல்லவி

உன்னையல்லா லெனக்கு வேறுண்டோ சாமி (உன்னை)

அநுபல்லவி

மின்னை நிகருமுடி மேவிய குன்றை யாளாய் (உன்னை)

சரணங்கள்

1 அண்டரு முனிவருந் தொண்டரும் பணிபாதா
வண்டலர் மணிநீபங் கொண்டபுய நாதா (உன்னை)

2 ஆதி பராபரா சோதி ரூபனே
வாதிகல் சூருடன் மோதிய கோபனே (உன்னை)

3 எத்திசை யோருந் துதித்திடு மாரணா
விர்த்திகொள் சிகிமலை நித்திய பூரணா (உன்னை)

## 1324. மனத்துயரந் தீராயோ

பல்லவி

மனத்துயரந் தீராயோ
அனைத்துலகுங் காக்கு மையனே மெய்யனே யென் (மனத்)

சரணங்கள்

1 கந்தனே குகனே கார்த்திகேயனே
பைந்தமிழ் சொல்லிய பாவல நாயனே (மனத்)

2 ஆண்டவனே யென்று அடுத்திடு வோர்க்கு
வேண்டிய தருள்பவா விரும்பிய வினையேற்கு (மனத்)

3 அண்ட மளாவிய வருள் சிகிமேரா
தொண்டர் பணிசெயுந் துரைக்குக நீதா (மனத்)

## 1325. என்னை யாள வேணுமையனே

பல்லவி

என்னை யாள வேணுமையனே
பொன்னை நிகருங் குன்றைப் பூபா மலர்நீபா (என்னை)

சரணங்கள்

1 சந்திர சடாதரர் பாலா வெதிர்
வந்த வசுரனை வெல்வேலா நீபக்
கந்த மலரணி கோலா குறத்தி
யந்த மதற்கிசை லோலா (என்னை)

2 அண்டர்கள் பணிதரு முருகா திவ்விய
கொண்டை மயிலெனுங் குருகா நாளு
மண்டி வந்தடி பணிந்துருகா வன்பரைத்
தண்டிக்கு மாயவன் மருகா (என்னை)

3 சொர்ன்ன மிகுமுடி நீடும் மலர்
துன்னும் பொழின்மிகச் சூடும் குன்றை
யென்னுங் கார்வளங் கூடும்
முன்னை யின்னமுந் துதிநாடும் (என்னை)

## 1326. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும்
விருப்பான வன்பர்பணி மேலான குன்றை நாதா (திருப்)

சரணங்கள்

1 சித்த முருக வந்து பத்தர் பணிபுரியு நித்த நய முலவு
சுத்த மலரை நிகர் (திருப்)

2 வானவர்களு மெய்ஞ்ஞானவர்களும் பணிமா நலமாகிய
தேனலர் போலவரு (திருப்)

3 எண்டிசை துதிக்குஞ் செகண்டிமலைவளர் தொண்டருக்
கருள்புரிவண்டலராகிய (திருப்)

## 1327. என்னை யாளுவாய்

பல்லவி

என்னை யாளுவாய் உன்னை வேண்டியே யுந்தனையே
பணியும் (என்னை)

சரணங்கள்

1 வாசமான நீபனே யனபர் நேசமான தீபனே (என்னை)

2 வானவர் பணி ராசனே குறத்திக் கானமாமயி னேசனே
(என்னை)

3 குன்றை மாமலை நாதனே யன்பர்க் கென்று மன்புறு
நீதனே (என்னை)

## 1328. முத்தி தந்தருளுமையா

பல்லவி

முத்தி தந்தருளுமையா சித்தி மிகுந்த குன்றைத்
தேவர்கள் தேவனே (முத்தி)

சரணங்கள்

1 வேறு கதியில்லை நாதனே திவ்விய வாறு முகத்து
விநோதனே
கூறு வயிற்கர போதனே வனு கூலனே வடிவேலனே
சாமி (முத்தி)

2 கானக மாது பங்காளா ரச தேனலராகிய தாளா நீபந்
தானணி பன்னிரு தோளா நல்ல தற்பரனே வெகு
வற்புதனே சாமி (முத்தி)

3 வாச மலர்ப்பொழினீடும் பிரகாச நிறைமுடி சூடும்
குன்றை
ராசவுனே நிதம்பாடும் எனே ரட்சித்தனு தினம் பட்ச
மறவாமல் (முத்தி)

## 1329. வந்தாளுவாயே

பல்லவி

வந்தாளுவாயே தெய்வ சிந்தாமணி யெனுந்தாயே
(வந்தாளு)

சரணங்கள்

1 வால மதியைத் தரித்தருள்வாயே கோல சரவண குருபர
நீயே (வந்தாளு)

2 சகல சீவனேயு மாதரித்தருள்வோனே செக முழு
வதையும் ரட்சிக்கும் பெருமானே (வந்தாளு)

3 கந்தா கடம்பா குகா கார்த்திகேயா கொந்தார் மலர்ப்
பொழிற் குன்றையின் சேயா (வந்தாளு)

## 1330. எந்தன் மனப்படி யருளாய்

பல்லவி

எந்தன் மனப்படி யருளாய் குன்றை வந்தழகுற்றிடு
பொருளா (எந்தன்)

சரணங்கள்

1 கங்கை தரித்தவர் பாலா மலராஞ் செங்கை தரித்திடு
வேலா (எந்தன்)

2 வண்டமரற்புத நீபா வான வண்டர் மகிழ்ச்சிகொள்
பூபா (எந்தன்)

3 குன்றை மலேக்கிசை நாதா திவ்விய மன்றன்
மலர்க்கிசை பாதா (எந்தன்)

## 1331. என்றைக்குத் தீருமோ

பல்லவி

என்றைக்குத் தீருமோ தீவினை - குன்றைக்கு வாய்த்திடுங்
குருபர நாதா (என்றை)

சரணங்கள்

1 மதுமலர் நீப மென் மாலிகை வாகா சதுமறை தேடருஞ்
சண்முகயோகா
தாயே யுனக்குரிய நாயேனுக்கினிமேல் (என்றை)

2 வாசக் கமலமெனு மாமலர்ப் பாதா
வீசற் குபதேசித் தின்புறு வேதா
இன்ப மிகுந்துரையே யன்ப னிடத்தினில் (என்றை)

## 1332. எப்படியு மெனைக் காக்க வேணும்

பல்லவி

எப்படியு மெனைக் காக்க வேணும்
மைப்படியுங் கருங்கண் மங்கையர் பங்காளா (எப்படி)

சரணங்கள்

1 பாசாங்குச மேந்தும் பாணி சகோதரா
காசார்ந்திடு சூரைக் கண்டிக்குந் தீரா (எப்படி)

2 கங்காதர ரருள் கார்த்திகேயா
சிங்கார வேலா சீதரர் சேயா (எப்படி)

3 குன்றுக் குடிவளர் குருபர நாதா
நின்றுடிய மயினீதிபா வேதா (எப்படி)

## 1333. ஆதரிப்பா யய்யனே

பல்லவி

ஆதரிப்பா யய்யனே - மாதரியாடரு
மைந்தனே கந்தனே (ஆதரிப்)

சரணங்கள்

1 வால வடிவேலவா மாதர் மனோகரா
கோல மயிலாளா கோதறு மாதாரா (ஆதரிப்)

2 தாதவிழ் மலர்நீபா சண்முக நாதா
வாதடர் சூரனை வதைத்திடு நீதா (ஆதரிப்)

3 தொண்டர்கள் பணியுந் தோகையின் மேரா
அண்டர்கள் தேடவரிய சிங்காரா (ஆதரிப்)

## 1334. என்னைக் காக்க வேணும்

பல்லவி

என்னைக் காக்க வேணும் நாதா
உன்னைச் சதமென் றொருகாலு மறவாத (என்னை)

சரணங்கள்

1 பங்கய மாமலர் வேதா தனக்
கிங்கித மிகுகுரு நாதா (என்னை)

2 ஆரணம் புகழ் வடிவேலா வருள்
பூரணனே கனசீலா (என்னை)

3 தோகை மலைமுரு கேசா
வெற்றி வாகை புனை குமரேசா (என்னை)

## 1335. வாசனே குன்றை வாசனே

பல்லவி

வாசனே குன்றை வாசனே யீசனே முருகேசனே
(வாசனே)

சரணங்கள்

1 கங்கை பாலா குற மங்கை லோலா
செங்கை வேலா செய்ய சேவலா தமிழ்ப்பாவலா
(வாசனே)

2 பன்னிருகரனே நன்னயதரனே சொன்னய பரனே முடித்
தோகையா வெற்றி வாகையா (வாசனே)

3 வானவர் பூபா விதழ்த்தேனலர் நீபா
மோனரதிபா வருள் மூர்த்திபா
வெந்தன் பார்த்திபா (வாசனே)

## 1336. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே ஆவலாகக் குன்றை மாமலைதனில்
வளருங் குககுருபரா (தேவ)

சரணங்கள்

1 சூர சம்மார மூர்த்தியே வள்ளி சாரமங்கைக்கு நேர்த்தியே
தாரணிந்திடு புயனே நல்ல வீரவுக்கிர நன்னயனே
(தேவ)

2 மங்கை யுமைதன் பாலனே யெனக் கிங்கிதமிகு சீலனே
இச்சைமிகு மொயிலா செய பச்சை மிகுமயிலா
(தேவ)

3 வாசமலர்ப் பொழில் நீடும் அதில் நேசவண்டினம் பாடும்
நிலைத்திடுங் குன்றை மேலா நாளு நலத்திடு மயில் வேலா
(தேவ)

## 1337. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனை யாளாய்
மெய்யனே குன்றைமலைத் துய்யனே் மலர்த்தாளாய்
(ஐயனே)

சரணங்கள்

1 வாசக் கமலமலர் வாழ்வுறு மலர்வேதா
நேசக் குருபரா நிர்மல நாதா (ஐயனே)

2 வானவர் மிடிகெட வந்திடு சீலா
தானவர் குடிகெடச் சாடிய வேலா (ஐயனே)

3 சொர்ன்ன முடியிலகுந் தோகையின் மேரா
வன்ன மயிலிலேறி வந்திடு சூரா (ஐயனே)

## 1338. கண்டதே போதும் மனதே

பல்லவி

கண்டதே போதும் மனதே யெப்போதும் (கண்டதே)

அநுபல்லவி

அண்டர் தொழுங் குன்றை யய்யனை மெய்யனைக்
(கண்டதே)

சரணங்கள்

1 வேதாந்த மயமாய் விளங்கிய சோதியை
நாதாந்த வடிவாய் நயம்பெறு மாதியைக் (கண்டதே)

2 தன்னை யடுத்தவர் தங்களைக் காப்போனை
யன்னையை யாவர்க்கு மேலாகிய மூப்போனைக்
(கண்டதே)

3 மேலான பொருளாகி விளாங்கிய பரனை
வேலான வாயுதம் விளங்கிய கரனைக் (கண்டதே)

## 1339. மனம் வரவில்லையே

பல்லவி

மனம் வரவில்லையே – நல்ல
கனகமிகு குன்றைக் கர்த்தனே முத்தனே (மனம்)

சரணங்கள்

1 அண்டர் குறைதீர்க்கு மய்யனே மெய்யனே
தொண்டர்கள் பணிசெய்யுந் தூயனே சேயனே (மனம்)

2 கானக வள்ளிபுணர் காவலா சேவலா
தானவர் குலகாலா சண்முகா விண்முகா (மனம்)

3 பூமலர்ப் பொழிற்குன்றைப் பூபா நீபா
நாம வடிவேலவ நாதா நீதா (மனம்)

## 1340. எந்தன் தீவினை போக்குவாய்

பல்லவி

எந்தன் தீவினை போக்குவாய் — போக்கியே
யெந்தன் நல்வினை யாக்குவாய் (எந்தன்)

சரணங்கள்

1 கங்கை யருளும் பாலா சூரைவெல்
செங்கை யணியும் வேலா (எந்தன்)

2 பதும மென்மலர் வேதா பணிசெயும்
மதுமலரெனும் பாதா (எந்தன்)

3 அடியவர் பணிதாளா குன்ருக்
குடிவாழ் பன்னிரு தோளா (எந்தன்)

## 1341. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் நயமிகுந்த குன்றை நாதனே நீதனே
(தயவு)

சரணங்கள்

1 வானுடர் பணிதேவ சேனுபதியே சாமி (தயவு)

2 தேனுர் மொழிமயிலி கானுள் நிதியே சாமி (தயவு)

3 நன்றடியார் வினையை வென்ற பிரகாசா சாமி (தயவு)

## 1342. சித்த மிரங்காதோ

பல்லவி

சித்த மிரங்காதோ உத்தமனே
குன்றைக் கொருத்தனே கருத்தனே (சித்த)

சரணங்கள்

1 கங்கை தரித்த சடையவர் பாலா பன்னிரு
செங்கை தரித்த கூரினமிகு வேலா (சித்த)

2 சூர சங்காரஞ் செய்யும் வீரனே நல்ல
சார மிஞ்சிய கனதீரனே (சித்த)

3 தோகைக் கிரியின் வாசனே சாமி
வெற்றி வாகைப்புய குகேசனே (சித்த)

## 1343. சாமி சித்த மிரங்காதோ

பல்லவி

சாமி சித்த மிரங்காதோ
பூமி புகழுஞ் செகண்டிப் புண்ணிய சுப்பிரமண்ணிய (சாமி)

சரணங்கள்

1 எந்தவேளையு நோய் வந்த வேளையும் படா
தந்த வேளையுமினி யுந்தனை நினைப்பவன்மேல் (சாமி)

2 மங்கையுமைப்பெண் மகிழ் கங்கை தரித்தசடைச்
சங்கை யெடுத்தகையர் தங்கள் புத்திர ரென்னுஞ் (சாமி)

3 கோடு மலருகு நீடுபொழில் களுயர்
சூடுமணிச் செகண்டிக் கோடில் வருங்குகா (சாமி)

## 1344. ஐயனே பன்னிரு கையனே

பல்லவி

ஐயனே பன்னிரு கையனே - சாமி
வையம் புகழுங் குன்றைமலைக் குமரேசனே (ஐயனே)

சரணங்கள்

1 அம்புய வாசனும் புகழ் பாதனே
நம்பு மடியருக் கருளும் புரிநாதனே (ஐயனே)

2 தொண்டர்கள் வினைதனைக் கண்டஞ்செய் வேலனே
தண்டலை மானை மயல்கொண்ட நல்லோலனே (ஐயனே)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றையின் முருகனே
நின்றுலாவிய மயின் வென்றிகொள் குருகனே (ஐயனே)

## 1345. மனமகிழ்ந் தருள்புரிவாய்

பல்லவி

மனமகிழ்ந் தருள்புரிவாய் - கனமிகுந்திடு
குன்றைக் கர்த்தனே சித்தனே யுன் (மன)

சரணங்கள்

1 வஞ்சனைபுரி சூரை மாய்த்திடும் வேலா
கஞ்சமென் மலர்ப்பொழிலுங் கருதிய காலா (மன)

2 மாது குறக்கொடி மருவிய வாகா
போது தரித்தபுயா புகழ் சோதித் தேகா (மன)

3 வானவர் பணிபுரி வரத சண்முகனே
தேனலர்ப் பொழிற்குன்றைத் தென்மலைக் குகனே (மன)

## 1346. உன் பாதமே நம்பினேன்

பல்லவி

உன் பாதமே நம்பினேன் - தென்பார்
புகழ் குன்றைத் தேவனே யாவலாய் (உன்)

சரணங்கள்

1 கருணை கரனே யருண நன்னிறனே
கந்தனே ஞானசம் பந்தனே சாமி (உன்)

2 பங்கய வேதா தங் குருநாதா
பன்னிரு புயனே யுன்னருள் புரிவாய் (உன்)

3 வளர்பொழினீடும் கிளர்முடிசூடும்
வருசிகி மலையா யருள்புரி முருகா (உன்)

## 1347. கண்டால் நயமுண்டு

பல்லவி

கண்டால் நயமுண்டு – வண்டார்
பொழிற் குன்றைமலைக் குருபரனைக் (கண்டால்)

சரணங்கள்

1 வாசனை மிகுநீப மாலிகைப் புயனை
யீசனைத் தந்தையென் றியற்றிய நயனைக் (கண்டால்)

2 பங்கய வாசனன் பணியுஞ் சரணனை
யெங்கும் பிரகாசமா யிலங்கு மாபரணனைக் (கண்டால்)

3 கோதண்டபாணிதன் கோதறு மருகனை
மூதண்டம் புகழ்முடிக் குன்றை முருகனைக் (கண்டால்)

## 1348. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் – அடியன்மீது
தயவு செய்ய வேணும் (தயவு)

அநுபல்லவி

வயல்விளையும் நேமவள நாட்டரசே (தயவு)

சரணங்கள்

1 பத்தர்கள் முனிவர்கள் நித்தந் துதிசெய்யும்
சித்தனே யானந்த நிர்த்தனே யென்சாமி (தயவு)

2 முருகா மாயவன் மருகா மாமயிற்
குருகா எந்தனை யிருகாலு மாண்டிடத் (தயவு)

3 நின்றாடிய பொழின் மின்றாவிய முடிக்
குன்றுக் குடிவளர் நன்றூர் குருபரா (தயவு)

## 1349. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் - பத்தர்
பணியுங் குன்றைப் பார்த்திபா சீர்த்திபா (சித்த)

சரணங்கள்

1 ஆதி பராபரச் சோதி மயமான நீதிபனே
பிரக்யாதிபனே சாமி (சித்த)

2 சூடிய மணிமுடி யாடியமயிற் குகா
நாடிய பேர்க்கருள் கூடிட வருள்பவா (சித்த)

3 பொருணிறை முடிக்குன்றை வருகுருபர குக
திருமறை பணிபத வருடருவாய் சாமி (சித்த)

## 1350. மாயஞ் செய்யாம லய்யனே

பல்லவி

மாயஞ் செய்யா மலய்யனே - நல்லச
காயம் செய்குவாய் மெய்யனே (மாயஞ்)

சரணங்கள்

1 வாருடர் பணிகாவலா நீபத்
தேனுரு மலர்ச்சேவலா (மாயஞ்)

2 அடியார்க் கெளியவனே குன்றுக்
குடிவாழ் தருபவனே (மாயஞ்)

3 சரவணபவ குகனே விட
அரவணிபவன் மகனே (மாயஞ்)

## 1351. வஞ்சகஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சகஞ் செய்யாதே மனமே வஞ்சகஞ் செய்யாதே
(வஞ்சகஞ்)

அநுபல்லவி

நேசனைச் சுத்தப் பிரகாசனைத் துதிசெய்ய (வஞ்சகஞ்)

சரணங்கள்

1 பாற்கடலிற் றுயில் பண்ணிய தூயன்
தீர்க்கமுள்ள வுல்லாச திவ்விய மாயன்
வார்க்கும்பமுலை மலர்மகள் நேயன்
மருகனை மயிலேறு முருகனைத் துதிசெய்ய (வஞ்சகஞ்)

2 ஆதி பராபர வையன் திரிசூலன்
வேதியன் முடியாக விளங்குங் குகபாலன்
சோதிச் சொரூபியுமை தோகைதன் பாலன்
சுதனை விளங்கிய வற்புதனைத் துதிசெய்ய (வஞ்சகஞ்)

3 நன்னய மலர்ப்பொழி லுடொறு மேவும்
சொன்னயக் குயின்மயிற் றேகைகள் கூவும்
பொன்னலமான்முடி பொருந்தியே மேவும்
பூமலி குன்றைமலை நாமனைத் துதிசெய்ய (வஞ்சகஞ்)

## 1352. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்துவரந்தர வேணும் – நல்ல
இந்து தவழ் குன்றைமலைக் கிறைவனே யென்சாமி (வந்து)

சரணங்கள்

1 வாசனை மிகுந்த நீபத் தேச சினமலர் புனையும்
யீசனே குருபர குகேசனே யென்சாமி (வந்து)

2 வாதுபுரி சூரனு மோது படையாவும் விழச்
சூதுபுரி கூரயில் போது நிகாரன கையா (வந்து)

3 வண்டினங்கள் சூழுமிசை கொண்டிலங்கும் பொழிலுயர்
எண்டிசையும் புகழுஞ் செகண்டிமலை முருகேசா
(வந்து)

## 1353. நெஞ்சே மலையாதே

பல்லவி

நெஞ்சே மலையாதே – மஞ்சார் பொழிற்குன்றை
மாயன் றூயனிருக்க (நெஞ்சே)

சரணங்கள்

1 ஆறுமுகக் குருநாதன் சூரை
வேறு முகஞ் செயும் விநோதன்
கூறுபடை வேலனீறு மெய்யனிருக்க (நெஞ்சே)

2 வள்ளி மனைவியின் மனோகரன் நல்ல
தெள்ளுதமிழ் சொல்லிய வாயரன்
புள்ளி மயிலின் வீரன் வள்ளல் குகனிருக்க (நெஞ்சே)

3 மின்னிய மாமுடி நீளுங் குன்றை
நன்னய மலைதனில் வாழும்
சொன்னயக் கனிவாயன் வன்ன வேலனிருக்க
(நெஞ்சே)

## 1354. விருப்புடன் வருவானோ

பல்லவி

விருப்புடன் வருவானோ வந்து திருப்பதந் தருவானோ
(விருப்புடன்)

அநுபல்லவி

மருப்பலர் பொழிற்குன்றைப் பொருப்பில் வளருமையன்
(விருப்புடன்)

சரணங்கள்

1 பங்கய மலரயன் றுங்க குருபரன்
தங்க மயிலிலேறும் திங்கள் வதன லோலன் (விருப்புடன்)

2 மாதவர் பணிபாதன் தாதவிழ் மலர் நீபன்
மோதடர் புரிவேலன் ஆதரவு செய்ய (விருப்புடன்)

3 நின்ருடிய பொழிற் பொன்ருவிய முடிக்
குன்ருக்குடி யையன் நன்ருன வருள்செய்ய (விருப்புடன்)

## 1355. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா தமிழ்ப் பண்முக கீதா (சண்முக)

அநுபல்லவி

விண்முகமுயர் பொழில் விளங்கிய குன்றை மலே (சண்முக)

சரணங்கள்

1 எண்ணறு நான்மறை யின்னமுங் காணு
அண்ணலருள் புதல்வா அழகிய பூணு (சண்முக)

2 வந்தடியவர் பணிமா மலர்ப்பாதா
உந்தனே நம்பினேனு தவுவாய் கியாதா (சண்முக)

3 மின்றவழ் குன்றைமலே விளங்கிய யோகா
மன்றுள நீபமலர் மாலிகை வாகா (சண்முக)

## 1356. தீர்க்க வேணுமையனே

பல்லவி

தீர்க்கவேணுமையனே – கடைக்கண்
பார்க்க வேணுமையனே (தீர்க்க)

அநுபல்லவி

வார்க்கும் மணிமுடிக் குன்றையின் மாமலே
வந்தவனே யெனக் குகந்தவனே வினே (தீர்க்க)

சரணங்கள்

1 மங்கைய ரிருவர்கள் பங்கினி லுறைந்தும்
எங்கும் பிரகாசமா யங்கங்கு நிறைந்தும்
இருப்பவனே யென்மேல் விருப்புடனே வினை (தீர்க்க)

2 அண்டர் பகைதீர்த்து வண்டனெனுஞ் சூரை
இரண்டு துண்டாய் வென்று நீணிதி யெனும் பாரை
நிலைசெய்தவா பதிக்கலை செய்தவா வினை (தீர்க்க)

3 ஓங்கிய மாமலர் தாங்கிய பொழில்நீளும்
பாங்குயர் தென்சிகிப் பழமலை வாழும்
பாலனே யென்மீது மாலனே வினை (தீர்க்க)

## 1357. நாதனே மலர்ப்பாதனே

பல்லவி

நாதனே மலர்ப்பாதனே (நாதனே)

சரணங்கள்

1 வாசனே முருகேசனே (நாதனே)

2 ஐயனே பன்னிரு கையனே (நாதனே)

3 வேலனே குன்றை ஞாலனே (நாதனே)

## 1358. தரிசனந் தரவேணும்

பல்லவி

தரிசனந் தரவேணும் தந்து வேண சிகிமிசை வரவேணும்
(தரிசனந்)

அநுபல்லவி

அரிய தவத்தோர்பணி குன்றையின் மாமலை
ஐயனே பன்னிரு கையனே உனது (தரிசனந்)

சரணங்கள்

1 வாச மிகுந்த நீபமாலை யணிபுயனே
நேச மிகுந்த குறநேரிழை நயனே (தரிசனந்)

2 அத்து விதத்தின் முடிவாகிய பரனே
சித்து வித்தையாடிய சின்மய தரனே (தரிசனந்)

3 அண்டர் பரிபூர ஞானந்த குகேசா
செகண்டி மலேவளர் திவ்விய வுல்லாசா (தரிசனந்)

## 1359. தரிசனஞ் செய்குவாய் மனமே

பல்லவி

தரிசனஞ் செய்குவாய் மனமே காதலுடனே நீ யுய்குவாய்
(தரிசனஞ்)

சரணங்கள்

1 பன்னிரு கரதல சாமி குறக்
கன்னிகை ரூபத்திற் காமி நாளு
நன்னய மிகுந்தருள் வன்ன வடிவேலவன் (தரிசனஞ்)

2 அஞ்சாத சூரர் காலன் வினையைப்
பஞ்சாகச் செய்யுஞ் சீலன் நாளு
மஞ்சார் மேனியோன் மருகன் பஞ்சார் மலரிலகு
(தரிசனஞ்)

3 மருவுலவிய பொழினீடும் மலர்த்
திருவளர் சொர்ண முடிசூடும் நாளும்
பெருமை சேருஞ் செகண்டி யொருமலே யனிருபாத
(தரிசனஞ்)

## 1360. எந்தனைக் காக்க வேணும்

பல்லவி

எந்தனைக் காக்க வேணும்
சுந்தர மிகுங் குன்றைத் தோகைக் கிரியில் வாசா (எந்தனே)

சரணங்கள்

1 தானவர் குலகாலா வ்ானவர் குல சீலா (எந்தனே)

2 சங்கர சண்முகா விங்கித மிகுகுகா (எந்தனே)

3 நின்ருடும் பொழினீளும் குன்ருக் குடியின் வாழ்வே
(எந்தனே)

## 1361. வடிவேலனே

பல்லவி

வடிவேலனே குன்றக்குடி யாளனே யாறு முடியாளனே
(வடிவேல)

சரணங்கள்

1 ஆண்டவனே நீபம் பூண்டவனே யென்னை
ஆதரிப்பாய் குருநாதா சிகிக்கீரிசா (வடிவேல)

2 ஐயனே பன்னிரு கையனே யருளு
மற்புதனே பணி பொற் புயனே சாமி (வடிவேல)

3 வாசனே குன்றை முருகேசனே
பன்னிரு வாகனே யெனையாளும் யோகனே வெற்றிபுனே
(வடிவேல)

## 1362. வேலனே யெனையாளாய்

பல்லவி

வேலனே யெனையாளாய்
ஞாலம் புகழுங் குன்றை நாதனே நீதனே (வேலனே)

சரணங்கள்

1 ஞானசம்பந்தா வானர் சொல்கந்தா (வேலனே)

2 பன்னிரு கையா நின்னருள் துய்யா (வேலனே)

3 குன்றையங் கிரியாய் நன்றருள் புரியாய் (வேலனே)

## 1363. கந்த வேளை மனமே

பல்லவி

கந்த வேளை மனமே யெந்த வேளையு மறவாதே (கந்த)

சரணங்கள்

1 முருகேசனை மனமே யொருபோதினு மறவாதே (கந்த)

2 வாலவேலனை மனமே ஞால மீதினீ மறவாதே (கந்த)

3 குன்றை நாதனை மனமே யென்றைக்கு நீ மறவாதே
(கந்த)

## 1364. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தரவேணும்
செந்துவர்வாய் வள்ளி பங்கா சேவலா ஆவலாய் (வந்து)

சரணங்கள்

1 தாதவிழ் நீப மாலே புனேதோளா திவ்விய
காதலி குஞ்சரி புணர்தோளா (வந்து)

2 அண்டர்கண் முனிவர்கள் பணிபாதா நல்ல
தொண்டர்கள் மிடிதீர வருள் நீதா (வந்து)

3 மணிமுடி யிலங்கிய சிகிமேரா வெகு
அணியுயர் நடையுள மயில்வீரா (வந்து)

## 1365. வருக வருக வேணும்

பல்லவி

வருக வருக வேணும் அன்பனிடம்
(வருக)

அநுபல்லவி

உருகவுருக துதி கருதுமன்பர் பணியும்
உத்தமனே குன்றைக் கர்த்தனே யென் சாமி (வருக)

சரணங்கள்

1 வாசவனுர் மருகேசா பிர காசனே யருள் முருகேசா
வானேர்
நேசனே யறுபடை வாசா வருள் நித்தனே பிரசித்தனே
சாமி (வருக)

2 அண்டர்கள் பணிபுரிபாதா வனேகந் தொண்டரைக்
காத்திடு நீதா சூரைக்
கண்டஞ்செயு மயிற்சூதா வெகு கண்ணியனே சுப்பிர
மண்ணியனே சாமி (வருக)

3 பன்னிரண்டு கரதலனே யாறு சென்னியனே குன்றை
நிலனே யன்ப
ருன்னி யவருளு நன்னலனே யெனக் குகந்தவனே
தமிழ் பகர்ந்தவனே சாமி (வருக)

## 1366. வாராயோ ஐயனே

பல்லவி

வாராயோ ஐயனே - யனுக்கிரகந்
தாராயோ மெய்யனே (வாராயோ)

சரணங்கள்

1 ஆண்டவனே குகனே நீபம்
பூண்டவனே சுகனே (வாராயோ)

2 பங்கய காலனே மலர்ச்
செங்கையின் வேலனே (வாராயோ)

3 அகண்ட பூரண மலைச்
செகண்டி யாரண (வாராயோ)

## 1367. எந்தன்முன் வருவாயே

பல்லவி

எந்தன்முன் வருவாயே வந்தருள் குரு நீயே (எந்தன்)

அநுபல்லவி

சந்தமிகு பொழில்சேர் தழைசிகி மகிபாலா (எந்தன்)

சரணம்

ஆரணமாகிய பொருளே பரி பூரணமாகிய வருளே
வண்டாரு மலர்நீபா அண்டாத பேர்கோபா
குன்றக்குடி வாசா நன்ஞான பிரகாசா (எந்தன்)

## 1368. வால வடிவேலா

பல்லவி

வால வடிவேலா அன்பர்க் கேலு மனுகூலா (வால)

சரணங்கள்

1 மாதுமை பாலனே குறத்தி மீது கொண் மாலனே (வால)

2 மாயவன் மருகனே யெனக்குத் தாயக முருகனே (வால)

3 அண்டர்கள் நாதா வுயர் செகண்டியின் வேதா (வால)

## 1369. துதிக்க வேணு மனமே

பல்லவி

துதிக்க வேணு மனமே குன்றைப்
பதிக்கர சாயருள் பாலிக்குமை யனைத் (துதிக்க)

சரணங்கள்

1 உரிமை யானவர்க்கு நேசனை யன்பர்
கருமை தீர்க்கும் பிரகாசனைத் (துதிக்க)

2 வானவர்க்குச் சகாயனை யெதிர்
தானவர்க்குச் செயமாயனைத் (துதிக்க)

3 குன்றை யங்கிரி யய்யனை நாளு
நன் றருள் செயு மெய்யனைத் (துதிக்க)

## 1370. வடிவேலெடுத்து வருவாய்

பல்லவி

வடிவேலெடுத்து வருவாய் குன்றுக்
குடிமேலடுத்தருள் குமரகுரு பரனே (வடிவேல்)

சரணங்கள்

1 அஞ்சாதே நீயென்று அடுத்தோரைக் காக்கும்
பஞ்சான வவுணர்கள் பதைத்திடப் பார்க்கும் பரனே
யரனே (வடிவேல்)

2 மின்னுரிருவரை மேவிய புயனே
பொன்னுர் மயிலேறும் புனித நயனே வேதனே நீதனே
(வடிவேல்)

3 சொர்னமுடி யிலங்குந் தோகையின் மேரா
தன்னடியார்களைத் தற்காக்குந் நீரா சற்குண விற்பன
(வடிவேல்)

## 1371. ஆதாரஞ் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்யவேணும் உந்த
னடியனிடத்தில் வந்து மிடியைத் தவிர்த்தெனக்கு
(ஆதாரஞ்)

சரணங்கள்

1 வேதாகமபுராண வருள் வித்தகனே
செகண்டி யுத்தமனே யெனக்கு (ஆதாரஞ்)

2 கானரும் வள்ளி மானுள் புணர்
காதலனே நய பூதலனே யெனக்கு (ஆதாரஞ்)

3 தேனரு மலர்நீபா சேவலனே
யண்டர் காவலனே யெனக்கு (ஆதாரஞ்)

4 கங்கை யணியுஞ் சடையாரருளும்
கருத்தனே சாமி யொருத்தனே யெனக்கு (ஆதாரஞ்)

5 செங்கையில் வேலேந்தும் விலு
திடசவுரிய புயகடகிரியா யெனக்கு (ஆதாரஞ்)

6 செய்யுலவிய நேமா வருளுஞ் சேயனே
தெய்வ நாயனே யெனக்கு (ஆதாரஞ்)

## 1372. மறவாதே மனமே

பல்லவி

மறவாதே மனமே
முறையாயன்பர் பணியு முதுசிகிமலை யோனை (மறவாதே)

அநுபல்லவி

திருமாயவனுட மருகேசனை மயிற்
குருகாளியை யருள் முருகேசனை நாளு (மறவாதே)

சரணம்

அம்புய வாசனம்பு மடியவரும் புலவரும்
பணிசம் பிரம குகவேளே
மகிதல மதிலுயர் முகிறவழ் பொழிலுறை
சிகிமலை தனில்வளர் மகிபதி குமரனே (மறவாதே)

## 1373. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே யரவம் பூண்டவனார் மகனே
(ஆண்ட)

சரணங்கள்

1 ஐயனே பன்னிரு கையனே பூதியணி
மெய்யனே நலமிகு துய்யனே யென்சாமி (ஆண்ட)

2 சமர சண்முகனே குமர குகேசனே
அமரர் தயாளனே பமர நன்னீபனே (ஆண்ட)

3 மன்றலம் பொழில்சேர் குன்றை யம்பதிவாழ்
வென்றிகொள் வேலனே நன்றிசெய் தாளுவாய் (ஆண்ட)

## 1374. சித்த மிரங்காதோ

பல்லவி

சித்த மிரங்காதோ குன்றை யுத்தமனே யருள் வித்தகனே
குகனே (சித்த)

அநுபல்லவி

அற்புதனே நல்ல விற்பனனே வெகு கற்பனை யிலகிய
நற்குணனே யென்மேற் (சித்த)

சரணம்

பரம தயாளா அரகர குமரா சரவணபவ சிவ
வரமருளெனக்கு
மங்குறவழ் சோலை யெங்கு முலாவிய
கொங்குய சிகிமேரா பொங்குங் கிருபா நிதி (சித்த)

## 1375. மனமகிழ்ந்தருள் செய்குவாய்

பல்லவி

மனமகிழ்ந்தருள் செய்குவாய்
யினமணி முடியுயர்ந்திருக்குங் குன்றை நாதா (மன)

சரணங்கள்

1 கஞ்ச மலரை நிகருஞ் சரணே சுவரா
நெஞ்சுடர் துயர்தனைப் பஞ்சு பஞ்சாக (மன)

2 கரும்பினிய மொழியார்கள் அரும்பிள முலையார்கள்
விரும்பிய மயல்தனில் திரும்பி யலைந்திடாமல் (மன)

3 எண்டிசையும் பரவும் வண்டின மிசைபாடும்
மண்டிய பொழில்சேர் செகண்டியின் மலைவாழ்வே (மன)

## 1376. என்னையாள வேணுமையனே

பல்லவி

என்னையாள வேணுமையனே
பொன்னையணி முடிக்குன்றைப் பூபனே (என்னை)

சரணங்கள்

1 உந்தனைச் சதமாக வுண்மையாய்
நினைக்கின்ற வெந்தனைக் காத்தினி யிரட்சித்து
நாள்தோறும் (என்னை)

2 மதுரித மிகுதமிழ் வடித்திடும் வாயா
சதுர்மறை பரவிய சரவண பவகுகா (என்னை)

3 சண்டப் பிரசண்ட மயிற் சண்முக குமரா
எண்டிக்கும் பரவிய யெழிற்சிகி மலையா (என்னை)

## 1377. வாராரோ வருவாரோ

பல்லவி

வாராரோ வருவாரோ தாராரோ தருவாரோ (வாராரோ)

அநுபல்லவி

செங்கை யணியும் வேலன் இரு
மங்கையர் மருவு லோலன் (வாராரோ)

சரணங்கள்

1 கங்கை சூடியோர் பாலன் தேவர்
கர்த்தனிலகு பரி சுத்தனென் சாமி (வாராரோ)

2 மாயவனூர் மருகன் அன்பர்ச
காயனருள் முருகன் (வாராரோ)

3 தூயன் மயிற் குருகன் நிதித்
துரையாளன் குன்றை வரையாளன் (வாராரோ)

4 அண்டர் பணி பாதன் பரவுந்
தொண்டருக் கிசைநாதன் (வாராரோ)

5 அருமறைத் தண்டமிழருள் போதன் நல்ல
தற்பரனுயருயர் விற்பனனென் சாமி (வாராரோ)

## 1378. தரிசிப்பதே பெரிது

பல்லவி

தரிசிப்பதே பெரிது
பரிசுத்தமிகுங் குன்றைப் பரனை யரனைத் (தரிசிப்பதே)

அநுபல்லவி

அருமறை புகழும் பெருமைசேர் பரனை
குருபர குகனை யிருவினை தவிர (தரிசிப்பதே)

சரணம்

அரவணி சிவனூர் தரவரு பவனை
பரவரு பதனை சரவண பவனை
நின்றுடிய பொழிற் குன்றுக்குடியனை
யொன்றுன வொருவனை நன்றுகப் பணிந்து (தரிசிப்பதே)

## 1379. சாமி சித்த மறியனே

பல்லவி

சாமி சித்த மறியேனே
பூமி புகழுங் குன்றைப் புண்ணிய சுப்பிரமண்ணிய (சாமி;

சரணங்கள்

1 அம்புய வாசனனும் பரவிய பாத
வும்பருந் தானவரும் பணிநீதச் (சாமி)

2 மூதண்டமும் புகழுங் கோதண்டனூர் மருக
மாதொண்டர் தங்களுக்குத் தீதண்டா முருக (சாமி)

3 சுகந்தமிகு பொழில்கள் மிகுந்து நிறைந்து நீளும்
அகண்ட முடிகள் சேரும் செகண்டி மலையில் வாழும் (சாமி)

## 1380. பன்னிரண்டு கையனே

பல்லவி

பன்னிரண்டு கையனே
யென்னிரண்டு வினைதீர்ப்பா யுன்னிதச் சிகிமலையாய்
(பன்னிரண்டு)

சரணங்கள்

1 கங்கை தரித்த சிவனருளிய காரணக் கருணேசனே
யங்கை குறத்தி மருவும் நீபமென் மாலிகை புனையீசனே
(பன்னிரண்டு)

2 சரவணபவ குகனே யருளிய சண்முக முருகோனே
மரவுரி யுடைமுனிவோர் பணிசெயும் மாயவன்
மருகோனே (பன்னிரண்டு)

3 வாசனை மிகுபொழில் எங்கும் மருவிய குன்றை நாதா
தேசுற்ற வன்பர் சூழ்தரு திவ்விய மலர்ப்பாதா
(பன்னிரண்டு)

## 1381. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே
சமர வடிவேலா சண்முக கோலா (குமர)

சரணங்கள்

1 மதுமலர்ச் சரணா நீபப் புது மலராபரணா (குமர)

2 வஞ்சக வவுணர் காலா குற ரஞ்சகி புணர்சீலா (குமர)

3 தோகைக் கிரியின் வாசா வெற்றி வாகைப் புயகுகேசா (குமர)

## 1382. வந்ததே பெரிது

பல்லவி

வந்ததே பெரிது மயிலேறி வந்ததே பெரிது
தந்ததே யரிது அனுபூதி தந்ததே யரிது (வந்ததே)

சரணம்

காப்பதே பெரிது எந்தனைக் காப்பதே பெரிது
பார்ப்பதே யரிது கடைக் கண்ணுற் பார்ப்பதே யரிது
வருவதே பெரிது குன்றை நாதன் வருவதே பெரிது
தருவதே யரிது வேணது தருவதே யரிது: (வந்ததே)

## 1383. தெண்டனிட்டுக் கொள்ளுவாய்

பல்லவி

தெண்டனிட்டுக் கொள்ளுவாய் மனமே
தெண்டனிட்டுக் கொள்ளுவாய் (தெண்ட)

அநுபல்லவி

வண்டினம் பாடு பொழிற்
செகண்டிமலை நாயகனைத் (தெண்ட)

சரணங்கள்

1 வானவர் சிகாமணியை யன்பர்கள்
தானவர்தம் மாணியைத் (தெண்ட)

2 சரவணபவ நாதனை பன்னிரு
கரதல சிவபோதனைத் (தெண்ட)

3 குன்றையம் பதியானை முனிவரர்
நன்றுகொள் துதியானைத் (தெண்ட)

## 1384. திருந்திக்கொள் மனமே

பல்லவி

திருந்திக்கொள் மனமே
வருந்தித் தவஞ்செய்து வரதனைக் கண்டு (திருந்தி)

சரணங்கள்

1 எண்ணிக் குருபரனை யின்புடன் தொண்டு
பண்ணித் தவஞ்செய்து பரிவுடன் கொண்டு (திருந்தி)

2 வாச மிகுந்திடு மாமலர் கொய்து
ஓசை யுடனே தானருச்சனை செய்து (திருந்தி)

3 குன்றுக்குடி வளர் குமரனைப் போற்றி
நின்றுடு வினைதனை நீங்கிட மாற்றித் (திருந்தி)

## 1385. நாதா சரவணபவா

பல்லவி

நாதா சரவணபவா வருளிய நீதா குருபரசிவா (நாதா)

சரணங்கள்

1 வானுடர் பணியும் பாதா திவ்விய
தேனு ரிலகிய போதா (நாதா)

2 ஆனந்த நடராசா வருளிய
ஞானங்கொள் பிரகாசா (நாதா)

3 குன்றுக்குடி மேலா வடியரை
நன்றாய்க் காத்தருள் சீலா (நாதா)

## 1386. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே யெனக்கு
வேறுகதி தானுண்டோ (ஆறுமுக)

அநுபல்லவி

மீறுபொழிற் குன்றைமலை மேவிய குருபர (ஆறுமுக)

சரணங்கள்

1 பன்னிருகை வேல வென்னிதயங் கோல
பங்கய மலர்ச்சரண விங்கித மிகுந்தகுக (ஆறுமுக)

2 சரவணபவனே யரவணி சிவனே
சத்துரு சம்மார வத்துவிதத் தலைவா (ஆறுமுக)

3 குன்றைமலை நாதா நன்று புரிநீதா
குருபர குமரா வருளிய முருகா (ஆறுமுக)

## 1387. நயந்தருவா யய்யனே

பல்லவி

நயந்தருவா யய்யனே
பயன்றருங் குன்றைமலைப் பார்த்திபா நேர்த்திபா (நயந்)

சரணங்கள்

1 கங்காதரனுர் அருளிய சிங்காரமான பாதா (நயந்)

2 வாலவடிவேலா வள்ளிக்குச் சாலமிகச் செய்கோலா
(நயந்)

3 குன்ருக் குடியாளா வடியேனை நன்ருட்கொள்
மலர்த்தாளா (நயந்)

## 1388. சித்த மிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும்
முத்தமிழ்ப் புகழ்க் குன்றைச் சித்தனே கர்த்தனே (சித்த)

சரணங்கள்

1 வஞ்சி குறத்தி பாகா ரஞ்சிதமிகு யோகா (சித்த)

2 பாத பங்கயனே வேத நன்னயனே (சித்த)

3 தென்சிகி மேரா பொன்மயில் வீரா (சித்த)

## 1389. திருவாக்குத் தந்தருள்வாய்

பல்லவி

திருவாக்குத் தந்தருள்வாய் – சொர்ன்ன
வுருவாக்குங் குன்றைமலைக் கொருத்தனே கருத்தனே
(திருவாக்கு)

சரணங்கள்

1 வாசக் கடம்பணியு மாரனே சீரனே
நேசக் குறத் திபுணர் நேயனே நாயனே (திருவாக்கு)

2 பன்னிரு கரதல பரனே யரனே
யென்னிரு வினைதீர்ப்பாய் யீசனே வாசனே (திருவாக்கு)

3 குன்றுக் குடிமலைக் குமரனே சமரனே
நன்றுய்க் காத்தருள் நாதனே நீதனே (திருவாக்கு)

## 1390. சித்திர மயில்வாகனே

பல்லவி

சித்திர மயில்வாகனே
முத்திதருங் குன்றை மூர்த்திகரா வரா (சித்திர)

சரணங்கள்

1 தானவர் குலகாலா வானவர் பணிசீலா (சித்திர)

2 வண்டணி மலர்வாகா தொண்டர் பணியோகா (சித்திர)

3 அகண்ட பூரண தேவே செகண்டி மலையின் கோவே
(சித்திர)

## 1391. ஆண்டருள்வா யய்யனே

பல்லவி

ஆண்டருள்வா யய்யனே நீபம்
பூண்டிடுவாயுனை வேண்டினேனையா (ஆண்டருள்)

சரணங்கள்

1 ஆறுமுகச் சிவனே யெனக்கு
தேறுத லருள் பவனே (ஆண்டருள்)

2 பன்னிரு கரதலனே யருளிய
நன்னிதி யயிலவனே (ஆண்டருள்)

3 தோகைக்கிரிக் கந்தனே வெற்றி
வாகைப் புயஅந்தனே (ஆண்டருள்)

## 1392. ஐயனே பன்னிரு கையனே

பல்லவி

ஐயனே பன்னிரு கையனே சாமி
துய்யனே பூதியணி மெய்யனே சாமி (ஐயனே)

சரணங்கள்

1 ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி
தாண்டவனே யருணீண்டவனே சாமி (ஐயனே)

2 காரணனே பரிபூரணனே சாமி
ஆரணனே செய்ய வாரணனே சாமி (ஐயனே)

3 கந்தனே ஞான சம்பந்தனே சாமி
அந்தனே குன்றைமலை மைந்தனே யென்சாமி (ஐயனே)

## 1393. பச்சைமயில் வாகனு

பல்லவி

பச்சை மயில் வாகனு - வன்பர்க்
கிச்சை செய் குன்றைமலைக் கிறையவா மறையவா (பச்சை)

சரணங்கள்

1 சூதுக் குணமிகு வீரன் எதிர்த்து
வாதுக்கு வருசூரன் மாய்ந்திட
தூய வடிவேலெய்யும் நாயகனே யென்சாமி (பச்சை)

2 எந்தன் வினைக டீரவே யடியேற்கு
சந்தமிகச் சாரவே ஐயனே
யிப்பொழுதருளாம லெப்பொழுதென்சாமி (பச்சை)

3 சொர்னமுடி கண்மேவும் வாசிக்கும்
நன்னய பொழில் தாவும் குன்றை
துரந்தரனே யெங்கு நிரந்தரனே யென்சாமி (பச்சை)

## 1394. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே யென்சாமி யமரர் பயங்கரனே
சமர வடிவேலா சண்முக கோலா (குமர)

சரணங்கள்

1 அரவணிபவ சிவனருளிய பாலா
பரவடியவர்க்கருள் பழகிய சீலா (குமர)

2 அண்டர்கள் காண்பரி தாகிய பாதா
தொண்டர்க டீவினை தொலைத்திடு நீதா (குமர)

3 குன்றுக்குடி யெனுங்குளிர் மலைவாசா
நின்றுள் பணிவேனை ரட்சிப்பை யீசா (குமர)

## 1395. திருவருடர வேணும்

பல்லவி

திருவருடர வேணும் மருவுலவிய
சோலைவளர் குன்றை முருகேசா (திரு)

சரணங்கள்

1 அஞ்சாதே நீயென்று அபயஸ்தங் கொடுத்து
மிஞ்சாடுகின்ற வல்வினைகளைத் தடுத்து (திரு)

2 வாச மிகுந்த நீப மாலிகை புனைதோளா
நேச மிகுந்த குற நேரிழை மணவாளா (திரு)

3 குன்றுக்குடி மலைக் குருபர நாதா
நின்றுட் கடியேனை ரட்சிக்கும் பாதா (திரு)

## 1396. தாயு நீ யெனக்குத் தந்தையு நீயே

பல்லவி

தாயு நீ யெனக்குத் தந்தையு நீயே
தமியேனைக் காப்பது நீயே (தாயு)

அநுபல்லவி

வாயு மனமு மொன்றுய் வழுத்திய வடியேற்கு
வந்தனு தினந்தினந் தந்தருள் புரிந்திடும் (தாயு)

சரணங்கள்

1 காதலுட னன்பாக மாதவம் புரிவோர்கள்
பாதக வினைதீர்த்து ஆதரம் புரிகின்ற (தாயு)

2 பஞ்ச பாதகங் கூட வஞ்சவே யோடிட
நெஞ்சது துயரங்கள் பஞ்சது பஞ்சாக்கும் (தாயு)

3 தண்டலை திகழ்தரு வண்டர்கள் பாடிய
அண்டர்கள் பணியுஞ் செகண்டியின் நாதா (தாயு)

## 1397. வேலவனே சரணம்

பல்லவி

வேலவனே சரணம் - ஐயன்
பாலகனே சரணம் (வேல)

அநுபல்லவி

வாலமதி தவழும் கோலமிகு செகண்டி
மலைக்கரசே மதுரக் கலைக்கரசே யென்சாமி (வேல)

சரணங்கள்

1 யாரிடத்தினிற் போயடுத்தாலும் மற்றப்
பேரிடத்தினிற் கவி தொடுத்தாலும் அதிற்
பெருமையுண்டோ வினிமேலும்
உரிமையுண்டோ வென்சாமி (வேல)

2 வெல்லுந் தெய்வங்களைப் போய்த் துதித்தாலும் வெகு
கூறுடன் மனதினில் மதித்தாலும் வினைக்
குறைதவிருமோ பொல்லா விறை தவறுமோ சாமி
(வேல)

3 நல்ல பொழில்கள் வளஞ் சூழும்குன்றை
மல்லல் மலையினிதம் வாழும் மயில்
வாகனனே வள்ளி மோகனனே யென்சாமி (வேல)

## 1398. நித்தம் நினைமனமே

பல்லவி

நித்தம் நினைமனமே குன்றைமலைக்
கர்த்தனிலங்கு பரிசுத்தனைச் சித்தனை (நித்தம்)

சரணங்கள்

1 வாசக் கமல மலர் வேதன் மலர்ச்
சீதக் களப முலை நாதன் பரவிய
சேவல னருளிய பாவலனைக் கண்டு (நித்தம்)

2 இந்திரன் முதலினோர் பணி ஞாலன் பூரண
சந்திர சடாதர ரருள் பாலன் குக
சாமி குருபர நேமி கிருபாகரனை (நித்தம்)

3 மாங்குயி லனுதினங் கூவும் உயர்
தேங்கமழ் மலர்ப்பொழில் மேவும் குன்றைச்
செகண்டி மலைவளர கண்ட பூரணனை நீ (நித்தம்)

## 1399. மதுரிதத் தமிழ்வாயா

பல்லவி

மதுரிதத் தமிழ்வாயா
சதுர்வித மறைபணி சற்குரு நாதா (மதுரிதத்)

சரணங்கள்

1 வாசமென் மலரணி வாகுயர் புயனே
நேச மிகுந்தகுற நேரிழை நயனே (மதுரிதத்)

2 வஞ்ச வசுரன்றனை மாய்த்திடு வேலா
நெஞ்ச மகிழவெனை ரட்சிக்குஞ் சீலா (மதுரிதத்)

3 குன்றுக்குடி மலைக்குக குருபரனே
நன்று யெந்தனை ரட்சிக்கு மரனே (மதுரிதத்)

## 1400. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே - கொன்றை
பூண்டவனர் மகனே (ஆண்ட)

சரணங்கள்

1 பீதாம்பரர் மகிழ் மருகா திவ்விய
வேதாந்தவர் பணி முருகா (ஆண்ட)

2 சூர சம் மார வடிவேலா நீப
ஆர பன்னிரு புயசீலா (ஆண்ட)

3 தோகை மலைக்குரு நாதா வெகு
ஓகை புனையுல்லாச நீதா (ஆண்ட)

## 1401. வருவாய் வருவாயய்யனே

பல்லவி

வருவாய் வருவாயய்யனே மலர்த்
திருவாழ் செகண்டிமலைச் சேயனே நாயனே (வருவாய்)

சரணங்கள்

1 அண்டர் முனிவர் பணிபாதா வன்பின்
றொண்டர் துதிபரவு நாதா (வருவாய்)

2 மன்றல் மிகுந்த மலர்நீபா வினி
நன்றருள் புரிகுவை பூபா (வருவாய்)

3 தோகை மலைக்குகனே வள்ளி
யோகைக் கிசைந்த சுகனே (வருவாய்)

## 1402. காத்தருள்வா யய்யனே

பல்லவி

காத்தருள்வா யய்யனே கடைக்கண்
பார்த்தருள்வாய் மெய்யனே (காத்தருள்)

அநுபல்லவி

வந்தருள்வா யய்யனே யனுபூதி
தந்தருள்வாய் மெய்யனே (காத்தருள்)

சரணங்கள்

1 ஆண்டவனே ஐயனே நீபம் பூண்டவனே மெய்யனே
(காத்த)

2 வேதவேதாந்த வையனே திவ்விய
நாத நாதாந்த மெய்யனே (காத்த)

3 ஈசனே குகனே ஐயனே குன்றை
வாசனே செகனே மெய்யனே (காத்த)

## 1403. பன்னிரு கரதலனே

பல்லவி

பன்னிரு கரதலனே யடியேற்கு
நன்னிதி யருள் குகனே (பன்னிரு)

சரணங்கள்

1 வாச மிகுந்த நீபா குறத்தி
நேச மிகுந்த பூபா (பன்னிரு)

2 பங்கய மலர்வேதா பணிபுரி
துங்க மிகுந்த பாதா (பன்னிரு)

3 குன்றுக்குடி வாசா வடியரை
நன்றுய்க் காக்கும் நேசா (பன்னிரு)

## 1404. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே
மஞ்சார் பொழிற்குன்றை மலைக்குகனிருக்க (அஞ்சாதே)

சரணங்கள்

1 வாதுபுரி சூரனை மாயத்திடு வேலன்
கோதுகிளி குறத்தி கூடிய லோலன்
குககுரு பரவறு முகசிவ னிருக்க (அஞ்சாதே)

2 தாதவிழ் மலர்நீபத் தாரணியும் புயன்
போதமரயன் பணி புனித மிகுந்தநயன்
பொருபடை வீரன் முருகைய னிருக்க (அஞ்சாதே)

3 வானவ ருலகினின் மருவியே நீளும்
தேனலர்ப் பொழில்வளஞ் செழித்துடன் வாழும்
செகண்டிமலையின் வளரகண்ட நாத னிருக்க (அஞ்சாதே)

## 1405. மயிலேறும் பெருமானே

பல்லவி

மயிலேறும் பெருமானே
தருமேவுங் குன்றை சண்முக நாதா (மயிலேறும்)

சரணங்கள்

1 வேதாந்த மயமாகி விளங்கிய சோதியே
நாதாந்த மயமாக நலம் பெறு நீதியே (மயிலேறும்)

2 ஞான மெய்ஞ்ஞானர் கணுடிய பொருளே
தேனலர் வேதர் தேடிய வருளே (மயிலேறும்)

3 சிகர மிலங்கிவளர் செகண்டி மலையின் வாசா
அகமகிழ் குறமயிற் கழகிய நேசா (மயிலேறும்)

## 1406. எனக்கொரு குறைவுண்டோ

பல்லவி

எனக்கொரு குறைவுண்டோ நல்ல
வனக்குற மயிலிதன் வாகனே நீயிருக்க (எனக்)

சரணங்கள்

1 மதுமல ராகிய மாலிகை மாரா
பதுமமென் மலரயன் பணிபத சீரா
பாலனே யுக்கிர வடிவேலனே நீயிருக்க (எனக்)

2 போர்புரி சூருயிர் புதைசெயும் வேலா
வார்புரி மடவியர் மகிழ்ந்திடு லோலா
மாயனே யருளிய நேயனே நீயிருக்க (எனக்)

3 வானுலவிய கனமலர்ப் பொழினீளும்
பானுலவிய குன்றைப் பருப்பதம் வாழும்
பாவலா கூவிய சேவலா நீயிருக்க (எனக்)

## 1407. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே – பணி
பூண்டவனே செகனே (ஆண்ட)

அநுபல்லவி

பாண்டவர் தமக்குத் தூது நடந்தவன்
காண்டற் கரிதாகிய கர்த்தனே முத்தனே (ஆண்ட)

சரணங்கள்

1 வாசவன் முதலிய தேவரும் பணி பாதா
மோசஞ் செயுஞ்சூரனை முடித்திடு நாதா (ஆண்ட)

2 தொண்டர்கள் முனிவர் துதித் திடுஞ் சீலா
வண்டணி மலர் நீப மாலையணியுங் கோலா (ஆண்ட)

3 மதிதவழ் மலர்ப்பொழில் வளர்சிகி மேரா
கதியுள மயிலேறு கனமிகு சூரா (ஆண்ட)

## 1408. எந்த விதத்திலு மெந்தனைக் காப்பாய்

பல்லவி

எந்த விதத்திலு மெந்தனைக் காப்பாய்
கந்த மலர்க்கிணை கண்ணிறைற் பார்ப்பாய் (எந்த)

சரணங்கள்

1 மன்மதபாணத்தால் மயங்காமல் பொல்லாத
துன்மதியான் மனந்தியங்காமல் (எந்த)

2 ஆசைக் கடலில்விழுந் தாழாமல் பெண்கள்
நேசத்தலைந்தலைந்து மாளாமல் (எந்த)

3 குன்றுக்குடி மலைநாதா வன்பரை
நன்றாய்க் காத்தருள் போதா (எந்த)

## 1409. வரதா வரதா

பல்லவி

வரதா வரதா ரட்சிப்பாய் கூரிய
திரவடி வேலவா குருபர குமரா (வரதா)

சரணங்கள்

1 மாது குறத்தி தோளா வடியவன்
மீது நலத்து வாழாய் (வரதா)

2 பாத பங்கய நாதா அருளிய
நாதவிங்கித போதா (வரதா)

3 குன்றையின் மலையய்யனே நலமிகு
நன்று யருயர் துய்யனே (வரதா)

## 1410. தாயே குருபரனே

பல்லவி

தாயே குருபரனே யருள் செய்குவாயே யரவரனே
(தாயே)

சரணங்கள்

1 சந்திரசடாதரனே முனிவோர்கள்
இந்திரன் முதலோர்க் கரனே (தாயே)

2 மதுரிதத் தமிழ் வாயா வெழுதரு
சதுர்விதத் திருநேயா (தாயே)

3 செகண்டிமலைத் துரையே
யடியேற்கு மகிழ்ந்துனருளை யுரையே (தாயே)

## 1411. கந்தனே குகனே

பல்லவி

கந்தனே குகனே ஞானசம் பந்தனே ஆறுமுகனே
(கந்தனே)

சரணங்கள்

1 அடம்புரி சூரனை வென்றவா விலகு
நடம்புரி மயிலி னின்றவா (கந்தனே)

2 வாச மலரின் ருளா குறத்தி
நேச மிகுந்த தோளா (கந்தனே)

3 செகண்டி மலையின் வந்தவா வடியேற்கு
மகிழ்த்து னருளைத் தந்தவா (கந்தனே

## 1412. அஞ்சேலென்றருள்வாய்

பல்லவி

அஞ்சேலென் றருள்வாய் ஐயனே (அஞ்சேல்)

அநுபல்லவி

மஞ்சார் பொழிற்குன்றை வருகுரு பரனே (அஞ்சேல்)

சரணங்கள்

1 மருவளர் மலர் நீபா வுயர்
திருமறை புகழ் தீபா (அஞ்சேல்)

2 வானவர்க் குயர் பவனே தவ
ஞானவர்க் குயர்சிவனே (அஞ்சேல்)

3 குன்றுக்குடி வாசனே நல்ல
நன்றூர் முருகேசனே (அஞ்சேல்)

## 1413. வருகுமரேசா

பல்லவி

வருகுமரேசா குன்றுக்குடிக் கொரு குமரேசா (வருகும)

சரணங்கள்

1 தொண்டர்கள் வினை தீர்க்க பன்னிரு
முண்டக மலர்பார்க்க (வருகும)

2 எந்தனை யாளவே யென்னுட
சிந்தனை சூழவே (வருகும)

3 சேவற் கொடி கூவவே யன்பர்
ஆவற் கிசைந்து மேவவே (வருகும)

## 1414. சங்கர சதாசிவனே

பல்லவி

சங்கர சதாசிவனே, கரிய
மங்குலவு குன்றைமலை வாசனே, குகேசனே (சங்கர)

சரணங்கள்

1 வீரவடி வேலனே யாரமணி லோலனே (சங்கர)

2 வானவர் சகாயனே ஞானவர் நன்னேயனே (சங்கர)

3 சுகஞ்செயு நாதனே செகண்டிமலை நீதனே (சங்கர)

## 1415. தந்தருள்வாயே

பல்லவி

தந்தருள்வாயே – மயின்மீது
வந்தருள்நீயே (தந்தருள்)

சரணங்கள்

1 ஆரணப் பொருளே மூலகாரணத் தெருளோ (தந்தருள்)

2 கானக மயிலே மேவிய வானக வொயிலே (தந்தருள்)

3 தோகையின் மலையா யனவரத சினேக நற்கலையா
(தந்தருள்)

## 1416. ஆள வேணுமையனே

பல்லவி

ஆள வேணுமையனே - குன்றையில்
வாழ வேணு மென்று வருகுரு பரனே (ஆள)

சரணங்கள்

1 திந்தா வென்றுடிய செகண்டி மயிலிலேறி
வந்தாதரத்துடன் வரமது மீறி
சிந்தாகுலந் தீரச் செய்யும் விரதனே
பிந்தாத பூசை விழாப் பிரபல விரதனே (ஆள)

2. நாளுக்கு நாளாக நாடாத தேதுக்கு
வாளுக்கை யமனவன் வருவானே வாதுக்கு
பாழுக்கு எனதுயிர் பதைக்குதே நொந்து
ஆளுக் காளாயிருக்க வையனே வந்து (ஆள)

3 வேதாகமம் புகழ் மேலான பாதனே
வாதாடு சூரனை வதைக்கும் பிரக்கியாதனே
போதார் பொழிற்குன்றைப் பொருப்பில் வளருங்கந்தா
நாதா திருக்காழி ஞானசம் பந்தா (ஆள)

## 1417. நாதனே யெனையாளாய்

பல்லவி

நாதனே யெனையாளாய் - மலர்ப்
போதனே பணியும் புரவலனே யருள் சரவணனே குக
(நாதனே)

சரணங்கள்

1 மாதவ முனிவரர் துதிதாளா வெகு
காதலுடன் குறத்தி புணர்தோளா நாளும்
கருணை யிலகிவளர் குருபர வருள்குக (நாதனே)

2 சகல சாம்பிராச்சிய மிகுலோலனே நாளுஞ்
சுகசுபமிகு நயகோலனே அன்பர்
துதிபர வியகன கதிமயில் வருகுக (நர்தனே)

3 மஞ்சடர் பொழிலுறை சிகிமேரா வெதிர்
வஞ்சக சூரனை வெல்லுஞ் செயவீரா வுயர்
மதுரித தமிழ் புகழ் சதுமறை யவகுக (நாதனே)

## 1418. குறத்தி பங்காளா

பல்லவி

குறத்தி பங்காளா அறக் கடவுளே யெனையாளாய் (குறத்தி)

சரணங்கள்

1 வஞ்சவசுரனுடல் பிஞ்சிட எதிரிட்டு
மிஞ்சிய கூர்வேலை யஞ்சிட வெயுநாதா (குறத்தி)

2 துட்டஞ்செய் கெடுநோயை நட்ட மதாய் விழக்
கட்டளை யிடவேணும் அட்டலட்சுமி வாசா (குறத்தி)

3 அகண்ட பூரண செகண்டிமலை வாசா
சுகந்த மணிமார்பா செகம்புகழ் நாதா (குறத்தி)

## 1419. வருகுமரேசா

பல்லவி

வருகுமரேசா திருமறை புகழ்தரு
செகண்டி மலையின் மீது (வருகும)

சரணங்கள்

1 கங்கை தரித்த சடைநாதன் நாளுஞ்
சங்கையில் லாதவருட் போதன் அருளிய
நற்பரனுகவே யற்புத மாகவே (வருகும)

2 ஞானவர் மகிழ்வுடன் தேட மகா
வானவர் மணிமுடி சூட ரூப
வள்ளியுடனே மீறி புள்ளி மயிலிலேறி (வருகும)

3 வாது புரியுஞ் சூரை மாய்த்து முன்னே
மோது படையை விழத்தேய்த்து வென்ற
முத்தனே யன்பர்க்கு நித்தனே தென்பாக (வருகும)

## 1420. சண்முக குகனே

பல்லவி

சண்முக குகனே யுயர்
விண்முக முடிதவழ் தண்சிகி மலையாய் (சண்முக)

சரணங்கள்

1 வாது புரியுஞ் சூரை மாய்த்தவனே யிரு
சூதுமுலை வள்ளிக்கு வாய்த்தவனே
பச்சைத் தோகையனே வெற்றி வாகையனே சாமி
(சண்முக)

2 பன்னிரு கையிற் படை படைத்திடு தவனே மயிலை
யுன்னிய பொற்குடமுடைத்தவனே நய
முற்றவனே யுமை பெற்றவனே சாமி (சண்முக)

3 மாமலர்ப் பொழில்வளஞ் சூழும் குளிர்
தாமரைச் சுனை நலம் வாழும் குன்றை
தழைத்தவனே கருணை விளைத்தவனே சாமி (சண்முக)

## 1421. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா குன்றை வரைக்குமரேசா (துரைக்)

சரணங்கள்

1 சரண பங்கயனே நீபா பரண செங்கையனே (துரைக்)

2 வள்ளி மணாளா பன்னிரு தெள்ளிய தோளா (துரைக்)

3 மயின் மலைநிதியே யடியவர் ஒயிலுள துதியே (துரைக்)

## 1422. வருத்த மெனக்குத் தவிராய்

பல்லவி

வருத்த மெனக்குத் தவிராய் – யினி
யொருத்தர் துணையு மில்லை (வருத்த)

சரணங்கள்

1 பஞ்சமா பாதகத்தைத் தீர்த்து பொல்லா
நெஞ்ச வியாகுலத்தைப் பார்த்து அத்றகு
நின்னருள் புரிந்து முன்னமே வந்து (வருத்த)

2 அடியவர் தங்களுக்கு வந்த வினை
முடிய வனுக்கிரகம் புரிந்த
யார்க்கு மூத்தவனே பன்னிரு நேத்திரனே குகனே
(வருத்த)

3 மாமலர்ச் சோலை கணீடும் வானோர்
தாமரைக் கடவுளுந்தேடும்
குன்னறத் தண்மலை வாசா சண்முக நாதா (வருத்த)

## 1423. மனதிரங்க வில்லையா

பல்லவி

மனதிரங்க வில்லையா – நாளுங்
கனகமுடி செகண்டிக் கர்த்தனே சாமி (மனதிரங்க)

சரணங்கள்

1 வாதுக்கு வருசூரனை வெகு சூதுக்குள் மிகுவீரனை
வென்ற
துலங்கிய வேலா விலங்கிய கோலா (மனதிரங்க)

2 பன்னிரு கரதலனே யாறு நன்னிய மிகுதலனே யருள்
ரஞ்சிதனே யெனக்குத் தஞ்சம் வேறில்லை யுன்
(மனதிரங்க)

3 சோலை மிகுந்து சூழும் இனியதி னுலு முனிவர் வாழும்
குன்றையி னுயகனே யெனக்குத் தாயகனே யுந்தன்
(மனதிரங்க)

## 1424. சூர சங்கார மூர்த்தியே

பல்லவி

சூர சங்கார மூர்த்தியே
காரங்கிலங்கு குன்றைக் கருத்தனே யொருத்தனே
(சூர சங்)

சரணங்கள்

1 அண்டர்கள் பணிபாதனே நல்ல
தொண்டர்கள் பணிநாதனே (சூர சங்)

2 வடிவேலேற் குங்கரனே மலைக்
குடிவாழ் குறத்தி தரனே (சூர சங்)

3 குன்ருக்குடி வாசனே யன்பரை
நன்ருய்க் காக்கின்ற நேசனே (சூர சங்)

## 1425. கருத்து வைத்தாள வேணும்

பல்லவி

கருத்து வைத்தாள வேணும்
திருச்சிகிமலை வாழுஞ் சிவனே சிவனே (கருத்து)

சரணங்கள்

1 பாத பங்கய நாதா ஆதரஞ் செய்வை நீதா (கருத்து)
2 அண்டருக் கரியவனே தொண்டருக் குரியவனே (கருத்து)
3 குன்றையின் வாசனே நன்றரு ளீசனே (கருத்து)

## 1426. அருடர வேணும்

பல்லவி

அருடரவேணும் இகத்துக்குப் பொருடர வேணும் (அருடர)

சரணங்கள்

1 சரவண பவனே யரகர சிவனே (அருடர)
2 சண்முக நாதா பண்முக வேதா (அருடர)
3 மயின்மலை வாசா வொயிலுள்ள வீசா (அருடர)

## 1427. தரிசனந் தரவேணும்

பல்லவி

தரிசனந் தரவேணும் கரிசனத்துடனன்பர் கண்களிகூரவே (தரிசனந்)

சரணங்கள்

1 ஆண்டவனே குகனே பணி பூண்டவனார் மகனே (தரிசனந்)
2 கடம்பணியும் புயனே மயிலி னடம் புரியு நயனே (தரிசனந்)
3 தோகையங்கிரி வாசனே வெற்றி வாகையம்புய வீசனே (தரிசனந்)

## 1428. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் அருள
உத்தமனே குன்றைக் கொருத்தனே கருத்தனே (சித்தந்)

சரணங்கள்

1 பங்கய மாமலர் வேதா பணி
துங்கமிகு மலர்ப்பாதா (சித்தந்)
2 காவரசன் றிருமருகா வெனே
யாவலுடன் காக்கு முருகா (சித்தந்)
3 மயின்மலே வருமய்யனே வெகு
ஒயிலுள பூதி மெய்யனே (சித்தந்)

## 1429. பத்தனே யாளுமையா

பல்லவி

பத்தனே யாளுமையா
சித்தர்கள்பணி குன்றைத் தேவனே தேவனே (பத்தனே)

சரணங்கள்

1 பஞ்சமா பாதகந் தீர்த்தும் பொல்லா
வஞ்சவினே தீரப் பார்த்தும் (பத்தனே)
2 பாபத்தைப் போக்கிக் கோபத்தை நீக்கி
மயின்மலே வாசா குயின்மொழி யீசா (பத்தனே)

## 1430. வருவா யய்யனே

பல்லவி

வருவா யய்யனே மலர்த்திருவாழ் செகண்டிமலேத்
தேவனே தேவனே (வருவாய்)

சரணங்கள்

1 பன்னிரு கையின் வேலா வெனக்கு நன்னிதி யருள்சீலா (வருவாய்)
2 தாதவிழ் மலர்நீபா வெதிர் வாதுசெய் சூர்கோபா (வருவாய்)
3 மகிழ்ந்தருள் புரிநாதா வுயர் செகண்டி மலேயின் நீதா (வருவாய்)

## 1431. காக்க வேணுமையா

பல்லவி

காக்க வேணுமையா
கடைக்கண்ணுற் பார்க்க வேணுமையா (காக்க)

சரணங்கள்

1 வாசக் கடம்பா குகா வள்ளி
நேசக் கணவா சண்முகா (காக்க)

2 பூதியணியு மெய்யனே
திருமேனிச் சோதிபனே துய்யனே (காக்க)

3 மண்டிய பொழில் சூழும் முடிசேர் செ
கண்டியாய் தாளும் (காக்க)

## 1432. மதுரிதத் தமிழ்வாயா

பல்லவி

மதுரிதத் தமிழ்வாயா
சதுர்விதத் திருமறை தழைக்குஞ் செகண்டி மேரா
(மதுரிதத்)

சரணங்கள்

1 ஆண்டவனே யென்று வேண்டின பேர்களை
பூண்டருள் செயுமெங்கு நீண்டவனே சாமி (மதுரிதத்)

2 தாதவிழ் மலர்நிகர் பாத பங்கயமதை
ஆதரமெனப் பணி வேதர் சகாயனே (மதுரிதத்)

3 அகண்ட பரிபூரண செகண்டிமலை முருகா
மகிழ்ந்தருள் செய்குவை சுகந்த மலரினீபா (மதுரிதத்)

## 1433. உன்னை நம்பினேன்

பல்லவி

உன்னை நம்பினேன் சாமி (உன்னை)

அநுபல்லவி

பின்னை வேறில்லை யாளன்னை நீயென்று (உன்னை)

சரணம்

பன்னிரு கையா பூதி மின்னிய மெய்யா
கந்தனே குகனே ஞானசம் பந்தனே செகனே
அண்டர் நாதனே முடிச்செகண்டி நீதனே (உன்னை)

## குன்றக்குடியார் கீர்த்தனைகள்

### 1. உன்னை நம்பினேன்

பல்லவி

உன்னை நம்பினேன்—சாமி (உன்னை)

அநுபல்லவி

பின்னை வேறில்லை யாளன்னை நீயென்று (உன்னை)

சரணம்

பன்னிருகையா - பூதி மின்னிய மெய்யா
கந்தனே குகனே - ஞானசம்
பந்தனே சகனே
அண்டர் நாதனே - முடிச்சி
கண்டி நீ தனே. (உன்னை)

### 2. எப்படியோ

பல்லவி

எப்படியோ – அறியேன் (எப்படியோ)

அநுபல்லவி

மைப்படியுங் கருங்கண்ணி வள்ளிமணாள செயல்
(எப்படியோ)

சரணம்

1 வேதாந்த மயமாய் நாதாந்த வடிவாய்
விளங்கிய நாதன் – அன்பர்கள் அங்கபிரகாசன் செயல்
(எப்படியோ)

2 நிறையான செகபரம்
பரையாய் நிறைந்தருளு
நித்திய கல்யாண வித்தகனார் செயல் (எப்படியோ)

3 நின்ருடிய பொழில்
குன்ருக்குடி வளர் நிர்மலப் பிரபல தன் மயனார் செயல்
(எப்படியோ)

## 3. தயையுடனெனை

பல்லவி

தயையுடனெனை யாளாய்
நயமிகுந்த குன்றை நாதனே நீதனே (தயையுடன்)

சரணங்கள்

1 அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் பணிபாத பாத
(தயையுடன்)
2 தேனலர் திருப்புயா – மானவேல் கரதலா (தயையுடன்)
3 வள்ளி மனோகரா – புள்ளி மயில் வேலா (தயையுடன்)

## 4. தீவினை

பல்லவி

தீவினை தீராயோ –
காவினைப் படைத்த செகண்டியின் மலை நாதா (தீவினை)

அநுபல்லவி

தீராத துன்பமெல்லாந் தீர்த்து அலங்கார
எனைக் கடைக்கண்ணால் பார்த்து (தீவினை)

சரணம்

என்றன் பிணிகளை நைத்து வென்று
உன்றன் மனதி லாசை வைத்து
மைந்தன் இவன் நம் மகனென்றெண்ணி உன்றன்
சிந்தை மகிழ்ந்து நயம் பண்ணி (தீவினை)

## 5. பாதத்தை

பல்லவி

பாதத்தை தரிசிப்பாய் மனமே –
பாதத்தை தரிசிப்பாய் மனமே

அநுபல்லவி

மேத்தர் பணிகுன்றை விமலன் அமலன் அரன் (பாதத்தை)

சரணம்

1 பத்தர்கள் நினைத்தபடி வரமுதவிய கர்த்தன்
அயில்ணியுங் கையன் மெய்யன் அரன் (பாதத்தை)

2 அடியவர் தங்களை ஆதரித்தவர்கள்
குடிதனைக் காக்குங் குமரன் அமரன் அரன் (பாதத்தை)

3 அஞ்சாதே யென்று ஆதரித் தாண்டருள்
மஞ்சார் குன்றை மலைவந்த கந்தன் அரன் (பாதத்தை)

## 6. என்னைக் காக்க

பல்லவி

என்றனைக் காக்க வேணும்
உன்றனை நினைத்து உண்மையாய் நினைக்கின்ற
(என்றனை)

சரணம்

1 பன்னிரு கரதலா – உன்னிரு தாள் பணி (என்றனை)

2 பந்தனையுடனே உந்தனைப் பணியும் (என்றனை)

3 அகண்ட பரிபூரண சிகண்டி மலையின் வாசா (என்றனை)

## 7. அருள் தரவேணும்

பல்லவி

அருள்தர வேணும் – எனக்கு வேண்டிய (அருள்)

அநுபல்லவி

பொருள்தரவேணும் திருமறை புகழ்
சிகண்டி மலையின் வாசா (அருள்)

சரணங்கள்

1 பக்தர்கள் முனிவர்கள் – சித்தர்கள் பணிபாத
உத்த மனே – கன வித்தகனே சாமி (அருள்)

2 முன்னிய அடியவர்தம் இருவினை தீர்க்கும்
பொன்னிகர் வேலணிப் பன்னிருகரதலா (அருள்)

3 பாகைநிகர் மொழியாய் – ஓகைமிகு உல்லாசா
வாகைபுனையுந் தோளா – தோகை மலையின் வாசா
(அருள்)

## 8. கந்தனே அருள்வாய்

பல்லவி

கந்தனே அருள்வாய் – ஞானசம்
பந்தனே அருள்வாய் (கந்தனே)

அநுபல்லவி

வேலனே அருள்வாய் – உமை
பாலனே அருள்வாய் (கந்தனே)

சரணம்

ஐயனே அருள்வாய் – பூதி
மெய்யனே அருள்வாய்
நாதனே அருள்வாய் – குன்றை
நீதனே அருள்வாய் (கந்தனே)

## 9. அருமறைநாதா

பல்லவி

அருமறைநாதா – திருமலர்ப் பாதா (அரு)

அநுபல்லவி

கடம்பணி ஒயிலா – நடம்புரி மயிலா (அரு)

சரணம்

திருமருகேசா – வருணமுருகேசா
அகண்டித நிலையா – சிகண்டியின் மலையா (அரு)

## 10. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் – பன்னிரு
கையனே எனையாளாய் (ஐயனே)

அநுபல்லவி

ஆடியசிறை மயிலா – குறத்தி
கூடியே மகிழ் ஒயிலா (ஐயனே)

சரணம்

அண்டர்கள் பணிபாதா – நாதா
தொண்டர்கள் பணிபாதா
திங்களணியு மீசா – குன்றைத்
துங்கமலை வாசா (ஐயனே)

## 11. முருகா

பல்லவி

முருகா முருகா முருகா – மாயன்
மருகா மருகா மருகா (முருகா)

அநுபல்லவி

ஐயா ஐயா ஐயா – பன்னிரு
கையா கையா கையா (முருகா)

சரணம்

வேலா வேலா வேலா – மாதுமை
பாலா பாலா பாலா
கலையா கலையா கலையா – குன்றையின்
மலையா மலையா மலையா (முருகா)

## 12. காத்தருள்

பல்லவி

காத்தருள வேணு மையா – உன்றன் கடைக்கண்
பார்த்தருள வேணு மையா (காத்தருள்)

அநுபல்லவி

தீவினை தனைத்தீர்த்து – ரஸ
பூவினை நிகர்ப் பாதஞ் சேர்த்துக் காத்தருள் (காத்தருள)

சரணம்

ஆசையாயுன் பாதம் பூண்டு – வாழுறேன்
நேசமாகவே யன்புகூர்ந்து
குன்றக்குடிவாசா – அருள்
நன்ருகிய முருகேசா (காத்தருள்)

## 13. எண்ணமெப்படியோ

பல்லவி

எண்ண மெப்படியோ அறியேன் –
எண்ண மெப்படியோ எண்ணமே (எண்ணமெப்படி)

அநுபல்லவி

சிகண்டிமலைக் குமரேசன்
ஆறுமுகக் கடவுளிலங்கு – கூறுபடைக் காத்தான்
(எண்ணமெப்படி)

பங்கய மாம லரோன் பரவு – சங்கரனுர் புதல்வன் ;
தோகைக் கிரிவாசன் வெற்றிவாகைக் கிசைதாளன்
(எண்ணமெப்படி)

## 14. கருத்துக்கிசைந்த

பல்லவி

கருத்துக்கிசைந்தபடி யருள்வாய் – குன்றைப்
பொருப்பிலுறைங் கந்தா புண்ணியா என்சாமி (கருத்துக்)

அநுபல்லவி

அருமறை துதிசெயும் பாதா – அன்பர்க் –
கிருவினை தவிர்த்திடு நீதா (கருத்துக்)

சரணம்

நாச அவுணரை வெல் வேலா – எங்கள்
ஈசர்க்குரிய சொற் பா லா,
குன்றைமலைக்குகந்தபரனே ;
ஏனென்று காத்தருள்செயும் – பரனே (கருத்து)

## 15. மனம் வரவில்லையா

பல்லவி

மனம் வரவில்லையா – கனமிகு குன்றை
மலைக்கர்த்தனே முத்தனே (மனம்)

அநுபல்லவி

ஆண்டவனே – சாமி – நீபம் – பூண்டவனேசாமி (மனம்)

சரணம்

அரகரா – சிவசிவா – பன்னிரு
கரதலா சிவசிவா
அடியர்துதிக்கும்பாதா – குன்றுக்
குடியில மரு நாதா (மனம்)

## 16. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் – பன்னிரு
கையனே யெனையாளாய் (ஐயனே)

அனுபல்லவி

ஆறுமுகக் கடவுள் என்று
வேறுமுகமில்லேஐயா (ஐயனே)

சரணம்

கங்கையணியவோர் பாலா – குற
மங்கை மருவும் லோலா
குன்றுக்குடிவாசா – எனே
நன்ருய்க்காக்கு மீசா (ஐயனே)

## 17. எனேயாள வேணுமையா

பல்லவி

எனேயாள வேணுமையா – மணி
மலர்ப்பொழிற்குன்றைப் பரனே யரனே – (எனேயாள)

அநுபல்லவி

வேதப்பொருளாய் விளங்கியநாதா – போதப்
பொருளா(ய்) அப்பொருளாய்ப் பொருந்திய நீதா (எனே)

சரணம்

அந்தர வடிவமாகிய பொருளே 4
சுந்தரமயமாய்த்துலங்கிய பொருளே –
குன்ருக்குடியிற் குலவிய குமரா – நின்ருட்(கு)
அன்பரை ரட்சிக்கு(ம்) அமரா (எனேயாள)

## 18. வருவாய்

பல்லவி

வருவாய் வருவாய் ஐயனே – திருவாருங்
குன்றைமலேத் தேவனே தேவனே (வருவாய்)

அநுபல்லவி

அருமறை புகழ் பாதனே – வேதனே
குருபர குக நாதனே (வருவாய்)

சரணம்

சக்கர பாணி மருகா – மஞ்சா
அக்கர ருள முருகா
பன்னிரு கரதலனே – குன்றை
இந்நில வருமறுந்தலனே (வருவாய்)

## 19. சித்தந் திருப்பாயோ

பல்லவி

சித்தந் திரும்பாயோ – உன்றன்
சித்தந் திரும்பாயோ (சித்தம்)

அநுபல்லவி

கர்த்தனே குன்றைமலை வித்தனே யுன்றன் (சித்தம்)

சரணம்

அன்பர்கள் தேடிய சரணு – நாளு
மின்புறு நீபா பரணு
வள்ளிதெய் வானை தன் லோலா – நாளும்
புள்ளிமயி லேறிய கோலா
மேலானவநுக்கிரத் தருவே – நாளு(ம்)
நாலான மறைபுகழ் குருவே (சித்தம்)

## 20. ஏதினுல் தயையில்லை

பல்லவி

ஏதினுல் தயையில்லை – மோதுபொழிக்குன்றை
முருகா முருகா (ஏதினுல்)

அநுபல்லவி

கானக மாது மேவு புயனே – நாளு
வானவர் பணிசெயு நயனே (ஏதினுல்)

சரணம்

மாயவனுர்மகிழ் மருகா – உமை
நாயகி யாரருள் முருகா முருகா
மதுமலர் மாலிகாபரணு – குன்றை
சதுர் மறை புகழ் மலர்ச் சரணு (ஏதினுல்)

## 21. ஆதாரஞ் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்யவேணும் –
போதாரும் பொழிற்குன்றைப் புண்ணியா
புண்ணியா எனக்கு (ஆதாரம்)

அநுபல்லவி

மங்கை யுமையாள் பாலா – வள்ளி
செங்கை பிடிக்கும் லோலா (ஆதாரம்)

சரணம்

ஆதி பரா பரனே – மனு
நீதி மிகுந்த தரனே
தோகைக்கிரியின் வாசா – அன்பர்
போகைக்கிசைந்த ஈசா ஆதாரம்

## 22. ஏது குற்றமிருந்தாலும்

பல்லவி

ஏது குற்றமிருந்தாலும் சாமி யிப் –
போது தயையுடன் வாராய் ஏது

அநுபல்லவி

காதலிக் குறத்தி மணவாளா – நீபச்
சீதமலர் தணையணி தோளா (ஏது குற்றம்)

சரணம்

ஆதி பராபரமயமே – வெகு
சோதியாய் விளங்கு நயமே
தங்கவொளிவாள் பிரகாசனே – குன்றைத்
துங்க மலைதன்னில் வாசனே (ஏது குற்றம்)

## 23. ஆண்டவனை நினைமனமே

பல்லவி

ஆண்டவனை நினைமனமே – நீபம்
பூண்டவனைக்குன்றைப் புண்ணியனையென் சாமியை
(ஆண்டவனை)

அநுபல்லவி

காரண காரியங்கடந்து நின்றானைப்
பூரணனைத் திரிபுரத்தை வென்றானை (ஆண்டவனை)

சரணம்

ஆனதெல்லாங் கொடுத்தா தரிப்போனே – வேனே
கான மயிலில்வந்துகதிதரு
குன்றைமலையில் வாழுங்குககுருபரனே – கரனே
வென்றியுள அயில் வேலணி (ஆண்டவனே)

## 24. கருணாநிதியே

பல்லவி

கருணா நிதியே – தருவாழ் குன்றைமலைச்
சண்முகநாதா (கருணா)

அநுபல்லவி

பொல்லாத தீவினைதீர – நல
மெல்லாம் வர வந்து சேர – யருளீசனே
பிரகாசனே சாமி (கருணா)

சரணம்

சூர சங்கார மூர்த்தியே – நய
சார இங்கித சீர்த்தியே – யருள் –
சங்கரனே மலர்ப்பங்கய பாதனே
பதுமாசனன் பணிசரணா – நீபப்
புது மாமல ராபரணா – குன்றைப்
புண்ணியனே சுப்பிரமண்ணியனே சாமி (கருணா)

## 25. உக்கிர வடி வேலனே

பல்லவி

உக்கிர வடி வேலனே கோலனே –
சக்கர வுலகம் பரவு சுர பரனே விற்பனனே (உக்கிர)

அநுபல்லவி

அடியனைக் காத்து ரட்சித் தாண்டருள்பவனே – கடியார்
மலரின் பங்கமு மழபுயனே (உக்கிர)

சரணம்

வானவர் தங்களை வதைத் தெதிர்நின்ற
தானவ குலங்களைத் தகர்த்திடுகின்ற
சொன்னமுடிக்குன்றை துலங்கியநாதா –
வன்ன மயிலேறி வந்திடு நீதா (உக்கிர)

## 26. ஆண்டவனே

பல்லவி

ஆண்டவனே குகனே – முடி
பூண்டசிகர மலைப் புண்ணியனேயெனை (ஆண்டவனே)

அநுபல்லவி

பன்னிருகரதலனே – சாமி
என்னிரு வினைத்தீர்த்து என்றனை நாளும் (ஆண்டவனே)

சரணம்

வண்ண வடிவேல வா – சாமி
எண்ணியபடி யருள் இங்கிதனே நாளும்
அகண்ட பூரணனே – சாமி
சிகண்டிமலை முருகா தேவர்கள் தேவா நாளும்
(ஆண்டவனே)

## 27. மனம் வரவில்லையா

பல்லவி

மனம் வரவில்லையா
கனகமுடிச் சிகண்டிக்கர்த்தனே யுன்றன் (மனம்)

அநுபல்லவி

அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் பணிபாதா
வண்டலர் அயனன் பாய்த் தண்டஞ்செய்
குருநாதா (மனம்)

சரணம்

1 மீறிய சூரருடல் கீறியகூர் வேலா –
ஆறிரு கரதலா தேறிய மயில் மேலா. (மனம்)
2 நின்றிசைப் பொழில் வளர் குன்றையின் மலையாளா
மன்றளிகொள் நீப மாலை வென்றிமாலையின்றுளாளா
(மனம்)

## 28. நினைப்பதே

பல்லவி

நினைப்பதே போதும் – மனமே (நினைப்பதே)

அநுபல்லவி

யனைத்துலகும் புகழ்குன்றை மாமலையின் ஆண்டவனை
மயில் தாண்டவனை நாளும் (நினைப்பதே)

சரணம்

1 பன்னிரு கரதலந்தன்னிலணி வேலர்பதம் – குகா
அற்புத முருகனை (நினைப்பதே)

2 வானவர் முனிவர்கள் தானவர் பணிசெயும்
வாசனையரு குமரேசனை முருகனை (நினைப்பதே)

3 பொன்சிகரி முடித்தெனசிகிமலை வரு புண்ணியனை
சுப்பிரமண்ணியனை நாளும் (நினைப்பதே)

## 29. எனைக்காக்க வேணும்

பல்லவி

எனைக்காக்க வேணும் – தனைக்காத்த (எனைக்காக்க)

அநுபல்லவி

அன்பர்கள் தனைக்காக்குங் குருநாதா (எனைக்காக்க)

சரணம்

1 வஞ்சக வினைதீர்த்து நெஞ்சகமயல் தீர்த்து
(எனைக்காக்க)

2 மாயை தீர்த்து நோயையுந் தீர்த்து (எனைக்காக்க)

3 குன்றையின் மலைவந்த நன்றருள் புரிகந்த
(எனைக்காக்க)

## 30. ஆறுமுகச்சிவனே

பல்லவி

ஆறுமுகச்சிவனே – எனக்கு வேறுமுகமில்லை ஐயா
(ஆறுமுக)

அநுபல்லவி

வாதுசெய்சூரனை மோதுபடையைவென்ற –
வாலவடிவேலா கோலமயில் முருகா (ஆறுமுக)

சரணம்

கானக்குறத்திதனைத் தாடைவியுடலுடல் சேரும் —
கர்த்தனேயருளிய வித்தகனே
மோது பொழிலின்குன்றை மீதுவளருதிரு —
புண்ணியனே சுப்பிரமண்ணியனே சாமி (ஆறுமுக)

## 31. மாயாவதாரனே

பல்லவி

மாயாவதாரனே — குன்றைச்
சேயா சிகாவல னே (மாயா)

அநுபல்லவி

ஐயா குருபரனே — பூதி
மெய்யா கருணாகரனே (மாயா)

சரணம்

தேவ சேனுபதியே — யன்பர்
காவல் கொளும் தயா நிதியே
வைய்கம் பணிபாதனே — வெகுதுய்யனே குன்றையின்
நாதனே (மாயாவ)

## 32. சாமிசித்தமெப்படியோ

பல்லவி

சாமிசித்தமெப்படியோ — (சாமி)

அநுபல்லவி

பூமிபுகழ் குன்றைமலை புண்ணியனென்கந்த (சாமி)

சரணம்

வந்தனைப் புரியும் எந்தனைக் காக்கப்
பூசனைப் புரிந்திடுந் தாசனைக் காக்க
நித்தமுனை ஏத்திடும் மத்தனைக் காக்க
என்புருகத் துதிக்கும் அன்பனைக் காக்க
குன்றையில் வாழும் நின்றருள் கந்த (சாமி)

## 33. கடைக்கண்

பல்லவி

கடைக்கண் சற்றே பாரையனே — படைக்
கதிரின்வேலைத் தரித்தப்பன்னிருகையனே
என்னிருவினைதீர்க்க (கடைக்கண்)

அநுபல்லவி

ஆண்டவனேயென்று வேண்டியனுதினம்
அடுத்தபேருக்குக் கொடுத்துரட்சிக்கக் (கடைக்கண்)

சரணம்

1 பங்கயமாமலர் துங்க சரணனே
பார்த்து அன்பரைக் காத்துரட்சிக்க (கடைக்கண்)

2 நின்றுமலர்ப் பொழில் மன்றல்மலருக —
நீடுசிகிமலேக் காடுவளர் குகா (கடைக்கண்)

## 34. ஏனையா

பல்லவி

ஏனையா வாதை – நானையா உன்றன்
பாதமலரை நம்பியிருக்கின்ற அன்பன்றனக்கு (ஏனையா)

அநுபல்லவி

கந்தனேயென்று உந்தனை நாளும்
சிந்தனை செயு(ம்) மந்தனுக்கினி (ஏனையா)

சரணம்

சித்தனே யென்று நித்தமுந் துதிக்கும்
மெத்தவு முந்தன் பத்தன்றனக்கு
மின்னல் முடிச் செருனனிவளருரு நன்னிதிக்குன்றை -
வன்ன வேலவா (கந்த)

## 35. மனமே

பல்லவி

மனதே பயப்படாதே –
கனகமுடிச் சிகண்டிகர்த்தன் இருக்கிறன் (மனதே)

அநுபல்லவி

மேட்டிமையாங் குறச் சீமாட்டியை மருவிய
வித்தகன் – முத்தையன் இருக்கிறன் (மனதே)

சரணம்

1 எதிர்க்குஞ்சூரன் பயந்திடவென்று
எத்திசையும் புகழ் முத்தையன் இருக்கிறன் (மனதே)

2. நின்றுலாவிய பொழிற்குன்றையின் மலைவரு
நித்தன் மயிலேறி
மகிழும் முத்தையன் இருக்கிறான் (மனசே)

## 36. ஆதரிக்க

பல்லவி

ஆதரிக்க வேணும் – பூதலம்புகழ் குன்றைமலைக்குகா (ஆதரி)

அநுபல்லவி

பன்னிருகையனே – என்னிருவினை தீர்த்து (ஆதரி)

சரணம்

பங்கயமாகிய கொங்கலர் பாதனே –
மன்றல் மலர்ப்பொழில் குன்றையின் மலைநாதா (ஆதரி)

## 37. செய்ய வேணுமையனே

பல்லவி

செய்ய வேணுமைய்யனே –
வையம் புகழ்குன்றை மலைக்குமரேசனே – (செய்ய)

சரணம்

1 பாடிய புலவன் நாடிய படியே (செய்ய)
2 உன்றனைப் போற்றிய என்றனுக்கானதைச் (செய்ய)
3 சிகண்டி மாமலை யகண்டபூரணா (செய்ய)

## 38. முருகா

பல்லவி

முருகா எனையாளாய் – திருமால் மருகேசா
சிகண்டிமலையின் நாதா (முருகா)

அநுபல்லவி

கங்கை யணிவோர் பாலா – மலர்ச்
செங்கை யணியும் வேலா (முருகா)

சரணம்

தானவர் குல காலா – அந்த
வானவர் பணி சீலா (முருகா)

சிகண்டிமலையின் நாதா ;— எங்கும்
அகண்ட பூரண நீதா (முருகா)

## 39. ஆண்டவனே

பல்லவி

ஆண்டவனே குகனே — பணி
பூண்டவனார் மகனே (ஆண்டவனே)

அநுபல்லவி

வள்ளி தெய்வானை லோலா — நடனப்
புள்ளி மயிலின் மேலா (ஆண்டவனே)

சரணம்

கனகத்தண்டைக் காலா — நாளும்
வனசமலர்க்கை வேலா
குன்றை மலையின் வாசா — அன்பர்க்கு
என்றும் அருள்செய்நேசா (ஆண்டவனே)

## 40. ஆரிருக்கிறார்

பல்லவி

ஆரிருக்கிறார் ஐயனே —
சீர்திருக்குன்றை வளர் தேவனே சாமி (ஆரிருக்கிறார்)

அநுபல்லவி

உன்றனை நாளும் சாமி 4
வந்தனைப் புரியும் — கந்தனே குகனேயினி —
யெந்தனையாள (ஆரிருக்கிறார்)

சரணம்

1 வார்த்த பூண்முலைக்குற — நேர்த்தி மாதினையே
மார்த்து மேவுவாயெனைக் — காத்து ரட்சிக்க
(ஆரிருக்கிறார்)

2 மன்றல் மலர்ப்பொழில் — வளர் — குன்றை மாமலை
நின்ற பாதனே எனக்கு நன்மை செய்யவே

## 41. அஞ்ச வேண்டாம்

பல்லவி

அஞ்ச வேண்டாம் மனமே — மஞ்சுகுலவுகுன்றைமலைக்
குமரேசனே (அஞ்ச)

சரணங்கள்

1 கனகதண்டையணிக் காலன் – அன்பர்
மனதுங் கந்த சீலன் – குற –
மாது பங்கன் நீபப் பேதனிருக்க (அஞ்ச)
2 பங்கய மலர்ப்பாதன் – அன்பர்க்
கிங்கித மிகு போதன் – குறத்திக்
கிச்சை யுள்ள தேவன் அச்சுதன் இருக்க (அஞ்ச)
3 குன்ருக்குடிவாசன் – அன்பரை
நய்ருய்க்காக்கும் ஈசன் – குறத்தி
மங்கை மருவிய செங்கையனிருக்க (அஞ்ச)

## 42. மயில் வாகன

பல்லவி

மயில் வாகனக் கடவுளே – குயிலார்க்குன்றை –
மலைக்குருபரநாதா (மயில்)

சரணம்

1 அண்டமெல்லாம் சிறைகொண்டடர்த்தாடிய (மயில்)
2 பலபல சதங்கை மணி கலகலென்ருடிய (மயில்)
3 குன்றையின் மாமலை நின்று நின்ருடிய (மயில்)

## 43. அடைக்கலமையனே

பல்லவி

அடைக்கலமையனே – கடைக்கண்
ணெனைப் பார்த்து ரட்சி யுன் (அடைக்)

பல்லவி

நாலுவேதமுந் தேடித்தேடி நாடித் தெரியாத சோதியே
வேலுமயிலு மென்றெண்ணுமன்பர் வினையைத்
தீர்க்கு நீதியே (அடைக்)

சரணம்

ஐயனே பன்னிருகையனேயெனை ஆதரிக்க வேணும்
மெய்யடிவனென்றனைக் காத்தால் மேதினி
யோர்க்குத்தோணும்
தண்டலை வனஞ்சூழு சிகண்டிதற் பராகுருபரனே –
வண்டலர் மதுமாலை புனையும் பரனே சிவபரனே
(அடைக்)

## 44. மயிலேறிய

பல்லவி

மயிலேறிய கந்தனே – தமிழ் –
பயிலொளி ஞானசம்பந்தனே (மயிலே)

அனுபல்லவி

அரனருளிய பாலனே – சூரைத்
திறமுடன் வெலும் வேலனே (மயிலே)

சரணம்

குறமகள்தன் சமேதா – அடியவர்
முறையுடன் பணி பாதா
வாதடர் பொழில் சூழுங் – குன்றை
மீது எந்நாளும் வாழும் (மயிலே)

## 45. வால சண்முக

பல்லவி

வால சண்முகநாதா – ஞாலம்
புகழும் குன்றைநாதனே நீதனே (வால)

சரணம்

1 அஞ்சாதென்று ஆண்டருள்வாயே
மிஞ்சாது விண்தனே விரட்டுவாய் நீயே (வாலே)

2 கானக மடந்தைமேல் காதல் கொள்புயனே –
வானக மடந்தையுமருவிய நயனே (வால)

3 அகண்ட ஞான ஆறுமுகநாதா
சிகண்டி மாமலைச் செய்யபூம் பாதா (வாலா)

## 46. சகதீசனே

பல்லவி

சகதீசனே சாமி – மகவேசன்பணி குன்றைமலை
குமரேசா (சக)

அனுபல்லவி

ஆனந்த கடலொளி யாகிய பொருளே –
ஞானந்த்வருதவர் ஆடிய அருளே (சக)

சரணம்

அமரர் முதலினோர்கள் அடிபணி தேவே
குமர குருபரகுக அருள் தேவே
குன்ருக்குடிக்கோல மயிலா –
மின்ருவிய அயில் வேலா – பொதருள (சக)

## 47. எனைக்காக்க வேணுமைய்யனே

பல்லவி

எனைக்காக்கா வேணுமைய்யனே நாளும்
உனக்காத்துப் பணிசெய்யு முண்மையனை – (எனைக்)

அநுபல்லவி

பாதபங்கயர் பார்வதி புத்திரா –
ஆதரவிலாத அன்பர்க்கு மித்திரா (எனைக்)

சரணம்

மதுமலர் நீபமென் மாலிகாபரணு –
சீதளமிகு மலர்த்திவ்விய சரணு
சொன்னமுடியிலங்குந் தோகையின் குமரா
வன்ன மயிலேறிய வடிவேறி சூரா (எனைக்)

## 48. சித்தந்திரும்பாதோ

பல்லவி

சித்தந்திரும்பாதோ – என்சாமி
சித்தந்திரும்பாதோ (சித்தனை)

அநுபல்லவி

கர்த்தனே குன்றைமலே வித்தகனே –
வெகுகாரணனே பரிபூரணனே என்சாமி (சித்தம்)

சரணம்

மதுரிதத் தமிழ் சொலும் வாயனே சாமி –
சதுர்விதத்திருமறை நேயனே சாமி
பன்னிரு கரதல வேலனே சாமி –
என்னிரு வினைத்தீராய் சீலனே சாமி
குன்ருக் குடிமலைக்குருபரநாதா –
நன்ருய்க் காத்தென்னை ரட்சிக்கும்பாதா (சித்தம்)

## 49. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே – (ஆறுமுக)

அநுபல்லவி

கூறுமுக வேலணி குமரகுருபரனே (ஆறுமுக)

சரணங்கள்

1 உன்றனைப் பணியும் என்றனைக் காப்பாய் (ஆறுமுக)
2 நித்தமுனைப் பரவும் பக்தனெனைக் காப்பாய் (ஆறுமுக)
3 சிகண்டி மலையில் வாழும்
அகண்டபரிபூரண (ஆறுமுக)

## 50. சரவண குருபரனே

பல்லவி

சரவண குருபரனே –
யரவணி பவசிவனருளிய பாலா (சரவண)

அநுபல்லவி

வானவர் முனிவர்கள் தேடிய பாதா
தேனலர் மொழில் மங்கை சேர்ந்திடு நாதா (சரவண)

சரணம்

வாசமிகுந்த நீப மாலிகாபரண –
நேசமிகுந்தவன்பர் நினைந்திடு சரண (சரவண)
தோகைமலைக்கிசைந்த துரைகுமரேசா
ஓகைதரித்தபுயா உன்னருள் புரியீசா (சரவண)

## 51. கருணாநிதியே

பல்லவி

கருணாநிதியே –
திருமாமறைப் புகழ் சிகண்டி மலையில் வாழும் (கருணா)

அநுபல்லவி

ஆறுமுகக் குருபரனே – நல்ல
கூறுமுகத்தின் வேற் காரனே (கருணா)

சரணம்

எம்பிரானுக் கொரு பாலா – தன்னை
நம்பினபேர்க்கருள் சீலா
வாலச ரவண பவனே – ஆடும்
நீலமயிலேறியதவனே (கருணு)

## 52. எண்ணமெதுக்கு

பல்லவி

எண்ண மெதுக்கு—மனமே— (எண்ண)

அநுபல்லவி

வண்ணமுடிக் குன்றை வரதனிருக்க (எண்ண)

சரணங்கள்

1 கோதண்ட பாணி மருகன்—இந்த
மூதண்ட முந்துதி முருகன்
கோல மயிலின் வேலனிருக்க (எண்ண)

2 ஆறுமுகத் தென்ஐயன்—திவ்விய நீறுதரித்த மெய்யன்–
அற்புதன்—முத்தமிழ் விற்பன னிருக்க (எண்ண)

3 வேதாந்த மயமாக—அருள்
நாதாந்த நயவனேக—விந்தியுள்ள குன்றைக்
கர்த்தனிருக்க (எண்ண)

## 53. கந்தனே

பல்லவி

கந்தனே யெந்த னையாளாய் (கந்தனே)

அநுபல்லவி

உந்தனை நிதம் வந்தனை செய்வேன் (கந்தனே

சரணம்

1 கூறுபடைவே லாறுமுகக் குகா—
நீறு புனைபுயா வேறு துணையில்லை (கந்தனே)

2 எண்டிசை யோங்கு சிகண்டி மலைவளர்
வண்டிசை மலர் நீபாதொண்டின் வழுவாதெனை
(கந்தனே)

## 54. மனதே

பல்லவி

மனதே ஐயனை நம்புவாய்— (மனதே)

அநுபல்லவி

கனகமலைச் சிகண்டி கர்த்தனை நிதமும் (மனதே)

சரணங்கள்

1 அறக் கொடியிடையாள் - குறத்திகணவனை
2 பரத்தை யடியர்க்கருள் கரத்தணி வேலனை
3 அண்டின பேர்க்கருள் சிகண்டி மலைஐயனை (மனதே)

## 55. திருப்பத மறவாதே

பல்லவி

திருப்பத மறவாதே - மனதே
விருப்பமான குன்றை வேலவன் கோலத் - (திருப்பதம்)

அநுபல்லவி

கந்தமாமலர் கடம்பணி புயன் -
சொந்தமாங்குறத்தி தோகைதரன் அயன் - (திருப்பதம்)

சரணம்

வாதுக்கு வருசூரை மாய்த்திடு வேலன்
சூதுக்கு நிகர்முலை தோகையர் லோலன்
அகண்ட பூரண அற்புத நாதன்-
சிகண்டி மாமலைத் தெய்வீக போதன் (திருப்பதம்)

## 56. அஞ்சவேண்டாம்

பல்லவி

அஞ்சவேண்டாம் மனதே - மஞ்சுலாவுகுன்றை
வால வேலனிருக்க (அஞ்ச)

சரணங்கள்

1 வானவர் பணியாதன் - திவ்வியமெய்
ஞானவர் புகழ்போதன் - அருள் நாயன்ருடியவர்நே
யனிருக்க (அஞ்ச)

2 பூதி புனையுமெய்யன் - கானக்குறச்
சாதி மின்மேவு துய்யன் - எங்குந்தாவு -
மயிலேறுந் தேவனிருக்க (அஞ்ச)

3 மந்திகுதி போடும் சோலை - உந்தி மிகவும் நீடும் -
குன்றை - உத்தமனருளும் வித்தகனிருக்க (அஞ்ச)

## 57. எனைக் காக்க வேணும் ஐயனே

பல்லவி

எனைக்காக்க வேணுமையனே (எனைக்காக்க)

அநுபல்லவி

உனைக்காத்து நிதநித முண்மையென்றிருக்கும்
(எனைக்காக்க)

சரணங்கள்

1 மாது குறத்திபாகா - திவ் வியவி
பூதி நிறத்த தேகா (எனைக்காக்க)

2 சங்கர சண்முகனே - யன்பர்க்
கிங்கிதமிகு குகனே

3 சிகிமலை தனில்வாசா - சகல
மகிதல ரட்சக ஈசா (எனைக்காக்க)

## 58. அடியனை

பல்லவி

அடியனைக் காக்க வேணும்
முடிபுனையுஞ் சிகண்டி முத்தனே நித்தனே (அடியனை)

அநுபல்லவி

கங்கைதரித்தஈசன் பாலா - மலர்ச்
செங்கைதரித்த கதிர் வேலா (அடியனை)

சரணம்

தேவர்முனிவர் பணி சரணா - அருள்
சேவலர் நீபா பரணா
மஞ்சடர் பொழிற்குன்றை வாசா - குற
வஞ்சி மனதுக்கிசை நேசா (அடியனை)

## 59. சரவண பவ

பல்லவி

சரவண பவ குருவே -
அரவணி பவன்அருள் அரன் உதவியபாலா (சரவண)

அநுபல்லவி

அய்யனே மெய்யனே சேயயிற் கையனே (சரவண)

சரணங்கள்

1 வாசமிகு நீப மாமல ரணிபுயா
மங்கையர் தங்கள் தன் பங்கிலங்கிய நேசனே
எங்கணுநிறைந்த சொ ரூபனே
நித்தனே சுத்தனே கர்த்தனே முத்தனே (சரவண)

2 அண்டகிரண்ட மளாவி நிறைந்த
அமலனே குமரனேச மரனே
மரங்கள்கொண்ட பொழில்வளா
குறமயில் மேவிய - குகனேசொல் சகனே நற்
சுகனே சண்முகனே (சரவண)

3 மின்பயில் சிகரங்கள் மேவி விளங்கிய
விற்பயில் பொற்சிகிகிரி யற்புதனே—
அன்பர்கள் பணிசெயும் ஐயனே யெனையாளும்
அரனே வரனே பரனே தரனே (சரவண)

## 60. வந்தவினை

பல்லவி

வந்தவினை தானையா (வந்த)

அநுபல்லவி

கந்த மலர்ப் பொழிற்குன்றைக் கர்த்தனே முத்தனே
(வந்த)

சரணம்

1 பன்னிருகையனே யென்னிரண்டு வினைதனை
உன்னிதயம் மகிழ்ந்து என்னிடம் வந்தருளி
(வந்தவினை)

2 வாச மலர் நீபனே - நாசமிகு வினைகளை
மோசஞ் செய்து ஓட்டிய யீசனே பிரகாசனே

3 ஆடரவைக் கொத்தி விளையாடிய மயில் மேலா—
நாடி வருவாய்க் குன்றை கோடில் வளர் நாதனே
(வந்த)

## 61. திருச்சரணந் தருவாயே

பல்லவி

திருச்சரணந் தருவாயே

சரணங்கள்

1 பொருப்பிலுயர் குன்றைமலைப் புண்ணியனே
முன்வருவாயே (திருச்)
2 அண்டரும் முனிவருந் தொண்டரும் பணிசெயும் (திருச்)
3 பங்கயப் பூமலர்த் தங்கச் சிரம்பணி (திருச்)
4 நின்றுடிய பொழிற் குன்றுக் குடியாவுன் (திருச்)

## 62. பன்னிரண்டுகையா

பல்லவி

பன்னிரண்டுகையா - வென்னிரண்டு வினையை இச்சணம்
தீராய் (பன்)

அநுபல்லவி

கந்தனே ஞானசம்பந்தனே யரனருள்
மைந்தனே எனைக்காக்க உந்தனை யலாலுண்டோ (பன்)

சரணம்

முருகேசா மாயன் மருகேசா மயில் குருகேசா
அன்பர்க் குறுகேசா சாமி
மீன்றுவிய முடி நின்றுடிய பொழில்
குன்றுக்குடி நன்றுன வானவருள (பன்னிரண்டு)

## 63. வருவாய்

பல்லவி

வருவாய் வருவாய் ஐயனே

அநுபல்லவி

உருகாதுருகும் அன்பர்க்கருள் செய்யவே (வருவாய்)

சரணங்கள்

1 வாசக்கடப்ப மலர் மாலை யணிபுயமும்
நேசக்குறத்தி நன்னேரிழை நயமும்
நித்தமு முன்னுடைப் பத்தர்கள் காண (வருவாய்)

2 பாதச் சிலம்பசையப் பச்சை மயிலேறி
வாதுற்ற சூருயிர் வதைக்கும் வேல் மீறி
வைத்தருக் குங் கையா பத்தர் கண் காண (வருவாய்)

3 நின்றுடிய மலர் நீடிய பொழில் சூழும்
குன்றுக்குடி மலைக் குடுமியில் வாழும்
கொற்றவனே உன்றன் பத்தர்கள் காண (வருவாய்)

## 64. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்கவேணும்

அநுபல்லவி

முடிபுனைக் குன்றைமலை மூர்த்திக்காரயார் (அடியனை)

சரணம்

1 சேவற்கொடி பிடித்த கையா - யெந்த
ஞவற்கிசைந்த அருள் துய்யா - வந்து
அடுத்தவர் தங்களைத் தொடுத்த வினையைத் தீர்த்து
(அடியனை)

2 பங்கய மாமலர்ப் பாதனே - குறத்தி
திங்கள் முகத்துக்கிசை நாதனே - தினந்
தேடித்தேடித் தமிழ் பாடிப்பாடித்துதி (அடியனை)

3 மண்டி மலர்ப் பொழில் சூழும் - உயருஞ்செ
கண்டி மலைதனில் வாழும் - எங்கள்
கர்த்தனே பரிசுத்தனே சாமி (அடியனை)

## 65. சித்தந் திரும்பவேணும்

பல்லவி

சித்தந் திரும்பவேணும் (சித்தந்திரும்ப)

அநுபல்லவி

பத்தன் மனதின் படியாக உந்தன் (சித்தந்திரும்ப)

சரணம்

1 ஆறுமுகத்தையனே - நல்ல
கூறுபடைமே வலணி கையனே (சித்தம்)
2 பன்னிரு புயகுக நாதனே - யினி
என்னிரு வினை தீர்ப்பாய் நீதனே (சித்தம்)
3 குன்றை மலைவளர் கருத்தனே - எனக்கு
நன்றருள் புரியருள் திருத்தனே (சித்தம்)

## 66. குருபரகுமரா

பல்லவி

குருபரகுமரா - அருமறை புகழ்
குன்றை யாண்டவனே சாமி (குருபர)

அநுபல்லவி

கங்கை யணிவோர் பாலா - பன்னிரு
செங்கை யணியும் வேலா (குருபர)

சரணம்

வானவர் பணி பாதா - நல்லமெய்
ஞானவர் துதிபோதா
மஞ்சடர் சிகிகுமரா - அவுணன்
அஞ்சிடவரு சூரா (குருபர)

## 67. தருணமிதுதான்

பல்லவி

தருணமிது தான் சாமி
வ்ருணமுடியுலவு மயில் மலைநாதா (தருண)

அநுபல்லவி

சன்னிதிதனில் வந்து உன்னிருபதம் பணி
யென்னிதயமகிழ் நன்னிதியருள் செய (தருண)

சரணம்

சீத மலரணியும் பாத சரவண
நாத சண்முககுக போத எனக்கருள (தருண)
மன்றல் மலர்ப்பொழில் குன்றை மலையில்வளர்
நின்றனடியவர்க்கு நன்றருள் புரிசெய (தருண)

## 68. முருகா

பல்லவி

முருகா உனை நம்பினேன் - (முருகா)

சரணங்கள்

1 உருகாதுருகு மன்பர்க்கு (உ)த்தமனே சாமி
ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி (முருகா)

2 ஐயனே பன்னிருகையனே யென் சாமி
குன்றையின் மலையா நன்றருள் புரிவாய் (முருகா)

## 69. நினைப்பது பெரிது

பல்லவி

நினைப்பது பெரிது - மனத்தினில் அனுதினம்
மறவா மலையயன் (நினைப்பது)

சரணங்கள்

1 கருணாநிதியை - அருணோதயனை
அற்புதமான பேராய குகனை (நினைப்பது)

2 மன்றல் மலர்ப்பொழில் சேர்
குன்றையின் வாழ்வை (நினைப்பது)

## 70. அருள் தரவேணும்

பல்லவி

அருள் தரவேணும் - நல்லதோர் (அருள்)

அநுபல்லவி

பொருள் தரவேணும் - நல்லதோர் பொருள் தரவேணும்
(அருள்)

சரணம்

ஐயனே சாமி - பன்னிருகையனே சாமி - குறமங்கை
நேயனே சாமி
குமரனே சாமி - தானவர் சமரனே சாமி (அருள்)

## 71. ஆறுமுக நாதனே

பல்லவி

ஆறுமுக நாதனே - குறுமுனி குருநாதா (ஆறு)

அநுபல்லவி

மயில்வாகனனே ஒயிலாகியவா (ஆறு)

சரணம்

சதுமாமறையா - பதுமாசனனே
நின்ருடிய பொழில்சேர் குன்ருக் குடியனே (ஆறு)

## 72. கதி தரவேணும்

பல்லவி

கதி தரவேணும் - மதிதவழ் குன்றை மலைக்குமரேசா

அநுபல்லவி

அந்தர ரூபா அழகிய நீபா - செந்தமிழ் பகரும்
[செங்கனிவாயா
(கதி)

சரணம்

1 மாயவன் மருகா - மகிமைகொள் முருகா
தூயசண் முகனே துரைகுரு பரனே (கதி)

2 திகழ்பொழில் சூழும் சிகிமலை வாழும்
அகிலமெல்லாம் புகழ் ஐயனே மெய்யனே (கதி)

## 73. வேலவா

பல்லவி

வேலவா யெனையாளாய் நீலமயில் (வேலவா)

அநுபல்லவி

நீலமயில் வாகனு கோல உல்லாசா (வேலவா)

சரணம்

1 குறமகள்தன் தோளா - நல்ல சிறகுள்ள மயிலாளா
(வேலவா)

2 மாதவர் பணிபாதா - நீபத் - தாதவிழ் மலர் போதா
(வேலவா)

3 ஆரண நற்பொருளே - பச்சை நாரணமேயருளே
(வேலவா)

## 74. வருவாய்

பல்லவி

வருவாய் வருவாய் ஐயனே - வேணதைத்
தருவாய் தருவாய் மெய்யனே (வரு)

சரணம்

1 பச்சை மயிலிலேறி - யென்மீது - இச்சையுடனே மீறி (வரு)
2 வள்ளிமயிலிகூட - யன்பர்கள் - தெள்ளியதமிழ்ப் பாட (வரு)
3 மன்றல்பொழில் திருந்து - நலமான குன்றை [மலையிலிருந்து (வரு)

## 75. நாதனே

பல்லவி

நாதனே ரட்சிக்கவேணும் - மலர்ப்

அநுபல்லவி

பாதனே குன்றைமலை வேதனே நீதனே (நாதனே)

சரணங்கள்

1 அருமறை புகழ் சரணு - நீபத் திருமல ராபரணு (நாதனே)
2 குக குருபர வேலா - ஈசன் - மகவருள் புரிசீலா (நாதனே)
3 வடிவுளசிகி மேலா - நாளும் - அடியவர் பணிசீரா (நாதனே)

## 76. ஆண்டவனே

பல்லவி

ஆண்டவனே குகனே - நீபம் - பூண்டவனே யறுமுகனே

சரணங்கள்

1 பன்னிரு கரதலனே - சாமி - என்னிருவினை தீர்ப்பாய் [நலனே (ஆண்)
2 தேவர் சேனுபதியே - அந்த மூவர்கள் அனுதின [மாகவே துதியே (ஆண்)
3 மின்ருவு பொழில் சூழும் - மாமுடிக் - குன்ருக்குடி [மலையில் வாழும் (ஆண்)

## 77. முருகேசனே

பல்லவி

முருகேசனே - நடனமிடுங் - குருகேசனே (முருகே)

அநுபல்லவி

மறைநாவலா - சிறை செருஞ் சேவலா (முருகே)

சரணம்

வள்ளி பங்காளா - பச்சை - புள்ளி மயிலாளா
கருணாநிதி குன்றை வருவாள் வேணுந்துதி (முருகே)

## 78. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா - குன்ருக் - குடிவாழ் குக மேலவா (வடிவே)

அநுபல்லவி

சூரசங்காரா வீரப்பிர தாபா (வடிவேலவா)

சரணம்

அக்கிர மவுணோரை - வேலுக்கிரமாகிய
மின்ருவுமுடி சேருங் - குன்ருகுடிமலே (வடிவேலவா)

## 79. கருத்தனே

பல்லவி

கருத்தனே யெனேயாளாய் - திருத்தமான குன்றைத் தேவ
[தேவனே (கருத்)

அநுபல்லவி

சங்கர சண்முகனே - வள்ளிக்கு இங்கித மிகுகுகனே
(கருத்)

சரணம்

பன்னிருகரதலனே - பொல்லாத என்னிடமுறை நலனே
வடவரைதனே நேராய் - வளரும் - தடமிகு சிகிமேரா
(கருத்)

## 80. அஜயனே

பல்லவி

ஐயனே - யெனேயாளாய் பன்னிருகையனே நன்மா
[மலர்த்தாளா (ஐயனே)

அநுபல்லவி

ஆண்டவனே - நீபமலர் பூண்டவனே சாமி (ஐயனே)

சரணம்

தேவர் சேனுபதியே - அந்த - மூவர் புகழ் நிதியே
கொன்றையணி பாலா - வுயர் குன்றை மலைவாசா
(ஐயனே)

## 81. ஒருகாலு மறவாதே

பல்லவி

ஒருக்காலு மறவாதே மனமே (ஒருகாலு)

அநுபல்லவி

திருக்கான மிகுகுன்றை தேவதேவனை (ஒருகாலு)

சரணம்

1 பன்னிரு கரதல முன்னிய வேலனை (ஒருகாலு)
2 பங்கய மலர்ப்பத மங்கையர் லோலனை (ஒருகாலு)
3 மன்றல் மலர்ப்பொழில் குன்றையின் வாசனை (ஒருகாலு)

## 82. முருகா

பல்லவி

முருகா எந்தனையாளாய் - திருமாமறை புகழ் தேவனே
[சாமி (முரு)

அநுபல்லவி

ஆண்டவனே சாமி - நீபம் - பூண்டவனே சாமி (முருகா)

சரணம்

கந்தனே சாமி - ஞானசம் - பந்தனேசாமி
மண்டிய பொழில் சேரும் - செகண்டியின் மலைநாதா
(முருகா)

## 83. என்றைக்குத் தீருமய்யா

பல்லவி

என்றைக்குத் தீருமய்யா தீவினை - யென்றைக்குத்
தீருமய்யா

அநுபல்லவி

குன்றைக்கு வாய்த்த குருபர நாதா (என்றை)

சரணங்கள்

1 வாசக்கடப்ப மாலிகாபரணு
நேசக்குறத்தியின் மேல் நீங்காத சரவணு (என்றை)

2 பங்கய மாமலர் படிந்திடு பாதா—
மங்கையுமைதன் பாலாவால வேலவநாதா (என்றை)

3 உயர்ந்த பொழிலுறை குன்றைக்குருந்துள தேவே
நயவடியார்கள் பணி - நட்புயர் கோவே (என்றை)

## 84. சேவற்கொடியோனே

பல்லவி

சேவற் கொடியோனே - யெந்த
ணுவற்கிசை வோனே

சரணங்கள்

1 பன்னிரு கையோனே - யருளிய
நன்னில மெய்யோனே (சேவற்)

2 வடிவே லெடுப்போனே - அடியார்கள்
மிடியாவுங் கெடுப்போனே (சேவற்)

## 85. ரட்சிக்க வேணுமையனே

பல்லவி

ரட்சிக்க வேணுமையனே

அநுபல்லவி

வச்சிர பாணி முதல் வானவர் பணி தாளா (ரட்சிக்க)

சரணங்கள்

1 பதுமாசனத்தானும் பணியாசனத்தானும்
விதுதான் சிரத்தற்கும் மேலான - சீலான்
சத்திதரித்த கைய (ரட்சிக்க)

2 தற்பானந்த ரூபா - சித்தி மயில் வாகனு -
தேவாதிதேவா (ரட்சிக்க)
சொர்ணமுடி விளங்குந் தோகைமலைக் கந்தனே
என்னிதயத்துறையும் ஈசா பிரகாசா (ரட்சிக்க)

## 86. முருகா

பல்லவி

முருகா உன் பாதமேகதி மயிற்
குருகா செகண்டி மலைக்குகனே

சரணங்கள்

1 பங்கய மலர்ப்பாதனே - வள்ளிக்
கிங்கிதமிக நாதனே (முருகா)
2 வாலவடி வேலனே - யாடும்
நீலமயில் கோலனே (முருகா)
3 என்றுதரிப்பை ஐயனே - மாமுடிக்
குன்றுக்குடி மெய்யனே (முருகா)

## 87. வாலவடி வேலவா

பல்லவி

வாலவடி வேலவா - நல்ல கோல மயிலாளா (வால)

அநுபல்லவி

சங்கர ரருள் பாலா - இரு
மங்கையர் புணர் லோலா (வால)

சரணம்

படையுடனே நின்ற - வெகு
அடலசுரனை வென்ற
சிகிமலைதனில் வாசனே - யருள்
மகிமை கொள் முருகேசனே (வால)

## 88. காக்கவேணும்

பல்லவி

காக்க வேணும் சாமி - கடைக்கண்ணால்
பார்க்க வேணும் சாமி (காக்க)

அநுபல்லவி

பரிக்க வேணும் சாமி -என்னை யா
தரிக்க வேணும் சாமி (காக்க)

சரணம்

வாழவேணும் சாமி - எந்தனை
ஆள வேணும் சாமி
அடியவர்துதி சாமி - குன்றுக்
குடி வளருஞ் சாமி (காக்க)

## 89. ஆராதரவு

பல்லவி

ஆராதரவு முண்டோ - (ஆரா)

அநுபல்லவி

பேராருங் குன்றைமலைப் பெருமானே எனக்கு (ஆரா)

சரணங்கள்

1 அஞ்ச வேண்டா மென்றே ஆதரஞ் செய்து
மிஞ்ச வேண்டா மென்று வினையைத் துரத்தி
விருப்புடனேயினி - யருட் செய்து காக்க (ஆராதர)
2 தீராத நோயெல்லாம் தீரும்படித் தீர்த்து
சேராத நலமெல்லாம் சேரும்படிச் சேர்த்து
திருப்பாதந்தந்து அருட் செய்து காக்க (ஆராதர)
3 நாளுமடியவரை ரட்சிக்கும் கர்த்தனே
வாழுந்திருச் செகண்டி மாமலைக் கர்த்தனே
வருத்தமெல்லாந்தீர - அருட் செய்து காக்க (ஆராதர)

## 90. முத்தையனே

பல்லவி

முத்தையனே சாமி - சித்தையனே சாமி தேவதேவனே (முத்)

அநுபல்லவி

ஒருதுணை இல்லை யென்றுன் இருபதம் நம்பினேன் (முத்)

சரணம்

எந்தனை இரட்சிப்பாய் என்றுந்தனை நம்பினேன்
குன்றையில் வாழும் உன்றனை நம்பினேன் (முத்)

## 91. ஐயனே குருபரனே

பல்லவி

ஐயனே குருபரனே - பன்னிரு
கையனே யரவரனே (ஐயனே)

அநுபல்லவி

குறக்கொடி மருவிய புயனே - நல்ல
அறக்கொடி மகளருள் நயனே (ஐயனே)

சரணம்

வடிவேலெடுக்கு மலர்க் கரனே - பத்தர்
அடியவர் பணிபுரி தரனே
பொன்ருவு மாமுடிச்சூழும் - இலகிய
குன்ருக்குடி மலே வாழும் (ஐயனே)

## 92. துரைக்குருபரனே

பல்லவி

துரைக் குருபரனே -குன்றை
வரைச்சிவ வரனே (துரை

அநுபல்லவி

உந்தனே நாளும் சிந்தனே செய்து
வந்தனே புரியும் எந்தனே யாள்வாய் (துரை)

சரணம்

மிஞ்சிய தீவினே அஞ்சியே யோடிட
நெஞ்சி நினேத்தருள் தஞ்சம் வேறில்லேயே
நின்றுலாவிய தொரு மன்றல் மலர்ப் பொழில்
குன்றைமலேக்குக நன்றருள் புரிவை (துரை)

## 93. என்னேயாளுமையா

பல்லவி

என்னேயாளுமையா – பொன்னேயாளும் (என்னே)

அநுபல்லவி

குன்றைப் பொருப்புறைக் கந்தனே (என்னே)

சரணம்

1 வடிவேல் பிடிக்குங்கையனே குன்ருக்
குடிவாழ்ந் திருக்கும் துய்யனே (என்னே)
2 ஆறுமுகக் கந்தனே யெனக்கு
வேறில்லே சம்பந்தனே (என்னே)
3 பங்கய மலர்ப்பாதனே – வள்ளிக்
கிங்கிதந்தரு நாதனே (என்னே)

## 94. பதந்தரவேணும்

பல்லவி

பதந்தரவேணும் – குன்றுக்குடிச் சுதந்தரநாதா (பதந்)

அநுபல்லவி

அருள் குருபரனே வேண்டிய – திருவருளரனே (பதந்)

சரணம்

பங்கய வேதா – பணிசெய்யு மிங்கித நாதா
குன்றையின் மலையா – பொருளுள – நன்றருள் கலையா
(பதந்)

## 95. மயில் வாகனக் கடவுளே

பல்லவி

மயில் வாகனக் கடவுளே
குயிலார் செகண்டிமலைக் கொற்றவனே

அநுபல்லவி

சீதமலராகிய பாத பங்கசனே
நாத மகாதேவி தாதவிழ் நீபா (மயில்)

சரணம்

அண்டர்களு மகா தொண்டர்களும்பணி
யெண்டிசை பரவும் செகண்டிமலை வாழ்வே (மயில்)
ஐயனே – பன்னிருகையனே நலஞ்செறி
துய்யனே – யருளிய – மெய்யனே யென்சாமி (மயில்)

## 96. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா – குன்றுக்குடிவேலவா

அநுபல்லவி

அருமறை பணிதாளா – அன்பர்க்கு
அருள்செய் பன்னிருதோளா (வடி)

சரணம்

வரந்தர வேணுமையனே – எங்கும்
நிரந்தரமான மெய்யனே
குன்றைமலையின் வாசனே – பணிவோர்க்கு
நன்றருள்புரி யீசனே (வடி)

## 97. சரணம்

பல்லவி

சரணமுந்தனை நம்பினேன் (சரண)

அநுபல்லவி

வரம் அடியார்க்கருள் மயில் மலைநாதா (சரண)

சரணம்

கனக மயில்வாகா – குறத்தி
மனதுக் கிசைந்த யோகா
சமரிடு கதிர்வேலா – யருள்
குமர சண்முக சீலா
மகபதி பணிதாளா – குன்றைக்
குககுரு பன்னிரண்டு தோளா (சரண)

## 98. சாமி யெந்தனையாளாய்

பல்லவி

சாமி யெந்தனை யாளாய் – (சாமி)

அநுபல்லவி

பூமி புகழும் குன்றைப் பொருப்பிலுறையுங் கந்த (கந்த)

சரணம்

1 ஆதரவுன்னை யல்லால் வேறுமுண்டோ எனைக்
காதலுடனுள்வது வேறுமுண்டோ கந்த (சாமி)
2 சகல சனரட்சகம் வேறுமுண்டோ –யெனை
மகிழ்வுடனுள்வது வேறுமுண்டோ கந்த (சாமி)
3 குன்றையில் வளர் தெய்வம் வேறுமுண்டோ – எனை
யென்றும் ரட்சிப்பதுன்போல் வேறுமுண்டோ கந்த
(சாமி)

## 99. எத்தனை நாட் செல்லுமோ

பல்லவி

எத்தனை நாட்செல்லுமோ
பத்தனிடத்திற் பரிந்தருள் சொரிந்திட (எத்தனை)

அநுபல்லவி

வாதுபுரிசூரனை வதைத்திடு வேலா
போது மலர்நீபம் புனைபுய சீலா (எத்தனை)

சரணம்

1 பொருந்திடவனுபூதி – திருந்திடச் செய்ய
மங்கை குறத்தி தன்பாகா – கொங்கை குறத்தி
தன்மோகா (எத்தனை)
2 கோலாகலா அரன் – பாலகா அருள் செய்ய
மூதண்டமும் புகழ்நாளும் – (எத்தனை)
3 வேதண்டச் சிகிமலை வாழும்
வேதனே யடியேற்கு நாதனே அருட்செய்ய –
(எத்தனை)

## 100. தருணமுமிது

பல்லவி

தருணமிது தருண மையனே (தருண)

அநுபல்லவி

கருணையுள்ள உந்தன் கடைக் கண்ணால் பார்த்து –
(தருண)

சரணம்

1 ரட்சிப்பாய் – மெய்யனே துய்யனே
மகபதி முதலான தேவர் – எந்த மானிலத்திலு
முள்ளராயாவரும்
சகலரும் வந்துபணி யகமலர்ப்பாதனே
எதிர்க்குஞ் சூரனை நில்லு – என்று – இகல்புரி
வேலினால் வெல்லும் (தருண)
2 கதியுள்ள மயிலேறு துதிபெறு நாதனே
மருவுலாவு பொழிநீளும் – குன்றை
மாமலை மேல் நிதம் வாழும்
குருபர குமரேசா – அருமறை புகழீசா (தருண)

## 101. சித்தமகிழ்ந்து

பல்லவி

சித்த மகிழ்ந்தருளைத் தரவேணும் – கர்த்தன் மனப்படியே
(சித்)

அநுபல்லவி

வித்தகனே குன்றை உத்தமனே பரிசுத்தனே என்சாமி
(சித்)

சரணங்கள்

1 வாசனே குறத்தி நேசனே பிரகாசனே என்சாமி
ஈசனே முருகேசனே வினை நாசனே என்சாமி (சித்)

2 வேலனே யநுகூலனே தன்னடைக்காலனே என்சாமி
சீலனே சூரகாலனே செகசாலனே என்சாமி (சித்)

3 அண்டர் போற்றும் பிரசண்டவேகக் கொண்டை
மயிலனே என்சாமி
தொண்டர் போற்றும் செகண்டியான் வேதண்ட
வொயிலனே என்சாமி (சித்)

## 102. முருகையனே

பல்லவி

முருகையனே சாமி – வேலேந்தும்
இருகையனே சாமி (முரு)

அநுபல்லவி

மாதவயோகியர் கீதகின்னரர்கள் நின் பாதமலர் பணியும்
(முரு)

சரணம்

அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் யாவரும்
கண்டணியணியாக தெண்டனிடு சண்முகா
நின்றசைப் பூம்பொழில் குன்றையின் மலைவரு
கின்றகுகா கடம்பா நன்றருள் புரிகுவை (முருகைய)

## 103. எனக்குன்னருள் தருவாய்

பல்லவி

எனக்குன்னருள் தருவாய் – நல்ல
வனத்தின் மயிலேறி வருவாய் (எனக்குன்)

சரணங்கள்

1 தஞ்சம் வேறில்லை சாமி – உந்தன்
நெஞ்ச மிரங்குவாய் நேமி – நாளும்
சகல சனரட்சகா – மகபதி பணிபாதா (எனக்குன்)

2 வாது புரியுஞ்சூரை வதைத்தாய் – அன்பர்க்கு
போது துயரமதை கிதைத்தாய் – திவ்விய
மயிலேறி விளையாடு(ம்)ஒயிலான குகநாதா (எனக்குன்)

3 அண்டமுயர்ந்து வளர்ந்திருக்கும் – பணியும்
தொண்டர்கள் புடைநித நெருக்கும் – குன்றை
யாண்டவனே நீபம் பூண்டவனே யென்சாமி (எனக்குன்)

## 104. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே – வண்டார்
பொழிற்குன்றைமலைக் குமரேசா (தண்டா)

அநுபல்லவி

ஆண்டவனே நீபம் பூண்டவனே – யருள்
நீண்டவனே மயில் தாண்டவனே சாமி (தண்டா)

சரணம்

ஐயனே பன்னிரு கையனே – பரிசுத்த
மெய்யனே யருள்துய்யனே என்சாமி (தண்டா)
நின்ற பொழில் வளர் – குன்றை மலைக்குகா
மன்றல் மலர்ப் புயா – நின்றயவுசெய் சாமி (தண்டா)

## 105. எந்த விதத்திலும்

பல்லவி

எந்த விதத்திலும் வந்தெனையாளுவாய் (எந்த)

அநுபல்லவி

முந்த வினையாலும் உன்றன் மனதுவைத்து (எந்த)

சரணங்கள்

1 மாதரிருவர் மணவாளா – தாமரைப்
போது நிகளுந் தண்டைத் தாளா
நீபத் – தாதுள்ள மலரணி தோளா – யருள்
தற்பரனே நல்ல அற்புதனே சாமி (எந்த)
2 சரவண பவகுரு நாதா – நய
அரவணி பவனருள் நீதா – அன்பர்
அரகரா வெனபணி பாதா – எனை
ஆண்டவனே அன்பு பூண்டவனே சாமி (எந்த)
3 மாங்குயில்கள் சுதி கூடும் – பச்சைப் பூங்கிளிகள்
கீதம் பாடும் – ஓங்கிய மலர்ப்பொழில் நீடும் (எந்த)

## 106. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவுசெய்யவேணும் கோலமயில் வாகனு
(தயவு)

அநுபல்லவி

வயல்கள் சூழும் – நேம
வள நாடுலவிய வாலவடி வேலவா (தயவு)

சரணங்கள்

1 அண்டர்கள் முனிவர்கள் பணி தாளா – திவ்விய
கண்டினிய சொல் வள்ளி புணர் தோளா
செண்டுமுலைத்தெய்வானை மணவாளா – குண
சீலனே செகசாலனே சாமி (தயவு)

2 பன்னிரண்டு கரதலனே – சூரன்
தன்னை யெதிரில் வென்ற வலனே – நாளும்
நன்னிதிசேர் குறிஞ்சித்தலனே – மிகு
நயத்தனே வீர செயத்தனே சாமி (தயவு)

3 பங்கய வாவிகள் சூழும் – ஓங்குந்
தெங்கின மெங்கணு நீளும் – வயல்
சங்கையிலாது சுற்றி வாழும் – குன்றைச்
சரவணனே யெந்தன் புரவலனே சாமி (தயவு)

## 107. கருணுகரனே

பல்லவி

கருணுகரனே – தருணுதருணங் (கருணு)

அநுபல்லவி

கண்டுதான் காப்பாய் அன்பு கொண்டு (கருணு)

சரணங்கள்

1 அஞ்சாதே நீயென்று – பொல்லாத வினைதன்னை
மிஞ்சாது தானுடன் வென்று – நல்ல
அற்புதனே தமிழ் விற்பனனே ஆள்வாய் (கருணு)

2 வடிவேலணி கையனே – கானகம் வாழ்குறக்
கொடிமருவிய துய்யனே – நல்ல
கோலனே – யனு கூலனே யாள்வாய் (கருணு)

3 மாஞ்சோலைக் குயில் பாடும் – மண்மிகுந்த மலர்ப்
பூஞ்சோலை வளநீடும் – நல்ல மயில்மேல் வெகு
ஒயிலாளா ஆள்வாய் (கருணு)

## 108. நெஞ்சில் நினைத்தென்னை யாளாய்

பல்லவி

நெஞ்சில் நினைத்தென்னை யாளாய்

அநுபல்லவி

மஞ்சியங்குங் குன்றை மலைக்குருநாதா (நெஞ்சில்)

சரணம்

1 ஆறுமுகத் தெய்வமே வேறுதுணையுண்டோ
தேறு தமிழ்முனிவா – நீறுபுனை புயவா (நெஞ்சில்)

2 அரவணி பவனருள் சரவண பவகுக
புரவலவா வெயிற் கரதல ஆளு (நெஞ்சில்)

3 அண்டினரை ரட்சிக்கும் – எண்டிசையும் புகழும்
தொண்டினைமிகு காக்கும் சகண்டியின் மலைநாதா
(நெஞ்சில்)

## 109. உந்தனை நம்பினேன்

பல்லவி

உந்தனை நம்பினேன் சாமி
எந்தனை ரட்சிக்கவே (உந்தனை)

அநுபல்லவி

எங்கணு நிறைந்து நின்றவனே – அசுரரை
யெதிர் வென்றவனே (உந்தனை)

சரணங்கள்

1 ஞானவர் தேடிய பொருளே – அந்த
வானவர் தேடிய வருளே (உந்தனை)

2 பங்கய வாவிகள் சூழும் - குன்றை
தங்குமலையில் நிதம் வாழும் (உந்தனை)

## 110. நீயே கிருபை செய்

பல்லவி

நீயே கிருபை செய்வாயே – என்னுடைத்
தாயே அருளிய சேயே நாயேனிடம் (நீயே)

அநுபல்லவி

எந்தனிடத்தில் வந்த பழவினையுந் தவிர்த்தருளிய (நீயே)

சரணம்

கந்த சுவாமியே – அடியானதினாலுன் அடி
தொழுவதினாலென்
மிடிதவிர்த்திட னெந்தன் குடிகாக்குந் தேயமே
முன்பு நின்று தொழு மன்பர்கள் பரவிய
தேன்சிகிமலை வாழ்வான சிறைமயில் வாகா (நீயே)

## 111. எப்போது சொல்லையா

பல்லவி

எப்போது சொல்லையா - உன்னைக்
கைப்போது கொடு அன்பர் முப்போதும் பணிபாதா
(எப்போது)

அநுபல்லவி

வஞ்சக வசுரனை யெதிராடி வெலும் வேலா
நெஞ்சில் நினைக்கும் அன்ப ராள்தொறும் பணிகாலா
குஞ்சித பாதத்தர் கொடுத்திடும் பாலா
குருபரா அருள் முருகையா வெனை (எப்போது)

சரணங்கள்

1 ஆசைக்கிசை குறத்தி மேவிய பாகா
நேசத் தெய்வானைதன் காதற்கிசை மோகா
பாசத் தீவினை தீர்த்து அன்பரைக் காக்கும் யோகா
பாத பங்கய நாதயிங்கிதா (எப்போது)

2 மன்றல் மலர்ச்சோலை யெங்கணுந் தாவு
குன்றை மலைதனில் அன்புடன் மேவும்
நின்று விளையாடிக் கொண்டுடன் கூவும்
நீலமயில் வாகா வால வடிவேலவா (எப்போது)

## 112. பத்தன் முன்

பல்லவி

பத்தன் முன் வாருமையா - வந்து
மெத்த வரந் தாருமையா

சரணங்கள்

1 எந்தன் மனதின்படி உந்தன் மனதிரங்கி (பத்தன்)
2 தோகை மயிலிலேறி - ஓகையுடனேதானே (பத்தன்)
3 யகண்ட பரிபூரணு - செகண்டிமலை வேலவா (பத்தன்)

## 113. முருகையனே

பல்லவி

முருகையனே – மாயன்
மருகையனே

சரணங்கள்

1 செகநாதனே – ஆறு
முகநாதனே, குமரேசனே - யந்த அமரேசனே (முரு)
2 வடிவேலனே - குன்றுக்
குடிவேலனே (முரு)

## 114. உன்னையலால்

பல்லவி

உன்னையலால் வேறுமுண்டோ

அநுபல்லவி

என்னை யாதரிப்பதற்கு
ஆறிருகையனே - யினி (உன்னை)

சரணங்கள்

1 வேறிலை மெய்யனே
அஞ்சாதே நீயென்று – நெஞ்சார ரட்சிப்பது (உன்னை)
2 பாத வற்புதனே – நாதயிங்கிதனே
பாவையர் லட்சணு யாவதுடன் ரட்சிக்க (உன்னை)
3 பூவலர் வாழும் – வாவிகள் சூழும்
புகழ்ச்சிகிமலையர் அகமகிழ்ந்தருள (உன்னை)

## 115. பங்கய பாதனே

பல்லவி

பங்கய பாதனே - அன்பர்க்கு
இங்கித நாதனே (பங்கய)

அநுபல்லவி

மாலயன் தேடரிய அர்ச்சித தேகா (பங்கய)

சரணங்கள்

1 மேல்வர்கட் கரிதாய் விளங்கிய யோகா
கோல மானதொரு குறத்திதன் பாகா
குக குருபரனே - சுக சரவணனே (பங்கய)

2 சூரசம்மார வடிவேலா
வீர திரிபுரம் வென்றோர் பாலா
சார நயகுண சீலா – சந்திர சடாதரர்
தந்திடு சகோதரா (பங்கய)

3 பூமலர் சோலைகள் சூழும்
தாமரைப் பொய்கைகள் வாழும்
மாமணி மகுடங்கள் நீளும்
வருசிகி மேலொரு குமரேசா (பங்கய)

## 116. வேலாயுதக் கடவுளே

பல்லவி

வேலாயுதக் கடவுளே (வேலா)

அநுபல்லவி

நாலான வேதம்புகழ் நாதனே நீதனே (வேலா)

சரணங்கள்

1 வஞ்சக வினைதீர்த்து - நெஞ்சில் துயர் தீர்த்து
அஞ்சலென்றருள் செய்து ஆதரிப்பாய் ஐயனே
(வேலா)

2 தேனலரணி நீபா - வானவர் சேகரா
ஞானவர் பணிபாதா - ரட்சிப்பாய் ஐயனே (வேலா)

3 மன்றல் மலர்ப்பொழில் குன்றையின் மாமலை
யின்றனிராயா - என்னையாள்வாய் ஐயனே (வேலா)

## 117. தற்பராபரனே

பல்லவி

தற்பராபரனே - சாமி
சிர பராந்நதனே (தற்ப)

சரணங்கள்

1 கந்தனே குகனே - யருள் சுந்தராசெகனே
வாசனே ஐயனே வள்ளி - நேசனே மெய்யனே (தற்ப)

2 குன்றை நாதனே - மயிலின்மேல்
நின்ற போதனே (தற்ப)

## 118. ஐயனே

பல்லவி

ஐயனே எந்தனை ஆளாய்

அநுபல்லவி

துய்யனே குன்ருக்குடித் துரைக் குருபரனே (ஐயனே)

சரணங்கள்

1 சங்கரரருளிய பாலா - வடிவேலா
மங்கள குணகர சீலா - மயில் மேலா (ஐயனே)

2 மாது குறத்திதன் பாகா - கனயோக
போது தரித்திடு வாகா - திவ்விய தோ (ஐயனே)

3 மதிதவிழ்சோலைகள் சூழும் - குன்றைவாழும்
துதிபெறு சரவண நாளும் அருள் நீளும் (ஐயனே)

## 119. சரவணபவ குருவே

பல்லவி

சரவணபவ குருவே – அரகர சிவசிவா (சரவண)

அநுபல்லவி

ஆண்டவனே குகனே – பணிபூண்டவனர் மகனே
ஐயனே மெய்யனே (சரவண)

சரணம்

பங்கய மலர்ப் பாதனே – நயமிகு
இங்கிதமிகு நீதனே பரனே யரனே
மன்றல் கொள் பொழில் சூழும் –
குன்றையின் மலை வாழும் வாசனே யீசனே (சரவண)

## 120. சரணஞ் சரணம்

பல்லவி

சரணஞ் சரணம் நம்பினேன் –

அநுபல்லவி

அரகரா குன்றைமலை ஐயனே மெய்யனே (சரணம்)

சரணம்

1 மாதவர் பணி பாதனே – மலர்
வேதியர் தொழு நாதனே – அந்த
வாலவடி வேலனே கோல மயிலாளனே (சரணம்)

2 அம்பிகை தருபாலனே – நாளும்
நம்பினர்க் கருள் சீலனே
அருள் ஐயனே துய்யனே (சரணம்)

3 சோலையிற் குயில் கூவும் – பெண்கள்
மாலையில் மயில் மேவும் – குன்றையின்
தோகைமலைக் குமரா – வாகைதரித்த புயா (சரணம்)

## 121. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே – குன்றை
வாழுமையனே (ஆளு)

அநுபல்லவி

அன்பர் நாதனே – பரவும்
உம்பர் நீதனே (ஆளு)

சரணம்

மங்கை பாலனே – மலர்ச்
செங்கை வேலனே
ஆண்டவனே குகனே – பணி
பூண்டவனார் மகனே (ஆளு)

## 122. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்கவேணும் (அடியனை)

அநுபல்லவி

படிபுகழுங்குன்றைப் பரனே யரனே (அடியனை)

சரணங்கள்

1 பங்கய மாமல ரயன்பணி செயும் பாதா
சங்கர னருளிய சண்முக நாதா
பஞ்சாட் சரனே – நெஞ்சாரக் காப்பாய் (அடியனை)

2 மணமிகுந்திடு நீப மலரணி தோளா
தன மிகுந்திடு குழற்றையல் மணாளா
வானவர் சகாயா – தானவர் மோசா (அடியனை)

3 மாமலர்ச் சோலைகள் வளமுடன் நீளும்
தாமரை மிகுதட மிகுமது சூழும்
வளர் சிகிமலையா யழகிய மயிலா (அடியனை).

## 123. திருப்பாதந் தரவேணும்

பல்லவி

திருப்பாதந் தரவேணும் –குன்றைத் (திரு)

அநுபல்லவி

குன்றைப் பொருப்பா உன்றனை நாளும்
போற்றிய அடியெற்குத் (திரு)

சரணங்கள்

1 கங்கை தரித்த சடாதரனார் – மானைச்
செங்கை பிடித்த யீசுரனார் – தரு
கர்த்தனே முத்தனே (திரு)

2 வானவர் பணிதரு காலா – நீபத்
தேனலரணி புய சீலா – திவ்விய
மயிலா ஒயிலா (திரு)

3 அண்டின பேர்களைக் காக்கும் –
செகண்டிமலை நாளு மேற்கும் – அருஞ்
சுப்பையனே மெய்யனே (திரு)

## 124. அஞ்சாதே

பல்லவி

அஞ்சாதே மனமே – (அஞ்சா)

அநுபல்லவி

மஞ்சாற் பொழிற் குன்றை மன்னவனிருக்க (அஞ்சா)

சரணங்கள்

1 சந்திர சடாதரர் பாலன் — உயர்
இந்திரர் முதலோர் பணி கோலன் — மதத்
தந்த முகனிலகு தொந்தி(வ)யிற்றோனிருக்க (அஞ்சா)
2 சூர சம்மாரஞ் செய் வேலன் — பச்சை
வீர சிங்கார மயிலோன் — நய
தூயன் — குறவள்ளிதன் நேயன் முருகன் இருக்க
(அஞ்சா)
3 அண்டமுயரும் பொழில் சூழும் — முடிச்செ
கண்டி மலை நிதம் வாழும் — முரு
கையன் பன்னிரு கையன் மெய்யனிருக்க (அஞ்சா)

## 125. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் — யார்க்கும் (தயவு)

அநுபல்லவி

நயமிகுந்த குன்றை நாதனே நீதனே (தயவு)

சரணங்கள்

1 வஞ்சகப் பிணிதனை மாட்டி — எந்தன்
நெஞ்சினிற் றுயரத்தை யோட்டி —
ஆடுமா மயிலேறு நாமவேலேந்தி (தயவு)
2 சூரசம்மார வடிவேலா — நல்ல —
தீர நயகுண சீலா — வள்ளி
தோகைதன் மணவாளா
ஓகைபுனை உலாஸா (தயவு)
3 தங்க மிகுமுடிகள் சூழும் — நாளும்
துங்கமிகு குன்றையில் வாழும் — அருள்
துரைக் குருபரனே — வரத்தை யருளிச் செய்து (தயவு)

## 126. கருத்தனே

பல்லவி

கருத்தனே — எந்தனை யாளுவாய் (கருத்)

அநுபல்லவி

திருத்தமான குன்றை மலைத்தேனே பெம்மானே நீ
(கருத்)

சரணம்

அண்டர் பணிதாளா — தொண்டர் பணியாளா
கங்கை யணிபாலா — செங்கை யணிவேலா
குன்றை மலைவாசா — நன்று புரியீசா (கருத்)

## 127. உன்றனை யலாது

பல்லவி

உன்றனை யலாது பின் துணையுண்டோ — (உன்)

அநுபல்லவி

தென் கயிலாசமான செகண்டி மலைக்குமரா (உன்)

சரணங்கள்

1 கந்தனுக்கே ஞானசம்பந்தனுக்கே இனிநான்
உந்தனுக்கே யடிமை யெந்தனுக்கே இனித்தான்
(உன்)

2 உம்பர் பரவரிய நம்பர் திருப்புதல்வ
சம்பிரம மயிலாளா — கும்ப முனிசிலெட்டா (உன்)

3 மங்கை யிருவர் பாகா — செங்கை புனை அயிலா
சங்கையில் பிரகாசா பங்கய மலர்ப் பாதா (உன்)

## 128. சகல சனரட்சகன்

பல்லவி

சகல சனரட்சகன் நீயே (சகல)

அநுபல்லவி

சுக சரவணபவன் நீயே (சகல)

சரணங்கள்

1 தானவர் குலச் சேதன் நீயே — அந்த
வானவர் பணிபவன் நீயே — மெய்ஞ்
ஞானவர் சிகாமணியு நீயே — யார்க்கும்
நாயனு நீயே சேயனும் நீயே (சகல)

2 பங்கய மலர்ப்பதன் நீயே – வெள்
சங்க பாணி மருகனு நீயே – துணைத்
துங்க வடிவேலவன் நீயே – பரி
சுத்தனும் நீயே சித்தனும் நீயே (சகல)

3 குன்றை மலைக்கரசன் நீயே – அன்பர்க்
கென்றும் அனுக்கிரகிப்பவன் நீயே – நீப
மன்றல் மலர்ப்புயன் நீயே – செக
மாயனு நீயே சேயனு நீயே (சகல)

## 129. வருக வருக

பல்லவி

வருக வருக வேணுமையனே (வருக)

அநுபல்லவி

தருவுலவிய குன்றை மலைதனிலிருந்து மெய்யனே (வருக)

சரணங்கள்

1 வஞ்சனை மிடிதீர – நெஞ்சக மகிழ்ந்துடன்
தஞ்சம் வேறில்லையென போர்க்
கஞ்சல் அஞ்சல் என்றுள (வருக)

2 பூதலந்தனிற் றுன்ப – வாதனை யுள்ளபேர்க்குப்
பாதமலர் கொடுத்து ஆதரித்துடனுள (வருக)

3 திங்கள் தவழுஞ் சோலை யெங்கணு நிறைதரு
துங்க மயினமலை வாழுங் கருணாநிதியே (வருக)

## 130. சரவணபவனே

பல்லவி

சரவண பவனே சண்முக சிவனே (சரவண)

அநுபல்லவி

அரவணி பவனுர் அருளிய அவனே (சரவண)

சரணங்கள்

1 சங்கர சண்முக நாதா – வள்ளிக்(கு)
இங்கிதம் விளைத்திடு நீதா – எனக்
கிச்சை விளைத்திடும் பச்சை மயிலாளா (சரவண)

2 வாசனை நயத்திடும் நீபா – சூரை
நாசஞ் செய்துடனெதிர் கோபா
ரஞ்சித முருகா (சரவண)

3 சொன்ன முடியுயர்
நன்னய மிகுகுன்றை வாழும் – சக
ரட்சகனே அன்பர் பட்சமுளோனே (சரவண)

## 131. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்கவேணும் – முடிசேர்
செகண்டிமலை மூர்த்தி ராயிரா (அடியனை)

அநுபல்லவி

தெள்ளு தமிழின் வாயா – நல்ல
புள்ளி மயிலின் சேயா – குற

சரணங்கள்

1 வள்ளி மயிலி நேயா – என்முன்
வந்தருள் புரி நாதா (அடியனை)

2 தாதவிழ் மலர் வாகா – சகல
பூதலந் துதி யோகா – யருள்
நாத சண்முக சோகா – எனை (அடியனை)

3 ரட்சித் தருள்புரிவாய்
நன்றுளமுடி நீளும் – நாளும்
மன்றல் சேர் பொழில் சூழும் – நயஞ்சேர்
குன்றைமலையில் வாழும் – அருள்
குககுரு பரனே (அடியனை)

## 132. தெண்டாயுதத் தெய்வமே

பல்லவி

தெண்டாயுதத் தெய்வமே (தெண்டா)

அநுபல்லவி

வண்டார் பொழில் குன்றை மலை முருகேசா (தெண்டா)

சரணங்கள்

1 அண்டர்கள் பணிசெயும் அரனே யரனே
தொண்டர்கள் தேடரிய துரையே துரையே (தெண்டா)

2 ஞானர்கள் பணிசெயும் நயனே நயனே —
தானவர் குலச்சேதா சண்முகா சண்முகா (தெண்டா)

3 வள்ளி தெய்வானை தன் மாலாய் மாலாய் —
புள்ளி மயிலேறும் புனிதா புனிதா (தெண்டா)

4 குன்றையின் மலைவரு குகனே குகனே
நன்றருள் பணிசெயும் நாதா நாதா (தெண்டா)

## 133. பாத தெரிசனந் தரவேணும்

பல்லவி

பாத தெரிசனந் தரவேணும் —
சீதமதி தவழும் செகண்டிமலை முருகா (பாத)

அநுபல்லவி

கங்கை தரித்தவர் தன் பாலா — குற
மங்கைக் கிசைந்த லோலா (பாத)

சரணம்

அண்டர் பணி செயும் நாதா — மகா
தொண்டர்கள் துதி செயும் போதா
நின்ருடும் பொழிற்சிக மேரா — எனக்கு
நன்ருன வருள் செய்வை சீரா (பாத)

## 134. காத்து ரட்சிக்கவேணும்

பல்லவி

காத்து ரட்சிக்க வேணும் — மாத்துயர்
முடிதவழும் மலர்ப்பொழில் குன்றை நாதா (காத்து)

அநுபல்லவி

அஞ்சாதே என்று நெஞ்சார மகிழ்ந்து
அருமறை புகழப் பெருமையுடனருளி (காத்து)

சரணம்

குமர குருபரா யமரா பகயங்கரா — குளிர்
தினைப்புனை மயில் பழகிய கணவா —
அண்டமுயர்ந்திடு செகண்டி மலையில்
வரும் ஐயனே பன்னிரு கையனே என்சாமி (காத்து)

## 135. பன்னிருகையனே

பல்லவி

பன்னிரு கையனே –
என்னரு வினை தீர்ப்பாய் மின்னிய வேலனே (பன்னிரு)

அநுபல்லவி

ஆதரித் தெனைரட்சித் தாண்டருள்வாயே –
மாதரிருவர் புணர் வடிவுள நீயே (பன்னிரு)

சரணம்

கங்கைச் சடாடவியார் கருத்துள பாலா –
சங்கத் தலைவர் மகிழ்தமிழ்க் கொரு மேலா
யடல்புரி சூரை யடர்த்திடும் அயிலா
மடலவிழ் பொழிற்சிகிமலை வரு மொயிலா (பன்னிரு)

## 136. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே – எனக்கு
வேறுமுக மில்லையே (ஆறு)

அநுபல்லவி

தங்க வடிவேலனே –
துங்க மயில் லோலனே (ஆறு)

சரணம்

சங்கர குமாரனே –
மங்கள வொய்யாரனே
குன்றைமலை வாசனே – நன்றருள் குகேசனே (ஆறு)

## 137. என்னையாள வேணுமையனே

பல்லவி

என்னையாள வேணுமையனே (என்னை)

அநுபல்லவி

உன்னை அடுத்தவர்க்குப் பின்னை யொருவருண்டோ
(என்னை)

சரணங்கள்

1 சமரமிடுஞ் சூரனைத் தகர்த்திடு மயிலா —
அமரர் பயங்கரந் தீர்த்து ஆண்டருள் பயிலா
குமரிகுறத்தி புணர் கோலாகலா வொயிலா — பமர்
நிறைந்த நீபக் கமழ்மலர் மார்பா (என்னை)

2 வனமா மலர் மனைவருமொரு வேதா
தினமும் அடியவர்கள் தேடிய பாதா
மனமகிழ் முனிவர் வாழ்த்திய நாதா
தனதடியார்களைத் தினமும் ரட்சிக்கும் யோகா
(என்னை)

3 மதுமலர்ச் சோலைகள் வளமுடன் சூழும்
விதுதவழ் மாமுடி வெகுவெகு நீளும்
முதுமையாகிய சிகிமலை முடி வாழும்
சதுமறை புகழ்பவா இது சமயம் ஐயனே (என்னை)

## 138. மனதே கண்டு தரிசிப்பாய்

பல்லவி

மனதே கண்டு தரிசிப்பாய் —

அநுபல்லவி

கனககிரிச் செகண்டி கர்த்தனை முத்தனை (மனதே)

சரணங்கள்

1 ஐயனைப் பன்னிருகையனைப் பூதியணி மெய்யனைப்
பரிசுத்தத் — துய்யனை மெய்யனை (மனதே)
2 சேவலனைச் சங்கத்துப் — பாவலனைத் தெய்வானை
யாவலனை யண்டர்கள் காவலனைத் தின நீ (மனதே)
3 அண்டினபேரைக் காக்கும் வண்டின மிசைபுரி
மண்டிய பொழில்சேர் செகண்டி மலையரசை (மனதே)

## 139. கருத்தனே

பல்லவி

கருத்தனே யெனை யாளாய் (கருத்தனே)

அநுபல்லவி

திருத்தமான குன்றைத் தேவனே தேவனே
(கருத்தனே)

சரணங்கள்

1 உண்மை யறிந்தவர்க்கு வண்மைதனை யுதவும்
ஒருத்தனே தேடரிய விருத்தனே சாமி (கருத்தனே)
2 தெள்ளிய தினைப் புனத்து - வள்ளி மருவு புய
சேவலனே யுன்பர்க் காவலனே சாமி (கருத்தனே)
3 குயிலது கூவிய மயினமலை மேவிய
கோலனே துதிவேலனே சாமி (கருத்தனே)

## 140. சித்த மிரங்கலையோ

பல்லவி

சித்த மிரங்கலையோ
பத்தனிடத்தில் அன்புவைத்து ரட்சித்தாள (சித்த)

அநுபல்லவி

காலாயுதக் கொடியாய் வேலாயுதக் கையா
நாலாம் பதவிதந்து மேலாயெனை ரட்சிக்க (சித்த)

சரணம்

உந்தனைக் கதியென்று சிந்தனை செய்பவர்
வந்தனை புரிபவர் நிந்தனை வினைதீர்க்க
நின்றுடிய பொழிற் குன்றுக் குடிக்குக
நின்றுள் பணிவோரை யின்று தரித்தாள (சித்த)

## 141. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே -எனக்கு
வேறுமுக மில்லையே (ஆறு)

அநுபல்லவி

கூறுபடை வேலணியும் கொற்றவருள் உற்றவா (ஆறு)

சரணங்கள்

1 கங்கை தரித்தசடைக் கர்த்தர் அருள்பாலா
மங்கை குறக்கொடியை மருவிய மாலா (ஆறு)
2 பாதபங்கய நய பார்வதி புத்திரா
போதமெய்ஞ் ஞான மோனபுண்ணியர் மித்திரா (ஆறு)
3 நின்றுட் கடியரை ரட்சிக்கு நாதா
குன்றுக் குடிமலைக் குருபர நீதா (ஆறு)

## 142. வரந்தர வேணுமையனே

பல்லவி

வரந்தர வேணுமையனே – எங்கும்
நிரந்தர மானகுன்றை நீதனே நாதனே (வரந்)

அநுபல்லவி

ஆதியநாதியாய் யாவும் நிறைந்தாய்
நீதியநீதியாய் நின்றெங்கு முறைந்தாய் (வரந்)

சரணம்

மாயா விநோத வடிவுள்ளவனே
தாயா யெவர்க்கும் ரட்சக சிவ சிவனே
செகண்டியின் மாமலைத் திருமுருகேசா
அகண்டபரி பூரணாநந்த விலாசா (வரந்)

## 143. அருமறைபுகழ் சரணா

பல்லவி

அருமறைபுகழ் சரணா – திருவளர் (அரு)

அநுபல்லவி

குன்றைமலைத் தேவ தேவனே (அரு)

சரணங்கள்

1 கங்கையணி சடாதரர் பாலா – குற
மங்கை குறத்தி மேவுலோலா (அரு)
2 அடியவர் பணிசெயும் பாதா – குன்றுக்
குடிமலை வளருங்குக நாதா (அரு)
3 பன்னிரு கரதல முருகா – நாளும்
என்னிதயத்தில் வளர் குருகா (அரு)

## 144. உமை பாலனே

பல்லவி

உமை பாலனே – இமையோர் பணி – பிர்மை
யாகிய பிறவி நோயெனும்

அநுபல்லவி

சுமை தீரிடத் துரையே யருள் (உமை)

சரணங்கள்

1 அடியரிடை மிடி தீரிடத் துடியாயருள்
வடிவேலவா (உமை)

2 சொற்பன மாகிய யிற்கொடு வாழ்வினில்
அற்புடன் விழுமெனைப் பொற்பதத்தினில் ஆள்வாய்
(உமை)

3 அண்டர்களும் நிறை தொண்டர்களும் பணி
வண்டலர் பொழில் சிகி தண்ட பாணிய ஆளாய்
(உமை)

## 145. மருந்தொன்று தாராயோ

பல்லவி

மருந்தொன்று தாராயோ (மருந்)

அநுபல்லவி

முருந்தொன்று முரல் மின்னூர் மோகா வாகா (மருந்)

சரணங்கள்

1 ஆசா பாசமென்னும் அலைகட லாழ்ந்து
காசரா முலையார்கள் காமத்தில் வீழ்ந்து
பேசாம லிருந்து பித்தர்கள் போலலைந்து
மோசாதி மோசத்தினுன் முடிந்திடும் வினைக் கான
(மருந்)

2 தாயார் வயிற்றில் வந்து தானே பிறந்து
மாயா வினோதத்தினுல் வளமுடன் சிறந்து
ஓயாத் துயரத்துக் குள்ளாகி மெலிந்து
நோயாளியாய் விழுந்து நொடித்துப்போம்
வினைக்கான (மருந்)

3 மருமலர்ப் பூம்பொழில் மருவியே சூழும்
திருவளர் குன்றைமலை சிறந்துடன் வாழும்
குருபர குமரகுக சரவண பவவொரு
முருகா யெந்தனுள வினைக்கான (மருந்)

## 146. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே — ஒருகாலும் (மறக்)

அநுபல்லவி

துறக்காளரான தேவர்துதி சிகிமலை யோனை (மறக்)

சரணங்கள்

1 பங்கய வானன மங்கையர் தருகிற
சங்கையில் மயலெனுங் கங்கையி லமிழ்ந்து
கரை யெடுத்த பேரை விரைவா யெடுத்தாளும்
கர்த்தனை யருள்செயும் சித்தனை நாளும் (மறக்)

2 விற்பன வன்பர்பணி யற்புத சரனை
பொற்புயர் மயிலேறுந் தற்பர குருவை
சங்கர சண்முகனைத் துங்கவடி வேலோனை
சரவண பவனை யரகர சிவனை (மறக்)

3 மிஞ்சிய பொழில்மிசை மஞ்சுகளுலவியே
துஞ்சிய நயமிகு அஞ்சிறை மயின மலை
ஆண்டவனை – நீபம் – பூண்டவனை
முருகையனை பன்னிரண்டு கையனைத் துய்யனை (மறக்)

## 147. சரவணபவனே

பல்லவி

சரவண பவனே
அரகர சிவனே

அநுபல்லவி

வாதடர் சூரை வதைத்திடு வேலா
போதடர் பொழில் மின்னைப் புணர்ந்திடு மாலா (சரவண)

சரணங்கள்

மங்கள கரவுமை மகிழ்ந்திடு புத்திரா
துங்கமெய்ஞ் ஞான போதர் துதித்திடு மித்திரா (சரவண)
நன்றுள் அன்பர்பணி நாத விநோதா
குன்றுக் குடிமலைக் குருபர நீதா (சரவண)

## 148. அருமறைபுகழ் சரணு

பல்லவி

அருமறைபுகழ் சரணு – நாளும் (அருமறை)

அநுபல்லவி

திருமகள் நிதம்வளர் ஒருசிகிமலை நாதா (அருமறை)

சரணங்கள்

1 அண்டமெலாம் புகழ்கொண்ட குகேசா
வண்ட மெய்ஞ்ஞான தண்டஞ்செயும் வேலனே
(அருமறை)

2 வனசமலரை நிகர் கனக கிண்கிணிக்காலா
அனவரத மன்பரை மனதில் நினைக்கும் யோகா
(அருமறை)

3 அண்டின பேரைக்காக்குஞ் செகண்டிமலை ஐயனே
(அருமறை)

## 149. உன்னைச் சதமென்றெண்ணும்

பல்லவி

உன்னைச் சதமென் றெண்ணும்
எனைக் காத்து ரட்சிப்பாய் ஐயனே (உன்னை)

அநுபல்லவி

மின்னைப் பொருதுங்கக் கதிர் பொன்னைப் பொரு
அயிற் கையனே (உன்னை)

சரணங்கள்

அடியவர் தங்களுடை மிடிதனைத் தீர்த்தாளு நாதனே
துடியுள்ள தானவர் முடிபட வுடன்பணி பாதனே
மன்றல் மலர்ப்பொழில் நின்றடர் சிகிமலை யோகா
உன்றய வினிவேணும் என்றவர்க் கருள்புரி மோகா
(உன்னை)

## 150. கதிதர வேணுமையனே

பல்லவி

கதிதர வேணுமையனே – குன்றைப்
பதிவருகுக குருபர தேசிகா – எனக்கு (கதி)

அநுபல்லவி

எங்கும் பிரகாசஞ் செயுஞ் சோதியே – யருள்
பொங்குங் கருணாநிதியே (கதி)

சரணங்கள்

ஆறுமுகக் குமரேசனே – யினி
வேறுமுகமிலை யீசனே (கதி)
செகண்டிமலையில் வருமுருகா – நாளும்
அகண்ட பூரண மயிற் குருகா (கதி)

## 151. உனக்கடியவன்

பல்லவி

உனக்கடியவனுன வெனக்கொரு துணையுண்டோ
சொல்லையா (உனக்கு)

அநுபல்லவி

மனக்குறையும் நல்ல கனக்குறையுந் தீர்த்து வெல்லையா
(உனக்கு)

சரணங்கள்

1 அரிய மறை புகழும் நாதனே – அன்பர்க்(கு)
உரிய மலரை நிகர் பாதனே (உனக்கு)

2 பங்கய மாமலர் வேதா – உபதேசா
யெங்கணு முயர்குரு நாதா (உனக்கு)

3 குன்றுக் குடிமலை வாசா – நாளும்
நின்றுட் கன்பரை யரனீசா (உனக்கு)

## 152. சமயஞ் சமய முருகையா

பல்லவி

சமயஞ் சமய முருகையா (சம)

அநுபல்லவி

இமய மலையரசன் ஈன்றருள் பாலா (சம)

சரணங்கள்

1 உன்றனை நெடுநாளா வுவந்து வந்தடுத்து
என்றனை யாளுவா யினியென்று வெடுத்து (சம)

2 சிந்தனை உருகிடத் தியானம் செய்கின்ற
சொந்த வடியார்க்குத் துலங்கிய வருள் செய்ய (சம)

3 அண்டர்க்கும் முடியாத அரியதவங்கள் செய்து
கண்டருச் சனைசெய் கருத்தனே யென்று (சம)

4 விண்டு துதிபுரிவிரத்தி யன்பர்க்கு அருளு
கனக முடியுலவு கமழ்பொழின் துன்னும் (சம)

5 நவமணிச் சிகி யெழில்மலை யென்னும்
கனகமலைதனில் கருத்தனே வொருத்தனே (சம)

6 அனவர தமுந்தன் அன்பர்க்கு அருள்செய (சம)

## 153. முத்தி தரவேணுஞ் சாமி

பல்லவி

முத்திதர வேணுஞ் சாமி – நாளும் (முத்தி)

அநுபல்லவி

சித்தி விளக்குங் குன்றைத் தேவ தேவனே (முத்தி)

சரணங்கள்

1 உந்தனை நித மடுக்கும் எந்தனை யாண்டருள் செய்து (முத்தி

2 நித்தமுனையடுத்த – பத்தரை ரட்சித்து (முத்தி)

3 குன்றையில் வாழ் ஐயனே நின்றயவு வைத்தாண்டு (முத்தி)

## 154. ஆண்டருள்வாய்

பல்லவி

ஆண்டருள் வாய் ஐயனே – நீபம்
பூண்டவனே குன்றைப் புண்ணியனே சாமி (ஆண்)

அநுபல்லவி

வானுடர்பணி தேவ சேனுபதியே சாமி (ஆண்)

சரணங்கள்

ஐயனே பன்னிரு கையனே என்சாமி (ஆண்)
அற்புதமான சிகிப் – பொற்கிரி வாழும் சாமி (ஆண்)

## 155. தெண்டாயுதத் தெய்வமே

பல்லவி

தெண்டாயுதத் தெய்வமே
அண்டர் மேவும் பொழில் மயினமலை வாழும் (தெண்)

அநுபல்லவி

வாதடர் மணமுயர் போதலர் மலர் நீபா
காத்துடனெனையாள பாதபங் கேருகா (தெண்)

சரணங்கள்

பொல்லாத வினையாலே – கல்லாத மூடர் போல
நல்லாண்மை யாதொன்று மில்லா தலையலாமோ (தெண்)

மூவர்க்கும் விண்ணுட்டுத் தேவர்க்கும் – அன்பா
யாவர்களும் பணியுங் காவலனே யென்சாமி (தெண்)

## 156. எந்தனை யாளையனே

பல்லவி

எந்தனை யாளையனே – ஞானசம்
பந்தனே குன்றைமலை வாசனே யீசனே (எந்தனை)

அநுபல்லவி

ஒரு துணையிலை யுன் – னிருபதத்துணை யென்று
உருகு மன்பரைக் காக்கத் திருவருள் செய்தினி (எந்தனை)

சரணங்கள்

பாசக் கயிற்றினுல் நாசப் படக்கட்டி
மோசப் படாம லென்முன் நேசத்துடன் வந்து (எந்தனை)
வண்டின மதுவுண்டு கொண்டிசை செய்யும் பொழில்
மண்டி வளர்ந்திடு செகண்டியின்மலை நாதா (எந்தனை)

## 157. அரகரா அரகரா சரவணபவா

பல்லவி

அரகரா அரகரா சரவணபவா

அநுபல்லவி

புரகர அரனுர் புத்திர குகா (அரகரா)

சரணங்கள்

1 சூரசம்மார வடிவேலா – அலங்
காரசிங்கார வள்ளிலோலா – அன்பர்
கருத்ததனில் நினைத்தபடி பொருத்திய நாதா
(அரகரா)

2 பங்கய மர்மலர் பாதா – நாளு
மங்கள சுபகர நாதா – நீப –
வாசமலரணியும் ஈச சண்முககுக (அரகரா)

3 வண்டினம் மதுவுண்டு பாடும் – வளங்
கொண்ட பொழில்களெங்கும் நீடும் – முடிக்
குன்றை மலையில் வாழுகின்ற பன்னிருகையா (அரகரா)

## 158. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும்

அநுபல்லவி

படிபுகழுங் குன்றுக்குடி வளருஞ் சிவபரனே பரனே
அரனே அரனே சாமி (அடியனை)

சரணங்கள்

1 இருவினைதீரிட ஒருவரம் அருள் செய்து
கருவினில் வருதுயர் தருவதை நீக்கும் (அடியனை)

2 தேன் திருவடிதன்னை என்றினிதாய்த்
துதிக்கின் அன்பரை நன்றினி தாகவே (அடியனை)

3 தெண்டிரை சூழ்தரு வண்டிசை பாடிய
மண்டிய பொழில்சூழ் செகண்டிமலை நாதா (அடியனை)

## 159. வள்ளி நாயகா

பல்லவி

வள்ளி நாயகா – ஆடும்

அநுபல்லவி

புள்ளி மயில் வாகனு – தெள்ளு தமிழ் அகத்தியா (வள்ளி)

சரணங்கள்

1 அண்டர்களுந் தொண்டர்களும்
தெண்டனிடு தண்டகரா (வள்ளி)

2 ஞானவரும் தானவரும்
மோனருங் காண் தினபரா (வள்ளி)

3 மிண்டியகா வண்டியுயர் மண்டிய செகண்டி ஐயா
(வள்ளி)

## 160. பத்தனைக் காப்பாய்

பல்லவி

பத்தனைக் காப்பாய் – கர்த்தனே குன்றை
முத்தனை உந்தன் (பத்தனைக்)

அநுபல்லவி

பங்கய காலா – செங்கையின் வேலா (பத்தனைக்)

சரணம்

மயிலேறும் பாதா – ஒயிலான நாதா
குன்றையின் வாசா – நன்றருள் ஈசா (பத்தனைக்)

## 161. நினைத்துக் கொள்வாய்

பல்லவி

நினைத்துக் கொள்வாய் மனதே (நினைத்துக்)

அநுபல்லவி

அனைத்துலகம் புகழ் – மெய்யனை (நினைத்துக்)

சரணங்கள்

1 ஆண்டவனை நீபம் பூண்டவனைச் சபைத்
தாண்டவனைச் சூரைக் கீண்டவனை – நாளும்
(நினைத்துக்)

2 ஐயனைப் பன்னிரு கையனைப் பொடியணி
மெய்யனைப் பரிசுத்த
துய்யனை நாளொரு தோறும் (நினைத்துக்)

3 அண்டின பேர்களை மிண்டிய வினையனைக்
கண்டிதஞ் செய்யும்
செகண்டியின் மலையோனை (நினைத்துக்)

## 162. ஆறுமுகக் குமரேசா

பல்லவி

ஆறுமுகக் குமரேசா – நான்றுன்

அநுபல்லவி

வேறுமுகங் காணேனே – கூறுபடை வேலோனே
(ஆறுமுகக்)

சரணங்கள்

1 அஞ்சாதே யென்று அபயஸ்தங் கொடுத்து
மிஞ்சாது வினைதன்னை விரட்டியே விடுத்து
மேன்மையு மன்பர்க்கு நற்பான்மையு முதவிய
(ஆறுமுகக)

2 ஆசா பாசத்தை அகன்றிடப் பண்ணி
நேசாதி நேசமாய் நின்றிட வெண்ணி
நேயவன்பர்க்குச் சகாயமது செய்யும் (ஆறுமுகக்)

3 தேறிய அடியவர் சிறந்துடன் கூடும்
மீறிய மலர்ப்பொழில் மேல்வளர்ந் தாடும்
மேலாகிய குன்றைக் கோலாகலா வருள் (ஆறுமுகக்)

## 163. தந்து ரட்சிக்கவேணும்

பல்லவி

தந்து ரட்சிக்க வேணும்
செந்துவர்வாய் வள்ளி சிந்தைக் கிசைந்த லோலா (தந்து)

அநுபல்லவி

எந்தன் மனப்படி யிச்சையுள யாவதும் (தந்து)

சரணங்கள்

1 கந்தமல ரினிதழ்க் கடம்பணி தோளா
உந்தன் அடியவன்றன் உண்மை அறிந்தருள் (தந்து)
2 சுந்தரவடிவேலா தோகை மயிலின் வீரா
இந்தச் சன்மத்தில் அன்பன் இதயத்தின் படியருள் (தந்து)
3 கொந்தலர் மணம்பொழில் குன்றையின் வாசா
சொந்த வடியவன்றன் துகளறுத் தினியருள் (தந்து)

## 164. குருநாதனே

பல்லவி

குருநாதனே – அருள் – தருபாதனே

சரணங்கள்

1 குமரேசனே – எதிர் – சமரேசனே
குகநாயகா – இந்தச் – செகநாயகா (குரு)
2 மயில் வேலனே – குறத்தி ஒயில் லோலனே
கண்டியாளனே – உயர் – செகண்டியாளனே (குரு)

## 165. அரகரா சண்முகநாதா

பல்லவி

அரகரா சண்முகநாதா – நீதா (அர)

அநுபல்லவி

புரவரர் அருளிய போத மெய்ஞ்ஞான (அர)

சரணங்கள்

1 வேதாந்த மயமே நாதாந்த முடிவே
போதார்ந்த சரணு நீதார்ந்த வடிவே
எங்கும் பிரகாசா எங்கும் குணேசா (அர)

2 தங்கும் கிருபேசா கொங்குநி பேசா
மண்டலந் துதிக்கும் அண்டர்கள் மதிக்கும்
தொண்டர்சூழ் குன்றை வேதண்ட விலாசா (அர)

## 166. சரண முந்தனை நம்பினேன்

பல்லவி

சரண முந்தனை நம்பினேன் (சரண)

அநுபல்லவி

திரணமென்றெண்ணிச் சூரை
செயித்திடு வேலா (சரண)

சரணங்கள்

1 பருவ மதிவதனர் கருமுகிற் குழலியர்
பருவரை நிகர்தனத் திருவர் மருவும் லோலா (சரண)

2 அடியவர் தங்கட்கு மிடிதனைத் தீரச் செய்து
குடிகாக்குந் தெய்வமென்று கடிமலர் கொடுதூவி (சரண)

3 வானள வுயர்கின்ற தேனலர்ப் பொழில்கள் சூழ்
மாநல மிகுகுன்றைக் கியான பதியே யென்சாமி (சரண)

## 167. வாராயோ என்சாமி

பல்லவி

வாராயோ என்சாமி — வந்தருள் தாராயோ என்சாமி

அநுபல்லவி

சீராருங் குன்றைத் தேவ தேவனே (வாராயோ)

சரணங்கள்

1 பன்னிரு கையிலும் மின்னிய வேலெடுத்துத்
துன்னிய மயிலேறி யென்னிதயம் மகிழ (வாராயோ)

2 தேனல ரணிகுழற் பானல மிகுமொழி
வானக மயிலுடன் கானக மயிலுடன் (வாராயோ)

3 நின்றுட் கடியரை நன்று தரித்துடன்
பொன்று தருள்செய்த குன்றுக் குடியிருந்து
(வாராயோ)

## 168. முருகையா

பல்லவி

முருகையா யறுகையா உனைப்பணி அன்பரைக் காக்கும் (முரு)

சரணங்கள்

1 வேத வேதாந்த நாத நாதாந்த (முரு)
2 ஞானசற்குணகர மோனவற் புதமான (முரு)
3 மண்டிய பொழில்சேர் செகண்டியின் மலைவாழும் (முரு)

## 169. மயிலேறும் பெருமாளே

பல்லவி

மயிலேறும் பெருமாளே

அநுபல்லவி

அயிலேறும் பன்னிரண்டங்கை முருகையனே (மயி)

சரணங்கள்

1 உன்னைச் சதமென்றெண்ணி உண்மையாயிருக்கும்
என்னைக் காத்து ரட்சி எம்பிரானே சாமி (மயி)
2 சகல புவன ரட்சக முருகையனே
அகமகிழ்ந் தெனைக் காப்பாய் அறுமுகக் குகனே (மயி)
3 வானவர் முனிவர் வணங்கிய குன்றைக்
கானகந் தன்னிலே கலந்து விளையாடும் (மயி)

## 170. அரனே அருள்வாய்

பல்லவி

அரனே அருள்வாய் – வரனே யருள்வாய்

சரணங்கள்

1 தேனே அருள்வாய் – மானே யருள்வாய் (அரனே)
2 மாயனே அருள்வாய் – சேயனே யருள்வாய் (அரனே)
3 ஐயனே அருள்வாய் – துய்யனே யருள்வாய் (அரனே)
4 ஓகையா அருள்வாய் – தோகையா அருள்வாய் (அரனே)

## 171. மனதுக்குத் திடஞ்சொல்ல வேணும்

பல்லவி

மனதுக்குத் திடஞ்சொல்ல வேணும் (மனது)

அநுபல்லவி

தனதுக்குவரும் வினைதன்னை யோட்டிப் பின்னை (மனது)

சரணங்கள்

1 ஆசாபாசத்தில் கெட்டலைந்துவரும் மோசாதி
மோசத்தில் அலைந்து
பொல்லா மூடத் தனத்தினில் நாடத்திரிந்திடும்
தீய வினைக்காகப் பிறந்து – நற்சொல் –
லாயபொருள்களை மறந்து – நாளும் (மனது)

2 அவதிப்பட்டுக்கொண்டு கவலைப்பட்டுக்கொள்ளும்
அகண்ட பரிபூரணநாதா – அந்தச் செகண்டிமலையின்
வருநீதா – திவ்விய –
செய்ய பங்கயபாதா – துய்ய திங்கள் வதனா (மனது)

## 172. உனக்கொரு குறைவருமோ

பல்லவி.

உனக்கொரு குறைவருமோ மனதே (உனக்)

அநுபல்லவி

தனக்குறை யின்றி தழைத்திடுங் குன்றைச்
சண்முகநாதனை யுண்ணினைந் திருந்தக்கால் (உனக்)

சரணங்கள்

1 அண்டர்கள் வினைதீர்க்கும் ஐயனை மெய்யனை
தொண்டர்க்கும் வினைதீர்க்கும் துலங்கும் வேற்கையனை
(உனக்)

2 துரைக்குருகனை – ஆறுசிரத்தனை நினைத்தால்
ஆண்டவனை யருள் பூண்டவனைத்தானை (உனக்)

3 காண்டலிதான குன்றைக் கனிந்திடுந் தேனை
கையினாற்கூப்பி மெய்யினாற் பணிந்தால் (உனக்)

## 173. வேலாயுதக் கடவுளே

பல்லவி

வேலாயுதக் கடவுளே – கோலாகலக் குமர குருபரநாதா
(வேலா)

சரணங்கள்

1 அமரர்கள் குலங்களை யழித்திடும் படியாய்ச்
சமரிடு சூரனைத் தகர்த்திடு துடியாய் (வேலா)

2 பெருந்திரையெங்கணும் பிரண்டுடன் கூவும்
கருங்கடல் மீதினில் கலக்கிட ஏவும் (வேலா)
3 மீறிய மலர்ப்பொழில் விர்த்தியாய்ச் சேரும்
தேரிய குன்றைமலைச் சேவகக் கூரு (வேலா)

## 174. காக்கவேணுமையனே

பல்லவி

காக்கவேணுமையனே – கடைக்கண் பார்க்க
வேணுமையனே

அநுபல்லவி

தீர்க்குமுள்ள குன்றைச் சேயனே நாயனே (காக்க)

சரணங்கள்

1 அரகர சிவகுரு பரகுமரேசா
பரவும் அடியவர்க்கு வரமருளீசா (காக்க)
2 எங்கணு நிறைந்து தங்கும் பிரகாசா
சங்கர சம்பு பங்கய பதனே (காக்க)
3 மண்டிய பொழில் செகண்டியின் மலையா
தொண்டர்க் கருளும் எண்டிசை நாதா (காக்க)

## 175. அரகர குருபரனே

பல்லவி

அரகர குருபரனே சரவணபவனே சண்முகசிவனே
(அரகர

அநுபல்லவி

பங்கய பாதனே – வள்ளிக் கிங்கித நாதனே (அரகர)

சரணம்

அண்டர்க் கற்புதனே – பணியும் தொண்டர்க் கிங்கிதனே
தோகையின் மேரா – வெற்றி வாகை ஒய்யாரா (அரகர)

## 176. கதிர் வடிவேலவா

பல்லவி

கதிர் வடிவேலவா – மதிதவழும் பொழின் மயின்மலை நாதா
(கதிர்)

அநுபல்லவி

சூரசம்மார – வீரசிங்கார (கதிர்)

சரணம்

திரையிருமேவும் வரையினும் மேவும் (கதிர்)
சிகிமலைவாழும் – மகிமைகள் நீடும் (கதிர்)

## 177. குன்றுக்குடிக் குமரா

பல்லவி

குன்றுக்குடிக் குமரா – நன்றுதரித்தருள் நாதனே நீதனே (குன்று)

அநுபல்லவி

தேவர் சேனுபதியே – அந்த மூவர் கண்டெடு நிதியே (குன்று)

சரணம்

கோதண்டனுர் மருகா – ஆறு வேதண்டம் வாழ் முருகா
சரவண பவகுருவே – விட அரவணி சிவவுருவே (குன்று)

## 178. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா – குன்றை – வரைக்குமரேசா (துரைக்)

அநுபல்லவி

மகிமைப் பிரதாபா – வாசஞ் – சுகமிக்க நீபா (துரைக்)

சரணம்

அழகுற்ற தேவா – நாளும் வளமுற்ற மூவா
வேதனனயனே – உயர் – சின்மயனே (துரைக்)

## 179. ஆனந்த நடராசனே

பல்லவி

ஆனந்த நடராசனே
கானந்தனில் வளரும் கன்னிவள்ளியின் லோலா (ஆனந்த)

அநுபல்லவி

என்னுடைத் தீவினைதனைத் தீரச் செய்குவாய்
பொன்னுடைய நிறம் பொருந்திய ஒயிலா (ஆனந்த)

சரணம்

பங்கய மாமலர்ப் பன்னிரு கரதலா
சங்கர சண்முக சரவண பவனே (ஆனந்த)
அகண்டபரி பூரண அற்புத குமரா
செகண்டி மலைவரு திவ்விய ரூபா (ஆனந்த)

## 180. அரகர முருகையனே

பல்லவி

அரகர முருகையனே – நாளும்
பரவரு மன்பர்க்கு வரமருள் துய்யனே (அரகர)

அநுபல்லவி

நெஞ்சினில் துயரங்கள் வஞ்சனை சூன்னியம்
மிஞ்சிட வருநோயை அஞ்சிட அருள்செய்யும் (அரகர)

சரணங்கள்

புள்ளி மயிலிலேறு – யள்ளிலை வேற்கரா
தெள்ளிய தமிழ்த்துதி விள்ளிடன் பர்க்கருள் (அரகர)
என்றைக்கும் நலஞ் செய்யும் மன்றற் பொழிலுறையும்
குன்றைக் கிரியினில் நின்றற்புத வருள்செய் (அரகர)

## 181. தாயே தயாபரனே

பல்லவி

தாயே தயாபரனே – அரனே (தாயே)

அநுபல்லவி

நீயென் முன்னம் வந்து ரட்சிப்பாய் ஐயனே (தாயே)

சரணங்கள்

1 உந்தனை நாள்தோறும் வந்தனை செய்கிற
எந்தனைக் காத்தருள் தந்தெனை ரட்சிப்பாய் (தாயே)
2 அற்புதமெனும் வாழ்வினில் துயர்படவலை
பற்பல மனதினை யற்புத மாக்குவை (தாயே)
3 மகிதலம் புகழுஞ் சிகிமலை நாதா
சுககுக குமாரா – மகபதி மருகா (தாயே)

## 182. காப்பாற்றுவாய்

பல்லவி

காப்பாற்றுவாய் ஐயனே (காப்பாற்று)

அநுபல்லவி

கூப்பாய்ச் சிறந்தபொழிற் குன்றைமலை நாதா (காப்பாற்று)

சரணங்கள்

1 அண்டருமன்புயர்த் தொண்டரு மணுகி தினந்
தெண்டனிடு மலர்ப் புண்டரிக சரணு (காப்பாற்று)

2 தீராத துயராலும் – பேராத வினையாலும்
சீராக வெந்தன் முன்நேராக வந்தினி (காப்பாற்று)

3 பாகைநிகர் மொழியா தோகைபுனை உல்லாச
தோகைமலையின்வாசா – வாகை புனையும் புயா
(காப்பாற்று)

## 183. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே
மஞ்சார்பொழிற் குன்றைமலைக் குகன் காப்பான்
(நெஞ்சே)

சரணங்கள்

1 தேனலர்க் குழலி வள்ளி மானணை புயனை
வானவர்பணிசெயும் ஞான சிகாமணியை (நெஞ்சே)

2 அண்டர்க்கும் பணிசெயுஞ் தொண்டர்க்குமரியோனை
தண்டகக் காதலனை வண்டர்க்கிசை நீபனை (நெஞ்சே)

4 நின்றசை மலர்ப்பொழிற் குன்றையின் மசாயனை
குன்றை வில்லி மைந்தனை யென்று மன்புடனுக
(நெஞ்சே)

## 184. ஐயனே

பல்லவி

ஐயனே மெய்யனே பன்னிரு கையனே (ஐயனே)

அநுபல்லவி

துய்யனே செய்யனே முருகையனே (ஐயனே)

சரணம்

ஈசனே வாசனே வள்ளிதன் நேசனே
தேசனே ராசனே எங்கும் பிரகாசனே
நின்றசை கின்றிடுஞ் சோலைக் குன்றயர்
மன்றி னின்றவர் மைந்தனே யொன்றுணே (ஐயனே)

## 185. அரகரா

பல்லவி

அரகரா சண்முகனே
அரகர ஞரருள்புண்ணியனே சாமி (அரகரா)

அநுபல்லவி

கானக்குறக்கொடிதனுகனே – நாளும்
ஞானத் தவத்தர் பணிபாதனே (அரகரா)

சரணம்

அண்டர் கலங்கச் செயுமாவே – விளக்
கொண்ட வயிலே விடுங் கோவே
உன்னத மிகுசிகி மலேயா – வெகு
நன்மைப் பொருட்டிவ்விய கலேயா (அரகரா)

## 186. சகல சனரட்சகனே

பல்லவி

சகலசன ரட்சகனே
மகபதி பணியுங் குன்றை வாசனே யீசனே (சகல)

சரணங்கள்

1 அண்டர் பணிகொண்ட முருகையனே துய்யனே
வண்டர்படி புண்டரீக மலர்ப்பதனே நலத்தவனே (சகல)

2 தெள்ளுதினே கொள்ளுபுனேச் செடிபுணர் மோடியனே
விள்ளுதுதித் தெள்ளுதமிழ் வித்தகனே முத்தையனே (சகல)

3 மருவுள் தருவுயர் – மயின்மலே ஒயிலா
திருமயில் மருகய தேவனே தேவனே (சகல)

## 187. குருபர

பல்லவி

குருபர குமரேச – அருளுஞ் – சரவணபவ குகனே (குருபர)

அநுபல்லவி

அரகர சிவசிவ ஐயனே மெய்யனே (குருபர)

சரணங்கள்

பன்னிரு கரதல நன்னய மிகுகன
என்னிரு வினைதீர்ப்பா யுன்னத வடிவேலே (குருபர)
மதுரித்த தமிழ்வாயா சதாவிதத் தலைமையாய்
விதுதறித் திடுவார் பாலா பதுமவற்புதத் தாளா (குருபர)
அண்டின பேர்க்கருளே செகண்டிமயில்மலை நாதனே
மண்டியவினை தீர்த்து – தொண்டனை யாளுவாய் (குருபர)

## 188. காப்பாற்றவேணும்

பல்லவி

காப்பாற்ற வேணுமையனே – மெய்யனே துய்யனே
(காப்பாற்ற)

அநுபல்லவி

காப்பாற்ற வேணுமையா தீய பாவி யானாலும்
கருத்தி னினைத்து நமக்கொருத்த னிவனென் றெண்ணி
(காப்பாற்ற)

சரணங்கள்

1 மண்டிய சாகரம் பொங்கும் – மகா
எண்டிசை சூழ்புவி யெங்கும் – மேவும்
அண்ட பகிரண்டர் தங்கும் – படி
கொண்ட சிறகை விரித்தெங்கும் – ஆடும்
கொண்டைமயிலேறித் தொண்டன் முன்னேவந்து
(காப்பாற்ற)

2 தொந்தம தாகவே முன்னை – நாளில்
வந்த வினையினைப் பின்னை – தீர்
உந்த னடியிணை தன்னைத் – துதி
வந்தனை செய்திடு மென்னை – வெகு
சொந்த மதாகவே வந்தடி யேன்றனை (காப்பாற்ற)

3 பொதின் மதுவுண்டு நாளும் – வண்டு
மோதிய பொழில்கள் சூழும் – நல்ல
சோதி மணிமுடி நீளும் – குன்றை
மீதிலெக் காலமும் வாழும் – யெங்கள்
ஆதிபரா பரநாத குகேசனே (காப்பாற்ற)

## 189. முருகா

பல்லவி

முருகா உந்தனை நம்பினேனே – யுந்தன்
இருகாலையும் பணியு மெந்தனை ரட்சிப்பாய் என்று
(முருகா)

சரணங்கள்

1 அமரர் பணிந்த காலா – சமர்மிகுந்த வேலா
குமர சண்முக சீலா – கோதண்ட பாகச்
செய்மாவேதண்டனு பாலா (முருகா)
2 சூர மிருடசம் மாரா – கோரமில் நகுவீரா
ஆர்சிறைந்தமரா – அன்புள்ள பத்தருக் கின்பத்தை
யருள்சீரா (முருகா)
3 கட்டஒண் மலர்நீவுந் துட்ட குறங்கு தாவும்
இட்டன்பர்துதி கூவு – மிலங்கிய மணிமுடி துலங்கிய
குன்றை மேவும் (முருகா)

## 190. கந்தனை மறவாதே

பல்லவி

கந்தனை மறவாதே – மனமே (கந்தனை)

அநுபல்லவி

கந்தனை ஞானசம் பந்தனை யரனருண் மைந்தனை யநுதின
முந்தனை ரட்சிக்கும் (கந்தனை)

சரணம்

ஐயனைப் பன்னிரு கையனை பருதிகொள்
மெய்யனைப் பரிசுத்த துய்யனை யருளும்
ஆண்டவனை நீப மருண்ட வனைமயிற்
றுண்டவனை யன்பாக கெண்டவனை யருளும்
வேதனை மனமிகு போதனைப் பங்கய
பாதனைக் குன்றையி னுதனை யருளும் (கந்தனை)

## 191. கருணாநிதியே

பல்லவி

கருணா நிதியே – யருமாமறைபுகழ் – ஐயனே துய்யனே
(கருணா)

அநுபல்லவி

உந்தன் அடியனென் றெந்தனை யாண்டருள் (கருணா)

சரணம்

இந்தா கிருபையென்று தந்தாதரித்தருள
வாளுங்குன்றைக்குடி யாளுங் குமரேசா (கருணா)

## 192. நாதனே

பல்லவி

நாதனே கிருபா கரனே யரனே (நாதனே)

அநுபல்லவி

போதனே குன்றக்குடிப் புண்ணியனே கண்ணியனே
(நாதனே)

சரணம்

நீறு புனைகின்ற நின்மல சொருபனே
மீறுமன்பர் பொல்லாத வினைதீர்க்குந் தீபனே
அண்டர்கள் சகாயனே யன்பர்க்கு நேயனே
அண்டர்கள் படியு நீப மாலையணி தூயனே
சொன்னமணி முடிநிறை தோகை மலைவாசனே
வன்னமுடித் தோகைமயில் வாகன வுல்லாசனே
(நாதனே)

## 193. ஆண்டவனே

பல்லவி

ஆண்டவனே குகனே – பணி –
பூண்டவனார் மகனே (ஆண்டவனே)

சரணங்கள்

1 ஐயனே பன்னிரு கையனே யெஞ்சாமி (ஆண்டவனே)
2 ஞானவனே யுயர்வானவனே யெஞ்சாமி (ஆண்டவனே)
3 அகண்ட பரிபூரண செகண்டிமலை யெஞ்சாமி
(ஆண்டவனே)

## 194. கருணாகர முருகா

பல்லவி

கருணாகர முருகா
பொருணாவலா போற்றும் புண்ணியனே யென்சாமி (கருணா)

சரணங்கள்

1 அண்டர்கள் பணி பாதனே – நல்ல
தொண்டர்க் கடுதிநாதனே (கருணா)

2 ஆனந்த நடராசனே – திவ்விய
ஞானவரு யீசனே (கருணா)

3 தோகைக் குருபரனே – வெற்றி
வாகைப் புயதரனே (கருணா)

## 195. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே – யினி
வேறுமுகம் போற்றியேன் கூறு படைவேலா (ஆறுமுக)

சரணங்கள்

1 கங்கைச் சடாடவியார் தருபாலா
செங்கைக் கிசைந்ததொரு வடிவேலா
மங்கைக் குறத்தி மருவிய லோலா
சங்கக்கையர் மருகா நேய சீலா (ஆறுமுக)

2 நடனமிடு மயிலின் வாகா
மடமயின் மாதரார் பாகா
வடவரை யவதரு யோகா
கடமதர் சோதர் மாகா (ஆறுமுக)

3 தங்கமணி முடியள் சூழும்
யெங்கணு மொழி நீளும்
துங்க மலர்ப்பொழிலி டாளும்
மங்கள சிகிமலையில் வாழும் (ஆறுமுக)

## 196. அரகரா

பல்லவி

அரகரா முருகையா – வேலைத்
திரமுட னணிகையா (அரகரா)

அநுபல்லவி

எனதுடல்வரு நோயை
உனதருளால் வெல்வாய் (அரகரா)

சரணம்

தீவினையா லெடுத்த
யாவியைக் காத்தருள்வாய்
புரண புராதனு
காரண சிகாகிரியா (அரகரா)

## 197. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்கும ரேசா — குன்றை
வரைக்கும ரேசா (துரைக்)

அநுபல்லவி

பத்தர் சகாயா — நித்திய சுபேசா
அத்துவித வாசா — நித்தி சபேசா (துரைக்)

சரணம்

பன்னிருகையா - சன்னிதி மெய்யா
நன்னய துய்யா — மின்னு சுப்பய்யா
நன்றருள் பாதா — மன்றல்கொள் போதா
வன்றிறல் வாதா — குன்றை யினுதா (துரைக்)

## 198. உந்தனை

பல்லவி

உந்தனை நம்பினேன் சாமி — யினி
எந்தனை ஆளுவாய் சாமி

சரணங்கள்

1 அம்புய மாமலர்ப் பாதா — வள்ளி
கும்பி தனத்தைசேர் நாதா (உந்தனை)
2 சங்கரர் அருளிய பாலா — நடனத்
துங்க மயிலேறிய கோலா (உந்தனை)
3 வண்டின் மொய்த்திடு நீபா - உயருஞ்செ
கண்டிமலை வளரும் பூபா (உந்தனை)

## 199. பால சுப்பிரமணியனே

பல்லவி

பாலசுப் பிரமணியனே
ஞாலம் புகழுங் குன்றை நாதனே நீதனே (பால)

அநுபல்லவி

அந்தரி யாமளை - சுந்தரி திரிபுரை
கந்தரி கையுமை - தந்தருள் பாலகா (பால)

சரணம்

மகபதி யிமையோர் - சுகமுனிவரர்கள்
செகவடி யவர்கள் - மகிழ்வோடு பணியும்
மருவளர் பொழில்சேர் - பெருமுடி நிறைசேர்
திருவளர் சிகியர் - பொருமலை வளரும் (பால)

## 200. ஒருகாலும் மறவாதே

பல்லவி

ஒருகாலு மறவாதே - மனமே
ஒருகாலு மறவாதே

அநுபல்லவி

பெருக்கான சோலைவளர் செருக்கான குன்றை யோனை
(ஒருகாலும்)

சரணம்

கானக வள்ளிபுணர் காமனைச் சோமனை
வானக மாதும்புணர் மாயனை நேயனை
அண்டர்கண் மிடிதீர்க்கு மையனை மெய்யனை
தொண்டரை ரட்சிக்குந் தூயனை நாயனை
வன்னமுடிச் செகண்டிவரையோனைத் துரையோனை
சன்ன வடிவேற் கரதலத்தனை நலத்தனை (ஒருகாலும்)

## 201. ஆதாரஞ் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் (ஆதாரஞ்)

அநுபல்லவி

போதரர் பொழிற்குன்றைப் புண்ணியனே யென்சாமி
(ஆதாரஞ்)

சரணங்கள்

1 உந்தனை நம்பி எந்தனை யாதரித்தாய் – (ஆதாரஞ்)
2 அடியிணை மலர்தோறும் - அடியவர் மிடிதீர்த்த
(ஆதாரஞ்)
3 குன்றைமலை நாதா இன்றெனை யாண்டினி (ஆதாரஞ்)

## 202. சாமி சித்தம்

பல்லவி

சாமி சித்த மெப்படியோ – மனதே
சாமி சித்தமெப்படியோ - மனதே (சாமி)

அநுபல்லவி

பூமி புகழுங் குன்றைப் பூபதியெனுங் குமர (சாமி)

சரணம்

அஞ்சாதே யென்று வருமை செய்வாரோ
மிஞ்சாதே யென்று வினையைத் தீர்ப்பாரோ
பொல்லாத நோயதனைப் போகச் செய்வாரோ
எல்லாப் பிள்ளையை யுமென்று தீர்ப்பாரோ
குன்ருக் குடிவளர் குருபர சாமி
தன்ருழ்க் கடியனுர்த் தாங்குவரோ சாமி (சாமி)

## 203. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே - செய
சமர வயிற்கரனே (குமர)

சரணங்கள்

1 பங்கயமலர் வேதா செவியிற் பரிவுட னுபதேசா - யிரு
மங்கள சுபகர மடவியர்நேசா - (குமர)
2 நம்பிய வடியவரை ரட்சிக்கும் யோகா
உம்பர்கள் பரவிய ஒளிர்விடு தேகா (குமர)
3 அண்டமளாவு சோலை யெங்கு மடர்ந்திடுந்
சிகிமேரா - நன்கு
வண்டர் குலாவு நீப மாமலரணி மாரா (குமர)

## 204. மனதே மறவாதே

பல்லவி

மனதே மறவாதே – குன்றைக்
கனக் கிரியில் வருகர்த்தனை நித்தனை (மனதே)

சரணங்கள்

1 அற்புதனை கல்லே – விற்பனனை நீப
பொற்புயனைப்பா – தற்பரனைத் தினம் (மனதே)
2 காரணனை நான்கு – யாரணனைத் திவ்விய
நாரணனை யருள் – பூரணனை நிதம் (மனதே)
3 ஈசன் எங்கும் பிரகாசனை யுயர்குன்றை
வாசனையருண் முருகேசனை நித நிதம் (மனதே)

## 205. வாரா திருக்கலாமோ

பல்லவி

வாரா திருக்கலாமோ – வந்து வரந்
தாரா திருக்கலாமோ (வாரா)

அநுபல்லவி

சீராக நாளு திவ்விய மலரைக் கொண்டு
தேடிப் பூசிக்கு மன்பனுடிக் கொண்டபடிசரி (வாரா)

சரணங்கள்

1 கருத்தனே யருளொருத்தனே நல்ல நிருத்தனே
சுபவிருத்தனே யென்று
கருத்தினினை பத்தர்க்கு வருட்செய்ய வேண்டியே
(வாரா)
2 ஐயனே பன்னிரு கையனே பூதிமெய்யனே யெங்குந்
துய்யனே யென்றுஅடி தொழும் பத்தர்க் குடிவளரச்
செய்ய (வாரா)
3 குன்ருத மலர்ப்பொழில் நின்ருடியகன
குன்ருக் குடிக்கன்ப நின்ருழ்க் கன்பன்முன்
குறைவற வருள்செய்து நிறைபட வேண்டியே (வாரா)

## 206. முருகா

பல்லவி

முருகா வுந்தனை நம்பினேன் (முருகா)

அநுபல்லவி

குருகான மயிலேறுங் குகனே யானார் மகனே சாமி
(முருகா)

சரணம்

எங்கும் பிரகாசம் விளங்குங் கிர்பாகரா
பொங்கு மனுக்கிரகந் தங்கு மரவரா
ஆண்டவனே நீபம் பூண்டவனே நாதா
நீண்டவனே யன்பர்க் கெண்டவனே போதா
மன்றன் மலர்ப்பொழி வென்றுமே சூழும்
மின்றகு மாமுடிக் குன்றைமலை வாழும் (முருகா)

## 207. ஆரை நம்புவேன்

பல்லவி

ஆரை நம்புவேன்
ஆரை நம்புவேன் – (ஆரை)

அநுபல்லவி

சீரை மேவுகுன்றை வாழுந் தேவ தேவனே (ஆரை)

சரணம்

சங்க பாணியோன் மகிழுந் தனது மருகனே
துங்க மாமயிலேறி யாடிய துரைமுருகனே
அம்புய மாமலர் போலிலங்கு மழகிய பாதனே
கும்பிடு மன்பர்க்கு அருள்கொடுத்த நாதனே
பருத்த முடிக்குன்றைப் பருப்பதத் தின்வாசனே
கருத்தனே குகனேயருள் கார்த்திகேசனே (ஆரை)

## 208. பெருமானே

பல்லவி

பெருமானே யெனையாளாய்
ஒருமானைக் கையிலேந்து யுமைநாதன் அருள்பாலா
(பெரு)

அநுபல்லவி

வந்தவினை தீர்த்து எந்தனை யாதரித்து
சொந்தமிவனென்றெண்ணி – யுந்தன ருளைத்தந்து
(பெரு)

சரணங்கள்

மாயத்தாளி லியர்கணேயத்தி லழுந்தியே
காயத்தை நயம்பெறவே யற்பின் அருள்செயாது (பெரு)
திருமுடி நிரைதரு – மருவளர் பொழிலுறை
ஒருசிகி மலைவளர் – குருபர குமரேசா (பெரு)

## 209. ஐயனே

பல்லவி

ஐயனே குருபரனே – பன்னிரு
கையனே பூதியணி மெய்யனே யெனையாளாய்
(ஐயனே)

அநுபல்லவி

பொல்லாத தீவினையால் இல்லாத துயரெய்தி
போவதைத் தீர்த்து நயமாவதைத் தருகுவை (ஐயனே)

சரணம்

மாயப் பிறவியெனுந் தோய்க்கடல் விழுந்து
மயங்கா மனமது தியங்காமல் அருள்புரி
தங்கமுடி யுலவு துங்கமயின் மலைவாழ் – வாசனே
பிரகாசனே சாமி (ஐயனே)

## 210. நித்த மறவாதே

பல்லவி

நித்த மறவாதே மனமே (நித்த)

அநுபல்லவி

பரிசுத்தனை செகண்டிமலைக் கர்த்தனையென் சாமிதனை
(நித்த)

சரணங்கள்

1 பத்மமலர்ப் பாதனை – யற்புத விநோதனை
பொற்புய னீதனை – விற்பன யென்னுதனை (நித்த
2 சங்கர்தன் பாலனை – மங்கையர்தன் லோலனை
செங்கையணி வேலனை – துங்கமயிற் சீலனை (நித்த)
3 குன்றைமார் வாசனை – வென்றி முருகேசனை
யொன்றுமன்பர் நேசனை – யென்றும் பிரகாசனை
(நித்த)

## 211. அரகர முருகையா

பல்லவி

அரகர முருகையா – மூன்று
புரகர ரருள் பாலா கரதல வடிவேலா (அரகர)

சரணங்கள்

1 சரவணபவ குமரா – எதிர்
வருமவுணர்கள் சமரா (அரகர)
2 பங்கயமலர் வேதா – பணியும்
துங்கமலர்ப் பாதா (அரகர)
3 குன்றையின்மலே வாசா - யன்பற்
நின்றருள்புரி ஈசா (அரகர)

## 212. தாயே பராபரனே

பல்லவி

தாயே பராபரனே – யருனருள் (தாயே)

அநுபல்லவி

சேயே குன்றுக்குடித் தேவ தேவனே (தாயே)

சரணங்கள்

1 பங்கய மாமலர்ப் பாதனே நீதனே
துங்க மயிலேறிய தூயனே நாயனே (தாயே)
2 அண்டர்கள் பணிசெய்யு மையனே மெய்யனே
தொண்டருக்கருள் செய்யுஞ் சுந்தனே கந்தனே
(தாயே)
3 குன்றையின் மலேவளர்க் குகனே செகனே
மன்றன்மலர்ப் பாயு வாசனே யீசனே (தாயே)

## 213. நினைத்துக் கொள்வாய்

பல்லவி

நினைத்துக் கொள்வாய் மனமே (நினைத்து)

அநுபல்லவி

அனைத்துலகமும் புகழ்சினைப் பொழில்சூழ் குன்றை
ஐயனை வேலணிகையனை யனுதினம் (நினைத்து)

சரணங்கள்

1 பலபல உயிர்களை நலமுடன் காத்தருள்
பன்னிரு கையனை பின்னிய மெய்யனை துய்யனை
(நினைத்து)

2 அரகர வென்றன்பர் கரதலங் கூப்பியே
அடிதொழு பாதனை வடிவுள்ள நாதனை (நினைத்து)

3 தும்பிகள் பாடிய மயின்மலைப் பொழில்
தோகை மலையின்றேனை வாகைபுனை எம்மானை
(நினைத்து)

## 214. அடியவர் பணிசரணு

பல்லவி

அடியவர் பணி சரணு - நீப
வடிவுறு வாபரணு (அடியவர்)

சரணங்கள்

1 யந்தர வானவர் பணிதாளா – வெகு
சுந்தர வள்ளிதன் மணவாளா (அடியவர்)

2 சங்கரர் அருளிய சயபாலா – மண
பங்கய யிருகையின் செயவேலா (அடியவர்)

3 குன்ருக் குடிவளர் குமரேசா – வினை
யொன்ருத படியருள் குமரேசா (அடியவர்)

## 215. வருக வருக

பல்லவி

வருக வருக வேணுமையனே (வருக)

அநுபல்லவி

திருவளர் குன்றைமலை தேவனே மயிலே (வருக)

சரணங்கள்

1 பன்னிரு கையிலுன்னித வேலேந்தி
யென்னிதய மகிழமுன்னிலை யாகவே (வருக)

2 அந்தரி யர்மறை சுந்தரி திரிபுரை
மைந்தனே – குருபரா எந்தன் மீதன்புடன் (வருக)

3 நின்றசை பொழில்வளர் குன்றையின் மலைநாதா
நன்றருள் புரிசெய் யின்றினி துடனுக (வருக)

## 216. வந்து வரந்தரவேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் - நல்ல
கந்த மலர்ப்பொழில் குன்றைக் கர்த்தனே யடியன் முன்
(வந்து)

அநுபல்லவி

வடியுறு வள்ளிதன் அடியிணை மலரின் பிடியெனு நடையினை
துடியிடை அவள்சேர் - கடிமலர் முடியாய் (வந்து)

சரணம்

மருமலர் நீபனே – கருமுகில் சூரை - யிருபிளவுகள்செய
யொருவடி வேலா – திருவளர் மயிலா
அண்டர்களடி தொண்டர்கள் பரவும் – தண்டமிழ் புகலும்
வண்டருஞ் சூழுஞ் செகண்டியின் மலையா (வந்து)

## 217. ஐயனை மறவாதே

பல்லவி

ஐயனை மறவாதே – மனமே வேற்
கையனை மறவாதே (ஐயனை)

சரணங்கள்

1 வாசக் களபமுலை நேசக் குறமயில்
ஆசைக் கிசைந்த முருகேச குமரையனை (ஐயனை)
2 பங்கய மலரயன் சங்கணி கரதலன்
துங்க முடன்பணி - யுங்கனமிகுதாள் (ஐயனை)
3 சொன்ன முடியுயர் – வன்னமலர்ப் பொழில்
பின்னிய குன்றையின் – மின்னி வருவோனை
(ஐயனை)

## 218. சூரசம்மார மூர்த்தியே

பல்லவி

சூர சம்மார மூர்த்தியே
வீர வயவரோடு தீர சமரமிடும் (சூர)

சரணங்கள்

1 வெஞ்சமர் புரிதிறல் வஞ்சகர்க் கிறைதரு
மஞ்சடர் குடிமிகிர வுஞ்சகிரியில்வரு (சூர)

2 மூவாகண முதலினர் தேவர்கள்
முனிவர்கள் யாவர்களையும் வெல்லும் காவலனாகிய (சூர)

3 சொன்ன முடியிலகு நன்னய மாகிய
மன்னிய குன்றைவளர் மின்னிய வடிவேலாற் (சூர)

## 219. எந்நாளும் மறவாதே

பல்லவி

எந்நாளும் மறவாதே - மனமே (எந்நாளும்)

அநுபல்லவி

பொன்னாருங் குன்றைமலை தென்னார் முருகையனை (எந்நாளும்)

சரணங்கள்

1 சிந்தித்தபடி யெல்லாம் முந்தித் தந்தருள் செய்து
வந்திக்கும் பேரைக் காக்குந் - தந்திக் கிளையவனை (எந்நாளும்)

2 சீதள மலர்நிகர் - பாதி பங்கெருக
போதனை அருள்குரு - நாதனைத் தியானித்து (எந்நாளும்)

3 பன்னிரண்டு கையனைப் பொடியணி மெய்யனைக்
குன்றைமலை துய்யனை செய்யனை (எந்நாளும்)

## 220. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே (தண்டா)

அநுபல்லவி

வண்டாடிய பொழில் குன்றை வாசனே யீசனே (தண்டா)

சரணங்கள்

1 வஞ்சகர வுணர்கள் அஞ்சயெதிர் புரிந்து
வெஞ்சமர் ஆடிய கஞ்ச மலர்க்கயிற் (தண்டா)

2 வானவரதிக மெய்ஞ்ஞானவருடன் கூடித்
தானவர் பணிசெயுந் தேனலரணிபுயா (தண்டா)

3 நின்றசை மாமலர் மன்றன் மலர்ப்பொழிற்
குன்றைமலை வளரு கின்ற குகேசனே (தண்டா)

## 221. குருபர குகனே

பல்லவி

குருபர குகனே – அரனு ரருள்செயு மகனே (குருபர)

அநுபல்லவி

அன்பர்களுடைய துன்புறு நோயை
வன்புடன் விரட்டி யின்புடன் காக்கும் (குருபர)

சரணம்

அருமறை புகழும் - திருவளர் சரணு
மருவளர் நீபா – யருள்செய்து காப்பாய்
அண்ட முலாவு மண்டிய பொழில்சேர்
வண்டிசை பாடுஞ் செகண்டியின் மேரின் (குருபர)

## 222. சாமி சித்தமெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ (சாமி)

அநுபல்லவி

பூமிபுகழுங் குன்றைப் பொருப்பி லுறையுங் கந்த (சாமி)

சரணங்கள்

1 வண்டர் படியுங் கொண்ட புயவடிவேல்
தண்ட மணியுங்கர யண்டர் பணிபுரியும் (சாமி)
2 வாதடர் குருடன் மோதிய படைகொடு
தீதடர் புரிகின்ற நாதனய குண (சாமி)
3 கொண்டல் படியவளர் மண்டிய பொழிலுறை
யெண்டிசை புகழுஞ் செகண்டியின்மலை நாத (சாமி)

## 223. அருள்தர வேணுமையனே

பல்லவி

அருள்தர வேணுமையனே (அருள்)

அநுபல்லவி

நல்ல பொருளுறை குன்றைமலை பூபனே தீபனே (அருள்)

சரணங்கள்

1 காதலி குறத்தி தன்மணுளா – மணப்
போதடரு மிருதாளா (அருள்)

2 பன்னிரு கையிலணி வேலா – சிறை
வன்ன மயிலேறிய கோலா (அருள்)

3 கடிகமழ் பொழின்முடி நாளும் - சிறந்து
குடிகொளுங் குன்றைமலை வாழும் (அருள்)

## 224. கருணாகரக் கடவுளே

பல்லவி

கருணாகரக் கடவுளே (கருணா)

அநுபல்லவி

தருவாள் சிகிமலைச் சண்முக நாதா (கருணா)

சரணங்கள்

1 அண்டர் பணிபுரிமையனே
தொண்டர் பணிசெயுந் தூயனே நாயனே (கருணா)

2 பங்கய மாமலர்ப் பாதனே நாதனே
புங்க வயலணி போதனே நீதனே (கருணா)

3 குன்றை மலையில்வரு கோலனே சீலனே
மன்றன் மலர்ப்புய மாயனே சேயனே (கருணா)

## 225. சித்தமிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் – நல்லபரி
சுத்தனே செகண்டிமலைக் கர்த்தனே நிர்த்தனே (சித்த)

சரணங்கள்

1 மோது படையொடும் வந்து வாதுபுரி சூரனுர்
மீது கனகோபமாகச் சூது செய்து வென்றவா (சித்த)

2 உந்தனை அனுதினமும் வந்தனை தனைப்புரியும்
எந்தனை யாதரித்துடனிந்தனை செய்யாதாள (சித்த)

3 வ்ள்ளி தெய்வானையுடன் புள்ளி மயிலிலேறி
தெள்ளிய துடன்வரு மள்ளாலைவேற் கரதலா (சித்த)

## 226. ஐயனைப் பணிந்து கொள் மனமே

பல்லவி

ஐயனைப் பணிந்து கொள்மனமே – யுனக்
கதிறலுண்டாகு மெய்ஞ்ஞானமே (ஐயனை)

அநுபல்லவி

வையம் புகழுங் குன்றைமலைக் கரசாகிய
வன்னவடிவேற்கைச் சின்ன மயிலேறிய (ஐயனை)

சரணங்கள்

1 பங்கய மலர்போலும் பாதனை – நாளும்
மங்களகர வள்ளி நாதனை – நல்ல
துங்கமிகுந்திடு வேதனை – செக
மெங்கணுங் கியாதி கொணீதனை (ஐயனை)

2 சந்திர சடாதரர் பாலனை – வான
யிந்திரன் மகளுக்கேற்ற லோலனை – யன்பர்
பந்தி பந்தியாய்ப் பணி சீலனை – யார்க்குஞ்
சிந்தித்த படியருள் காலனை (ஐயனை)

3. மருமலர் மேவிய வாகனை – மலர்த்
திருமருகனை நயயோகனை – யன்பர்க்
கருள்செய் கின்ற நற்றியாகனை – ரூப
தருகுன்றை யம்பதி யோகனை (ஐயனை)

## 227. உனது சித்தம் வரவேணும்

பல்லவி

உனது சித்தம் வர வேணும் நல்ல
கனகிரிக் குன்றைமலைக் கர்த்தனே முத்தனே (உனது)

சரணங்கள்

1 சங்கரர்க் கினிதான மங்கள வுமாமகள்
இங்கித புதல்வர் நாளுந் துங்கமயிலேறுமையா
(உனது)

2 வாசக் களபமுலை நேசக் குறத்தி மேவு
மாசைக் கிசைந்த நாதா தாசற் கருளைச் செய்ய
(உனது)

3 மன்றன் மலர்ப்பொழில் கணின் றுலவு முடிச்சிகி
யென்று வளர்மலைவரு – வென்றி புரிவடிவேலா
(உனது)

## 228. முருகையனே

பல்லவி

முருகையனே – இருகையின் வேலெடுத்
தெந்தனைக் காப்பாய் (முருகை)

சரணங்கள்

1 அண்டர்கள் பணி செய்யும் பாதனே - நல்ல
தொண்டர்கள் துதிசெயு நாதனே (முருகை)
2 வனச மண்டப மலர் வேதா – பரவும்
கனக சரண செகநீதா (முருகை)
3 நின்ருடிய பொழிளுைம் – நிறை
குன்ருக்குடி மலைவாழும் (முருகை)

## 229. எந்தனைக் காக்கவேணும்

பல்லவி

எந்தனைக் காக்க வேணும் - (எந்தனை)

அநுபல்லவி

அரனருள்மைந்தனே மயிலேறி சுந்தரமாக வந்து(எந்தனை)

சரணங்கள்

1 பாதபங் கயங் கண்டு தரிசிக்கவே – யிரு
மாதர் மகிழ்நித முரிசிக்கவே
யரனே பன்னிரு கரனே அன்பாய் வந்து (எந்தனை)
2 வந்த வியாதியெல்லாங் கலங்கவே – புயத்திற்
கந்த மலர்க்கடம்பு துலங்கவே
வானவர் துதிக்கவே ஞானவர் மதிக்கவே (எந்தனை)
3 மஞ்சார் பொழிற்குன்றை தோகையனே – நாளு
நெஞ்சார மகிழு மோகையனே
வள்ளி தெய்வானை பாகா – புள்ளி மயிலின் வாகா
(எந்தனை)

## 230. வால வடிவேலவனே

பல்லவி

வால வடிவேலவனே
கோல மயிலேறிய சீல முருகேசனே (வால)

சரணங்கள்

1 அந்தரி யாமளைகரி – சுந்தரி கிருபா நிதியானள்
தந்தருள் பாலகா என்முன் - வந்தருள் குருபர
(வால)

2 ஐயனே பன்னிரு கையனே பரிசுத்த
துய்யனே பூதியணி மெய்யனே யெனையாளும் (வால)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றையின் மலைவாழும்
துன்றிசிதை மயிலா யின்றேனை யாதரிப் பாய் (வால)

## 231. திருப்பாத தரிசனந் தருவாயே

பல்லவி

திருப்பாத தரிசனந் தருவாயே – யென்முன்
விருப்பாக மயிலேறி வருவாயே (திருப்பாத)

சரணங்கள்

1 கந்த மலர்க்குழல் வள்ளி மனோகரா
சந்த முலையின் தெய்வயானை தன் சேகரா (திருப்பாத)

2 வாசங் கமழு நீபமாலிகை வாகா
நேசங் கமழுமன்பர் நினைத்திடு யோகா (திருப்பாத)

3 தற்பரா நந்தசிவ சண்முக நாதா
பொற்புயர் முடிக்குன்றைப் பொருப்புறை நீதா
(திருப்பாத)

## 232. காப்பாற்ற வேணுமையனே

பல்லவி

காப்பாற்ற வேணுமையனே (காப்பாற்ற)

அநுபல்லவி

தீப்பாவியேன் செய்த தீவினை யகற்றியே (காப்பாற்ற)

சரணங்கள்

1 குமர சரவண குருபர நாதா
சமர சண்முக மலர்த் தளைத்திடும் பாதா
பமர முலாவு திவ்விய பங்கய வேதா
அமரா பயங்கரா வறுமுக நீதா (காப்பாற்ற)

2 பன்னிரு கையிலணி பணைத்திடு வேலா
நன்னிதி யடியர்கடு நல்கிய காலா
மின்னிய மயிலேறி விளையாடுஞ் சீலா
கன்னியர் இருவரைக் கலந்திடுங் கோலா (காப்பாற்ற)

3 தருவனஞ் சூழ்க்குன்றைத் தளைத்திடுமையனே
மருவுள நீபமென மலரணி மெய்யனே
திருமகண்புணர் மாயன் திகழ் மருகையனே
உருமையுடன் அன்பர்க் குதவிய துய்யனே (காப்பாற்ற)

## 233. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் – பன்னிரு
கையனே குன்றைமலைக் கர்த்தனே நிர்த்தனே
(ஐயனே)

சரணங்கள்

1 தண்டை சதங்கையணி காலா – கருங்
கெண்டை விழியின் வள்ளி லோலா (ஐயனே)
2 வேலைத் தரிக்குங் கரதலனே – நல்ல
பாலைப்பழிக்குமொழி நலனே (ஐயனே)
3 மன்றன் மலர்ப்பொழில் சூழும் – முடிக்
குன்றைமலைக் கினி வாழும் (ஐயனே)

## 234. ஆண்டவனைத் துதிப்பாய்

பல்லவி

ஆண்டவனைத் துதிப்பாய் மனமே – உனக்கு
வேண்டியபடி தந்து ஆண்டிடு வாரிந்த (ஆண்டவனை)

அநுபல்லவி

பன்னிரு கையிலணி வேலனைக் கோலனை
நன்னிதி யன்வேத ஞலனைச் சீலனை (ஆண்டவனை)

சரணம்

பங்கய மாமலர்ப் பாதனை வேதனை
புங்கவர் பணிசெயும் போதனை நீதனை
அகண்ட பரிபூரண வையனை மெய்யனை
செகண்டிமலை வளருஞ் செய்யனைத் துய்யனை
(ஆண்டவனை)

## 235. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே (மறக்காதே)

அநுபல்லவி

மறக்காதே குன்றைமலைக் குமரேசனை (மறக்காதே)

சரணங்கள்

1 கந்தனை ஞான சம்பந்தனை யமரர்கள்
சிந்தனை யரனருண் மைந்தனை யனுதினம் (மறக்காதே)

2 ஞாலனைச் சிலம்பணி காலனைக் கரதல
வேலனை யன்பர்க்குச் சீலனை யனுதினம்
(மறக்காதே)

3 வேதனைக் குன்றையி னுதனை யிலகிய
போதனை யனுக்கிரக நீதனை யனுதினம் (மறக்காதே)

## 236. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யினி
வேறு கதி யில்லையே – நல்ல
கூறுபடை வேலவா (ஆறுமுக)

அநுபல்லவி

மருமலர் நீப திருமலர்புனை பன்னிருபுய வுனதுஅருள்
புரிவை நீ (ஆறுமுக)

சரணங்கள்

1 வன்ன மயிலேறுஞ் சின்னவடி விடையாள்
அன்ன நடைக் குற மானன்னவளை மேவும் (ஆறுமுக)

2 வடிவுடைய சொல்லை முடியில் குன்ருக்
குடிவளரும் நாதா யடியர் பணிதேவே (ஆறுமுக)

## 237. வரவேணுஞ் சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி – வந்து வரந்
தரவேணுஞ் சாமி (வரவேணும்)

அநுபல்லவி

கரதல கமலனே – யரகர சிவனே (வரவேணும்)

சரணங்கள்

1 கந்தனே ஞானசம்பந்தனே யரனருண்
மைந்தனே யுனை நாளுஞ் சிந்தனை செய்வேன்முன்
(வரவேணும்)

2 அமரனே அவுணர்கள் – சமரனே குருபர
குமரனே அடியார்க டமரனே யடியேன்முன்
(வரவேணும்)

3 ஈசனே முடிக்குன்றை வாசனே யடியர்க்
கணேசனே யெங்கும் பிரகாசனே மயின்மீது
(வரவேணும்)

## 238. நித்திய மறவாதே

பல்லவி

நித்திய மறவாதே – மனமே
சத்தியணியுங் கரதல குரு பரனே (நித்திய)

அநுபல்லவி

வாசனைமிகு நீபமாலை அணிபுயனே
யீசனருள் சுபுத்திர யிங்கித நயனே (நித்திய)

சரணம்

அற்புத சரவண அறுமுகத் தையனே
பொற்புறு மயிலேறும் புனிதனே துய்யனே
யென்றைக்கு மன்பர் களிறைஞ்சிடு மீசனே
குன்றைக்கு வாய்த்திடுங் குகப்பிர காசனே (நித்திய)

## 239. சரவண குருபரனே

பல்லவி

சரவண குரு பரனே – யரனே யரனே
யரவணி பவசிவ தரனே (சரவண)

சரணங்கள்

1 காலனை யுதைத்தவர் பாலகனே – வரு
கோல மயிலேறும் வால வடிவேலா (சரவண)

2 உடலில் வருதுயரை யடசி வில்கச் செய்து
உடனனுபூதி செய்து நடனமயிலில் வாராய் (சரவண)

3 தருநிறை வாகிய பெருவனஞ் சூழ்தரு
திருமுடி மேவிய யொருசிகி மலைவளர் (சரவண)

## 240. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே – (அஞ்சாதே)

அநுபல்லவி

நல்ல மஞ்சார் பொழிற்குன்றை மாதவ னிருக்க நீ (அஞ்சாதே)

சரணங்கள்

1 தாத ஒரு நீபத் தாம மணிப்புயன்
ஆதர வன்பர்க்கு வருளிய நன்னயன்
ஐயன்வேற் பன்னிரண்டுகைய னிருக்கையில் (அஞ்சாதே)

2 பங்கய மாமலர்ப் பரவிய பாதன்
நங்கைகுற மயிலி ணுயகி நாதன்
நாம வடிவேற் குருசாமி யிருக்கையில் (அஞ்சாதே)

3 மாமலர்ச் சோலையள் வளமுடன் சூழும்
பூமலி குன்றையிற் பொருந்தியே வாழும்
புண்ணியன் அருண் சுப்பிர மண்ணிய னிருக்கையில் (அஞ்சாதே)

## 241. சாமி சித்த மிரங்காயோ?

பல்லவி

சாமி சித்த மிரங்காயோ (சாமி)

அநுபல்லவி

பூமி புகழுங் குன்றை பொருந்திய குருபர (சாமி)

சரணங்கள்

1 வள்ளி தெய்வயானையை மருவிய லோலன்
புள்ளி மயிலேறிய பொருந்திய வேலன் (சாமி)

2 கங்கை தரிசடைக் கருத்தர் தன் மைந்தன்
பங்கய வேதன் பணிசெயுங் கந்தன் (சாமி)

3 வாசப்பொழிற் செகண்டிமலைக் குருநாதன்
நேசத் திருவடியார் நினைத்திடும் பாதன் (சாமி)

## 242. சரணமுனை நம்பினேன்

பல்லவி

சரணமுனை நம்பினேன் (சரண)

அநுபல்லவி

யரணம் புகழுங்குன்றை ஐயனே மெய்யனே (சரண)

சரணங்கள்

1 அடியவர் நிதம்பணி அமலனே விமலனே
கடிகமழ் நீபமணி கருத்தனே யொருத்தனே (சரண)

2 கங்கா சடாதரர் கஞ்சனே நெஞ்சனே
மங்கா தருள்புரி வரனே யரனே (சரண)

3 நறுமலர்ப் பொழிற்குன்றை நாதனே நீதனே
வறுமை தீர்த்தருள் மாயனே நாயனே (சரண)

## 243. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா யெனக் – கொருவரு முன்போல் வரந்
தருவர் களுண்டோ (குருபர)

அநுபல்லவி

பங்கய மாமலர்ப் போதா – நாளு
மங்களமிகு வேதா (குருபர)

சரணம்

அமரர் பணியுங் காலா – வருஞ்
சமர சம்மார வேலா – நீபப்
பமர மலரின் சீலா
குன்றை மலையின் வாசா – வள்ளி
மன்றற் குழலிநேசா – மனதி
லென்று முயர் பிரகாசா (குருபர)

## 244. முருகா முருகா யெனைஆளாய்

பல்லவி

முருகா முருகா யெனைஆளாய் (முருகா)

அநுபல்லவி

ஒருகாலு மிருகாலு முன்னை வேண்டினேன் சாமி
(முருகா)

சரணங்கள்

1 வந்திடுந் தீவினையை நொந்திடும் படிசெய்து
முந்திட வருடன்னைத் தந்திட வேணுஞ்சாமி
(முருகா

2 வருவினை தனைத்தீர்த்து – உருகிய வன்பருக்கு
பெருகிய வனுபூதி – யருளிடவேணுஞ் சாமி (முருகா)

3 செகண்டிமலை வளரு மகண்ட பரிபூரணா
இகந்தனில் வாழ்வருளிச் சுகந்தர வேணுஞ் சாமி
(முருகா)

## 245. கருணா கடாட்ச முகிலே

பல்லவி

கருணா கடாட்ச முகிலே
திருமா மறைபுகழ் தேன் சிகிமலைவளர் (கருணா)

அநுபல்லவி

மாதவர் பணிபாதனே – சகல
பூதலம் பணிநாதனே – வெகு
புண்ணியனே சுப்பிர மண்ணியனே – சாமி (கருணா)

சரணம்

பங்கய மலர்வேதா – நாளு
மிங்கித மிகுநீதா – மலர்போற்
பன்னிரு கரனே நன்னிதி யருளுவாய்
குன்றைமலையின் வாசா எனக்கு
நன்றருள் புரியீசா – நல்ல
நயனே திவ்விய தூயனே (கருணா)

## 246. ஐயனை மறவாதே

பல்லவி

ஐயனை மறவாதே - மனமே
துய்யனை மறவாதே

அநுபல்லவி

மெய்யனைப் பன்னிரு
கையனை யருண்முரு (கையனை)

சரணங்கள்

1 சொன்ன வடிவேலவ – நன்னய மிகுதேவ
சின்ன மயிலேறிய – கன்னல் மொழியின் முரு
(கையனை)

2 மாதவர் பணி செயுஞ் – சீதள மலர்ப்பணி
பாத பங்கய வருணாத சண்முக முரு (கையனை)

3 மஞ்சடரும் பொழின் மிஞ்சிய சிகிமலைக்
கஞ்சலென்றே னருள்செய் – தஞ்சமிலையே முரு
(கையனை)

## 247: ஆதரித்திட வேணும்

பல்லவி

ஆதரித்திட வேணும் – நல்ல
பூதலம் புகழ் குன்றைப் புண்ணியனே யென்னை
(ஆதரித்திட)

சரணங்கள்

1 ஆளுந் தெய்வமு நீயே – குடியில்
வாழுந் தெய்வமு நீயே யாகையா
லன்புடனே வெகு – தென்புடனே யெனை (ஆதரித்திட)

2 காக்குங் குலதெய்வமு நீயே – யிட்டமுண்
டாக்குந் தெய்வமு நீயே – யருள்
கருத்தனே நல்ல விருத்தனே யெனை (ஆதரித்திட)

3 சகல ரட்சகனு நீயே – யன்பர்க்குப்
புகலிட மாவது நீயே – நாளு
நன்றான பொழிலுறை குன்றாக் குடியாயெனை
(ஆதரித்திட)

## 248. நம்பின பேர்களை

பல்லவி

நம்பின பேர்களை ரட்சியாததென்ன நாயநாய மெய்யனே
(நம்பின)

அநுபல்லவி

பம்பிய பொழில்வளர் குன்றைமலை வருபரனே யரனே
யரனே யரனே (நம்பின)

சரணங்கள்

1 சீறும் வினைகளைக் கூறுபடை வேலால்
நீறுபடச் செய்து நீறுதந் தாளாமல் (நம்பின)

2 வஞ்சப் பிணிதனை அஞ்சச் செய்தேயினித்
தஞ்சமென் போர்களை – மிஞ்ச வாதரித்த (நம்பின)

3 வண்டிண் மிசைபாடு மண்டிய பொழில்வளர்
யெண்டிசை புகழுஞ் செகண்டி மலைநாதா (நம்பின)

## 249. கருத்தனே யெனையாளாய்

பல்லவி

கருத்தனே யெனையாளாய் (கருத்தனே)

அநுபல்லவி

திருத்தமான குன்றைத் தேவனே (கருத்தனே)

சரணங்கள்

1 மாயாவி நோதனே – யரன்
சேயான நாதனே – யருள்
வரனே யரனே (கருத்தனே)

2 பொய்யான வாசை தீராய் – நாளு
மெய்யான பதந்தாராய் – நல்ல
போதனே வேதனே (கருத்தனே)

3 தூய பொழில்கள் நாளும்
சேய முடிகள் சூழும் – மலைத்
தோகையா தோகையா (கருத்தனே)

## 250. சரவணபவ குமரா

பல்லவி

சரவண பவகுமரா – விட
வரவணி பவனரு ளையனே மெய்யனே (சரவண)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனே – பொல்லா
என்னிரு வினைதீர்ப்பாய் –
எம்பிரானே தம்பிரானே (சரவண)

2 பங்கய மலர்ப் பதனே – நல்ல
செங்கையில் வேலணி சேயனே நாயனே (சரவண)

3 குன்றையின் மலைக்குகனே – யடியெனை
நன்றினிதா யான வாயா நாதனே நீதனே (சரவண)

## 251. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் யெந்தன்
தாயே குருபர சண்முக நாதா (நீயே)

அநுபல்லவி

அமரர் பணியுந்தாளா – குறக்
குமரிமகிழ் மணாளா – யெனை
ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி (நீயே)

சரணம்

பன்னிரு மலர்க்கையனே – பொல்லா
என்வினை தீர்ப்பாய் மெய்யனே – திவ்விய
பரனே பரனே யரனே யரனே
தண்டலர் சோலை சூழும் – முடிச்
செகண்டி மலையில் வாழும் - அருள்
கந்தனே யுமையவள் மைந்தனே சாமி (நீயே)

## 252. சகல புவன ரட்சகா

பல்லவி

சகல புவன ரட்சகா – நாளும்
புகரரிய குன்றைச்சுக குரு நாதா (சகல)

அநுபல்லவி

அண்டரண்டம் புகழும் – வண்டலர் மீறிய
தண்டலை யுலவிய கெண்ட மினுள்புணர் (சகல)

சரணம்

ஐயனே பன்னிருகையனே யெனையாளுந்
துய்யனே பூதியணி மெய்யனே காரண
பதும மலர்த்தாளா – பதுமல்நீப
முதுமறை புகழ் நாதா – விதுமுகக்குமரா (சகல)

## 253. சித்தமிரங்காத தேனையா

பல்லவி

சித்த மிரங்காத தேனையா – யருள்
வித்தகனே நய யென்னையா (சித்த)

அநுபல்லவி

வாசக் கமல மலர்த்தாளா – நாளு
நேசச் குறத்திக்கிசை நாதா (சித்த)

சரணம்

மாது தெய்வயானை புணர்தோளா – எனக்கிப்
போது ரட்சிப்பதத் தாளா
குன்றுக்குடி மலைவாசா – எல்லா
மொன்றாய் விளங்கும் பிரகாசா (சித்த)

## 254. எனக்கொரு வரந்தருவாய்

பல்லவி

எனக்கொரு வரந்தருவாய் – நல்ல
கனச்சிறை மயிலேறிக் கதியுடன் வருவாய் (எனக்கொரு)

சரணங்கள்

1 வந்த வினையைத் தீர்த்து
உந்தன் கடைக்கண் பார்த்து (எனக்கொரு)
2 தீவினை தனைப்போக்கி யாவியை நயமாக்கி
(எனக்கொரு)
3 குன்ருக் குடிநாதா – தன்ருட் கன்பர்க்கு நீதா
(எனக்கொரு)

## 255. ஆறுமுகத் துரையே

பல்லவி

ஆறுமுகத் துரையே – யெனக்கு
வேறுகதி யில்லையே நீறுபுனை நாதனே (ஆறுமுக)

சரணங்கள்

1 பங்கய மலர்ப் பாதனே வள்ளிக் கிங்கிதமிகு நீ தனே
(ஆறுமுக)
2 அடியவர்க்கருள் சீலனே – சொன்ன வடிவுற்றிடும்
வேலனே (ஆறுமுக)
3 குன்றையெனும் வரையாய் அடியேற்கு – நன்றியை
யினியுரைப்பாய் (ஆறுமுக)

## 256. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே (மறக்காதே)

அநுபல்லவி

அருக்கானகஞ் சூழு மருட்சிப் பொருப்பனை (மறக்காதே)

சரணங்கள்

1 பொல்லாத வினை தீர்க்கும் இல்லாத பிணி தீர்க்கும்
கல்லாததையுந் தீர்க்கும் வல்லாள துரையை
(மறக்காதே)

2 முந்த வினைகளையும் வந்த வினைகளையும்
எந்த வினைகளையுந் தீர்க்கும் கந்த குருபரனை
(மறக்காதே)

3 வாசக் கனகு னேசக் குறமயி
லாசைக் கிசைந்த பிரகாசக் குமரனை (மறக்காதே)

## 257. அரகர குருபரனே

பல்லவி

அரகர குருபரனே
புரனூர்தரு புத்திரனே சாமி (அரகர)

சரணங்கள்

1 தங்க மயமாகிய துங்க மயிலிலேறும் (அரகர)
2 தெள்ளிய தினைப்புன வள்ளி மணாளா (அரகர)
3 நின்றுட் கன்பர் பணிகுன்றுக்குடிவளர் (அரகர)

## 258. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே
மூவர் பணியுஞ் செகண்டி மாமலை
முத்தனே யருள் சித்தனே சாமி (தேவ)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி வாசா — நாளும்
நேசக் குறமயில் பாகா (தேவ)
2 பங்கய மாமலர்ப் பாதா — ஆடுந்
தங்க மயிலேறும் பாதா (தேவ)
3 குன்றை மலைக்கிசை வாசா — அன்பர்க்
கென்று மருளும் பிரகாசா (தேவ)

## 259. கந்தனே யெந்தனை ஆளாய்

பல்லவி

கந்தனே யெந்தனை யாளாய் — சாமி (கந்தனே)

அநுபல்லவி

உந்தனை யன்பர்கள் வந்து வந்தனை செயுந்தாளாய்
(கந்தனே)

சரணங்கள்

1 தண்டை யணியும் பாதா – வள்ளி
கெண்டை விழியார் நாதா (கந்தனே)

2 வாசக் கடம்பணி வாகா – நல்ல
நேசத் தெய்வானை பாகா (கந்தனே)

3 நின்றுட் கன்பர்கள் சீலா – முடிக்
குன்றுக் குடிக்கு மேலா (கந்தனே)

## 260. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ (சித்த)

அநுபல்லவி

முத்தர் பணியுங் குன்றைக் கர்த்த னெந்தன் மீது (சித்த)

சரணங்கள்

1 திங்கள் தரித்த சடைச் சங்கரர் அருளிய
மங்கள கரகுகன் றங்க ளடிமையர்பால் (சித்த)

2 பாகை நிகருமொழி தோகை வள்ளி யாட
செகைக் கிசைபுயன் வானுகக் கதிர்வேலன் (சித்த)

3 வென்றிக்கதிர் வேலவ னன்றிக்கு வாய்த்தவன்
என்றைக்கு மன்பர் சூழுங் குன்றைக் கிரிகுமரன்
(சித்த)

## 261. வருக வருக

பல்லவி

வருக வருக எந்தன் மனம்போல – வரந்
தருக வேணும் நல்ல தினம் போல (வருக)

சரணங்கள்

1 வெள்ளிய வேல்கொண்டு தெள்ளிய தினைப்புன
வள்ளியுடனே கூடிப் புள்ளி மயிலேறி (வருக)

2 கூடியே யன்பர்கள் பாடியே கொண்டாட
வோடி விளையாடு மாடிய மயிலேறி (வருக)

3 பாகை நிகரு மொழியாய் யோகை புனையுல்லாசா
வாகை தரிக்கும் வேலா தோகை மயிலிலேறி (வருக)

## 262. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் – நாளும்
நயமிகுந்த குன்றை நாதனே சாமி (தயவு)

சரணங்கள்

சங்கர சண்முகனே – யருள்வா
யிங்கித மிகு குகனே (தயவு)
மாதவர் பணி பாதா – மலர்
வேதியர் துதி நாதா (தயவு)
குன்றையின் மலைவாசா – அன்பர்க்கு
நன்றருள் புரியீசா (தயவு

## 263. ஐயா குமரகுருபரனே

பல்லவி

ஐயா குமர குருபரனே – நாளுஞ்
செய்யா மறைபுகழுஞ் சேயனே நாயனே (ஐயா)

சரணங்கள்

1 பாத பங்கய நயபரனே பரனே
நாத சண்முக குகாயனே நயனே (ஐயா)
2 பண்ணவர் பணியரன் பாலா பாலா
கண்ணன் மருகேசக் கந்தா கந்தா (ஐயா)
3 குன்றுக் குடிமலைக் குமரா குமரா
நின்றுட் கன்பரை ரட்சிப்பாய் ரட்சிப்பாய் (ஐயா)

## 264. சமர சண்முகவேலா

பல்லவி

சமர சண்முக வேலா
குமர சண்முக லோலா (சமர)

அநுபல்லவி

தாதவிழு நன்னீபா
வாதடர் சூர்கோபா (சமர)

சரணம்

பங்கய மலர்ப்பாதா
சங்கர ளருள்போதா
அடியவர்க் கருணேசா
முடியுயர் சிகிவாசா (சமர)

## 265. கந்தனே யென்னை ஆளாய்

பல்லவி

கந்தனே யென்னை ஆளாய் – ஞானசம்
பந்தனே குன்றையின்மலைக் குமரேசனே (கந்தனே)

அநுபல்லவி

வானுடர்பணி தேவ சேனுபதியனே நன்
ஞானுதிபர்கள் துதி தேனுர் மலர்ப்பதனே (கந்தனே)

சரணம்

கானக மயிலியும் வானக மயிலியும்
மேனலமுடன் புணர்பானல் மொழிவாயா
நின்று லாவிய பொழிற்குன்றையின் மலைவரு
வென்றி வடிவேலா யுன்றயவு செய்குவாய் (கந்தனே)

## 266. மாயமாகிய புலி

பல்லவி

மாயமாகிய புலி வதைப்பதை விலக்குவாய் (மாயமாகிய)

அநுபல்லவி

தூய மலர்ப்பொழில்கள் சூழுங் சிகா கிரியாய் (மாயமாகிய)

சரணங்கள்

1 கங்கை தரித்தசடைக் கர்த்தர் தன் பாலா
மங்கை குறத்திபுணர் மகிழ்ந்திடும் லோலா
செங்கைதனிற் றரித்த திவ்விய வேலா (மாயமாகிய)

2 பதஞ்சலி வியாக்கிரர் பணிந்திடு மீசா
நிதஞ்சலி யாதன்பர் நினைத்திடு நேசா
கதஞ்செயுஞ் சூர சங்கார உல்லாசா (மாயமாகிய)

3 குன்றையின் மலை வருகுக குருபரனே
நன்றி யன்பர்க் கருளு நயமிகு குமரனே
வென்றி வடிவேலணி விகிசித கரனே (மாயமாகிய)

## 267. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – பரி
சுத்தனே குன்றைமலைக் கர்த்தனே சாமி (சித்த)

அநுபல்லவி

தொடரும் வினையினாலே யுடலில் வரும் பிணியை
யிடரும் படியே செய்ய நடன மயிலில் வரச் (சித்த)

சரணம்

பலத்திடும் வினையினை யுலப்பிட வுனதரு
ணலத்தினருள் செய்ய நிலைத்திடு மயிலில்வரச்
சுகந்த மலர்ப் பொழில் சூழ் செகண்டிமலையில் வரு
அகண்ட பரிபூரணா செகம்புகழுங் குகேசா (சித்த)

## 268. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா
புரவரனார் அருள்புண்ணியனே யீசா (அரகரா)

அநுபல்லவி

அந்தர இமையவர் பணி பாதா – அந்த
இந்திரன் மகள்புணர் புயநாதா (அரகரா)

சரணம்

வாச விலாசமான நயவாகா – பிர
காச வுல்லாசா சுகமிகு தேகா
செய்ய பொழில்சேர் சிகாகிரிச் சேத்திரா – வேலணி
கையவனுக் கிரக பன்னிரு நேத்திரா (அரகரா)

## 269. ஐயனே குககுருபரனே

பல்லவி

ஐயனே குககுருபரனே – பன்னிரு
கையனே சிகிமலைச் செய்யனே யென்சாமி (ஐயனே)

அநுபல்லவி

அண்டர்மெய்ஞ் ஞானியர் தொண்டர்பணி
தண்டமிழோர் துதிகொண்ட பங்கய நாதா (ஐயனே)

சரணம்

சங்கரி திரிபுரை துங்க பஞ்சாட்சரி
திங்களணியும் வேணி மங்கள வுமைபாலா
நீளு மலர்ப்பொழில்கள் சூழுஞ் சிகிமலையில்
வாழுங் குருபரா தாளுவதைத் தீர்ப்பாய் (ஐயனே)

## 270. முருகையனே

பல்லவி

முருகையனே–பன்
னிருகையனே (முருகையனே)

அநுபல்லவி

குருகேசனே – மால்
மருகேசனே (முருகையனே)

சரணம்

குகநாதனே – யாறு
முகநாதனே
வடிவேலனே – குன்றுக்
குடிவேலனே (முருகையனே)

## 271. சமர சண்முக வேலா

பல்லவி

சமர சண்முக வேலா – (சமர)

அநுபல்லவி

அமரர் பணியுங் குன்றை ஐயனே மெய்யனே (சமர)

சரணங்கள்

1 எந்தனை ஆளு மையனே – ஞானசம்
பந்தனே யருடுய்யனே (சமர)

2 சரவண பவகுகனே – முடிச்
சிவ னருளிய மகனே (சமர)

3 குன்றையின் மலைவாசனே – யடியேனுக்
கென்றருள்வாய் முருகேசனே (சமர)

## 272. சண்முக குருபரனே

அநுபல்லவி

சண்முக குருபரனே (சண்முக)

அநுபல்லவி

விண்முக முயற்குன்றை வேலனே கோலனே (சண்முக)

சரணங்கள்

1 சரவண பவகுக அரவணி பவசிவ
வரகுரு பரமலர் கரதல குமரேசா (சண்முக)

2 வேத பாராயண நாத நாதாந்தபொற்
பாக சிங்காரமுன் வாதடர் வடிவேலா (சண்முக)

3 அடியவர்பணி குன்றுக் குடிவளர் முருகேசா
வடிவுள மயில்வாகா மிடிதனைத் தீர்த்தருள் (சண்முக)

## 273. தெண்டனிட்டேனையனே

பல்லவி

தெண்டனிட்டேனையனே (தெண்ட)

அனுபல்லவி

மண்டலம் புகழுஞ் செகண்டிமலை யினாதா (தெண்ட)

சரணங்கள்

1 வால சண்முககுகா சீல சரவணேசா
கோல மயிலா யீசர் பாலகா யெனையாளாய் (தெண்ட)

2 பங்கய மலர்ப்பாதா துங்க வடிவேலா
மங்கள குறமாது பங்க இங்கித லோலா (தெண்ட)

3 தருமல ருகுக்குந் தருவளஞ் சூழ்
திருவளர் குன்றைக் கொரு முருகா வுன்னைத்
(தெண்ட)

## 274. ஆருதர வையனே

பல்லவி

ஆருதர வையனே (ஆரு)

அநுபல்லவி

கூருன குன்றைமலைக் குகனே யடியேனுக்கு (ஆரு)

சரணங்கள்

1 கடிகமழ் நீபக் கண்ணியணி தோளா
அடியவர் பணிசெயும் அழகிய தாளா (ஆரு)

2 வள்ளி தெய்வானையை மருவிய வாகா
புள்ளி மயிலேறும் புண்ணிய யோகா (ஆரு)

3 குன்றையின் மலைவரு குககுரு நாதா
நன்றி யன்பர்க் கருளு நன்மலர்ப் பாதா (ஆரு)

## 275. துரைக்குமரேசா

பல்லவி

துரைக் குமரேசா – குன்றை
வரைக் குமரேசா

சரணங்கள்

1 குருபர நாதா – மயின் மேல்
வருகுக நாதா (துரை)
2 பன்னிருகையா – மலர்
நன்னிதிகையா (துரை)
3 வடிவுறு வேலா – மூன்று
படிபுகழ் வேலா (துரை)

## 276. சித்த மிரங்கவேணும்

பல்லவி

சித்த மிரங்கவேணும் – நாளும்
பத்தர்கள் பணி குன்றைப் பரனே யரனே (சித்த)

சரணங்கள்

1 எந்தன் வினையைத் தீர்க்க உந்தன் கடைக்கண் பார்க்க (சித்த)
2 ஒயிலது தரவே மயில்மிசை வரவே (சித்த)
3 அகண்ட பரிபூரணா செகண்டி நாரணா (சித்த)

## 277. கண்டுகொண்டேனே

பல்லவி

கண்டுகொண்டேனே (கண்டு)

அநுபல்லவி

மண்டுபொழிற் குன்றை மன்னவன் சன்னிதியைக் (கண்டு)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானையுடன் புள்ளி மயிலேறி
யள்ளிலே வேற்கையனை ஐயனை மெய்யனைக் (கண்டு)
2 தாதவிழு நீபப் போதணி தோளனை
ஆதரவு செய்வோனை ஐயனை மெய்யனைக் (கண்டு)
3 மன்றன் மலர்ப்பொழில் குன்றை மலைவரு
அன்றின்றுங் காத்தருளையனை மெய்யனைக் (கண்டு)

## 278. பன்னிரு கரதலனே

பல்லவி

பன்னிரு கரதலனே – சாமி
பன்னிரு கரதலனே (பன்னிரு)

அநுபல்லவி

என்னிரு வினைதீர்ப்பாய்
முன்னிய கண்பார்ப்பாய் (பன்னிரு)

சரணங்கள்

1 பாவியேன் வினைசெய் தாவி பதைபதைக்கும்
தீவினைகளைத் தீர்ப்பாய் கூவி மயிலில் வருவாய்
(பன்னிரு)

2 கட்டவிழ் நீபமாலை யிட்ட புயாசலா
மட்டவிழ் மலர்ப்பாதா யிட்டமதாய் வருவாய் (பன்னிரு)

3 நீளுமலர்ப் பொழில்கள் சூழுஞ் சிகரமலை மேல்
வாழுங் குருபரனே யாளும்படி வருவாய் (பன்னிரு)

## 279. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே (அஞ்சாதே)

அநுபல்லவி

நல்ல மஞ்சார் பொழிற் குன்றை மன்னவ னிருக்க
(அஞ்சாதே)

சரணங்கள்

1 மாதவர் பணிசீலன் போகட ரிருகாலன்
நாத வுல்லாச லோலன் கோதறு மயிற்கோலன்
குமர சரவண சமர வேல னிருக்க (அஞ்சாதே)

2 ஆண்டவ னருளுமைந்தன் நீண்டிடு வருட்கந்தன்
காண்டருஞ் சம்பந்தன் வேண்டினவர்கள் சொந்தன்
விரைமலரணி மார்பன் துரைய னிருக்க (அஞ்சாதே)

3 மன்றலஞ் சோலை நீளும்நன்றுள வாவி சூழும்
குன்றையின் மலைவாழும் துன்றடியாரை யாளும்
தூய சண்முககுகன் மாயவ னிருக்க (அஞ்சாதே)

## 280. ஆறுமுகத் துரையே

பலலவி

ஆறுமுகத் துரையே
மாறுபடு சூரரை வதைக்கும் வடிவேலா (ஆறு)

சரணங்கள்

1 சங்கர சண்முகா துங்கமயில் வாகா
பங்கசற் பாதா மங்கள குமரா (ஆறு)
2 அண்டர்கள் முனிவர் தொண்டர்கள் பணிபுரி
வண்டலர் மணிமுடி கொண்ட வுல்லாசா (ஆறு)
3 எந்தன் வினைக் கருடந்து ரட்சிப்பாயே
கொந்தலர் பொழில்சிகி வந்த குருபரா (ஆறு)

## 281. வடிவேலெடுத்து வருவாய்

பலலவி

வடிவேலெடுத்து வருவாய் – வந்து
அடியேனுக்கருள் தருவாய் (வடிவே)

சரணங்கள்

1 எந்தன் வினையது நொந்துபினோட
கொந்தணி சிறைமயிற் கந்தனே யிப்போது (வடிவே)
2 பொல்லாத நோயெல்லாம் நில்லாது வோட
வல்லாடனக் குறத்தி நல்லாளுடன் கூடி (வடிவே)
3 நின்றலர் தூரவிய துன்றிய மலர்ப்பொழில்
என்று மகலாதொளிர் குன்றை மலையிருந்து
(வடிவே)

## 282. தருணந் தருணமையனே

பலலவி

தருணந் தருணமையனே (தருணந்)

அநுபலலவி

அருண முடிக்குன்றை யனே மெய்யனே (தருணந்)

சரணங்கள்

1 வானுடர் பணி தேவ சேனுபதியே
தேனூர் பொழி னெம்மானு டாளனே (தருணந்)

2 முன்னை விதியினுல் என்னை மருட்டிட
உன்னை யடுத்தன்ன பின்னையென் றெண்ணுதே (தருண)

3 சூழு முடிக்குன்றை வாழுங் கோமலர்
தாளனே யெந்தனை யாளனே யருள்செய்ய (தருண)

## 283. தீராத வினையெல்லாந்தீர்ப்பாய்

பல்லவி

தீராத வினையெல்லாந் தீர்ப்பாய் – யெந்தன்
நேராக வந்து கண்பார்ப்பாய் (தீராத)

சரணங்கள்

1 முந்த வினையாலு மெந்த வினையாலு
முந்த னடியனுக் குகந்த குருபரா (தீராத)
2 வாட்டிய இடைமயில் தீட்டிய கனைவிழி
மேட்டிமை குறத்தி கணுட்டி மணுளனே (தீராத)
3 மஞ்சடர் பொழிற்குன்றைக் கஞ்சமலரடியாய்
நெஞ்சடர் துயர்போக்கி யஞ்ச லென்ருண்டினித் (தீராத)

## 284. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குரு நாதா – மூன்று
புரகர ரருணுதா

சரணங்கள்

1 பன்னிரு கரதலா யென்னிரு வினைதீர்
உன்னியமகிழ் முன்னிலையாய் வருவாய் (அரகரா)
2 கந்தனே ஞான சம்பந்தனே யெனையாளா
யுந்தனை யடுத்திடுமெந்தனை யாட்கொள்வாய் (அரகரா)

3 திருவளர் சோலை மருமல ருகுக்கும்
பருசிகி மலைவாழ் குருபர குமரா (அரகரா)

## 285. தந்து ரட்சிக்க வேணும்

பல்லவி

தந்து ரட்சிக்க வேணும் – மயின்மேல்
வந்து ரட்சிக்க வேணும் (தந்து)

அநுபல்லவி

வானவர் பணிசரணு — யெதிர்
தானவர் குலகலகா (தந்து)

சரணம்

வள்ளி மணளனே — யாடும்
புள்ளி மயில்லோலனே
தோகைக் கிரிக் கந்தா — வென்றி
வாகைப் புயக்கந்தா (தந்து)

## 286. எந்தனை ஆளும் ஐயனே

பல்லவி

எந்தனை ஆளும் ஐயனே — நாளு
முந்தனை அடுத்து வந்தனை செய்யும் (எந்தனை)

அநுபல்லவி

பங்கய வேதன் பணிபாதனே
துங்க மயிலிலேறி துரைநாதனே (எந்தனை)

சரணம்

வாசனையான நீபமலர் வாகனே — வள்ளி
நேச விலாச குகநிதி போகனே
குன்றைமலைக் குமரகுரு பரனே — யன்பர்க்
கென்று மாதார வேற்கிசை கரனே (எந்தனை)

## 287. நயந்தர வேணுமையனே

பல்லவி

நயந்தர வேணு மையனே (நயந்)

அநுபல்லவி

செயந்தரும் வடிவேலா செகண்டிமலை மேலா (நயந்)

சரணங்கள்

உன்னை யடுத்திடுமென்னை மிகுத்திடும்
உருமை யாகவே யிருமைனேகவே
குன்றை நாதர் மன்றுள் நீதா (நயந்)

## 288. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – பரி
சுத்தன் குன்றைமலைத் துரைக்குமரா யுந்தன் (சித்த)

அநுபல்லவி

வாசக் கடம்பணி பாகா – நல்ல
நேசக் குறத்திதன் பாகா (சித்த)

சரணம்

பங்கய மாமலர்ப் பாதா - யன்பர்க்
கிங்கித மாகிய நீதா
குன்ருக் குடிவரு குகனே – யெனை
நன்ருக் காத்தருள் செகனே (சித்த)

## 289. ஐயனே யெனைஆளாய்

பல்லவி

ஐயனே யெனைஆளாய்
வையம் புகழுங் குன்றைமலைக் குமரேசா (ஐயனே)

அநுபல்லவி

வாசக் கடம்பின்பிர் - காசப் புயத்தவா
தேசத்தர் வந்துபணி – பூசத்திருநாளாய் (ஐயனே)

சரணம்

வண்டுமலர் வேதா கண்டுபணி நாதா
தொண்டுயரு வடியார் – மண்செழு கேசா
மஞ்சுபடு சோலை மிஞ்சிவளர் முடி
சேருஞ் சிகியின் மலைவாழ் – கஞ்சமலர்ப் பாதா
(ஐயனே)

## 290. எந்தத் தெய்வமும்

பல்லவி

எந்தத் தெய்வமு முன்போல் சொந்தத் தெய்வமாகுமோ
அந்தத் திருமுடிவாள் சந்த சிகாகிரியாய் (எந்த)

சரணங்கள்

1 செந்தினைப் புனமெங்குந் திரிந்து – குறச்
சேயினை யாண்டு மலரசைப் பணிந்து
வந்தித்து அச்சொந்தந் திரிந்து – கொள்ள
மாயத்தினன் மகிழ்த் தூயத்தனே சாமி (எந்த)

2 எனது தீவினைதனைத் தீர்த்து - நாளு
மெனது நோய்தீரக் கண்பார்த்து
மனதில் மகிழ்ச்சிதனைச் சேர்த்து - ரட்சிக்க
வருகுருபர யொருவனீயே சாமி (எந்த)

3 நின்னருள் கன்பர்கள் சூழும் – யெங்கும்
நிலைக்கு மலர்ப்பொழில் நீளும் -
குன்றுக் குடிமலை வாழும் – நீபக்
கொந்தலரணியுஞ் சுந்தரனே சாமி (எந்த)

## 291. அரகரா முருகையனே

பல்லவி

அரகரா முருகையனே
புரகரர் அருளிய புண்ணியனே சாமி (அரகரா)

அநுபல்லவி

அண்டர்கண் முனிவர்கள்
தொண்டர்கள் பணி பாதா (அரகரா)

சரணம்

மங்கைக் குறமாலி
பங்கின்வளர் குமரா
நின்று பொழிலுலாவுங்
குன்றை மலைக்குகேசா (அரகரா)

## 292. திருமருகேசா

பல்லவி

திருமருகேசா – நல்ல
வொரு முருகேசா (திருமரு)

அநுபல்லவி

துயரக் கடலில் வீழ்ந்து
அயர்வுற்ற வதையாழ்ந்து
துலைத்திட வேணுங்கலைக் குமரேசா (திருமரு)

சரணம்

ஆசாபாசத்து மோசா மோசத்து
அடியேன் அலைந்திடாமல் வடிவே லெடுத்து வாராய்
மன்றலம் பொழினீளுங் குன்றையின் மலைவாழும் வரனே
பன்னிருகரதலனே சாமி (திருமரு)

## 293. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே – கடைக்கண்
பார்க்கவேணு மையனே

சரணம்

1 தூய வனுக்ரெகித்து
தீய வினை தீர்த்து
மாயமதை நீக்கி நாயனை ரெட்சித்து (காக்க)

2 பொல்லாத தீவினை நில்லாதுவோட்ட
வலாரயி லேந்தி நல்லாக முன்வந்து (காக்க)

3 அடியவர் பணிபுரி முடிமணி யொளிவிடு
படிமிசை யுயர்குன்ருக் குடிவளர் குருபரா (காக்க)

## 294. பன்னிரு கரதலனே

பல்லவி

பன்னிரு கரதலனே - சாமி
யென்னிரு வினைதீர வுன்னிதய மகிழ்வாய் (பன்னிரு)

அநுபல்லவி

தொண்டர்கள் வினைதீரத்
தெண்டணி யென்முன் வாராய் (பன்னிரு)

சரணம்

அடியர்கள் வினைதீர்
துடிமயின் மிசைவாராய்
செகண்டி மலைமேல்வரு
மகண்ட பரிபூரணா (பன்னிரு)

## 295. ஆசைப்படி யருளுவாய்

பல்லவி

ஆசைப்படி யருளுவாய்
தேசத்தர் பணிகுன்றை வாசத்தனே சாமி (ஆசை)

அநுபல்லவி

கந்தனேஞான சம்பந்தனே யரணருண்
மைந்தனே யுனைப்பணி யெந்தனை ரட்சித்தென் (ஆசை)

சரணங்கள்

1 ஐயனே பன்னிரு கையனே பொடியணி
மெய்யனே நயமிகு துய்யனே நீயே யெந்தன் (ஆசை)

சரணங்கள்

2 அடியர்கள் பணிமணிமுடி நிரையுள் குன்ருக்
குடிய னென்னுட மிடிதனைத் தீர்த்தெந்தன் (ஆசை)

## 296. ஐயனே மெய்யனே

பல்லவி

ஐயனே மெய்யனே பன்னிரு கையனே
மையடர் குன்றைமலைத் துய்யனே செய்யனே
(ஐயனே)

அநுபல்லவி

அந்தர் வானவர் வந்தடி பணியுங்
கொந்தலர் அணிபுயக் கந்தனே யென்சாமி (ஐயனே)

சரணம்

மதுவொழுகிய நயபதும மலரினயன
சதுமறை புகல்வாயன் – புதுமலர் கொடுபண் (ஐயனே)
அன்புறு தொண்டர்கண்முன்பு நிறைநிறையாய்
தன்மன துடனறுதிதென சிகிமலை வாழுங் (ஐயனே)

## 297. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்தமிரங்காயோ
கர்த்தனே குன்றைமலைச் சித்தனே யென்சாமி (சித்த)

அநுபல்லவி

தண்டையணியுங் காலனே
தொண்டர் பணியு மேலா (சித்த)

சரணங்கள்

பங்கய மலர் வேதா
துங்கமால் துதிநாதா (சித்த)
குன்றை மலையின் தேவே
யின்றெனை யாள்வாய் கோவே (சித்த)

## 298. நாதனே யெனையாளாய்

பல்லவி

நாதனே யெனையாளாய் - மலர்ப்
பாதனே குன்றைமலைப் பரனே யரனே (நாதனே)

அநுபல்லவி

ஆருறு பன்னிருகையனே – யெனக்கு
வேரு தரவிலை துய்யனே (நாதனே)

சரணம்

வேலாயுதக் கரதலனே – நாளுங்
கோலகலக் கனநலனே
நின்ருடிய பொழில்சூழும் - முடிக்
குன்ருக் குடிமலை வாழும் (நாதனே)

## 299. உனது மனது மகிழ்வாய்

பல்லவி

உனது மனது மகிழ்வாய்
யெனது மனமகிழ தனது வரமருள்வாய் (உனது)

அநுபல்லவி

நான்மறை சொலும் வாயா — நீபத்
தேன் மலரணி சேயா (உனது)

சரணம்

யகண்ட பூரணு — சூமுட்ட
செகண்டியாரணு (உனது)

## 300. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே
வேறுமுக மில்லையே
கூறுபடை வேலனே (ஆறுமுக)

அநுபல்லவி

வேதனே குரு நாதனே
போதனே பிர்க்கியாதனே (ஆறுமுக)

சரணம்

ஐயனே வேற்கையனே
துய்யனே பொடி மெய்யனே
சீலனே குன்றை வேலனே
காலனே தண்டைக் காலனே (ஆறுமுக)

## 301. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ (சாமி)

அநுபல்லவி

பூமிபுகழ் குன்றைமலைப் புண்ணிய சுப்பிரமணிய (சாமி)

சரணங்கள்

1 பங்கய மாமலர்ப் பாதன் — குரு
மங்கை மருவிய நாதன் (சாமி)

2 வீரிய சூரனை வேல்வீரன் — செய
கூரிய வேலணிகு ரன் (சாமி)

3 அண்டின பேரைக் காக்குஞ் சீலன் — முடிச்செ
தண்டியின் மலைவரு கோலன் (சாமி)

## 302. அறியாயோ மனமே

பல்லவி

அறியாயோ மனமே
முறியார் பொழிற்குன்றை முன்னவன் அருளின் (அறியா)

அநுபல்லவி

தண்டை சிலம்புகடரித்திடும் பாதன்
கெண்டைவிழியார் மால்கிளைத்திடும் நாதன்
கிடைக்கு மன்பர்க்கருள் படைக்கும் மைந்தனை (அறியா)

சரணம்

1 அடியவர் நிதம் பணியற்புத னயன்
வடிவுறு மிருவர்கள் மகிழ்நிதி மாயன்
மயிலேறு விளையாடும் ஒயிலான கந்தனை (அறியா)

2 மாமலர்ச் சோலையன் மணந்திடச்சூழும்
தேமணி முடிச்சிகி தேன்மலை வாழும்
சேயனை ரட்சிக்குந் தூயனையொரு நாளும் (அறியா)

## 303. வேண வரந்தர வேணும்

பல்லவி

வேண வரந்தரவேணும்
தோணுஞ் சிகிமலைக் குன்றைத்துரைக்குமரா அடியேற்கு
(வேண)

சரணங்கள்

1 வாது புரிசூரனை மோது படைவீழிட
சூதுசெய்து வென்றிடும்போது புனைவடிவேலா (வேண)

2 அடரும் வினைதீரிட யுடனருள்செய் தாண்டிடும்
திடமயிலேறிய தடிமுடி யினைதனே (வேண)

3 மஞ்சடருஞ்சோலை வளமிஞ்சவருதோகை மலைக்
கஞ்சமலர்ப் பூஞ்சரணநெஞ்ச மகிழ்வாகவே (வேண)

## 304. சோதியாதே ஐயனே

பல்லவி

சோதியாதே ஐயனே - அடியேனை
நீதியாகக் குன்றை மீதில்வளர் மெய்யனே (சோம்)

சரணம்

1 துதித்துக்கொள்வேன் சிலனுள் – நெஞ்சின்
மதித்துக் கொள்வேன் சிலனுள் – பரி
சுத்தனே யருண்முத்தனே யெனை (சோதி)

2 பாடிக் கொள்வேன் சிலனுள் – நெஞ்சில்
தேடிக் கொள்வேன் சிலனுள் – பரா
பரனேசடை முடியரனே யினியெனை (சோதி)

3 பூசை செய்வேன் சிலனுள் – நெஞ்சினில்
ஆசைசெய்வேன் சிலனுள் - யருள்
புண்ணியனே சுப்பிரமண்ணியனே யெனை (சோதி)

## 305. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – மூன்று
புரவரா வமரேசா (அரகரா)

அநுபல்லவி

கருணுகர கிருபா – நிறத்தில்
அருணு விண்ணேர் நிருபா (அரகரா)

சரணம்

சருவதயாபரனே – வேலேந்தும்
மருமலர்நிகர் கரனே
குன்றுக்குடி நாதா – யன்பர்க்கு
நின்ருழ்க் கருள் பாதா (அரகரா)

## 306. ஆனந்தத் தாண்டவனே

பல்லவி

ஆனந்தத் தாண்டவனே (ஆனந்த)

அநுபல்லவி

பானந்தையணி கராபரனே யரகரா (ஆனந்த)

சரணங்கள்

1 சரவண பவகுகா தளைத்திடு மறுமுகா
வரமடியர்க் கருளும்
காதல் வடி வேலா (ஆனந்த)

2 பங்கச மலர்ப் பாதா
மங்கள மிகு நாதா
துங்க மயிலேறுந் தங்க வடிவேலா (ஆனந்த)

3 மன்றலம் பொழில் சூழும்
குன்றையின் மலை வாழும்
நன்றியடி யார்க்கருள் வென்றி வடிவேலா (ஆனந்த)

## 307. பன்னிருகையனே

பல்லவி

பன்னிரு கையனே – சாமி
யென்னிரு வினை தீராய் (பன்னிரு)

அநுபல்லவி

மயிலேறி விளையாடு வீரா - நாளும்
ஒயிலாக விளையாடு சூரா (பன்னிரு)

சரணம்

வேலேந்து மாமலர் கரனே - திவ்விய செங்
கோலேந்து செயமிகு வரனே
நின்றாடு பொழி லெங்குஞ் சூழும் - முடிக்
குன்றுக் குடிமலை வாழும் (பன்னிரு)

## 308. கருத்தே

பல்லவி

கருத்தே மறவாதே (கருத்தே)

அநுபல்லவி

பருத்த பொழிற் குன்றை பார்த்திபனை நேர்த்தியுடன்
(கருத்தே)

சரணங்கள்

1 பன்னிரு கையனை யுன்னித மெய்யனை
மின்னிடி துய்யனை துன்னி வையனை (கருத்தே)

2 கரண வம்புயனே யரண நன்னயனே
பரவன பாயனே தரவயுற் சேயனே (கருத்தே)

3 குன்றையின் வேலனே குன்றையின் மேலனே
நன்றி சேர் கோலனே பொன் சிகிலோலனே (கருத்தே)

## 309. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ - நாளும்
பத்தர்கள் பணிகுன்றைப் பரனே அரனே (சித்த)

அநுபலலவி

கந்தனே ஞான சம்பந்தனே யரனருள்
மைந்தனே குறமகிழ்க் கந்தனே யென்சாமி (சித்த)

சரணம்

பமர மலரின் நீபா குமர சண்முக நாதா
அமரர்கள் பயங்காரா சமர வடிவேலா
மன்றன் மலர்ச்சோலைக் குன்றையின் மலேகுகா
வென்றியசுரர்கள் கொன்றிடு தாபா (சித்த)

## 310. அரகர குருநாதா

பல்லவி

அரகர குருநாதா - திரி
அரகர அருள் பாலா (அரகர)

அநுபல்லவி

பாதக வினே தீராய் - பொல்லா
நோதகமதைப் பாராய் (அரகர)

சரணம்

தீவினே தனே யோட்டாய் - யுன்னுட
பாவினே தனே காட்டாய்
சிகி மலே வரு தேவே - சகல
மகித லந்துதி கோவே (அரகர)

## 311. மயிலேறிய வீரா

பல்லவி

மயிலேறிய வீரா - நல்ல
ஒயிலேறிய நாதா
உயர் குன்றை மலை வேதா (மயி)

அநுபல்லவி

அஞ்சாதே யென்றென்னை யாதரிப்பாயே
நெஞ்சார் மகிழ்ந்தருளிச் செய்வாயே (மயி)

சரணம்

சூர சங்காரஞ் செய் துலங்கிய வேலா
சார யிங்கித வள்ளி தனக்கிசை லோலா
நின்றுடிய பொழிற் றனில் திடனுளும்
குன்றுக்குடி வரைக் குருபர வாழும் (மயி)

## 312. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே (தண்டா)

அநுபல்லவி

வண்டார் பொழிற் குன்றை மலைக்குரு பரயர (தண்டா)

சரணம்

உன்னை யடுத்திடு மென்னை ரட்சிப்பாயே
பின்னை வேறு கதியென்னை யிருக்குது
வாசமலர்க் குழற்கேச வள்ளி புணர்
நேசனே பிரகாசனே யென் சாமி
திருமுடி மேவிய தருவன நிறைதரு
பெருமைகொள் சிகிமலைக் குருபர குமரேசா (தண்டா)

## 313. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே—நாளும்
மஞ்சார்ப் பொழிற்குன்றை வாசனை ராசனை (அஞ்சாதே)

அநுபல்லவி

தன்னை யடுத்தவர் தங்களைக் கார்த்துப்
பின்னை வினைவராமல் பேணிக்கண் பார்த்து
யுன்னையினி ரட்சிப்பானென்னை யுனக்குக் கொள்ளை
(அஞ்சாதே)

சரணம்

நம்பின பேர்களை நாட்டாற்றில் வீழாது
வம்பு செய்துயர் தன்னின் மயங்கியே தாளாது
ரொம்பவனுக் கிரகித்துச் சம்பிரமத்துடன் காப்பான்
மதுமலர்ச் சோலையள் மலிந்துடனுளும்
புதுமலர்க் குன்றை பொருந்திட வாழும்
புண்ணியனருள் சுப்பிரமண்ணிய னிருக்க (அஞ்சாதே)

## 314. என்றைக்கு யெனைஆள்வாய்

பல்லவி

என்றைக்கு யெனை ஆள்வாய் ஐயனே
குன்றைக்கு வாய்த்திடுங் குரு பரநாதா (என்றை)

சரணங்கள்

1 வாசக்கடம்பணி தோளா - வெகு
நேசக் குறத்தி மணவாளா - யெந்தன்
ஆசைக்குயு முருகேசக் குரு பரா (என்றை)

2 அண்டர் பணிசெயு பாதா - யுயர்
யெண்டிசையுந் துதி நாதா - பணி
தொண்டர்க்கு உதவிய கண்ட பரிபூரண (என்றை)

3 குன்றுக் குடி மலை யாளா - பத்தரை
நன்றுகக் காத்தருள் தாளா - நாளு
நின்று மயிலா வென்றூர் வடி வடி வேலா (என்றை)

## 315. சகல சனரட்சகா

பல்லவி

சகல சனரட்சகா
மகிமையுள குன்றைமலைக் குருநாதா (சகல)

அநுபல்லவி

அந்தர் வானவர் வந்தடி பணியும்
கந்தக் குமரா யெந்தனை யாளுமையா (சகல)

சரணம்

மோசமதாகிய வாசையின் கடல்தனை
மாசற வொழித்தினி நேசவருளைச் செய்வாய்
பொன்முடி சூழ்தரு தேன் சிகிமலை வாழ்வே
யென் வினைதனை தீர்ப்பாய் மின்சிறை மயில (சகல)

## 316. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே - யரனே
அமரர் பணியுங் குன்றை ஐயனே மெய்யனே (குமர)

சரணங்கள்

1 தானவர் பணி சரணு யரன்
ஞானவர் துதிப்பவனே சிவனே (குமர)

2 அற்புத சரவணனே கண்ணே
கற்புயர் குறமகள் கருத்தனே யொருத்தனே (குமர)
குன்ருக் குடிவரு குகனே சுகனே
தன்ருழ்க் கன்பர்க்குத் தருவே யுருவே (குமர)

## 317. வேறு ஆதரவு உண்டோ

பல்லவி

வேறு ஆதரவு உண்டோ
நீருர் மெய்யனே கூருர் கையனே (வேறு)

அநுபல்லவி

அடுத்து அடுத்தென்னை யாழ்வாயென்றே வந்தெனைத்
தொடுத்த வினையை நீக்கிச் சுகத்தைத் தருவதற்கு (வேறு)

சரணம்

ஆண்டவ நீ யென்றுன்னை அடிதனை நம்பினேன்
வேண்டிய தெல்லாந் தந்து வினைதனை விலக்கிட
செகண்டி மலையினுளுஞ் சிறந்திணி வாழும்
அகண்ட பரிபூரணு யாதரித்தெனைக் காக்க (வேறு)

## 318. நம்பினேன்

பல்லவி

நம்பினேன் சாமி - யுனது பாதம்
நம்பினேன் சாமி (நம்பி)

அநுபல்லவி

பம்பிய பொழிற் குன்றை பரனே யரனே (நம்பி)

சரணங்கள்

1 பாயமதை விலக்க வேணும் - யருட்
டீப மதை நல்க வேணும் (நம்பி)

2 தீவினை தனைத்தீர்க்க வேணும் - யெனது
ஆவியைக் கண் பார்க்கவேணும் (நம்பி)

3 பூமலர்ப் பதந்தரவேணும் - குன்றை
மாமலையா வரவேணும் (நம்பி)

## 319. நெஞ்சில் தயவுவேணும்

சரணம்

நெஞ்சில் தயவு வேணும் ஐயனே - நிலை
மஞ்சிற் சிறந்த திருமால் மருகோனே (நெஞ்சில்)

அநுபல்லவி

உந்தனை அடுத்துச் சிந்தனை செய்பவர்
இந்த உலகில் வாழ்க முந்த வந்தருள்தா (நெஞ்சில்)

சரணம்

கொஞ்சிடு மொழிபயிலும் வஞ்சியர் இருவரும்
செஞ்சேவலு மீதேறியஞ்ச லென்றே அருள்தா
மோன முனிவர் முதல்வானவர்கள் குன்றை
ஞான குருபரனே தானே யின்றெனைக் காக்க (நெஞ்சில்)

## 320. சிவசிவா அறுமுகனே

பல்லவி

சிவ சிவா அறுமுகனே
தவவடிவோர்க்கு மெட்டா தற்பரனே சாமி (சிவ)

சரணங்கள்

1 தேடக்கிடையாத தெள்ளமுதமே சாமி
நாடக் கிடையாத நற்பொருளே சாமி
வேடப் பெண்ணரசியைக் கூடத் திரிந்தலைந்த (சிவ)

2 அண்ட பகிரண்டமு மகன்றிடுஞ் சோதியே
மண்டல வன்பர்கள் மனவிருட்சோதியே
கொண்டல் வண்ணமருகா தண்டமிழ்க் கனிவாயா (சிவ)

3 மேலான மணிமுடி விளங்கியே தோன்று
பாலான மதிதவழ் பருதிடுங் குன்றை
வேலா வடியனை மாலாக் காத்தருள் (சிவ)

## 321. சாமியை மறவாதே

பல்லவி

சாமியை மறவாதே மனமே - சுப்பிரமண்ய
சாமியை மறவாதே

அநுபல்லவி

பூமி புகழுங் குன்றை மாமிகு மலைக் கந்த (சாமி)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனை - யென்னிரு கண்மணியை
யுன்னித வேலனை - நன்னிதியான கந்த (சாமி)

2 வேலனை யரனருள் பாலனை மயிலேறு
கோலனை தமிழிற் சீலனை யுயர்கந்த (சாமி)

3 பங்கய பாதனை - யிங்கித நாதனை
துங்க சிகேசனை - மங்களனைக் கந்த (சாமி)

## 322. பாத தரிசனஞ்செய்வரயே

பல்லவி

பாத தெரிசனஞ் செய்வாயே (பாத)
போத மில்லாத மனப் பேயே

அநுபல்லவி

அண்டர்கள் அனுதினம் பரவும் - பதித்த
தொண்டர்கள் அனுதினம் பரவும் - சிறை
வண்டர் படியிநீபத்தண்டகுமணிப் புயன் (பாத)

சரணம்

சூரசம்மார வடிவேலன் - செய
வீரபராக்கிரம வேலன் - தமிழ்ச்
சார மிகுந்த வாய ஞாரணன் மருகேசன்
மாமலர்ச் சோலையள் வாழும் - நாளும்
பூமலி குன்றையில் வாழும் - குறத்
தாம குழலி நாதன் அருமறை மலர்க்கிணை (பாத)

## 323. ஒருதரம் கண்டாலும்

பல்லவி

ஒரு தரங்கண்டாலும் போதும்
மருமலர்ப் பொழிற் குன்றை வாசனை யீசனை (ஒரு)

சரணங்கள்

1 சூரசம்மாரனை வீர சிங்காரனை
தாரணிபுயனை யுதாரனை தீரனை (ஒரு)

2 பங்கய பாதனை யிங்கித நாதனை
துங்க வுல்லாசனை மங்கையர் லோலனை (ஒரு)

3 மகிதலஞ் சூழும் சிகிமலை வாழும்
பகிரண்டம் பரவிய மகிமைப்ரதா பனை (ஒரு)

## 324. அருள்தர வேணும்

பல்லவி

அருள்தர வேணுமையா
திருமறை தேடருஞ் சிகிமலை மெய்யா (அருள்)

சரணங்கள்

1 பாதச் சிலம்பொலி கலகல வென்ன
பைம்பொற் சலங்கை யொலியது துன்ன
சீதக் கடம்பமலர்த் தொடை மின்ன
சிறகு மயிலிலேறி நிற்க வென்முன்வந்து (அருள்)

2 அண்டர் குழாங்க ளெல்லாங் கூடி வரவே
அடியர் குழாங்க ளெல்லாம் பணிதரவே
யண்டமா புரியும் பன்னிரு கரவேலை
அரனே யிலகிய துய்யனே முன்வந்து (அருள்)

3 குன்றுக் குடிமலை குக குரு பரனே
கடல்பஞ் சாட்சரங் குலுங்கிய வரனே
நின்றுட் கன்பரை ரட்சிக்குந் தரனே
நீதாக மலர்ப் பாதா யென்முன் வந்து (அருள்)

## 325. ஒருநாளுங் குறைவருமோ

பல்லவி

ஒரு நாளுங் குறை வருமோ - மனமே (ஒரு)

அநுபல்லவி

திருநாளுஞ் சனங்களுஞ்சிறக் குன்றுக்குடித்
தேவர்கள் தேவனையவர்லுடனடுதால் (ஒரு)

சரணங்கள்

1 மயிலேறி விளையாடு கந்தனை - கொன்றை
வாசனை முடியான மைந்தனை
வெயிலேறிய நுனைக்குந் தனை - நாளும்
வேண்ட வடியார்க் கருளாண்டவனை யடுத்தால் (ஒரு)

2 செகமெங்கும் ரட்சயக் கருத்தனை - கான
வள்ளி மயிலிக்கு திருத்தனை
மகபதி பரவிய ஒருத்தனை - நீப
வாசனை யெங்கும் பிரகாசனைக் கண்டடுத்தால் (ஒரு)

3 அண்டிய பேர்களை யாளும் – மண
வம்பொன் மலர்ப்பொழில் சூழும்
யெண்டிசை துதி குன்றை வாழும் - பொல்லா
யெனக்குதவி செய்யும் வேளைத் துதித்தடுத்தால் (ஒரு)

## 326. நாதனை நினைமனமே

பல்லவி

நாதனை நினை மனமே -மலர்
வேதனைச் சிறைவைக்கும் போதனை தினமே (நாதனை)

அநுபல்லவி

சோதியை ஞானனு பூதியை திவ்விய
ஞாதியை யெனையாளு நீதியைக் குருபர (நாதனை)

சரணம்

ஐயனே பன்னிரு கையனே பொடியணி
மெய்யனேப் பரிசுத்த துய்யனே குருபர
மாயனேக் குன்றையி லுயனே யமரர்
சகாயனே யருளிய சேயனேக் குருபர (நாதனே)

## 327. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா - நான்கு
அருமறை புகழுமையனே மெய்யனே (குரு)

சரணங்கள்

1 சரவணபவ குகனே . நாளும்
அரவணி பவன் மகனே (குரு)

2 கடம்பணி வொயிலா - நல
நடம்புரி மயிலா (குரு)

3 சிகிமலே வருநாதா - அன்பர்
மகிமை கொள் மலர்ப்பாதா (குரு)

## 328. எனக்குன்னிரு பதந்தருவாய்

பல்லவி

எனக்குன்னிரு பதந்தருவாய் - நாளு
முனக்கு வடுமை செய் மனத்துவடிய வருன் (எனக்கு)

அநுபலலவி

கெடுக்க வருகலி துடுக்கை யொழித்தினி
நடுக்கும் வினேயினேக் கடுக்க விரட்டியே (எனக்கு)

சரணம்

மனத்தில் வருதுயர் தனக்கு துயர் செய்து
தனது வருள் செய்வை சினத்த வயிலனே
தண்டலேகளும் மூதண்டமும் நிறை
யண்ட துதிசெய் சிகிண்டி மலேக் குகா (எனக்கு)

## 329. காக்கவேணுமையனே

பல்லவி

காக்கவேணுமையனே - கடைக்கண்
பார்க்க வேணுமையனே (காக்க)

அநுபல்லவி

முடிபெறு சூரனைவடி வுள்ள வேலினால்
அடியறவே வென்று கெடியியர் பாலவா (காக்க)

சரணம்

எனது மிடிர்கள் யுனது கிருபை செய்வை
கனக மயமாகி தினகர ப்ரபையாய்
மஞ்சடர் மலர்ப் பொழில் மிஞ்சிய சிகிமலை
கஞ்ச மலர்ப்பாதா - தஞ்சம் வேறில்லை நீ (காக்க)

## 330. அரகர சாம்போசிவா

பல்லவி

அரகர சாம்போ சிவா - மூன்று
புரகனருளிய புதல்வனே யென்சாமி (அரகர)

சரணங்கள்

1. பன்னிரு கரதலனே - அடியார்க்கு
நன்னிதிதருநலனே (அரகர)

2 நலம்பணி பாதனே - யெனக்கு
நலம்புரி நாதனே (அரகர)

3 குன்றை மலை வாசனே குறத்திக்
கென்று பிரகாசனே (அரகர)

## 331. மனதே யொன்றும் அஞ்சாதே

பல்லவி

மனதே யொன்றும் அஞ்சாதே - யெல்லா
தனதேயாளுமொன்று ளுந்தானி கெஞ்சாதே (மனதே)

அநுபல்லவி

கடம்பணி நடம்புரி மயிலன்
திடம்புரை வயிலனிடந் தயவிருக்க (மனதே)

சரணம்

வாசனை சேர் குபுலக காச கலகுறத்திக்கு
நேசன் குமர் விசுவாச மிருப்பதனல் (மனதே)
மன்றன் மலர்ப் பொழிற் குன்றை மலையில் வரு
வென்றி வடிவேலவன் அன்றி யுனக்கிருக்க (மனதே)

## 332. சித்த மிகயிரங்கி

பல்லவி

சித்த மிகயிரங்கி மெத்த வருளவேணும்
முத்தனே குன்றை - மலைக்கர்த்னே - யென்சாமி (சித்த)

சரணங்கள்

1 சரவண பவகுகா வரவணி சடை முப்பர்
பரனுன் அருளிய காதல் வடிவேலா (சித்த)

2 நையும் படி யெந்தன் மெய்யில் வருநோயைக்
கொய்து வனுக்கிரகஞ் செய்ய வேணுஞ் சாமி (சித்த)

## 333. பாரும் பாருமையா

பல்லவி

பாரும் பாருமையா - தீவினை
தீருந் தீருமைய்யா (பாரு)

சரணங்கள்

1 உங்களை அடுத்தவர் தங்களை ரட்சித்து
மங்களகரஞ் செய்யத் திங்கண் முகக்கடைக்கண் (பாரு)

2 நாளுக்கு நாள்வந்து தாளுஞ் சூழவீழ்ந்தவா
பாழுக்குள் அழியாலூருக்கி ருக்கவே கண் (பாரு)

3 முடிபெற்ற மலை குன்ருக் குடிபெற்ற குருபர
வடிநலஞ் செய வடிவுற்ற தங்கள் கண் (பாரு)

## 334. கண்டாற் பெரிய பேருண்டாகு மனமே

பல்லவி

கண்டாற் பெரிய பேருண்டாகு மனமே (கண்டார்)

அநுபல்லவி

வண்டார் பொழிற்குன்றை வாசனை யீசனைக் (கண்டார்)

சரணங்கள்

1 சூர பராக்கிரம வீரசெயப் பிரதாப
கூர் அயிற்காதல் தீரவோய் அரனே (கண்டார்)

2 குமர குருபரேச சமர வடிவேலா
அமரப்பணி சரண பரம மலர்சாதனே (கண்டார்)

3 வண்டிசைதனே பாடிக் கொண்டிரு மலர் பொழில்
மண்டிய மகுடச் செங்கண்டிமலை அய்யனே (கண்டார்)

## 335. மனப்படி யருள் செய்வாய்

பல்லவி

மனப்படி யருள் செய்வாய்
கனப்பரு குன்றை மயிலைக் கர்த்தனே ஒருத்தனே (மனப்படி)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை லோலா
புள்ளி மயிலினே நிமலா (மனப்படி)

2 வாச மலரிணி பா
நேசவன்பர் பூபா (மனப்படி)

3 குன்றைமலை யினுதா
நன்றருள் புரி பாதா (மனப்படி)

## 336. சம்பு சதா சிவனே

பல்லவி

சம்பு சதா சிவனே - நாளும்
நம்பு அடியார்க்கருள் நாதனே நீ தானே (சம்பு)

அநுபல்லவி

தேறு தமிழ் புகலும் - கூறுகண வேலா
நிறுபுலை புயவா - யாறுமுக குகனே (சம்பு)

சரணம்

சங்கரர் அருள் துங்க மயிலாளா
தங்க சிங்காசனு யெங்கனு நிறைவாச
மன்றன் மலர்பொழிற் குன்றை மலையின்
நன்றருள் புரிசெயும் வென்றி வடிவேலா (சம்பு)

## 337. காக்க வேணு மையனே

பல்லவி

காக்க வேணு மைய்யனே - கடைக்கண்
பார்க்க வேணு மைய்யனே (காக்க)

சரணங்கள்

வேலையணி சூரனே - நீ ப
மாலையணி புரனே (காக்க)

பங்கய மலர்ப் பாதனே – நாளும்
மங்கள வள்ளி வள்ளி நாதனே (காக்க)

மன்றன் கொரிள் பொழில் ராய் – வளர்
குன்றை மலையின் மேரா (காக்க)

## 338. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் - நாளும்
நயமிகு குன்றைமலை நாதா நீதா (தயவு)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை லோலா -யாடும்
புள்ளி மயிலின் மேலா (தயவு)

2 வாச மிகுந்த நீ பா – வெகுபிரகாசா (தயவு)

3 யண்டர் புணியுஞ் சீலா தொண்டர் துதிக்கும் வேலா
குன்றை மலையின் கோவே நன்றருள் புரிதேவே (தயவு)

## 339. குமரகுரு பரனே

பல்லவி

குமர குருபரனே - யந்த
அமரர் பயங்கரனே (குமர)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை தன் பாகனே - நல்ல
புள்ளி மயிலேறிய யோகனே (குமர)

2 மங்கள கரவுமை பாலனே - சூரன்
அங்கம் பகரஞ்செயும் வேலனே (குமர)

3 தாதவுணீப மலர்த் தோளனே - நாளுஞ்
சீதமலியுங் குன்றை யாளனே (குமர)

## 340. குக குமரேசா

பல்லவி

குக குமரேசா - முடிச்
சிகிமலை வாசா (குக)

அநுபல்லவி

தீவினை தீராய் - யடியேன்
நீ விழி பாராய் (குக)

சரணம்

வரம் பல தருவாய் – மயின்மேற்
பரம பொருள்வாய்
வரிவளை யாகா - செகண்டிக்
கிரியின் மேலா (குக)

## 341. ஆதரவு செய்வாயே

பல்லவி

ஆதரவு செய்வாயே
பூதலம் புகழுங் குன்றைப் புண்ணியனே யென் சாமி
(ஆதரவு)

சரணங்கள்

1 சூரசங்காரனே வீரவென் வேலனே (ஆதரவு)
2 துங்க மயிளாளனே இங்கித விலாசனே (ஆதரவு)
3 குன்றைமலை நாதனே - நன்றருள் செய் பாதனே
(ஆதரவு)

## 342. எந்தனைக் காக்கவேணும்

பல்லவி

எந்தனைக் காக்கவேணும்
செத்தமிழ் கந்தனே குகனே (எந்தனை)

அநுபல்லவி

உன்னித வேலணி பன்னிரு கரனே
நன்னிதியருளி சன்னிதி பணியும் (எந்தனை)

சரணம்

பாத பங்கயனே மாதரிங்கிதனே
வேதனன்புடன் பணி நாதசுந்தரனே
சுடர்தரு பொழிலின் யிடமிகு நயஞ்சேர்
திடமுடி மயின்மா வடவகா முதலே (எந்தனை)

## 343. உன்பாதமே நம்பினேன்

பல்லவி

உன்பாதமே நம்பினேன் - நாளும்
முன்பாக நின்று துதி மொழிந்து மொழிந்து (உன்)

அநுபல்லவி

பாவியடியேனை யாவிமிறைக்கச் செய்து
தீவினை தனைத்தீர்த்து மேவி யுலகிருக்க (உன்)

சரணம்

பொல்லாத துன்பங்க ளெல்லா முந்தீர்த்திட
வல்லாளீயென்று நல்லா யுந்தனை வேண்டி
வப்பவிழி தடுளகோதிறிமுதல மப்பல மலர்ந்திடும்
நம்படியார் கள்குன்றை தம்பிரா னென்று தேடி (உன்)

## 344. சாமி சித்தமெப்படியோ

பல்லவி

சாமி சித்தமெப்படி யோ (சாமி)

அநுபல்லவி

பூமி புகழ்க் குன்றை மலைப் புண்ணிய சுப்பிரமண்ணிய
(சாமி)

சரணங்கள்

1 கோது மலர் சூடியத்துநதை வள்ளிமயல்
வைது மருவிய புயச்சித்து விதமான கந்த (சாமி)

2 துங்க மயிலேறி வருந்தங்க வடிவேலவன்
சங்கரருள் புதல்வன் மங்கள குமரன் கந்த (சாமி)

3 வாசமிகு பொழில்கள் பிரகாசமாகற் துலங்கிய
வாச முடிச்சிகி மலையுல்லாச மயிலிறங்கு கந்த (சாமி)

## 345. அய்யனே யெனை ஆளாய்

பல்லவி

அய்யனே யெனை ஆளாய் - பன்னிரு
கைய்யனே பூதியணி மெய்யனே (அய்யனே)

அநுபல்லவி

கடம்பணி புயனே -நடம்புரி மயிலா
அடஞ்செயுஞ் சூரரை - தடங்கொள் மயிலரி (அய்யனே)

சரணம்

நாத் தழும்பாகவே - தோத்திரமே செயு
நேத்தியினடியரைக் - காத்தினி நாளும்
நின்றசை பொழில்கள் மன்றினில் மலர்ச்சோலை
குன்றையின் மலைவாழ் -வென்றியினுதா (அய்யனே)

## 346. மனம் வரவேணும்

பல்லவி

மனம் வரவேணும் (மனம்)

அநுபல்லவி

கனமிகு குன்றைமலைக் கர்த்தனே—சாமி (மனம்)

சரணங்கள்

1 தொடுத்த வுடவில் வந்த துயர்தனைத் தீர்க்க
வடுத்தங்கும் விழியாள் வந்தெனைப் பார்க்க (மனம்)

2 ஆவியின் பாதத்திட லங்கி குயங்கு
கூவிய மயில்வந்து குறையைத் துலைக்க (மனம்)

5 மன்றல் மலைச் சோலை மலிந்திருந்துய்ய
குன்றை மலையிலிருந்து குளிர்ந்தருள் செய்ய (மனம்)

## 347. வடிவேலனே

பல்லவி

வடிவேலனே - குன்றுக்
குடியாளனே (வடி)

அநுபல்லவி

மதுமாமலர்ப் பதுமாசனன்
நிதமே துதிபத நாதனே (வடி)

சரணம்

அண்டர்கள் பரவுந் தொண்டர்கள் பரவும்
மண்டலம் பரவும் வண்டவர் மார்பா
மகபதி முதலோர் - மிக மிக நிரையும்
முகிண் மலர்ச்சோலைச் சிகிமலை வாளவே (வடி)

## 348: வேண்டிய வரந்தருவாய்

பல்லவி

வேண்டிய வரந்தருவாய் (வேண்டி)

அநுபல்லவி

பூண்டிரு மலர்சோலை நீண்டிருங்குன்றை நாதா (வேண்டி)

சரணங்கள்

1 மிடியினிலழுந்திடாபடியும் பொழுது
கடிமலராகிய வடிதொழும்படி யாவன் (வேண்டி)

2 பவக்கடல் தனில் வீளாத்
தவத்தைச் சேயாதவன் வத்தினிற் போகாமறு வசஞ்
செய்தடியனே (வேண்டி)

3 மகபதி முதலினோர் - யகமலர்ந்தே பணி
மகிதலமும் பணிசிகி மலையாயினி (வேண்டி)

## 349. ஏனய்யா மனதிலை

மல்லவி

ஏனய்யா மனதிலை
வானெய்யுங் குன்றைமலை வரதா வருள் செய்ய (ஏனய்யா)

அநுபல்லவி

அண்டர்கள் பணிசெயுந் தொண்டர்க் கடுதி செய்யும்
வண்டர்கள் படியுந் புண்டரிக சரணு (ஏனய்யா)

சரணம்

அடம்புரி சூரனைக் கடந்திட வேல் விடும்
நடம்புரி மயிலேறுங் கடம்பணி மணிமார்பா
மண்டிய மலர்ப் பொழில் கொண்டிடு யலைதரு
தொண்டரை சூளுஞ் செகண்டியின் மலை நாதா (ஏனய்யா)

## 350. நாதனே யெனை ஆளாய்

பல்லவி

நாதனே யெனை ஆளாய்
பாதம் பணிவோர்க்கருள் பரனே யரனே (நாதனே)

அநுபல்லவி

பங்கயமா மலர்மங்கை மருவிய
சங்கணி கந்தலை மங்கள மருகேசா (நாதனே)

சரணம்

குடமலை மாமயில் மடவால் குறத்தி
தடமயில் தீர்ந்திடயுடன் மருவிய புயா
குயில் தவழ் சோலையள்பயில் முடிநிரை தரு
மயின்மலை மேவிய வொயிலள குருபா (நாதனே)

## 351. முருகையனே சாமி

பல்லவி

முருகைய்யனே சாமி - யுந்தன்பன்
னிருகையில் வேலெடுத் தெந்தனை யாண்டருள் (முரு)

சரணங்கள்

1 வேதற்கு பதேசித்த முதலே தமிழ்
விற்பனனே யருள் யற்புதனே
பாதம் பணிவிடை செய்வடியார் - கருள்
பரனே பரனே யரனே யரனே (முரு)

2 சிந்தர் முனிவர்கள் துதிக்குள் செய்ய
சேவலனே வள்ளிக் காவலனே
மத்த கெசத்தார்க்குத் துணைவா - நீப
வாசனே யன்பர் நேசனே (முரு)

3 நாளுமலர்ப் பொழிலிலருங் குன்றை
நீதனே நல்ல போதனே
வாளு மயிலேறும் வீரனே
மகா மாயனே தெய்வ நாயனே (முரு)

## 352. சாமி சித்த மிரங்காதோ

பல்லவி

சாமி சித்த மிரங்காதோ - நாளும்
பூமி புகழுங் குன்றைமலை நாமவடிவேலா கந்த (சாமி)

அநுபல்லவி

முன்புடன் வந்து நின்றுன் கெந்தனைப் பார்த்து
நின்பதந் தனைத்தோளுமென மனம்போலவே (சாமி)

சரணம்

சந்திர சடாதரர் பைந்தொடி யுமையவள்
தந்திடு குருபரமெந்தனை காக்கவே
வெற்றிவடி வேலா - மன்றன் மலர்ப்பொழில்
குன்றைமலைக் குமரே நின்றருள் புரியுவே (சாமி)

## 353. கதி வேறில்லையா

பல்லவி

கதிவேறிலைய்யா
மதிதாவிய குன்றைக் கதிபா வடியேற்கு (கதி)

சரணங்கள்

1 முந்தச் சொன்னத் தாலேந் தத்துயர் செய்தேனே
யந்தத்துயர் தீர்த்து யிந்தச் சொன்னத்தில்
அலைத்திட்டே யதைத்துலைத்திட்டே நல்ல (கதி)

2 கோப..................தாபத்தினுற் செய்த
பாபத்தையும் வந்த வாபத்தையுந் தீர்த்துப்
பரமபதமான சிரமமில்லாததோர் (கதி)

3 தொடுத்த பழவினை யாலெடுத்த சரீரத்தை துலைத்தினி
யடுத்த யெனக்கு துயர்கெடுத்ததைச் துலைத்தினி
அய்யனே குன்றைத் துய்யனே நல்ல (கதி)

## 354. திருவாக்குத் தரவேணும்

பல்லவி

திருவாக்குத் தரவேணும் - நல்ல
உருவாக்கு முடிக்குன்றைக் கருத்தனே கருத்தனே (திரு)

அநுபல்லவி

மருமலரா நீப மாலிகா பரணு
அருமையடி பணியுகந்திடுஞ் சரணு (திரு)

சரணம்

பன்னிருகையிலணி பார வடிவேலா
யென்னிருவினை தீர்க்க விசைந்திடுசீலா
யாதியான குன்றையும் மலை நாதா
மாதிரு பேர்களை மருவிய கியாதா (திரு)

## 355. பாத தெரிசனம்

பல்லவி

பாத தெரிசனம் தாராய் – மயிற்
பரியினில் ஏறியே யொயிலுடன் வாராய் (பாத)

அநுபல்லவி

வேதனை மிகுமோர் பாதகவினையா
லேதடுமாறிய நோதகந்தீரவே (பாத)

சரணம்

பைந்தொடியர் ராணுந்திடும் வினையா
நினைந்திட வருநோய் வெந்திடத் தீர்க்குந்
தருவுயர் சோலையின் பெருவளஞ் சேரும்
திருமுடி நிறையுமொரு சிகிமலையாய் (பாத)

## 356. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே - அடியேற்கு
வேறு துணையில்லையே (ஆறுமுக)

அநுபல்லவி

பாதக வினையினறே தகமாவேனே
தீதகல மயிவாளா தாதவும் மலர் மார்பா (ஆறுமுக)

சரணம்

வஞ்சனை மிடியாலே தொஞ்சிடு மடியேனை
பஞ்சை போலச் செய்யாதுன் னெஞ்சம் மகிழ்ந்தருள்வா
யுன்பத தெரிசனங்குடன் தரிசிக்கு
மென்தனைக் காத்தருள் தென் சிசி மலைவாளும் (ஆறுமுக)

## 357. குமர குருபரனே

பல்லவி

குமரகுரு பரனே
அமரர் பணியுங் குன்றை அய்யனே மெய்யனே (குமர)

அநுபல்லவி

சமரவுகிற வடிவேலா – நல்ல
பமர நீ பணியுங் கோலா (குமர)

சரணம்

அனந்த சயனர் மருகோ – நாளுஞ் சேர்
பனங்கொள் குறத்தி புணர் நேசா
மருமலர்ப் பொழிற் சிகிமேரா - யெனக்குத்
திருவருட யினித்தாரய் (குமர)

## 358. எந்தனை ஆளும் அய்யனே

பல்லவி

எந்தனை ஆளும் ஐயனே - நாசனம்
பந்தனே யடியெனை வந்தனை செய்குவேன் (எந்தனை)

சரணங்கள்

1 மதுரிதத் தயுபா
சதுர்விதப் பொருளா (எந்தனை)

2 வானவர் தேடும் ஞான விலாசா
முடிக்கிரி குன்ருக் குடிக்குமரேசா (எந்தனை)

## 359. மனதே அஞ்சாதே

பல்லவி

மனதே அஞ்சாதே
கனகர் சலக்குன்றைக் கர்த்தனைப் பணிய (மனதே)

சரணங்கள்

1 ஆடிய மயிலோனை - யன்பர்
தேடிய வொயிலோனை - நாளும்
அன்புடன் பணிய (மனதே)

2 கதிர்புனை வேலனை - அண்டர்
துதிபெறு காலோனை - நாளுங்
கருத்துடன் பணிய (மனதே)

3 குன்றையின் மலையோனை - பொருள்
நன்றுள கலையோனை – நாளும்
குணத்துடன் பணிய (மனதே)

## 360. எனை ஆளாய்

பல்லவி

எனை ஆளாய்
புனை முடிக்குன்றைப் புண்ணியனே யென்சாமி (எனை)

சரணங்கள்

1 திடம்புரி வயிலா – நடம்புரி மயிலா (எனை)
2 கதியுள் வேலா – விதிபனை காலா (எனை)
3 குன்றையின் நாதா – நன்றருள் பாதா (எனை)

## 361. கருத்தில் நினைத்தபடி தருவாய்

பல்லவி

கருத்தில் நினைத்தபடி தருவாய் யன்னமுன்
திருத்த மயிலேறி வருவாய்

அநுபல்லவி

வாசக்கடம்பணி கிருபேசக் குருபரனே
நேசத்தோடு பணியுந் தாசர்க் கருளானே (கரு)

சரணம்

கானக் குறமகளுக் கானவர் புதலோலா
ஞானத்தவர் பணியுங் கியாண சற்குண சீலா
அண்டின பேரையாட் கொண்டிடு மலர்பாதா
தெண்டிரை முஞ்சி கண்டியின் மலை நாதா (கரு)

## 362. செகதீசனே

பல்லவி

செகதீசனே
அகலவானில் உயர் குன்றைக் கதிபனே அருள்வாய் (செக)

சரணங்கள்

1 பரமபதத் தோனே சிரம மதைத் தானே
தீர்க்க வேணுமைய்யனே கடைக்கண்
பார்க்கவேணு மெய்யனே (செக)

2 பன்னிரு கையோனே
மின்னிய துய்யோனே
விரதியை தருவாயுத் தியை யருள்வாய் (செக)

3 மகிதலஞ்சூழும் – சிகி மலைவாழும்
சேவலா யெனக் கருள்வாய் தேவர்கள்
காவலனே வருவாய் (செக)

## 363. பராபரச் சோதியே

பல்லவி

பராபரச் சோதியே
யராவணி பவனரருளிய நீதியே (பரா)

சரணங்கள்

1 சரவண பவனே – யரகர சிவனே (பரா)
2 வாசமேனீபா – மாசறு தீபா (பரா)
3 யகண்ட விலாசா – செகண்டியின் வாசா (பரா)

## 364. சண்முக சிவனே

பல்லவி

சண்முக சிவனே
விண்முக முயர் குன்றைக் கண்மணியே சாமி (சண்முக)

அநுபல்லவி

அண்டர்கள் பணிசெயுந் தண்டையணியுங் காலா
வண்டணி மலர்மாலை கொண்டிடும் வேலா (சண்முக)

சரணம்

இங்கிதமிகு குறமங்கை மணாளா
கொங்கல ராகிய பங்கய தாளா
நின்றசை சோலையின் குன்றையின் நாதா
யென்று மேந்தனைக்காக்கு நன்றருள்புரிந்த (சண்முக)

## 365. ஆண்டவனே நம்பினேன்

பல்லவி

ஆண்டவனே நம்பினேன்
வேண்டின வரஞ்செய்வாய்
தாண்டிய மயிலேறும் (ஆண்டவ)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை மணவாளா – நல்ல
புள்ளி மயிலா நீ பத்தோரை (ஆண்டவ)

2 பங்கய மாமலர்ப் பாதா – யருள்
தங்க குருபர நாதா (ஆண்டவ)

3 அகண்டிதமான செகத்தீசா – முடிச்
செகண்டி மலையின் முருகேசா (ஆண்டவ)

## 366. காப்பாட வேணுமையனே

பல்லவி

காப்பாட வேணுமையனே

அநுபல்லவி

தாப்பான குன்றை மலைச் சண்முக நாதா (காப்பா)

சரணங்கள்

1 கடம்பணி பன்னிரு – திடம் புரை புயவா
புடம்புரை பொன் மயநடம்புரி மயிலா (காப்பா)

2 விரப்பிரதாப சம்மாரர் – தீர்யுக்கிர செய்பார வடிவேலா
(காப்பா)

3 யெண்டிசையு நிறைகொண்டிடு சீர்திருத்த
தண்டலையுஞ் செகண்டியின் மலை வாழவே (காப்பா)

## 367. பததெரிசனம் தருவாய்

பல்லவி

பததெரிசனந் தருவாய்
விதமுள்ள பொதுமிறை மிகு சிகி நாதா (பத)

அநுபல்லவி

பாதக வினைதனைற் தீர்த்து – வரும்
நோதகந் தீர்க்குண பார்த்து (பத)

சரணம்

வாரயிம்மிசை தனைக்கொன்று
காரவியா குலத்தை வென்று
தண்டலை நாள்தோறுந் திருந்து – முடிச்செ
கண்டிமலை தனிலிருந்து (பத)

## 368. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ (சாமி)

அநுபல்லவி

பூமி புகழுங்குன்றைமலைப் புனிதனே கந்த (சாமி)

சரணங்கள்

1 பன்னிரு கர தல யுன்னித மயிலேறும் (சாமி)

2 சங்கரர் அருளிய மங்கள கரமித (சாமி)

மன்றன் மலர்ச்சோலைக் குன்றையின் மலைவாளும் (சாமி)

## 369. கனக மயில் வாகனு

பல்லவி

கனகமயில் வாகனு

மனது கந்து சிகிமலைவந்த கருபரனே (கனக)

சரணங்கள்

1 யண்டர் பணி நாதா

தொண்டர்பணி பாதா (கனக)

2 மங்கைபுணர் தோளா

செங்கையிலாளா (கனக)

3 குன்றைமலை அய்யனே

நன்றருள்வா ருய்யனே (கனக)

## 370. தயவு வைக்கவேணும்

பல்லவி

தயவு வைக்கவேணும் - வெகு

நயமிகு குன்றைமலை நாதனே யெந்தன்மேற் (தயவு)

அநுபல்லவி

நித்திய முன்னைத் துதிபத்தியுடனே பண்ணி

சித்த முருகு மன்பன் விர்த்தி பெறவருள் (தயவு)

சரணம்

ஆறுமுக மல்லது வேறு முகமிலையென்று

தேறு மன்பன் மகிழவே கூறுபடை வேலவா

முகிறவனுஞ் சோலையும் யகிலம்புகையுந் தோணுத

மகிமையுள் ளவர்கள் பணிசிகிமலையில் வருதேவே (தயவு)

## 371. கிருபா நிதியே

பல்லவி

கிருபா நிதியே
திருவாளுங் குன்றைச் சிவனே சிவனே (கிருபா)

அநுபல்லவி

ஒருத்தர் துணையுமிலே - கருத்தனே யெனை யாளாய்
திருத்தகு மயிலிலேறு திருத்த வடிவேலவா (கிருபா)

சரணம்

பாத பங்கய குருநாத சங்கர வர
போதயன் பணிசெயும் வேத வேத நாதனே
ஓங்கி வளரும் பொழிற் தாங்கிய குன்றை
வீங்கிய தன்வள்ளி பங்கிலிசையும் லோலா

## 372. சற்குரு சாமியே

பல்லவி

சற்குரு சாமியே - யெனை ஆளும் (சர்குரு)

அநுபல்லவி

அற்புத தமிழ் விற்பன்னே சாமி (சற்குரு)

சரணங்கள்

1 வாசமலர்த் தொடைர்பனே – குறத்திக்
காசை விழுத்திடு ரூபனே (சற்குரு)

2 மங்கள மிகுத்திடு நாதனே - மணப்
பங்கய நிகர்த்திடு பாதனே (சற்குரு)

3 மன்ருடிய யருளும் பாலனே – முடிக்
குன்ருக் குடிவரு வேலனே (சற்குரு)

## 373. உனது தெரிசனந் தருவாய்

பல்லவி

உனது தெரிசனந் தருவாய் - யன்பர்
மனது கந்தபடிக்கு வருவாய் (உனது)

அநுபல்லவி

தீவினைத் தீர்ந்திடச் செய்யாய் – யன்பர்க்
காவியை மோட்சத்திலுய்யாய் (உனது)

சரணம்

மாதர்கள் ஆசையைப் பாராய் - அந்த
நோதம் யாவையு நீ தீராய்
அடியவர்க் கருளிய காலா – குன்ருக்
குடி வரு குருபர சீலாவைகாசி (உனது)

## 374. பாத தரிசனந் தரவேணும்

பல்லவி

பாத தரிசனந் தரவேணும் – யெனக்
காதரவுடனென் முன்வரவேணும் (பாத)

அநுபல்லவி

அண்டர்கள் பணிசெயுங் காலனே - யன் பின்
தொண்டர்கள் பணி செயுந் நாதனே (பாத)

சரணம்

பங்கய மலர்ப்பத நாயனே – யன்பர்
தங்களுக் கருளிய சேயனே
குன்ருக் கடியெனுஞ் சேத்திரர் – நாளு
நன்றென ஞானியர் தோத்திரா (பாத)

## 375. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா
விண்முக முயர் குன்றை வேதனே (சண்முக)

சரணங்கள்

1 ஆதரவுடனே நீ தரவேணும் (சண்முக)
2 உன்னருள் தரவே – நீ யென் வினை தீர (சண்முக)
3 குன்றையின் மீதே நின்றிடுந் தேவே (சண்முக)

## 376. கதி தருவாயே

பல்லவி

கதி தருவாயே – நாளு
மதி தவழ் குன்றைப் பதி முருகேசா (கதி)

அநுபல்லவி

முன்புடன் வந்து யின்புடனே தான்
மென் புருகிடவே நின்பதம் பணிவோர்க்கு (கதி)

சரணம்

பொற்குன்ற மயிலானைப் புணர்ப்புயன்
அற்புதமான நற்பதம் பணிவோருக்கு
கலை பயில் வாயா மலைமகள் பாலா
மலைமகள் பாலா நிலை மொழிற் குன்றை வடிவேலா (கதி)

## 377. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே – நாளு
நீளுங் குன்ருக்குடி ந்தனே நாதனே (ஆளு)

சரணங்கள்

1 வான நாயகா – மெஞ்ஞான நாயகா
தேனலரணி மான வேலவா (ஆளு)

2 உன்னையு நீயே பின்னையு நீயே
யுன்னை யல்லது யென்னை ரெட்சித்து (ஆளு)

3 மகிதலம் புகழ் சிகிமலை வாழும்
சகல ரெட்சகா யகமகிழ்ந்தெனை (ஆளு)

## 378. அரகரா முருகையா

பல்லவி

அரகர முருகையா – சீராக்
கரதலன் மருகையா (அரகர)

அநுபல்லவி

புள்ளியன் மயிலாளா – தினைப்புன
வள்ளியின் ஒயிலாளா (அரகர)

சரணம்

தானவர் குல காலா - கற்பக
வானவர் பணி சீலா
மலரயன் உபதேசா - குன்றை
மலைதனில் வருமீசா (அரகர)

## 379. நடஞ்செயு மயிலோளா

பல்லவி

நடஞ்செயு மயிலோளா - முன்ன
மடஞ் செயுஞ் சூரனைவதைத் திடுமடு வேலா (நடஞ்)

அநுபல்லவி

சீதாம புலியணி நாதாந்த முடிவே
பாதரம்புயனே தாதாந்த நீபா (நடஞ்)

சரணம்

யென்னரிதாகிய விண்ணவர் கொடிய
பண்ணவர் கொடி பண்ணவர் பணியும்
யெற்று மாயிரத்தேட மொற்றுயரோ குளிர்சேர்
தெற்றுபொன் முடிக்குன்றை பொற்றுமலை யரசே (நடஞ்)

## 380. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே - நாளுஞ்
சிறப்பான குன்றை மலைச்சேயனிரு பதத்தை (மறக்காதே)

சரணங்கள்

1 அடுத்த வாதங்களைத் தொடுத்திடு வினை
யெடுத்தெறிந்து போட்டுத் தடுத்து ரெட்சிக்கும் சாமி
(யிருபதத்தே)

2 கங்கையணி சடைமங்கை பங்காளன்
தங்களருள் புத்திர சிங்கார வடிவேலன் சேயனிருபதத்தை
(மறக்காதே)

3 நயத்த மலர்ப்பொழில் யேத்த சிகிண்டி மலை
செயத்த வடிவேலவா வியம்புறு தமிழாளன் மேலான
(பதத்தை மறக்காதே)

## 381. ஐயனே என்னை ஆளாய்

பல்லவி

அய்யனே யெனை ஆளாய் - பன்னிரு
கைய்யனே குன்றைக் கருத்தனே முரு (அய்யனே)

சரணங்கள்

1 பங்கய பாதனே – குறத்திக் கிங்கித நாதனே (அய்யனே)

2 பாதாம்புய சீலனே - நல்ல வேதாந்த கோலனே
(அய்யனே)

3 குன்ருக் குடி வரசனே - யெனை
நன்ருட கொள்வை யீசனே (அய்யனே)

## 382. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய்
நயமிகு குன்றை மலை நாதனே நீ தானே (தயவு)

அநுபல்லவி

ப்ன்னிரு காதலனே . யெனக்கு
நன்னய வருணலனே (தயவு)

சரணம்

ஆதி பரா பரனே – நல்ல
சோதி மெஞ்ஞான தரனே
அகண்ட பூரண தேவே முடிச்
செகண்டிமலைக் கோவே (தயவு)

## 383. குரு நாதா

பல்லவி

குரு நாதா – யென் முன்
வரு நாதா

சரணங்கள்

1 அமரேசா - நல்ல
குமரேசா

2 மயிலாளா – வெகு
ஒயிலாளா

3 சிகியே சா - நாளும்
மகிமேசா

## 384. கண்டு கொள்வாயே

பல்லவி

கண்டு கொள்வாயே மனமே
வண்டுன் பொழிற் குன்றை
அண்டர் நாயகன்றனை (கண்டு)

அநுபல்லவி

அடுத்த வாதங்களை ஆதரித் தாளும்
தொடுக்கு மிதழ் நீ பத்தோனை யெந்நாளும் (கண்டு)

சரணம்

தீவினை தீர ரெட்சிக்குங் குகேசனை
ஆவிதனைக் காக்கும் ஐயனை யீசனை
யாளுங் குன்ருக்குடி ஐயனை மெய்யனுன்
சூளும் பொழிற் குன்றை துலங்கியே துய்ய (கண்டு)

## 385. வந்தருள்வாய்

பல்லவி

வந்தருள் வாயே - அனுபூதி
தந்தருள் வாயே (வந்தருள்)

அநுபல்லவி

பங்கயர் வேதா – யவர்
தங்குரு நாதா (வந்தரு)

சரணம்

சித்துள் பரனே - நல்ல
யத்துவித சிரனே
குன்றையின் வாசா – யெனக்
கென்றருள் ஈசா (வந்தரு)

## 386 சிவ முருகேசா

பல்லவி

சிவ முருகேசா
யவ்வினை தீர் வடியன் முன்வருவாய் (சிவ)

அநுபல்லவி

அடியனைக் காப்பாய் – குன்ருய்
குடி மலை வாசா (சிவ)

சரணம்

மாசறு வினையைத்
தாசனமுன் தீப்பாய்
மயிலேறும் பரியாய்
யொயிலுள குமரா (சிவ)

## 387. சங்கர சண்முகனே

பல்லவி

சங்கர சண்முகனே – யுந்தன்
துங்க மயிலிலேறித் துலங்கிட வருவாய் (சங்கர)

அநுபல்லவி

வேலணி கரதலனே - நலனே
மேலசூரனை வெல்லும் வலனே (சங்கர)

சரணம்

அமரர்கள் பணிபாதனே - குக
குமர யம்பிகை சுதனே
சிகிமலை வருபவனே - தேவர்
மகிய சண்முக சிவனே (சங்கர)

## 388. மனமகிழ்ந்தருள் புரிவாய்

பல்லவி

மனமகிழ்ந்தருள் புரிவாய்
கனமிகுங் குன்றை மலைக் கர்த்தனே வித்தனே (மன)

சரணங்கள்

1 கானமதில் காரிகை குற மயில்
தானணைந் திடுபுயு சண்முக சாமியுமை (மன)

2 தொண்டர்கள் மிடி தீர்த்து வங்கிய மயிலேறி
அண்டர்களுடனே வந்தாண் டருள்வாய் உந்தன்

3 மன்றன் மலர்ப் பொழின் மண்டியே வளருங்
குன்றையின் மலேவரு குக குரு பரனேயுன் (மன)

## 389. ஆரு துணே ஐயனே

பல்லவி

ஆரு துணே அய்யனே (ஆரு)

அநுபல்லவி

மேருதனே நிகர்குன்றை வேலனே கோலனே (ஆரு)

சரணம்

உந்தனேப் பணிகின்ற யெந்தனேக் காக்க
துன்பத்தை நீக்கியே யின்பத்தை வருள
குன்றையின் மலேமே ணின்றவ யெனக்கு (ஆரு)

## 390. குக நாதனே

பல்லவி

குகநாதனே - ஆறு
முக நாதனே

சரணங்கள்

1 கதிர் வேலனே – அன்பர்
துதி காலனே

2 ஓயிலாளனே - நடன
மயி லாளனே

3 குன்றை மேரனே – சூரை
வென்ற வீரனே

## 391. தயவு வைத்தருள் செய்குவாய்

பல்லவி

தயவு வைத்தருள் செய்குவாய் - நாளும்
நயமிகுங் குன்றைமலே நாதனே சாமி (தயவு)

அநுபல்லவி

அடுத்த வன்பர்கள் தமைத்
தொடுத்த தீவினை நீக்கி (தயவு)

சரணம்

உந்தனை யனுதினம்
வந்தனை செய்வோர் மேற்
மன்றன் மலர்ப் பொழில்
குன்றையின் மலையய்யா (தயவு)

## 392. என்னை யாளுமைய்யா

பல்லவி

என்னை யாளுமைய்யா
மின்னை நேருமுடி விளக்குங் குன்றை நாதா (என்னை)

சரணங்கள்

1 மாதவர் புரித்தாளனே
காதர மணவாளனே (என்னை)

2 வேதனுர்க் குபதேசனே – நீ பத்
தாதவுண் மலர் வாசனே (என்னை)

3 மயிலேறும் பெருமானே - குன்றைக்
குகாயிலாக வருதேனே (என்னை)

## 393. குக குருபரனே

பல்லவி

குக குருபரனே – யாறு
முகவர் வானே (குக)

சரணங்கள்

1 சரவண பவனே - நல்ல
யரவணி சிவனே (குக)

2 வண்முக வேதா - பணியுள்
சண்முக நாதா (குக)

3 யெந்தனை ஆளாய் - குன்றைக்கு
வந்தருள் தாளா (குக)

## 394. ஆண்டவனே ஆளாய்

பல்லவி

ஆண்டவனே ஆளாய் – நீபம்
பூண்டவனே குன்றை
ஆண்டவனே சாமி (ஆண்டவனே)

சரணங்கள்

1 குக குருபர வேளே - யாறு
முக சிறை மயிலாளா (ஆண்டவனே)
அமிர்த செந்தமிழ் வாயா
தமியனை யினி ஆளாய் (ஆண்டவனே)

3 சிகிமலை வரு தேவே - தேவர்
மகிபா கிருபா நிதியே (ஆண்டவனே)

## 395. தரவேணுமையனே

பல்லவி

தரவேணுமையனே - மயின் மேல்
வரவேணுமையனே (தரவேணு)

அநுபல்லவி

அற்புதக்கடல் வெள்ளமே - அடியர்மேல்
அற்புடன் மகிழ் உள்ளமே (தரவேணு)

சரணம்

கருதலர்பணி தாளனே - குறத்தி
மருவிய மயிலாளனே
மயிலேறும் பெருமாளே - நல்ல
ஒயிலாகிய வேளே
குருபர குமரேசனே - முடித்
திரு நிறை குன்றை வாசனே (தரவேணு)

## 396. கருணை நாதனே

பல்லவி

கருணை நாதனே
ஒரு சிகா மலையோனே பெம்மானே (கருணை)

சரணங்கள்

1 கந்தனே ஞானசம்பந்தனே (கருணை)
2 கான நாயகனே தேனலர் நீபனே (கருணை)
3 குன்றை யாளனே மன்றன் மார்பனே (கருணை)

## 397. சம்பு தயாபரனே

பல்லவி

சம்பு தயாபரனே - தண்டம்வே
லும் புனையுங் கரனே (சம்பு)

சரணங்கள்

1 அண்டர் பணி பாதனே - குறமயில்
கண்டுமயல் கொளிதனே (சம்பு)

2 சிகிமலை வாழ்குகனே - யருண
மகிப் சண்முகனே (சம்பு)

## 398. முருகேசா

பல்லவி

முருகேசா - மயிற்
முருகேசா (முரு)

அநுபல்லவி

குகநாதா - சண்
முக நாதா (முரு)

சரணம்

வலு வேலா - சூரனைக்
கொலு வேலா
கலைவாயா - சிகி
மலை வாயா (முரு)

## 399. அரகர முருகேசா

பல்லவி

அரகர முருகேசா (அரகர)

அநுபல்லவி

வரமருள் புரிவாய் வருசிகி மலையா (அரகர)

சரணங்கள்

1 தொண்டர்கள் வினைதனைத் தண்டனை புரிகின்ற (அரகர)
2 அடிபணி அடியர்கள் மிடிதனைத் தீர்த்தருள் (அரகர)
3 குன்றையின் மலைதனின் இறைவனே சாமி (அரகர)

## 400. காப்பாற்ற வேணுமையனே

பல்லவி

காப்பாற்ற வேணுமைய்யனே (காப்பாற்ற)

அநுபல்லவி

முப்பான குன்றைமலை மூர்த்தியே யடியனைக் (காப்பாற்ற)

சரணம்

பன்னிரு கரதலா - யென்னிரு வினை தீர்த்து
நான்கு குழலியெனுங் கானகமயில் தோளா
குன்றையின் மாமலை நின்றருள் வேலா (காப்பாற்ற)

## 401. சித்த மகிழ்ந்தருளுவாய்

பல்லவி

சித்த மகிழ்ந்தருளுவாய் - உந்தன் (சித்த)

அநுபல்லவி

பத்தன் மிடியைத் தீர்த்து (சித்த)

சரணம்

பங்கய வேதா - தங்குரு நாதா
வள்ளிதன் ஒயிலா - புள்ளியின் மயிலா
வென்றியின் வேலா குன்றையின் மேலா (சித்த)

## 402. ஆண்டருள்வாய் ஐயனே

பல்லவி

ஆண்டருள்வாய் ஐயனே (ஆண்டருள்)

அநுபல்லவி

வேண்டிய பேர்க்கருள்
பூண்டிடுங் குன்றை நாதா (ஆண்டருள்)

சரணம்

அமரர் பயங்காரா
சமர சண்முக வேலா
சகல ரட்சகா
சுக்குரு நாதா
பொற்புறு சிகிமேரா
அற்புத சரவண (ஆண்டருள்)

## 403. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் - பன்னிரு
கையனே குன்றை மலைத்துய்யனே யென்சாமி (ஐயனே)

சரணங்கள்

1 அடிதொழும் அன்பர்க்கு மிடிதனைத் தீர்த்து
ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி (ஐயனே)

2 பத்தர்கள் வினையைத் துலைத்தருள் புரிந்து
பார்த்து ரட்சித்துக் காத்தருள் புரியும் (ஐயனே)

3 மருமலர் சோலை பெருவளஞ் சூழும்
மண்டிய முடியின் செகண்டி மலைவாழும் (ஐயனே)

## 404. முருகையா

பல்லவி

முருகையா - மயிற்
குருகையா (முரு)

அநுபல்லவி

பெருமைசேர் குன்றைமலைக் குருமைய்யனே (முரு)

சரணங்கள்

1 அண்டரண்டமும் புகழ்கொண்ட வசுரன்றனை
மண்டமர் புரிந்து ரெண்டது படவேலும் (முரு)

2 யெங்கும் பிர்காசஞ் செயுங்குரு பரநாதா
பொங்கு மனுக்கிரகந் தங்குங் குகேசனே (முரு)

3 நின்றசைந் தாடிய மன்றன் மலர்ச் சோலை
குன்றை மலைக்குகா நின்றய வருள்வாய் (முரு)

## 405. தாயே தயவுசெய்குவாய்

பல்லவி

தாயே தயவு செய்குவாய் - குன்றைமலைச்
சேயே யென்னை நீ ஆளாய் (தாயே)

சரணங்கள்

1 அரிய வடியவர் நாப
பரிவுடன் காக்குந் (தாயே)

2 பத்தர்கள்தனை நித்தமுங் காக்குந் (தாயே)

3 மன்றன் மலர்ச்சோலைக் குன்றையின் நாதா (தாயே)

## 406. மனம் வரவில்லையா

பல்லவி

மனம் வரவில்லையா – யடியன் மேலு
மனம் வரவில்லையா (மனம்)

அநுபல்லவி

தினமடியவர் பணி செகண்டி மலைக்குமரா (மனம்)

சரணங்கள்

1 சமர வடிவேலவா அமரர் பணிசரணு
பமர மலரின் மார்பா குமர சண்முக நாதா (மனம்)

2 இந்திர பிர்மாதி பாலம் இனிதாய்ப்பணி
சந்திர சடாதரர் தந்திடு புதல்வா (மனம்)

3 வாவியள் சூழ்தரு தூவியணிதைத் தரு
பூவினை பொழிற் குன்றை மேவிய குகநாதா (மனம்)

## 407. காத்து ரட்சிக்கவேணும்

பல்லவி

காத்து ரட்சிக்க வேணும் - கடைக்கண்
பார்த்து ரட்சிக்க வேணும் (காத்து)

அநுபல்லவி

வானடர் பணியுஞ் சேனபதி யென்சாமி
தேனர் குழற்குறத்தி மேனடியது துரையே (காத்து)

சரணம்

வேத னன்புடன் பணி பாத பங்கய
நாதயின் தடனென் மேலா தரவுடன் வந்து
தாருவை நிகர்பொழில் சேரு மணிமுடி
மேருவை நிகர்குன்றை சீருள மலைவேளே (காத்து)

## 408. வருத்தந்தனைத் தவிர்ப்பாய்

பல்லவி

வருத்தந் தனைதவிர்ப்பாய் - யெனக்
கொருத்தர் துணையுமிலை திருத்த மயில் வந்து (வருத்தந்)

அநுபல்லவி

சித்தர் முனிவராக மெத்த நிறைந்துவர
சுத்தமான பச்சை நித்த மயிலிலே வந்து (வருத்தந்)

சரணம்

அதிக கிரணமுள்ள கதிர்வடி வேலணி
முதிர்மலர்க் கரதல துதிபெற யென்முன் வந்து (வருத்தந்)
அடியவர் பணிபுரி கடிமலர்ப் பொழினிரை
முடிமணி யொளிர்குன்ருக் குடியிலிருந்து வந்து
(வருத்தந்)

## 409. துன்பத்தைத் தவிராயோ

பல்லவி

துன்பத்தைத் தவிராயோ
இன்பத்தைக் கொடுத்து (துன்ப),

அநுபல்லவி

மின்பத்தும் பொன்முடி விளங்குஞ் சிகாமலையாய்
உந்தன் அடிமையிடம் வந்தவினையைத் தீர்த்து
சந்த வாழ்வு தந்து முந்த மயிலில் வந்து (துன்ப)

சரணங்கள்

பத்தன் இவனே என்று சித்தமதினினைத்து
மெத்தத் தயவு தந்து சுத்த மயிலில் வந்து (துன்ப)
அலைகலை யுடுத்திய நிலைபுவி புகழ்தரு
கலைமதி தவழ்குன்றை மலையில் இருந்து வந்து (துன்ப)

## 410. நாதா சரவணபவா

பல்லவி

நாதா சரவணபவா - பூமலர்ப்
பாதா யரகர சிவா (நாதா)

அநுபல்லவி

கொங்கை யிலகு குறமங்கை மருவிய
பங்கில் வளரு மிங்கித வடிவுள (நாதா)

சரணம்

மதுரித மிகுகன சதுர்விதத் தமிழ் புகல்
விதியடியவர் பணி துதிபெறு முயர்குரு
மன்றன் மலர்ப்பொழின் நின்றசைத் தருமுடிக்
குன்றை மலையில்வரு நன்றருள் புரிகுரு (நாதா)

## 411. சரவணபவ குருவே

பல்லவி

சரவணபவ குருவே - நல்ல
அரகர சிவவுருவே (சரவண)

அநுபல்லவி

அடியவருடைய மிடியது தவிர
வடிவுறு மயில்மேல் துடியுடன் வருவாய் (சரவண)

சரணம்

விண்ணவர் முனிவோர் பண்ணவர் முதலோர்
தண்ணறு மலர்தூயெண்ணமுடன் பணி
சகல சனர்கள்பணி சிகரமிகுசிகி
னகமதில் வளரு மகபதி மருகா (சரவண)

## 412. பார்க்கவேணுமையனே

பல்லவி

பார்க்க வேணுமையனே - கடைக்கண்
பார்க்க வேணுமையனே (பார்க்க)

அநுபல்லவி

தீர்க்கமான குன்றைப் பார்த்திபனே (பார்க்க)

சரணங்கள்

1 அண்டரும் வழிபடு தொண்டரும் பணிசெயும்
ஐயனே பன்னிரு கையனே கடைக்கண் (பார்க்க)

2 சமரவடிவேலவா குமரகுரு பரா
சண்முக நாதா மணமுக கடைக்கண் (பார்க்க)

3 யெங்கு நிறைந்திடு பொங்கும் பிர்பை யளமிகு
யிலங்கிய குன்றைமலை துலங்கியவர் கடைக்கண்
(பார்க்க)

## 413. மனதிரங்க வேணும்

பல்லவி

மனதிரங்க வேணும் (மனது)

அநுபல்லவி

உனது பத்தன்மீது உண்மையாகப் பூணும் (மனது)

சரணங்கள்

1 ஆலமுண்டவர் அருளிய பாலா
தாலமுண்டவர் தன்மருகா சீலா (மனது)

2 பத்தர் பணியும் பங்கய பாதா
நித்திய பராபர லெட்சணிகர் நாதா (மனது)

3 நின்று மலர்ப்பொழில் நீடியே சூழும்
குன்றை மலைவரு குருபராவாழும் (மனது)

## 414. கதிக்கொரு கடலே

பல்லவி

கதிக்கொரு கடலே - அன்பர்கள்
துதிக்கொரு கடலே (கதிக்)

அநுபல்லவி

விதிக்கொரு குருவே - குன்றைப்
பதிக்கொரு உருவே (கதிக்)

சரணம்

தாதவிழ் நீபா - சூரன்மேல்
மோதடர் கோபா
மண்டமர் வேலா - நவரத்தினத்
தண்டையின் காலா
எங்கும் பிரகாசா – குன்றையிற்
தங்கு மேயவாசா (கதிக்)

## 415. எனக்காதரவு செய்வாய்

பல்லவி

எனக்காதரவு செய்வாய் – சாமி (எனக்)

அநுபல்லவி

உனக்கா ரடிமையர் மனத்தாசையாகிய (எனக்)

சரணங்கள்

1 நாளுக்கு நாளுனை நம்பியிருந்தும்
நபர்களுக்கு யிறைத்த பலனைப் போலாகாமல்
பரனே பன்னிரு கரனே அருளிய
வரனே யோராறு சிரனே யென்சாமி (எனக்)

2 உந்தனை அனுதினம் உண்மை யதாகவே
வந்தனை செய்கின்ற மார்க்கமு மறியேன்
மாயனே சம்பிரதாயனே அன்பர்
நேயனே தமிழ் வாயனே யென்சாமி (எனக்)

3 மன்றல் மலர்பொழின் மதுத்துளி யாளுக
யென்றும் பெருகிய யெழிற்குன்றை யாளும்
ஈசனே யெங்கும் பிர்காசனே குறமயில்
நேசனே யன்பர் விர்த்தி வாசனே விசுவாசனே (எனக்)

## 416. ஐயனே பன்னிருகையனே

பல்லவி

ஐயனே பன்னிரு - கையனே
துய்யனே குன்றைமலே மெய்யனே யெனே ஆளாய்
(ஐயனே)

அநுபல்லவி

பரனே பரனே பரனே – யோராறு
சிரனே சிரனே சிரனே (ஐயனே)

சரணம்

குகனே குகனே குகனே – உமையவர்
மகனே மகனே மகனே
நதியாய் நதியாய் நதியாய் – குன்றைப்
பதியாய் பதியாய் பதியாய் (ஐயனே)

## 417. சிவ சரவணபவனே

பல்லவி

சிவ சரவணபவனே – வந்த
பவவினைகளைத் தீர்க்கும் பரனே யரனே (சிவ)

அநுபல்லவி

நாதாந்த வடிவே – வேதாந்த முடிவே
போதாந்த நாதர்பணி – புனிதா யினிதா (சிவ)

சரணம்

தீவினையால் வரு மாவியை நயம்படத்
தாவி மயிலில் வந்து தருவாய் உருவாய்
வாசனை மலர்க்குப தேச குருபரனே
யீசனே குன்றைமலைக் கிறைவா நிறைவா (சிவ)

## 418. குமர குருபரா

பல்லவி

குமர குருபரா – அந்த
அமரர் பயங்கரா (குமர)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி வாகா – வன
நேசக் குறத்திதன் பாகா
மாசற்ற வன்பர் தியாகா - பன்னிரு
மற்புயா வெகு – வற்புதா சாமி (குமர)

2 சூரசம்மார வடிவேலா - நய
ஆர மிகுந்த தண்டைக் காலா – நல்ல
சார மிகுந்த நயசீலா - அருள்
தற்பரனே யுயர் அற்புதனே சாமி (குமர)

3 பங்கய மாமலர் வேதா - பணி
மங்கள கரசுப பாதா - மயில்
தங்க மலைவரு நாதா - யருள்
சற்குணனே வளர் அற்புதனே சாமி (குமர)

## 419. தஞ்சம் வேறில்லை

பல்லவி

தஞ்சம் வேறில்லை ஐயனே - சாமி
மஞ்சடர்ப் பொழில் குன்றை வாசனே யீசனே (தஞ்சம்)

அநுபல்லவி

வால வடிவேலா கோலமயில் நாதா
சால மிகுக்குறத்த மேலதி மயலாளா (தஞ்சம்)

சரணம்

சீதள மாமலர் போதடர் நீபா
மோதமர் புரியும் நாதா யுக்கிற் வேலா
மண்டிய தருவளர் தண்டலை மிகநிறை
கொண்ட முடியுயர் செகண்டிமலை முருகா (தஞ்சம்)

## 420. சித்த மகிழ்ந்தருள்வாய்

பல்லவி

சித்த மகிழ்ந்தருள்வாய் (சித்த)

அநுபல்லவி

வித்தகனே குன்றைக் கர்த்தனே யென்சாமி (சித்த)

சரணங்கள்

1 மூவரும் நந்த தேவரும் பணி
மூர்த்திக் கராவரா கீர்த்தி பராபரா
தாவு மயிலேறு காவலனே நல்ல
சற்குணனே நயபொற் புயனே சாமி (சித்த)

2 சூரன் மார்பு பகீரிட வெதிர்
தோட்ட வடிவேலா துயரண் சூரா
சாரமது நீபா மதுநீபா ஆரமணிபுயா
சன்னமயிலேறும் பன்னிரு கரதலா (சித்த)

3 யெங்கணு மனமது தங்கிய மலர்ப்பொழில்
இசையுடனே வெகுபட் சமுடனே சூழும்
பொங்கிய சிகியெனுந் தங்க மலையில் வரு
புண்ணியனே சுப்பிர மண்ணியனே சாமி (சித்த)

## 421. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும்
நயமிகுந்த குன்றை நாதா நாதா (தயவு)

அநுபல்லவி

ஆரணம் புகழு நாரணனே யுந்தன்
அடிதொழு மன்பருக் காதனே காத்திடத் (தயவு)

சரணம்

பங்கய மாமலர் மங்கள சரணு
பரவிய யன்பர்க்கு வரமருள் புரிதா
மாமலர்ச் சோலை யடர்மலிவாகிய
வாசனைசேர் குன்றை யீசனே யென்சாமி (தயவு)

## 422. முருகா வுனைநம்பினேன்

பல்லவி

முருகா வுனை நம்பினேன் – சோலை
யொருகாலு நீங்காத திருவாளுங் குன்றைமலை (முருகா)

அநுபல்லவி

பாங்கு பெறுங்கரு மாங்குயிலாள் வர்ன்ன
கோங்கு முலைக்குறக் கொடியாள் வடிவாள்சேர் (முருகா)

சரணம்

சீதள சந்திர சடாதரனுர் அருள்
நாதா சரவண நாமா காமா
நாளு மலர்ப் பொழில் சூழுஞ் சிகாமலை
வாழுங் குணபரா வர்ச்சித வற்புத (முருகா)

## 423. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும் - குன்றுக்
குடிவளர் குருபரா மிடிதனைத் தீர்த்து (அடி)

அநுபல்லவி

தற்பரா பரனே அற்புத வரனே
பொற்புயர் மயிலா விற்பன முருகா (அடி)

சரணம்

அரவணி சிவனே சரவண பவனே
கரதல வயிலா பரவரு சரணு
அண்டின பேர்க்குக் கொண்டிடு தயையா
மண்டிய பொழிலின் செகண்டியின் மேரா (அடி)

## 424. முருகையா

பல்லவி

முருகையா - மயிற்
குருகையா (முரு)

அநுபல்லவி

திருவுலாவிய குன்றைத் தேவ தேவா (முரு)

சரணங்கள்

1 வினைதனைத் தீர்த்து யெனையினி ஆளாய் (முரு)
2 குடிதனைக் காத்து அடியனை ஆளாய் (முரு)
3 தேனணி குழற்குற மானனையாள்புணர் (முரு)
4 மோன முனிவர்பணி ஞான குயக்குகா (முரு)

## 425. தரவேணுமையனே

பல்லவி

தரவேணு மையனே - வரந்
தரவேணுமையனே (தரவே)

அநுபல்லவி

நிதஞ்சலியாமல் வந்து பதஞ்சலி பணிபாதா
நித்தரருளிய புத்திரனே சாமி (தரவே)

சரணம்

திடதிடவென நய நடனமிடு மயிலா
செய்யவடி வேலா உய்ய மனது வைத்து
பாதச் சிலம்புகள் நாதக் கிண்கிணி யாட
பத்தர் பணிசரணு சுத்த சிகாமலேயாய் (தரவே)

## 426 கந்தா குமரா

பல்லவி

கந்தா குமரா - நல்ல
கார்த்தி கேயா
நந்தாத புனல்வாவி நாளும் வளருங் குன்றை (கந்தா)

அநுபல்லவி

மனமது மகிழ்ந்திட யுனது சரணமதைத்
தினம்பணி புரியும் யெனது துயரைத்தீர (கந்தா)

சரணம்

வாச மலியும் பிரகாச மிகுந்த நீபா
பாச மெனுங் கடலே நாசஞ்செய்து அருளுவாய்
நெஞ்சிலுள்ள வினையைப் பஞ்சு பஞ்சாகச் செய்து
மிஞ்சியவருள் செய்வாய் கஞ்சமலர்ச் சரணு (கந்தா)

## 427. தாயே தயாபரனே

பல்லவி

தாயே தயாபரனே - அரனே
சேயே குன்றைமலைத் தேவர் கடேவர்

அநுபல்லவி

சங்கரர் அருளிய சண்முக நாதா
பங்கய மலரிகா பகநிரு பாதா (தாயே)

சரணம்

உனது தயவு வைத்து யுனது வருளைத் தந்து
யெனது மனதின் படியினியருள் தருவாய்
நினைத்தபடி அருளை நினைத்தபடி அருள்வாய்
சினைப் பல் தருவளர் செகண்டியின் மலேயா (தாயே)

## 428. திருப்பதந் தருவாயே

பல்லவி

திருப்பதந் தருவாயே (திருப்)

அநுபல்லவி

மருப்பொலிக் குன்றைமலே வாசா யீசா (திருப்)

சரணங்கள்

1 வானவர் முனிவரர் ஞானவர் பணிசெயும் (திருப்)
2 மின்பொலி தண்டைபுனே அன்பர்கள் பணி செயும் (திருப்)
3 பஞ்சினுமிர் துவிதழ்க் கஞ்ச மரைநிகர் (திருப்)

## 429. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா - உயர்
விண்முக முடிக்குன்றைவேந்தர் சேந்தா (சண்)

அநுபல்லவி

சகல மனிதர்களும் சகல முனிவர்களும்
சகல வமரர்களுந் தானே
பணிசெய் பெருமானே யெனக்கருள்வாய் (சண்)

சரணம்

தீவினே தீரிட நீவிரை வாயருள்
காவின மிளுள்புணர் கருணு நிதியே நற்பொருளுவலனே
தாதவிழ் சோலேயள் மிதுர் சிகிமலே
நாத சரவண நன்னய மாகிய பொன் மயிலா சாமி (சண்)

## 430. மனதிரங்காயோ

பல்லவி

மனதிரங்காயோ
தினமு மன்பர் பணி சித்தா முத்தா (மன)

அநுபல்லவி

அண்டரு நல்ல தொண்டரும் பணிஐயனே
வண்டருந் தாதுங் கொண்ட நீபமென் வாசனே (மன)

சரணம்

மீறு வாருடன் நீறு செய்திடும் வேலனே
கூறு செந்தமிழ் தேறு மனு கூலனே
தஞ்ச மென்பருக் கஞ்ச லென்றருள் தயவாளனே
மஞ்சடர்ந் திடுமிஞ்சு குன்றையின் மகிபனே; (மன)

## 431. திருவருள் புரிவாயே

பல்லவி

திருவருள் புரிவாயே
திருவளர் குன்றைமலைச் சண்முக நாதா (திரு)

அநுபல்லவி

ஆடிடு மயிலேறு மையனே மெய்யனே
தேட வரிதான சேயனே நாயனே (திரு)

சரணம்

பங்கய மாமலர்ப் பாதனே நாதனே
மங்கள கரவுமை மைந்தனே கந்தனே (திரு)
மஞ்சடர் பொழிற் குன்றை வாசனே யீசனே
வஞ்சனை தீர்ப்பாய் மாயனே தூயனே (திரு)

## 432. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ - சாமி
முத்தர் புகழ் குன்றை முதல்வா முதல்வா (சித்த)

அநுபல்லவி

கான வள்ளியைத் தானனையும் புயா
தேனவர் பணிமார்பா தேவா தேவா (சித்த)

சரணம்

பன்னிரு கரதலா யென்னிரு வினைதீர்
யுன்னிதய மகிழ்வர் யுண்மையா யுண்மையா
யீசருட கயிலாச வரை நிகர்
மாசகலுங் குன்றை வரதா வரதா (சித்த)

## 433. தாயே தயவு செய்குவாய்

பல்லவி

தாயே தயவு செய்குவாய்
சேயே குன்றைமலைத் தெய்வமே யெந்தன் (தாயே)

அநுபல்லவி

யெத்தனை காலமோ பத்தனை நினையாமல்
இருக்க லாகுமோ திருப்பதாம் புயத் (தாயே)

சரணம்

மிடிதனைத் தீர்த்தெந்தன் குடிதனைக் காத்திடும்
வேலவனே யெனுகூலனே யென்சாமி
நின்ருட் கன்பக் குன்ருடி நெடுநாளும்
ரெட்சிக்கும் வடிவேலவா சாமி (தாயே)

## 434. சரணம் சரணம் ஐயனே

பல்லவி

சரணம் சரணம் ஐயனே
சரணம் புகழுங் குன்றை யாண்டவனே யுந்தன் (சர)

அநுபல்லவி

ஆதியின் மாலயனு மனுதினம் பணிதேவே
நீதியுடன் அன்பரை ரெட்சிக்கும் கோவே (சர)

சரணம்

மங்கள கரவுமை மகிழ்ந்திடு பாலா
தங்க மயிலிலேறுஞ் சண்முக வேலா
தண்டலை மாமுடி தங்கியே சூளும்
அண்டர்கள் துதிக்கும் அய்யனே நாளும் (சர)

## 435. மருந்து கண்டேனே

பல்லவி

மருந்து கண்டேனே - நாளுந்
திருந்து குன்றை மலையிற் பொருந்தி வாழுமொரு
(மருந்து)

அநுபல்லவி

பொல்லாத தீவினையும் நில்லாத பவங்களும்
வல்லாண்மையான நோயும் யெல்லாமுந் தீர்க்கவொரு
(மருந்து)

சரணம்

பாசக் கடலில் வீழ்ந்து மோசம் படும்வரை
நேசத் துடனே யந்த தேசத்தில் வளவொரு
வண்டணி மலர்நிறை தண்டலை யுரையுஞ்
செகண்டி மலையின்மிசை அண்டர்க் கரியவொரு (மருந்து)

## 436. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே
மஞ்சாருங் குன்றைமலை மன்னவன் இருக்கையில் (அஞ்சா)

சரணங்கள்

1 சூர சம்மார வீர சிங்கார
பார சங்கிடும் காரா னுங்கமயில்
யாருஞ் சமந்தனிருக்கையில் (அஞ்சா)

2 பங்கய மலர்போலுங் காதலனே
மங்கள உமையவள் சங்கிரிதலமென்
சாமி யன்பரைக் காக்கும்
நேமி யனிருக்கையில் (அஞ்சா)

3 அய்யன் பனிரெண்டு கையன் குருபர
மெய்யன் நலஞ்சிறந்த னுய்யன் அருள்புரியுந்
துரைக்கும ரேசன் குன்றை வரைக் குமரனிருக்க
(அஞ்சா)

## 437 கடைக்கண் பாராயோ

பல்லவி

கடைக்கண் பாராயோ – நீபத்
தொடைக்குமரா வருள்கிடைக்கும் பன்னிரண்டு (கடைக்)

அநுபல்லவி

மங்கள கரவுமை பங்கன் அருளிய
சங்கர ரீன்றிடு துங்க முருகேசா (கடைக்)

சரணம்

சீதள மாமலர் பேதணி கார்குழல்
மாதா சிகுறக் காதலி மயவாளா
சோதி மயமா மீதில் உயர் பொழில்
மோதிய குன்றையி லாதி பராபர (கடைக்)

## 438. அரகர சண்முக நாதா

பல்லவி

அரகர சண்முக நாதா - திரி
புரகரர் அருளிய புத்திரர் யென்சாமி (அர)

அநுபல்லவி

பாதச் சிலம்பு தண்டை நாதத் தொனி முழங்க
சீதக் கடம் பணியுந் தேவனே யென்சாமி (அர)

சரணம்

அந்தர வானவர் வந்தடி பணிசெயும்
கந்த மலரின் பாதா கங்கயா யென்சாமி
பங்கய வாவிநிறை துங்க மயிலின் மலே
தங்க வடிவேலா சண்முக யென்சாமி (அர)

## 439. எப்படித் தீருமோ

பல்லவி

எப்படித் தீருமோ – குன்றக்குடி
யொப்பரிய மலேக்கொருத்தனே யென்றுயர் (எப்படி)

சரணங்கள்

1 பூசிமேற் பெருவிர லூன்றித் தவஞ்செய்தோ
பாச பந்தங்களேப் பரிகரித் தனலோ
பரனே அயனே திரனே யென்னுயர் (எப்படி)

2 மாச மாசந் தோறும் வந்தலே குதலாலோ
பேசருமுந்தனே பிர்தெட்சணஞ் செய்தோ
பித்தா முத்தா சித்தா யென்னுயர் (எப்படி)

3 வாசக் கடம்பெறு மாலிகை யணிமார்பா
மாசற் றிடுங்குன்றை மாமலே வருநாதா
மயிலா வொயிலா லயிலா யென்றுயர் (எப்படி)

## 440. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே - யெனக்கு
வேறுமுக மில்லையே (ஆறு)

அநுபல்லவி

பங்கய மென்பாதா துங்க மயினாதா
பாதகந் தனைதீர்த்து யாதரவு செய்குவாய் (ஆறு)

சரணம்

வண்டனி மலர்நீபா அண்டர்கள் பணிபூபா
வள்ளியின் மணவாளா புள்ளியின் மயிலாளா
அகண்டிடுஞ் சோலை சூளுஞ் செகண்டி மலையினீதா
அய்யனே பன்னிரண்டு கையனே யென்சாமி (ஆறு)

## 441. தருணந் தயவு செய்குவாய்

பல்லவி

தருணந் தயவு செய்குவாய் - நாளுந்
திருமருவிய குன்றைத் தேவ தேவனே (தருண)

அநுபல்லவி

அஞ்சாதே யென்று யாதாரஞ் செய்ய
நெஞ்சார வந்தினி னின்னருள் செய்ய (தருண)

சரணம்

ஆசைதனைத் தீர்த்து வாண்டருள் புரிய
நேசமுடன் வந்து நின்னருள் புரிய
வண்டின் முலவிய மலர்பொழில் சூளுஞ்
செகண்டி மலையில் வளர்கர்த்தனே யிதுவே (தருண)

## 442. நெஞ்சகமே மறவாதே

பல்லவி

நெஞ்சகமே மறவாதே
மஞ்சடர் குன்றைமலை வாசனை யீசனை (நெஞ்)

அநுபல்லவி

மாய வனுருட மருகனை — வள்ளி
நேய நிறைந்திடு முருகனை (நெஞ்)

சரணம்

தொண்டர் பணிபுரியுந் தூயனை – சூரன்
தண்டமதனை வேலுஞ் சேயனை
மண்டிய மலர்ச்சோலை வாளும் – முடியின்செ
கண்டி மலைநாதனை நாளும் (நெஞ்)

## 443. தாயே தயாபரனே

பல்லவி

தாயே தயாபரனே - இங்கினி
வாயே யடியன்முன் வந்தரு ணீயே (தாயே)

அநுபல்லவி

பங்கய மாமலர்த் துங்க மலரயனுர்
பரவிய சரணு வரமருள் புரிவாய் (தாயே)

சரணம்

அண்டர்கண் முனிவோர் தொண்டர்கள் நிதமும்
அடிதொழு நாதா வடிவுள வேலா (தாயே)
மாமலர்ச் சோலை யடர்மகல ஈவளர்
வருசிகி மலைமேலப் பெருமை கொளரசே (தாயே)

## 444. வந்தருள் புரிவாய்

பல்லவி

வந்தருள் புரிவாய் – நாளுந்
தந்தருள் புரிவாய் (வந்தருள்)

அநுபல்லவி

வாசஞ் செய்நீபா - சூரனை
நாசஞ் செய் கோபா (வந்தருள்)

சரணம்

அண்டர் கணு தா - பணி
தொண்டர்சூள் பாதா
குன்றையின் வாசா - யெனக்கு
ஈன்றருள் ஈசா (வந்தருள்)

## 445. தெரிசனந் தரவேணும்

பல்லவி

தெரிசனந் தரவேணும் – நாளும்
பரிசனஞ் சூளுங் குன்றைப் பரனே அரனே (தெரி)

அநுபல்லவி

அஞ்சாதே யென்றென்னை ஆதரவு செய்யும்
பஞ்சாரு மெல்லடிப் பாவையர் லோலா (தெரி)

சரணம்

வானவர் தானவர் வணங்கிய சரணு
ஞானவர் மோனவர் நாடுமா பரணு
வன்ன மணிமுடி மருவிய சிகியா
மென்னு மலையில் இருக்குங் குகேசா (தெரி)

## 446. என்னை ஆளுவாய் பொன்னையனே

பல்லவி

என்னை ஆளுவாய் பொன்னையனே
மின்னை நிகருங் குன்றை மலையாய் (யென்னை)

அநுபல்லவி

வாசக் கடப்ப மலையாய்
நேசக் குறத்திக் காசை யாளனே (யென்னை)

சரணம்

பங்கய மலர்ப் பாதனே
துங்க மயிலின் தங்க வேலனே
குன்றை மலையிற் குருபராயரர்
நன்றருள் புரிநாதனே நீதனே (யென்னை)

## 447. சருவ தயாபரனே

பல்லவி

சருவ தயாபரனே - தூய
பருவ மதிச்சடை பார்பதி பாலகா (சருவ)

அநுபல்லவி

தங்க வடிவேலணி கையா - நடன
துங்க மயிலேறிய அய்யா (சருவ)

சரணம்

வாதுபுரி சூரரை வெல்வேலா அடியேன்
மீது தயவு செய்வாய் சீலா
நின்ருடி பொழில்சூளும் - முடிக்
குன்ருக் குடிமலே வாழும் (சருவ)

## 448. சரணம் உனே நம்பினேன்

பல்லவி

சரணம் உனே நம்பினேன் (சரணம்)

அநுபல்லவி

திருவுலாவுங் குன்றை மாமலேதனில் வாழுஞ் சிவனே
சரவண பவனே யுன்னுட (சரணம்)

சரணங்கள்

1 சூதுக் குள்மிகு பொல்லா வாதுக்கு வருசூரரை
மோதிப் பொருதி வென்ற சோதிப் பிரகாச வேலா
(சரணம்)

2 நெஞ்சாரத் துதிப்பவர்க் கஞ்சாதே என்னுடன்
மிஞ்சாத வினே தனேப் பஞ்சாக செயும் வேலா (சரணம்)

3 ஆசைக் கடலுளாழ்ந்து மோசப்படும் வரை
நேசத்துடன் காக்கும் வாசச் சிகாமலேயாய் (சரணம்)

## 449. உபதேசம் சொல்வாய் ஐயனே

பல்லவி

உபதேசஞ் சொல்வாய் ஐயனே – யெந்தன்
சபலமான மனந்தனக்கு மகிழ்வுண் டாக (உப)

சரணங்கள்

1 பாவக் கடலுளாழ்ந்து கொண்டு - அதிற்
பலிக்கு வினேகளேக் கண்டி
தாவமதனேத் தீர்த்து வாவலுடனே நல்ல (உப)

2 பஞ்ச மாபாதகம் வாராமல் – துயர்ப்
பான துயரங்கள் சேராமல்
நெஞ்ச மகிழ்ந்திருக்கக் கஞ்சமலர் சரணு (உப)

3 பங்கய வாவியுள் சூளும் - நல்ல
பயனைத்தரு மலர்ப்பொழில் வாளும்
துங்க மயின்மலைத் தங்க வடிவேலா (உப)

## 450. திருவருள் புரிவாயே

பல்லவி

திருவருள் புரிவாயே - உயர்
கருமுகில் தவழ்குன்றைக் கர்த்தனே நிர்த்தனே (திரு)

அநுபல்லவி

பாத பங்கயங் கண்டு நாத யிங்கித வென்று
பரவிய அன்பரைத் திடமுடன் காக்க (திரு)

சரணம்

உந்தனை வந்து கண்டு சிந்தனை செயுமன்பர்க்
குடன்மயில் ஏறியே திடமுடன் வருந்து
நோதகஞ் செயும் பொல்லாப் பாதக வினைகளை
நொந்தோடிட வந்து வந்தா தரிந்து (திரு)

## 451. மதுர ரஞ்சித வாயா

பல்லவி

மதுர ரஞ்சித வாயா - அரிய
சதுமறை தேடருஞ் சண்முக நாதா (மதுர)

அநுபல்லவி

வந்த வடியவர்க்கு நொந்திடாதபடி
அந்த மயிலிலேறி முந்த வந்தருள் செய்யும் (மதுர)

சரணம்

முதிய பரமர்வளர் பதியன் தன்னிலுயர்
துதிபெறு மேன்மைகொள் பதிகள் பாடிய
வாகை புனைபுயவா ஓகை புனையுல்லாச
பாகை நிகர்மொழியா தோகை மலையா யருள் (மதுர)

## 452. குககுரு பரனே

பல்லவி

குககுரு பரனே - யாறு
முகசிகி மலைவரு முருகா மயிற்குருகா (குக)

அநுபல்லவி

அண்ட மெல்லாம் புகழ்க் கொண்ட சிகேசா (குக)

சரணம்

தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரா
சத்துரு சம்மாரா மித்துரு பரிபாலனா (குக)

## 453. எந்தனை ஆளாய்

பல்லவி

எந்தனை ஆளாய்
உந்தனை நாளுஞ் சிந்தனை செயும் (எந்)

அநுபல்லவி

கங்கை சூடியரன் றங்கள் பாலனே (எந்)

சரணம்

நடம்புரி மயிலா நல்ல கடம்பணி மார்பா
குன்றை வாசனே நாளு நன்னுறருள் செய்வாய் (எந்)

## 454. ஆண்டவனே எனை ஆளாய்

பல்லவி

ஆண்டவனே யெனை ஆளாய் (ஆண்ட)

அநுபல்லவி

தூண்டிய மயிலாளா வேண்டியவர்க் கருள்செய்து
(ஆண்ட)

சரணங்கள்

1 கங்கையணி சடையார் மங்கை பங்காளனார்
கருத்துக் கிசை புதல்வர் பருத்த வடிவேலவா (ஆண்ட)
2 சினக்கய வானவிழி தினைப்புன மாதுபுணர்
சேயனே அடியர் சகாயனே தூயனே (ஆண்ட)
3 மதுமலர் சோலையள் புதுமல ரோடையன்
மருவிய குன்றைமலைக் குருபர குமரா (ஆண்ட)

## 455. பார்வதி புத்திரனே

பல்லவி

பார்வதி புத்திரனே - நீபத்
தார்புனை புயனே பார்துதி நயனே (பார்)

அநுபல்லவி

பங்கய மாமலர்ப் பாதா - நல்ல
துங்க மயிலிலேறு நாதா (பார்)

சரணம்

ஞானந் தவருத மூர்த்தியே - குற
மானனே யாளக்கிசை நேர்த்தியே
ஓகை புனையு முல்லாசனே - முடித்
தோகை மலையினில் வாசனே (பார்)

## 456. பார்க்கவேணும் ஐயனே

பல்லவி

பார்க்க வேணு மையனே – கடைக்கண்
பார்க்க வேணு மையனே (பார்)

அநுபல்லவி

தீர்க்க மான குன்றைச் சேயனே கடைக்கண் (பார்)

சரணங்கள்

1 அஞ்சாதே நீயென்றுன் நெஞ்சார வந்துன் கண் (பார்)
2 வாசக்குழல் வள்ளி நேசத்த கடைக்கண் (பார்)
3 நின்ருழ்க் கன்பனைக் குன்ருக் குடியாய் கண் (பார்)

## 457. கடைக்கண் பாரையா

பல்லவி

கடைக்கண் பாரையா
படைக்கதிர் வேலா பார்த்திபா யுந்தன் (கடை)

சரணங்கள்

1 அய்யனே பன்னிரு கையனே – பொடி
அணிமெய்யனே உன்னுட (கடை)

2 அரனே குமரகுரு பரனே யோராறு
சிரனே பனிரண்டு கரனே யுந்தனுட (கடை)

3 நேசக் குறத்தி பாகா மாசற்ற சிகிமலை
வாசக் குருபரனே யீசற் குகந்த பாலா (கடை)

## 458. முருகையா

பல்லவி

முருகையா – யென்மேல்
உருகையா (முரு)

அநுபல்லவி

இருகையால் வேலெடுத்து
யொருகையால் வெல்லு நாதா (முரு)

சரணங்கள்

1 வாசமலர்க் குழலாள் தேசமிகு குறத்தி
மருவிய தோளா யுருமை மணாளா (முரு)

2 வஞ்சக சூரன் னெஞ்சது பகர்
மாட்டிய வயிலா நாட்டிய மயிலா (முரு)

3 தேவர்கள் தேவா மூவர்கள் மூவா
சிகிமலை நாதா மகிமைகொள் பாதா (முரு)

## 459. குகனே குகனே வருவாய்

பல்லவி

குகனே குகனே வருவாய் – யாறு
முகனே முகனே தருவாய் (குகனே)

அநுபல்லவி

மதியு மறுகுங் கங்கா நதியும் மரவும் புனை
வதியு மும்பரன் பருந்து துதிசெயு மிசரருள் (குகனே)

சரணம்

வானவர் முனிவரா மோன வரடியவர்
தானவர் பணிசெயும் ஞான சம்பந்தனே
வாதடர் மந்தி தவவப் போதலரு கின்ற
மீதடர் பொழிலுறை சீதள சிகிமலை (குகனே)

## 460. அரகரா சண்முக நாதா

பல்லவி

அரகரா சண்முக நாதா – மூன்று
புரகர ரைரருள் புத்திர் சிகாமணியே (அர)

அநுபல்லவி

படியில் அடியவர்கள் கொடிய வினையள்தனை
பார்த்துக் கண்ணிறைற் தீர்த்து ரெட்சித் தருளும் (அர)

சரணம்

புள்ளிமயிற் சாயலாள் வள்ளிபுணர் புயவா
புரந்தரன் வானவர் துரந்தர வடிவேலா
மந்தியர் குதிபோடு முந்திய பொழிலுறை
மயின்மலை தனில்வாசா யொயிலுள முருகேசா (அர)

## 461. எங்கணும் வியாபி நீயே

பல்லவி

எங்கணும் வியாபி நீயே - அடியவர்
தங்களுக் கான தாயே (எங்க)

சரணங்கள்

1 மங்கள கரகுமரா – நடனமிடுந்
துங்க மயிலின் வீரா - வீர
சிங்கமெனுஞ் சூரனைச்
சங்கரிக்கும் வேலா (எங்க)

2 மாது குறத்தி பாகா – நீபப்
போது தரித்த வாகா - போரிற்
சூது படைத்த சூரன்
மீது தொடுத்த வேலா (எங்க)

3 யூற்று மதுப்பொழில் சூளும் - யன்பர்
போற்று சிகிமலையின் வாளும் - நாளுஞ்
சாற்றுஞ் செந்தமிழ் வாயா
மாற்றுயர் பொன் வடிவேலா (எங்க)

## 462. ஆண்டவனைப் பணிவாய்

பல்லவி

ஆண்டவனைப் பணிவாய் - மனமே
வேண்டிய தெல்லாமுந் தான்பெறலாந் தினமே (ஆண்ட)

அநுபல்லவி

யெங்கும் பிரகாசந் தங்குங் குகேசன்
மங்கு மடியவர்க்குப் பொங்கும்படி யருளும் (ஆண்ட)

சரணம்

வாசக் கடப்பந்தார் வீசப் புயத்திலணி
தாசருக்கருள் செயுமீசற் குகந்த பாலன்
சூருரங் கிளிய வீர வேல் தொடுக்கும்
கோர வுக்கிர சாரற் சிகாமலையின் (ஆண்ட)

## 463. மனதுக் கிசைந்தபடி தருவாய்

பல்லவி

மனதுக் கிசைந்தபடி தருவாய் - புள்ளி
மயிலி னேறி யென்முன் வருவாய் (மன)

அநுபல்லவி

கனகக்கிரியை நிகாசிகண்டி மலையின்வளர்
கர்த்தனே பரிசுத்தனே யெந்தன் (மன)

சரணங்கள்

1 யந்திரி யாமதை அம்பிகை சங்கரி
சுந்தரி காழி திரிசூலி பகவதி
தந்தருள் பாலக சண்முக வேலவ
கந்த மலர்ப்புய காரணனே யெந்தன் (மன)

2 கெடியுள்ள சூருடல் கிழியவே கதிர்
வடிவுறு வேல்தொட்ட மலர்க் கையனே யன்பர்
மிடிபொடி யாகவே வெல்லும் கிருபேசனே
குடிசில் வளருங் குறத்த பங்கா யெந்தன் (மன)

3 அகண்ட பரிபூரண் அகமெங்கு நிறைந்த
சிகண்டி மலையில்வளர் தெய்வ சிகாமணி
மகஞ்செய்யும் புரந்தர் மாதவர் முனிவர்
சிகம் பரவிய பாதர் சின்மய ரூபா யெந்தன் (மன)

## 464. அற்புத பாதத்தை மறவாதே

பல்லவி

அற்புத பாதத்தை மறவாதே - நெஞ்சே
பொற்புயர் குன்றைமலைச் சற்குண குகநாதன் (அற்புத)

அநுபல்லவி

சரவண பவசிவ வரவணி பவனருள்
அரகர குருபர காதல் வடிவேலன் (அற்புத)

சரணம்

தெள்ளிய தினைப்புனப் புள்ளி மயிலாள்குற
வள்ளி மருவுமயு னள்ளிலை வேற்கையன்
மதுமலர்ச் சோலைகளது நிறை
விது தவழ் மாமுடி முதுசிகி மலைநாதன் (அற்புத)

## 465. சித்தமிரங்க வேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் - உந்தன்
சித்த மிரங்க வேணும் (சித்த)

அநுபல்லவி

குமர குருபரா - யெதிர்
சமர சண்முகா (சித்த)

சரணம்

வாசக் கடம்பா - வள்ளி
நேசக் கண்ணாளா
கௌரி சுபுத்திரா - வெல்லுஞ்
சவுரிய வேலா
அகண்ட பூரண முடிச்
செகண்டி நாரண (சித்த)

## 466. சிவனருள் பாலா

பல்லவி

சிவனருள் பாலா - சரவண
பவகுக நாதா (சிவ)

அநுபல்லவி

அருட்ர வேணும் குருபர குமரா
குருகெனு மயிலா மருமலர் நீபா (சிவ)

சரணம்

வாதடர் சூரன் மீதடல் புரியும்
போதடர் குழலார் மாதர்கள் லோலா
மகபதி முதலோர் அகமகிழ் வுடனே
மிகமிகப் பணியுஞ் சிகிமலை வாளவே (சிவ)

## 467. பாத தெரிசனந் தரவேணும்

பல்லவி

பாத தெரிசனந் தரவேணும் – மயின்மேல்
காதலுட னென்முன் வரவேணும் (பாத)

அநுபல்லவி

யொருத்தர் துணையு மில்லை மருக குலவு நீபா
வருத்த மில்லா தெந்தன் கருத்தின் படியருள் (பாத)

சரணம்

உனது வருட்கடலிற் தினமதில் மூழ்கியென்
மனதின் படியிருக்கத் தனது கிருபை செய்து
மந்தி குதித்திட வதிர்ந்து ரசமொழுகு
முந்திய பொழில் கள்வனை நதிடு சிகிமேரா (பாத)

## 468. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ
சுத்தமான குன்றைக் காத்தனே யுன்னுட (சித்த)

அநுபல்லவி

வாசமான நீபமாலை யணிதேளா
நேசமான குறநேரிழை மணவாளா (சித்த)

சரணம்

அண்டர் முதலினோர் அனுதினம் பணிபாதா
தொண்டர் முதலினோர் துதித்திடும் மலர்ப் பாதா
மன்றன் மலர்ப்பொழில் வாசனை சூளும்
குன்றை மலைக்கிசை குருபரா நாளும் (சித்த)

## 469. தேடிக்க மனதே

பல்லவி

தேடிக்க மனதே
ஆடிக் கொள்ளு மயிலாண்டவனை நாளும் (தேடி)

அநுபல்லவி

வேலனைக் குறவள்ளி லோலனைத் தெய்வானை
மாலனைச் சிலம்பணி காலனைச் சீலனை (தேடி)

சரணம்

தூயனை யன்பர் சகாயனைத் தமிழ்புகழ்
வாயனை யும்பர் கணேயனைச் சேயனை
யோகனைப் பொடியணி தேகனை யருளில்
மோகனைப் பன்னிரு வாகனை தியாகனை (தேடி)

## 470. ஆசைக்கிசைந்தபடி தருவாய்

பல்லவி

ஆசைக் கிசைந்தபடி தருவாய் - மயிற்பிர்
காச பரியின்மேல் வருவாய் (ஆசை)

அநுபல்லவி

செங்கடப்ப மெனுந் துங்க மலரணி தோளா
மங்கள கரவள்ளி செங்கரந் தொடுமண வாளா (ஆசை)

சரணம்

பங்கய மாமலர் மங்கை மகிழ்தரு மருகா
திங்களணி சடைச் சங்கர ரருளிய முருகா
மந்தி மரங்களி லிருந்து விளையாட தானே
சிந்திய கனிரச முந்திய மயின்மலை யோனே (ஆசை)

## 471. எனக்கருள் புரிவாயே

பல்லவி

எனக்கருள் புரிவாயே – குன்றை
தனக்கிசை வாகிய நீயே (எனக்)

சரணங்கள்

1 பாதச் சிலம்பு கலகலென் றாட
சீதக் கடம்ப மலர்வண்டு பாட
வேதத் தாது திடுசெய்ய விளையா டியமயில்
நாதக் குருபரா நம்பினேன் நம்பினேன் (எனக்)

2 பங்கய மாமலர் வளர்தரு வேதா
சங்கையிலா தும்பர் தான்பணி போதா
தங்க வடிவயில் தரித்திடுங் கமலத்
துங்க மலர்க்கரா துதித்தென் றுதித்தேன் (எனக்)

3 வாதில் திர்ந்திட மந்தியள் குதிபோட
மீதில் விழுங்கனி விளைந்திடு ரசமோட
போதடர் மலர்ப்பொழில் பொருந்திய குன்றையி
னுதர மிகவள ரையனே மெய்யனே (எனக்)

## 472. அடியனைக் காக்க வேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும் (அடி)

அநுபல்லவி

குன்றுக் குடிவளரும் குமர குருபர நாதா

சரணங்கள்

1 உனக்கிசை வானதுதி
மனக்கினி வாகச் செய்யும் (அடி)
2 தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரா (அடி)
3 பங்கய வாவிநிறை துங்கமயில் மலையா (அடி)

## 473. மனமகிழ்ந் தருள்வாய்

பல்லவி

மனமகிழ்ந் தருள்வாய் (மன)

அநுபல்லவி

நல்ல கனக சதங்கையொலி
கலகலென முன்வந்து (மன)

சரணங்கள்

1 அண்டர்கள் முதலிரைடி பணிந்து துதிக்க
தொண்டர்கள் முனிவர்கள் தோத்திரங் கதிக்க (மன)
2 வாசனை நீப மலர்மாலிகை நிறக்க
பாசமிகுக் குறத்தி பங்கினிற் சிறக்க (மன)
3 கூவிய மயின்மலைக் குருபர நாதா
பாவி வினையைத் தீர்ப்பரிவு நீதா (மன)

## 474. அஞ்சவேண்டாம் மனமே

பல்லவி

அஞ்ச வேண்டா மனமே - யொன்றுக்கும்
அஞ்சவேண்டா மனமே (அஞ்ச)

அநுபல்லவி

மிஞ்ச வேண்டா மென்று வினைக்கொரு புத்தி சொல்
(அஞ்ச)

சரணங்கள்

1 மாயப் பிறவியில் வந்து பிறந்து
காயத்தி னேய்கள் கலந்து மெலிந்து
சேயற் குணமாதர்க் குட்டிரிந்து வலைந்து
போயற் பராகிய ஞாயத்தைத் தீர்ப்பார் (அஞ்ச)

2 தொல்லைப் பழவினை சூழ்ந்து கொண்டடிக்க
அல்லலுற் றுயிரினை யமனவன் பிடிக்க
வல்லவனுக் கஞ்சி வளருயிர் துடிக்க
கல்லில் வாழ்க்கையை வெல்வர் முருகையா (அஞ்ச)

3 வாதடர் மலர்ப் பொழின் மண்டிடச் சூளும்
மீதுயர் குன்றையில் விருப்புடன் வாளும்
நாத குருபர ரஞ்சிதா நாளும்
ஆதரவு செய்வா ரெதுய்ய மேது (அஞ்ச)

## 475. ஆளுமைய்யா

பல்லவி

ஆளுமைய்யா – குன்றை
வாளுமைய்யா
(ஆளு)

அநுபல்லவி

காருமைய்யா – வரந்
தாருமைய்யா
(ஆளு)

சரணம்

தேடுமைய்யா - கிருபை
நீடுமைய்யா
வாருமைய்யா – கடைக்கண்
பாருமைய்யா
(ஆளு)

## 476. மயிலேறி வரவேணும்

பல்லவி

மயிலேறி வரவேணும்
(மயி)

அநுபல்லவி

ஒயிலான குன்றைமலைக் கொருத்தனே நிருத்தனே (மயி)

சரணங்கள்

1 வானு டிருக்குந் தேவ சேனுபதி யென்சாமி
கானுருங் குறவள்ளி மானுன மருவுபுயா (மயி)

2 அண்ட மதிரச் சிறை கொண்டடித் திரந்திடச்
சண்ட வேகத் தெழுந்த
கொண்டை மயிலி லங்கிடும் பொன் (மயி)

3 வாதடர் விருட்சங்களே தகர்ந்திட மந்தி
நீதடர் பொழிற் குன்றைச் சீதள மலைநாதா (மயி)

## 477. வந்து வரந்தர வேணுமுயர்

பல்லவி

வந்து வரந்தர வேணுமுயர்
இந்து தவழ்க்குன்றை மலைக்கிறை
யவனே யென்முன் (வந்து)

சரணங்கள்

1 பொங்குங் கடல்சூழ் புவியெங்கு மதிர்க்கதிர்
மங்கும்படி நடஞ்செய் துங்க மயிலேறி (வந்து)

2 யள்ளிலை வேல்விழி தெள்ளிய தினைப்புன
நள்ளிருட் கூந்தலின் வள்ளி மின்னுளுடன் (வந்து)

3 யீசரருளிய பிரகாச மிகுந்த பாலா
வாசமிகு குன்றைக் கிராசனே யடியன்முன் (வந்து)

## 478. வால வடிவேலவனே

பல்லவி

வால வடிவேலவனே - இந்த
ஞாலம் புகழ்குன்றை மலைநாதனே நீதனே (வால)

அநுபல்லவி

சங்கரர் அருளிய மங்கள மிகுபாலா
தாவி வருமயிலா பாவியெந்தனைக் காப்பாய் (வால)

சரணம்

கூவிய குயிற்குரற் றேவியுமை தன்பாலா
கூரிய தாகிய பார சம்மார சூர
ஆடிய மந்தி நிரை நீடிய பொழில் சூளும்
அழகிய குன்றை பழகிய சேய வுக்கிற (வால)

## 479. ஆளுமையனே

பல்லவி

ஆளு மையனே - குன்றை
வாளு மெய்யனே (ஆளு)

சரணங்கள்

1 பங்கய பாதனே - குற
மங்கை தனுதனே (ஆளு)
2 அன்பர் கணேசனே - நாளு
மின்பு வுலாசனே (ஆளு
3 அற்புத சீலனே - தமிழ்
விற்பன சாலனே (ஆளு)

## 480. நீயே தயவு செய்

பல்லவி

நீயே தயவு செய்குவாயே - யெந்தன்
தாயே யுந்தனுட் சேயேனுக் கிரங்கியே (நீயே)

அநுபல்லவி

வால வடிவான வேலவனே யனு
கூலனே மயிலேறுங் கோலனே சீலனே (நீயே)

சரணம்

சங்கரர் அருளிய துங்க மயிலாளா
பங்கய மலர்ப்பாதா மங்கள சுபகரா
வாரிதி சூள்தரு பாரி முடிக்குன்றை
மேரிலு தித்திடுஞ் சூரியப் பிரகாசனே (நீயே)

## 481. முருகா யுந்தனே நம்பினேன்

பல்லவி

முருகா யுந்தனே நம்பினேன்
இருகாலு முக்காலு மொருகாமற் பணிசெய்து (முருகா)

சரணங்கள்

1 கனக சதங்கை யணிவன் மலரின் பாதா
யனவரதமுந் தேடி மனமுருகத் துதித்து (முருகா)

2 நோயின் மிகவழுந்தித் தாயின் வயிற்றுதித்து
மாயிற் வுடல்விட்டுப் போயினி தாகவே நான்
(முருகா)

3 ஆடிய மலர்ப் பொழில் சூடிய சிகிமலை
கூடிய வன்பர்மனந் தேடிய புகழ் நாதா (முருகா)

## 482. குருபர நாதா

பல்லவி

குருபர நாதா – இதழ்
மருமலர்ப் பாதா (குருபர)

அநுபல்லவி

அருமறை புகழு மையனே மெய்யனே (குருபர)

சரணங்கள்

1 பாதச் சிலம்பு கழொலிக்கவே – அடியர்
வேதத் துதியொலிக்கவே
பரிவுடன் நடஞ்செயு முரிய மயிலிலேறும் (குருபர)

2 அண்டர்கண் முனிவர்கள் துதிக்கவே - அன்பின்
ரெண்டர்கள் வளமையள் கதிக்கவே
அடியன் முன்னுக வந்து மிடிதனைத் தீர்த்தருள்வாய்
(குருபர)

3 மந்தி யணின்று குதிபோடும் - யதிரிலு
திரிந்து கனிரசங்களோடும்
வாளும் பொழிற்குன்றையி லாளுங் குககுமர (குருபர)

## 483. நீ வரவேணும்

பல்லவி

நீவர வேணும்
தேவர்கள் துதிக்குங் காவலனே யென்முன் (நீ)

அநுபல்லவி

பரிவுட னடியார் மிடிதனைத் தவிர்க்கும்
தரியலர் பரவும் வடிவுள வயிலா (நீ)

சரணம்

மூதண்டம் புகழும் மாமலர்ப் பாதா
தோண்ட பாணிதன் மாமரு கேசா
மண்டிய பொழில்சேர் குன்றையின் மலையா
அண்டிய பேர்களை நன்று செய்தாளும் (நீ)

## 484. மாது பங்காளா

பல்லவி

மாது பங்காளா - உலகிலெப்
போது நயஞ்சேர் குன்றை மீது வருகுகேசா (மாது)

சரணங்கள்

1 செய்ய தினைப் புனைத்திற பையயவே கிளியோட்டும்
துய்ய மலர்க்குழலி மையல் புரியுங்குற (மாது)
2 வானை யரசு புரிவோனை ரெட்சிக்க வந்த
தேனை யணிகுழற் றேய வானையென் வந்திடும் (மாது)
3 அண்டியபேரைக் கார்க்கும் தெண்டிரை சூழுலகில்
மண்டிய பொழில்சேர் செகண்டி மலைநாதா (மாது)

## 485. வேலாயுதக் கடவுளே

வேலாயுதக் கடவுளே
பாலார்மதி தவழ்பனைத்தகுன்ருக்குடி (வேலா)
யெதிர்வரு சூரரை யதிரடல்புரி
படருங் கன்முயர் கடலைச் சுவறிடும் (வேலா)
மஞ்சடர் மலர்ப்பொழில் மிஞ்சிய சிகிமேரா

## 486. அய்யனே யெனையாளா

பல்லவி

அய்யனே யெனையாளா - நல்ல
துய்யனே குன்றைமலை மெய்யனே மருண்முரு (அய்யனே)

அநுபல்லவி

பாதாம் புயங்கண்டு பணியு மன்பருக்கு
வேதாந்த முடிவருள வேலனே கோலனே (அய்யனே)

சரணம்

அண்டர்க்கருள் செயுமறு முககுகனே
தொண்டர்கள் பணியுஞ் சுககுரு பரனே
மண்டியபொழிற் குன்றைமலை வளர்நாதா
யண்டிய பேர்களை யாதரிக்குஞ் சிகேசா (அய்யனே)

## 487. சரவணபவ

பல்லவி

சரவண பவகுருவே - நாளும்
யரவணி பவனருள் அய்யனே மெய்யனே (சர)

அநுபல்லவி

பன்னிரு கரதலனே – யடியார்
முன்னிய தருணலனே (சர)

சரணம்

அற்புதத் தமிழ் வாயா – குறப்
பொற்கொடி புணர்நேயா
தென்சிகி மலைவாசா - நடனப்
பொன்சிறை மயிலேசா (சர)

## 488. எந்தனைக் காப்பாய்

பல்லவி

எந்தனைக் காப்பாய் – நாளு
முந்தனைப் பணியும் (எந்த)

அநுபல்லவி

பாச வினையறுத்து நாசப்படச் செய்து
பரகதி தருவாய் கரதல கமலா (எந்த)

சரணம்

பங்கய மலர்ப்பாதா சங்கரரருள் பாலா
பதுமதள நேத்திரா விதுநிகரும் வதனு
கூவிய கூனமந்தி தாவிய பொழில்சூழுங்
குன்றை மலைவாசா யின்றினி தாகவந்து (எந்த)

## 489. அனுக்கிரகந் தரவேணும்

பல்லவி

அனுக்கிரகந் தரவேணும் – முடி
மினுக்கு குன்றைமாமலை வேலா கோலா (அனுக்)

அநுபல்லவி

அந்தர வானவர் வந்தடி பரவுங்
கந்தமலர் சரணு யெந்தன்முன் வந்து (அனுக்)

சரணம்

அடிதொளும் அன்பர் மிடிதனைத் தீர்த்துக்
குடிதனைக் காக்கும் வடிவுறு வேலா
மந்தியள் குதிக்கும் யுந்திய பொழில்கள்
முந்திய குன்றையில் வந்த குகேசா

## 490. அருடர வேணுமைய்யா

பல்லவி

அருடர வேணுமையா – நடனக்
குருகு மயிலின் பரிகொண்ட தெண்டாயுதா (அரு)

சரணங்கள்

1 வந்தடுத்தோர் வினையைச் சிந்தச் சிதறச் செய்யும்
மாயனே யன்பர் சகாயனே யடியேற்கு (அரு)

2 அடுத்த வாதங்களுக்குத் தொடுத்த வினையைத் தீர்க்கும்
அய்யனே பொடியணி மெய்யனே அடியேற்கு (அரு)

3 குககுரு பரனே மகபதி பரவும்
குன்றையின் மலையா நன்றதையாள் (அரு)

## 491. என்னை யாளுமையனே

பல்லவி

என்னை யாளுமையனே – திவ்விய
பொன்னை யாளுங் குன்றைப்
புனிதா யென்சாமி (என்னை)

அநுபல்லவி

வடிவுறு குறத்தி மருவிய தோளா
கொடியிடைக் குஞ்சரி குலவு மணாளா (என்னை)

சரணம்

மகபதி முதலினோர் வாள்த்திய காலா
செகமுழு வதையும் ரெட்சித்திடுஞ் சீலா
யுன்றாட் கன்பருக் குதவிய நேசா
குன்றாக் குடிமலைக் குகமுருகேசா (என்னை)

## 492. சூர சங்காரனே

பல்லவி

சாரலுயருங் குன்றைச் சண்முக நாதா (சூர)

அநுபல்லவி

வானவர் தானவர் வந்தடி பணியும்
ஞானவர் மோனவர் நாள்தொறும் பரவும் (சூர)

சரணம்

தேவரை யிம்மிசை செய்து வரசுபுரி
மாவலு வாந்திறி புவனமெல்லா மாளும் (சூர)
சிகாகிரி வளருஞ் செகண்டி மலையில் வரு
குககுரு பரநாத (சூர)

## 493. குகனை மறவாதே

பல்லவி

குகனை மறவாதே – மனமே (குகனை)

அநுபல்லவி

குகனை யாறுமுகனை மறவாதே (குகனை)

சரணங்கள்

1 மங்கை மணவாளன் – பன்னிரு
செங்கை யிலகு தோளன் (குகனை)
2 கோதண்ட பாணி மருகன் – யிந்த
மூதண்டம் புகழ் முருகன் (குகனை)
3 சிகிமலைதனில் வாசன் – யருண்
மகிமைகொள் குமரேசன் (குகனை)

## 494. நலந்தரவேணும்

பல்லவி

நலந்தர வேணும் (நலம்)

அநுபல்லவி

தலந்தனிலுயா குன்றைச் சண்முக நாதா (நலம்)

சரணங்கள்

1 வாசக் கடப்பந் தோளா – வெகு
நேசக் குறத்தி யாளா (நலம்)

2 ஆறுமுகக் கந்தா – திவ்விய வெண்
ணீறு புனைவோர் மைந்தா (நலம்)

3 குன்றைக்கிரி வாய்த்த நாதா – யன்பரை
யென்றைக்குங் காக்கும் பாதா (நலம்)

## 495. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே - குன்றை
வாளுமையனே

அநுபல்லவி

அற்புத பாதா - நல்ல
விற்பன நாதா (ஆளு)

சரணம்

யாரண வுருவே - பரி
பூரண திருவே
குன்றை வாசனே - மலர்க்
கொன்றை யீசனே (ஆறு)

## 496. வேண்டும்

பல்லவி

வேண்டும் வரந்தர வேணும் (வேண்)

அநுபல்லவி

ஆண்டவனே குன்றைமலை யரசே யடியற்கு (வேண்)

சரணங்கள்

1 கடம்பணி மார்பா நடம்புரி மயிலா (வேண்)
2 காரணப் பொருளே யாரணத் தெளிவே (வேண்)
3 பன்னிரு கரனே யுன்னடியவர்க்கு (வேண்)

## 497. வந்த வினை

பல்லவி

வந்த வினையைத் தீராய் - நாளுங்
கந்த மலியுங் குன்றை கர்த்தனே முத்தனே (வந்த)

சரணங்கள்

கூறுந் துதிகள் சொல்லி கொண்டாடினேன் சாமி
.................................................. (வந்த)

பங்கய மாமலர்ப் பாதமுங் கிண்கிணியுஞ்
செங்கண் குளிரக் கண்டு சேவித் திறைஞ்சினேன் (வந்த)
நின்று பொழிலசையு நித்திய சுபகர
குன்றை மலேயில் வாழுங் குகனே குகனே (வந்த)

## 498. பத்தர் துதிக்கும்

பல்லவி

பத்தர் துதிக்குங் - குன்றைப் பரனே பரனே
பங்கய மாமலர்ப்பதனே பதனே (பத்தர்)

அநுபல்லவி

செங்கை வடிவேலணி திரனே திரனே (பத்தர்)

சரணம்

வாசக் கடம்பணி வாகா வாகா
நேசக் குறத்திபுணர் நேயா நேயா (பத்தர்)

சரணம்

திங்கடவழுங் குன்றைச் சேயா சேயா
மங்கள கரவுமை மைந்தா

## 499. வாராய் குருபரனே

பல்லவி

வாராய் குருபரனே - வந்தருள்
தாராய் குருபரனே (வாராய்)

அநுபல்லவி

பங்கய மலர்ப் பர்தனே - நல்ல
துங்க மயிலிஞதனே (வாராய்)

சரணம்

வானவர் பணிதாளனே – நீபத்
தேனல ரணிதோளனே
குன்றையின் மலேவாசனே – குறமங்கை
கன்றுணே யானநேசனே (வாராய்)

## 500. அஞ்சாத மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே
மஞ்சார் பொழிற் குன்றை மாயவ னிருக்க நீ (அஞ்சா)

அநுபல்லவி

சென்னி யறுமுக பன்னிரு கரதல
வுன்னித வடிவேல் நன்னிதி யொன்றுளது (அஞ்சா)

சரணம்

யீசற் கினியவும் தேசக் குருபரநல்
வாசக் கடம்பணி கிர்பேசக் குகனிருக்க (அஞ்சா)
மருவுலவிய மலர்த்தருவன் நிறைதரு
திருமுடி மயின்மலே முருகைய னிருக்கையில் (அஞ்சா)

## 501. சண்முகக் கடவுளே

பல்லவி

சண்முகக் கடவுளே – யுயர்
விண்முகம் பார்க்குங் குன்றை மேரினி லுறைதரு
(சண்முக)

சரணங்கள்

1 நஞ்சார் மிடற்றினர் நல்கிய பாலா
அஞ்சாதே யென்றடி யர்க்கருள் வேலா
அய்யனே பொடியணி மெய்யனே யெனையாளும்
(சண்முக)

2 வாது புரியுஞ் சூரரை வதைத்திடு மயிலா
சூது முலேவள்ளிக்கு துலங்கிய வொயிலா
துதிக்கும் மலர் சரணு மதிக்குங் குகாகுமரா (சண்முக)

3 யென்றைக்கு மன்பரை யினிதினி வாளுங்
குன்றைக்கிரி யென்னுங் குளிர்மலே வாளும்
கோலாவன் பருக்கனு கூலா யெனையாளும் (சண்முக)

## 502. சொர்ன மயில்

பல்லவி

சொர்னமயில் வாகனு – நாளும்
வர்னமயில் மலேவந்தாய் கந்தா (சொர்ன)

அனுபல்லவி

மாது குறத்தியை மருவியதோளா
போதுக் கடம்பெனும் புதுமல ராளா (சொர்ன)

சரணம்

அண்டர்கள் முனிவர்கள் மாந்திடு பாதா
தொண்டர்கள் யாவருந் துதித்திடு நாதா
குன்றக் குடியெனுங் குளிர்மலை வாசா
நன்று யெனக்கருள் நல்கிய யீசா (சொர்ன)

## 503. வந்தருள் புரிவாய்

பல்லவி

வந்தருள் புரிவாய்
கந்தனே சாமி (வந்த)

அநுபல்லவி

அண்டர்கள் துரையே — நல்ல
தொண்டர் யனே (வந்த)

சரணம்

ஆறுமுக நாதா — யதிக்க
கூறுபடை வேலா
அகண்ட பூரணா — முடிச்
செகண்டி மாமலையா (வந்த)

## 504. சகல சனரெட்டி

பல்லவி

சகல சனரெட்சகா
மகபதி பணிதரு சிகிமலை நாதா (சகல)

அநுபல்லவி

வானவர் பணிதாளா — குறத்தி
தானனை வாளா (சகல)

சரணம்

பங்கய மாமலர்ப் பாதா — நாளு
மிங்கித மிகுவேதா
குன்றையின் மலைவாசா — யெனக்கு
நன்றருள் புரியீசா (சகல)

## 505. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணு மையனே — வெகு
தீர்க்கமான குன்றைச் செயவடி வேலா (காக்க)

சரணங்கள்

1 வனச மாமலர்ப் பாதனே – நல்ல
கனக மயிலேறு நாதனே (காக்க)

2 வாசக் கடம்பணி சீலனே – சடை
யீசற் குகந்திடும் பாலனே (காக்க)

3 சிகிமலை வருகுரு பரனே – தேவர்
மகிபதே யெனக்கருள் வரனே (காக்க)

## 506. வால வடிவேலனே

பல்லவி

வாலவடிவேலனே – மூன்று
ஞாலம் புகழுங் குன்றை நாதனே நீதனே (வால)

சரணங்கள்

1 அஞ்ச வேண்டா மென்றெனக் காதரவு செய்குவாய்
தஞ்சம் வேறிலை யய்யா சரணஞ் சரணஞ் சாமி (வால)

2 யன்ப னிவனென் றெண்ணி யாண்டருள் வாயே
தென் சிறை மயிலேறுஞ் சேவகனே யென்சாமி (வால)

3 மந்தி விளையாடினல் வழிந்திடு தேனிறை
முந்திய பொழிற்குன்றை முருகா யென்சாமி (வால)

## 507. தாயே யெனக்கருள்வாய்

பல்லவி

தாயே யெனக்கருள்வாய் – குன்றை மலைச்
சேயே யுனைப்பணியு நாயேன யம்பெறத் (தாயே)

சரணங்கள்

1 பன்னிரு காதல மின்னிய வடிவேலா
யுன்னிருதாள் பரவு மென்னிதய மகிழத் (தாயே)

2 யந்தர வானவர் வந்தடி பணிசெயு
கந்த மலர்ச்சரணு யெந்தனை ரெட்சிக்கத் (தாயே)

3 தொண்டினைப் புரிந்தே யண்டின பேர்க்கருள்
தெண்டிரை சூளுஞ் செகண்டி மலையில் வருந் (தாயே)

## 508. அடியனைக் காக்க வேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும் – குன்றுக்
குடிவளர்க் குமர குரு பர நாதா (அடி)

சரணங்கள்

1 நெஞ்சம் நினைந்து தஞ்சம் வேறிலை யென்றுன்
கஞ்ச பதம்பணிவோர்க் கஞ்ச லெனக் காப்பாய் (அடி)
2 அண்டர் முதலினோர் தொண்டர் முதலினோர்
கண்டக மகிழ்தரு வண்டணி மலர்மார்பா (அடி)
3 நின்றுடிய பொழிற்குன்றுக் குடிவளர்
நன்றான வருட்குகா நின்றுழ் வணங்கு முந்தன்
(அடி)

## 509. சம்பு சதாசிவனே

பல்லவி

சம்பு சதாசிவனே – நாளு
நம்பு மடியர் பணிநாதா நீதா (சம்பு)

சரணங்கள்

1 வால வடிவேலா கோல மயிலேறிய
மாலயனப் பணிசெயும் மாமலர்ச் சரண (சம்பு)
2 துங்க மிகுந்தயிதழ்ப் பங்கய மாமலர்த்
திங்கள் நிறைவதன சீதரன் மருகா (சம்பு)
3 ஓகைபுனை யுல்லாசா வாகை தரித்த புயா
தோகைக்கிரி முருகா துலங்குங் கிர்பைக் கடலே
(சம்பு)

## 510. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – திரி
புரவரனருள் பாலா (அர)

அநுபல்லவி

செங்கடம் பணிமார்பா துங்க மயில்வாகன
மங்கள குறமயில் பங்கில் வளரும் லோலே (அர)

சரணம்

பற்ம் மலர்ச்சரணு வற்பு குணசீலா
பொற்பணி யணிதோளா சொற்றமிழ் புலவேசா (அர)
முடிமிலைத்திடு கன்படி புகழ்பொழினிறை
வடிவுறு வுயர்குன்ருக் குடிமலை வருகுகா (அர)

## 511. காத்தருள்வாயே

பல்லவி

காத்தருள் வாயே – கடைக்கண்
பார்த்தருள் வாயே (காத்த)

அநுபல்லவி

மான்விழி யுமையாள் தானருள் புதல்வா
தேன்விழி நீபா வான்மதி வதனு (காத்த)

சரணம்

துதியடியவர்க்கு கதிதனை யருளும்
விதிபணி பாதா யதிக நன்னயனே
மகிதலம் புகழும் சிகிமலை நாதா
முகினிற மாயன் மகிழ்முருகேசா (காத்த)

## 512. இரக்க மிலையா

பல்லவி

இரக்க மிலையா – வடியன் மீது
யிரக்க மலையா (இரக்க)

அநுபல்லவி

புரக்குங் குன்ருக் குடிப்புனிதா யென்மீது (இரக்க)

சரணங்கள்

1 பாதிப் பிறைதரித்த பரமரருள் பாலா
சோதிப் பிரகாசாங் கடுலங்கிய வேலா (இரக்க)

2 வாசக் கடம்பணி மகிமைப் பிர்தாபா
நேசக் குறத்திகிரி நிலைத்திடு ரூபா (இரக்க)

3 வாகை தரித்திடு மற்புய சயிலா
தோகை மலைக்கிரிக் கிசைதூதன் வொயிலா (இரக்க)

## 513. ஆண்டவனைப் பணிமனமே

பல்லவி

ஆண்டவனைப் பணிமனமே – நாளும் (ஆண்ட)

அநுபல்லவி

வேண்டி யன்பர்கள் பணிபூண்டிடுங்குன்றைவளர்
(ஆண்ட)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனை யுன்னிய மயிலோனை
சென்னி யறுமுகனை முன்னிலையாய் கண்டு (ஆண்ட)
2 பங்கய பாதனை செங்கதிர் வேலனை
மங்களகரத் துங்க வுலாசனை (ஆண்ட)
3 வாதடர் பொழிற் குன்றை மீதனுதினமக
லாத குகேசனைப் பொன்னுதன் மருகையனை (ஆண்ட)

## 514. குமர குருபரா

பல்லவி

குமர குருபரா – யந்த
யமரர் பயங்கரா (குமர)

அநுபல்லவி

வானவர் பணிதாளா – குறத்தி
தானணையுந் தோளா (குமர)

சரணம்

அன்பருக் கிசைநாதா – யன்பர்
முன்ப மாபொன் பாதா
வாசக் கடம்பு வாகா – யெங்கும் பிர்
காசச் செகண்டி யோகா (குமர)

## 515. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா – யுயர்
விண்முக முயர்குன்றை வேலனே கோலனே (சண்முக)

சரணங்கள்

அடியனைக் காத்து மிடிதனை தீர்த்துக்
குடிதனைக் காக்கும் வடிவறு வயிலா (சண்முக)

சரணம்

யுந்தனை நாளும் வந்தனை புரியும்
ஏந்தனை யாளும் சுந்தர ரூபா
நின்றிடு தருவில் வென்றிகொள் குரங்கு
துன்றிய பொழில்சேர் குன்றையின் மலையா (சண்முக)

## 516. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் (தயவு)

அநுபல்லவி

நயமிகுந்த குன்றை நாயகனே யென்சாமி (தயவு)

சரணங்கள்

1 வஞ்சனை புரிசூரரை யஞ்சிட வடல்கள்
செயுஞ் சருவேசா யுகந்து யென்சாமி (தயவு)

2 வாசனை புரிநீப வனச மலரணி
தேச சுமிகுருகா தேவா யென்சாமி (தயவு)

3 நன்ருகிய பொழிற்குன்ருக் குடிமலை
வென்ருர் வடிவேலா வேந்தா யென்சாமி (தயவு

## 517. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – குன்றைக்
கர்த்தனே யருளிய முத்தனே சாமி (சித்த)

அநுபல்லவி

கங்கை தரித்தவர் மங்கை யுமைதரும்
துங்க மிகுந்திடுந் தங்க மயில்வாகா (சித்த)

சரணம்

வானவர் த்வம்புரி ஞானவர் மகிழ்வுடன்
தேனலர் கொடுபணி தானவர் குலகாலா
நின்ற பொழிலுறை குன்றை மலைவளர்
மின்றன் மலர்ப்புய யின்றெனை யாண்டிடச் (சித்த)

## 518. ஆதரவு செய்குவாய்

பல்லவி

ஆதரவு செய்குவாய்
மாதரிருவர்கண மருவிய லோலா (ஆத)

அநுபல்லவி

வஞ்ச வரவக்கனை மாய்த்திடும் வேலா
கொஞ்சப் பிறையணி கோலர் தன்பாலா (ஆத)

சரணம்

அண்டர்கள் மிடிதீர்க்கு மானந்த நாதா
தொண்டரைக் காத்தருள் துலங்கிய பாதா
பூத்திடு மாமலர் பொழிற்குன்றை வாசா
நேர்த்தியான தீபா நிர்மல யீசா (ஆத)

## 519. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டா யுத பாணியே
வண்டார் பொழிற்குன்றைமலை முருகேசா (தண்)

அநுபல்லவி

மணக்கு நீபமலர் மாலை பணியுந் தோளா
யிணக்கும் புனக்குறத்திக் கிசைந்த மணவாளா
(தண்)

சரணம்

அந்தர வானவர் அன்புடன் பணிதீபா
சந்த மயிலிற் சூரன்றன்மேற்செலுங் கோபா
மந்தியள் குதிபோடச் சிந்திய மலர்த்தேனே (தண்)
முந்திய குன்றைக் கிசைந்தருள் வோனே (தண்)

## 520. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே
நயங்காணுங் குன்றை நாதனிருக்கையில் (மயங்)

அநுபல்லவி

யந்தர வானவர் வந்தடி பணியும்
கந்த மலர்க்கிணை சந்த பதனிருக்க (மயங்)

சரணம்

யாசைக் குறத்தியை நேசத் தொடுபுணர்
மாசற்றவேல் முருகேச னிருக்கவே
நீடி மாமுடி சூடிய மலர்ப்பொழில்
கூடிய குன்றைமலை நாடிய ஐயனிருக்க (மயங்)

## 521. வாராய் குருபரனே

பல்லவி

வாராய் குருபரனே – வந்து வரந்
தாராய் குருபரனே (வாராய்)

அநுபல்லவி

யந்த வானவர் பணிபாதனே – நாளு
மெந்தனை யாதரி நாதனே (வாராய்)

சரணம்

சூரனை வதை செய்த வேலனே – நல்ல
பார மயிலேறுங் கோலனே
குன்றுக் குடிமலை வாசனே – யன்பரை
நன்றுய்க் காக்கும் பிரகாசனே (வாராய்)

## 522. எப்படி யாகுமோ

பல்லவி

எப்படி யாகுமோ
மைப்புயல் தவழ்குன்றை மலைக்கதி பனருள் (எப்படி)

அநுபல்லவி

தீவினை யாளனுய்ச் செய்யுமோ – பொல்லா
யாவி பரவசஞ் செய்யுமோ (எப்படி)

சரணம்

பாதகத் தண்டாது தள்ளுமோ – யுயிர்
ரோதக் கடல்வீழ்ந்து துள்ளுமோ
நல்வினை வசத்திற் போகுமோ – பார்க்கிற்
றெல்வினை யினியுண் டாகுமோ (எப்படி)

## 523. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே – பணி
பூண்டவனே யருள் புத்திரனே சாமி (ஆண்ட)

அநுபல்லவி

கானக வள்ளி பங்காளா – நல்ல
ஞானவர் பணியுந் தாளா (ஆண்ட)

சரணம்

பன்னிரு மலர்க்கையனே – திவ்விய
நன்னிதி யாகிய மெய்யனே
குன்றை மாமலே வாசனே – யெனக்கு
நன்றியருள் குமரேசனே (ஆண்ட)

## 524. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ – யுயர்
காவினைப் பெற்ற சிகாமலே நாதா (தீவினை

சரணங்கள்

1 ஆசைக் கடலிலகப் பட்ட யெந்தனைப்
பாசத்தை நீங்கிப் பரகதி யாண்டிடத் (தீவினை)
2 பாவக் கடலிற் படிந்திடு மெந்தனை
யாவலுடன் வந்து வற்புட னுண்டிடத் (தீவினை)
3 குன்றுக் குககுரு பரனே
நன்றுய்க் காத்தெனை ரட்சிப்பா யரனே (தீவினை)

## 525. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே – யினி
வேறுமுக மிலே ஐயா (ஆறு)

அநுபல்லவி

கண்டு பணிந்தெனையர் வண்டுண் மலரிநீபா (ஆறு)

சரணம்

வானவர் பணிகின்ற ஞான சம்பந்தனே
செகண்டி மலேமுருகா யகண்ட பரிபூரணு (ஆறு)

## 526. எந்த வினை வந்தாலும்

பல்லவி

எந்தவினை வந்தாலுஞ் சாமி
அந்தவினை தவிர்ப்பாய் (எந்த)

சரணங்கள்

1 கந்த மலர்ப்பொழில் சூழுங் குன்றைக்
குகந்தவனே சாமி
கங்கை தரித்த சடாமகுட பங்கிலுமை பாலா
துங்கமயிற் பரியேறி விளையாடுஞ் செங்கை தரித்த
வேலா (எந்த)

2 ஆசைக் கடலி லகப்பட்ட என்னை பிர்
காசக் கரையேற்றுவாய்
மோசத் துறையி லழுந்திய மூடத்தை
நாசப்படத் தேற்றுவாய் (எந்த)

3 தாவிய மந்திய ளாகு விளையாடி
மேவிய சீர்பொழில் சூழும்
கூவிய செகண்டி மாமலை வாழ்தரு
சேவலா யெந்த நாளும் (எந்த)

## 527. சகல வரந்தருவாய்

பல்லவி

சகல வரந்தருவாய் – யந்த
மகபதி பணிகுன்றைச் சுககுக குமரா (சகல)

அநுபல்லவி

அண்ட பகிரண்ட மெண்டிசையு மகை
கொண்டிடவே சிறை கொண்டடா மயிலாளா (சகல)

சரணம்

போதுற்ற லட்சுமி மாதுக் கிசையும் மருகா
வாதுற்ற சூரனை மோதுற்ற வயிலா
வாவிகளு நிறைந்து மேவிய பொழிலுறை
பூவில் வளருங் குன்றைக் காவலனே சாமி (சகல)

## 528. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – மூன்று
புரகர ரைருள் புத்திரனே சாமி (அர)

அநுபல்லவி

வாசனைமிகு நீப மாலிகை வாகா
நேசமிகு குறத்தி நேரிழை பாகா (அர)

சரணம்

பங்கய மாமலர்ப் பஞ்சின் மெல்லிய பாதா
துங்க மயிலேறிய துரைக்குக நாதா
மதுமலர்ச் சோலையள் வளர்வுடன் சூழும்
புதுமுடிச் சிகிமலை பொருந்திட வாழும் (அர)

## 529 ஐயனே குருபரனே

பல்லவி

ஐயனே குருபரனே – பன்னிரு
கையனே பராபரனே (ஐயனே)

அநுபல்லவி

ஆசைக் கடலில் விழுந்தழுந்திய வென்னை
மாசற்றனுக் கிர்கத்தால் வந்தெடுப்பா யென்னை (ஐயனே)

சரணம்

துன்பப்பட் டழுந்தியே துடித்திடு மென்னை
யின்பத்தைத் தந்துடனி ரட்சிப்பா யென்னை
கண்டினி தாகவுங் கர்த்தனே யென்னைத்
தொண்டினில் யாள்வை குன்றைத்துரைக் குகனே
யென்னை (ஐயனே)

## 530. அடியனைக் காக்க வேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும் – குன்றுக்
குடிவளரு நயக்குரு பரகுமரா (அடி)

சரணங்கள்

1 ஆவியைக் கொண்டு போக யமன்வரு முன்னே
தேவி தெய்வானை வள்ளி சிறந்திட முன்னே
கூவிய மயிலேறிக் கொண்டு என்முன்னே (அடி)

2 துன்பக் கடலில் வீழ்ந்து துயரப்படு முன்னே
வன்புற்ற துயரத்துள் மாட்டிக்கொள் முன்னே
பொன்புரை மயிலேறிப் பொருந்திட முன்னே
யன்புற்று யினிதுடன் யான்மகிழிட முன்னே (அடி)

3 தாவிய மந்தியள தாண்டி விளையாடும்
மேவிய பொழில்வள மிகுந்திட நீடும்
ஓவிய மிகுந்திட யுயர்ந்திடச் சூடும்
பூவில்வரு குன்றையைப் போற்றிட நாடும் (அடி)

## 531. நெஞ்சகமே கேளாய்

பல்லவி

நெஞ்சகமே கேளாய்
மஞ்சடர் குன்றைமலை வரதனைக் கண்டு நீ (நெஞ்)

அநுபல்லவி

உந்தனுக் கிசைந்தது எந்த வனுபூதியோ
அந்தவனு பூதியைத் தந்தருள் வாயென்ன (நெஞ்)

சரணம்

வண்டிசை பாடிய மண்டிய யிதழ்நீபங்
கொண்டிசை புயனை நீ கண்டினி தாகவே
தூவிய மலர்ப்பொழில் மேவிய குன்றையனை
கூவிய மயிற்குறத் தேவி சகாயனை (நெஞ்)

## 532. தயவு வைப்பாய்

பல்லவி

தயவு வைப்பாய் (தயவு)

அநுபல்லவி

நயமிகுந்த குன்றை நாதனே நீதனே – நல்ல
ஞானத்தர் பணிமுரு கேசனே (தயவு)

சரணம்

குன்றுக் குடிக்கிசை வாளனே – நல்ல
நின்றுடிய மலர்த்தோளாளனே (தயவு)

## 533. சண்முக குருநாதா

பல்லவி

சண்முக குருநாதா – உயர்
விண்முகம் பார்க்குங் குன்றை வேந்தனே சேந்தனே
(சண்)

சரணங்கள்

அந்தர வானவர் பணியுந்தகு மலர்ப்பாதா
எந்தனை யாண்டருள் (சண்)

அடல்புரி சூரனுடன்...
......... (சண்)
முடிநிரைக்குமே யடியவர் சூழும்
படிபுகழ் குன்றைக் குடிவரு குகனே (சண்)

## 534. வண்டார் பொழிற்குன்றை வாசனே

பல்லவி

வண்டார் பொழிற் குன்றைவாசனே யீசனே (வண்)

அநுபல்லவி

துயர்கடலில் வீழ்ந்து அயர்வுற்றிடச் சொல்லு
வாயதை வெல்லுவாய் சாமி (வண்)

சரணம்

பாவக் கடல்தனிற் ருவுற் றிடாவகை
பண்ணுவாய்...... (வண்)
மந்தி குதிபோடு முந்திய பொழிலுறை
வாசனே முருகேசனே சாமி (வண்)

## 535. குருபர நாதா

பல்லவி

குருபர நாதா – கருணைக்
கொருகுக நாதா (குரு)

அநுபல்லவி

வானவர் புகழ்முருகா – மாயன்
ருன புகழ்மருகா (குரு)

சரணம்

அற்புத சரணு – நீபப்
பொற்பிறு பரணு
காத்திட...கடைக்கண்ணுற்
பார்த்திடத் தோணும் (குரு)

## 536. அனுபூதி தரவேணும்

பல்லவி

அனுபூதி தரவேணும் - நல்ல
தினகரப் பிர்பை (அனு)

அநுபல்லவி

கானக் குறத்திக் கித்தானற்பு விளைத்திடு
கர்த்தனே பரிசுத்தனே சாமி (அநு)

சரணங்கள்

யீசனில் குகயிலா ...........
இச்சை மிகவேணும் பச்சை மயிலோனே (அநு)
நின்ருடிய பொழிற்குன்ருக் குடிவளர்
நீதனே குகநாதனே .......... (அநு)

## 537. ஆதாரஞ் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்யவேணும்
போதார் பொழிற்குன்றைப் புரந்தவனே சாமி (ஆதா)

அநுபல்லவி

........றுயில்வோன் மருகேசா - திவ்விய
நன்னய வன்பருக்குன் முருகேசா (ஆதா)

அநுபல்லவி

1 பாதிபிறைச் சடிலா – அருட்
சோதிப் பிரபை மிகுவேலா (ஆதா)
2 மயின்மலை மேவிய நாதா – துதி
பயிறரு மன்பர் பணிபாதா (ஆதா)

## 538. சித்தந் தெளியவேணும்

அநுபல்லவி

சித்தந் தெளியவேணும் (சித்தந்)

அநுபல்லவி

கர்த்தனே குன்றைமலைச் சித்தனே யென்னுடை (சித்தந்)

சரணங்கள்

1 உன்னிரு தாள்தனை முன்னிலையாய்க் கண்டு
உரிமையாய்ப் பணியரிய வடியன் (சித்தந்)
2 கண்டு பணிந்துனை யுண்டுவே னப்பணி
கருத்துள்ள யுன்கருத்தா யெந்தன் (சித்தந்)
3 பங்கய வாவிய ளெங்கணு நிறைதரு
பார்புகழுங் குன்றைச் சீர்முரு கேசாயென் (சித்தந்)

## 539. மனதிரங்க வேணும்

பல்லவி

மனதிரங்க வேணும் (மனதி)

அநுபல்லவி

அந்தத் தினகரனொளிர் குன்றைத் தேவனே சாமி (மனதி)

சரணங்கள்

1 வஞ்சனை புரிசூரை யஞ்சிடவ் வனுட
நெஞ்சினில் யில்விடு நீதனே யெந்தன் (மனதி)

2 மாயமிடு மடவரா மயலில் வீழ்ந்து
தோயிடாமல் அருள்தூயனே யெந்தன் (மனதி)

3 தூவி யன்னஞ் செறியும் வாவி நிறையுங் குன்றைக்
காவலனே குகக்கர்த்தனே யெந்தன் (மனதி)

## 540. காராயோ சாமி

பல்லவி

காராயோ சாமி – கடைக்கண்ணாற்
பாராயோ சாமி (காரா)

அநுபல்லவி

கானக மயில்பாகா – நாளும்
ஞானவர் பணியோகா (காரா)

சரணம்

அடியர்கள் பணிதாளா – யெந்தன்
மிடிதவிர் மயிலாளா
சிகிமலை வாழுந் தேவே
அண்ட பகிரண்பம் புகழ்தேவே (காரா)

## 541. குருபர நாதா

பல்லவி

குருபர நாதா – குன்றை
வருமலர்ப் பாதா (குரு)

அநுபல்லவி

தானவர் குலகாலா – யந்த
வானவர் பணிசீலா (குரு)

சரணம்

ஆடிய மயிலாளா - குறத்தி
தேடிய மணவாளா
குன்றையின் மலைவாசா - யன்பர்க்கு
நன்றருள் புரிநேசா (குரு)

## 542. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்கவேணும் - (அடி)

அநுபல்லவி

குன்ருக் குடிவளரு மெங்கள் குருபர நாதா (அடி)

சரணங்கள்

1 பாதச் சிலம்புகள் ஆடவே – நான்கு
வேதத் தானவருங் கூடவே வந்து (அடி)

2 அண்டர்கள் வந்து துதி சொல்லவே – நல்ல
தொண்டர்கள் பாடிக் கொண்டு செல்லவே வந்து (அடி)

3 குன்ருக்குடி மலையின் மேலே – யிருந்து
நன்ருகவே தான் தன்ஞலே வந்து (அடி)

## 543. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே – யுயர்
மஞ்சார் பொழிற்குன்றை மாமுரு கேசனை (நெஞ்)

அநுபல்லவி

வாசக் கமலமலர்ப் பாதனை – நல்ல
நேசக் குறத்திபுணர் நர்த்தனை (நெஞ்)

சரணம்

மங்கை யுமாபதி பாலனை – மலர்ச்
செங்கை தரித்திடும் வேலனை
பூரணனைக் குமரேசனைக் – குன்றைக்
காரணனை அமரேசனை (நெஞ்)

## 544. வரந்தர வேணுமையனே

பல்லவி

வரந்தர வேணுமையனே – நாளும்
புரந்தரன் பணிகுன்றைப் புண்ணியனே சாமி (வர)

அநுபல்லவி

மங்கைக் குறத்தி மணவாளா – யுயர்
பங்கய மாமலர் நிகர் தாளா (வர)

சரணம்

மதுமலர் நீபமென் வாகா
விதுமுகக் குஞ்சரிதன் பாகா
குன்றை மலையின் குருபரனே – யன்ப
ரென்று பணிசெயும் யோகா (வர)

## 545. தீராத வினையுண்டோ

பலலவி

தீராத வினையுண்டோ (தீராத)

அநுபல்லவி

சீராருங் குன்றைமலைத் தேவ தேவனைக் கண்டால்
(தீராத)

சரணங்கள்

1 வள்ளிக் கிசைந்த மணவாளனை – பசும்
புள்ளிக் கிசைந்த மயிலாளனை – நல்ல
தெள்ளு தமிழ்வாயனைத்
தேடித் தேடிக் கண்பால் (தீராத)

2 வாசக் கடம்பணி தோளனை – பிர்
காசக் கமலமலர்த் தாளனை – நாளுந்
தேசத்தர் பணிவோனைத்
தேடித் தேடிக் கண்டால் (தீராத)

3 தன்றாழ்க் கன்பர்கள் நாயனை – உயர்
குன்றாக் குடிமலை மாயனை – யருள்
தென்சார் முருகனைத்
தேடித் தேடிக் கண்டால் (தீராத)

## 546. வடிவேலவா

வடிவேலவா - குன்றுக்
குடிவேலவா (வடி)

அநுபல்லவி

அண்டர் கடுயர் தீர முண்டென்றுஞ் சூரனைத்
தண்டனை புரிகின்ற வண்டணி மணிமார்பா (வடி)

சரணம்

வஞ்சி நிகருமிடை மிஞ்சிய தன்மயில்
கொஞ்சிய குறமகள் ரஞ்சித மிகுகுகா
மருமல ரொழுகிய பெருகிய மதுநிறை
தருசிகி மலைவளர் குருபர குமரேசா (வடி)

## 547. பன்னிருகையனே

பல்லவி

பன்னிருகையனே - சாமி (பன்)

அநுபல்லவி

என்னிரு வினைதீர்ப்பாய் (பன்)

சரணங்கள்

1 பாத பங்கயனே நாத யிங்கிதனே (பன்)
2 பூரண புனிதா யாரண தியாஞ (பன்)
3 சிகிமலை வாழ்வே குககுரு பரனே (பன்)

## 548. ஆண்டருள்வாயே

பல்லவி

ஆண்டருள்வாயே – முடி
பூண்ட சிகாமலைப் புண்ணியனே யென்னை (ஆண்ட)

அநுபல்லவி

வாசக் கடம்பணி வாகா யோகா
நேசக் குறத்திக்கு நேசா ஈசா (ஆண்ட)

சரணம்

கங்கை தரித்தவர் பாலா சீலா
செங்கை தரித்திடு வேலா கோலா
குன்றையின் மலைவரு தேவே கோவே
யின்றெனுக் கருள்புரி வாயே நீயே (ஆண்ட)

## 549. நடன மயிற்பரியாய்

பல்லவி

நடன மயிற்பரியாய் – யுயர்
வடவரை நிகர் குன்றைமலேக் குருநாதா (நடன)

அநுபல்லவி

வந்த பிணியைத் தீர்த்து யெந்தனை ஆதரித்து
வந்தனை தந்து புரிந்திட வேணும் (நடன)

சரணங்கள்

பதமதைத் தேடி நிதநிதம் பரவும்
பத்தரைக் காத்து நித்தம் ரட்சித்திடும் (நடன)
தினந்தின முந்தனை மனந்தனி னினைப்போர்
சித்தந் தெளிந்திட நித்தம் வரந்தரும் (நடன)

## 550. அரகர வரகர குமரேசா

பல்லவி

அரகர வரகர குமரேசா – திரி
புரவர னருளிய யமரேசா (அரகர)

அநுபல்லவி

பத்தர் கடுதிசெயு முருகேசா – ஞான
சித்தர்கள் பரவிய குருகேசா (அரகர)

சரணம்

வானவர் தேடரு குகநாதா – நீபத்
தேனல ரணியறுமுக நாதா
குன்றையின் மலேவரு கதிர்வேலா – இன்னம்
நன்றியை யருள்புரி நயசீலா (அரகர)

## 551. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ – யுயர்
பூமி புகழுங் குன்றைமலேப் புண்ணியன் சுப்பிரமணிய
(சாமி)

அநுபலலவி

கானக மடந்தைபுணர் தேனலரங் கன்மார்ப
ஞான குருதேசிக வானவர் பணியுங்குரு (சாமி)

சரணங்கள்

1 மங்களகர மிகுந்த திங்களணி சடிலேசர்
பங்கமர்ந்த வுமையவள் சங்கரி யருளுங்குக (சாமி)

2 வாவிய ணிறைந்திடு தாவிய பொழிலுறை
மேவிய முடிநிறைந்த யோவிய மிகுந்த குன்றை (சாமி)

## 552. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி – யென்முன்
வரவேணுஞ் சாமி (தரவே)

சரணங்கள்

1 நானக்குழல் மடவி கானக் குறத்தியுடன்
காதலுடன் கூடி யாதரவுட னருள (தரவே)

2 வஞ்ச வசுரனை நெஞ்சம் பகர்ந்திட
வடிவேல் தொடுத்தவா அடியேன் றனக்கருள் (தரவே)

3 தாவிய மலர்ப்பொழில் மேவிய சிகிமலை
தன்னில் வருங்குகா வென்னிடந் தானருள் (தரவே)

## 553. என்னைத் தெரியச் செய்குவாய்

பல்லவி

என்னைத் தெரியச் செய்குவாய் – உயர்
பொன்னைப் பொழியுங் குன்றைப்
பொருப்பிலுறையு நாதா (என்னை)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரரை மாய்த்திடு வேலா
போதுக்குளுயர் நீபம் பொருந்திய சீலா (என்னை)

சரணம்

வருந்துயரை யன்பர்க்கு மாற்றிய தீரா
திருந்திய மயிலேறுஞ் சிறந்திடு சூரா
திருமுடி யிலகிய சிகிமலை நாதா
தருநிகர் கரதலா தழைத்திடும் பாதா (என்னை)

## 554. திருவருள் தருவாயோ

பல்லவி

திருவருள் தருவாயோ
மருவளர் பூஞ்சோலை மயின்மலை நாதா (திரு)

அநுபல்லவி

மங்கை குறத்தியைச் செங்கையைப் பிடித்துக்
கொங்கையி லணைத்துக் கொண்டிடுங் கோலா (திரு)

சரணம்

வாதில்வருஞ் சூரனை மோதிச்சமர் புரியும்
கோதிலாத நுனிகொண்டிடு கதிரின் வேலா
மஞ்சடர் பூம்பொழில் மிஞ்சிய சிகிமேரா
குஞ்சித பாதரருள் கொண்டிடு நயபாலா (திரு)

## 555. தரிசனஞ் செய்வாயோ

பல்லவி

தரிசனஞ் செய்வாயோ – மனமே (தரி)

அநுபல்லவி

அரியயன் பணிகுன்றைக் குரியவனைக் கண்டு (தரி)

அநுபல்லவி போல்

1 யரனருள் பாலனை வரமருள் சீலனை (தரி)

2 யற்புத பாதனை விற்பன நாதனை (தரி)

3 குன்றையின் வாசனை நன்றரு ளீசனை (தரி)

## 556. வந்து வரந்தருவாயே

பல்லவி

வந்து வரந்தருவாயே – குன்றைக்
குகந்த குருபர வேளே (வந்து)

சரணங்கள்

1 மாயன் மருகேசனே
சேய குமரேசனே
தூய சண்முகநாதா
துலங்கிய வடிவேலா (வந்து)

2 புள்ளி மயில்வாகனு
வள்ளி யுடமோகனு
தெள்ளிய தமிழாளா
சேவலங் கொடியாளா (வந்து)

3 விதுதவழ் பொழில் சூழும்
புதுமுடிச் சிகிவாழ்
மதுமலர் நீபா
வருகுரு நாதா (வந்து)

## 557. ஆதாரஞ் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்யவேணும் (ஆதார)

அநுபல்லவி

போதார் பொழிற்குன்றை நாதா குகாகுமரா (ஆதார)

சரணங்கள்

1 கானுக் குள்ளேவளர் மானுக்கு நிகரான
காதற் குறத்திபுணர் போதுற்ற புயசீலா (ஆதார)

2 தேனை நிகர்விழித் தெய்வானை தனைமருவு
சேவலங் கொடியாளா ஆவலுடனே வந்து (ஆதார)

3 தாவிய மலர்ப்பொழில் மேவிய மயில்மலைதனில்
வளர்குகனே யினியடி யேற்கு வேண (ஆதார)

## 558. உன்னையலால் வேறுமுண்டோ

பல்லவி

உன்னையலால் வேறுமுண்டோ – இனி
யென்னை ரட்சித்தே யாள (உன்னை)

சரணங்கள்

1 கொஞ்சில் கிளிமொழி ரஞ்சித மாகிய
மிஞ்சிய நயமிகு வஞ்சி குறத்திபங்கா (உன்னை)

2 வாது புரியுஞ் சூரரை மோது படையால் வென்று
போது புனைவயிலா மூதுளத் தமிழ்வாயா (உன்னை)

3 கமழ்மலர் மலரும் யுமிழ்மதுச் சோலை
அமர்சிகி மலைவாழ் குமர சண்முகவா (உன்னை)

## 559. சரவணபவ குகனே

பல்லவி

சரவண பவகுகனே
பரம சிவனருள் வருகுரு பரனே (சரவண)

அநுபல்லவி

பங்கய மலர்நிகர் துங்கமிகு சரணு
தங்க மயிலில்வரு மெங்கள் தனயகா (சரவண)

சரணம்

திருவடி தனைப்பணி யுரிமை அடியவர்கள்
அருமை யறிந்து வருள்தரு குருபரனே
வாச மலர்ப்பொழில் பிர்காச மிகவே சூழும்
மாசற்ற சிகிமலைத் தேசப் பிரசித்தி யான (சரவண)

## 560. கருத்தி னினைத்தபடி தருவாய்

பல்லவி

கருத்தி னினைத்தபடி தருவாய் - குன்றைக்
கருத்தனே மயின்மீது வருவாய் (கருத்தி)

அநுபல்லவி

மாது குறத்தி மணவாளா – திவ்விய
போது தரித்த மலர்த்தாளா (கருத்தி)

சரணம்

மங்கை யுமையவள் தன்பாலா – மலர்ச்
செங்கை தரித்திடு வேலா
மன்றன் மலர்ப்பொழில் சூழும் – முடிக்
குன்றை மலையதனில் வாழும் (கருத்தி)

## 561. வடிவேலனே

பல்லவி

வடிவேலனே – குன்றுக்
குடிவேலனே (வடி)

அநுபல்லவி

அடியர் பணிபாதா
கொடிவேட மிஞதா (வடி)

சரணம்

பன்னிரண்டு கையனே
மின்னியதோர் துய்யனே
தானவர் குலகாலா
வானவர் குலசீலா
தேனலரணிநீபா
யானகுன்றையின் பூபா (வடி)

## 562. மதுரிதத்த மின்வாயா

பல்லவி

மதுரிதத்த மின்வாயா – உயர்
சதுமறை புகழுஞ் சண்முக நாதா (மது)

அநுபல்லவி

பரிவுட னுன்னைப் பணிவர்க்கு நாளும்
உரிமை யதாயருள் உதவியே யாளும் (மது)

சரணம்

கொஞ்சு கிளியின் வள்ளி கூடிய லோலா
வஞ்சி தெய்வானையை மருவிய சீலா
வாவிய சோலை வளர்ந்தினி தாடும்
மேவிய குன்றையில் விருப்புடன் னீடும் (மது)

## 563. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே (அஞ்)

அநுபல்லவி

மஞ்சார் பொழிற்குன்றை வாசனிருக்க (அஞ்)

சரணங்கள்

1 கங்கை தரித்த சடைக்கர்த்தன் பாலன்
மங்கைக் குறத்தி மின்னுள் மருவிய லோலன்
துங்க மயிலிலேறு மெங்கனுதை னிருக்க (அஞ்)
2 மருவிதழ் சேரு மலரணி நீபன்
குருபர நாதன் குறையிருட் டீபன்
பொருகதி ரயிலன் முருகைய னிருக்க (அஞ்)

3 தாவிய சோலை தழைத்தினி தாளும்
வாவி நிறையுங் குன்றை மலைமிசை வாழும்
தூவி நிறைமயிலன் சேவல னிருக்க (அஞ்)

## 564. அருளாயோ சாமி

பல்லவி

அருளாயோ சாமி - குன்றைப்
பெருமானே நல்ல குருநாதா குகா (அரு)

அநுபல்லவி

மருமலர்க்குழன் மாது வள்ளி சேர்
திருவிலங்கிய திவ்விய புயாசலா (அரு)

சரணம்

அண்டர் போற்றிய வாறிரு கையனே
தொண்டர் போற்றிய தூயபொற் பாதனே
மன்றன் மலர்ப்பொழில் வளர்சிகி மேரா
என்றன் மனத்துயிரினி நீக்கி நீயே (அரு)

## 565. மனதே அஞ்சாதே

பல்லவி

மனதே அஞ்சாதே - குன்றைக்
கனககிரி வளருங் கருத்தனிருக்க (மனதே)

சரணங்கள்

1 போதுக் குளுயர் நீபப் போது தரித்தோளன்
மாதுக் குளுயர் குறமாது மணக்கு மாளன்
மயிலேறி விளையாடு மொயிலானவ னிருக்க (மனதே)

2 மங்கள சுபகர சங்கரிதரு பாலன்
பங்கய கரதலத் துங்க வடிவின் வேலன்
துய்ய சண்முக முருகைய னிருக்க (மனதே)

3 மிஞ்சிய வான்வளர் மஞ்சிசேர் பொழில்சூழும்
நெஞ்சின் மகிழ்தரு மஞ்சுகம் வாழும்
நீளு முடிக்குன்றை வாழுமைய னிருக்க (மனதே)

## 566. வேலு மயிலெனவே

பல்லவி

வேலு மயிலெனவே - மனதே யெக்
காலுஞ் சொல்வாய் சொல்வாய் (வேலு)

அநுபல்லவி

தூயனைக் கனிவாயனைப் பத்தர்
நேயனைக் கன்சேயனைக் கண்டு (வேலு)

சரணம்

ஐயனை பன்னிரு கையனைப் பொடியணி
மெய்யனை யுனையாளுந் துய்யனைக் கண்டு
திருமுடி மேவிய தருபொழில் சூழும்
ஒருசிகி மலைவாழ் குருபரனைக் கண்டு (வேலு)

## 567. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குருநாதா - யார்க்கும்
வரமருள் குருபரா மலர்நிகர் பாதா (அர)

அநுபல்லவி

போது தரித்தகுழல் மாது குறத்திபுணர்
புண்ணியனே சுப்பிர மண்ணியனே சாமி (அர)

சரணம்

பங்கய மாமலர் தங்கய ஞர்பணி
பாத பங்கெருக வேத யிங்கித வாயா
தாவிய பூம்பொழின் மேவிய மாமுடிச்சகம்
பரவியதொரு செகண்டி மலையின் வாழ்வே (அர)

## 568. பன்னிரு கரதலனே

பல்லவி

பன்னிரு கரதலனே - வானி
லுன்னிதாமாங் குன்றைக் கொருத்தனே சாமி (பன்)

அநுபல்லவி

சீதள மாமலர் வேத னுமேபணி
போதணி யிருபாதா யாதரவினைச் செய்வாய் (பன்)

சரணம்

ஏலக் குழலி கான கோலக் குறத்திபுணர்
மாலக் கதிரின் வடிவே லற்புட னேந்தும்
வாவியுஞ் சோலையுந் தூவியு நாள்தொறு
மேவிய குன்றைவரு தாவிய மயிலாளா (பன்)

## 569. என்று காண்பேன்

பல்லவி

என்று காண்பேனையனே (என்று)

அநுபல்லவி

நன்று காண குன்றைமலை நாதனை நீதனை (என்று)

சரணங்கள்

1 அண்டர்கள் பணிபாதனை – நல்ல
தொண்டர் பணிநாதனை – யருள்
சுப்பிர மணியனை யற்புத மகிபனை (என்று)

2 அருமறை புகழ் நாயனை வெகு
பெருயள் சேருந் தூயனை – குறப்
பெண்ணினை மருவிய என்று மையனை (என்று)

3 வாவியுஞ் சோலை நாளும் – வளம்
மேவிய குன்றை வாழும் – உயர்
வித்தகனை பரிசுத்தனை முத்தனை (என்று)

## 570. சேவடியைத் தொழுவாய்

பல்லவி

சேவடியைத் தொழுவாய் – மனமே (சேவடி)

அநுபல்லவி

ஆவலுடன் முருகையன் மாமலர்ச் (சேவடி)

சரணங்கள்

1 கங்கை தரித்திடு சடையாருமை
மங்கை மகிழ்ச்சிகொள் புதல்வன் – மலர்ச்
செங்கை தரித்திடு வேலன் – கும்பக்
கொங்கைக் குறத்திதன் லோலன் (சேவடி)

2 நீப மலர்த்தொடை வாகன் - சூரைக்
கோப மிகுக்க வேல்வீரன் - அன்பர்
லாப மிகச்செய் கிர்பேசன் - யண்டர்
பூபன் மயிற்பரி யாளன் (சேவடி)

3 தாவியே மந்திகளு திர்க்க – அதில்
தூவிய கனிகள் மிகுக்கும் - நல
மேவிய பொழில்கள் சேரும் - சொர்ண
தூவிகொள் குன்றை வாழ் ஐயன் (சேவடி)

## 571. ஆடிய சிறைமயிலா

பல்லவி

ஆடிய சிறைமயிலா - அன்பர்
தேடிய குன்றைமலைத் தேவ தேவனே (ஆடிய)

அநுபல்லவி

கருணு நிதியே பொருணு வலனே
பெருமா னிதியே யருளா யருளாய் (ஆடிய)

சரணம்

கொம்பனே யாளுமை யம்பிகை யாடரும்
யெம்பிரானே கதம்ப பணிபுயவா
நீடிய பூம்பொழில் கூடிய சிகிமலை
நாடிய குருபரா சூடிய மலர்மார்பா (ஆடிய)

## 572. நயந்தர வேணும்

பல்லவி

நயந்தர வேணும் – நல்ல
சுயம்பிரகாசச் சுபசிகி மலையாய் (நயந்)

அநுபல்லவி

ஏறு பரிக்குகந்த யாறு தரித்த சடை
நீறு நிறத்தருள் கூறு படைத்த வேலா (நயந்)

சரணம்

நடம்புரி மயிலேறுங் கடம்பணி புயவா
அடஞ்செயுஞ் சூரனுடன் சமர்புரிவாய்
அடர்பொழி நீழல் படர்சிகி மலையா
தொடர்வினை யான இடர்தனைத் தீர்த்து (நயந்)

## 573. எந்தனை யாளுமையனே

பல்லவி

எந்தனை யாளுமையனே — யுன்னை
வந்தனை புரியு மன்ப னிவனென்று (எந்)

அநுபல்லவி

எங்கும் பிரகாசந் தங்குங்குகேசா
பொங்கும் படியருள் புரிந்தினி தாக (எந்)

சரணம்

காவலக் கீளுறை தேவர்கள் பணிதரு
காவலனே யருள்கர்த்தனே சாமி
தாவிய மலர்ப்பொழில் மேவிய சிகிமலை
யாவலுடன் வருமையனே யென்சாமி (எந்)

## 574. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே - குன்றை
வாழுமையனே (ஆளு)

அநுபல்லவி

கடம்பணி புயனே — மயில்
நடம்புரி நயனே (ஆளு)

சரணம்

ஆண்டவனே குகனே — நீபம்
பூண்டவறு முகனே
சுககுரு நாதா — குன்றை
மிகவரு நீதா (ஆளு)

## 575. வடிவேலெடுக்குங் கையனே

பல்லவி

வடிவேலெடுக்குங் கையனே — குன்றுக்
குடிமா மலைக்குரு குமரேசனே ஐயனே (வடி)

அநுபல்லவி

ஞானந் தவருத ஞானி யன்பர்
ஆனந்த நடன ரருளிய பாலா (வடி)

சரணம்

எந்தன் கொடுவினைக் கினியருள் செய்து
சிந்தை மகிழ்ந்திடத் தீர்த்தருள் நாதா
கூவிய மாமயிற் கோலா கலனே
தாவிய பொழிற் குன்றைச் சரவண பவனே (வடி)

## 576. அடியனைக் காக்கவேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும் - குன்றுக்
குடிவரு குமரேசா வடிவுறு வேலவா (அடி)

அநுபல்லவி

வாசக் கடம்பைப் பிரகாசப் புயத்திலணி
நேசக் குறமயிலி நினைத்திடுபேர் (அடி)

சரணம்

கங்காதர ரருளுங் கார்த்தி கேயா
சிங்கார மயிலா தேவர்கள் தேவா
வாவிய ணிறைந்திட மேவிய பொழில்சேரும்
ஓவியச் சிகிமலைக் குகந்தவனே சாமி (அடி)

## 577. வந்து வரந்தரவேணும்

பல்லவி

வந்து வரந்தரவேணும் - குன்றைக்
குகந்து வளர்குரு நாதா எந்த னிடத்திலென்றும்
(வந்து)

அநுபல்லவி

ஆசைக் கிசைந்தகுற நேசக் கொடியுடனே
வாசத்துடன் மருவும் வரதனே யென்னிடம் (வந்து)

சரணம்

அற்புத மாகிய விற்பன நாயகா
பொற்புயர் மயிலா பொருந்திட என்னிடம்
தங்கிய மாமலர் பொங்கிய பொழில்கள்
எங்கிலு முயர்குன்றைக் கினியனே யென்னிடம்
(வந்து)

## 578. துயர்தனைத் தீர்ப்பாய்

பல்லவி

துயர்தனைத் தீர்ப்பாய் - நாளும்
நயமிகுங் குன்றைமலை நாதனே வேதனே (துயர்)

அநுபல்லவி

ஆசைக் கருங்கடலி லகப்பட்டுக் கொண்டு
மோசப் படுவதனை முற்றவும் விண்டு (துயர்)

சரணம்

உந்தன் பதத்தினை யுண்மையாய்ப் போற்றி
வந்தனை செயுமெந்தன் வல்வினை மாற்றி
மஞ்சு படியுங் குன்றை மாமலை வாசா
மிஞ்சு மயற்குறத்தி மேவிய நேசா (துயர்)

## 579. தருணந் தயவு செய்குவாய்

பல்லவி

தருணந் தயவு செய்குவாய் (தரு)

அநுபல்லவி

மருவலர்ப் பொழில்குன்றை மாமலை வாசா (தரு)

சரணங்கள்

1 செங்கை தரித்திடு வேலா - கான
மங்கை குறத்திதன் லோலா - யினி
வந்தவினை சிந்தவருள் (தரு)

2 வானவர் பணியும் பாதா - நீபத்
தேனல ராகிய போதா - மலர்
திருமாயவன் மருகா (தரு)

3 மன்னு மாமுடி சூழும் - நாளு
மின்னுங் குன்றையில் வாழும் - வடி
வேலா வெகுசீலா யிது (தரு)

## 580. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் - யெந்தன்
தாயே குன்றைமலைச் சண்முக நாதா (நீயே)

அநுபல்லவி

யந்தர வானவர் வந்தடி பரவுங்
கந்த மலர்ப்புயா யெந்தனை யாள (நீயே)

சரணம்

நான்மலர்க் குழன்மானனை மாகூர்விழி
தேனல ரணியுங் கான மின்றுளா
தாவிய பூஞ்சோலை மேவிய குன்றையாய்
கூவிய மயிலாளா தேவி யுமைதன் பாலா (நீயே)

## 581. குமரேசனே

பல்லவி

குமரேசனே - யந்த
அமரேசனே (கும)

அநுபல்லவி

சமராடிய சூரசம்மாரனே சாமி (கும)

சரணங்கள்

1 தேவர்கள் முனிவர்கள் மூவர்கள் பணிபாதா
பாவலர் செய்ய சேவலவாவருள் (கும)
2 யண்டரு யாவருந் தொண்டரும் பணிநாதா
மண்டலம் பரவுமுத் தண்ட வடிவேலவா (கும)
3 மங்குற வளுஞ்சோலை யெங்குங் குளிர்ந்திடும்
தங்குமருள் குன்றை யங்கிரி வருதேவே (கும)

## 582. தந்து ரட்சிப்பது

பல்லவி

தந்து ரட்சிப்பது யுந்தன் பாக்கியமையா
கந்த மலியுஞ் சோலைச் சொந்த மயின்மலையாய் (தந்து)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை மாய்த்திடு வேலா
சூதுக்கு நிகர்முலைத் துரைமயில் மாலா (தந்து)

சரணம்

சங்கர னருள் சண்முக நாதா
பங்கச மாமலர் பசந்திடு பாதா
கதிர்முடி நிரைநிரைக் கதித்திட ஞானே
மதிதவழ் சோலை மயின்மலை யோனே (தந்து)

## 583. வடிவேலெடுக்குங் கையனே

பல்லவி

வடிவேலெடுக்குங் கையனே - குன்றுக்
குடிமீ திருக்கு மெய்யனே (வடி)

சரணங்கள்

1 ஆடித் திரியு மயிலா - வள்ளி
தேடித் திரியு மொயிலா - யனு
தினமடியார் பணிவனச மலர்ப்பாதா (வடி)

2 மாதுமையாள் பாலனே - நீபப்
போது புனையுஞ் சீலனே – நல்ல
புண்ணியனே சுப்பிர மணியனே சாமி (வடி)

3 வாவி யென்னுளுஞ் சூழும் - குன்றை
மேவி யிலங்கி வாழும் - யுயர்
விண்ணவரும் பணியண்ணலே யென்சாமி (வடி)

## 584. அரகரா குகநாதா

பல்லவி

அரகரா குகநாதா – பன்னிரு
கரமலர்க் குமரா வரமருள் புரிவாய் (அர)

சரணங்கள்

1 கார்த்திகேயா சிவமூர்த்தி கரர்யரா (அர)

2 பங்கய வாசா சங்கரர் பாலா (அர)

3 குன்றையின் நாதா யின்றெனே யாளாய் (அர)

## 585. வானவர் பணிபாதனே

பல்லவி

வானவர் பணிபாதனே – வேதனே
தேனலர் புனைநாதனே (வான)

அநுபல்லவி

நிதஞ்சலியாமல் வந்து பதஞ்சலி பணிசெயும்
பரமசிவ னருளால் தரபாலா (வான)

சரணம்

யுந்தனடி யருக்கு வந்த வினையடீர்
வரந்தருவா யெங்கு நிரந்தர மானவா
தூவியு மாமலர் வாவியு நிறைதரு
மயின்மலை வாழும் யொயில்முரு கேசா (வான)

## 586. வினைக்கொரு விடைகொடுப்பாய்

பல்லவி

வினைக்கொரு விடைகொடுப்பாய் – யன்பர்
தனக்கினி தான வரந்தரு குருபரனே (வினை)

அநுபல்லவி

பரம சிவேசா யரகரதேவா
புரவரனுர் தான வரந்தர வருபாலா (வினை)

சரணம்

பற்ம விலாச வற்புத பாதா
விற்பன ஞான சற்குண நாதா
திருமுடி மேவு தருவன மேவு
பொருசிகி மலையா வருமுன தடியன் (வினை)

## 587. குருபர தேசிகா

பல்லவி

குருபர தேசிகா - குன்றை
வருமுரு கேசா (குரு)

அநுபல்லவி

வீறு புரியுஞ் சூரை கூறுபடை வயிலால்
நீறுபட வடிக்கு நிர்மல ரூபா (குரு)

சரணம்

என்னுடை தீவினையை யுன்னுடை யருளினல்
அன்னது விலகிட யாண்டருள் வாயே
மஞ்சடர் மலர்ப் பொழில் மிஞ்சிடா சிகிவரை
நஞ்சிகனே யாளு நாதனே நீதனே (குரு)

## 588. மயிலேறும் பெருமானே

பல்லவி

மயிலேறும் பெருமானே – நல்ல
அயிலார் கரதல ஐயனே மெய்யனே (மயிலே)

சரணங்கள்

1 வாசக் களபமுலே நேசக் குறமயில்
மருவிய தோளா திருமலர்க் காளா
ஆசைப்படு மெந்தன் மோசப்படு துயரை
யாற்றி வைப்பாய் விஜனமாற்றி வைப்பாய் குகா
(மயிலே)

2 பன்னுதமிழ்ப் பொருளே துன்னு செங்கனி வாயா
பதுமா சனவைதா நிதமே பணிபாதா
மின்னுமணிப் பூண்கள் மன்னு பன்னிருபுயா
விகசித மலர்நீபா சுககுரு பரநீதா (மயிலே)

3 வாவியு மணிமுடித் தூவியு நிறைதரு
மயின்மலே தனில்வளர் யொயிலுள்ள குமரேசா
தேவி தெய்வானையை மேவிய மலர்ப்புயா
திருமால் மருகேசா குருநாதா குகா (மயிலே)

## 589. முருகா வுனைநம்பினேன்

பல்லவி

முருகா வுனை நம்பினேன் – மயிற்
குருகா சிகிமலேக் குருபர நாதா (முருகா)

அநுபல்லவி

வாருற்ற பூமுலே காருற்ற பூங்குழல்
கன்னி குறத்திபுணர் நன்னய வடிவாளா (முருகா)

சரணம்

வானவர் தானவர் மோனவர் பணிபாதா
கருத்தனே யெனக்கொருத்தனே சாமி
யண்ட மளாவிய கொண்டல் படிதரு
சிகிமலே மேல்வரும் குமரேசா (முருகா)

## 590. குமரேசனே

பல்லவி

குமரேசனே - குன்றைக்
கொருவாசனே (கும)

அநுபல்லவி

மனவாசை யாலனு தினமாக ஞான - வெகு
நினைவாகவே சாமி யுனை நாடினேன் (கும)

சரணம்

திடமான சூரனை யுடன் கீறவே
சமருடனே செயுங் கனதட வேலவா
மகிதல மேல்நிதஞ் சுகமுடன் வாழ்யுயா
சிகிமலையாய் யருள் குககுருவே (கும)

## 591. நாதா குருநாதா

பல்லவி

நாதா குருநாதா – மாமலர்ப்
பாதா வருள் பாதா (நாதா)

சரணங்கள்

1 குமரா குககுமரா - சூர
சமராய் சேமரா (நாதா)

2 முருகா வனமுருகா - மயிற்
குருகா கிளியின் குருகா (நாதா)

3 ஐயா வெகு வையா
மெய்யா பொடி மெய்யா (நாதா)

## 592. திருவருள் தரவேணும்

பல்லவி

திருவருள் தரவேணும் - குன்றைமலைக்
கொருமுத லாகவே வருகுரு பரனே (திரு)

சரணங்கள்

1 யானந்த நடன மாடிய பரமா
வானந்த ராகிய மாமறை யாளா
வாச நீபமலர் நேச மாயணிபிர்
காசனே யுயர்செகேசனே யுனதுட (திரு)

2 யண்டர் முனிவர்கள் தொண்டர்களே வருங்
கண்டடிதனை தொழுங் கருத்தனே குகனே
ஐயனே யிலகு துய்யனே பன்னிரு
கையனே யுலகில் மெய்யனே யுனது (திரு)

3 தூவியுஞ் செங்கமலந் துலங்கி நிறைந்திருக்கும்
வாவியுஞ் சேருங் குன்றை மாமலை வாழும்
சோதியே சத்திய நீதியே பிரக்கி
யாதியே யார்க்கு மாதியே யுந்தன் (திரு)

## 593. எப்போ தருள்வாயோ

பல்லவி

எப்போ தருள்வாயோ - யன்பர்
முப்போதும் பணிமுதல்வா வடியேனுக்கு (எப்)

சரணங்கள்

1 பாதிப் பிறைதரித்த யாதிக் கடவுளார்க்குப்
பாலனே வடிவேலனே யெனக்கு (எப்)
2 பங்கய மாமலர் தங்கிய சீர்பாதா
பரமசிவா மலர்க்கரதலா வடியேனுக்கு (எப்)
3 வாழு மலர்ப்பொழில் சூழுஞ் சிகிமலை
வாசனே பிரகாசனே யெனக்கு (எப்)

## 594. கருத்தினி னினையாயோ

பல்லவி

கருத்தினி னினையாயோ - குன்றைக்
கொருத்தனே வெகுதிருத்தனே (கருத்)

சரணங்கள்

1 பாதக னுகவே யிருந்தாலும் - பொல்லா
நோதக னுகவே யிருந்தாலும் - வெகு
மேதக னுகவே யிருந்தாலும் - யெந்தன்
மீதினி லெனுளு மாதர வாகவே (கருத்)
2 நோய்பிடித்தவ னுக யிருந்தாலும் - மனப்
பேய்பிடித்தவனுக யிருந்தாலும் - கெட்ட
வாய்பிடித்தவனுக யிருந்தாலும் - நல்ல
மார்க்கத்தைத் தெளிவித்துத் தீர்க்க மாகவே யுந்தன்
(கருத்)
3 தங்கமணி முடியள் சேரும் – பொழில்
துங்கமுடனே னுளுஞ் சூழும் - நிதம்
அங்க மிகுந்த சிகியான - மலை
ஐயனே பன்னிரு கையனே யுந்தன் (கருத்)

## 595. உன்பாத தரிசனந் தரவேணும்

பல்லவி

உன்பாத தரிசனந் தரவேணும் - குன்றை
யின் காதலா வெகுநன் காகியமலர் (உன்)

அநுபல்லவி

சீதள மாகிய போததை யெரிகா
காதலுடன் வந்து மாதவரே பணி (உன்)

சரணம்

அண்டர்கள் யாவருங் கண்டதிசயமுடன்
தொண்டர்கள் பணிபுரி தண்டல ராகிய
வான முலாவிய கானகஞ் சூழ்தரு
மோனவர்நிறை தருவான சிகாமலையா (உன்)

## 596. பரமனே யரனே

பல்லவி

பரமனே யரனே - திரி
புரம்வெல்லு மைந்து சிகரனருள் பாலா (பர)

அநுபல்லவி

ஆறுமுகக் குமரா - யினி
வேறுகதி யிலையே
நீறு புனைபுயவா
நாறு மலர்க் கடம்பா (பர)

சரணம்

நம்பு மடியவர் - தினம்
பரவிய பாதா
அம்புய மலர்வேதா
உம்பரும் பணிபாதா
யண்ட முலாவிய
தண்டலை சூழ்தரு
கொண்டல் படியுஞ்
செகண்டியின் மலைவாளவே (பர)

## 597. குமர குருபரனே

பல்லவி

குமர குருபரனே - யெதிர்
சமர சண்முக தரனே (குமர)

அநுபல்லவி

அண்டருக் காதரா - துதி
தொண்டருக் கிசையாளா - பொல்லா
வண்டெனுஞ் சூரைத்
தண்டஞ் செயுங் (குமர)

சரணம்

நடமுற்ற மயிலாளா – கூரிய
திடமுற்ற வயிலாளா
டுடனுற்ற துயர்தன்னை
யிடருற்ற வருள்வாய்
வானுடரெனுந்தேவ
சேனுதி பதியாளா
தேனுர் பொழிற்குன்றை
மேனுய்க்குகா (குமர)

## 598. குற்றம் பொறுக்கவேணும்

பல்லவி

குற்றம் பொறுக்க வேணும் - செய
வெற்றி புனையும் வடிவேலா கனசீலா (குற்)

அநுபல்லவி

யெள்ளள வாகிலுமென் மேலிரக்கம் வைத்து
தள்ளரி தானயெந்தன் மேற்றயவு வைத்து (குற்)

சரணங்கள்

யெடுத்துச் செய்தாலுச் மெளிய னிவனென்று
சூதேதுஞ் செய்யாது துரைக்கும ரேசா (குற்)
நின்ருஉக் கன்பரை ரட்சிக்கும் நாதர்
குன்ருக் குடியெனுங் குளிர்மலை வாசா (குற்)

## 599. அன்பனை யாதரிப்பாய்

பல்லவி

அன்பனை யாதரிப்பாய் – உயர்
தென்சிகி மலைவளர் சிவனே சிவனே யுன் (அன்)

சரணங்கள்

1 வாராத தீவினை வந்து வருத்தஞ் செய்து
பாராத மார்க்கமெல்லாம் பார்த்து மயக்கமுற்ற
பாதகனை நோதகனை நீதயவா யாதரவாய் (அன்)

2 பங்கய மாமலர் பண்ணவர் பணிபாதா
செங்கர வடிவேலா திவ்விய பஞ்சாட்சரா
சேவலவ பாவலவ காவலவ யாவலுடன் (அன்)

3 செந்துவர் வாய்வள்ளி தேவியை மருவிய
சுந்தரப் பன்னிருதாள் குமரேசா
தூயனே நாயனே நேயனே சேயனே (அன்)

## 600. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி - மயிலேறி
வரவேணுஞ் சாமி (தரவேணும்)

அநுபல்லவி

கோதண்டபாணி தன்மருகா
மூதண்டமும்புகழ் முருகா (தரவேணும்)

சரணம்

கங்காதர ரருள்பாலா - சோதி
மங்காத வடிவேலா
யகண்ட பூரண நாதா - முடிச்
செகண்டி மலையி னீதா – (தரவேணும்)

## 601. கண்டு கொண்டேனே

பல்லவி

கண்டு கொண்டேனே – நாளும்
வண்டுன் பொழிலுறை கொண்டுயர் குன்றையிற் (கண்டு)

அநுபல்லவி

யரவணிக் கருத்த னருளிய பாலனை
பரம பதத்தனைப் பளிரிடு வேலனை (கண்டு)

சரணம்

ஆறுமுகத்தென தையனே மெய்யனே
நீறு தரித்த பன்னிருபுய துய்யனே
யண்டர் முனிவருக் கற்புத நாதனே
தொண்டர் பணியுங் குன்றை துலங்கிய வேதனே (கண்டு)

## 602. கருணாநிதியே

பல்லவி

கருணா நிதியே – மலர்
திருவருளுங் குன்றைப் பெருமானே சாமி (கருணா)

சரணங்கள்

1 சூது நிகர்த்த முலைமாது குறத்தி பங்கா (கருணா)
2 பதுமாசனத்த னிதமே துதிக்கும் (கருணா)
3 நின்றாடிய பொழிற்குன்றக் குடிவளர் (கருணா)

## 603. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா – அன்பர்
கூடிய குன்றைமலைக் குருபர நாதா (ஆடிய)

சரணங்கள்

1 நிதந்தொழுவோர் சுதந்தரமா
யிதம்பெறவே பதந்தருவாய் (ஆடிய)
2 மாதுமினாள் மீதுதயா
காதலனே தேயனே (ஆடிய)
3 வாவிகளுந் தூவிகளும்
மேவுசீகா மாவிலங்கா (ஆடிய)

## 604. குருநாதா குகா

பல்லவி

குருநாதா குகா – யெனக்
கொரு நாதனே சாமி (குரு)

சரணங்கள்

1 அமரேசா – சாமி
குமரேசா (குரு)

2 மயிலாளா — வெகு
வொயிலாளா (குரு)

3 வடிவேலா — குன்றுக்
குடி வேலா (குரு)

## 605. திருவருள் தரவேணும்

பல்லவி

திருவருள் தரவேணும் — குன்றை
யொருமலைதனி ஞளும் வருகுரு பரனே (திரு)

சரணங்கள்

1 என்னிரு கரதலா மின்னிய வடிவேலா
யென்னிரு வினையது யுன்னிடா வகையாக (திரு)

2 யாவலுடனே மின்னுர் பாவ வினையில் வீழ்ந்து
போவது தீர்ந்தந்த தேவ பதவிகிட்ட (திரு)

3 வாதடர் மாமலர் சீதள மாவனம்
மேதகு சிகிமலைக் காதலனே யுந்தன் (திரு)

## 606. வருவாய் வருவாய் ஐயனே

பல்லவி

வருவாய் வருவா யய்யனே — யனுபூதி
தருவாய் தருவாய் மெய்யனே (வரு)

சரணங்கள்

1 குமரா குமரா குமரா — சூருடன்
சமரா சமரா சமரா (வரு)

2 முருகா முருகா முருகா — மயிலேறுங்
குருகா குருகா குருகா (வரு)

3 வேதா வேதா வேதா — குன்றைமலை
நாதா நாதா நாதா (வரு)

## 607. வரந்தர வேணுமையனே

பல்லவி

வரந்தர வேணுமையனே (வரந்)

அநுபல்லவி

தரந்தர மாகப் போகப் பொழில்தகுஞ் சிகமலையாய் (வரந்)

சரணங்கள்

1 வாசக் குழலி குறமா மயிலாடனை
நேசத்தொடு மருவு நீதனே நாதனே (வரந்)

2 பங்கய மாமலர்ப் பாவையை நிகரு
மங்கை தெய்வானையை மருவிய லோலா (வரந்)

3 வாவியுஞ் சோலையு மணக்குஞ் செகண்டிமலை
மேவிய குருபரா வேண்டி யடியனுக்கு (வரந்)

## 608. சிவ சுப்பிரமணியா

பல்லவி

சிவசுப்பிர மணியா
கவன மயிற்பரி கருத்தனே சாமி (சிவ)

சரணங்கள்

1 யெங்கும் பிரகாசந் தங்குங் கிருபேசா
இலங்கிய நலங்கிளர் சிலம்பொலி புலம்பிட வருவாய் (சிவ)

2 தேசர்துதி குமரேசா தயாநிதே
சித்தமது மெத்தமகிழ் பத்தரிட நித்தம் வரந்தருவாய் (சிவ)

3 மஞ்சி யடர்பொழில் மிஞ்சிய சிகிமலை
வந்ததொரு கந்தவுயர் சுந்தர நிறைந்தரு நாதனே (சிவ)

## 609. குருபர தேசிகனே

பல்லவி

குருபர தேசிகனே – எனக்கு
யொருவரு முண்டோ யுன்னிரு பதந்துணையே (குரு)

சரணங்கள்

1 யமரர் பணியவரு குமர சண்முக நாதா
சமர வடிவேலவா பமர மலரினீபா (குரு)

2 போது தரித்தகுழல் மாது குறத்தி பாகா
சூது மிகுசூரன் மீது தொடுத்த கோபா (குரு)

3 மஞ்சி படருஞ் சோலை மிஞ்சிய சிகிமேரா
யஞ்சிய வினைதனைத் தொஞ்சிடவே செயும் (குரு)

## 610. மனமே மறவாதே

பல்லவி

மனமே மறவாதே – நாளுங்
கனமேவிய குன்றைக் கர்த்தனை முத்தனை (மனமே)

சரணங்கள்

1 வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்று
வல்வினை யருணலவனை நாளும் (மனமே)

2 பங்கய மாமலர் தங்கிய பாதனை
பாவலனைச் செய்ய சேவலனை நாளும் (மனமே)

3 தாவிய மலர்ப்பொழில் வாவிய சிகிமலை
தன்னில் வருவோனை நன்னயமாய் நாளும் (மனமே)

## 611. வன்ன வடிவேலவனே

பல்லவி

வன்ன வடிவேலவனே – நாளுஞ்
சொன்ன மயிலேறி வருந்துரைக் குமரேசனே (வன்ன)

சரணங்கள்

1 ஆதாரம் வேறுமுண்டோ பாதார விந்தனே
அடுத்துவரு மன்பருக்குத் தொடுத்து வந்தருளைச் செய்யும் (வன்ன)

2 வாதுபுரி சூரனை மோதுபடையாற் செயிக்கும்
வல்லவ மாகிய நல்வழிக் கான (வன்ன)

3 வாச மிகுந்த பிரகாச மிலங்கிய மயின்மலைதனில்
வருமொயி லாலுட கையிலணி (வன்ன)

## 612. நீயெனை யாளாயோ

பல்லவி

நீ யெனை யாளாயோ
தாயெனும்படி யெனைத்தற் காத்து ரட்சித்து (நீ)

அநுபல்லவி

யாரவணி யரனுர் பராபர சிவனு
ரருளிய புதல்வா மருமலர் நீபா (நீ)

சரணம்

பதுமாசனத் தானிதமே துதிக்கும்
பாலகனே வடிவேலவனே சாமி
தாவிய பூம்பொழில் மேவிய சிகிமலை
தனில்வரு குகனே யினியருமை யுடனே (நீ)

## 613. செய்ய வேணுமையனே

பல்லவி

செய்ய வேணுமையனே அருள் - (செய்ய)

அநுபல்லவி

வையகம் புகழுந் துய்ய குன்ருக் குடியாய் (செய்ய)

சரணங்கள்

1 தாதவிழுங் கொன்றைப் போதணி யரனுர்
தந்தருள் பாலகா வந்தனு பூதியைச் (செய்ய)

2 திடங்குலவிய நடம்புரி மயிற் சேவகனே
தேவர் காவலனே யருள் (செய்ய)

3 மஞ்சிசேர் குன்றை யஞ்சிகரத்தில்
வாசனே பிரகாசனே யருள் (செய்ய)

## 614. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே
மஞ்சேறிய குன்றைமலைக் குருநாதனை (நெஞ்சே)

அநுபல்லவி

பாத பங்கயத் தானை – குக
நாத நன்னயத் தானை (நெஞ்சே)

சரணம்

வால வடிவேலனை – யிந்த
ஞாலம் புகழு சீலனை
தோகை மலைவாசனை – நல்ல
யோகையு யீசனை (நெஞ்சே)

## 615. நீயே தயவு செய்குவாயே

பல்லவி

நீயே தயவு செய்குவாயே – குன்றைச்
சேயே யென்னை யாளுவாயே யென்சாமி (நீயே)

அநுபல்லவி

அருமறை துதிசெயுந் திருமலர் நிகர்பாதா
ஐயனே பன்னிரு கையனே யென்சாமி (நீயே)

சரணம்

வாச மிகு நீபப் பிர்காச மலரணியும்
வாகனே பொடியணி தேகனே யென்சாமி
யென்றைக்குஞ் சிறப்புள்ள குன்றைக் கிசைந்தவா
யிச்சையுட னுடும் பச்சை மயிலாளா (நீயே)

## 616. அரகரா வரகரா குகநாதா

பல்லவி

அரகரா வரகரா குகநாதா - திரி
புரகரனு ரருள்மக நாதா (அர)

அநுபல்லவி

கானக மாமகள் புணர்தோளா – யந்த
வானார்க்கு மாமகள் மணவாளா (அர)

சரணம்

அண்டர்கள் பணிபுரி யிருதாளா – யுண்மைத்
தொண்டர்கள் துதிசெய் பன்னிரு தோளா
யுன்னத மாகிய சிகிமேரா – யினி
நன்னய மயின்மிசை வருவீரா (அர)

## 617. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ – யெந்த
னுவியைக் காராயோ (தீவினை)

அநுபல்லவி

வாசக் கமல பாதா – வள்ளி
யாசைக் கிசைந்த நாதா (தீவினை)

சரணம்

மதுரிதக் கனிவாயா – யன்பர்
துதிபெறு கின்ற சேயா
நிலைத்திடு சிகிமேரா – தமிழ்
கலைக்குரு பரதீரா (தீவினை)

## 618. வரதா யெனையாளாய்

பல்லவி

வரதா யெனை யாளாய் – சம
விரதா சிகிமலை போர் சூரா (வரதா)

அநுபல்லவி

மங்கை குறத்தி மணவாளா – வாசப்
பங்கய மலர்நிகர் தாளா (வரதா)

சரணம்

யண்டர் முனிவர் சகாயா – யன்பின்
றொண்டர்கள் பணியுஞ் சேயா
மன்ருடிய வரன்பாலா - முடிக்
குன்ருக்குடி வடிவேலா (வரதா)

## 619. சாமி குருசாமியே

பல்லவி

சாமி குருசாமியே – நாளும்
பூமிபுகழ் குன்றைமலைப் புண்ணியனே யெந்தன் (சாமி)

அநுபல்லவி

அரகரா குகநாதா – திரி
புரயரனுர் பாலா (சாமி)

சரணம்

அற்புதத் தமிழ்வாயா - இன்பப்
பொற்புறு மலர்ப்பாதா
யகண்ட பரிபூரண – முடிச்
செகண்டி மலைநாயகா (சாமி)

## 620. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் - யருள்
கந்தனே சம்பந்தனே சாமி (எந்தனை)

சரணங்கள்

1 மாதவர் பணிபாதனே ஞான
போதனே பிரக்கி யாதனே சாமி (எந்தனை)

2 வாசனே முருகேசனே யன்பர்
நேசனே யண்டர் ராசனே சாமி (எந்தனை)

3 பொங்கிய பொழிருங்கிய சிகியாங் கிரிவளர்
பாங்கின் வேலவா (எந்தனை)

## 621. காண வேணுமே

பல்லவி

காண வேணுமே – மனமே
காண சேணுயர் குன்றைமலைத் தேவ தேவனைக் (காண)

அநுபல்லவி

யெங்கும் பிர்காச மாயிருக்கு மையனை
பொங்குங் கருணை பொருந்திய மெய்யனை (காண)

சரணம்

வானவர் பணிசெயு மாமலர்ப் பாதனை
கானக வள்ளி கலந்திடு நாதனை
தோகைக் கிரியிற் றுலங்கிய சீலனை
வாகைத் தொடையணி வால வடிவேலனை (காண)

## 622. காணு திருப்பதென்ன கண்ணே

பல்லவி

காணு திருப்பதென்ன கண்ணே
சேணுருங் குன்றைமலைத் தேவ தேவனைக் (காணு)

சரணங்கள்

1 தெள்ளி தினைப்புன வள்ளி மணாளனை
யள்ளிலை வேற்கரப் புள்ளி மயிலோனை (காணு)

2 மானை நிகர்த்திடு தெய்வானை பங்காளனை
தேனை வடித்திடு போனைக் கண்காட்சியாக (காணு)

3 தண்டலை சூழுஞ் செகண்டியின் மலையோனை
அண்டர்க ளுதனைத் தொண்டர் கிர்பேசனை (காணு)

## 623. பாத தரிசனந் தருவாய்

பல்லவி

பாத தரிசனந்தருவாய் - குன்றை
நாத மயிலில் வருவாய் (பாத)

சரணங்கள்

1 அண்ட பகிரண்டம் புகழ்
கொண்ட வகண்ட ரூபா (பாத)

2 வால வடிவேல் வள்ளி
மால வெகு கோல நய (பாத)

3 நிறைபொழிற் குன்றை மலே
வென்றிவேல் நன்றுபுரி (பாத)

## 624. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ - நாளும்
பத்தர் மணிக்குன்றைப் பரனே யரனே (சித்த)

அநுபல்லவி

வாசக் கடம்பணி வாகா யோகா
யாசைக் குறத்தி தன்னுளா சூளா (சித்த)

சரணம்

யண்டர் பணிசெய்யு மையனே மெய்யனே
தொண்டர் பணிசெய்யுந் தூயனே நாயனே
தண்டலே சூழ்சிகிச் சயனே ஐயனே
விண்டலமுயர் தேவா வேந்தனே சேந்தனே (சித்த)

## 625. குக குருபர நாதா

பல்லவி

குக குருபர நாதா - ஆறு
முகமல ரிருபாதா (குக)

சரணங்கள்

1 வானவர் முதலோர் தானவர் முதலோர்
ஞானவர் பணியுந் தேனலர் நீபா (குக)

2 மதுமலர் வாழுஞ் சதுமுகன் குருவே
பதுமமென் மலர்போல் விதுமுக முதலே (குக)

3 வாதடர் பொழில்சூழ் மீதவழ் முடிசேர்
சேதமிர் சிகியாம் சீதள மலையாய் (குக)

## 626. மயிலேறும் பெருமானே

பல்லவி

மயிலேறும் பெருமானே
குயிலாருங் குன்றைமலைக் குகனே குகனே (மயி)

சரணங்கள்

1 வாசக் களபமுலை வள்ளி பங்காளா
நேசப் பத்தர்கள் பணிநிலைக்குங் கங்காளா (மயி)

2 யெந்தன் வினை தவிர்த்து யிங்கிதந் தாராய்
யுந்தன் அடிமையென் றுண்மையாய்ப் பாராய் (மயி)

3 நின்று பொழிலுறை நீண்முடி சூழுங்
குன்றை மலையதனிற் கோலமுடன் வாழும் (மயி)

## 627. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் – யென்றும்
நீயே யெனையுங் காத்து ரட்சித்து ரட்சித்து (தாயே)

சரணங்கள்

1 யெங்கும் பராபர வெளியாய் - வெளி
தங்கும் பிரகாச மினுனளியாய் – யொளி
தங்குங் கிர்பாஎரிதே சாமி யெந்தனைக் காத்து (தாயே)

2 நாத் வேதாந்த முடிவாய் - ஞான
போத நிறைந்தருள் வடிவாய் – வெகு
மூதறிவாகிய மூர்த்தி தராயரா (தாயே)

3 வாவியுஞ் சோலையுஞ் சூழும் – குன்றை
மேவி யனுதினம் வாழும் - யெங்குந்
தாவிய மயிலேறுஞ் சண்முக நாதா (தாயே)

## 628. நாத சண்முக நாதா

பல்லவி

நாத சண்முக நாதா - ஞான
போத சண்முக நீதா (நாத)

அநுபல்லவி

சரவண பவகுமரா — வெகு
திரவவுணர்கள் சமரா (நாத)

சரணங்கள்

செந்தமிழ்க் கனிவாயா - யுமையாள்
தந்த வற்புத சேயா
நன்றருள் புரிசீரா - மாமுடிக்
குன்றையினுயர் மேரா (நாத)

## 629. கார்க்க வேணுஞ்சாமி

பல்லவி

கார்க்க வேணுஞ்சாமி - கடைக்கண்
பார்க்க வேணுஞ்சாமி (கார்க்க)

அநுபல்லவி

யுந்தன் பதந்தனை
யெந்தனிடந் தந்து (கார்க்க)

சரணம்

சகல வினையுந் தீர்த்து
மிகவுறு பூதி தந்து
சேணுயர் பொழிற்குன்றை
பூணுயர் வடிவேலா (கார்க்க)

## 630. மனதே யஞ்சாதே

பல்லவி

மனதே யஞ்சாதே — நாளுங்
கனமேவிய குன்றைக் கர்த்த னிருக்கையில் (மனதே)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி வாகனை
நேசக் குறத்திதன் பாலகனைப் போற்றியே (மனதே)
2 யண்டர்கள் பணிபுரி ஐயனை — நல்ல
தொண்டர்கள் பணிபுரியுந் தூயனை போற்றியே (மனதே)
3 மன்றன் மலர்ப்பொழில் மாமுடி - மிகு
குன்றை மலைக்குக் குமரனைப் போற்றியே (மனதே)

## 631. குன்றைமலையை நினைமனமே

பல்லவி

குன்றைமலையை நினை மனமே - நாளும்
வென்றி யிலங்கும் வடிவேலன் கோலன்வளர் (குன்றை)

சரணங்கள்

1 மையல்புரியுங் குறமாது பங்காளன்
துய்ய விபூதியணி துலங்கிய தோளன்
தோற்றிட நாளு நேர்த்தியாய் வாழும் (குன்றை)
2 வானவர் அனுதினம் வந்தடி பணியும்
தேனலர்க் கடம்பஞ் சிறந்திட வணியும்
தெள்ளிய தமிழோன் புள்ளியின் மயிலன்வளர் (குன்றை)
3 வாவியுஞ் சோலையு மாதவர் கூட்டமும்
தூவியு நிறைந்து துதிப்பர் கனுட்டமும்
சுகமுட னெங்குஞ் சிகிமலை யான (குன்றை)

## 632. எனக்கொரு வரந்தருவாய்

பல்லவி

எனக்கொரு வரந்தருவாய் - மணக்கும் பூ
வனக்குளிர்ச் சாரற் குன்றைமலைக் குமரேசா (எனக்)

சரணங்கள்

1 மதுமலர்ச் சோலை வாழும் பதும மலர்வதனு
புதுமலர்க் கருங்குழல் பதுமை வள்ளியின் லோலா (எனக்)
2 தீவினை யதனுற் பாவியா ராய்த்திரி
கூவிய வன்பருட யாவியைக் காத்தவர் (எனக்)
3 தேறிய பலகனி மீறிய பொழிலுறை
யூறிய தடநிறை யேறிய குன்றை நாதா (எனக்)

## 633. வால சண்முக நாதா

பல்லவி

வால சண்முக நாதா
ஞாலம் புகழுங் குன்றை நாதனே யென்சாமி (வால)

சரணங்கள்

1 சங்கர னரிடப் பங்கி லுறைமயில்
மங்கள கரவுமை துங்கமிகு பாலகா (வால)

2 விற்பன மிகுந்த வற்புத வாயா
பற்பல வடியார் சொற்றுதி செய்யும் (வால)

3 தாவிய பொழில்கள் மேவிய சிகியாந்
தூவிகொள் மலேயாய் வாவிய மயிலா (வால)

## 634. வடிவேலெடுக்குங் கையனே

பல்லவி

வடிவேலெடுக்குங் கையனே - குன்றுக்
குடிமேலிருக்கு மெய்யனே (வடி)

அநுபல்லவி

சரவணபவ குருவே - விட
வரவணிபவ னுருவே (வடி)

சரணம்

திருவளர் குகநாதா - நாளு
மருவளர் மலர்ப்பாதா
முடிநிறைந்திட நீளும் - குன்றுக்
குடிநிறைந்திட வாழும் (வடி)

## 635. நாயகனே குகனே

பல்லவி

நாயகனே குகனே - குன்றைக்கிரித்
தாயகமாக வருமாய சண்முகனே (நாயகனே)

அநுபல்லவி

யாறுபடை வீடோனே - நாளும்
மீறுநேம நாடோனே (நாயகனே)

சரணம்

சுயமரை மலர்த்தாளனே – குறக்
கயல்நெடு கண்ணிதோளனே
குன்றுக் குடியின் வேலனே - யன்பரை
நன்று தரிப்பை சீலனே (நாயகனே)

## 636. நாதா குருநாதா

பல்லவி

நாதா குருநாதா – மாமலர்ப்
பாதா வருள் பாதா (நாதா)

அநுபல்லவி

கந்தா குருநாதா – ஞானசம்
பந்தா யமரேசா (நாதா)

சரணம்

வேலாயுதக் கையா - மாமயிற்
கோலாகலக் குமரா
நன்றாயெனை யாளாய் – மாமுடிக்
குன்றுக்குடி குமரா (நாதா)

## 637. நாத மகேசனே

பல்லவி

நாத மகேசனே – சகல
பூதலம் புகழுங் குன்றைப் புண்ணியனே சாமி (நாத)

அநுபல்லவி

சங்கர னருள் சண்முகனே குகனே
மங்களகர வள்ளி மாதுமகிழ் செகனே (நாத)

சரணம்

வாசக் கடம்பணி மார்பனே சேயனே
மாசற்ற திருவருள் வழங்கிய தூயனே
நின்றாடிய பொழினிலைத்திட நீளுங்
குன்றுக் குடிமலை குருபரா நாளும் (நாத)

## 638. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யெனக்கு
வேறுகதி யில்லையே கூடறுபடு வேலவா (ஆறு)

அநுபல்லவி

அஞ்சாதே யென்றென்னை ஆண்டருள் வாயே
நஞ்சார மணிமிடற்று நாதர்தன் சேயே (ஆறு)

சரணம்

பங்கய மாமலர்ப் பாத சண்முகனே
மங்கை குறத்திதனை மருவிய குகனே
தேறிய னிரசத் தேன்பொழில் சூளும்
மீறிய முடிக்குன்றை மீதினில் வாழும் (ஆறு)

## 639. எந்தனை யாளாயோ

பல்லவி

எந்தனை யாளாயோ – ஞானசம்
பந்தனே குன்றையம்பதிக் கிசைவேலவா (எந்தனை)

சரணங்கள்

1 யாதார மற்றவர்க் கடைக்கலநீ யென்று
பாதார விந்தத்தைப் பணிபவர்க் கின்று
பண்டன் காத்தருள் திண்புயனே நாளும் (எந்தனை)

2 வேறிலை கதியென்று விரும்பி வந்தவருக்கு
தேறு செந்தமிழினற் சிறந்த செய்பவருக்கு
சிந்தை மகிழவே வந்தருள் குருபரா (எந்தனை)

3 வாதடர் மாமலர் வனமெங்கு நீளும்
போதடர் வாவியள் பொருந்திட வாழும்
புண்ணியஞ்சேர் குன்றை நண்ணிய குமரேசா (எந்தனை)

## 640. தயவு செய்யாததென்ன சாமி

பல்லவி

தயவு செய்யாததென்ன சாமி
நயமிகுங் குன்றைமலை நாத சண்முகனே (தயவு)

அநுபல்லவி

மெத்த மனமகிழ்ந்து சித்த மிகயிரங்கி
பத்தன் சுகம்பெறவே கர்த்தனே சுத்தனே (தயவு)

சரணம்

போது தரித்தகுழல் மாது குறத்திபங்கா
யேது குற்றம் வந்தாலுந் தீது விலக்கிவைத்து
யெங்கும் பிர்காசந் தங்குங் கிர்பேசா
பொங்கு மதுப்பொழி லிலங்குஞ் சிகாகிரியாய் (தயவு)

## 641. சருவ தயாபரனே

பல்லவி

சருவ தயாபரனே – குன்றைப்
பருபதந்தனில் வருபரம சிவேசா (சருவ)

சரணங்கள்

1 யிருபோதுந் துதிசெய்ய யொருபோது மறவாதே
பெருஞான வடியார்க்குத் திருவருள் புரியும் (சருவ)

2 யெந்த வினைகளுஞ் சிந்தி வுதறிட
வந்தடி யார்க்கருள் கந்தனே யாண்டருள் (சருவ)

3 வாசனைமிகு நீபா தேசம் புகழுங் குன்றை
யீசனே யெனக்கருள் ராசனே நேசனே (சருவ)

## 642. ஆள வேணுமையனே

பல்லவி

ஆள வேணுமையனே - நாளும்
வாழுங் குன்றைமலை வாசனே ராசனே (ஆள)

சரணங்கள்

1 கந்த மலர்கொடு யுந்த னிருபொன்
பதந்தனைப் பணிசெயு மெந்தனை யன்புடன் (ஆள)

2 நான மலர்க்குழற் கான மயிற்குற
மானனை யாள்புணர் தேனலர் புனைமார்பா (ஆள)

3 தாவிய பூம்பொழில் மேவியதனில மலர்
வாவியு நிறைகுன்றைக் காவிக் கந்தனே (ஆள)

## 643. என்னை யாளுமையா

பல்லவி

என்னை யாளு மையா - நல்ல
பொன்னை நிகரு முடிபொருந்துங் குன்றை நாதா (என்னை)

அநுபல்லவி

கடம்பணி வொயிலா
நடம்புரி மயிலா (என்னை)

சரணம்

காரணவத்துவே யானவித்துவே
சிகிமலை வாசா மகிமை கொளீசா (என்னை)

## 644. அரகர குருநாதா

பல்லவி

அரகர குருநாதா - யுயருமுப்
புரகர ரருள் புண்ணியனே சாமி (அரகர)

அநுபல்லவி

கண்டவர் வினைதீர்த்துக் கொண்டவனே யுந்தன்
தொண்டனை யாதரிப்பாய் புண்டரிக சரணு (அர கர)

சரணம்

பற்பல துயர்தனை யற்றிட வருள்புரி
பொற்புயர் மயிலாளா தற்பர குகநாதா
வாவி மணக்குஞ் சோலை தாவிய சிகிமலை
மேவிய வேலா யென்னுவியைக் காத்தருள் (அரகர)

## 645. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – வெகு
திருவளர் மாமுடிச் சிகிமலை வாழுங் (குருபர)

அநுபல்லவி

அண்டர்கள் முனிவர்கள் கண்டதி சயமுடன்
தொண்டரும் பணிசெயும் புண்டரிக சரணு (குருபர)

சரணம்

வாதடர் சூரனை மோதமர் புரிகிற
போதயிலால் வென்ற நாத மகேசா,
மஞ்சடர் பொழிக்குடியின் சிகிமலை வரு
பஞ்சவன மயிலா தஞ்சம் வேறிலையா (குருபர)

## 646. ஆண்டவனை நினைமனமே

பல்லவி

ஆண்டவனை நினைமனமே – யுனக்கு
வேண்டியபடி யெல்லாவினை தீர்த்திடுவார் தினமே
(ஆண்டவனை)

அநுபல்லவி

நீறு புனைந்தருளிய வாறுமுகக் குருவை
நின்மலரூபனைப் பொன்மய வேலனை (ஆண்டவனை)

சரணம்

பார்ப்பதி பாலனை கார்த்திகை குமரனை
பங்கய பன்னிரு செங்கையின் வேலனை
மூவரும் பரவிய தேவக டேவனை
முடிபுனையுங் குன்ருக் குடிவரும் வேலனை (ஆண்டவனை)

## 647. அடிதனை நினைமனமே

பல்லவி

அடிதனை நினைமனமே – குன்றுக்
குடியனைக் குருபர குமர சண்முகனை (அடிதனை)

சரணங்கள்

1 யடியவர் தங்களை குடிதனை ரட்சித்து
யாண்டருளு மயிற்றுண்டவனை நாளும் (அடிதனை)

2 செங்கையில் வேலணியுங் கமழ்புயனை
தேவர்கடேவனை மூவர்கள் முதலை (அடிதனை)

3 மின்றுவிய முடிமேவிய வாழும்
குன்றுக்குடிவரு கோலனை நாளும் (அடிதனை,)

## 648. வருக வேணுமையனே

பல்லவி

வருக வேணு மையனே – யருள்
பெருங்குன்றைமலைப் பெருமானே யென்முன் (வருக)

அநுபல்லவி

பொருணிறை வாயனே – நாளும்
யுந்த னடியர்க் கருணையனே யென்முன் (வருக)

சரணம் (அநுபல்லவிபோல்)

சோலை நிறைந்தகுன்றைக் கொருத்தனே – நாளும்
பாலை நிகர்த்தமொழி கருத்தனே யென்முன் (வருக)

## 649. சங்கர சண்முகனே

பல்லவி

சங்கர சண்முகனே – யுயர்ந்த
தங்கமுடிக் குன்றை தழைக்குங் குருபரா (சங்கர)

சரணங்கள்

1 யாறுமுகத் தெய்வமே – யடியேற்கு
வேறுகதி யில்லையே (சங்கர)

2 யண்டர் பணிசரணு – யுன்னுட
தொண்டனை யினியாளாய் (சங்கர)

3 குன்றை குருபரனே - குகனே
யென்றைக்கு மெனையாளாய் (சங்கர)

## 650. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ
கர்த்தன் குன்றைமலை சித்தன் குகேசன் (சித்த)

சரணங்கள்

1 யாதி பராபர சோதி மயமான
போதில் யன்பணிக் கியாதி கிர்பேசன் (சித்த)

2 நம்புமடியவர் பம்புஞ்சமுகேசன்
வம்புமுலைக் குறத்தியும் புணர்புயவோன் (சித்த)

3 முடிமிகுங் குன்ருக்குடி வருங்குக
னடியர் தன்னுட மிடிதவிர்ப்பன் (சித்த)

## 651. தண்டாயுதத் தெய்வமே

பல்லவி

தண்டாயுதத் தெய்வமே – மலர்ச்சோலை
யுண்டாகிய குன்றைக் கொருத்தனே கருத்தனே (தண்டாயுத)

சரணங்கள்

1 வால சண்முக குககுருபரா - யிந்த
ஞாலம் புகழுமை தருபாலா – பச்சை
மயிலேறிய வொயிலாய் வரு (தண்டாயுத)

2 தேனலர் தரித்திடு குழலாள் - அந்த
மானனையாள் குறமயிலினுள் – புணர்
வாசனே யன்பர் நேசனே யருள் (தண்டாயுத)

## 652. வந்து துதிசெய்வாயோ

பல்லவி

வந்து துதிசெய்வாயோ - நாளு
முந்துபொழிற் குன்றைமலை வந்து குருநாயகா (வந்து)

அநுபல்லவி

வல்லமண குலம்வீழ வெல்லுபடை வேலவா
வாசக் களபமுலை நேசக் குறத்தி பாகா (வந்து)

சரணம்

யுந்தனை நாள்தோறும் வந்தனை செய்தருள்
உண்மையடியார்க்கருள் சண்முக குமரேசா
வாவி யணிநிறை குன்றை மேவிய பவசிவா
வனச மலர்ச்சரணு யுனது வடியவன்முன் (வந்து)

## 653. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே – கரிய
மஞ்சார் பொழிற் குன்றை வாசவ னிருக்க (அஞ்சா)

அநுபல்லவி

சூரசம்மார வீரப் பிரதாப கோர வகோர
தீரவடிவேல சீல மயிலன் அனுகூல னிருக்கையில்
(அஞ்சாதே)

சரணம்

தேவர்களும் அந்த மூவர்களுமற்ற யாவர்களும் பணி
காவல வனருள் கர்த்தன் வெகு பரிசுத்த னிருக்கையில்
நீளு மலர்ப்பொழில் சூழுஞ் சிகாகிரி
வாழு மடியவர்க் கருளுங் குருபர வொருவனிருக்கையில்
(அஞ்சாதே)

## 654. சித்த மிரங்காதோ

பல்லவி

சித்த மிரங்காதோ - பரி
சுத்தன் குன்றைமலைக் கர்த்தன் பத்தன் மீது (சித்த)

சரணங்கள்

1 தேறிய செந்தமிழ்க் கூறிய கனிவாயன்
மாறிடு மவுணரை நீறி கெதிர்வேலன் (சித்த)
2 நித்தம் பதமலரத்தைப் பணிபுரி
சுத்த மிகுமனப் பத்தரிடத்தினிற் (சித்த)
3 மண்டிய மலர்ப்பொழி லெண்டிசையு நிழல்
கொண்டிடு நின்ற செகண்டிமலை வாசன் (சித்த)

## 655. வால சண்முக நாதா

பல்லவி

வால சண்முக நாதா – நல்ல
கோல பங்கய மலர்ப் போலு மிலங்கு பாதா (வால)

அநுபல்லவி

நடன மயிற் குருகா – பொல்லாப்
படவிரவிற்றுயில் திடவிறன் மருகா (வால)

சரணம்

யாறுமுகக் குமரா – வந்து
மாறுபடு சூரைக் கூறுசெய் சமரா
தாவிய பொழில் சூழும் - முடி
மேவிய குன்றையி லாவலுடன் வாழும் (வால)

## 656. சரவணபவ குகனே

பல்லவி

சரவண பவ குகனே – விட
யரவணிபவ ரருளாகர குமரா (சரவண)

சரணங்கள்

1 தாதவிழ் நீபமென மாலிகை சூடிய
போத மெய்ஞ்ஞான சிரோமணியே யருள்
புண்ணியனே சுப்பிர மண்ணியனே (சரவண)

2 யந்தரி யாமளை சங்கரி டாகினி
சுந்தரி பாரணி பங்கய மாமயில்
துங்க கிர்பானிதி பைங்கிளி பாலக (சரவண)

3 யண்ட மளாவிய தண்டலை சூழ்தரு
கொண்ட லுலாவு செகண்டியின் மாமலை
கோலமா மயில் வால வேலவா (சரவண)

## 657. நல்ல மருந்தொன்று தாராயோ

பல்லவி

நல்ல மருந்தொன்று தாராயோ
செல்லுலாவுங் குன்றைத் தேவ தேவனே (நல்ல)

சரணங்கள்

1 யெந்த ஞளுமினி யுந்த னடிமையாய்
சொந்த மாகவரு யெந்தன் பிணியடீர் (நல்ல)

2 யந்தர வானது யெதுமில்லா மலுன்
பாதந்தனைக் கண்டனே தமியெனுக்கு (நல்ல)

3 வடிவமான குன்ருக் குடியில் வருநாதா
கொடிய வினைதனு லடியன் படுந்துயர்க்கு (நல்ல)

## 658. துன்பத்தைத் தீர்க்கவேணும்

பல்லவி

துன்பத்தைத் தீர்க்க வேணும் - யுயர்
மின்பற்றுங் குன்றைமலே மேவிய பரனே (துன்ப)

அநுபல்லவி

செய்ய கடம்பணி திவ்விய பாதா
துய்ய விபூதியின் றூழணி தேகா (துன்ப)

சரணம்

பங்கய மாமலர்ப் பாங்குள்ள
துங்க தினைப்புனத் தோளரும் மணுளா
யுன்ருழ்க் கன்பருக் குதவிய நாதா
குன்ரு மலைக்குரு பரநீதா (துன்ப)

## 659. கண்டால் கலிதீரும்

பல்லவி

கண்டால் கலிதீரும் - யந்த
வண்டார்பொழிற் குன்றைமலைக் குமரேசனை (கண்டால்)

அநுபல்லவி

வானேர்பணி தேவ சேனுபதியே (கண்டால்)

சரணம்

யற்புத மாகிய பொற்புயர்தனை
மிஞ்ச வருசூரை யஞ்சவெல் வேலனை
மன்றன் மலர்சோலைக் குன்றைமலை யோனை (கண்டால்)

## 660. தீராத வினைகளுண்டோ

பல்லவி

தீராத வினைகளுண்டோ – நாளும்
ஆராதனை செய்து ஐயனைப் பணிசெய்தால் (தீராத)

சரணங்கள்

1 யூசி முனையிற் தவஞ்செய்வானேன் – காற்றை
ரேசகஞ் செய்து மனநை வானேன் – வேண்டிய
பூசைகளைப் பண்ணியுயர் வானேன் – தவ
புண்ணியன் சுப்பிர மண்ணியனைத் தொழுதால் (தீராத)

2 தலங்கடொறுஞ் சுற்றி யலைவானேன் – மனங்
கலங்க மருந்தினை யுண்டுலை வானேன் – காட்டி
லிலங்குங் கனிகளுண்டு குலைவானேன் – வள்ளிக்
கினியனை குருபர தனியனைத் துதிசெய்தால் (தீராத)

3 அண்டம் தாவிட நீளும் - கருங்
கொண்டல் படியுஞ் சோலை சூழும் - யன்பின்
தொண்டர் பணியுங் குன்றை வாழும் - பரி
சுத்தனை மயின்மீது நிர்த்தனைத் துதிசெய்தால் (தீராத)

## 661. பதந்தர வேணுஞ் சாமி

பல்லவி

பதந்தர வேணுஞ் சாமி – யன்பர்
நிதம்பரவிய குன்றை நீதனே நாதனே (பதம்)

சரணங்கள்

1 பாரமான சமுசார வலைக்குள்ளே
பட்டுக் கொண்டு தலைகெட்டுத் திரியாமல்
சாரமான மதுசேர் நிறைந்திடு
தாதுலகு மரைப்பொழி லகுமலர்ப் (பதம்)

2 செனன மெடுத்தெடுத் தனவல்ல திரமென்றுஞ்
செலவுக் கென்றுந் திரிந்தலைகுவது கர்மம்
மனது மகிட்சியா யுனது கிருபா சமுத்திர
மயமாகிய வெகுநய மாகிய யுந்தன் (பதம்)

3 மேவிய கர்மத்தா லாவி பதறிட
விட்டுவைத்த தெல்லாஞ் சொட்டுச் சொல்லிலையா
தாவிய பொழில்களும் வாவியு வளைதரு
தளைக்குன்றை மலைவிளைக் குகேசாவுன் (பதம்)

## 662. என்ன பகைவந்தாலும் விலக்குவாய் சாமி

பல்லவி

என்ன பகைவந்தாலும் விலக்குவாய் சாமி
சொன்ன மணிமுடித் தோகைமலை சாமி (என்ன)

சரணங்கள்

1 யுந்தனையே கதியெந்த னுளுமென்று
சிந்தனை செய்திடும் யெந்த னிடத்தினில் (என்ன)

2 கடின மாகிய கொடிய தீவினை
யடியன் மீதினிற் றிடீர்திடி ரென்று (என்ன)

3 தேவர் கடுதி குன்றைக் காவலனே செய்ய
சேவலவா நாருயன்மேல் ஏவல் பிணி சூன்யம் (என்ன)

## 663. துயரைத் தீராயோ

பல்லவி

துயரைத் தீராயோ
நயமிகுந்த சிகாமலை மேல்வளர் நாதனே மலர்ப்பாதனே
யெந்தன். (துயரை)

சரணங்கள்

1 யஞ்சவருஞ் சூரை மிஞ்சவமர் செய்யு மழகிய வீரா
தஞ்சம் வேறில்லை வஞ்சக மில்லாத தமியனைக் காராய்
(துயரை)

2 கண்டு பணியுந் தொண்டு புரியுங் கருத்துள்ள மனமே
கொண்டவர் சூழ்செகண்டி மாமலைக் கோமானே தினமே
(துயரை)

## 664. தீராத வினையெல்லாந் தீர்ப்பாய்

பல்லவி

தீராத வினையெல்லாந் தீர்ப்பாய்
காராருங் குன்றைக் கருத்தனே (தீராத)

அநுபல்லவி

வாசக் களபமுலை மாது குறத்தி பாகா
பாசத்தை நீக்குமன்பர் பரவிய மோகா (தீராத)

சரணம்

வண்டனான சூரை வதைத்திடும் வேலா
அண்டர்கள் பணிதரு யன்புறு சீலா
யாடிய மயிலேறும் அழகிய யீசா
கூடிய பொழிற்குன்றை குககுமரேசா (தீராத)

## 665. நாளுங் கண்டு தோத்திரங் கொண்டு

பல்லவி

நாளுங் கண்டு தோத்திரங் கொண்டுநின்றால் (நாளும்)
நலமுண்டு ஞான பலமுண்டு – அவனை (நாளும்)

அநுபல்லவி

சமர சண்முக வேலனை - யந்த
யமரர் பணியுங் காலனை
குமரனை மயிற்கோலனை – யன்பு
கொண்டர்க் கனுகூலனைக் கண்டால் (நாளும்)

சரணங்கள்

சங்கரரருள் மைந்தனை - நீ
பங்கதணி கந்தனை
துங்கமிகு சம்பந்தனை - யெதிர்
தோத்திரஞ் செய்து தொழுது கண்டால் (நாளும்)

வந்து கருங்குயில் கூவுமதில்
முந்திய வாது கடாவும்
சந்தமிகு பொழில் மேவும் – குன்றை
தன்னில் வருவேலனைச் சன்னிதியிற் கண்டாற் (நாளும்)

## 666. தேடாததென்ன சாமி

பல்லவி

தேடாததென்ன சாமி – வினைநேம
நாடாளுங் குன்றைமலை நாதனே வேதனே (தேடா)

சரணங்கள்

1 செங்கடம்பணியுந் துங்க மெய்யத் தோளா
தினந்தினம் மடியென் மனமது போலே (தேடா)
2 பாதாம் புயனே நாதாந்தவனே
பத்தியுள்ள வடியன் சித்தமதுவே போல (தேடா)
3 வாகைக் கிசைந்தபுயா தோகைக் குமரா
வால வடிவேலவா கோல மயில்வாகனா (தேடா)

## 667. இன்னந் தயவு வல்லையா

பல்லவி

இன்னந் தயவு வல்லையா
பொன்னங்கிரிக் குன்றைப் பூபா மலர் நீபா (இன்னம்)

சரணங்கள்

1 யாசைக் கிசைந்த குறவாசக் குழலிபாகா
யடியன் படுந்துயர் மிடியே தவிர்த்திட (இன்னம்)

2 அற்புத மலர்ப்பாதா விற்பன மிகுவாயா
அடியன் படுந்துயர் மிடியே தவிர்த்திட (இன்னம்)

3 அண்ட முயர்ந்த செகண்டி மலையினுதா
யடியன் படுந்துயர் மிடியே தவிர்த்திட (இன்னம்)

## 668. பாதத்தை மறவாதே

பல்லவி

பாதத்தை மறவாதே – மனமே
தேகத்தினு லறியா வேலவன் கோலமலர்ப் (பாதத்தை)

அநுபல்லவி

வாது புரியுஞ்சூரை மோது படையால் வென்று
மாரைப் பிளந்திடும் வீரப் பிரதாபன் (பாதத்தை)

சரணம்

சித்தம் மகிழ்ந்து மெய்ப்பத்தர் மனப்படி
சிறந்த வாமபுரி மறந்தகு வேலன்
யெங்கும் பிர்காசந் தங்கு கிர்பேசன்
யிலங்குங் குன்றக்குடி துலங்குங் குகேசன் (பாதத்தை)

## 669. சற்குரு நாதா

பல்லவி

சற்குரு நாதா – நல்ல
அற்புத பாதா (சற்குரு)

சரணங்கள்

1 மங்கள கவுமாரி தங்க வுமாபதி
செங்கதிர் நேத்திரி சங்கர ரன்புள்ள (சற்குரு)

2 சீதள யிதழ்நிறை தாத விழுங்கன்
போதலர் தாமரை வேத வன்னபுறு (சற்குரு)

3 யெண்டிசை யெங்கணு மண்டி வளரும்பொழில்
கொண்டிடு முடியின் செகண்டி மலையில்வளர் (சற்குரு)

## 670. கண்டாற் போதுமே

பல்லவி

கண்டாற் போதுமே
வண்டார்பொழிற் குன்றைமலைக் குமரேசனை (கண்டாற்)

அநுபல்லவி

வாசக் கடம்பணி வாகனை மோகனை
மாசற்ற வுமையவள் மைந்தனை கந்தனை (கண்டாற்)

சரணம்

பங்கய மாமலர்ப் பாதனை நாதனை
துங்க மயிலேறுஞ் சூரனை வீரனை
வாதடர் பொழிற்குன்றை வாசனை யீசனை
தாதவிழ் மலர்நீபத் தாரனை சீரனை (கண்டாற்)

## 671. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா – குன்றுக்
குடிமேலவா
கானக் குறத்திதன் கண்வலையிற் சிக்கிக்
காட்டி லலைகின்ற (வடி)

அநுபல்லவி

வானத்தர் மோனத்தர் வந்து பணிபுரி
வாசனே பிரகாசனே நாதா (வடி)

சரணங்கள்

1 வஞ்சனுன சூரன் மார்பைப் பிளந்து
வதைத்த வளர்மிடி சிதைத்தவா குகா
தஞ்சமென் றடியார் தங்களைக்காத்தருள்
சர்பா வனுக்கிர்த்திபா வறுமுகா (வடி)

2 துய்ய மலர்ப்பொழில் துலங்கிடவுயர்
சொன்ன மணிமுடி மின்னவே நாளும்
செய்ய மலர்த்தடஞ் சோரு மண்டபணி
தென்கிரியாங் குன்றை நன்கிரி வாழும் (வடி)

## 672. கருத்தி னினைப்பாயே

பல்லவி

கருத்தி னினைப்பாயே – மனமே
யொருத்தர் துணையும் வேண்டாம் யுண்மையா யையனைக்
(கருத்தி)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரன் மீது பகைத்தவனை (கருத்தி)

சரணம்

பங்கய மாமலர் துங்க சரணனை,
நின்ருடிய சிகிக்குன்ருக் குடியானை (கருத்தி)

## 673. தண்டாயுதத் தெய்வமே

பல்லவி

தண்டாயுதத் தெய்வமே - கான
வண்டார்பொழிற் குன்றைமலைக் குமரேசா (தண்டா)

அநுபல்லவி

சூர சம்மாரா வீரப் பிரதாபா
கோர வடிவேலவா யாரமணியும் பராபரா (தண்டா)

சரணம்

சங்கர ரருளு மிங்கித பாலா
மங்கள குறமான பங்க குகேசா
மாயவன் மருகா தூய சண்முகவா
தாயகுன்றையின் சேய வற்புதனே (தண்டா)

## 674. துயரந் தீரவேணும்

பல்லவி

துயரந் தீரவேணும்
யுயர்முடிச் செகண்டி யொருமலைக் கொருவனே (துயரந்)

அநுபல்லவி

வஞ்சகம் பிணி சூனிய மிஞ்சிய வினைகளும்
வந்ததைத் தீர்த்து தந்தருள் செய்து (துயரந்)

சரணம்

பொல்லாத பிணியினுல் வல்லாண்மையள் குறைந்து
போயலே யாமற் சகாயமது செய்து
தாவிய பூம்பொழில் மேவிய முடிக்குன்றை
தன்னில் வருங்குமரா சின்ன வடிவேலவா (துயரந்)

## 675. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யினி
வேறுகதி யில்லேயே (ஆறுமுக)

அநுபல்லவி

அஞ்சாதே யென்றெனக் காதாரஞ் செய்து
நெஞ்சார மகிழ்ந்து நின்னருள் புரிவாய் (ஆறுமுக)

சரணம்

வாது புரியுஞ் சூரை மாய்த்த வடிவேலவா
தாதுலவு நீபத் தார்புனே புயவா
யண்டின பேர்களே யாண்டருள் செய்யுஞ்
செகண்டி மலேவரு கருணு நிதியே (ஆறுமுக)

## 676. நினைப்பதே பெரிது

பல்லவி

நினைப்பதே பெரிது - மனமே
யனைத்துலகும் புகழையனே மெய்யனே (நினே)

சரணங்கள்

1 வாடாத யிதழ்நீப மாலே யணிபுயனே
தாடார் குறமயில் காம நன்னயனே
காரணனே திருநாரணன் மருகனே (நினே)

2 பத்தர் மிடிதீர்க்கும் பதும பாதனே
நித்த கிர்பேவர நிர்மல நாதனே
நீல மயில்வாகனே வால வடிவேலனே (நினே)

3 வாதடர் பொழிற்குன்றை மாமலே வாசனே
யாதர வன்பருக் கருளும் பிர்காசனே
யாண்டவனே முத்துத் தாண்டவம் புரிவோனே (நினே)

## 677. எந்தத் துயரமுந் தீர்க்க வேணும்

பல்லவி

எந்தத் துயரமுந் தீர்க்கவேணுஞ் சாமி (எந்த)

அநுபல்லவி

கந்த மலர்ப்பொழில் சூழுஞ் செகண்டி
கர்த்தனே பரிசுத்தனே யினி (எந்த)

சரணம்

வாச நீபமென் மாலையணி தோளா - பிர்
காச நளின மாமலர்த் தாளா
வன்ன மாமயி லேறிய யோகா - மணந்
துன்ன வேறிய பூதியணி தேகா
சங்க ரருட பங்கிலுமை பாலா - குன்றை
துங்க மாமலை வாழ்தரு வேலா (எந்த)

## 678. எப்படியும் வந்து தாராயோ

பல்லவி

எப்படியும் வந்து தாராயோ — சாமி
மைப்படியுங் கண்ணி வள்ளி பங்காளா (எப்படி)

அநுபல்லவி

வாசக் கமலமென்னு மாமலர்ப் பாதா
மாசற்றவருள் செய்ய வருவாய் சண்முக நாதா (எப்படி)

சரணம்

செந்திரு மகண்மகிழ் திவ்விய மருகா
முந்திய நடன செய்முடி மயின் முருகா
வாதடர் பூம்பொழிற் வளர்சிகிமேரா
போதடர் நீபமே புனைஅலங்காரா (எப்படி)

## 679. குகநாதனே

பல்லவி

குகநாதனே — யாறு
முகநாதனே (குக)

சரணங்கள்

1 குமரேசனே - யெதி
ரமரேசனே (குக)

2 முருகேசனே - மாயன்
மருகேசனே (குக)

3 வடிவேலனே - குன்றுக்
குடிவேலனே (குக)

## 680. கருணைப் பெருங்கடலே

பல்லவி

கருணைப் பெருங்கடலே – மலர்த்
திருமருவுங் குன்றைத் தேவே தேவே (கருணை)

அநுபல்லவி

யாவல் மிகுந்துடன் தேவ குஞ்சரிதனை
மேவ வரும்புய காவலவா குகா (கருணை)

சரணம்

வாது புரிசூரன் மீது வமர்புரி
மோது படைவெலாப் போது புனைமார்பா
யடியார் தம்முடல் மிடியே தீர்த்தவக்
கடியார் பொழிற்குன்றுக் குடிவாழ் குருபர (கருணை)

## 681. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே - பணி
பூண்டவனு ரருள் புண்ணியனே சாமி (ஆண்ட)

அநுபல்லவி

நேசக் குறத்தி மணுளனே (ஆண்ட)

அநுபல்லவி போல்

நன்றுன தோகையங் கிரியா
குன்றுக் குடிமலைக் குரியா (ஆண்ட)

## 682. ஏன் மயங்குகிருய்

பல்லவி

ஏன் மயங்குகிருய் – மனதே (ஏன்)

அநுபல்லவி

வான்மறைந்த குன்றைமலைக் குகனிருக்கையில் (ஏன்)

சரணங்கள்

1 வந்தவினை தவிர்த்து யுந்தன் நினைவின்படி
வையகந் தன்னிலே யுய்ய வரஞ்செய்வான் (ஏன்)

2 யாசைக் கடலைநீக்கி மோசத்துறை விழாமல்
யாண்டு கொண்டனுதினம் வேண்டும்படி செய்வான் (ஏன்)

3 யெங்கும் பிர்காசஞ் தங்கும் பொன்முடி
யிலங்குங் குன்றையிற் றுலங்கும் வேலனிருக்க (ஏன்)

## 683. அரகர குருநாதா

பல்லவி

அரகர குருநாதா - மூன்று
புரகரனு ரருள் புண்ணியனே சாமி (அரகர)

அநுபல்லவி

வாதுற்ற சூரனை மாய்த்தவனே சாமி
போதுற்ற செயநீபம் புனைந்திடு சாமி (அரகர)

சரணம்

அஞ்சாதே யென்றன்னை யாண்டருள் சாமி
பஞ்சார் கழற்குறப் பாவை பாகா சாமி
தன்றாழ்க் கன்பரைத் தாங்கிய சாமி
குன்றுக் குடிமலைக் குமரேச சாமி (அரகர)

## 684. குக நாதனே

பல்லவி

குக நாதனே - யாறு
முக நாதனே (குக)

அநுபல்லவி

சூர சங்காரனே - மயில்
வீர சிங்காரனே (குக)

சரணம்

சரவண பவனே - நல்ல
யரவணி சிவனே
வடிவேற் கரதலனே - குன்றுக்
குடிமேற் பலனே (குக)

## 685. வால வடிவேலவனே

பல்லவி

வால வடிவேலவனே - பச்சைக்
கோல மயிலேறி வருஞாலம் புகழு நாயகா (வால)

அநுபல்லவி

யுந்தனை யடுத்து நாளும் முண்மையாக வெல்லு மென்று
சிந்தனை செயன்பனைச் சேர்ந்து ரட்சித்தருள்வாயே (வால)

சரணம்

யாசைக் கருங்கடலில் அழுந்திய யென்னை
மோசப்படா தெடுத்து முற்றும் ரட்சிக்க வேணும்
வாவி நிறை குன்றைநிகர் வாசஞ்செய்யு மீசனே
காவின் மரேசனைக் காத்து ரட்சிக்குங் கிர்பேசா (வால)

## 686. சாமி யெந்தனை யாளாய்

பல்லவி

சாமி யெந்தனை யாளாய் - சகல
பூமி புகழுங் குன்றைப் புண்ணியனாகிய (சாமி)

சரணங்கள்

1 யந்தர வானவர் வந்தடி பரவிய
கந்த மலர்ப்பத கொந்தல ரணிபுயா (சாமி)

2 வாது புரியுஞ்சூரை மோதுபடையால் வென்ற
கோது நிணங்கொள் வேல்தூவு செய்து (சாமி)

3 யண்ட முலாவிய கொண்டல்கள் படிதரு
தண்டலை சூழுஞ் செகண்டியின் மலைநாத (சாமி)

## 687. செகதீசனே

பல்லவி

செகதீசனே
மக மாதவர் மகிழ் நாயகா (செக)

அநுபல்லவி

மங்கை யுமைபாலா
துங்க வடிவேலா (செக)

சரணம்

செங்கமல மாரா
மங்கள குமாரா
குன்றையின் மலைவாசா
யுன்றனரு ளீசா (செக)

## 688. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்யவேணும் (தயவு)

அநுபல்லவி

நயமிகுந்த குன்றை நாதனே சாமி (தயவு)

அநுபல்லவி போல்

1 யாதர வாகவென் மீதினிலே வெகு (தயவு)
2 யுந்தன் பதந்தனை செய்வோன் மேல் (தயவு)
3 வாசப் பொழிற்குன்றை மாசற்ற வடிவேலா (தயவு)

## 689. முருகா உனை நம்பினேன்

பல்லவி

முருகா வுனை நம்பினேன் – மயிற்
குருகாகிய குன்றைக் குருபரா குருபரா (முருகா)

அநுபல்லவி

வள்ளி மணவாளா புள்ளி மயில்வாகா
தெள்ளிய தமிழ்வாயா யள்ளிலை வடிவேலா (முரு)

சரணம்

வால சண்முக நாதா கோலமிகு வாரணு
மேலவர்பணி யனுகூல சிங்காரா
பங்கய வாவிய ளெங்கணுமே நிறை
துங்க மிகுஞ்சிகி யங்கிரிவரு தேவே (முரு)

## 690. வாராய் குருநாதா

பல்லவி

வாராய் குருநாதா – வந்தருள்
தாராய் குரு நாதா (வாராய்)

அநுபல்லவி

சங்கரி திரிபுரை மங்கள கரவுமை
தருபாலா மயிலில் வருலோலா (வாராய்)

சரணம்

வஞ்சக சூரனை நெஞ்சதையே யடர்
வால வடிவேலா மேலவர் பணிசீலா
வாவிநிறை குன்றை மேவிய குகநாதா
வள்ளிதன் மணவாளா தெள்ளிய தமிழாளா (வாராய்)

## 691. பன்னிருகை யாண்டவனே

பல்லவி

பன்னிருகை யாண்டவனே – திவ்விய
வன்ன மயிலேறி வரும் வாசனே குமரேசனே (பன்னிரு)

சரணங்கள்

1 பத்தன் மனப்படி வரவேணும் – யினி
மெத்த வரங்களைத் தரவேணும் (பன்னிரு)

2 பாச வினைகளை விலக்குவாய் - யெந்த
ஞைசைக் கடறன்னைத் துலக்குவாய் (பன்னிரு)

3 பங்கய வாவியள் சூழும் - நாளுந்
துங்க மயின்மலை வாழும் (பன்னிரு)

## 692. காப்பாற்று மையனே

பல்லவி

காப்பாற்று மையனே (காப்பாற்று)

அநுபல்லவி

மூப்பாகிய திரிமூர்த்திக்கு மேலான
முத்தனே பரிசுத்தனே யென்னை (காப்பா)

சரணங்கள்

1 யண்டரன் போரு மடி பணிந்திடத்
தொண்டான பேரும் தொழுதிறைஞ்சிடுந்
தூயனே யன்பர் நேயனே யென்னை (காப்பா)

2 மாயப் பிறவியை மாற்றியே வைத்து
நோயைத் தீவினைதனை நொடிக்குள் விலக்கி
நூல் வல்லவா கொண்டைச் செலவல்லவா யென்னை
(காப்பா)

3 சொன்ன மகமேரை நிகர்க்கவே வளர்
வன்ன முடிமயின் மலையின் மீதினில்
வாசனே குமரேசனே யென்னை (காப்பா)

## 693. வேத நாதனே

பல்லவி

வேத நாதனே - நல்ல
போத நாதனே (வேத)

அநுபல்லவி

யாதி மூர்த்தியே - வெகு
சோதி மூர்த்தியே (வேத)

சரணம்

வால வேலனே - மகா
கோல வேலனே
ஓகை யாளனே - குன்றைத்
தோகை யாளனே (வேத)

## 694. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே - யென்னை
ஆளுமையனே (ஆளு)

அநுபல்லவி

வாழுங் குன்ருக் குடிமலைக் குகனே யென்னை (ஆளு)

சரணங்கள்

1 பன்னிரு கையில் வேல்பிடித்து - நல்ல
யுன்னித மயிலேறி நடித்து (ஆளு)
2 வள்ளி தெய்வானை யுடன்கூடி - நல்ல
புள்ளி மயிலேறி யாடி (ஆளு)
3 குன்றை மலையின் மீது நின்று - நல்ல
மன்றுள் மயிலின் நின்று (ஆளு)

## 695. காண்பதே போதும்

பல்லவி

காண்பதே போதும் – முடிப்
பூண்பயில் குன்றைமலைப் புண்ணியனை சாமியை (காண்)

அநுபல்லவி

அண்டர் முதலினோர் பணிபாதனை - திவ்விய
தொண்டர் துதிகள் செயுநாதனை (காண்)

சரணம்

ஆண்டவனை முருகேசனை - நீபம்
பூண்டவனைப் பிரகாசனை
கானக மயிற்பாகனை – உயர்
வானக முடிக்குன்றை யோகனை (காண்ப)

## 696. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா – நேசத் தமிழ்
பாடிய வொயிலாளா (ஆடிய)

அநுபல்லவி

ஆனந்த நடராசா – திவ்விய
ஞானநாதா பணியீசா (ஆடிய)

சரணம்

வேல்தரித்திடு முருகா – நிரைகாக்குங்
கோல்தரித்தவர் மருகா
குன்றுக்குடி மெய்யா – யெந்தனை
யென்றும்க் கொள்வையா (ஆய)

## 697. தந்து ரட்சிக்க வேணும்

பல்லவி

தந்து ரட்சிக்க வேணும் – யன்பர்
வந்து பணியுங் குன்றை வாசனே சாமி (தந்து)

சரணங்கள்

1 ஆறுமுகத் தெய்வமே – யடியேற்கு
வேறுகதி யுண்டோ வருள் (தந்து)

2 மாது குறத்தி பாகா - யெதிர்சூரை
மோதி வென்றவா வருள் (தந்து)

3 தோகைமலைக் குகேசா - யுல்லாச
யோகைபுனை யுல்லாசா வருள் (தந்து)

## 698. அதுபோதுஞ் சாமி

பல்லவி

அதுபோதுஞ் சாமி
மதுமலர்ப்பொழில் மயின்மலையா யருள் (அது)

சரணங்கள்

1 யுன்னித மயிலேறி யென்னிரு கண்காணப்
பன்னிரு கையின்வேல் மின்னிட வருகுவாய் (அது)

2 பாதம்புனை சிலம்பினுதங் கலகலென
யாதரவாக யிப்போ தழகாய் வருகுவாய் (அது)

3 நயமிகு மடியவர் மயிலோடு துதிசெயும்
சுயமிகு குன்றையாய் தயவுடன் வருகுவாய் (அது)

## 699. ஆறுமுகக் குழந்தையே

பல்லவி

ஆறுமுகக் குழந்தையே - யடியேற்கு
வேறுகதி யில்லையோ
கூறுபடை வேலவா (ஆறு)

சரணங்கள்

1 வஞ்சரக்கப் படையானை நெஞ்சகத்தைப் பிளவுசெய்
யுஞ்சமத்து மிகுகரக் கஞ்சம் வைத்த வடிவேலவா (ஆறு)

2 யுந்தனை யனுதினம் வந்தனை புரிகின்ற
யெந்தனை யாண்டருள் சுந்தரமிகு பாதா (ஆறு)

3 தாவிய பூம்பொழிற் பூவியல் சேர்தரு
வாவிநிறை குன்றை மேவிய நாயகா (ஆறு)

## 700. வடிவேற் கரதலனே

பல்லவி

வடிவேற் கரதலனே - யுயர்குன்றுக்
குடிமேல் வருபவனே (வடி)

அநுபல்லவி

வாசக் கடம்பணி தோளா – குறத்தி
யாசைக்கிசை மணவாளா (வடி)

சரணம்

தெள்ளு தமிழ்சொல்லு வாயா – யாடிய
புள்ளி மயிலேறுஞ் சேயா
ஓகை தரித்திடு மொயிலா – வெற்றி
வாகை புனைந்திடு மயிலா (வடி)

## 701. சமர வடிவேலவா

பல்லவி

சமர வடிவேலவா – யருள்
குமர குருநாதா (சமர)

சரணங்கள்

1 மெய்யிற் பொடியணி துய்யனே பன்னிருபுயா
செய்ய மலர்மணி மார்பா கையிற்றரித்திடும் (சமர)

2 வானவர்தனை வெல்லு மீனர்களாகிய
மானவ ராகிய தானவர்தனை வெல்லும் (சமர)

3 மண்டிய பொழிலது மிண்டிய கனங்கொள்
செகண்டி மலையின்வரு யண்டினவரைக் காக்கும் (சமர

## 702. வா வடிவேலா

பல்லவி

வா வடிவேலா குன்றை மலைவளர் நாதா
பூவிலுயரு நீப பூவணி தோளா (வா)

சரணங்கள்

1 துங்க மலரைக் கொண்டு பொங்கிய பாதத்தை
அங்க முருக அரசி இங்ஙனம் பூசிக்க (வா)

2 கந்த மலரெடுத்து உந்த னிருபதத்தை
சந்தமுடன் அர்ச்சித்து சிந்தை மகிழவேணும் (வா)

3 தாவிய பூம்பொழில் மேவிய குன்றய
ஆவி பிழைக்கப் பொல்லா பரஇரு கண்காண (வா)

## 703. என்னை யாளையா

பல்லவி

என்னை யாளையா - மாற்றுப்
பொன்னை நிகர்முடி பொருந்துஞ் சிகிமேரா (என்னை)

சரணங்கள்

1 ஆசா பாசத்தைத் தீர்த்து – பொல்லா
மோசாதி மோசத்தைக் காத்து (என்னை)

2 தரித்திரந் தன்னைக் கெடுத்து - பொல்லா
கரித்தினந் தன்னை யெடுத்து (என்னை)

3 வாகை தரித்த குகேசா - நல்ல
யோகை தரித்த யுல்லாசா (என்னை)

## 704. நம்பினேனையா

பல்லவி

நம்பினேனையா - யெங்கும்
பம்பிய பொழிற்குன்றை மாமலைப் பரனே யரயரனே யுன்னை (நம்பி)

சரணங்கள்

1 யெந்தன் துயரத்தைச் சிந்தைச் சிதறச் செய்
துந்தன் கிர்பைதனைத் தந்தருள்வாய் யுன்னை (நம்பி)

2 வாராமற் ருன்வந்த தீராத வினையெல்லாஞ்
சாராம லோடிட நேராகவா யுன்னை (நம்பி)

3 வாவியு மாமணித் தூவியு நிரை நிரை
மேவிய குன்றையிலே வளர்பவா யுன்னை (நம்பி)

## 705. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குருநாதா - திரி
புரமரனு ரருள்புத்திரனே சாமி (அர)

அநுபல்லவி

மாசற்றிடும் பிரகாசக் குருபரா
நேசத் தன்பர் பரவு மீசற்கு போதனே (அர)

சரணம்

பத்தர் மனப்படியே சித்த மகிழ்ந்தினி
நித்த மனுக்கிரகஞ் செயுத்தமனே சாமி
மண்டிய மலர்ப்பொழின் மிண்டிய முடிநிரை
கொண்டிடு யுயருஞ் செகண்டிமலை வந்தவா (அர)

## 706. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே – பணி
பூண்டவனுர் மகனே (ஆண்ட)

அநுபல்லவி

பன்னிரு கரதலனே – வெகு
யுன்னித மயில்வலனே (ஆண்ட)

சரணம்

வாடாத மலர்நீபனே – யுயர்
நீடாழி புகழ் பிர்தாபனே
நின்றசை பொழில் சூழும் – மாமுடிக்
குன்றையின் மலை வாழும் (ஆண்ட)

## 707. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே (அஞ்சா)

அநுபல்லவி

மஞ்சாருங் குன்றைமலைக் குகேச னிருக்க (அஞ்சா)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானை லோலன்
புள்ளி மயிலின் வேலன்
மாசற்ற குமரேச னீசற்கு வுபதேசன்
நேசத்துடன் பிரகாசத் தவனிருக்க (அஞ்சா)

2 ஞானர்கள் துதி நாதன்
வானர்கள் பணிபாதன்
நாதாந்த மயமாய் வேதாந்த வொளியாய்
போதாந்த வடிவாய் மீதாந்தவ னிருக்க (அஞ்சா)

3 வரு பொழில் சூழும்
யொரு குன்றை வாழும்
மன்னிய நீப நன்னமலர்
பன்னிரு புயவன் முன்னவ னிருக்க (அஞ்சா)

## 708. ஆளாயோ ஐயனே

பல்லவி

ஆளாயோ ஐயனே
தாளாத குன்றைமலைச் சண்முக நாதா யென்னை (ஆளா)

சரணங்கள்

1 ஆசைக் கடலில் வீழ்ந்து மோசப் படாவகை
ஐயனே பன்னிரு கையனே யெந்தனை (ஆளா)
2 இல்லறந் தன்னிலே மெல்ல மயங்காமல்
இச்சையனே சிறைப்பச்சை மயிலோனே (ஆளா)
3 வானவரும் மகா ஞானவரும் பணி
மயின்மலையாய் வெகு வொயின்முருகா யென்னை
(ஆளா)

## 709. சாமி சித்த மிரங்காயோ

பல்லவி

சாமி சித்த மிரங்காயோ
பூமி புகழுங் குன்றைமலைப் புண்ணிய சுப்பிரமண்ணிய
(சாமி)

அநுபல்லவி

வள்ளி யம்மை மணவாளா புள்ளி மயிலேறிய
தெள்ளு தமிழ்க்கனிவாயா யள்ளிலைவேற் கரதல (சாமி)

சரணம்

பங்கய மாமலர் மங்கைதன் மணவாள
செங்கணரி மருக மங்கள முருகேச
மன்றன் மலர்ப்பொழில் குன்றையின் மாமலை
வென்றி வடிவேலவ நன்றருள் புரிகின்ற (சாமி)

## 710. மயிலேறும் பெருமாளே

பல்லவி

மயிலேறும் பெருமாளே – யுயர்
குயிலாருங் குன்றைமலைக் குமரேசா சாமி (மயி)

அநுபல்லவி

யாசைக் கிசைந்த வள்ளி லோலா - வெகு
நேசத்தி லன்பர் பணிகாலா (மயி)

சரணம்

செங்கடம் பணியுயர் தோளா - மலர்ப்
பங்கய மாமலர்த் தாளா
மன்றன் மலாச்சோலை சூழும் - முடிக்
குன்றை மலைதனில் வாழும் (மயி)

## 711. குருநாதனே

பல்லவி

குருநாதனே – யருள்
தருநாதனே (குரு)

சரணங்கள்

1 குமரேசனே - சூர
சமரேசனே

2 குகவேளே - யாறு
முகவேளே (குரு)

3 வடிவேலனே – குன்றுக்
குடிவேலனே (குரு)

## 712. குன்றுக்குடிக்குப் போகவேணும்

பல்லவி

குன்றுக் குடிக்குப் போக வேணும் (குன்றுக்குடி)

அநுபல்லவி

குன்றுக் குடிக்குப்போய் நன்றாக வீதி சுற்றிக்கொண்டு
குருபரனைக் கண்டு தொழுதிறைஞ்ச (குன்று)

அநுபல்லவிபோல்

1 வாசன் அடியவர்க்கு நேசன் செகத்திலுல்
லாசன் அருளு முருகேசன் தனை இறைஞ்ச (குன்று)

2 வேலன் நடனமயிற் கோலன் அசுரர்குல
காலன் அமர ரனுகூலன் அறனைப்பரவ (குன்று)

3 சேயன் தெய்வானை வள்ளிநேயன் செந்த மிழ்க்கனி
வாயன் எவர்கட்குஞ் சகாயன் றனைக்கும்பிட (குன்று)

4 ஐயன் மலர் பன்னிரு கையன் விபூதியணி
மெய்யன் பிரகாச முள்ள துய்யன் றனைப்பணிய (குன்று)

## 713. ஆண்டவனே யெனையாளாய்

பல்லவி

ஆண்டவனே யெனையாளாய் – பணி
பூண்டவனு ரருள் புத்திரனே ஐயா (ஆண்ட)

அநுபல்லவி போல்

சூரனை வதைத்திடு வீரப் பிரதாப வேலா
சார மிகுந்த வலங்கார நிறைந்த சீலா (ஆண்ட)

சரணம்

அண்டர்கண் முதலினர் தொண்டர்கள் பணிகாலா
சண்டனை வென்ற நீலகண்ட ரருளும் பாலா
வாகை புனையும் வேலா யோகை புனையுல்லாசா
டாகை மிகுந்த வேகத் தோகை மலையின் வாசா (ஆண்ட)

## 714. கார்த்திகைத் தரிசனஞ் செய்குவாய்

பல்லவி

கார்த்திகைத் தரிசனஞ் செய்குவாய் – மனமே (கார்)

அநுபல்லவி

நேர்த்தியான குன்றை நீதியனைக் கண்டு (கார்)

சரணங்கள்

1 தெப்பக் குளத்தில் மூழ்கித் துப்புரவு செய்து
கைப்பது மங்கள் கூப்பி சுப்பிரமண்ணியனைக் கண்டு
(கார்)

2 பற்பல மலர்க்கொண்டு யற்புட னர்ச்சித்து
பொற்பதந்தனைப் போற்றி கற்பனைபெற மாத்தை (கார்)

3 முடிபெறுங் குன்றுக் குன்றுக்குடி மலையெய்தி
வடிவுறு வேலவ னடிமலர் பணிந்து (கார்)

## 715. திருத்த வேணுமையா

பல்லவி

திருத்த வேணுமையா – நன்றாய் (திருத்த)

அநுபல்லவி

வருத்தமாக வொன்றில் மாட்டிக் கொண்டு
யொருத்தரில்லா விடத்திலு முன்றலையு மனதை (திருத்த)

அநுபல்லவி போல்

1 நிலையில்லா வதனை நிலையதாக வெண்ணி
கொலையு மறியாமல் மலையும் பொல்லா மனதை (திருத்த)

2 சத்து நேரத்துக்கு மெத்த மயங்கியே
யெத்தலங்களு மோடிச் சுற்றிவரு மனதை (திருத்த)

3 கொம்மை முடிநிரையும் மயில்மலை நாதா
மெய்ம்மையான வதிற் செம்மையாக மனதை (திருத்த)

## 716. மனக்குறை தீராயோ

பல்லவி

மனக்குறை தீராயோ – நல்ல
கனக்குமுடிக் குன்றைக் கர்த்தனே முத்தனே (மன)

அநுபல்லவி

யாறிரண்டு கரதலனே – வெகு
கூறிருக்கு மயில்வலனே (மன)

சரணம்

தங்க மயிலேறுஞ் சூரனே – சூரைப்
பங்கப்படச் செய்யுந் தீரனே
குன்றைமலைக் குமரேசா – சொர்ன
மன்றுள் நடன மிடுமீசா (மன)

## 717. பாத தரிசனஞ் செய்வாய்

பல்லவி

பாத தெரிசனஞ் சய்வாய் - மனமே (பாத)

அநுபல்லவி

தாதவிழ் குளிர்சோலைத் தண்சிகி மலையான் (பாத)

சரணங்கள்

1 பண்ணுள்ள வரியளி பாடிய நீபன்
விண்ணுள்ள தேவர்கள் பணிவிளங்கிய தீபன் (பாத)

2 வால வடிவேலணி மாமலர்க்கையன்
கோல மயிலேறிய குரு பரவையன் (பாத)

3 சொன்னமுடி யிலங்குந் தோகைமலையின் வாசன்
யன்னநடைக் குறத்திக் காசை விழைநேசன் (பாத)

## 718. ஆறுமுகத்தைக் கண்டபேர்கள்

பல்லவி

ஆறு முகத்தைக் கண்டபேர்கள் – யின்னமோர்
வேறு முகத்தைக் காண வேணுமோ (ஆறு)

சரணங்கள்

1 பஞ்சாட்சர மணிமேலன் – மகா
யஞ்சாட்சர நாதன் பாலன் (ஆறு)

2 வேட வுருவங் கொண்ட கோலன் – குறத்தி
யாடனை மேவிய லோலன் (ஆறு)

3 வெற்றி புனையும் வடிவேலன் – முடி
யுற்ற சிகிமலையின் சீலன் (ஆறு)

## 719. மனதுக்கொரு வழிகாட்டுவாய்

பல்லவி

மனதுக் கொருவழி காட்டுவாய் - நல்ல
கனகமுடிக் குன்றைக் கருத்தனே சாமி (மனது)

சரணங்கள்

1 மோசத் துறையாகிய யாசைக் கடலில் வீழ்ந்து
நாசப் படாமலுன் வாசச் சரண்சேர (மனது)

2 பாக்கிய பண்டமென்று வாக்கிஞற் புலம்பிய
யோக்கி யந்தப்பாது சிலாக்கியம் பெற யெனது (மனது)

3 கந்த மலர்ப்பொழில் சுந்தரச் சிகிமலை
வந்தருள் நாதா யெந்தன் சொல்வழி கேளா (மனது)

## 720. கனக மயில்வாகனு

பல்லவி

கனக மயில்வாகனு
தினகரனை நிகர்முடிச் செகண்டி மலைநாதா (கனக)

அநுபல்லவி

ஐயனே பன்னிரு கையனே பொடியணி
மெய்யனே பரிசுத்த துய்யனே யென்சாமி (கனக)

சரணம்

ஈசனே குறவள்ளி நேசனே குககும
ரேசனே குன்றையின் வாசனே யென்சாமி
கந்தனே ஞான சம்பந்தனே யரனருள்
மைந்தனே யடியார்க்குச் சொந்தனே யென்சாமி (கனக)

## 721. ஆண்டவனைப் பணிமனமே

பல்லவி

ஆண்டவனைப் பணி மனமே – பணி
பூண்டவனுக் கிசைப்புத்திர யென்சாமி (ஆண்ட)

சரணங்கள்

1 பங்கய மாமலர்ப் பாதன் – கான
நங்கை குறத்திதன் நாதன் (ஆண்ட)

2 சோதி மயமான ரூபன் – நல்ல
யாதி பராபர ரூபன் (ஆண்ட)

3 சொர்னமுடிக்குன்றை வாசன் – யரு
ளின்னருள்புரி முருகேசன் (ஆண்ட)

## 722. காப்பாற்றுவாய் ஐயனே

பல்லவி

காப்பாற்றுவாய் ஐயனே – கண்ணுற்
பார்ப்பார்க்கு யோக்கியமான பழமலைச் சிகியாய் (காப்பா)

அநுபல்லவி

தொண்டு செயன்பர்கள் கண்டு பணிந்திடு
தூய மலரின் பாதா செயகுமரேசா (காப்பா)

அநுபல்லவி போல்

1 சேவலா நல்ல பாவல வாவருள்
தேவர்கடேவா மூவர்கண் மூவா (காப்பா)

2 வண்ண மிகுந்தமுடிக் குண்ணக் குடியில்வரும்
ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி (காப்பா)

## 723. உமை மைந்தனே

பல்லவி

உமை மைந்தனே
கமழ் மலர்ப்பொழில் சூழ்கன் சிகிமலைவாழ் (உமை)

சரணங்கள்

1 வானுடர் பணிதேவ சேனுபதியே சாமி (உமை)
2 கந்தனே ஞான சம்பந்தனே யென்சாமி (உமை)
3 கடிப்பொழிற் குன்ருக்குடிக் குமரேசா (உமை)

## 724. குக நாதா

பல்லவி

குக நாதா - யாறு
முக நாதா (குக)

சரணங்கள்

1 யருடாராய் - வெண்
பொருடாராய் (குக)
2 யிணர்தாளேனே வள்ளி
புணர் தோளனே (குக)
3 வடிவேலனே - குன்ருக்
குடி மேலனே (குக)

## 725. ஒருகாலும் மறவாதே

பல்லவி

ஒருகாலும் மறவாதே — மனமே
தருக்கானஞ் சூழ்குன்றைச் சாமியிருபதத்தை (ஒரு)

சரணங்கள்

1 புண்ணிய புருடர்க்கு நண்ணிய யெவருக்கு
மெண்ணியதருள் சுப்பிர மண்ணிய சாமியை (ஒரு)

2 வாசக்கழல் யாசைக் குறக்கொடி
நேசக் குருபரன் மாசற்ற பாதத்தை (ஒரு)
3 யென்று மடியவர்க் கென்றும் வினைதவிர்த்
தென்றும் ரட்சித்தருள் குன்றைக் குகேசனை (ஒரு)

## 726. கந்தனை நம்புவாய்

பல்லவி

கந்தனை நம்புவாய் - மனமே
யுந்தனை ரட்சித்து யெந்தவிதமுங் காப்பான் (கந்தனை)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரை
மோது படையால் வென்ற (கந்தனை)

சரணம்

மத்த கேசமுன் வந்த
கர்த்தன் மகிழ்மருகன்
குன்றைக் கயிலை நிகர்
குன்றை மலையின் வாசன் (கந்தனை)

## 727. மயிலேறும் பெருமாளே

பல்லவி

மயிலேறும் பெருமாளே
ஒயிலான குன்றை மலைக்குகந்த கந்தசாமி (மயி)

அநுபல்லவி

வாசக் களப முலைவள்ளி மணாளா
தாசர்க்கருளிய தளைத்திடுந் தாளா (மயி)

சரணம்

செந்தமிழ்தனை நாளுஞ் செப்பிய வாயா
யந்தர வானவர்க் கான சகாயா
பன்னிரு கரதலா பதுமமென் னேத்திரா
நன்னய முடிக்குன்றை விளங்கிய சேத்திரா (மயி)

## 728. என்னை யாளுமையா

பல்லவி

என்னை யாளுமையா - வான
மின்னை நேரு முடிமேவுஞ் சிகேசனே (என்னை)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்று
மாய்த்தவனே மிடியைத் தீர்த்தவனே சாமி (என்னை)

சரணம்

தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரா
தேவாதி தேவனே மூவாதிபர்சாமி
ஓகைபுனை யுல்லாசா தோகை மலையில் வரும்
உத்தமனே யருள்முத்தையனே சாமி (என்னை)

## 729. என்றைக்குங் குறைவில்லையே

பல்லவி

என்றைக்குங் குறைவில்லையே - மனமே (என்றை

அநுபல்லவி

கொன்றைக்கிரி வாய்த்த சடைக் கொற்றவனைக் கண்டால்
(என்றை)

சரணங்கள்

1 யேது குற்றம் வந்தாலுந் தீருமே - மலர்
மாது யெப்போது வந்து சேருமே (என்றை)
2 பொல்லாப் பழியானாலும் போகுமே - நல்ல
வல்லாண்மை யாது முண்டாகுமே (என்றை)
3 குன்றை மலையேறிக் கொண்டால் - அதில்
யென்று மிருப்பரைக் கண்டால் (என்றை)

## 730. காணக் கிடைக்குமோ

பல்லவி

காணக் கிடைக்குமோ
பூணுற்ற குன்றைமலைப் புண்ணியனை நாளும் (காண)

அநுபல்லவி

நித்திய சுபகரனை முத்தி யருள்பவனை
தித்திய மயிலனை சத்தி யணிகரனை (காண)

சரணம்

வாசக் கடம்பனை நேசக் குறத்தி
தனைச் சுகந்தவனை தேசப் பிரகாசனை
வெயில்புனை முடிமேற் குயில்தவழ் குன்றை
மயிலமலை வாசனை யொயின் முருகேசனை (காண)

## 731. தரவேணுஞ் சாமி

பல்லவி

தரவேணுஞ் சாமி – யனுக்கிரகம்
தரவேணும் கொண்டை மாமயின் மிசை யருள் (தர)

அநுபல்லவி

ஆசைக் கிசைந்திடு நேசக் குறத்தியொடும்
மாசற்ற வொளிர் பிரகாசத்துடனே வந்து (தர)

சரணம்

கங்கை தரித்தவர் பங்கிற் கிசைந்தவள்
மங்கை யுமையவள் துங்கமிகும் பாலா
நின்று வுலாவிய மன்றன் மலர்ப்பொழில்
துன்றிய சிகிமலைக் குன்றிலிருந்து வந்து (தர)

## 732. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் – வெண்
நயமிகுந்த குன்றை நாதா நாதா (தயவு)

அநுபல்லவி

சூர சங்கார வீர சிங்கார
தோகை மயிலா வெற்றி வாகை புனையு மார்பா (தயவு)

சரணம்

பங்கய மலர்க்காலா தங்க வடிவின் வேலா
பரிவுள்ள பொன்மகளரி மருகா குகா
மன்றன் மலர்ப்பொழில் குன்றை மலைக்கிசை வாசா
மலர்ப்புயா நேசன்பர் தோத்திரா (தயவு)

## 733. உன்னையலாற் கதியுண்டோ

பல்லவி

உன்னையலாற் கதியுண்டோ – யுயர்
பொன்னை நிகருமுடி வன்ன மயின்மலையாய் (உன்னை)

சரணங்கள்

1 அடியவர் தங்களுக் காதாரஞ் செய்து
மிடிதனைத் தீர்த்து விர்த்தியடையச் செய்ய (உன்னை)

2 ஆசைக்கடலை விட்டு வப்புறங் கரையேற்றி
நேசத்துடனே வந்து ரட்சித் தாண்டருள்செய்ய (உன்னை)

3 யென்றைக்கும் வானவ ரினிய மலர்கள் தூவிக்
குன்றைக்கு வந்துடன் கும்பிட்டவருள் செய்ய (உன்னை)

## 734. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யுன்னையலால்
வேறுமுக மில்லையே (ஆறு)

அநுபல்லவி

வம்பல ரான கடம்பணி மார்பா
செம்பவள வாயா சம்பர்ம முருகா (ஆறு)

சரணம்

வாதுசெய் சூரை வேதா மோது படையினுலே
கோதுபடச் செயித்த போதுறு வடிவேலா
மங்கள கரதலா சங்கரர் சுபுத்திரா
துங்கமயின் மலையாய் பங்கய மலர்ப்பாதா (ஆறு)

## 735. ஆசைப்படிக் கருள்வாய்

பல்லவி

ஆசைப்படிக் கருள்வாய் - சோலை
வாசச் சிகாமலை வருகுரு பரனே யென் (ஆசை)

சரணங்கள்

1 பொல்லாத வினையினு லில்லாத காரிய
மெல்லாந் தவிர்த்தினி நல்லாக யென்னுட (ஆசை)

2 மாசுற்ற சமுசாரப் பாசத்தினில் வீழ்ந்து
மோசப்படல் தவிர்த்து தாசற் கருளி யெந்தன் (ஆசை)

3 யென்று மலர்ப்பொழில் துன்று முணிமுடிக்
குன்றை மலைக்கா யின்று மடியனுட (ஆசை)

## 736. ஆண்டருளையனே

பல்லவி

ஆண்டருளையனே – சோலை
பூண்டருள் சிகிமலைப் புண்ணியனே சாமி (ஆண்ட)

சரணங்கள்

1 வாதில் வருசூரனைப் பாதியாகச் செய்து
மோதிய வடிவேலா முத்தி தந்தடியனை (ஆண்ட)

2 அமரர் பணியவருங் குமர குருபரனே
சமர வடிவேலா சரவண பவாயென்னை (ஆண்ட)

3 யெங்கணும் பிரகாசந் தங்கி வளருஞ்சிகி
யங்கிரி வருபவா யாறுமுகவா யென்னை (ஆண்ட)

## 737. மனதே யஞ்சாதே

பல்லவி

மனதே யஞ்சாதே – யொன்றுக்கும் (மனதே)

அநுபல்லவி

கனக மயமான குன்றுக்குடி வருகர்த்தனும் பரிசுத்த
னிருக்கவே (மனதே)

சரணங்கள்

1 கானக் குறத்திக்கு யாசை மிகுந்து கருத்தழ்ந்தலைந்
தலைந்தே - யவள்
மேனடன்புணர் பன்னிருபுய வேல னனுதினம்
இருக்கவே (மனதே)

2 தீவினைகளைத் தீர்த்திடச் செய்து சித்த மகிழ்ந்தருள்
புரிந்து
மாயப் பிறப்பினைத் தீர்த்து வைத்துடன்வைது
ரட்சிப்பனிருக்கவே (மனதே)

3 வாசமிகுந்த மாமலர்ப் பொழின் மாமலைக் குகந்தே
தேசப் பிரகாச மாயென்னுளு மந்தத் தேவ னிருக்கவே
(மனதே]

## 738. குருபர குமரேசனே

பல்லவி

குருபர குமரேசனே – மலர்த்
திருவளர் முடிக்குன்றைத் தேவ தேவனே (குரு)

சரணங்கள்

1 சங்கரரிடப் பாக மங்கள கரவுமை
தந்தருள் பாலகா வந்தருள் வாய்ஐயா (குரு)

2 வாசமலர்க் கடம்பா நேசக் குறத்தி பங்கா
மயிலேறிய சூரா யொயிலாகிய யோகா (குரு)

3 மண்டிய பொழில்சேர் செகண்டி மலையின் வாசா
வன்ன வடிவேலணி பன்னிரு கரதலா (குரு)

## 739. கருத்தனை நினைப்பாயே

பல்லவி

கருத்தனை நினைப்பாயே - குன்றைக்
கொருத்தனை யன்பருக் குண்மையாளனை (கரு)

அநுபல்லவி

வள்ளி மகிழ்ந்திட வந்த மணாளனை
யுள்ளிய வன்பருக் குதவு தயாளனை (கரு)

சரணம்

யாசைக் கிசைந்தெனக் கருளிய தியாகனை
வாசக்குழல் தெய்வ மாமகள் மோகனை
மண்டிய பூம்பொழில் வாசிக்க நாளும்
யண்டினவரைக் காத்தருள் குன்றை வாழும் (கரு)

## 740. நினைத்துக் கொள்வாய்

பல்லவி

நினைத்துக் கொள்வாய் மனமே (நினைத்து)

அநுபல்லவி

அனைத்துலகும் புகழையனை மெய்யனை (நினைத்து)

சரணங்கள்

1 பொல்லாத் தீவினையா லெல்லாத் துயரும் வந்து
பல்லோர்களுஞ் சிரிக்கும் பாதகங்களும் தீரும் (நினைத்து)

2 யாசா பாசத் தினாலே மோசாதி மோசம் வந்து
தேசாதி தேசமெல்லாந் திரிந்தலைவது தீரும் (நினைத்து)

3 வேத வேதியர் பாடு நாதனைக் குன்றைவளர்
போதனை யடியவர் போற்றிய பாதனை (நினைத்து)

## 741. நாதனே மகாதேவனே

பல்லவி

நாதனே மகாதேவனே – வாசப்
போதடர் பொழிற்குன்றைப் புனிதனே சாமி (நாதனே)

அநுபல்லவி

யண்டரும் முனிவரும் பணி பாதா
தொண்டருந் தானவருந் தொழும் வேதா (நாதனே)

சரணம்

பத்தருஞ் சித்தரும் பணி பாதா
சுத்தரு முத்தருந் துதி வேதா
தோகை மலையினுளுந் துலங்கிய தேவே
வாகை புனைந்திடு மகிமைகொள் கோவே (நாதனே)

## 742. துதிக்க வேணும் நெஞ்சே

பல்லவி

துதிக்க வேணும் நெஞ்சே - யெங்கு
மதிக்குங் குன்றைமலை வரதனைக் கண்டு (துதி)

சரணங்கள்

1 அந்தர வானவர் வந்தடி பரவிய
கந்த மலர்ப்பதனைக் கண்ணாரக் கண்டு (துதி)

2 நானக் குழலி தெய்வயானைக் கிசைந்திடுந்
தேனுற்ற மலர்ப்புயத் தேவனைக் கண்டு (துதி)

3 துங்க மலர்ப்பொழில் தங்குமுடி யுறையுந்
திங்கடவழுங் குன்றைச் சேயனைக் கண்டு (துதி)

## 743. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா – தமிழ்
பாடிய வாயிலா (ஆடிய)

அநுபல்லவி

வள்ளி மணாளா – யன்பர்
ஒள்ளிய தாளா (ஆடிய)

சரணம்

கோதண்டர் மருகா – வேலால்
வாதண்ட முருகா
பன்னிரு கையா - விபூதி
துன்னிய மெய்யா
குன்றையின் வாசா - யெங்கும்
நின்ற பிரகாசா (ஆடிய)

## 744. ஒருகாலு மறக்காதே

பல்லவி

ஒருகாலு மறக்காதே - மனமே (ஒருகாலு)

அநுபல்லவி

மருக்குலாவுங் குன்றைவரு சுப்பிர மணியனே (ஒருகாலு)

சரணங்கள்

1 யாதி பராபர சோதி சொருபனே
ஐயனைப் பன்னிரு கையனே நீதான் (ஒருகாலு)

2 பங்கய மலர்ப்பொழி லிலங்கிய தாளனே
பரமனே யருளிய சரவணனே நீதான் (ஒருகாலு)

3 யாடிய பூம்பொழில் கூடிய குன்றைமலை
யாதிபனைக் குறத்தி மாதிரு பாகனே (ஒருகாலு)

## 745. வருவாய் வருவா ஐயனே

பல்லவி

வருவாய் வருவா ஐயனே - யனுக்கிரகந்
தருவாய் தருவாய் மெய்யனே (வருவாய்)

அநுபல்லவி

குமரா குமரா யாளாய் - சூர
சமரா சமரா யாளாய் (வருவாய்)

சரணம்

குகனே குகனே சாமி - யாறு
முகனே முகனே சாமி
முருகா முருகா நாதா - மாயன்
மருகா மருகா நாதா (வருவாய்)

## 746. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா - வளர்
தருநிறை குன்றைமலைச் சண்முக நாதா (குருபர)

அநுபல்லவி

கானக மயிலாளா - யுயர்
வானவர் பணிதாளா (குருபர)

சரணம்

பங்கய மலர்வேதா - பணியு
மங்கள கரநாதா
குன்ருக் குடிவாசா - யன்பரை
நன்ருய்க் காக்குமீசா (குரபர)

## 747. மயிலிலேறி யென்முன் வருவாயே

பல்லவி

மயிலிலேறி யென்முன் வருவாயே - வந்து
வரங்கள் வேணதெல்லாந் தருவாயே (மயி)

அநுபல்லவி

அயிலிலங்கு மலரா றிரண்டு கையர்
அற்புதனே குன்றைக் காதிபனே நடன (மயி)

சரணங்கள்

1 பனிரெண்டு மலர்நேத்திரா - தவம்
பணுமெய்ஞ்ஞானியர்கள் தோத்திரா
கன்னி வள்ளிக் கிசைந்த பாத்திரா
கருத்தனே குகனே திருத்தமாய் நடன (மயி)

2 வால வடிவேலணி கையனே
வானவர் பணிசெயு மெய்யனே
ஞான சற்குணமிகுந் துய்யனே
ஞாலமும் புகழ்ந்திடு நீல வானமான (மயி)

3 நேம வன்னுடு சூழுஞ் சோலே
நிறைந்த குன்றை மலேவாழும்
தாம மணிபுய வெண்ணுளு மெந்தனே
ரட்சித்திட உன்னே நம்பினேன் சாமி (மயி)

## 748. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ – ஐயன்
சித்த மெப்படியோ (சித்தம்)

அநுபல்லவி

பத்தர்கள் பணியுங் குன்றை மலேவளர்
பன்னிருகையின் மின்னிய வேலவன் (சித்தம்)

சரணங்கள் (அனுபல்லவி போல்)

1 பங்கய மாமலர்த் துங்கநிறை பாதன்
பமர மலரணி குமர குருபரன் (சித்தம்)

2 வஞ்சக சூரனை யஞ்சிடவே செயும்
வால வடிவேல் கோல மயிலாளன் (சித்தம்)

3 பூத்திடுஞ் சோலையின் நேர்த்திய தாகிய
பொன்சிகா நிறைதென் சிகிமலையோன் (சித்தம்)

## 749. சரவணபவ குகனே

பல்லவி

சரவணபவ குகனே - பட
யரவணி சீலன் மகனே (சரவண)

அனுபல்லவி

ஆடிய மயிலா பாடிய புலவர்
தேடிய வடியார் தினம்பணி சரணு (சரவண)

சரணம்

திங்களின் வதனு மங்கள குமரா
பங்கய கரனே பரம சிவனே
சொன்ன மாமுடி மின்னு தோகையின்
நன்னய மலைநாதா நீதா (சரவண)

## 750. அரகர யரகர குமரேசா

பல்லவி

அரகர யரகர குமரேசா – யுயர்திரி
புரவர குமரேசா (அரகர)

அனுபல்லவி

வாச மென்மலர் நீபா – பொல்லா
மோச வசுரர் கோபா (அரகர)

சரணம்

மாது குறத்தி பாகா – ஐயா எப்
போது மன்பர்கண் மோகா
குன்றுக் குடிவாசா – நாளும்
நின்றுழ்க் குரியர் நேசா (அரகர)

## 751. எனது துயரைத் தீராய்

பல்லவி

எனது துயரைத் தீராய் (எனது)

அநுபல்லவி

வனசமலர் மின்மகிழ் மாயவன் மருகா (எனது)

சரணங்கள்

1 பித்த மிகுந்து கனத்துப் பொருமியே
மெத்த வலிப்பதைச் சுத்தப் படுத்தியே (எனது)

2 யில்லற மல்லது நல்லற மில்லை யென்று
சொல்வதில் உழன்று வில்லப் படுகின்ற (எனது)

3 வாடா மலர்ப்பொழில் நீடாருஞ் சிகிநேமா
நாடாருங் குன்றைக் கோடார் குகநாதா (எனது)

## 752. ஆராதர வையனே

பல்லவி

ஆராதர வையனே (ஆராத)

அநுபல்லவி

சீரார் குன்றைமலைத் தேவனே சாமி (ஆராத)

சரணங்கள்

1 யுந்தனுக் கடிமையா மெந்தனுக்கினி மீது (ஆராத)
2 எப்பொழுது முந்தனை முப்பொழுதுந் திப்போர்க்கு (ஆராத)
3 யகண்ட பரிபூரண செகண்டி மலைமுருகா (ஆராத)

## 753. கடைக்கண் பாரையா

பல்லவி

கடைக்கண் பாரையா
மடைக்கண் பொழிலுகு மதுமலர்ப்பொழில்
வளைந்த குன்றையிற் றளைந்த சண்முகா (கடை)

சரணங்கள்

1 கந்தமே வரவிந்த மலர்ப்போ லந்த
மிகுந்த யுந்தன் பன்னிரு (கடை)

2 அயினிகர் விழிக்குயின் மொழிக்குற
மயிலை யன்பொடு யொயிலுடன் பார்க்கும் (கடை)

3 மெத்த மெழுகாய்ச் சித்த முருக
நித்தம் பரவும் பத்தரைக் காக்கும் (கடை)

## 754. ஆடிய மாமயிலா

பல்லவி

ஆடிய மாமயிலா - யன்பர்
தேடிய பூமலர்ச் செஞ்சரணு சாமி (ஆடிய)

சரணங்கள்

1 இந்திரன் மாமுடி வீழ்த்தாய் – சூரை
வந்த படையுடனே தாழ்த்தாய்
கந்தமலர் நீபக் கண்ணி மார்பா
யெந்தனை யாதரித்தினி ரட்சிப்பாயே (ஆடிய)

2 பாவ வினைகளைத் தீர்த்து - யெந்த
ஞவிதனைக் கண்ணுற் பார்த்து
யோவியம் போல ரூபமுகந்த வள்ளிதனை
மேவி யுல்லாச மிகுந்த மணவா (ஆடிய)

3 வாசங் கமழ்ந்திட நாளும் - பொழில்
காச மளாவிட வாழும்
தேசம் புகழ்குன்றை மாமலை நாயகா
நேசமாக யென்னை ரட்சிக்க வேணும் (ஆடிய)

## 755. எந்த விதத்திலும்

பல்லவி

எந்த விதத்திலும் வந்த வினைதனைத் தீராய் (எந்த)

அநுபல்லவி

கந்த மலர்ப்பொழி லுந்த வளைந்திடு
கந்த முடிக்குன்றை வந்த குருபரா (எந்த)

சரணங்கள்

1 நானக் கருங்குழற் கானக் குறத்தியை
கருத்தினுடன் சேரும் புயனே - யந்த
வானத்தவர்க் கஞ்ஞானத் தவர்களும் வந்தடி பணிநயனே
(எந்த)

2 மங்கை தெய்வானையை யிங்கித மாகவே
மருவி யணைந்த வுல்லாசா - நாளுந்

3 துங்க மிகுந்திடுந் தங்க மயிலேறித்
துலங்க நடத்தும் பிர்காசா
தொண்ட ரன்புடன் கண்டடிதனைத்
தோத்திரஞ் செயுநாதா – உயர்
யண்ட முயர்ந்திடு செகண்டி மலைவள ரையனே
மாமலர்ப் பாதா (எந்த)

## 756. காயம் தனக்குச் சகாயம் செய்யவேணும்

பல்லவி

காயந் தனக்குச் சகாயஞ் செய்யவேணுஞ் சாமி (காயந்)

அநுபல்லவி

தூய குன்றை மலைச்செய குருபரா
துரைக்குமரேசா விரைக் – கடம்பேசா (காயந்)

சரணங்கள்

1 வாதுக் கிசைந்திடு சூரனுயிர்
மாய்த்திடச் செய்திடும் வேலா
போதுக் கிசைந்திடும் பாதா - யன்பர்
போற்றிய மாமயிற் கோலா (காயந்)

2 அண்டர் மிடிதவிர்த்தாளு – முரு
கையனே யெம்பெருமானே
தொண்டர் கடுட்டியென்னுளும் – நல்ல
தோத்திரஞ் செய்திடுந் தேனே (காயந்)

3 சந்த நிறைந்திடு தமிழா - மகா
சங்கர ரருளுஞ் சேயா - நாளும்
யந்த நிறைந்த சிகேசா – வள்ளி
யம்மைக் கிசைந்திடு நேயா (காயந்)

## 757. துன்பத்தைத் தீராயோ

பல்லவி

துன்பத்தைத் தீராயோ
மின்பத்து முடிக்குன்றையின் சித்திர கிரிக்குகா (துன்ப)

அநுபல்லவி

வாசக் கருங்குழ னேசக் குறமயி
லாசைக் கிசைந்த குகேசக் கிர்பானிதே (துன்ப)

சரணம்

சங்கர னரிடப் பங்கி லுறைதரு
மங்கள வுமைதரு துங்க கிர்பாளிதே
நின்றுடிய பொழிற்குன்றுக் குடிவளர்
வென்றூர் வடிவேலா நின்றுட் கடியவன் (துன்ப)

## 758. முருகையனே

பல்லவி

முருகையனே - மாயன்
மருகையனே (முரு)

சரணங்க்ள்

1 வடிவேலனே - குன்றுக்
குடிவேலனே (முரு)
2 குமரேசனே - யுய
ரமரேசனே (முரு)
3 குக நாதனே – யாறு
முகநாதனே (முரு)

## 759. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா
புரகரனு ரருள்புத்திர சிகாமணியே (அரகரா)

அநுபல்லவி

வாதில் வந்த சூரை மோதி வென்ற வேலா
மாமயிலா நீபத் தாம மணிப்புயவா (அரகரா)

சரணம்

ஆறு முகத்தைக் கண்டோ
வேறுமுகத்தைக் காணலாகலாமோ
அங்கு போகலாமோ சாமி
மஞ்சடர்ந்த சோலை மிஞ்சடர்ந்து சூழும்
மயின்மலை நாதா வொயில்முரு கேசா (அரகரா)

## 760. நெஞ்சே அஞ்சாதே

பல்லவி

நெஞ்சே அஞ்சாதே – நாளும் (நெஞ்சே)

அநுபல்லவி

செஞ்சாலி விளை நேமஞ்சேர் குன்றையான் காப்பான்
(நெஞ்சே)

சரணங்கள்

1 வாசக் கருங்குழ லேசச் குறமயி
லாசைக் கிசைந்திடு மாண்டவனுனைக் காப்பான்
(நெஞ்சே)

2 தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரப்
புள்ளி மயிலேறும் புனிதனுனைக் காப்பான் (நெஞ்சே)

3 மஞ்சடர் பொழிலது மிஞ்சடர் குன்றைமலைக்
கஞ்ச மலர்க்கையன் கர்த்தனுனைக் காப்பான் (நெஞ்சே)

## 761. சொன்ன மயிலேறி வருவாய்

பல்லவி

சொன்ன மயிலேறி வருவாய் - வந்து
நன்னய யனுபூதி தருவாய் (சொன்ன)

அநுபல்லவி

மாது குறத்தி மணவாளா – நீபப்
போது தரித்திடுந் தோளா (சொன்ன)

சரணம்

பங்கய மாமலர்ப் பாதா - யடங்காச்
சங்கை யிலாத பிர்காகியாதா
வாதடரும் பொழில்சூழும் - குன்றை
மீது வருங்குகா யெந்நாளும் (சொன்ன)

## 762. ஆண்டவனை நினைமனமே

பல்லவி

ஆண்டவனை நினைமனமே - நினைந்தால்
வேண்டிய தெல்லா முண்டு தினமே (ஆண்ட)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனை - வள்ளிக்
கன்னிக் கிசைந்த நலனை (ஆண்ட)

2 வானவர் குலசீலனை – பொல்லாத
தானவர் குலகாலனை (ஆண்ட)

3 முடிச்சிகி மயிலையனே - குன்றுக்
குடிக்கிசை வான மெய்யனே (ஆண்ட)

## 763. என்னமோ வறியேன்

பல்லவி

என்னமோ வறியேன்
பன்னிருகைய நன்னய மனம் (என்ன)

சரணங்கள்

1 வந்தவர்க் கருளும் சுந்தர ஞான
தந்திர யோக கந்தன் மனது (என்ன)
2 விற்பன யோக சற்குணநய
பொற்புயர் புயவற் புதன்மனம் (என்ன)
3 பங்கய வாவி யெங்கணுநிறை
துங்க சிகிமலை யிங்கிதன்மனம் (என்ன)

## 764. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யடியேற்கு
வேறுமுக யிலையே நீறு புனைபுயவா (ஆறுமுக)

சரணங்கள்

1 யெங்கும் பிர்காசந் தங்குங் கிர்பேசா
யெந்தனுக் காதாரந் தந்தருள் வாயே (ஆறுமுக)
2 வாச வேதனுக் குபதேசஞ் செய்குருபரா
வந்தனு பூதியைத் தந்தருள் வாயே (ஆறுமுக)
3 மென்ருழ் மயிலேறுங் குன்ருக் குடிநாதா
விந்தை யுடனென்முன் தந்தருள் வாயோ (ஆறுமுக)

## 765. தீர்க்கவேணுமையனே

பல்லவி

தீர்க்க வேணுமையனே (தீர்க்க)

அநுபல்லவி

வார்க்குஞ் சொர்னமுடி மயில்மலை மீதில்
வந்த குருபரா எந்தன் பிணிதனைத் (தீர்க்க)

சரணங்கள்

1 வாச மலர்க்கடம்ப மாமல ரணிதோளா
தேச சுவுள்ள மெய்ஞ்ஞானர் தினபணி காளா
சித்த மிரங்கி யுந்தன் பத்தனிடம் பிணியைத் [தீர்க்க]

2 வானவர் பிணிதீர்க்கும் மகிமைப் பிரதாபா
தானவர் குலகாலா சண்முக ரூபா
தண்டமிழ் சொலுமுந்தன் தொண்டனிடம் பிணியைத்
[தீர்க்க]

3 அகண்ட பரிபூரணு வற்புத நாதா
செகண்டிமலே முருகா திவ்விய பாதா
தென்சிறை மயிலா யுன்னயனிடம் பிணியைத் [தீர்க்க)

## 766. மனதுக் கிசைந்தபடி தருவாய்

பல்லவி

மனதுக் கிசைந்தபடி தருவாய் – திவ்விய
கனக மயிலிலேறி வருவாய் [மனது]

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரா
அள்ளிலே வேற்கையால் அடிமையாகிய யென்றனை
[மனது]

2 வஞ்சக மாகிய நெஞ்ச சுரேசனை
மிஞ்சிய வேல்கொடு வென்றவனே யென்றன் [மனது]

3 கார்முகில் தாவிய வார்பொழி லோங்கிய
சீர்சிகி மலைவரு தேவ தேவனே யென்றன் [மனது]

## 767. மயிலேறி வருவாயே

பல்லவி

மயிலேறி வருவாயே - நாளும் [மயிலேறி]

அநுபல்லவி

ஒயிலா குன்றைமலைக் கொருத்தனே கருத்தனே [மயிலேறி]

சரணம்

தஞ்சமினி வேறிலே நெஞ்ச மகிழ்ந்தருள்
பங்கயமலர்ச் சரணங்களைத் தரவே
மண்டிய பொழில்சேர் செகண்டி மலைமுருகா (மயிலேறி)

## 768. வடிவேலனே

பல்லவி

வடிவேலனே - குன்றுக்
குடிவேலனே (வடிவே)

சரணங்கள்

1 ஆடிய மயிலா - வள்ளி
தேடிய வொயிலா (வடிவே)

2 தெளியூற்று நீபா - தெய்
வானைமருவு பூபா (வடிவே)

3 குன்றைமலை மேலா - யன்பர்க்
கென்று நயத்த கோலா (வடிவே)

## 769. கந்தனே சாமி

பல்லவி

கந்தனே சாமி - ஞானசம்
பந்தனே சாமி (கந்தனே)

சரணங்கள்

1 அண்டர் சகாயா - பணியுந்
தொண்டர் கணேயா (கந்தனே)

2 வால வடிவேலா – குறத்தி
சீல மகிழ்கோலா (கந்தனே)

3 குன்றையின் மேரா – யெனக்கு
நன்றருள் சீரா (கந்தனே)

## 770. உமைபாலா

பல்லவி

உமைபாலா – நாளு
இமையவர் பரவுங் குமர குருபரா (உமை)

அநுபல்லவி

சந்திர சடாதரர் கொந்தல ரணிமார்பா
யெந்தன் வியாதி தீர வுந்தனருள் புரிவாய் (உமை)

சரணங்கள்

1 மாது குறத்தியின் மீது மயல்புரியும்
வாதி புரியுஞ் சூரை மோது படையால் வென்ற (உமை)

2 வாதண்ட மீறிய கோதண் டிடர் பொழின்
மூதண்டம் புகழ்சிகி வேதண்டந்தனில் வரு (உமை)

## 771. கார்க்க வேணுஞ் சாமி

பல்லவி

கார்க்க வேணுஞ் சாமி – கடைக்கண்
பார்க்க வேணுஞ் சாமி (கார்க்க)

அநுபல்லவி

உந்தன் பதத்தினை வந்தனை செய்கிற
யெந்தனை யன்புடன் சொந்த னிவனென்று (கார்க்க)

சரணம்

அண்டர் முதலினோர் தொண்ட ரடியவர்
கண்டடி பணிசெயு மண்டர் பிரானை
அண்டிய பேர்களைத் தெண்டனி லாக்கிய
மண்டிய பொழிலின் செகண்டிமலையா யெனை (கார்க்க)

## 772. அருள் தரவேணும்

பல்லவி

அருள்தர வேணும் (அருள்தர)

அநுபல்லவி

திருமலை மேவிய சேவலங் கொடியோனே (அருள்தர)

சரணம்

சரவண பவகுக
குருபர சண்முகா
அந்தரி யாமளை
சுந்தரி தருபாலா
ஓகை புனையுல்லாசா
தோகை மலையின் வாசா (அருள்)

## 773. கதிர் வேலவா

பல்லவி

கதிர் வேலவா
மதிதாவவே வளர்குன்றையா (கதிர்)

சரணங்கள்

1 வீரனாகிய சூரனை வெல்லுந்
தாரணிந்திடு தீர மேவிய (கதிர்)

2 கறைநிறைத்திடு முறையலைத்திடு
கடற்குழியுறை யுள்பட்டிரு (கதிர்)

3 குயின்மொழி வள்ளியை ஒயிலுடன் மேவு
மயின்மலை வாழும் அயில்நிறை வாகிய (கதிர்)

## 774. எப்ப வந்தெனை யாளுவாய்

பல்லவி

எப்ப வந்தெனை யாளுவாய் — நாளும்
மைப்புயல் தவழ்சோலை மொய்த்திடுங் குன்றைமலை
வருகுமரேசா குருபர நாதா (எப்ப)

சரணங்கள்

1 தேசத்தில் மெய்யான தெய்வமும் நீயே
மாசற்றிடுங் குறவள்ளி மனோகரா (எப்ப)

2 ஆசைச் சமுசார மாகிய துன்பப்
பாசத்தில் வருந்தாமல் பன்னிருகண் பார்த்து (எப்ப)

3 தேவர்கள் துதிபாதா மூவர்கள் புகழ்நாதா
பாவலர் நிதந்துதி சேவலங் கொடியோனே (எப்ப)

4 தேடிப்பணி யன்பரை நாடிக் கருணைபுரிந்
தாடிய மயிலோனே பாடிய புலவோனே (எப்ப)

## 775. நெஞ்சிரக்க மில்லையோ

பல்லவி

நெஞ்சிரக்க மில்லையோ - முடிமேல்
மஞ்சடர்ந்த குன்றைமலைக் குமரேசா வுன் (நெஞ்ச)

அநுபல்லவி

மாது குறத்தி மகிழு மணவாளா
போதிலுயர் நீபப் பூமலரணி தோளா (நெஞ்ச)

சரணம்

மங்களவுமை கவுமாரி தருபாலா
தங்க நவரத்தினந் தரித்திடும் வடிவேலா
சண்முகக் குருபர தழைக்கு மலர்ப்பாதா
விண்முக முயர்குன்றை மீதில் வருநாதா (நெஞ்ச)

## 776. ஐயா எந்தனை யாளாய்

பல்லவி

ஐயா எந்தனை யாளாய்
குமர குருபர (ஐயா)

அநுபல்லவி

செய்யா ளுறையுங் குன்றைத் தேவர்கள் தேவனே (ஐயா)

சரணம்

பன்னிரு கையா யுன்னித மயிலா
தண்டா யுதனே வண்டார் புயனே
குன்ருக் குடியாய் நின்ருட் கடியன் (ஐயா)

## 777. உந்தன் கிருபை தரவேணும்

பல்லவி

உந்தன் கிருபை தரவேணும் – அடியன்
சிந்தை மகிழ்ந்துகொண்டு திறம்பட வேணும் (உந்தன்)

சரணங்கள்

1 நாளுக்குநாள் காக்க வேணும் - அடியன்
பாழுக்குள் வீழாமற் பார்க்க வேணும் (உந்தன்)

2 ஆசைக் கடமுங் காச செய்ய வேணும் - அடியன்
நாசப் படாது நீயே ரட்சிக்க வேணும் (உந்தன்)

3 குன்ருக் குடியைக் காண வேணும் - அடியன்
நன்ரு யிருக்கயெனை நாட வேணும் (உந்தன்)

## 778. மனமே ஒன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

மனமே ஒன்றுக்கு மஞ்சாதே
குருபர னிருக்கையில் (மனமே)

அநுபல்லவி

அனவரதமுங் குன்றைக் கன்மலேயோ னிருக்க (மனமே)

சரணங்கள்

1 வள்ளி மனேகரப் புள்ளி மயிலேறு மாய
அன்பர் சகாய னிருக்கையில் (மனமே)

2 சூர சம்மார வீரப் பிரதாப
சோதி வடிவாகிய வேதிய னிருக்க (மனமே)
3 துலங்கிய குன்றைமலை யிலங்கிய குமரேச
சுந்தர ஞான சம்பந்த னிருக்க (மனமே)

## 779. எப்படியு மெனையாளாய்

பல்லவி

எப்படியு மெனையாளாய் - நாளும்
மைப்படியுங் குன்றைமலை வருகுரு பரனே (எப்படி)

சரணங்கள்

1 நானப் பூங்குழலி கானக் குறத்தியை
நயமிகுயின மருவிய குககுமரேசா (எப்படி)
2 தொண்டருக்கும் பரவு மண்டருக்கு மினிய
தோகை மயிலா யோகை புனையுலாசா (எப்படி)
3 தங்க மணிமுடி யிலங்க வளருங் குன்றை
தன்னில் வருகமலப் பன்னிரு கரதலா (எப்படி)

## 780. என்னிரு வினைதீராயோ

பல்லவி

என்னிருவினை தீராயோ - யுந்தன்
பன்னிரு கண்ணுற் பாராயோ (என்னிரு)

சரணங்கள்

யுந்தன் மலர்ப்பதந் தருவாயோ - யென்முன்
சொந்த மயிலேறி வருவாயோ (என்னிரு)
குன்றை மலைக்கிசைந்த யோகனே - குறத்தி
யின்றெனை மேவிய வாகனே (என்னிரு)

## 781. சூர சம்மாரனே

பல்லவி

சூர சம்மாரனே - வெற்றி
வீரப் பிரதாபனே (சூர)

சரணங்கள்

1 வால வடிவேலனே - நல்ல
நீல மயில்வாகனே (சூர)

2 மாமலர்ப் பாதா – வாசப்
பூமலர் நீபா (சூர)

3 குன்றைமலை வாசா – யினி
நன்றருள் குமரேசா (சூர)

## 782. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே
வண்டார் பொழிற்குன்றை மகிபா யென்சாமி
(தண்டாயு)

அநுபல்லவி

ஓகை புனையு முலாசனே – வெற்றி
வாகை புனையும் பிரகாசனே (தண்டா)

சரணம்

அடியார்க் கெளிய வனீயே – அவர்
மிடியாவையுந் தீர்ப்பாய் தாயே
போதடரும் பொழிற்சிகேசா – மகா
மாதவர் பணியுஞ் சிகேசா (தண்டா)

## 783. நல்லவழி காட்ட வேணும்

பல்லவி

நல்லவழி காட்ட வேணும் யுந்தனைக்காண நல்ல
சொல்லையுஞ் சோலைவளஞ் செய்யுங் குன்ருக் குடியாய்
(நல்ல)

சரணங்கள்

1 தன்னை யடுத்தவ னன்னயம் பெறவே
சொன்ன மயிலிலேறி யென்னிடமாக வந்து (நல்ல)

2 கடிகமழ் மலரடியினைப் போற்றிய
கொடியன் றனக்கு வந்த மிடிதனைத் தீர்த்து வந்து
(நல்ல)

3 முடிநிரையாய் வளர்வடிவுகளுயர் குன்ருக்
குடிவரு குருபர அடியன் மகிழவந்து (நல்ல)

## 784. சித்த மிரங்கவிலையா

பல்லவி

சித்த மிரங்கவிலையா – யடியேற்கு
மெத்த நயத்தைச் சொலையா (சித்த)

அநுபல்லவி

பங்கய பாதந் தரவே – பச்சைத்
தங்க மயிலில் வரவே (சித்த)

சரணம்

மாதவர் பணிசரணு – மனச்
சீதள நீபா பரணு
அடியவன் மீது திருந்து – குன்ருக்
குடியின் மலையி லிருந்து (சித்த)

## 785. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே (மயங்)

அநுபல்லவி

சுயங்காணு நல்ல சொன்னமுடிக் குன்றை
நயங்காணு மலைநாத னிருக்கிருன் (மயங்)

சரணங்கள்

1 அண்டர் பிரானயங் கொண்ட மருகேசா
வண்டலர் மணநீபன் மயிலோ னிருக்கிருன் (மயங்)

2 பங்கய மலர்ப்பாதன் தங்க வடிவேலன்
சங்கர னருள்பாலன் சடாட்சர கரனிருக்க (மயங்

3 கூடிய சோலை வனங்காடிய சிகிமலை
நாடி லுயரு நேம நாட னிருக்கிருன் (மயங்)

## 786. எந்தனை யாதரிப்பாய்

பல்லவி

எந்தனை யாதரிப்பாய் (எந்தனை)

அநுபல்லவி

சந்த மலியுஞ்சோலை தழைக்குஞ் சிகாகிரியாய் (எந்தனை)

சரணங்கள்

1 வால சண்முக நாதா கோல மயிலாளா
மாதவர் பணிபாதா யாதர வாகவே (எந்தனை)

2 வானவர் முனிவரர் தானவர் துதிசெயும்
வடிவேற் குருபர மிடிதவிர்த் தினிதுடன் (எந்தனை)

3 யாலைய நிறைதரு சோலை வளங்காட்டு
மாலய சிகிமலை வளருங் குமரையா (எந்தனை)

## 787. வாரா திருக்கலாமா

பல்லவி

வாரா திருக்கலாமா – நல்ல
சீராருங் குன்றைமலைத் தேவனே யடியன் முன் (வாரா)

சரணங்கள்

1 வேண்டிய தெல்லாமினித்தருகவே – யன்பைத்
தூண்டி யென்மனது வுருகவே (வாரா)

2 பொல்லாத தீவினை தீரவே – யினி
நல்லா யுன்னுடவருள் சேரவே (வாரா)

3 சோலை யினிய வளந்திருந்து – நாளு
மாலயமாங் குன்றை யிருந்து (வாரா)

## 788. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குருநாதா - பன்னிரு
கரதலனே யெனைக் காத்திட வேணும் (அரகரா)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரை மாய்த்திடும் வடிவேலா
சூது நிகருமுலைத் தோகை வள்ளியின் லோலா
(அரகரா)

சரணம்

அண்டர் முனிவர் அன்புறு குகநாதா
தொண்டர் கடானவர் துதித்திடும் பாதா
பங்கய மாமலர்ப் பரமர் பணியுந் தேவே
மங்களநிறை குன்றைமலை வளர்கோவே (அரகரா)

## 789. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே—பணி
பூண்டவனு ரருள்புத்திரனே சாமி (ஆண்ட)

அநுபல்லவி

வால சரவண பவனே – நாளுங்
கோல நிறைந்திடு சிவனே (ஆண்ட)

சரணம்

வள்ளி தெய்வானைதன் பாகனே – நல்ல
புள்ளி மயிலேறும் யோகனே
குன்றுக் குடிமலை வாசா – யெனை
நன்றாய்க் காக்கும் பிரகாசா (ஆண்ட)

## 790. காப்பாற்ற வேணுமையனே

பல்லவி

காப்பாற்ற வேணுமையனே - நாளும் (காப்பா)

அநுபல்லவி

வாய்ப்பான சோலைநிறை மயின்மலை நாதா (காப்பா)

சரணங்கள்

1 ஆறுமுகத் தெய்வமே – யுன்னையாலால்
வேறுமுக மில்லையே (காப்பா)
2 யகம்புரி சூரப்படை – சமரில்
முகங்கெட வென்றவா (காப்பா)
3 நாரணன் மருகேசா – குன்றையிலப்
பூரண மாகியவா (காப்பா)

## 791. எனை யாளாய்

பல்லவி

எனையாளாய் – நாளும்
நனைசேர் சிகிமலை நாதா நாதா (எனையாளாய்)

அநுபல்லவி

வாசக் கடம்பா
நேசச் குகேசா (எனையாளாய்)

சரணம்

கங்கா சுதனே - வள்ளி
பங்காள நயனே
குன்றுக் குடியாய் - மாமலர்
நின்றுழ்க் கடியேன் (எனையாளாய்)

## 792. உந்தனை நம்பினேன்

பல்லவி

உந்தனை நம்பினேன் – உமையாள்
மைந்தனே குகனே (உந்தனை)

அநுபல்லவி

பன்னிரு தோளா – மணக்கும்
நன்மலர்த் தாளா (உந்தனை)

சரணம்

கடம்பணி மாரா – மயின்மே
னடம்புரி சூரா
சோலையள் வாயங் – குன்றை
யாலயத் தாய் நாளும் (உந்தனை)

## 793. குக நாயகா

பல்லவி

குக நாயகா – யாறு
முக நாயகா (குக)

சரணங்கள்

1 வடிவின் வேலா –வள்ளிக்
கொடியின் லோலா (குக)

2 சூர சம்மாரா – உக்கிர
வீர சிங்காரா (குக)

3 பங்கய பாதா – யன்பர்க்
கிங்கித நாதா (குக)

4 குன்றையின் வாசா - யன்பர்க்
கென்று பிரகாசா (குக)

## 794. வருவாய் ஐயனே

பல்லவி

வருவாய் ஐயனே (வரு)

அநுபல்லவி

தருவாழ் குன்றைமலைச் சண்முக நாதா (வரு)

சரணங்கள்

1 யுல்லாச மயிலேறி
சல்லாபமுடன் மீறி (வரு)
2 தண்டைச் சிலம்பொலிக்க
யண்டர் துதிகலிக்க (வரு)
3 மின்றளைந்தே திருந்தும்
குன்றை மலையிருந்து (வரு)

## 795. முருகா வுனை நம்பினேன்

பல்லவி

முருகா உனை நம்பினேன் – யுன்னை
யிருகாலமும் பணிந்தேத்தி நேர்த்தியாக (முருகா)

அநுபல்லவி

தொண்டரு முனிவரும் பணிபாதா
யண்டரு மனுதினந் துதிநாதா (முருகா)

சரணம்

வண்டலர் நீபமென் மணிவாகா
அதிக இருண்ட குழற்குறத்தி புணர்வாகா
வடிவுறு மயின்வரு தேவே - குன்றுக்
குடிமலைதனில் வளருயர் கோவே (முருகா)

## 796. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா – செந்தமிழ்
பாடிய வொயிலா (ஆடிய)

சரணங்கள்

1 மாதுமை சுதனே – அடியவன்
மீது வற்புதனே (ஆடிய)

2 பங்கய பாதா – புனவள்ளிக்
கிங்கித நாதா (ஆடிய)
3 குன்றையின் மேரா – யடியேற்கு
நன்றருள் தாராய் (ஆடிய)

## 797. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – குன்றை
கர்த்தனே குருபரா பத்தனிடத்தினிற் (சித்த)

அநுபல்லவி

வாதில் வருஞ்சூரை மோதி எதிர்த்துவென்ற
வால வடிவேலவா கோல மயிலாளா (சித்த)

சரணம்

பச்சம் வைத்தன்பரை ரச்சிங்குங் குமரேசா
பாலன்றனைக் காக்க கோல மயிலாளா
சோலை வளமுலவு மாலைய மாகிய
தோகை மலைக்கந்தா யோகைபுனை யுல்லாசா (சித்த)

## 798. வால சண்முகநாதா

பல்லவி

வால சண்முகநாதா
கோல மயிலேறுங் குழந்தை வடிவேலா (வால)

சரணங்கள்

1 சகலசன ரட்சகா மகபதி துதிதாளா
சுககுக குருநாதா யகமகிழ்ந் தெனையாளாய் (வால)
2 யந்தரி யாமளை சுந்தரி திரிபுரை
தந்தருள் பாலகா யெந்தனை யாதரி (வால)
3 கூவிய மயிலா தாவிய பொழில்சேரும்
தூவி நிறையுங் குன்றை மேவிய குமரேசா (வால)

## 799. ஐயனே எனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் – பன்னிரு
கையனே மயிலேறுங் கர்த்தனே நிர்த்தனே (ஐயனே)

அநுபல்லவி

வாதில் வருசூரைப் பாதியதாய் வென்ற
வால வடிவேலா (ஐயனே)

சரணம்

தஞ்சமென் றடைந்தோரை யஞ்ச வேண்டாமென்று
தற்காக்கும் குமரேசா
வண்ணச் சிகரமின்னுங் குண்ணக்குடி மலையில்
வந்திடுஞ் செகதீசா (ஐயனே)

## 800. உமை பாலனே

பல்லவி

உமைபாலனே - நாளு
மிமையவர் பணிகுன்றை யிருக்கின்ற வேலனே (உமை)

அநுபல்லவி

தஞ்சம் வே.....................
(441 ஏடு காணப்படவில்லை)

சரணம்

தாவிக் குதியள் போடு கலாவித் திரியும் மந்தி
மேவித் திரியும் பொழில் விளைக்குஞ் சிகேசா (உமை)

## 801. பொல்லாத வினைதீர்க்க வேணும்

பல்லவி

பொல்லாத வினை தீர்க்க வேணும் – நல்ல
யெல்லாமினித் தரவேணும் (பொல்)

சரணங்கள்

1 தேக வியாதி தீர வேணும் - புவன
போக போக்கியந் தரவேணும் (பொல்)

2 கல்வி செல்வந்தர வேணும் – யின்
சல்லிய மேவல் தீர்க்க வேணும் (பொல்)

3 குலைத்தொழில்களைத் தீர்க்க வேணும் - குன்றை
மலைக்குகாவருடர வேணும் (பொல்)

## 802. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே - நாளும் (அஞ்)

அநுபல்லவி

மஞ்சார் பொழிற்குன்றை மலையோனிருக்க (அஞ்)

சரணங்கள்

1 நல்லுல கனைத்திலும் பல்லுயிர்களைக் காக்கும்
நல்லனு பூதிய ரஞ்சித னிருக்க (அஞ்)

2 ஆறு முகங்கண்டு வேறிலை யினியென்று
தேறு படியவர்கள் தியான னிருக்க நீ (அஞ்)

3 பொன்னின் மணிமுடிகள் துன்னுஞ் செகண்டிமலை
மின்னும் வடிவேலவன் மேலவ னிருக்க (அஞ்)

## 803. காராயோ ஐயனே

பல்லவி

காராயோ ஐயனே
சீராருங் குன்றைத் தேவா யெந்தனை (காரா)

அநுபல்லவி

வள்ளி தெய்வானை மனோகரனே – நல்ல
புள்ளி மயிலில் வரும்பரனே (காரா)

சரணம்

வால சண்முக குருநாதா – எந்த
ஞாலமும் பணிகுரு பாதா
சோலை சிறக்குங் குன்றையாளா – நீப
மாலைதரி பன்னிரு தோளா (காரா)

## 804. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – மலர்த்
திருமகளுறை தருசிகி மலையரசே (குருபர)

அநுபல்லவி

பரம சிவேசா யரகர மகேசா
கரதல கமலா சுரபணி சரணா (குருபர)

சரணம்

தண்மலர் நீபா யுண்மகிழ் வாக
பண்பயி றமிழா சண்முக நாதா
மன்றன் மலர்ப்பொழில் குன்றை மலைவளர்
நின்றெதிர் சூரைவேல் வென்றி வடிவேலா (குருபர)

## 805. வருவாய் மெய்யனே

பல்லவி

வருவாய் மெய்யனே – யெங்குந்
தருவாழுங் குன்றைமலைச் சண்முக வையனே (வரு)

சரணங்கள்

1 சங்கரி யாமளை சாமளை கௌரி
துங்க மயிடன்றனை துலைத்திடும் வாலை
செங்கர மேந்துந் திரிசூலி மாது
மங்கள கரவுமை மகிழ்ந்திடு பாலா (வரு)
2 சீதள சந்திர செம்பவளச் சடை
நாத மணிமய நற்கலை ஞான
பாத சங்கர ருதிர்பரம சிவேச
வேதக்கு பாகர விமல ரருளும் பாலா (வரு)
3 வண்டு படிய மதுவழிந்திட வாருங்
கண்டு வயலிற் சென்ற கதிரை விளைத்திட
மண்டிய வளநேமம் வளைத்திடு முயருஞ்
செகண்டி மலையில் வருகர்த்தனே சாமி (வரு)

## 806. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – நாளுந்
திருவளர் குன்றைமலை மருவறு மமரேசா (குரு)

அநுபல்லவி

வாசக் கடப்ப மலர்மாலை யணியுந் தோளா
யாசைக் குறத்திக் கிச்சையாகிய மணவாளா (குரு)

சரணம்

கங்கை தரித்தசடைக் கர்த்தன் தன் பாலா
மங்கை தெய்வானைக்கு வாய்த்திடும் லோலா
தாவிய சோலைநிரை தளைத்திட நாளும்
மேவிய குன்றைமலை விருப்புடன் வாழும் (குரு)

## 907. முருகேசா

பல்லவி

முருகேசா
தருவாருங் குன்றைமலைச் சண்முக நாதா (முரு)

அநுபல்லவி

அற்புத பாதா பொற்புயர் வாகா
பற்பல வுலகா நற்பர மேசா (முரு)

சரணம்

தொண்டர்கள் வானத் தண்டர்கள் பரவும்
மண்டலம் புகழுச்சி கொண்ட வேசா,
கானகஞ் சூழும் மானல மோங்கும்
யான முடிசேர் வானடர் குன்றையின் (முரு)

## 808. ஆதரவு செய்குவாய்

பல்லவி

ஆதரவு செய்குவாய் – குன்றை
மீதிலுறையுங் குருநாதா மகிபா (ஆதரவு)

சரணங்கள்

1 துங்க மயிலிலேறுஞ்
சங்கிக்கும் வேலா (ஆதரவு)

2 துள்ளிய மயிலேறும்
வள்ளி மணாளா (ஆதரவு)

3 ஆடும் மயிலிலேறும்
பீடுயர் தேவே (ஆதரவு)

## 809. உனை நம்பினேனையனே

பல்லவி

உனை நம்பினேனையனே (உனை)

அநுபல்லவி

கனைகடல் சூழ்குன்றைக் கர்த்தனே சாமி (உனை)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 உந்தனை நம்பிய
யெந்தனைக் காப்பாய் (உனை)

2 வாசக் கடம்பகு
கேசக் கிர்பானிதே (உனை)

3 வண்டமிர் சோலைச்
செகண்டி மலைநாதா (உனை)

## 810. சூரசம்மாரா வடிவேலா

பல்லவி

சூரசம்மாரா வடிவேலா — குளிர்
சாரல் மிகுந்த குன்றைச் சண்முக நாதா (சூர)

அநுபல்லவி

தஞ்சம் வேறில்லை யென்றோர்க்
கஞ்சலென் றுதரிக்கும்
சரவண பவனே யரகர சிவனே (சூர)

சரணம்

அண்ட ரண்டம் புகழும் மண்டலமும் புகழும்
ஐயனே பன்னிரு கையனே சாமி
சொன்ன மணிமுடியள் மின்னு செகண்டி
தூயமலர்ப் பாதனே நாயகனே என்சாமி (சூர)

## 811. சேவல் கொடியனே

பல்லவி

சேவல் கொடியனே — யன்ப
ராவற் கிசைந்த வையனே மெய்யனே (சேவல்)

அநுபல்லவி

அந்தி மதியை யணிந்த வேணி
நந்தியி லேறு நாயகர் பாலா (சேவல்)

சரணம்

துங்க மாமயிற் றுலங்கவே வந்து
செங்கமல பாதந் தரிசிக்க வருள்வாய்
மன்றன் மலர்ப்பொழில் மருவி வாழுங்
குன்றை மலைவரு குருபர நாதா (சேவல்)

## 812. திருவருள் புரிவாயே

பல்லவி

திருவருள் புரிவாயே — நல்ல
மருமலர் நிறை குன்றைமலைக் குமரேசா (திரு)

அநுபல்லவி

காலனை யுதைத்திடுங் காலனுர் புதல்வா
கோல மயிலிலேறும் வால வடிவேலவா (திரு)

சரணம்

தங்கையில் வளையுளோன் றங்கதன் பாலகா
துங்கமிகும் பன்னிரு செங்கையின் வேலவா
வாச வனக்குன்றையின் வாச வடியவர்க
நேச யெந்தனை யாளாய் யீச குகேசா நீ (திரு)

## 813. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா – யுயர்
வரைக்கு ளுயர்ந்த குன்றைவரைக் குகநாதா (துரை)

அநுபல்லவி

மாது குறத்தி மணவாளா – மலர்ப்
போது நிகர்த்த யிருதாளா (துரை)

சரணம்

அடுத்த வர்களுக் காதாரா - மணந்
தொடுத்த கடப்ப மலர்த்தாளா
மின்சிகரக் கிரிமேலா – வரு
தென்சிகி மலைவளர் சீலா (துரை)

## 814. கருத்தினில் மறவாதே

பல்லவி

கருத்தினில் மறவாதே – மனமே (கருத்)

அநுபல்லவி

திருத்தமான குன்றைத் தேவ தேவனை (கருத்)

சரணங்கள்

1 வாசக் குழலியின்
நேசக் குகேசனை (கருத்)

2 தங்க நிறவொளிர்
துங்கவை வேலனை (கருத்)

3 பொன்முடி தாங்கிய
தென்சிகி மலையோனை (கருத்)

## 815. தருவாய் தருவா ஐயனே

பல்லவி

தருவாய் தருவாய் ஐயனே – மயின்மேல்
வருவாய் வருவாய் ஐயனே (தரு)

சரணங்கள்

1 சிவனே சிவனே ஐயனே - சரவண
பவனே பவனே ஐயனே (தரு)
2 குகனே குகனே ஐயனே – ஆறு
முகனே முகனே ஐயனே (தரு)
3 மின்னிய மின்னிய சிகியா - மலைமேற்
றுன்னிய துன்னிய ஐயனே (தரு)

## 816. ஒரு நாளும் மறவாதே

பல்லவி

ஒருநாளு மறவாதே – மனமே (ஒரு)

அநுபல்லவி

தருவாழுங் குன்றைமலைச் சண்முக நாதனை (ஒரு)

சரணங்கள்

1 தேடிய வன்பர்க்கு வாடிய மிடிதீர்க்கும்
தேவர் கடேவனை மூவர் நாதனை (ஒரு)
2 சூரன்றனை எதிர்த்து வீர வடிவேல் விட்ட
துங்க வீரப் பிரதாப தங்க மயிலோனை (ஒரு)
3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றை மலையின்மீது
வந்த குகேசனைக் கந்தனைக் குமரனை (ஒரு)

## 817. ஆண்டவனே

பல்லவி

ஆண்டவனே - நல்ல
தாண்டவம் புரிமயிற் சண்முக நாதா (ஆண்ட)

சரணங்கள்

1 பன்னிரு கரதலா
என்னிரு வினைதீர்ப்பாய் (ஆண்ட)
2 ஆசைக் கடலில் வீழும்
பாசத்தைநீ தீர்ப்பாய் (ஆண்ட)

3 நின்ற பொழிற்கனகக்
குன்றை மலைக்குகா (ஆண்ட)

## 818. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் - நாளும் (எந்த)

அநுபல்லவி

வந்தனையும் நல்ல சிந்தனையுஞ் செய்யும் (எந்த)

சரணங்கள்

1 உன்னைச் சதமென்று
நின்னைத் துதி செய்யும் (எந்த)

2 சித்த முருகவே
நிதந்துதி செய்யும் (எந்த)

3 என்றைக்கும் நம்பினேன்
குன்றைக்கு வந்தவா (எந்த)

## 819. பாத தரிசனந் தருவாய்

பல்லவி

பாத தரிசனந் தருவாய் – குரு
நாத குன்றுக்குடி நாயகனே என்சாமி (பாத)

சரணங்கள்

1 அடியவர் தங்கட்கு
மிடிதனைத் தீர்க்கும் (பாத)

2 பங்கய மாகிய
துங்க மலரைநிகர் (பாத)

3 குன்றுக் குடிநாதா
நின்றுழ்க் கன்பற்கு (பாத)

## 820. உன்றுணை வேணுமையா

பல்லவி

உன்றுணை வேணுமையா (உன்)

அநுபல்லவி

பொன்றுனை குன்றைமலைப் புண்ணியனே சாமி (உன்)

சரணங்கள் (அநுபல்லவிபோல்)

1 பன்னிரு கரதலா
என்னிரு வினைதீர (உன்)

2 கதிர்வேல் முன்னமே
யெதிர்சூரை வெல்வோன் (உன்)

3 அடியவர் பணிகுன்ருக்
குடிமலை நாயகா (உன்)

## 821. சரவணபவனே

பல்லவி

சரவணபவனே
அரகர சிவனே (சரவண)

சரணங்கள்

1 வேலணி கரனே
நூலணி யுரனே (சரவண)

2 பங்கய பாதா
யெங்கட ஞதா (சரவண)

3 தென்சிகி மேரா
நின்கணுற் பாராய் (சரவண)

## 822. குருபர நாதா

பல்லவி

குருபர நாதா – நாளுந்
திருவளர் குன்றைமலைத் தேவர்கடேவனே (குருபர)

அநுபல்லவி

கங்கை தரித்தவர்தன் பாலா – நல்ல
செங்கை தரித்த வடிவேலா (குருபர)

சரணம்

வாசக் கடம்பணியுந் தோளா – வெகு
நேசக் குறத்தி மணவாளா
யகண்ட பரிபூரண சீலா – முடிச்
செகண்டி மலையில் வருகோலா (குருபர)

## 823. மயிலேறி விளையாடி வருவாய்

பல்லவி

மயிலேறி விளையாடி வருவாய் – வந்து
கையில் வேண வரமெல்லாந் தருவாய் (மயிலேறி)

அநுபல்லவி

பரகதி யன்பர்க் கருள் கிவனே – துதி
அரகர சரவண பவனே (மயிலேறி)

சரணம்

பத்தர்கள் வினைதீர்க்குங் குகனே – வள்ளி
சித்த முருகச் செய்யுஞ் சுகனே
நின்ருட் கடியவரைக் காராய் – உயர்
குன்ருக் குடியென்னு மேரா (மயிலேறி)

## 824. வந்தருள் புரிவாயே

பல்லவி

வந்தருள் புரிவாயே (வந்த)

அநுபல்லவி

கந்தமலர்ச் செங்கடம் பணிமார்பா (வந்த)

சரணங்கள்

1 வன்ன மயிலேறும்
சொன்ன வடிவேலா (வந்த)
2 வாது புரியுஞ் சூரை
மோதி யெதிர்வென்றவா (வந்த)
3 வாகை புனையு மார்பா
தோகை மலையினுதா (வந்த)

## 825. வேலாயுதக் கந்தனே

பல்லவி

வேலாயுதக் கந்தனே – யந்த
மேலானவர் பணிகோலா கலமான (வேலா)

சரணங்கள்

1 வீறு சேனைகள் மேவு சூரனைக்
கீறு கீறெனக் கீறியேவிடும் (வேலா)

2 மஞ்சத்தைத் தொடவளர்ந்திடு நிற்
வுஞ்சத்தை முடிமீதிற் ரெடவே (வேலா)
3 குன்றையின் மலைக்குரு பரநாதா
வென்றிட வாழி மீதினில் விட்ட (வேலா)

## 826. வால சண்முக நாதா

பல்லவி

வால சண்முக நாதா - நல்ல
கோல மயிலேறிய குருபர நாதா (வால)

அநுபல்லவி

சங்கரனு ரருள்பாலா - நாளு
மங்கள கரசுப கோலா (வால)

சரணம்

வள்ளி மனோகரா நேசா – நய
தெள்ளிய தமிழ்புகழ் வாயா
குன்றைமலைக் குருபரனே – யன்பர்க்
கென்றுந் தயவுசெயு மரனே (வால)

## 827. என்னை ஆளுவாய்

பல்லவி

என்னை ஆளுவாய்

அநுபல்லவி

பொன்னை நிகருங் குன்றைப் புனிதா புனிதா (என்னை)

சரணங்கள்

1 வாசக் கருங்குழலி
நேசக் குறத்தி பாகா (என்னை)
2 மைவலா ளிருவிழி
தெய்வானையின் பாகா (என்னை)
3 குன்ருக் குடி நாதா
உன்ருள்க் கன்பனை (என்னை)

## 828. வால சரவணபவனே

பல்லவி

வால் சரவணபவனே

அநுபல்லவி

ஞாலம் புகழுங் குன்றை கோல மலையில் வாழும் (வால)

சரணம்

1 தேடி அன்பர் பணியும்
ஆடிய மயிலாளா (வால)

2 சுந்தரி கவுமாரி
தந்தருள் பாலா (வால)

3 எங்கிலுமுயர் சோதி
தங்கிய மயில்மேரா (வால)

## 829. வாராயோ ஐயனே

பல்லவி

வாராயோ ஐயனே – வந்து வரந்
தாராயோ மெய்யனே (வா)

சரணங்கள்

1 நானக் கருங்குழலி கானக் குறத்தி மேவும் ரஞ்சிதனே
அடியன் சஞ்சித வினை தீர (வா)

2 தானவ ரிமையவர் வானவர் பணிசெய்யுந்
தாவிய மயிலாளா தீவினை தீரவே (வா)

3 வாழு மலர்ப்பொழில்கள் சூழுந் சிகிமலைமேல்
வந்த குமரேசா எந்தன் வினைகள் தீர (வா)

## 830. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – மலர்த்
திருவளர் குன்றை மலைவரு மமரேசா (குரு)

அநுபல்லவி

யந்தரி யாமளை சுந்தரி வாலை
கந்த மலர்க்குழலி தந்தருள் பாலா (குரு)

சரணம்

ஏலக் கருங்குழலி சாலச் சிறந்தவிழி
வாலப் பருவமயில் கோலக்குறத்தி பங்கா
யெங்கணும் பிரகாசந் தங்க வளருமுடி
திங்க டவழும் பொழிற்றுங்க மயின்மலையாய் (குரு)

## 831. நீ தயவே செய்குவாய்

பல்லவி

நீ தயவே செய்குவாய்
தாதவிழ் பொழிற்குன்றைச் சண்முக நாதா (நீ)

அநுபல்லவி

பாத பங்கய மலர்ப்பதத்தைப் பணியும்
கோதறு மடியரைக் காதலுடனே யாள்வாய் (நீ)

சரணம்

வையகந்துதி முருகையனே பொடியணி
மெய்யனே யனுக்கிரக துய்யனே செய்யனே
யுன்றனடியிணையை யென்று மறவாதவர்
தன்றுணை யாகிய குன்றை மலையின் வாசா (நீ)

## 832. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் (ஐயனே)

அநுபல்லவி

கையனே குன்றைமலைக் கர்த்தனே சாமி (ஐயனே)

சரணங்கள்

1 ஆறு முகத்தெய்வமே
வேறு கதியில்லையே (ஐயனே)
2 பங்கய மலர்ப்பாதா
துங்க மயில் வாகனு (ஐயனே)
3 குன்றையின் மலைக்கிசை
கின்ற குகா குமரா (ஐயனே)

## 833. ஆதாரம் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் நல்ல
போதாரும் பொழிற்குன்றை நாதா யெந்தனைக் காத்து
(ஆதா)

அநுபல்லவி

வாசக் கடம்பணியு மார்பா சண்முக நாதா
தாசர்க் கிரங்கி வந்து தானே ரட்சித்துக் காத்து (ஆதா)

சரணம்

துங்க மயிலிலேறிச் சூர சம்மாரஞ் செய்யும்
தங்க மயமாய் கையிற்றரிக்கும் வடிவேலவா
சோலைக் கிளியைப் போலுஞ் சொல்லிய கனிவாயா
வேலைப் புவிசூழ் குன்றை மேரில் விளங்குங் கந்தா (ஆதா)

## 834. சரணமுனை நம்பினேன்

பல்லவி

சரணமுனை நம்பினேன் (சரண)

அநுபல்லவி

யரணம் பரவுங் குன்றை யாண்டவனே சாமி (சரண)

சரணங்கள்

1 பங்கய மாமலர் போலும்
துங்க வடியார்க் கருண்மேலும் (சரண)

2 சொன்ன மணிச் சதங்கை யணியும்
நன்னய வடியவர் பணியும் (சரண)

3 வாகை புனையும் வெற்றி வேலா
தோகை மலைக்கிசைந்த சீலா (சரண)

## 835. பரமேசனே

பல்லவி

பரமேசனே
யரகர குன்றைமலை யாண்டவனே சாமி (பர)

அநுபல்லவி

மாலைக்குழல் குறத்தி மருவிய தோளா
பாலைப் பழிக்குமொழி பாவை யானைமணாளா (பர)

சரணம்

மங்கள கரவுமை மகிழ்ந்த லோலா
துங்க மயிலும் வேலுந் துலங்கிய கோலா
வாச மலர்ப்பொழில்கள் வளர்சிகிமேரா
நேச வடியார் பணிநிதஞ்செயு குமரா (பர)

## 836. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் – யன்பர்
வந்தனைசெயு மயின்மலை நாதா (எந்தனை)

அநுபல்லவி

வன்ன மாமணிச் சதங்கை யணியு மாமலர்ப்பாதா நல்ல
சொன்ன மாமயிலேறி விளையாடுந் துரைக்குக நாதா
(எந்தனை)

சரணம்

அண்டர் முனிவர்கள் பணியு மணிமலர்த் தாளா
வண்டர் படியு மாமலர்க்குழல் வள்ளி மணாளா
வாச மாமலர்ப் பொழில்கள் சூழ்தரு மயின்மலை வாசா
நாடுந்
தாசர் பணியுங் கேச சண்முக யேசா (எந்தனை)

## 837. எப்படியு மெனையாளாய்

பல்லவி

எப்படி மெனையாளாய் – நாளு
மைப்படியுஞ் சோலை மயின்மலை நாதா (எப்படி)

அநுபல்லவி

கானக மயிலி மணாளா – மகா
ஞானர்கள் பரவிய தாளா (எப்படி)

சரணம்

தெய்வ யானையினிடப் பாகா – ஞான
சைவ சிகாமணி மெய்யோகா
சிகிமலைதனில் வருதூயா – நாளு
மகிமை யன்பர்கள்தன் சகாயா (எப்படி)

## 838. வந்திடுவா ஐயனே

பல்லவி

வந்திடுவாய் ஐயனே – யருள்
தந்திடுவாய் ஐயனே (வந்)

சரணங்கள்

1 வாசக் குழற்குறத்தி
யாசைக் கிசைந்தவா [வந்]

2 வாகை தனைப்புனை
தோகைச் சிகியிலேறி (வந்து)

3 யுன்றன் மனதிரங்கி
குன்றை மலையிலிருந்து (வந்து)

## 839. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் (ஐயனே)

அநுபல்லவி

பன்னிரு கையனே குன்றைமலைக் கர்த்தனே முத்தனே (ஐயனே)

சரணங்கள்

1 வள்ளியிடப் பாகனே
புள்ளிமயிற் பரியாய் (ஐயனே)

2 தேனை நிகர்மொழித்
தெய்வானை மருவுபுயா (ஐயனே)

3 மகிமை மிகுந்தமுடிச்
சிகிமலை யீசா (ஐயனே)

## 840. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ – மலர்
மேவிய குன்றைமலை வேலவனே சாமி தீவினை)

சரணங்கள்

1 யாடிய மயிலாளா பாடிய தமிழ்வாயா
நீடிய வயிலாளா தேடிய வன்பருட (தீவினை)

2 வாச மலரினீபா நேச மடவியர்கள்
பாச மயிலில் வீழு மோட்சத்து தவிர (தீவினை)

3 மஞ்சடர் மலர்ப்பொழில் மிஞ்சிய சிகிமலைக்
கஞ்ச மலர்ச்சரண தஞ்சமென்றே யடுத்தோர் (தீவினை)

## 841. நலந்தருவாய் ஐயனே

பல்லவி

நலந்தருவாய் ஐயனே – நாளுந்
தலந்தனின் மேன்மைபெறு தனைக்குஞ் சிகியாய் (நலம்)

அநுபல்லவி

மீறிய சேனைகள் கூறிய வாத்தியஞ்
சீறிட வருஞ்சூரைக் கீறிடு கதிர்வேலா (நலம்)

சரணம்

நித்த மயிலில் வந்து பத்தர்கண் மிடிதீர்
சித்த மகிழ்ந்தருளு முத்தமனே குகனே
வாதடர் பொழிற்குன்றை மீதட ரருள்பெறு
போதடர் புயமார்பா காதலுடன் பத்தர்க்கு (நலம்)

## 842. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் – குன்றைச்
சேயே கரியநிற மாயோன் மருகேசா (தாயே)

அநுபல்லவி

பங்கய பாதா சங்கரர் பாலா
துங்க நன்மயிலா தங்க வேலாளா (தாயே)

சரணம்

வாசக் கடம்பா தாசற் குகந்தாய்
மாசற்ற வருளா தேசப் பிரகாசா
வண்டடர் பொழிலே மண்டிய முடிசேர்
செகண்டியின் மலைவாழு மண்டர் பிரானே (தாயே)

## 843. தருண மெனையாள்ாய்

பல்லவி

தருண மெனையாளாய் (தருண)

அநுபல்லவி

யருணப் பிரகாச முடிதரு நிறைகுன்றை நாதா (தருண)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 உன்னைச் சதமெற்று றெண்ணு
மென்னைக் காப்பாத தற்கு (தருண)
2 யுந்தனடியைப் பணி
யெந்தனை யாள்வதற்கு தருண )
3 மின்னுஞ் சிகிமலை
நன்னய மாகவாழ் (தருண)

## 844. வருவாய் குருபரனே

பல்லவி

வருவாய் குருபரனே – நாளும் (வரு)

அநுபல்லவி

திருவாழ் குன்றைமலைப் பெருமானே சாமி (வரு)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 ஆனந்தத் தாண்டவனே - திவ்விய மெய்ஞ்
ஞானந்தம் பூண்டவனே (வரு)

2 மங்கை குறத்தி லோலனே – யுயர்மலர்ச்
செங்கை தரித்த வேலனே (வரு)

3 குனருக் குடிநாதனே - யடியரை
நன்ருய்க் காக்கும் பாதனே (வரு)

## 845. மதுரிதத் தமிழ்வாயா

பல்லவி

மதுரிதத் தமிழ்வாயா - சோலை
முதுசிகி மலைவரு பதுமமென் மலர்ப் பாதா (மது)

அநுபல்லவி

யாசைக் கிசைந்த வன்பர் மோசப் படாதவகை
ஆண்டருளும் நீபம் பூண்டருளு மார்பா (மது)

சரணம்

சேவற் கொடிக்குமரா வாவற்கிசைகுற
தேவி மயலுடனே மேவிய புயசீலா
மஞ்சாடிய பொழில் துஞ்சார் மணிமுடி
மயின்மலை வருநாதா வொயிலுழ முருகேசா (மது)

## 846. கதிதர வேணுமையனே

பல்லவி

கதிதர வேணுமையனே - குன்றைப்
பதிவரு குருப்பரா துதிபெறு தாளா (கதி)

சரணங்கள்

1 பாவ வினையினுலே யாவல் மிகுதியாலே
தேவி மடந்தையாலே திரிந்தலைவதைத் தீர்த்து (கதி)

2 வானவர் மடந்தையை கான மடந்தையை
தேனலர் மாலைசூடிச் சேர்ந்தனை புயவா (கதி)

3 நின்றுடிய பொழிற் குன்றுக் குடிமலைக்
குன்று வருள்செய்வாய் குருபர நாதா (கதி)

## 847. உந்தன் தயவுவேணும்

பல்லவி

உந்தன் தயவுவேணும் – நாளும் (உந்தன்)

அநுபல்லவி

சந்த மலியுங் குன்றைச் சண்முக நாதா (உந்தன்)

சரணங்கள்

1 யாடிய மாமயிலா – யன்பர்
தேடிய மாவொயிலா (உந்தன்)

2 பங்கய மலர்ப்பாதா - சிவ
சங்கரர் குருநாதா (உந்தன்)

3 குன்றுக் குடிவாசா - மலர்
நின்று டருளீசா (உந்தன்)

## 848. கடைக்கண் பாராயோ

பல்லவி

கடைக்கண் பாராயோ (கடை)

அநுபல்லவி

மடைக்கண் பொன்மது வொழுகுஞ் சோலை
மண்டி வளருஞ் செகண்டி மலை நாதா (கடை)

சரணங்கள்

1 வாது புரியுஞ் சூரை மோதியே
தான் வென்ற வல்லவனே குண நல்லவனே யுந்தன்
(கடை)

2 புள்ளிமயிற் சாயல் வள்ளி மனோகரா
புற்புத வாழ்க்கைக் கற்புத மாமலர்க் (கடை)

3 யோங்கிய பூஞ்சோலை தாங்கிய குன்றையி
னுத்தமனே பரிசுத்தனே யுன்னுட (கடை)

## 849. நீ தயவு செய்குவாய்

பல்லவி

நீ தயவு செய்குவாய்
தாயே குன்றைமலைச் சண்முக நாதா (நீ)

அநுபல்லவி

யந்தர வானவர் மந்திர முனிவர்க
ளுந்தரமாய்ப்பணி கந்த மலர்ப்பாதா (நீ)

சரணம்

வாச மலர்க்குழ லேசமிகுந்த குற
வாசை மயிற்கிசைவர் சண்முகா குகா
பூவியல ராகிய தாவிய சீர்பொழின்
மேவிய குன்றையிலே வருமுருகேசா (நீ)

## 850. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – மயின்மேல்
வருசர வணபவா திருமயின் மலைவாழும் (குரு)

சரணங்கள்

1 யந்தரி கௌமாரி சுந்தரி திரிபுரை
சந்ததன் வுமையாளுந் தினமகி ழீசா (குரு)

2 கன்மது வொழுகிய வனச மலரிலுறை
யின்மறை புகல்வேதன் மனது மகிழவரு (குரு)

3 தாதவிழ் நறுமலர்ப் போதடர் பொழிலுறை
மாதவர் பணிகுன்றை நாத தன்பருக்கு (குரு)

## 851. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – குன்றை
யுத்தமனே யன்பர்க் குதவிய பரனே (சித்த)

அநுபல்லவி

வால சண்முக நாதா கோலகலா மீறு
நீல மயில்வாகனு ரட்சிக்க வேண்டியே (சித்த)

சரணம்

வஞ்ச வசுரன்றனை நெஞ்சமிரு கூருக
வுஞ்சம ராடியு யுக்கிர வடிவேலவா
கூவிய குயிற்சோலை மேவிய குன்றைமலை
தேவ சிகாமணியே தேவர் சகாயனே (சித்த)

## 852. தரிசனஞ் செய்குவாயே

பல்லவி

தரிசனஞ் செய்குவாயே - மனமே (தரிசனஞ்)

அநுபல்லவி

கரிச வன்பர் பணிபுரியுஞ் செகண்டி யானை (தரி)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 நடம்புரி மயிலேறுங்
கடம்பணி புயனை (தரி)

2 யந்தரி யாமளை
சுந்தரி பாலனை (தரி)

3 கடிப்பொழிற் குன்றுக்
குடிக்கிரி ஐயனை (தரி)

## 853. நித்தியனை நினைமனமே

பல்லவி

நித்தியனை நினை மனமே - பரி
சுத்தனை செகண்டிமலைக் கர்த்தனை யன்பாய் (நித்திய)

சரணங்கள்

1 செங்கதிர் வேலணி திவ்விய கரனை
பங்கய மலரயன் பணிகுரு பரனை (நித்திய)

2 வாசக கடப்பமலர் மாலிகைத் தோளனை
யாசைக் கிசைந்த வள்ளிக்கான மணாளனை (நித்திய)

3 நின்றுழ்க் கன்பரை ரட்சிக்கு நாதனை
குன்றுக் குடிவரு குளிர்மலர்ப் பாதனை (நித்திய)

## 854. என்னை யாளுவாய்

பல்லவி

என்னை யாளுவாய் - நாளு
மன்னைபோல் வந்துன் றன்னை யடைந்தவனை (என்னை)

சரணங்கள்

1 சூது நிகர்தகுமுலை மாது குறத்திதனைப்
போது முகத்தைக் கண்டு பொருந்திய மயிலாளா
(என்னை)

2 வேறு கதியிலை யென்றுறு முகத்தைக் கண்டேன்
கூறு படைவேலவா குறைதனைத் தவிர்த்தே
(என்னை)

3 மஞ்சி படருஞ் சோலை மிஞ்சிய குன்றைமலை
ரஞ்சிதமுருகேசா நடன மயில்வாகனு (என்னை)

## 855. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – வேலின்
கரதல குன்றைமலைக் கரசு புரியும் வாசா (அர)

அநுபல்லவி

அண்ட பகிரண்டமுந் தொண்டரும் பணிபாதா
கண்டி னிதாகிய தண்டமிழ் வாயா (அர)

சரணம்

மீறிய சூருடல் கீறிடவே யொரு
கூறிய வேல்விடு தேறிய சமரா
தாதழ்வ் மாமணப் போதடர் பொழில்சேர்
சீதள நிறைகுன்றை மீதமர் நாதா (அர)

## 856. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் - மது
சிந்துகின்ற பொழிலுறை தென்செகண்டி மலையாய்
(வந்து)

சரணங்கள்

1 யாசைக் கிசைந்த குறநேசக் குயிலைப்புணர்
மாசற்ற புயநாதா மாமயி றனிலேறி (வந்து)

2 மையடர் மலர்க்குழற் றுய்ய தெய்வானையை
மையலுடன் மருவும் வால சண்முகவா (வந்து)

3 திங்களணி சடையார் பங்கிலுறையு மாது
மங்கள கரவுமை வாலை கௌரிபாலா (வந்து)

## 857. ஐயா யெந்தனே யாளாய்

பல்லவி

ஐயா யெந்தனே யாளாய் - மலர்ச்
செய்யா ளுறையுங் குன்றைத் தேவர் கடேவனே (ஐயா)

அநுபல்லவி

ஆண்டவனே நீபம் பூண்டவனே மயிற்
ருண்டவனே யருள் சண்முகனே குகனே (ஐயா)

சரணம்

அடியவர் நாடிய படியருள்
நீடிய வயிலக்கரா நின்றய வுடனே
மஞ்சடர் சோலைகளுஞ் சகலமு நிறை
யுஞ்சிகி மலைவரு முத்தமனேயினி (ஐயா)

## 858. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் – நாளும் (வந்து)

அநுபல்லவி

கொந்து கொந்தாய் மலர்ப்பொழில் கூடுங் குன்ருக்
குடியாய் (வந்து)

சரணங்கள்

1 மாது குறத்திதன் மீது மயக்கங் கொண்டு
மருவிய புயவா குருபர நாதா (வந்து)

2 சித்த முருகிடவே நித்தந் துதியைச் செய்யுந்
தேவர்க டேவர் மூவர்கள் மூவா (வந்து)

3 யெங்கும் பிரகாசமே தங்கும்படி கிளரு
மிலங்கு முடிக்குன்றை துலங்குங் குமரேசா (வந்து)

## 859. வால குருபர நாதா

பல்லவி

வால குருபர நாதா - யிந்த
ஞாலம் புகழுங் குன்றை நாதனே நீதனே (வால)

அநுபல்லவி

ஆறுமுகத் தெய்வமே வேறு கதியிலையே
கூறுபடை வேலவா கொண்ட வன்புன்றனை யாளாய்
(வால)

சரணம்

பூதலமெலாம் பரவு நாத சண்முகா குகேசா
யாதரவு செய்குவாய் யாண்டவா நீபம் பூண்டவா
ஆடு மயில்வாகனை தேடும் வள்ளி நாயகா
பாடுமன்ப ரன்பனே பழிமலைக் குன்ருக் குடியாய் (வால)

## 860. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்யவேணும் - நாளும் (தயவு)

அநுபல்லவி

நயமிகு குன்றை நாதனே நீதனே (தயவு)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புன வள்ளி மடவரலை
புள்ளி மயிலாளைப் புணர்ந்திடுங் கணவா (தயவு)

2 யடருஞ் சதுரங்க படையகளழிந்திடத்
திடவயில் தோடும் வேலா சேவலங் கொடியாளா
(தயவு)

3 யண்டமெலாம் புகழ் கொண்ட சிகாமலை
வண்டமிழ் மாலையாய் மதுரித வாயா (தயவு)

## 861. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே - கரு
மஞ்சார் குன்றைமலை வரத னிருக்க (அஞ்)

சரணங்கள்

1 சூர சங்கார வீர சிங்கார
பார சங்கிரும் தீர வேலனிருக்க (அஞ்)

2 மங்கை குறத்திக் கிங்கிதம் விளைக்கும்
துங்க மிகுந்த பங்க னிருக்கவே (அஞ்)

3 தாவிய பூம்பொழின் மேவிய குன்றையி
லேவியல்பாய் வருதேவ னிருக்கவே (அஞ்)

## 862. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ - யுயர்
கர்த்தன் குன்றைமலேச் சத்தி வடிவேலவன் (சித்த)

சரணங்கள்

1 நித்தம் பரவிய
பத்தன் மிடிதீர்க்க (சித்த)
2 வாசக் குழற்குற
நேசப் பேணுய்கன் (சித்த)
3 யென்று மிலங்கிய
குன்றை மலேக்குகன் (சித்த)

## 863. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குருநாதா – பன்னிரு
கரதல கமலா பரம சிவேசா (அர)

அநுபல்லவி

மங்கள வுமையாள் சங்கரி புதல்வா
துங்க மெய்மயிலா துரைக்குமரேசா (அர)

சரணம்

பாத பங்கேசா தாதவிழ் நீபா
யாதரவு செய்குவாய் ஐயனே மெய்யனே
வாவியுஞ் சோலேயு மேவிய சிகியாம்
தாவிய முகிலேசா பூவிசை மலேயா (அர)

## 864. சகலசன ரட்சகா

பல்லவி

சகலசன ரெட்சகா
மகிதலம் போற்றிய சிகிமலே நாதா (சகல)

சரணங்கள்

1 யண்ட பகிரண்டங்
கொண்ட புவனம் வாழும் (சகல)
2 சித்தர் முனிவரர்
நித்தந் துதிபாதா (சகல)

3 நின்ற பொழினிறை
குன்றை மலேவாழ்வே (சகல)

## 865. ஐயனே யெனேயாளாய்

பல்லவி

ஐயனே யெனேயாளாய்
வையம்புகழ் குன்றைமலேக் குமரேசா (ஐயனே)

அநுபல்லவி

வஞ்சனே செயுஞ்சூரை நெஞ்சிரு கூறுசெய்
மிஞ்சிய நெட்டிலே வேலணி கரனே (ஐயனே)

சரணம்

சூது நிகருமுலே மாது குறத்தியின்
மீது மயல்கொண்ட வேட யலங்காரா
வடிவுற சொன்ன மாமுடி நிரையுள குன்ருக்
குடிமலே தனில்வரு கொற்றவா யென்சாமி (ஐயனே)

## 866. தாயே யெனேயாளாய்

பல்லவி

தாயே யெனேயாளாய் – குன்றைச்
சேயே மயிலேறுந் தூயோனே யெந்தன் (தாயே)

அநுபல்லவி

யந்தர வானவர் மந்திர முனிவர்க
ளிந்திர முதலோர் பணிந்திடு சரணு (தாயே)

சரணம்

பத்தர்கள் முனிவர்கள் சித்தர்கள் தினந்தினம்
மெத்த மகிழ்ந்து பணியுத்தமனே சாமி
யோங்கிய மலர்ப்பொழில் தாங்கிய குன்றைமலே
பாங்குள மயிலாளா தேங்கடம்ப மலர்மார்பா (தாயே)

## 867. கருத்தி னினேப்பதிலேயோ

பல்லவி

கருத்தி னினேப்பதிலேயோ – நாளுங் (கருத்தி)

அநுபல்லவி

ஒருத்தர் துணேயிலே யென்றிருக்கு மன்பனேக் காக்க
(கருத்தி)

சரணங்கள்

1 சித்த பரிசுத்தமாய் மெத்த மனமுருகி
நித்த முந்தனைத் தேடும் பத்தன் றனைக் காக்க (கருத்தி)

2 தஞ்சமிலை யென்றுன் கஞ்ச மலர்த்தாளை
நெஞ்ச மறவாத மஞ்சன் றனைக் காக்க (கருத்தி)

3 வாவியுஞ் சோலையு மேவிய குன்றையை
நாவினிற் றுதிசெயு மாவலன் றனைக் காக்க (கருத்தி)

## 868. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே — மயிற்
றுண்டவனே நீபம் பூண்டவனே சாமி (ஆண்ட)

சரணங்கள்

1 வாசக் கருங்குழலி
நேசக் குறத்திபுணர் (ஆண்ட)

2 அண்ட பகிரண்டமுந்
தொண்டர் முதலோர்பணி (ஆண்ட)

3 நின்ற மலர்ப்பொழில்சூழ்
குன்றை மலைக்கிசைந்த (ஆண்ட)

## 869. வருவாய் வருவாய் ஐயனே

பல்லவி

வருவாய் வருவாய் ஐயனே — நாளும் (வரு)

அநுபல்லவி

திருவாழ் செகண்டிமலைத் தேவனே தேவனே (வரு)

சரணங்கள்

1 வள்ளி தெய்வானையை மருவிய தோளா
யள்ளிலை வேற்கரவலா மலர்ப் பதத்தாளா (வரு)

2 வாசக் கடம்பெனு மலரணி வாகா
யாசைக் கிசைந்திடு மன்பர்தனி பாகா (வரு)

3 என்று மலர்ப்பொழி லிசைந்திட சூழும்
குன்றை மலைக்கிசை கொற்றவா நாளும் (வரு)

## 870. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே - கந்தன்
அஞ்சே லென்றுனை யாண்டு கொள்வானே (நெஞ்சே)

சரணங்கள்

1 ஆசைக் கடலில் வீழ்ந்துலையாதே வைத்து
நேசத்துடன் காத்து ரட்சித்துக் கொள்வான் (நெஞ்சே)

2 செயம்படுத்தி வரு சித்திர மயிற்குண
நயப்படுத்தி யுன்னை ரட்சித்துக் கொள்வான் (நெஞ்சே)

3 யெங்கும் பிரகாச மிலங்கிய மாமுடி
தங்குங் குன்றை வரனே ரட்சிப்பான் (நெஞ்சே)

## 871. தருண மறிந்து காப்பாய்

பல்லவி

தருண மறிந்து காப்பாய் – அந்த
அருணனை நிகர்முடி யமர்சிகி மலையாய் (தருண)

அநுபல்லவி

தருவனந்தனில் வளர்வரு தினைப்புனங் காக்கு
மருமலர் புனைகுழ லோரு மயில்புணர் தோளா (தருண)

சரணம்

வல்லாண்மை மிகுந்த செல்லாரு நிறத்த
பொல்லாத வசுரரை வெல்வாய் வடிவேலா
வாவியுஞ் சோலையு மேவியே வருகின்ற
பூவியல்சேர் குன்றைத் தேவ தேவர்க்கரசே (தருண)

## 872. ஐயா குமரேசா

பல்லவி

ஐயா குமரேசா – பன்னிரு
கையா வமரேசா (ஐயா)

1 சேயா எனையாளாய் - செங்கனி
வாயா யெனையாளாய் (ஐயா)

2 சங்கரி தருபாலா - கானத்து
துங்க மயிலி லோலா (ஐயா)

3 செகண்டி மலையின் வாசா - யன்பர்க்
ககண்டிதமாம் பிரகாசா (ஐயா)

## 873. தயவு செய்யவேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் – யன்பர்க்
கியல்பு செய்யுங் குன்றைக் கிறைவனே என்சாமி (தயவு)

அநுபல்லவி

அந்தர வானவர் வந்தடி பரவிய
சுந்தர வறுமுகா சொந்தமாக வெண்ணி (தயவு)

சரணம்

வேத மலரயன் காதலு நேச
தாதவிழ் மலர் நீபா சண்முக சரவணு
கற்பக மாவனத்திற்கு முயர்ந்திடு
பற்பல வனஞ்சூழும் பசிய மலையாய் (தயவு)

## 874. கருணைப் பெருங்கடலே

பல்லவி

கருணைப் பெருங்கடலே - நாளும்
வருணத் திலுயர்முடி மயின்மலை நாதா (கருணை)

அநுபல்லவி

வேதாந்த மய
நாதாந்த வடிவே (கருணை)

அநுபல்லவி போல்

1 வானுடர் பரவும்
சேனு பதியே (கருணை)

2 நின்ருடிய பொழிற்
குன்ருக் குடிவரு (கருணை)

## 875. வந்து வரந்தருவாய்

பல்லவி

வந்து வரந்தருவாய் – மலர்
சிந்து பொழிற்குன்றை சீர்மலை வாசா (வந்து)

அநுபல்லவி

அயில்தனைப் பிடித்து
மயில்தனி லேறி (வந்து)

சரணங்கள்

1 வாசக்குழன் மங்கை
நேசத்துடன் கூடி (வந்து)

2 அண்டரு மன்பருந்
தொண்டருந் துதிக்கவே (வந்து)

## 876. வந்த வினையைத் தீராயோ

பல்லவி

வந்த வினையைத் தீராயோ – நாளுங்
கந்த மலியுஞ் சோலை கன்சிகி மலைநாதா (வந்த)

அநுபல்லவி

குகசரவண வாறு
முககுருபர நாதா (வந்த)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 மாசற்ற திருவருள்
நேசத் தினிலருளி (வந்த)

2 அன்பர் தனக் கிரங்கி
இன்பமதனைச் செய்து (வந்த)

## 877. ஆளாயோ சாமி

பல்லவி

ஆளாயோ சாமி – நாளுந்
தாளாத குன்றைமலைச் சண்முகனே யென்னை (ஆளா)

சரணங்கள்

1 உந்தனை அனுதினம் வந்தனை புரிந்தே
சிந்தனை செய்கின்ற எந்தனை நிதநிதம் (ஆளா)

2 சித்த மிரங்கிட நித்தந் துதிசெயும்
பத்தன் மனப்படி யுத்தமனே யினி (ஆளா)

3 மாமலர்ப் பொழில்கடர் மகலா தானவர்
மிகுந்த குன்றை நாம வடிவேலவா (ஆளா)

## 878. எண்ண மெப்படியோ

பல்லவி

எண்ண மெப்படியோ - ஐயன்
வண்ணமிகுங் குன்றை மாமலைநாதன் (எண்ண)

அநுபல்லவி

அஞ்சலென் றென்போரை யாதரிக்கவோ
வஞ்ச வினைகளை மாற்றி வைக்கவோ (எண்ண)

சரணம்

யாசைக் கடல்தனிலாழச் செய்யவோ
மாசற்ற துன்பத்தை மாளச் செய்யவோ
மன்றன் மலர்நிகர் வாசிக்கும் பாதன்
குன்றை மலைவளர் குருபர மெய்யன் (எண்ண)

## 879. திருவருள் புரிவாயே

பல்லவி

திருவருள் புரிவாயே - நல்ல
தருவளர் குன்றைமலைச் சண்முக நாதா (திரு)

சரணங்கள்

1 யந்தர வானவர் வந்தடி பரவு
மையனே பன்னிரு கையனே யுன்னுட (திரு)

2 வாசக் கரியகுழ னேசச் குறமினளை
மருவிய புயனே யருமை யுடனே (திரு)

3 நின்றசை பொழிலுயர் குன்றையின் மலைவரு
நீதனே மலர்ப் பாதனே சாமி (திரு)

## 880. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் - குன்றை
நாயனே யெங்கள் சேயே யென்சாமி (நீயே)

அநுபல்லவி

கங்கை தரித்தசடை திங்கடரித்தமுடி
யெங்கள் பரமேசர்க் கிசைந்திடும் பாலா (நீயே)

சரணம்

தாதவிழ் மணமலிப் போதனி கருங்குழல்
மாதரசி யுமையாள் மகிழ்ந்திடு பாலா
மிஞ்சு பிரகாசஞ் சேர் மஞ்சடர் மணிமுடி
கஞ்சு மலரின் வாவிகமழ் சிகிமலை வாழும் நீ (நீயே)

## 881. ஆறுமுகக் கடவுளே

பல்லவி

ஆறுமுகக் கடவுளே – நல்ல
கூறுபடை வேலணி வீறுபடை வீரனே (ஆறு)

சரணங்கள்

1 கஞ்சமலர்ப் பாதனே - யெனக்குத்
தஞ்சமிலே நாதனே (ஆறு)

2 காலனை நீ யோட்டுவாய் – துன்பத்தை
மேலுமினி யோட்டுவாய் (ஆறு)

3 மஞ்சடருங் குன்றை யாளாய் – யன்பர்
நெஞ்சிலுறை மலர்ப்பாதா (ஆறு)

## 882. சரவணபவ நாதா

பல்லவி

சரவணபவ நாதா – யருள்
பரம சிவேசா பரிமள பாதா (சர)

அநுபல்லவி

யந்தரி யாமளை
தந்தருள் பாலா (சர)

சரணம்

வாசக் கடம்பா
குகேசா கிர்பாநிதி
நின்ருழ்க் கடிமைசெய்
குன்ருக் குடிவரு (சர)

## 883. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ
உத்தமனே குன்றைக் குகந்தவனே சாமி (சித்த)

அநுபல்லவி

வம்பலரணி குழலம்பிகை கௌரி
சம்பு சதாசிவ நம்பர்தரும் பாலா (சித்த)

சரணம்

குயிலாகிய மொழிமயிலாகிய சாயல்
பயிலாகிய வள்ளிக் கொயிலா வயிலா
யெங்கணும் பிரகாசந் தங்கு முடியுயர்ந்த
துங்கமிகுஞ் செகண்டி யங்கிரி வருநாதா (சித்த)

## 884. முருகேசனே

பல்லவி

முருகேசனே - நல்ல
தருசூழ் சிகாமலை நாதனே (முரு)

சரணங்கள்

1 யமரேசனே - யருள்
குமரேசனே (முரு)
2 தயவாளனே - வள்ளி
நயவாளனே (முரு)
3 கதிர்வேலனே - யன்பர்
துதிகாலனே (முரு)

## 885. துதிப்பாயே மனமே

பல்லவி

துதிப்பாயே மனமே - யன்பர்
மதிப்பாகுங் குன்றைமலைக் குமரேசனை (துதி)

அநுபல்லவி

வானுடர் பணிதேவ
சேனுபதிதனை (துதி)

சரணம்

யமரா வரு சூரைச்
சமராடிய வேலனை
தெள்ளிய தினைப்புன
வள்ளி மணாளனை (துதி)

## 886. மயில்மீது வருவாயே

பல்லவி

மயில்மீது வருவாயே - நல்ல
யயின்மீறுங் கரதலா அறுமுக நாதா (மயில்)

அநுபல்லவி

வள்ளி தெய்வானையை மருவிய தோளா
தெள்ளிய தமிழ்வாயா சிலம்பிசை தாளா (மயில்)

சரணம்

வாசமிகுங் கடம்ப மாலையணியும் வாகா
நேச வடியார்பணி நிர்மல தேகா
சீதள மாமலர்த் திவ்விய சோலை ஒரு
காதல்கொள் சிகிமேரா கனிவுடனே நாளும் (மயில்)

## 887. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா - நல்ல
கூடிய வொயிலா (ஆடிய)

அநுபல்லவி

நெட்டிலே வேலா - வெகு
கட்டுன் சீலா (ஆடிய)

சரணம்

வாசிக்கு நீபா – வள்ளி
நேசிக்கும் ரூபா
மலைச்சிகி யீசா – யாறு
தலைக்கும ரேசா (ஆடிய)

## 888. வாராயோ சாமி

பல்லவி

வாராயோ சாமி - யனுபூதி
தாராயோ சாமி (வாரா)

அநுபல்லவி

யந்தர ரூபா - விளங்கிய
சுந்தர தீபா (வாரா)

சரணம்

தங்கமின் வேலா - யருள்
சங்கரி பாலா
நன்றருள் பாதா - முடிக்
குன்றையி னுதா (வாரா)

## 889. முருகா உனை நம்பினேன்

பல்லவி

முருகா உனை நம்பினேன்
திருமாமறை புகழ்செகண்டி மாமலைவரு (முருகா)

அநுபல்லவி

பச்சை மயிலேறிய
செச்சை புனைபுயவா (முருகா)

சரணங்கள்

1 வாது புரியுஞ் சூரை
மோது படையால் வென்ற (முருகா)
2 வஞ்சனை வினையெலாம் பஞ்சு
பஞ்சு பஞ்சாகச் செய்யும் (முருகா)

## 890. கடைக்கண் பாரய்யா

பல்லவி

கடைக்கண் பாரய்யா
மடக்கொடி குறவஞ்சி மணாளா (கடை)

அநுபல்லவி

தேவி தெய்வானை மேவிய புயவா
கூவி விளையாடித் தாவிய மயிலா (கடை)

சரணம்

சீதள மாகிய தாதவிழு மணப்
போதணியு நீபா நீதய வாகவே
யெங்கணுமே யொளிர் தங்கமணி முடிக
ளிலங்க வளர்குன்றை யங்கிரி வாசா (கடை)

## 891. சமயம் பார்த்தருள்வாய்

பல்லவி

சமயம் பார்த்தருள்வாய் – நல்ல
கமழ்மலர்க் குழலி குமரி யருளும் பாலா (சமயம்)

அநுபல்லவி

பொல்லாத நோயினல் வல்லாண்மை குறைந்து
போகாமல் மனஞ்சாகா மலந்தச் (சமயம்)

சரணம்

தீவினைப் பயனாலே யாவி துடித்திடவே
செய்யா மனநையா மலர்ந்தச்
சோலை குலாவிய யாலைய மாகிய
சொந்த மயின்மலையாய் நொந்துபோகாமலந்தச் (சமயம்)

## 892. மனம் மகிழ்ந்தாள்வாய்

பல்லவி

மனம் மகிழ்ந்தாள்வாய் – உயர்
கனக முடிக்குன்றைக் கர்த்தனே யுந்தன் (மனம்)

சரணங்கள்

1 யுந்த னிருபதம் வந்தனை புரியு
மெந்தனை யன்புட னிச்சை யதாகவே (மனம்)
2 வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
போது தரிக்கும் வேலா புனிதா புனிதா வுந்தன் (மனம்)
3 கறைமுகி ருவும் நிறைபொழில் சூழும்
மறைபுகழ் குன்றை மலைக்குகா வுந்தன் (மனம்)

## 893. நலந்தர வேணுமையனே

பல்லவி

நலந்தர வேணுமையனே – சிவ
தலந்தனி லுயர்குன்றைச் சண்முக நாதா (நலந்)

அநுபல்லவி

ஆறுமுகத் தெய்வமே
வேறு கதியிலையே (நலந்)

சரணம்

குககும ரேசா
யகமகிழ் வுடனே
சரவண பவனே
யரகர சிவனே (நலந்)

## 894. என்னை ஆளுமையா

பல்லவி

என்னை ஆளுமையா – யொளிர்
பொன்னை மீறுமுடி பொருந்திடு சிகாகிரியாய் (என்னை)

அநுபல்லவி

மாது குறத்திக்கு மாலை தரித்தவர்
போது மணக்கு நீபப் புனிதநன் மாலையாய் (என்னை)

சரணம்

வஞ்ச வசுரனை மாய்த்திடு வேலா
நஞ்ச மிடற்றினர் நல்கிய பாலா
மண்டிய பூம்பொழில் வளைந்திடுஞ் சாசற்
செகண்டி மலைக்கிசை கர்த்த குகேசா (என்னை)

## 895. ஆதாரம் செய்வாயே

பல்லவி

ஆதாரம் செய்வாயே – யெந்தன்
ருதர செகண்டிமலைச் சண்முக நாதா (ஆதா)

சரணங்கள்

1 வாது புரியுஞ் சூரை மாய்த்திடு வேலா
மாது குறத்தி தன்னை மருவிய லோலா (ஆதா)
2 அஞ்சாதே யென்றென்னை யாதரிப் பாயே
நெஞ்சார மகிழ்ந்தினி ரட்சிப்பாய் நீயே (ஆதா)
3 நின்ற மலர்ப்பொழில் கணிறைந்த சிகேசா
நின்றருள் புரிகுவை நயக்குங் கிருபேசா (ஆதா)

## 896. கண்டாற் போதாதோ

பல்லவி

கண்டாற் போதாதோ – மனமே (கண்டாற்)

அநுபல்லவி

வண்டார் பொழிற் குன்றைமலைக் குமரேசனைக் (கண்டாற்)

சரணங்கள்

1 யெந்த விதத்திலும் வந்த வினையைத் தீர்க்க
சிந்தை மகிழ்ந்தருளைச் செய்யுங் குமரேசனைக் (கண்டாற்)
2 யண்டரை யிம்மிசை கொண்ட வசுரனெனும்
வண்டவ சுரன்றனை மாய்த்த குமரேசனைக் (கண்டாற்)
3 யெங்கும் பிரகாச மதுதங்குங் கனகமுடி
யங்கமிகுந்த குன்றை யதிபன் குமரேசனைக் (கண்டாற்)

## 897. குருநாதா வருவாய்

பல்லவி

குருநாதா வருவாய் - வேணு
அருள் யாவுந் தருவாய் (குரு)

சரணங்கள்

1 யாசைப் பெருங்கடல் வீழ்ந்தாழாமல் - யெந்தத்
தேசத்தினு மலைந்து சூழாமல் (குரு)
2 தனைக்குஞ் சமுசாரத்தான் மெலியாமல் – துன்பம்
விளைக்கு மடவியர்பால் நலியாமல் (குரு)
3 தேவர்கண் முனிவர்கள் பணிபாதா – நாளும்
பாவடி டியருந் துதிநாதா (குரு)

## 898. ஆண்டவனே யெனையாளாய்

பல்லவி

ஆண்டவனே யெனையாளாய் - நீபம்
பூண்டவனே மயிற்றுண்டவனே சாமி (ஆண்ட)

அநுபல்லவி

பன்னிரு கையேந்தும் பாலா வடிவேலா
நன்னிதி யடியர்க்கு நல்கிய சீலா (ஆண்ட)

சரணங்கள்

1 சூர சங்கார துரைக்கும ரேசா
சார யிங்கிதமான தமிழ்ச்சொலு மீசா (ஆண்ட)
2 வானவர் முனிவரர் வணங்கிய பாதா
குன்றையி னயத்திடு நாதா (ஆண்ட)

## 899. ஆடிய மயில்வாகனு

பல்லவி

ஆடிய மயில்வாகனு - யன்பர்
நாடியபடி யருணல்கிய மோகனு (ஆடிய)

அநுபல்லவி

நித்திய மன்பர் துதித்திடும் பாதா
நித்திசெயும் பத்தர் தேடிய நாதா (ஆடிய)

சரணம்

வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
சூது செயும் வேலா சுத்தரன் விசையா
வண்டலர் நிறைதரு தண்டலே சூழ்தரு
கொண்டல் படியுஞ் செகண்டி மலேயில் வாசா (ஆடிய)

## 900. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ
கர்த்தனே குன்றைமலே யுத்தமனே சாமி (சித்த)

சரணங்கள்

1 அஞ்ச வேண்டாமென்று வஞ்ச மிலாமலே
யாதரவு செய்ய நீதய வாகவே (சித்த)
2 செங்கையில் வேலேந்தி தங்க மயிலிலேறி
செய செயென வந்துநய மதியாவுஞ் செய்ய (சித்த)
3 மன்றலம் பொழிலுறை குன்றை மலேயில் வாழும்
ஐயனே பன்னிரு கையனே யுன்னுட (சித்த)

## 901. முருகா வுனே நம்பினேன்

பல்லவி

முருகா வுனே நம்பினேன் - யன்ப
ரிருகாலமும் பணியொளிர் சிகிமலேக்கிசை (முரு)

சரணங்கள்

1 சின்ன நடைபயிலும்
வன்ன மயி லேறிய (முரு)
2 வாது புரியுஞ் சூரை
மோது படையால் வென்ற (முரு)
3 நின்ற பொழிலுலவுங்
குன்றை மலேயில் வரும் (முரு)

## 902. வாராயோ ஐயனே

பல்லவி

வாராயோ ஐயனே - வந்துன்கண்
பாராயோ வையனே (வா)

சரணங்கள்

1 பன்னிரு கரதலனே - யன்பர்க்கு
நன்னிதி யருள்நலனே (வா)

2 வந்த தீவினை தீரவே – யினி
யந்த நல்வினை சேரவே (வா)

3 நின்றசை பொழில்திருந்து - முடிக்
குன்றையின் மலையிலிருந்து (வா)

## 903. தண்டாயுதத் தெய்வமே

பல்லவி

தண்டாயுதத் தெய்வமே – நாளும்
வண்டார் பொழிற் குன்றைமலைக் குமரேசனே
(தண்டா)

அநுபல்லவி

கானக் குறத்தி பாகா – யந்த
வானத்தர் பணியோகா (தண்டா)

சரணம்

ஆண்டவனே குகனே - அரவம்
பூண்டவனர் மகனே
குன்றையின்மலை வாசா – யாவர்க்கு
நன்றருளிய ஈசா (தண்டா)

## 904. நடன மாமயிலா

பல்லவி

நடன மாமயிலா - யெந்த
னிடம்வருவா யொயிலா (நடன)

சரணங்கள்

1 அண்ட பகிரண்ட மெண்டிசையு மசை
கொண்டிட வண்டர்கள் கண்டதிசயமிட (நடன)

2 தானவருட குலமீன மதாகவே
வானவ ரானவொரு மேனல மாகவே (நடன)

3 வாவியும் பொழில்களு மேவியே நிறைதரு
தூவி நிரைநிறை தாவிய சிகிமேரா (நடன)

## 905. தயவு செய்வாயே

பல்லவி

தயவு செய்வாயே – நன்
னயமிகுந்த குன்றை நாயகனே சாமி (தயவு)

சரணங்கள்

1 யுந்தன்றனைப் போற்று
மெந்த னிடத்தினில் (தயவு)

2 தண்ணடிதனை நெஞ்சி
லெண்ணிய வடியன்மேல் (தயவு)

3 குயின்முடி மிசைதவழ்
மயின்மலை முருகேசா (தயவு)

## 906. மனதே மறவாதே

பல்லவி

மனதே மறவாதே (மனதே)

அநுபல்லவி

கனகாசலக் குன்றைக் கர்த்தன் பதாம்புயத்தை (மனதே)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகர
புள்ளி மயிலிலேறு மள்ளிலை வேலோனை (மனதே)

2 தேடிய வடியர் பாலாடிய மயிலேறி
யோடி வருகிற மோடி புள்குகனை (மனதே)

3 மிஞ்சி தவழ்முடி கஞ்ச மலரின் வாவி
மிஞ்சிய சிலைரஞ்சித நாதனை (மனதே)

## 907. வடிவேலவா

பல்லவி

வடிவேலவா – குன்றுக்
குடிநாதனே (வடி)

சரணங்கள்

1 போரிலே யெதிர்தீரனும் – மகா
வீரனாகிய சூரனையடும் (வடி)

2 மிஞ்சவளர் கிரவுஞ்ச மீதிலு
யஞ்ச நேமி யுறுஞ்சவேலிடு (வடி)
3 வாதடர்கமழ் தாதவிழ்பொழில்
மீதடர் சிகிச் சீதளமலை (வடி)

## 908. வாராயோ சாமி

பல்லவி

வாராயோ சாமி – வந்துவரந்
தாராயோ சாமி (வாரா)

அநுபல்லவி

வானவர் பணிபாதா - மகா
ஞானவர் பணிபாதா (வாரா)

சரணம்

சங்கரிதரு பாலா – வள்ளி
மங்களமயில் மாலா
யன்பர்களுட நேசா – யந்தத்
தென்சிகிமலை வாசர (வாரா)

## 909. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே - உயர்
மஞ்சார்பொழிற் குன்றைமலைக் குமரேசனை (நெஞ்சே)

சரணங்கள்

1 சங்கரி திரிபுரை பாலனைக் – கான
மங்கைகுற மயிலோலனை (நெஞ்சே)
2 துங்க நடனமிடு மயிலனைச் – சோதித்
தங்க மயமாகிய அயிலனை (நெஞ்சே)
3 குன்றுக்குடி மலைவாசனை - நாளுந்
தன்றாழ்க் கன்பர்கள் நேசனை (நெஞ்சே)

## 910. மனதுக்குத் திடஞ்சொலுவாயே

பல்லவி

மனதுக்குத் திடஞ்சொலுவாயே
தினகரனொளி முடிச் செகண்டி மலையின் வாசா (ம)

அநுபல்லவி

அந்தர வானவர் வந்தடி தனைப்பணி
கந்த மலரைநிகர் சந்தமிலகும் பாதா (மனது)

சரணம்

யாடிய மயிலேறி யோடி விளையாடி
நாடிய வன்பரைத் தேடி வருங்குகா
நின்றுழ்க் கன்பரை நன்றுக வாழுங்
குன்றுக் குடிமலை நன்று ளாயரா (மனது)

## 911. செங்கனி வாயா

பல்லவி

செங்கனி வாயா
மங்கள சிகிமலைவரு குமரேசா (செங்கனி)

சரணங்கள்

1 சீதள மாமலர் வேதனு ருக்கும்
நாதருக்கு மந்திரங் காதலுடன் சொல்லும் (செங்கனி)
2 மங்கள யுமைகௌரி செங்கையி லேந்தி
பங்கய முகைநிகர் கொங்கை கொடுக்கவுண்ணும்
(செங்கனி)
3 மண்டிய பொழிலின் செகண்டி மலையின் வாசா
தொண்டர்கடம் மனங் கொண்ட படியருளும் (செங்கனி)

## 912. கடைக்கண் பாரய்யனே

பல்லவி

கடைக்கண் பாரய்யனே – யுந்த
னடைக்கலமென வடைந்தோரைக் காக்க (கடை)

அநுபல்லவி

கந்த மலர்க்கிணை
யுந்த னனுக்கிரக (கடை)

சரணங்கள்

மின்னிய மலர்போலும்
பன்னிரு திவ்விய
யொயின்முருகேசா
மயின்மலை வாசா (கடை)

## 913. வரந்தருவாய் குகனே

பல்லவி

வரந்தருவாய் குகனே – யன்பர்
தரந்தரம் பணிகுன்றைச் சண்முக நாதா (வரந்)

அநுபல்லவி

வாசக் கடம்பணியும் வாகனே – நாளும்
நேசக் குறத்திபுணர் போகனே (வரந்)

சரணம்

மங்கள மாதுமை பாலனே – உயர்
தங்க மயமான வேலனே
மன்றன் மலர்ச்சிகி மோரனே – நல்ல
நன்றி யெனக்கரு டீரனே (வரந்)

## 914. ஆண்டருள்வாயே

பல்லவி

ஆண்டருள்வாயே – மயிற்
ருண்டவனே யருட்சரவண பவனே (ஆண்ட)

அநுபல்லவி

நங்கைகுற மயிலோலா - வெகு
துங்க மயிலேறும் வேலா (ஆண்ட)

சரணம்

சூரனை வென்றிடு வீரனே – நீப
வார மணந்திடு மாரனே
யகண்ட பூரண யீசனே - முடிச்
செகண்டி மாமலை வாசனே (ஆண்ட)

## 915. முருகேசனே

பல்லவி

முருகேசனே – மாயன்
மருகேசனே (முருகே)

அநுபல்லவி

குமரேசனே - சூரன்
சமரேசனே (முருகே)

சரணம்

குகநாதனே - யாறு
முகநாதனே
வடிவேலனே – குன்றுக்
குடிவேலனே (முருகே)

## 916. எந்தனை ஆதரிப்பாய்

பல்லவி

எந்தனை யாதரிப்பாய்
கொந்தலர்சேர் பொழிற் குன்றையின் மலையாய்
(எந்தனை)

அநுபல்லவி

பங்கய மாமலர்ப் பாதனே – பச்சைத்
தங்க மயிலேறு நாதனே (எந்தனை)

சரணம்

கானக வள்ளி மணாளா - நீபத்
தேனல ரணியுந் தோளா
மந்திர மறையவர் துதியா – யுய
ருந்திகழ் குன்றையம் பதியா (எந்தனை)

## 917. ஈசனே குகனே

பல்லவி

ஈசனே குகனே – குன்றை
வாசனே குகனே (ஈசனே)

சரணங்கள்

1 போது தரித்தகுழன் மாது குறத்தி பங்கா
வாது மிகுந்த சூரன் மீது தொடுத்த வேலா (ஈசனே)

2 கும்பல் கும்பலாக யும்பர் முதலினோர்
பம்புஞ் சமுகேசா நம்பினேன் யெனையாளாய் (ஈசனே)

3 அன்பர் முனிவரர் முன்புசெய் தீவினை
வன்பு செய்வதைத் தீர்க்கும் தென்சிகி மலைநாதா
(ஈசனே)

## 918. எண்ண மெதுக்கு

பல்லவி

எண்ண மெதுக்கு – மனமே
வண்ண மயின்மலே வாச னிருக்கையில் (எண்ண)

சரணங்கள்

1 பொன்னங் கொடிநிகர் சின்னயிடை வள்ளி
கன்னல் மொழியாள் காதல னிருக்க (எண்ண)
2 சூது நிகருமுலே மாது தெய்வானேதன்
மீது மயல்கொண்ட வேலவ னிருக்க (எண்ண)
3 பன்னக வைப்பினின் மின்னன முடிசுமைந்
துன்னதமாங் குன்றைக் கொருவ னிருக்க (எண்ண)

## 919. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே - நாளுநன்
னயங்காணு முனக்குச் செயங்காணுந் தினமே (மயங்)

சரணங்கள்

1 யெந்த விதத்திலு முந்த னினேவின்படி
வந்த வினே தீர்த்து மயின்மிசை வருவார் (மயங்)
2 வையகந் தன்னிலே யுய்யும்படி யருளேச்
செய்யும் படியேயினி செய்குவர் செய்குவர் (மயங்)
3 பொன்மய மாகிய மின்முடி மேவிய
தென்சிகி மலேவரு தேவ தேவ னிருக்க (மயங்)

## 920. சுகந்தருவாய் ஐயனே

பல்லவி

சுகந்தருவாய் ஐயனே - சகல (சுகந்)

அநுபல்லவி

செகம்புகழுங் குன்றைத் தேவ தேவா (சுகந்)

சரணங்கள்

1 பொருந்தியபடி யருடருந் தெய்வமே - யினி
வருந்துய ரனேத்தையு மாற்றிய தெய்வமே (சுகந்)
2 யாசைக் கடலில் வீழ்ந்து மோசப் படாமலே
வாசிச் செகண்டியெறி தாசற் கருளேச் செய்து (சுகந்)

3 சாரல் சிறந்த குன்றை மேரத்தி லிலங்கிய
வீர வடிவேலவா யாரமணி புயவா (சுகந்)

## 921. கருத்தனே ஆளாய்

பல்லவி

கருத்தனே ஆளாய் - யெனக்
கொருத்தருமிலே திருச்சிகிமலைக் (கரு)

அநுபல்லவி

நெஞ்சிற் றுயரை மிஞ்சிடாவகை
நிறுத்தியே கனப்பொறுத்த வேலவா (கரு)

சரணம்

வல்லமையினுல் வெல்லசுரனே
மாய்த்தவனே கனம் வாய்த்தவனே சாமி
மயின்மலைதனி லொயிலுடன் வரு
வாசனே குமரேசனே சாமி (கரு)

## 922. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – பரி
சுத்தனே குன்றைக் கர்த்தனே யுந்தன் (சித்த)

அநுபல்லவி

ஈசனே பிர
காசனே யுந்தன் (சித்த)

சரணம்

வாசக் களபமுலே
நேசக் குறத்தி பாகா
நின்று லாவுமுடிக்
குன்றைமலே நாதா (சித்த)

## 923. அரகரா முருகேசா

பல்லவி

அரகரா முருகேசா – மேருத்
தரமுடிக் குன்றைமலேச் சண்முக நாதா (அர)

அநுபல்லவி

வஞ்சச் சூரனை மாய்த்திடும் வேலா
நெஞ்ச மகிழன்பர் நினைத்திடும் சீலா (அர

சரணம்

அண்டர்கண் மிடிதனை யலைத்திடு சூரா
தொண்டர்கண் வினைதனைத் துலைத்திடு சீரா
குன்றுக்குடி மலைக்குக குமரேசா
நின்றுழ்க் கன்பரை ரட்சிக்கு மீசா (அர)

## 924. தெண்டனிட்டேனே

பல்லவி

தெண்டனிட்டேனே – யுய
ரண்டர்பிரான் குன்றை யாண்டவனைக் கண்டு (தெண்ட)

அநுபல்லவி

வருவினைதனைத்தீர்த்துப் பருவரல்தனைத் தீர்த்து
யிருபொழுதும் பணிந்தொரு மனதாய் நின்று (தெண்ட)

சரணம்

வாச மலர்கொண்டு பூசனையே செய்து
நேச மதாகவே பாசமதை நீக்கி
மண்டலம்பணி தொண்டரும்பணி
கொண்டிடு நற்செகண்டி மலையோனை (தெண்ட)

## 925. என்னை யாளுவாய்

பல்லவி

என்னை யாளுவாய் - நயப்
பொன்னைநிகர் குன்றுக்குடி நாதனே (என்னை)

அநுபல்லவி

சூரை வென்றிடும்
வீர வேலவா (என்னை)

சரணம்

பங்கயமலர்ச்
செங்கை வேலவா
குன்றை மலையின்
வென்றி வேலவா (என்னை)

## 926. வருவாய் குமரேசா

பல்லவி

வருவாய் குமரேசா - வரந்
தருவாய் குமரேசா (வரு)

அநுபல்லவி

அடியார் மிடிதீராய் — குன்றுக்
குடியாய் யருள்தாராய் (வரு)

சரணம்

மகபதி மருகேசா — யாறு
முகபதி முருகேசா
தானவர் குலகாலா — யந்த
வானவர் பணிவேலா (வடி)

## 927. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா - குன்றை
வரைக்குமரேசா (துரை)

சரணங்கள்

1 பைந்தார் புனையுஞ் சிந்தா மணியே
கந்தா அறுமுகக் கார்த்தி கேசா (துரை)

2 சதுமறைபுகழ் பதும பாதனே
விதுமுகச் சிவ விமலனே யருள் (துரை)

3 அடியவர்பணி முடினிரை குன்றுக்
குடிவரைதிரு குருபராயா (துரை)

## 928. நடன மயில்வாகனு

பல்லவி

நடன மயில்வாகனு - யுயர்
வடவரை நிகர்சிகிமலேக் குமரேசா (நடன)

அநுபல்லவி

கடம்பணி மணிமார்பா - பொல்லா
யடம்புரி சூர்காலா (நடன)

சரணம்

சங்கரி தருபாலா – யன்பர்க்
கிங்கிதந் தருசீலா
கனக முடிகள் மேவும்
தினமுயர் சிகிமேரா (நடன)

## 929. வேண்டிக் கொள்ளுவாய்

பல்லவி

வேண்டிக் கொள்ளுவாய் - மனமே
பூண்டயங்கு முடிப்பொன் குன்றை நாதனை (வேண்டி)

சரணங்கள்

1 கானக வள்ளியைக் கலந்திடும் புயனை
வானவர் ஞானவர் வந்திக்கு நயனை (வேண்டி)

2 தஞ்சமென் றன்பரைத் தாங்கிய பாதனை
நஞ்ச மிடற்றினர் நயத்திடுஞ் சுதனை (வேண்டி)

3 பங்கய மாமலர்ப் பன்னிரு கரனை
துங்க மயிலின்மலை துலங்கு மீஸ்வரனை (வேண்டி)

## 930. சம்பு சதாசிவனே

பல்லவி

சம்பு சதாசிவனே - நாளும்
நம்பு மடியர்பணி சம்பிரம மான குன்றை (சம்பு)

அநுபல்லவி

குருபர குமரா
மருமலர் நீபா (சம்பு)

சரணம்

வள்ளி மணாளா
புள்ளியின் மயிலா
நாத சண்முகனே
பாத பங்கயனே (சம்பு)

## 931. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே - கான
வண்டார் பொழிற் குன்றைமலைக் குமரேசனே (தண்டா)

அநுபல்லவி

தேனலரணி குழற்கானக மாதினை
தானனையும் புயா சண்முக நாதா (தண்டா)

சரணம்

யண்டர்கள் யருமைசெய் தொண்டர்கள் பணி
கொண்டவனே யருள் குருபர குமரா
தாவிய பூம்பொழில் மேவிய குன்றையாய்
கூவிய மயில்வாகா குககும ரேசனே (தண்டா)

## 932. குருபர குமரா

பல்லவி

குருபர குமரா
திருமகண் மருகா (குரு)

அநுபல்லவி

அமரர்கள் முதல்வா
சமர்பொன் வேலா (குரு)

சரணம்

அன்பா சகாயா
இன்புறு வாயா
வண்டலர் நீபா
தண்டமிழ் நாதா
நன்றருள் புரிவாய்
குன்றையின் வாசா (குரு)

## 933. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே
மஞ்சார் பொழிற் குன்றைமலைக் குமரேசனை (நெஞ்சே)

சரணங்கள்

1 வாதின்மிகுஞ் சூரனை மோதியுடனே வென்ற
வாலவடி வேலனைக் கோல மயில்வாகனை (நெஞ்சே)

2 தெள்ளிய தினைப்புன வள்ளி மணாளனைத்
தேனலர் மார்பனை வானர் சகாயனை (நெஞ்சே)

3 யெட்டி வளரும்பொழில் முட்டியுயர் வானுல
கெங்கு நிழல்விரிக்குந் துங்கசிகி மேரனை (நெஞ்சே)

## 934. உனைப் பணிந்தேனையனே

பல்லவி

உனைப் பணிந்தேனையனே - நாளுஞ்
சினைப்பொழில் சூழ் குன்றைத் தேவ தேவனே (உனை)

சரணங்கள்

1 வாசக் கரிய குழனேசக் குறத்தியுட
மாலனே வடிவேலனே சாமி (உனை)

2 வஞ்ச வசுரனை நெஞ்சு பகிர்ந்திட
மாய்த்தவனே நயம் வாய்த்தவனே சாமி (உனை)

3 நீடிய பொழில்வளங் காட்டிய சிகிமலை
நீதனே மலர்ப்பாதனே சாமி (உனை)

## 935. திருவுள்ள மெப்படியோ

பல்லவி

திருவுள்ள மெப்படியோ - நாளு
மருவுள்ள பொழிற் குன்றைமலைக் குமரேசன் (திரு)

சரணங்கள்

2 வெம்பிய போர்புரி கம்பமிசை யுலவு
தும்பி முகவருள் தம்பி குமரேசன் (திரு)

2 மானனையாள் கன்தேனலர் சூடிய
கானக வள்ளி தெய்வானைதன் மணவாளன் (திரு)

3 யொருமனதாய் பிரறிரு வடிதுதி யன்பர்க்
கருள்புரி குகநாதன் பெருமை சேரிடுபாதன் (திரு)

## 936. கடைக்கண் பாரையா

பல்லவி

கடைக்கண் பாரையா
மடைக்கண்போல் மதுவொழுகிய மலர்ப்பொழில் குன்றைக்
குமரேசா (கடை)

சரணங்கள்

1 வாது புரியுஞ்சூரபத்மனை மாய்த்திடும் வடிவேலா
மாது குறத்தி கானமயிலை மயக்கிய லீலா (கடை)

2 யண்டர் முனிவர் கணடிபணி கொண்ட பாதனே
மண்டலம் புகழுங் கிர்பானிதே தொண்டர் நாதனே (கடை)

3 யாடிய மயில்தனிலே விளையாடிய குகனே
தேடிய வன்பர் சூழ்தருங் குன்றைத் தேவ சண்முகனே
(கடை)

## 937. ஐயனே குகனே

பல்லவி

ஐயனே குகனே – ஆதி
மெய்யனுர் மகனே (ஐயனே)

சரணங்கள்

1 கோபத்தால் வருசூரனை - வென்ற
நீபத்தார் புனைபுயனே (ஐயனே)
2 வாசக்கரிய குழலினுள் – வெகு
நேசக் குறத்தி கணவனே சாமி (ஐய்னே)
3 மண்டிய பொழில் சூழ்தருஞ்
செகண்டி மாமலை வாசனே சாமி (ஐயனே)

## 938. நினைத்துக் கொள்வாய் மனமே

பல்லவி

நினைத்துக் கொள்வாய் மனமே – நாளு
மனைத்துலகும் புகழ்ஐயனை மெய்யனை (நினை)

சரணங்கள்

1 யுந்தன் வினைகளெல்லா மெந்த விதத்திலுஞ்
சிந்தச் சிதறச் செய்யுங் கந்த சுவாமியை (நினை)
2 வாசக் களபமுலை நேசக் குறமயி
லாசைக் கிசைந்த குகேசக் குமரனை (நினை)
3 வாவியுஞ் சோலையு மேவி நிறைந்திடு
கூவிய மயின்மலைத் தேவ வடிவேலனை (நினை)

## 939. வருவாய் அமரேசனே

பல்லவி

வருவாய் அமரேசனே - யருள்
தருவாய் குமரேசனே (வரு)

அநுபல்லவி

வள்ளி தெய்வானை லோலனே - நடனப்
புள்ளி மயிலின் வேலனே (வரு)

சரணம்

வாது புரியுஞ் சூரனே - விழ
மோது வடிவேல் வீரனே
மீறியபொழிற் றேகையா - மனே
யேறிய வெகுயோகையா (வரு)

## 940. இன்னம் தயவு வரவிலையோ

பல்லவி

இன்னம் தயவுவர விலையோ - உயர்
பொன்னின்முடிச் செகண்டிப் பூபனே சாமி (இன்னம்)

சரணங்கள்

1 ஆடிய மயிலேறி வந்து — நாளுந்
தேடிய பேர்க்கரு டந்து - நாளும்
ஆண்டவனே நீபம் பூண்டவனே சாமி (இன்னம்)

2 தேவர்கள் பணியும் பாதா - அந்த
மூவர்கள் பரவு நாதா — செய்ய
சேவலனே யெந்த ஞவலனே சாமி (இன்னம்)

3 அண்டர்கள் தொண்டர்க ளுளும் — பணி
கொண்டு மலர்ப்பொழில் சூழும் - குன்றை
ஐயனே பன்னிரு கையனே சாமி (இன்னம்)

## 941. உன்னை நம்பினேன்

பல்லவி

உன்னை நம்பினேன் — மலர்ப்
பொன்னையணியுங் குன்றை மன்னவனே சாமி (உன்னை)

அநுபல்லவி

வாசக் களபமுலை நேசக் குறமயிலை
மருவிய பன்னிரு புயா சாமி (உன்னை)

சரணம்

வஞ்ச வசுரனை நெஞ்சை யிருகூருய்
மாட்டியக் கூருள நீட்டிய வேலவா
கந்த மலர்ப்பொழி லுந்திய தோகைச்
செகண்டி மலைவரு மண்டர் பணிதாளா (உன்னை)

## 942. ஐயனே ஆளாய்

பல்லவி

ஐயனே ஆளாய் - ஆதி
மெய்யனே குகனே (ஐயனே)

அநுபல்லவி

பங்கச பாதனே – தமிழ்க்
கிங்கித நாதனே (ஐயனே)

சரணம்

வடிவேலனே - யிரு
விடிவே் கோலனே
குன்றை வாசனே – யெனக்
கென்று நேசனே (ஐயனே)

## 943. பாத தரிசனந் தருவாய்

பல்லவி

பாத தரிசனந் தருவாய் - நல்ல
சீதள மாமலர்ப் பொழில் செகண்டிமலை முருகா (பாத)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
வல்லவனே மலர் நல்ல நயமுலவும் (பாத)

சரணம்

யெங்கணும் பிரகாசந் தங்க வொளியுலவு
தங்க மயமாகிய புங்கவடி வேலா
நன்னய மாதுயர் சொன்ன மயமாகிய
மின்னுமுடி நிரைசேர் தென்சிகி மலைவாழ்வே (பாத)

## 944. நடன மயில்வாகனா

பல்லவி

நடன மயில்வாகனா - திரள்
குடநிகர் முடிக்குன்றைக் குருபர நாதா (நடன)

அநுபல்லவி

அண்டர்கள் பணியும் மாமலர்ப் பாதா
தொண்டர்கள் முனிவர் துதித்திடு நாதா (நடன)

சரணம்

பன்னிரு கரதலப் பங்கய வேலா
கன்னி குறவள்ளி காதல்கொள் சீலா
அடியவர் தங்களுக் காகிய தேவே
கடிமலர்ப் பொழிற்குன்றை கர்த்தனே கோவே (நடன)

## 945. கதிதர வேணுமையனே

பல்லவி

கதிதர வேணுமையனே (கதி)

அநுபல்லவி

மதிதவழ் குன்றை மலைவரு குருபரனே (கதி)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 யுன்னையலால் வேறு
பின்னை யெவருமுண்டோ (கதி)

2 செலத்துல கத்திலே
நலத்தைப் பெறுவதற்கு (கதி)

3 யகண்ட பரிபூரணா
செகண்டி மலைமுருகா (கதி)

## 946. எனை யாளையா

பல்லவி

எனை யாளையா – யுந்தனன்
பனை யாளையா (எனை)

சரணங்கள்

1 வீரனாகிய சூரனாவியை
வென்றவாபடை கொன்றவா குகா (எனை)

2 பாந்தமான வள்ளி
காந்தனே யருள்பரமனே யரகரா யரா (எனை)

3 தாவி நடஞ்செய்
கூவிய மயிறன்மிசை தெள்ளி சிகிமேரா (எனை)

## 947. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் - யருள்
சேயே குன்றையின் தேவே தேவே (தாயே)

அநுபல்லவி

அடியவர் தங்களைக்
குடிகாக்குந் தெய்வமே (தாயே)

சரணம்

நிர்த்தன மயிலேறுங்
கர்த்தனே யென்சாமி
நன்றருள் புரியுயர்
குன்றையின் மலைநாதா (தாயே)

## 948. மறவாதே மனமே

பல்லவி

மறவாதே மனமே - நாளும் (மற)

அநுபல்லவி

திறமாகிய சோலை செழிக்குங் குன்றேசனை (மற)

சரணங்கள்

1 யாசைக் கடலில் வீழ்ந்து மோசப் படாமலே
யடியவர் தம்முட் குடிகாக்கு நாதனை (மற)
2 பவா வினைகளை மேவ விடாமலே
பத்தர்கள் மிடிதீர்க்கு நிர்த்தன மயிலோனை (மற)
3 நித்திய பரிபூரண சுத்த சயிதன்னிய
நிர்மலனைக் குன்றைநன் முருகேசனை (மற)

## 949. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா - யுயர்
விண்முகமுயர் தண்சிகி மேரா (சண்முக)

அநுபல்லவி

பன்னிரு கையா - பூதி
மின்னிய மெய்யா (சண்முக)

சரணம்

யண்டர்க ளுதா - யவுண
வண்டர்கள் சேதா
குன்றையின் மேரா – நீப
மன்றலந் தாரா (சண்முக)

## 950. ஆதாரஞ் செய்யவேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் (ஆதாரஞ்)

அநுபல்லவி

வாதார் பொழிற் குன்றை நாதா குமரேசா (ஆதாரஞ்)

சரணங்கள்

1 வஞ்ச வசுரனை யஞ்ச வயிறெடு
வல்லவ னேயன்ப னல்லவ ஞகவே (ஆதாரஞ்)

2 நேச வடியர் பிரகாச முடன்பணி
நீதனே மலர்ப்பாதனே வெகு (ஆதாரஞ்)

3 பத்தர்கண் மிடிதீரச் சித்தமகிழ்ந்தருள்
பரமனே சிகிக்கரசனே யின்னம் (ஆதாரஞ்)

## 951. வால வடிவேலனே

பல்லவி

வால வடிவேலனே - யனு
கூலனே குன்றைமலை சீல சண்முகனே (வால)

அநுபல்லவி

வீரப் பிரதாபமிகு
சூர சம்மார (வால)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 வரும்பெரி தாகிய
கருங்கடன் மேனேடும் (வால)

2 தோகை மலையின் வாச
யோகை புனையு முல்லாச (வால)

## 952. சும்மா இருக்கலாமா

பல்லவி

சும்மா யிருக்கலாமா - மனமே (சும்மா)

அநுபல்லவி

எம்மா னிலமும்புகழ் பெம்மானைப் பணியாமல் (சும்மா)

சரணங்கள்

1 வஞ்சு வசுரனை நெஞ்சம் பிளந்திடும்
வால வடிவேலனைக் கோலனைப் பணியாமல் (சும்மா)

2 அண்டர் முனிவர் கண்டடிதனைத் தொழு
மையினைப் பன்னிரு கையனைப் பணியாமல் (சும்மா)

3 மண்டிய பொழில்சூழ் செகண்டி மலையில்வரு
மாதவனைத் திருப்பாதனைப் பணியாமல் (சும்மா)

## 953. மனமே மறவாதே

பல்லவி

மனமே மறவாதே – யருள்
கனமேவிய குன்றைக் கர்த்தனை முத்தனை (மனமே)

அநுபல்லவி

ஆசைக் கிசைந்தகிர்
பேசக் குகேசனை (மனமே)

சரணங்கள்

1 கந்தனை ஞானசம்
பந்தனை யென்னுளும் (மனமே)

2 வென்றி வடிவேலவா
குன்றை மலைமுருகா (மனமே)

## 954. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா – நாளுந்
தேடிய யன்பர் பணியுஞ் செகண்டி மலையோனே (ஆடிய)

அநுபல்லவி

யாசைக் கடலில் வீழ்ந்து வீழ்ந்து மோசப் படாமலே
நேசத் தன்பர் பணிந்து செய்யும் பூசைக் கிசைந்தவா
(ஆடிய)

சரணங்கள்

1 வஞ்ச வரக்கர் மாய்ந்து வீழ நெஞ்சைப் பிளந்தவா
கஞ்ச நிகர்த்த பாத மல்லது தஞ்சம் வேறிலை (ஆடிய)

2 முடிநிகர்த்திடு முயர்ந்திடு குன்றுக் குடியினுதனே
வடிவுயர்த்திடு வேலனே யருட்கடலெனு நாதா (ஆடிய)

## 955. தேடிக்கொள் மனமே

பல்லவி

தேடிக்கொள் மனமே - யன்பர்
நாடிப் பணியுங் குருநாதனைக் காணத் (தேடிக்)

அநுபல்லவி

எந்த விதத்திலு
முந்தனைக் காப்பான் (தேடிக்)

சரணங்கள்

1 சித்த மிரங்கியே
நித்தமுனைக் காப்பான் (தேடிக்)

2 வாகை வடிவேலனை
தோகை மலைக்குகனை (தேடிக்)

## 956. குகநாதனே

பல்லவி

குகநாதனே – யாறு
முகநாதனே (குக)

அநுபல்லவி

போது புனையுங் குழலினுள் - குற
மாது மருவிய புயனே (குக)

சரணம்

கங்கை புனையரனுர் பாலனே - நாளுஞ்
சங்கையிலா கிர்பானிதியே
வடிவேற் கரதலனே – குன்றுக்
குடிவாழ்க்கை யினையனே (குக)

## 957. முருகா வுனை நம்பினேன்

பல்லவி

முருகா வுனை நம்பினேன் – மயிற்
குருகாகிய பரிக்குமரா குமரா (முருகா)

அநுபல்லவி

யார்பொதி முடியார்
பார்பதி புதல்வா (முருகா)

சரணங்கள் (அனுபல்லவிபோல்)

1 பன்னிரு கரதலா
யென்னிரு வினைதீராய் (முருகா)

2 அகண்ட பரிபூரணா
செகண்டி மலைவளரு (முருகா)

## 958. சரவணபவ குமரா

பல்லவி

சரவண பவகுமரா – கதிர்வேல்
கரதல கமலா அரகர குமரா (சரவண)

சரணங்கள்

1 செந்தமிழ் வாயா
எந்தனை யாள்வாய் (சரவண)

2 துங்கமென் மயிலா
தங்கமின் வேலா (சரவண)

3 முடிநிறை குன்றுக்
குடிவளர் தேவா (சரவண)

## 959. கும்பிட்டுக் கொள்வாய்

பல்லவி

கும்பிட்டுக் கொள்வாய் - மனமே
வம்பிட் டுலவும் மயின்மலை யோனை (கும்பி)

அநுபல்லவி

யண்டின பேரை தொண்டினி லாளும்
எண்டிசை பணி கொண்டிடு வோனை (கும்பி)

சரணம்

தேவரும் புவி யாவருங்கன்
மூவருந்துதி சேவலோனை
முடியுயர் குன்றுக் குடியி னுதனை
அடியர் தேவனை வடிவின் வேலனை (கும்பி)

## 960. அருமறை புகழ்சரணு

பல்லவி

அருமறை புகழ்சரணு - குக
குருபர குமரேசா (அரு)

அநுபல்லவி

அடியவர் பணிபவனே - யாறு
முடிபுனே யுஞ்சிவனே (அரு)

சரணம்

நீடிய வடிவேலா - யண்டர்
கூடிய மலர்க்காலா
மன்றலம் பொழினீளும் – நல்ல
குன்றையின் மலேவாழும் (அரு)

## 961. அப்பனே எனேயாளாய்

பல்லவி

அப்பனே யெனேயாளாய் – யடியன்
எப்படி யுமுனே முப்பொழுதும் பணிந்தேன் (அப்ப)

அநுபல்லவி

உன்னேயலால் வேறு
பின்னேயொரு வருண்டோ (அப்ப)

சரணம்

கானக வடிவிக்கி
யான திவ்விய ரூபா
யென்றும்வள முலவு
குன்றையின் மலேநாதா (அப்ப)

## 962. அடியனேக் காப்பாயே

பல்லவி

அடியனேக் காப்பாயே – குன்றுக்
குடியினில் வாழுங் குருபர நாதா (அடி)

அநுபல்லவி

மங்கை யிருவர் மாலா
செங்கை யிலணி வேலா (அடி)

சரணம்

வாது புரியுஞ் சூரா
மோது படையின் வீரா
ஆடிய மயிலாளா
தேடிய வொயிலாளா (அடி)

## 963. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ (சாமி)

அநுபல்லவி

பூமி பரவுங் குன்றைப் புண்ணியன் சுப்பிரமண்ணிய (சாமி)

சரணங்கள்

1 அந்தர வானவர் பணிபாதன் - யருண்
மந்தர ஞானர்க டுதிநாதன் (சாமி)

2 சூரனை வென்றிடு வடிவேலன் - நாளும்
வீர விலாச நடமயிலோன் (சாமி)

3 மீறிய முடிக்குன்றை மலையாளன் - ரூபந்
தேறிய குறமயில் புணர்தோளன் (சாமி)

## 964. உந்தனை நம்பினேன்

பல்லவி

உந்தனை நம்பினேன் - யருள்
கந்தனே குன்றைக் கர்த்தனே சாமி (உந்த)

அநுபல்லவி

வாடாத மலர்சூடிய குழலா
ஆடியமயிற் குறவம்மைதன் கணவா (உந்த)

சரணம்

ஐயனே யாறிரு கையனே பொடியணி
மெய்யனே தெய்வானை மேல்மயிலாளா
யுந்திய விசைதனின் மந்தி குதிபோடச்
சிந்திய மலர்ப்பொழிற் செகண்டி மலையின் வாசா (உந்த)

## 965. ஆண்டவனே எனையாளாய்

பல்லவி

ஆண்டவனே யெனையாளாய் - பணி
பூண்டவ னருளிய புண்ணியனே குகனே (ஆண்ட)

அநுபல்லவி

ஆறுமுகக் குமரா
வேறுகதி யிலையே (ஆண்ட)

சரணம்

ஐயனே பன்னிரு
கையனே மெய்யனே
நின்றுடிய பொழிற்
குன்றுக் குடிநாதா (ஆண்ட)

## 966. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ
பத்தர் முதலினோர் பணியுஞ் சிகேசனே (சித்த)

சரணங்கள்

1 ஆரணமும் பணிபூரண மாகிய
நாரண னதிகாரிய காரண சிற்சொரூபன் நீ (சித்த)

2 ஐயன்பனி ரண்டுகையன் பொடியணி
மெய்யன் பரிசுத்தன் துய்யன் குருபரன் நீ (சித்த)

3 வாசப் பொழிலின் பிரகாச சிகாமலை
ஈசக் குகதும ரேசப் பரமேசன் நீ (சித்த)

## 967. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே - யுயர்
மஞ்சடர் பூம்பொழின் மிஞ்சு குன்றேசனை (நெஞ்சே)

அநுபல்லவி

தேடிய வன்பர்க்கு யாடிய மயிலேறி
நாடி வந்தருளிய சூடிய நீபனை (நெஞ்சே)

சரணம்

வஞ்சடர் சூரனை நெஞ்சிருக்கச்செய்
துஞ்சம ராய வஞ்சன் வேலோனை
யூறிய மதுபொழி மீறிய பொழிலூற்
றேறிய முடிக்குன்றை ஆறு முகேசனை (நெஞ்சே)

## 968. அடியேன்றனை யாளாய்

பல்லவி

அடியேன்றனை யாளாய் - குன்றுக்
குடிவாழ் குருபர குமரேசா சாமி (அடி)

அநுபல்லவி

கோல மயிலேறும்
வால வடிவேலா (அடி)

சரணம்

புள்ளி மயிலேறு
மள்ளிலே வடிவேலா
வாசக் கடம்பா கிர்
பேசக் குமரேசா (அடி)

## 969. வேலாயுதனே

பல்லவி

வேலாயுதனே – குன்றை
மேலாய் வருசீலா குகா (வேலா)

அநுபல்லவி

மாயனூர் மருகா – குரு
நாயனே முருகா (வேலா)

சரணம்

தீரனுகச் செல்லும் – பொல்லா
சூரனை வெல்லும்
குன்றை நாதனே – யரு
ளொன்றும் வேதனே (வேலா)

## 970. அரகர குமரேசா

பல்லவி

அரகர குமரேசா - குன்றைப்
பரம சிவேசா வரமருள் புரிவாய் (அர)

அநுபல்லவி

வஞ்சகர் கண்டஞ்சிடவே செயும்
மஞ்சு நன்மேனி மால்மருகா மருகா (அர)

சரணம்

சூர சம்மாரா வீர சிங்காரா
சங்கார யிங்கிதவா சரவண பவகுகா
மன்றலம் பொழில்சேர் குன்றையின் மலையா
நன்றருள் புரிவாய் நயவம ரேசா (அர)

பல்லவி

வாராயோ சாமி - வந்துவரந்
தாராயோ சாமி (வாரா)

அநுபல்லவி

சங்கரரருள் பாலா - குற
மங்கை மகிழு மாலா (வாரா)

சரணம்

வாது புரியுஞ் சூரா - திபன்வீழ
மோதி வென்றிடுந் தீரா
குன்றை மலைக்கு வாசா – யன்பர்க்
கென்று நயக்கு நேசா (வாரா)

## 971. நீ தயவே செய்குவாய்

பல்லவி

நீ தயவே செய்குவாய் (நீ)

அநுபல்லவி

வாதடர் பொழிற்குன்றை வாசனே யீசனே (நீ)

சரணங்கள்

1 மங்கள மங்கையர்
பங்கிலுறை பவனே (நீ)

2 தேசத் தன்பர்கள் வந்து
நேசத்திற் பணிபாதா (நீ)

3 அருமையுள்ள அன்பருக்
கிருமையுந் தாங்கு நாதா (நீ)

## 972. நடக்கு மயிலாளா

பல்லவி

நடக்கு மயிலாளா – பெரு
வடக்குன்றை நிகரான மயின்மலை நாதா (நடக்)

சரணங்கள்

1 வஞ்சனை புரிசூரை
மிஞ்ச வடக்கும் வேலா (நடக்)

2 பொல்லா வினைகளை
யெல்லாந் தவிர்த்தருள் (நடக்)

3 யுன்னித வேலெங்கும்
பன்னிரு கரதலா (நடக்)

## 973. குக குமரேசா

பல்லவி

குக குமரேசா – யாறு
முக வம ரேசா (குக)

அநுபல்லவி

பதும மலர்ப்பாதா – நாளுஞ்
சதுமறை புகழ்நாதா (குக)

சரணம்

தெள்ளிய தமிழ்வாயா – குற
வள்ளி மகளின்நேயா
மஞ்சடர் சிகிமேரா – சூர
னெஞ்சடரு வீரா (குக)

## 974. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ – நாளும்
பத்தர் தொழுங்குன்றைப் பரனே யரனே (சித்த)

சரணங்கள்

1 வாசக் கருங்கழ நேசக் குறமயி
லாசைக் கிசைந்த பிரகாசக் குமரேசா (சித்த)

2 யுன்னித மாகிய மின்னிய வேலணி
துன்னிய மாமலர்ப் பன்னிரு கரதலா (சித்த)

3 நின்றசைந் தாடிய மன்றன் மலர்ப்பொழிற்
குன்றை மலைக்குகாவுன்றன் தயவு செய்ய (சித்த)

## 975. நீயே யெந்தனை யாளாய்

பல்லவி

நீயே யெந்தனை யாளாய் – யுயர்குன்றைச்
சேயே யினி யருள்வாயே தூயே (நீயே)

அநுபல்லவி

கந்த மலர்க்குழற் சுந்தரமாகிய
யந்தரி யபிராமி தந்தருள் பாலா (நீயே)

சரணம்

யள்ளிலே வேல்விழி புள்ளி மயிற்சாயல்
வள்ளி மனோகரா தெள்ளிய தமிழ்வாயா
நாடி நிதமடியர் தேடியே பணிபுரி
கூடிய பொழிற்குன்றை யாடிய மயிலாளா (நீயே)

## 976. வந்தாளாயோ

பல்லவி

வந்தாளாயோ – யருள்
தந்தாளாயோ (வந்தா)

சரணங்கள்

1 வாதடும் வேலா – நாளும்
போதாருங் காலா (வந்தா)
2 தெள்ளிய தமிழ்வாயா – கான
வள்ளிநன் மயினேயா (வந்தா)
3 மன்றலம் பொழில்சூழுங் - குன்றைக்
குன்றின் குகேசா நாளும் (வந்தா)

## 977. ஆனந்த நடன மயிலா

பல்லவி

ஆனந்த நடன மயிலா – யுயர்
வானந்தவழ் பொழின்மயின் மலைநாதா (ஆனந்த)

அநுபல்லவி

யாதி பராபரச் சோதி மயமான
நீதி வடிவான நிர்மல ரூபா (ஆனந்த)

சரணம்

யெங்கும் பிரகாசமாய் தங்குங் கிர்பானிதே
மங்கள கரவுமை மகிழ்ந்திடும் பாலா
மஞ்சடரு முடிமிஞ்சிய சிகிமலை
வஞ்சிய ரிருவோர்கண் மருவிய நாதா (ஆனந்த)

## 978. அஞ்சாதே மனதே

பல்லவி

அஞ்சாதே மனதே – யுயர்
மஞ்சார்பொழிற்குன்றைமலைக் குமரேச னிருக்க (அஞ்சா)

சரணங்கள்

1 வாதாடிய சூரைச் சூதாடியே வென்ற
வன்ன வேலவன் பிரசன்ன மயிலோ னிருக்க (அஞ்சா)

2 வள்ளி மனோகரன் புள்ளி மயில்வாகன்
வால சண்முக நாதன் சீல னிருக்க (அஞ்சா)

3 வண்டின பொழில்சேர் செகண்டி மலையின்மிசை
வந்த குருபரன் கந்த னிருக்கவே (அஞ்சா)

## 979. வருவாய் குமரேசா

பல்லவி

வருவாய் குமரேசா – வேணவரந்
தருவா யமரேசா (வரு)

அநுபல்லவி

தாதவிழ் நீபமலர்ப் போதணியும் புயா
காதலுடனே வெகு யாதரவினைச் செய்ய (வரு)

சரணம்

மாது குறத்திதனை மீது மயக்கங் கொண்ட
தாது மலர்ப்புயவா மோது படையயிலா
மங்கள கரவுமை சங்கரி தருபாலா
யெங்கும் பிரகாசஞ் செய்து துங்கமயின்மேரா (வரு)

## 980. வடிவேலெடுத்து வருவாய்

பல்லவி

வடிவே லெடுத்து வருவாய் – குன்றுக்
குடிவாழுங் குமர குருபர நாதா (வடி)

அநுபல்லவி

மாது குறத்திக்கு மாலையணியும் லோலா
போதிலுயர்த்த நீபப் போது தரிக்குஞ்சீலா (வடி)

சரணம்

வம்பனெனுஞ் சூரனை மாய்த்திடும் வேலா
கும்ப முனிவர்க்கருள்கூரனு கூலா
சொந்த வடியவர்க் கடுத்திடும் பாதா
வந்த வினைகடனை மறைத்திடும் போதா (வடி)

## 981. அடியனைக் காக்க வேணும்

பல்லவி

அடியனைக் காக்க வேணும் - சொன்ன
வடிவுற்ற முடிக்குன்ருக் குடியுற்ற குமரேசா (அடி)

சரணங்கள்

1 யாசைக் கடலில் வீழ்ந்து மோசப் படாமலே
ஐயனே பன்னிரு கையனே யென்சாமி (அடி)

2 பொல்லாத வாக்ழ்கையா லில்லாமலே யலைந்து
போகாமல்மனம் வேகாமலினி (அடி)

3 வென்றி வடிவேலவா குன்றைமலைக் குமரா
வேதாந்த வடிவே நாதாந்த முடிவே (அடி)

## 982. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் – பன்னிரு
கையனே குன்றைமலைக் கர்த்தனே சாமி (ஐயனே)

அநுபல்லவி

சொந்த வடியவர்க்கு
வந்த வினையைத் தீர்ப்பாய் (ஐயனே)

சரணம்

மாது குறத்திபுணர்
போது தரித்த மார்பா
சந்திர சடாதரர்
தந்தருள் பாலா (ஐயனே)

## 983. மயிலேறி அடியன்முன் வருவாய்

பல்லவி

மயிலேறி அடியன்முன் வருவாய் – வந்து
மனதுக் கிசைந்தபடி தருவாய் (மயி)

அநுபல்லவி

வெயிலாரு முடிக்குன்றை
யொயிலான முருகேசா (மயி)

சரணங்கள்

கங்கை யணியுஞ் சடை சங்கரருளிய
மங்கள கரபாலா துங்கவயின் முருகா
வண்டலர் மலர்தூவி கொண்டதி சயமுடன்
தொண்டர்கள் பணிதரு தண்டமிழ் புகல்வாயா
மந்தி குதிக்கவே யதிர்ந்து கனியது
வுதிர்ந்துநிறை சோலைகள் முந்து சிகிமலையாய் (மயி)

## 984. அலையாதே மனமே

பல்லவி

அலையாதே மனமே – முடி
மலையாகிய சிகிவாச னிருக்கையில் (அலை)

சரணங்கள்

1 கஞ்ச மலரை நிகருஞ் சரணுதிப
னஞ்ச மிடற்றினர் நாத னிருக்கவே (அலை)

2 வந்தடியார் நிதஞ் சிந்தனை செய்பவர்க்
கெந்த விதமும் வரத்தினையருள்வோ னிருக்க (அலை)

3 நீடிய பொழிலிரை கூடிய சிகிமலை
யாடிய மயிலாள னயனிருக்கையில் (அலை)

## 985. ஆசைக் கடலில் ஆழாதே

பல்லவி

ஆசைக் கடலி லாழாதே - மனமே (ஆசை)

அநுபல்லவி

மோசப் படுத்தி யுன்னை
நாசப் படுத்தி விடும் (ஆசை)

சரணங்கள்

1 யெங்கும் பிரகாசமாய்ப் பொங்கு மருட்கடலாய்த்
தங்குங் கிர்பா னிதியைத் தானே தரிசிப்பாய் (ஆசை)

2 யாதி யனுதியாய் நீதி யனீதியாய்ச்
சோதி மயத்தை நாளுந் துதித்துத் துதித்துக்கொள்ளு
(ஆசை)

3 அடியவர் நிறைதரு முடியுயருங் குன்ருக்
குடிமிசை வருகுக குருபரனைப் பணிவாய் (ஆசை)

## 986. ஏதுக்கு மயக்கம்

பல்லவி

ஏதுக்கு மயக்கம் – மனமே (ஏது)

அநுபல்லவி

போதுப் பொழிற்குன்றைப் புண்ணிய னிருக்க (ஏது)

சரணங்கள்

1 வஞ்ச வசுரனை நெஞ்சைப் பிழிந்திட
மிஞ்சிய வேருெட்ட மேலவ னிருக்கையில் (ஏது)

2 மதுக்கு மடியவர் துதிக்கும் குமரேசன்
விதிக்கு முபதேசம் விளம்புவோ னிருக்கையில் (ஏது)

3 யண்ட முனிவருந் தொண்டரு மறியாத
தண்டமிழ் வாயன் சண்முக னிருக்க (ஏது)

## 987. பூசவிழா லோலா

பல்லவி

பூசவிழா லோலா - யன்பர்
நேசனே குன்றை யீசனே குகனே (பூச)

சரணங்கள்

1 யண்டர் பணிதேவே - நாளுந்
தொண்டர் பணியுங் கோவே (பூச)

2 சமர சங்கரா வேலா – யருள்
குமர சண்முக லோலா (பூச)

3 குன்ருக் குடிஐயனே – பத்தரை
நன்ருட்கொழு மெய்யனே (பூச)

## 988. மனதே அஞ்சாதே

பல்லவி

மனதே அஞ்சாதே சொன்னேன் - நாளுங்
கனமான குன்றை மலையன் தானப் பிரபு விருக்க (மன)

சரணங்கள்

1 யீசன் கயிலாசன் பர
மேசனருள் புதல்வனிருக்க (மன)

2 நாதன் மலர்ப்பாதன் சதுர
வேதன் குமரேச னிருக்க (மன)

3 ஐய னயிற்கைய னக்குள்
மெய்யன் முருகையனிருக்க (மன)

4 மாயன் வள்ளி நேயன்
தூயன் சிகிமேர னிருக்க (மன)

## 989. நாதனை குகனை நினைமனமே

பல்லவி

நாதனை குகனை நினை மனமே (நாத)

அநுபல்லவி

வேதனை மலர்ப் பாதனை யருள் (நாத)

சரணங்கள்

1 யண்டரும் மூவரும்
தொண்டரும் பணி (நாத)

2 வான ராசனும்
ஞானரும்பணி (நாத)

3 மன்றலம் பொழிற்
குன்றை மாமலை (நாத)

## 990. அருள்தர வேணும்

பல்லவி

அருள்தர வேணும் - வேண
பொருள்தர வேணும் (அரு)

அநுபல்லவி

போதின் மலர்க்குழன் மாது குறத்தியை
காதன் மிகப்புணர் கருத்தனே யொருத்தனே (அரு)

சரணம்

வஞ்ச வரக்கனை நெஞ்சைப் பிழிந்திட
மிஞ்சயி ரெட்டடும் வீரனே தீரனே
பங்கய வாவிய ளெங்க ணுமேநிறை
துங்க மயின்மலைத் தூயனே நாயனே (அரு)

## 991. கருத்தினி னினையாயோ

பல்லவி

கருத்தினி னினையாயோ - குன்றைக்
கொருத்தனே மயிலேறு நிருத்தனே யடியேனைக் (கரு)

சரணங்கள்

1 தஞ்ச மிலாத பேரைத் தற்காத்து ரெட்சித்து
மிஞ்சிய வனுக்கிரகமே புரிந்தாளவே (கரு)

2 யுருமை யுடனே நாளு முந்தனே நம்பிய
திருவடி யார்களைத் தினந்தனம் ரெட்சிக்க (கரு)

3 யந்தர மீதுயர்ந் தலேந்திடும் பொழில்சூழ்
சந்த மலியுங் குன்றைச் சண்முக நாதா (கரு)

## 992. மனதே யொன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

மனதே யொன்றுக்கு மஞ்சாதே - யுயர்
கனககிரியை நிகர்சிகி மலேதனில் வளர்கர்த்தன்
பரிசுத்தனிருக்க (மன)

சரணங்கள்

1 மானிதி யான கிர்பா னிதியாகிய
கானக மானனே காதல னிருக்க (மன)

2 கோல மயிலிலேறு வால வடிவேலவ
கோல குகேச மேயக் குமரனிருக்க (மன)

3 முடிசேர் கனகுன்ருக் குடிவாழு நய
வடியர் பணிபுரி ஐயனிருக்க (மன)

## 993. காக்க வேணுமையனே

பல்லவி

காக்க வேணுமையனே - கடைக்கண்
பார்க்க வேணுமையனே (காக்க)

அநுபல்லவி

நீல மயிலின் வாகனே - நல்ல
கோலக் குறத்தி மோகனே (காக்க)

சரணம்

செங்கை தரித்த வேலனே - தெய்வானே
மங்கை மகிழும் லோலனே
கலேக்கிசை வான வாயனே - குன்றை
மலேக்கிசை வான தூயனே (காக்க)

## 994. ஆசைப்படியே தருவாய்

பல்லவி

ஆசைப் படியே தருவாய் - நாளு
மாசற்ற குன்றைமலைக் குமரேசா (ஆசை)

சரணங்கள்

1 வஞ்ச வரக்கனை நெஞ்சைப் பிளந்திட
மாய வயிலைத் தொட்ட நாயனே யென்னுட (ஆசை)

2 மானை நிகருந் தெய்வானை மருவிய
வச்சிர மணித்தோளா பச்சை மயிலா யென் (ஆசை)

3 முடிநிரை சேர் குன்ருக்குடி மலைவாழ்தரு
முருகையனே பன்னிரு கையனே யென் (ஆசை)

## 995. நெஞ்சிரங்காயோ

பல்லவி

நெஞ்சிரங்காயோ – நாளும்
மஞ்சடர் குன்றைமலைக் குமரேசா (நெஞ்சி)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை
மோதி செயித்தவா (நெஞ்சி)

சரணம்

யண்டர்கண் மிடிதீர்த்துக்
கொண்ட குமரேசா
தேறிய பொழிற்குன்றை
மீறிய மலைநாதா (நெஞ்சி)

## 996. ஆடிக்கொள்வாய் மயிலே

பல்லவி

ஆடிக் கொள்வாய் மயிலே - நல்ல
வேடிக்கை யாகவே விமலனைத் தாங்கிக் கொண்டு (ஆடி)

சரணங்கள்

1 சித்தனை அமரர்கள் கர்த்தனைத் தாங்கியே
தத்திதா திதிமிதித் திதோதி யென்று (ஆடி)

2 ஐயனைப் பன்னிரு கையனைத் தாங்கியே
துய்யசிறை விரித்துந் தெய்ய தெய்யலென (ஆடி)

3 முருகனை மாயவன் மருகனைத் தாங்கியே
மருமலர்ப் பொழிற்குன்றைத் திருமுடி மேனின்று (ஆடி)

## 997. வடிவேலே

பல்லவி

வடிவேலே - குன்றுக்
குடியமர்ந்தவ னொருகை யேந்திய (வடி)

சரணங்கள்

1 தீரனை வெற்றி யாரனைச் சுத்த
வீரனை மகா சூரனை வென்ற (வடி)

2 யேக மாக வனேக மாயப்பிர
வாக மாய வளர்சகாரந் தொட்டி (வடி)

3 யீசன் வள்ளிக்கு நேச னெங்கும்பிர
காசன் குன்றையின் வாசன் கையணி (வடி)

## 998. கருணைப் பெருங்கடலே

பல்லவி

கருணைப் பெருங்கடலே - நாளும் (கருணை)

அநுபல்லவி

தருணத்தி லன்பரைக் காத்து ரட்சிக்கும் (கருணை)

சரணங்கள்

1 யண்டர் முனிவரர் தொண்டர் பணிபுரி
வண்டல ரருஞ்சிக்குந் தண்டனிரங்க பாதா (கருணை)

2 வந்த வினைப்பகையைச் சிந்தும் படியே செய்து
நொந்த பிணிகடனை நைந்துவிழவே செய்யும் (கருணை)

3 தங்க முடிக ளிரையுங்கன விதமிகு
துங்க மயின்மலை யிலங்கவருங் குகேசா (கருணை)

## 999. ஐயனே மெய்யனே

பல்லவி

ஐயனே மெய்யனே – பன்னிரு
கையனே ஐயனே (ஐயனே)

அநுபல்லவி

பாத பங்கயனே – வேலையணியும்
போதிருங் கையனே (ஐயனே)

சரணம்

அப்பனே குகனே – மாதுமையவள்
செப்பரு மகனே
நன்றரு ளீசா - மலர்ப் பொழிலின்
குன்றையின் வாசா (ஐயனே)

## 1000. சரவணபவனே

பல்லவி

சரவணபவனே – கொடிய
யரவணசிவனே (சரவண)

அநுபல்லவி

குருபர நாதா – வாசத்
திருமலர்ப் பாதா (சரவண)

சரணம்

வென்றி வடிவேலா – சூரைக்
கொன்ற தொருகாலா
கலைத்திரு வாயா - குன்றை
மலைக்கிசை சேயா (சரவண)

## 1001. தேடாத தென்னவையா

பல்லவி

தேடாத தென்னவையா - நாளுந்
தோடார் மலர்ப்பொழிற் ருேகை மலையின் வாசா (தேடாத)

சரணங்கள்

1 பங்கய மாமலர்ப் பாதத்தின் மனநாற்றி
சங்கையிலாத தோந்திரந்தான் சொலிப்போற்றி
தன்னுற் மணியன் கென்னுளும் மனதில் (தேடாத)

2 யுந்தனே மனதினி லொருநாளு மறவாது
வந்தனே புரிந்துடன் மாமலர்ப் போது
பாசித்த தூவு மன்பர் நேசிக்கும் படியாகத் (தேடாத)

3 பனகசயனர் முதற் பரவிய தாளா
சனக நவமணிப் பூண்கமழ் தருதாளா
கருணைக் கடலே குன்றை குருவைத் துரைக் குமரா
(தேடாத)

## 1002. ஐயனே வாராய்

பல்லவி

ஐயனே வாராய் - பன்னிருமலர்க்
கையனே வாராய் (ஐயனே)

அநுபல்லவி

யந்தரி யம்பிகா பதி யரன்
தந்தருள் பாலா (ஐயனே)

சரணம்

மாயனுர் மருகா – யன்பர்
நேயனே முருகா
சித்தனே குகனே - பரி
சுத்தனே குகனே
குன்றையின் மலையா - யென்னை
யென்றுநீ காப்பாய் (ஐயனே)

## 1003. தரிசிக்க வேணுமே

பல்லவி

தரிசிக்க வேணுமே – வெகு
பரிசுத்த மாகிய பரம குகேசனை (தரி)

சரணங்கள்

1 சகல நோய்களுஞ் சகல துன்பமும்
சகல மூட முகவுமே செய்து
தானே காக்கும் பெம்மானே னீயென்று (தரி)

2 மெத்த யிரங்கியே சித்த முருகியே
பத்தர்கள் பணிபுரி யுத்தமனே யருள்
பரமனே யரகர யரகரா வென்று (தரி)

3 மன்றன் மலர்ச்சோலை யென்று மகலாத
குன்றை மலைக்கிசை கின்ற சிகாமணிக்
குருபரா யன்பர்க் கருபரா வென்று (தரி)

## 1004. மறக்காதே மனமே

பல்லவி

மறக்காதே மனமே - ஒரு நாளும்
துறக்காதே மனமே (மறக்காதே)

அநுபல்லவி

துறக்காதி பன்பணி
தூயனை நேயனை (மறக்காதே)

சரணங்கள்

1 மோசாதி மோசஞ் செய்யு
மாசா பாசங்களை பேசாதிருக்கும் பெம்மானை
எம்மானை (மறக்காதே)

2 பாதக வினைதனைச் சேதமது செய்து
ஆதரவாய்க் காக்கும் அய்யனை மெய்யனை (மறக்காதே)

3 அடுக்குஞ் செனனங்களைக் கெடுக்கும்படி கெடுத்து
கொடுக்கும் வரங்கொடுத்து குன்றையினின்றோனை
(மறக்கதே)

## 1005. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா - யுயர்
விண்முகம் பார்க்குங் குன்றை மேருவின் வாசா (சண்முக)

அநுபல்லவி

வஞ்ச வருஞ்சூரனை மிஞ்ச வமர்செய்து
பஞ்சுபஞ்சாகச் செய்யும் பருவடி வேலா (சண்முக)

சரணம்

பாத பங்கயனே நாத யிங்கிதனே
நீதயை செய்வாய் நிர்மல ரூபா
யெங்கும் பிரகாசந் தங்கும் படியாக
விளங்குஞ் செகண்டிமலை விமலனே சாமி (சண்முக)

## 1006. இனிச் செனனம் வேண்டாமையா

பல்லவி

இனிச் செனனம் வேண்டாமையா (இனி)

அநுபல்லவி

தனிப் பொழிற் குன்றுக்குடிச் சண்முக நாதா (இனி)

சரணங்கள்

1 நோயினி லிறந்து காயுமவ் வுடம்பைத்
தீயினி லெரித்துப் போயிடுஞ் சாமி (இனி)

2 ஐந்து பேராசை மெலிந்து திரிந்து
நொந்து கரைந்து வெந்துவிடுஞ் சாமி (இனி)

3 யுந்தனை அனுதினம் சிந்தனை புரியுங்
கந்தனே குகனே யிந்த வுடலம் போதும் (இனி)

## 1007. ஐயா குமரேசா

பல்லவி

ஐயா குமரேசா – நல்ல
துய்யா குமரேசா (ஐயா)

அநுபல்லவி

வானவர் பணிசெய்யு
ஞான சிகாமணி (ஐயா)

சரணம்

தொண்டர்கள் துதிசெயும்
வண்டணி மலர்ப்பாதா
மன்றன் மலர்ப்பொழிற்
குன்றை மலையின் வாசா (ஐயா)

## 1008. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே - யெனக்கு
வேறுகதியில்லையே (ஆறு)

அநுபல்லவி

ஆதிநாராயண னீயே - மறை
வேதியர் தோத்திரனு நீயே (ஆறு)

சரணம்

மூல மந்திரங்களு நீயே – யிந்த
ஞால முழுவது நீயே
வடிவேல் வீரனு நீயே குன்ருக்
குடிமேரினில் வாசனீயே (ஆறு)

## 1009. கார்க்க வேணுமையனே

பல்லவி

கார்க்க வேணுமையனே – கடைக்கண்
பார்க்க வேணுமையனே (கார்க்க)

சரணங்கள்

1 யுந்தனை யனுதினம் சிந்தனையே செய்து
வந்தனை புரியன்பர் தந்தம் வினையடீர (கார்க்க)
2 வாசிக்கு மலர்கொண்டு பூசித்து வுந்தனை
நேசித்து தியானிக்க யோசித்திடா தன்பரை (கார்க்க)
3 பொன்ருது குத்து மேனின் ருடியபொழிற்
குன்ருக் குடிநாதா நின்ருட் கன்பரை (கார்க்க)

## 1010. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா - செந்தமிழ்
பாடிய தனிவாயா (ஆடிய)

சரணங்கள்

1 யெண்டிசையுஞ் சிறைகொண்டிசை வாகவு
மண்டிய வானவர் கண்டடி பணியவும் (ஆடிய)
2 தண்டைச் சிலம்புகள் வெண்டைய முந்தொனி
கொண்டிட கண்டு பயந்திட (ஆடிய)
3 குன்றை மலையின் மீதில் வென்றி படைத்துடனே
நன்றிதிமிதியென நின்று கலகலென (ஆடிய)

## 1011. எப்படியோ அறியேன்

பல்லவி

எப்படியோ அறியேன் (எப்படி)

அநுபல்லவி

மைப்படியுங் குன்றை வாசன் தன்மனம் (எப்படி)

சரணங்கள்

1 வாடிய கொடியிடை நீடிய குழல்வள்ளி
கூடிய புயனுதன் கோலன் வேலன்மனம் (எப்படி)
2 தங்கச் சிலம்பணியும் பங்கய மலர்ப்பொழிலி
லங்கிய மலர்ப்பாத நாதன் வேதன்மனம் (எப்படி)

3 கலங்கு மடியவர் மனமிலங்கும் படியருளும்
துலங்குஞ் சிகிமலைவாழ் தூய னுயன்மனம் (எப்படி)

## 1012. அலையாதே மனமே

பல்லவி

அலையாதே மனமே - குன்றை
மலையானுயர் சிறைமயிலோ னிருக்கையில் (அலை)

சரணங்கள்

1 சூது நிகர்த்தமுலை மாது குறத்திபுணர்
போது தரித்தபுயன் புண்ணிய னிருக்கையில் (அலை)
2 யள்ளிலை வேற்கான புள்ளி மயிலோன்
தெள்ளிய தமிழ்வாயன் சேவல னிருக்கையில் (அலை)
3 பங்கய மலர்ப்பாதன் மங்கள கரவுமை
பங்கன் மகிழு மைந்தன் பாவல னிருக்கையில் (அலை)

## 1013. ஏனிப்படி யலைகிருய்

பல்லவி

ஏனிப்படி யலைகிருய் – மனமே
ஏனிப்படி யலைகிருய் (ஏனிப்படி)

அநுபல்லவி

வானுற்ற முடிக்குன்றை நாதனைச்
சேவித்து வாழ்ந்து கொண்டிருக்காமல் (ஏனிப்படி)

சரணங்கள்

1 பன்னிரு கையனைச் சன்னிதியிற் கண்டு
பாதத்தைப் போற்ருமல் பொல்லாத
தன்னிரு தீவினையின்ன மிருப்பதைத்
தானே தேற்ருமல் (ஏனிப்படி)
2 சாரமில்லாச் சமுசாரக் கடற்குழி தன்னிலிறங்கிக்
கொண்டே ரூப
மாரண பகழியான மாதரைக் கண்டு மயங்கி யுறங்கிக்
கொண்டே (ஏனிப்படி)
3 கண்ணிகன் ஞாலத்தைக் காக்குங் குன்ருக்குடி
கர்த்தனைத் துதிக்காமல் நாளும்
விண்ணவர் போற்றிய சண்முக நாதனை விரும்பி
மதிக்காமல் (ஏனிப்படி)

## 1014. மயிலேறி வருவாயே

பல்லவி

மயிலேறி வருவாயே (மயிலேறி)

அநுபல்லவி

வெயிலார் முடிக்குன்றை மேரினில் விளையாடி (மயிலேறி)

சரணங்கள்

1 மைவாச நிறைகுழல்
தெய்வானையுடன் கூடி (மயிலேறி)

2 தெள்ளிய தினைப்புன
வள்ளி மினுடன்கூடி (மயிலேறி)

3 அண்டர்கள் முனிவர்கள்
தொண்டருடன் கூடி (மயிலேறி)

## 1015. எப்படியோ அறியேன்

பல்லவி

எப்படியோ வறியேன் - யுயர்
மைப்படியுங் குன்றைமலைக் குமரேசன் மனம் (எப்படி)

சரணங்கள்

1 யள்ளிலை வேல்விழித் தெள்ளிய தினைப்புனப்
புள்ளி மயிற்சாயன் வள்ளி பங்கன்மனம் (எப்படி)

2 போரிட்ட சூர்ப்படை வீரிட் டலரிடவே
கூரிட்ட வேல்விடு தாரிட்ட புயன்மனம் (எப்படி)

3 பங்கய வாசனும் சங்கரியும் பணியுங்
கனஞ்சேர் குன்றை யங்கிரியுன்மனம் (எப்படி)

## 1016. அநித்திய மானதை யெண்ணாதே

பல்லவி

அநித்திய மானதை யெண்ணாதே – மனமே
தினைப்பொழுதுங் கெடுதி பண்ணாதே (அநித்)

அநுபல்லவி

யனைத்துலகுந் துதிக்குஞ் செகண்டிமலைக் குமர
வையனை பன்னிரு கையனை யெண்ணுவாய் (அநித்)

சரணங்கள்

1 வாசக் களபமுலே நேசக்குற மயிலி
லாசைக் கிசைந்தவனே அனுதின மெண்ணுவாய்
(அநித்)

2 யெங்கும் பிரகாசங் கடங்குபடி மயிலி
லங்கும் யுலவு நாதனே யெண்ணுவாய் (அநித்)

3 தேனுற்ற மலர்ப்பொழில் வானுற் றளாவிடத்
தானுற்ற சிகிமலேத் தலேவனே யெண்ணுவாய் (அநித்)

## 1017. பார்க்க வேணும் சாமி

பல்லவி

பார்க்க வேணுஞ் சாமி – கடைக்கண்
பார்க்க வேணுஞ் சாமி (பார்க்க)

அநுபல்லவி

தீர்க்க மாமுடிச் செகண்டிமலே நாதா (பார்க்க)

சரணங்கள்

1 உன்னிரு தாள்தனே யின்னமு மறவாத
நன்னய வடியாரைப் பன்னிரு கடைக்கண்ணுற் (பார்க்க)

2 தந்த மனசார்க் கந்த மலர்ப்பாதா
வந்தனே செய்வோரை யுந்தன் கடைக்கண்ணுற் (பார்க்க)

3 திருவுற்றிருக் குமரா பன்மருக் கடவுளே
முருகக்குக குமரா கருணேக் கடைக்கண்ணுற் (பார்க்க)

## 1018. காண வேணுமே

பல்லவி

காண வேணுமே – யன்பு
பூண வேணுமே (காண)

அநுபல்லவி

ஐயன் பனிரண்டு கையன் பொடியணி
மெய்யன் பரிசுத்தத் துய்யன் சரணத்தை (காண)

சரணம்

வாசக் கருங்குழ னேசக் குறக்கொடி
யாசைக் கிசைந்த யுல்லாசக் குகேசனே
வால வடிவேலன் கோல மயிலாளன்
ஞாலம் புகழுங் குன்றைமேல் மருமையனே (காண)

## 1019. இனி எதுக்கு

பல்லவி

இனியெதுக்குச் சென்ன
மினியெதுக்கு (இனி)

அநுபல்லவி

கனியே னிறைபொழிற் சிகாமலேக்
கர்த்தனே பரிசுத்தனே சாமி (இனி)

சரணம்

1 சார மில்லாத சமுசாரத் தினுலே
தீர மயங்கித் திரிந்தேன் பினுலே (இனி)
2 பொல்லாத யிச்சை பொருந்த மயங்கி
நில்லாத காரியத்தை நிலேயென்று தியங்கும் (இனி)
3 யென்று மடியவ னிறைஞ்சிடச்சூழ்
குன்றை மலேயின் குருபர வாழும் (இனி)

## 1020. ஏதுக்கு நம்புகிருய்

பல்லவி

ஏதுக்கு நம்புகிருய் – மனமே (ஏது)

அநுபல்லவி

சூதுக்குள் மிகுந்த சூட்சும சடலத்தை (ஏது)

சரணம்

பெண்டு பிள்ளே களுடன் பண்ட பதார்த்தத்துடன்
உண்டிருக்கும் போதென்று கொண்டு கொண்டாடுகிருன்
வேடிக்கை யாகவே பாடிப் படித்துக் கொண்டு
கூடிக் குலாவயெம ளேடிப் பிடித்துப் போகிருன் (ஏது)

## 1021. எனே யாளுமையா

பல்லவி

எனேயாளுமையா - நாளும்
சினேசேர் பொழிற்குன்றைத் தேவர்க டேவா (எனே)

அநுபல்லவி

ஈனர் களாகிய தானவர் குலம்வீழ
மான வடிவேல் தொட்டவல சுப்பிர மண்யா (எனே)

சரணம்

வெள்ள நிறைந்திடும் பள்ள வலையின் மீது
யள்ளிலே வேல்தொட்ட அமரர் சிகாமணியே
படிக்குளுயருங் குன்ருக்குடிக் குமரேசா
நடிக்கும் மயிலிலேறி நாடி முன்ஞக வந்து (எனே)

## 1022. நிச்சய மென்றெண்ணுதே

பல்லவி

நிச்சய மென்றெண்ணுதே – மனமே (நிச்ச)

அநுபல்லவி

பட்ச மறவாது குன்றைப் பரனை யல்லால் மற்றதொன்றை
(நிச்ச)

சரணம்

1 நில்லாத வாழ்க்கையால் பொல்லாச் சமுசாரத்தை
கல்லாத மூடர் போலக் கலந்து வுலந்துவதை (நிச்ச)

2 தாயின் வயிற்றில் வந்து நோயி லவதிப்பட்டு
மாயும் பிறப்பைக் கண்டு மகிழ்ந்த விருப்பத்தை (நிச்ச)

3 நின்ற பொழிலுறையுங் குன்றையின் மலையோனை
யென்றுந் துதி செய்வதே யிசைவு மற்றது வெல்லாம்
(நிச்ச)

## 1023. எண்ண மேதுக்கு

பல்லவி

எண்ண மேதுக்கு – மனமே (எண்ண)

அநுபல்லவி

வண்ண மாமுடிக் குன்றை மலையில்
வந்த ஞான சம்பந்த னிருக்க (எண்ண)

சரணங்கள்

1 வாதுக்கு வருசூரை மோதிச் செயித்துவென்ற
வால வடிவேலன் கோல னிருக்கையில் (எண்ண)

2 நான மலர்க்குழற் கானக மாறு
நன்னயத்துக் கிசைந்த யோவியத்த னிருக்கையில்
(எண்ண)

3 நாடியே யனுதினந் தேடிய வன்பரை
ரட்சிக்குங் குன்றைமலைப் பட்ச னிருக்கையில் (எண்ண)

## 1024. இந்தச் செனனம் வேண்டாம்

பல்லவி

இந்தச் செனனம் வேண்டாம்—சாமி
இந்தச் செனனம் வேண்டாம் (இந்த)

அநுபல்லவி

எந்தச் செனனங்க ளெடுத்துக் கொண்டாலு
மந்தச் செனன மெல்லா மகாமற் போனாலும் (இந்த)

சரணங்கள்

1 நோயினால் வருந்தியே வாடவும் - நல்ல
தாயின் கருவினிற் கூடவும் – சேதுப்
பேயின் வாயின்மென்று போடவும் – நாயன்
பிச்சுப் பிடுக்கவு மெச்சுத் திரியவும் (இந்த)

2 ஆசைக் கருங்கடல் வீழவும் - பொல்லா
மோசத் தடாகத்தி லாழவும் - யெமன்
பாசக் கயிற்றிற் சுற்றித் தாழவும் – யிந்தப்
படியலையவுங் கெட்டமிடி நலியவும் வந்த (இந்த)

3 நின்றாடிய பொழில்நீளும் - முடிக்
குன்றக்குடி மலைவாழும் - ஐயன்
நன்றருள் வாழ்க்கையைச் சூழும் - நல்ல
நயமில் லாத சத்திய மில்லாத (இந்த)

## 1025. சேவித்து வருவாயே

பல்லவி

சேவித்து வருவாயே - நெஞ்சே
சேவித்து வருவாயே (சேவித்)

அநுபல்லவி

சேவித்து வருவாயே
செகண்டிமலைக் குகனை (சேவித்)

சரணங்கள்

1 புள்ளி மயிலிலேறு மள்ளிலைவேற் கையனை
தெள்ளிய தமிழ்வாயனை சேவலன்றனைக் கண்டு (சேவித்)
2 வாசக் களபமுலை நேசக் குறமயிலை
ஆசைக் கிசையமேவு மலங்கிர்தனைக் கண்டு (சேவித்)

3 என்று மன்பரைக் காக்குங் குன்றைமலைக் குகனை
மன்றல் மணிமார்பனை வால வடிவேலனை (சேவித்)

## 1026. பார்க்க வேணுமையனே

பல்லவி

பார்க்க வேணுமையனே - வெகு
தீர்க்க மான குன்றைத் தேவனே சாமி (பார்க்க)

சரணங்கள்

1 ஆடிய மயிலேறி நீடிய வள்ளியுடனே
கூடி யடியவனைத் தேடி வந்தருட் கண்ணால் (பார்க்க)

2 பங்கய மலர்ப்பொழிலி லங்கிய யிணையடி
செங்கையாற் றொழுமன்பர் தங்களுக் கருட்கண்ணாற்
(பார்க்க)

3 பைந்தளி ரோங்கிய கந்த மலர்ப்பொழில்
வந்த சிகியின் மலைக் கந்தனே யருட்கணால் (பாாக்க)

## 1027. வேண்டாமையா செனனம்

பல்லவி

வேண்டாமையா செனனம் – யினிமேல்
வேண்டாமையா செனனம்

அநுபல்லவி

தாண்டவம் புரிமயிற் சண்முக நாதா (வே)

சரணங்கள்

1 ஐயனே பன்னிரு கையனே பொடியணி
மெய்யனே யருள்புரி துய்யனே சாமி (வே)

2 வீரப் பிரதாபா சூர சம்மாரா
சார ரஞ்சிதனே தீர வேலவனே (வே)

3 பத்தர்கள் பணியு முத்தமிழ் புகழுஞ்
சித்தர் சிகாமலைக் கர்த்தனே சாமி (வே)

## 1028. எங்கும் பிரகாசனே

பல்லவி

எங்கும் பிரகாசனே
தெங்கு தவழுஞ் சோலைக் கர்த்தனே முத்தனே (எங்கும்)

அநுபல்லவி

மண்டலம் புகழுந் தொண்டர்கள் பரவும்
அண்டர் பிரானே ஐயனே மெய்யனே (எங்கும்)

சரணம்

அடிய வருடைய மிடியது தீர்க்கும்
கடிகமழ் நீபா காரண நாரண
முடிநிறை குன்ருக் குடிமலை வாழும்
துடியிடை யுமையாள் சுதனே யற்புதனே (எங்கும்)

## 1029. கடைக்கண் பாரையனே

பல்லவி

கடைக்கண் பாரையனே – நல்ல
மடைக்கண் போல மதுவார்ந்திடு நீபத்
தொடைக்கிசைந்திடு தூய புயனே யுன் (கடை)

சரணங்கள்

1 சின்ன யிடைவள்ளி மின்னனை யாளுடன்
வன்ன மயிலேறி வந்து யுந்தன் (கடை)

2 தொண்டர் களுமுயர் யண்டர்களுஞ் சூழ்ந்து
தெண்டனிட வந்து சிந்தை மகிழ்ந்துந்தன் (கடை)

3 ஆதி பராபரச் சோதி யருள்பால
மோது பொழிற்குன்றை முன்னவா யுன்னுட (கடை)

## 1030. ஈசனே யெனையாளாய்

பல்லவி

ஈசனே யெனையாளாய் – குன்றைமலை
வாசனே யெனையாளாய் (ஈசனே)

அநுபல்லவி

பத்தி யுடைய அன்பர் சித்தி பெறவருளுந்
தித்தி திமிதியென நிர்த்தமிடு மயிலா (ஈசனே)

சரணம்

மகபது பரவுங் குககும ரேசா
மிகவொளி ராறுமுக கிர்பா நிதியே
மன்றலம் பொழில்சேர் குன்றை மலையா
நன்றருள் தேவே வென்றி வேலேந்திய (ஈசனே)

## 1031. நடன மாமயிலா

பல்லவி

நடன மாமயிலா - யுயர்
வடவரைநிகர் மயின்மலை நாதா (நடன)

அநுபல்லவி

உந்தனை யேத்திடும்
எந்தனை யாளுவாய் (நடன)

சரணம்

குமர சரவண
அமர பயங்கரா
வாசக் கடம்பணி
யீசக் கிர்பாநிதி (நடன)

## 1032. குக நாதனே

பல்லவி

குகநாதனே - யாறு
முக நாதனே (குக)

சரணங்கள்

1 குமரேசனே - சூர
சமரேசனே (குக)
2 குருபரனே - யருள்
தருபரனே (குக)
3 வடிவேலனே - குன்றுக்
குடிவேலனே (குக)

## 1033. நீ வருவாய் குகனே

பல்லவி

நீ வருவாய் குகனே – யந்தத்
தேவரும் பணியுஞ் சிகிமலை நாதா (நீ)

சரணங்கள்

1 வந்த வினையெல்லா
மெந்த விதமுந் தீர (நீ)
2 மாபந்த மாகிய
தாபந்தந் தீரவே (நீ)

3 யென்னுட துயரெல்லாஞ்
சன்ன பின்னமா யோட (நீ)

## 1034. எண்ண மேதுக்கு

பல்லவி

எண்ண மேதுக்கு - மனமே
எண்ண மேதுக்கு (எண்ண)

அநுபல்லவி

வண்ண மாமணி முடியிலங்கிய
வாசமயில்மலை யீச னிருக்கையில் (எண்ண)

சரணங்கள்

1 யந்தரி யாமளை சுந்தரி ஈஸ்வரி
யம்பிகை யருளுஞ் சுப்பிரமணி யனிருக்கையில் (எண்ண)
2 வாசக் கடம்பணி தேசப்பிர
காச னெனையன் பனிரண்டு கையனிருக்கையில் (எண்ண)
3 யோகைபுனை யுல்லாசன் தோகை மலையின் வாசன்
யுத்த வடிவேலன் கர்த்த னிருக்கையில் (எண்ண)

## 1035. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் - பன்னிரு
கையனே சிகிமலைக் கர்த்தனே முத்தனே (ஐய)

அநுபல்லவி

வாது புரியுஞ் சூரை
மோது படையால் வென்ற (ஐய)

சரணம்

துங்க மிகுந்திடு
பங்கய மலர்ப்பாதா
மன்றன் மலர்ப்பொழிற்
குன்றை மலையின் வாழும் (ஐய)

## 1036. என்ன குறைகளுமுண்டோ

பல்லவி

என்ன குறைகளு முண்டோ — நாளும்
வுன்ன மயிற்பரி மன்னவன் தயவினால் (என்ன)

சரணம்

1 சின்ன மருங்குயர் சொன்ன னிறைவுடல்
மின்னனையாள் வள்ளி விருப்ப னிருப்பதால் (என்ன)

2 வால மதிச்சடை பால நன்னேத்திர
யால மணிமிடற்றையன் மைந்தன் றயவால் (என்ன)

3 வென்றி வடிவேலன் குன்றை மலையின் வாசன்
மன்றலன் மலர்நீப மார்பன் றயவினல் (என்ன)

## 1037. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – மூன்று
புரயரனு ரருள்சுரர் பதிநாதா (அர)

அநுபல்லவி

அண்டருந் தொண்டருந் தெண்டமிடும் பாதா
சண்ட யுதத்தண்ட பிரசண்ட மயிலின் நாதா (அர)

சரணம்

வாசப் பிரகாச விலாசக் கடம்பா
நேசக் கிர்பேசக் குகேசக் கணேசா
தண்டலை மண்டு செகண்டியின் மேரா
தண்டமிழ் கொண்டிடு கண்டெனும் வாயா (அர)

## 1038. வடிவேலவனே

பல்லவி

வடிவேலவனே – குன்றுக்
குடிவேலவனே (வடி)

அநுபல்லவி

வள்ளி மணவாளா
புள்ளி மயிலாளா (வடி)

சரணம்

மைவாள் விழியாள்
தெய்வானை லோலா
முன்பரவியதொரு
அன்பர் சகாயனே (வடி)

## 1039. ஒருநாளும் மறவாதே

பல்லவி

ஒருநாளும் மறவாதே - மனமே
ஒருநாளும் மறவாதே (ஒரு)

அநுபல்லவி

திருநாளும் பூசையுஞ் சிறக்குங் குன்றுக்குடி
வருமா மயிலேறும் பெருமான் பாதத்தை (ஒரு)

சரணங்கள்

1 வாசக் கடம்பமென் மாலை யணியும்புய
நேசக் குறமயிலி னேரிழை மருவிய
பாசத்தி லழுந்தாத பத்தர் களுக்கிசைய
ஆசைப் பரகதியை யருளிய நாதனை (ஒரு)

2 வஞ்சகமே செயும்வல்லவ சூரனை
நெஞ்ச மிருகூறாக நினைத்திடும் வேலனை
தஞ்சமென் றன்பரைத் தற்காத்து ரட்சிக்கும்
அஞ்சலென்று சொல்லு மையனை மெய்யனை (ஒரு)

3 சத்துரு சம்மார செயசண்முக பவனை
மித்துரு பாலன் விகசித யனுக்கிரக
எத்தலமும் பரவு மெழிற்சிகிமலை வாழுங்
கர்த்தனை பன்னிரு கையனைத் துய்யனை (ஒரு)

## 1040. ஐயா குமரேசா

பல்லவி

ஐயா குமரேசா - பனிரெண்டு
கையா யமரேசா (ஐயா)

சரணங்கள்

1 வால வடிவேலா - நல்ல
கோல மயில்வாகனா (ஐயா)

2 சத்துரு சம்மாரா
மித்துரு பரிபாலா (ஐயா)

3 குன்றையம் பதிநாதா
வென்றியின் மலர்ப்பாதா (ஐயா)

## 1041. ஐயா குமரேசா

பல்லவி

ஐயா குமரேசா – பனிரண்டு
கையா குன்றைமலைக் கர்த்தனே (ஐயா)

அநுபல்லவி

1 வந்த வடியவரைச்
சொந்தமுடனே காக்கும் (ஐயா)
2 நம்பிய கருத்துள
அன்பரைக் காக்கும் (ஐயா)
3 மன்றலம் பொழிலுறை
குன்றை மலைவரு (ஐயா)

## 1042. எந்தவினை வந்தாலுந் தீருமே

பல்லவி

எந்தவினை வந்தாலுந் தீருமே – குன்றை
வந்த குமரேசனைச் சிந்தனை செய்தால் (எந்த)

சரணங்கள்

1 மங்கள கரசுப சங்கரி யருளிய
துங்க வடிவேலனைத் தோத்திரஞ் செய்தால் (எந்த)
2 சூது நிகர்த்த கொங்கை மாது குறக்கொடி
மீது மயக்கங்கொள் வேந்தனைத் தொழுதால் (எந்த)
3 யெல்ல வரும்பணி செல்ல டரும்பொழில்
நல்ல செகண்டியி னுதனைத் தொழுதால் (எந்த)

## 1043. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே (தண்டா)

அநுபல்லவி

வண்டார் பொழிற் குன்றைமலைக் குமரேசா (தண்டா)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 கங்கை தரித்தசடைச்
சங்கர ரருளிய (தண்டா)
2 அண்டர் முதலிய
தொண்டர் பணிசெயும் (தண்டா)

3 நின்ற பொழிலுலவுங்
குன்றை மலையின் வாழும் (தண்டா)

## 1044. இன்னமும் மறவாதே

பல்லவி

இன்னமும் மறவாதே (இன்ன)

அநுபல்லவி

பொன்னுலவுங் குன்றைப் பொருப்பி லுறைவோனை
(இன்ன)

சரணங்கள்

1 எங்கும் பிரகாசங் கடங்கு மயிலிலேறும்
பொங்குங் கிர்பானிதிப் புண்ணியனென் சாமியை
(இன்ன)

2 வஞ்சக மாவுடல் நெஞ்சிரு கூறிடு
மிஞ்சிய வயிலேந்தும் வீரனென் சாமியை (இன்ன)

3 முடிய ளிலங்குங் குன்ருக் குடியிலமர்ந் தருளுங்
கடிகமழு நீபக் கண்ணிய னென்சாமியை (இன்ன)

## 1045. துயர மேதுக்கு

பல்லவி

துயர மேதுக்கு – நாளும்
நயமிகுந்த குன்றை நாதா வடியவர்க்கு (துயர)

சரணங்கள்

1 நெஞ்ச மொருமித்துன் கஞ்ச மலரடியை
தஞ்சம் வேறிலை யென்று தாழு மடியவர்க்கு (துயர)

2 நீடிய குழலிநன் மோடியுள்ளவள்ளி
கூடிய புயநாதா கும்பிடு மன்பருக்கு (துயர)

3 மன்றல் மலர்ப்பொழிற் குன்றைய மலைவாழும்
வென்றி புனையும் வேலா வேண்டு மடியவர்க்கு (துயர)

## 1046. ஆடுமயிற் பரியாய்

பல்லவி

ஆடுமயிற் பரியாய் - யிசை
கூடுங் குயின்மொழிக் குறத்தி பங்காளா (ஆடு)

சரணங்கள்

1 அண்ட பகிரண்ட மெண்டிசையு மதிர்
கொண்ட னடுங்கிடக் குலுங்கக் குலுங்கிநின்று (ஆடு)

2 எத்திசை யோர்களுஞ் சுற்றிநின்றே தோள்
கற்றை யிறைவிரித்து தித்திமி யெனவே நின்று (ஆடு)

3 வாகை புனையுந் தோளா யோகைபுனை யுல்லாசா
பாகை மொழியாய் தோகை மலையின் மேனின்று (ஆடு)

## 1047. வெற்றி வடிவேலவா

பல்லவி

வெற்றி வடிவேலவா - யெங்குஞ்
சுற்றிபொழிற் குன்றைத் தூயனே யென்சாமி (வெற்றி)

சரணங்கள்

1 தானவர் குலமெல்லா
மீனம தாகவென்ற (வெற்றி)

2 அடலுற்று வருகிற
கடலைச் சுவறவிட்ட (வெற்றி)

2 மஞ்சடருங் கிர
வுஞ்ச கிரியை வென்ற (வெற்றி)

## 1048. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – நாளும்
அருமறை துதிசெயும் அறுமுகத் துரையே (குருபர)

அநுபல்லவி

திங்க ளணியுஞ் சடைச்
சங்கரர் தமக்குக் (குருபர)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 மதுமென் மலருறை
சதுமுக னுக்குக் (குருபர)

2 நம்பிய பொதிகையின்
கும்ப மாமுனிக்குக் (குருபர)

3 மன்றன் மலர்ப்பொழிற்
குன்றையின் மலையின் (குருபர)

## 1049. மோசம் போகாதே

பல்லவி

மோசம் போகாதே – மனமே – நாளும்
வாசஞ் சேர்பொழிற் குன்றை மலைக்குகன்
மனம் கனிந்திடத் தினம்பணியாமல் (மோசம்)

சரணங்கள்

1 நான் மலர்க்குழற் கானக மயிலி
மானனையாள் வள்ளி வாசனைப் போற்றுமல் (மோசம்)
2 வஞ்சக வரக்கனை நெஞ்சைப் பிளந்துடன்
பஞ்சு பஞ்சாக்கும் வேற்பகவனைப் போற்றுமல் (மோசம்)
3 தேடிய வடியவர் நாடிய வரமருள்
யாடிய மயிலேறு மையனைப் போற்றுமல் (மோசம்)

## 1050. வடிவேலெடுத்து வருவாய்

பல்லவி

வடிவேலெடுத்து வருவாய் – குன்றுக்
குடிமேலிருக்கு மெய்யா அடியர்க்கருள் புரிய (வடி)

அநுபல்லவி

யொருமன தாகவே யிருமலர்ப் பாதத்தை
யுருமையுடன் றியானிக்கு முனதடியார் காண (வடி)

சரணம்

தஞ்சம் வேறில்லை யென்று நெஞ்ச முருகுமன்பர்க்
கஞ்ச லென்றருளி வான ந்த மாகவே
யாதி பராபரச் சோதி மயமாகவே
நீதி வடிவானவர் நின்ன டியரிடம் (வடி)

## 1051. எப்ப தயவு வருமோ

பல்லவி

எப்ப தயவு வருமோ – யந்த
மைப்படியுங் குன்றைமலைக் குமரேசன் மனம் (எப்ப)

சரணங்கள்

1 பொல்லாத தீவினை யெல்லாமுந் தவிர்ந்திட
நல்லாண்மையே செய்து நாடி யன்பரைத் தேட (எப்ப)

2 சன்னிதிதனில் வந்து யுன்னிரு தாள்கண்டு
யுன்னித் தியானிக்குமுன் னடியர்க்கருள (எப்ப)

3 நரை திரை மூப்புத் தள்ளி விரைமலர்த் தாள்கொண்டு
யுருகு மன்பருக்கரு ளுதவி செய்திட யினி (எப்ப)

## 1052. வன்ன மயிலேறி வருவாய்

பல்லவி

வன்ன மயிலேறி வருவாய் – நாளும்
பொன்முடி யிலங்குங் குன்றை நன்மலையி லிருந்து (வன்ன)

சரணங்கள்

1 தத்தி திமிதா திமியென
தித்தி தமிதோ யென (வன்ன)

2 தேவர் முதலோர்கள் வந்து
யாவலுடன் எழுந்துவர (வன்ன)

3 மிடியற்று மென்றுசொல்லி
யடியவர்கள் சூழ்ந்திறைஞ்ச (வன்ன)

## 1053. மறந்து போகாதே

பல்லவி

மறந்து போகாதே – நெஞ்சே (மறந்து)

அநுபல்லவி

மறந்து போகாதே - நாளுஞ்
சிறந்த குன்றையின் தேவ தேவனை (மறந்து)

சரணங்கள்

1 எள்ளுக்கு ளெண்ணெய் போலெங்கு நிறைந்து வாழும்
கள்ளுக் கடம்பணி கர்த்தனை நிர்த்தனை (மறந்து)

2 மாது தெய்வானையை மருவிய புயனை
வாது புரியுஞ் சூரை மாய்த்தவனை நீயே (மறந்து)

3 கூடிய யன்பர்பணி கொண்டிடுங் குன்றைமலை
யாடிய மயிலேறு மையனை மெய்யனை (மறந்து)

## 1054. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே - யடியேற்கு
வேறு கதியில்லையே (ஆறு)

சரணங்கள்

1 சங்கர ரருளிய
மங்கள குமரேசா (ஆறு)

2 வாது புரியுஞ் சூரை
மோது படையால் வென்ற (ஆறு)

3 குன்றையின் மாமலை
நின்ற கிர்பானிதே (ஆறு)

## 1055. வரவேணுஞ் சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி – வந்துவரந்
தரவேணுஞ் சாமி (வரவேணும்)

சரணங்கள்

1 யோகைபுனை யுல்லாசா
தோகை மயிலிலேறி (வரவேணும்)

2 வள்ளி தெய்வானையுடன்
புள்ளி மயிலிலேறி (வரவேணும்)

3 மன்றலம் பொழிலுறை
குன்றை மலையிருந்து (வரவேணும்)

## 1056. துதித்துக்கொள் மனமே

பல்லவி

துதித்துக்கொள் மனமே - ஐயனைக் கண்டு
மதித்துக்கொள் கணமே (துதித்து)

அநுபல்லவி

விதிக்கும் பூம்பொழிற் குன்றை மாமலை
வேலனை மயிற் கோலனைக் கண்டு (துதித்து)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 பால நயன திரிசூல கரதல
ஞாலம் புகழனு கூலர் தன்பாலனை (துதித்து)

2 மங்கள கரசுப சங்கரி யாமளை
துங்க கிர்பானிதி மங்கைதன் பாலனை (துதித்து)

3 புள்ளி மயிற்சாயல் அள்ளிலை வேற்கண்ணி
தெள்ளிய தினைப்புன வள்ளிதன் லோலனை (துதித்து)

## 1057. எள்ளளவாகிலுங் கண்பாராய்

பல்லவி

எள்ளள வாகிலுங் கண்பாராய் – நாளும் (எள்ளள)

அநுபல்லவி

வள்ளலேதென்குன்றைமலைக் குமரேசா (எள்ளள)

சரணங்கள்

1 வாசா மகோசாமா யாசா பாச மதாக
யீசா யெனத் துதிக்கு மெளியவர்க் கிரங்கியே (எள்ளள)

2 யிருகை கடனைக் கூப்பி யுருகி யுருகி நின்று
பெருமானெனத் துதி பேசு மடியவர்க்கு (எள்ளள)

3 மனமது நெக்குருக அனவரத முந்தன்
வனச மலர்க்கழலை வணங்கிய அன்பருக்கு
(எள்ளள)

## 1058. கடம்ப வாசனே

பல்லவி

கடம்ப வாசனே – நல்ல
நடம்புரி மயினாதனே வேதனே (கடம்ப)

அநுபல்லவி

பங்கய மாமலர்
துங்க மலர்ப்பாதா (கடம்ப)

சரணம்

சுந்தரி யம்பிகை
தந்தருள் பாலா
யெங்குஞ் சிகிமலையா
தங்கும் வடிவேலவா (கடம்ப)

## 1059. அதுபோதும் மனமே

பல்லவி

அதுபோதும் மனமே – நாளு
மது மாமலர்ச் சோலை மயின்மலை தரிசித்த (அது)

சரணங்கள்

1 ஐயன் பனிரண்டு கையன்குருபர
ஆண்டவன் மயிற்றுண்டவன்றயவு (அது)

2 தூய மதுதுளிக்குஞ் சேய கடம்பணியுந்
துங்க பனிருபுயன் தங்க வேலவன்றயவு (அது)

3 சூர பராக்கிரம வீரப் பிரதாபசெய்
சூர சம்மார வெற்றியரா புயன்றயவு (அது)

## 1060. வருவாய் வருவாயையனே

பல்லவி

வருவாய் வருவா யையனே - நாளுந்
தருவாழ் செகண்டிமலேச் சண்முக நாதா (வரு)

சரணங்கள்

1 வடக்குன்று கிடுகிடென்ன
நடக்கும் பொன்மயிலேறி (வரு)

2 நீடிய சிறையாட
நாடிய மயிலேறி (வரு)

3 இச்சை மின்ஞர்களுடன்
பச்சை மயிலிலேறி (வரு)

## 1061. கண்டாயோ மனமே

பல்லவி

கண்டாயோ மனமே - யுயர்
வண்டார் பொழிற்குன்றை வால வடிவேலனே (கண்டா)

சரணங்கள்

1 அமரைக் காக்குஞ்
சமர சண்முகனே (கண்டா)

2 நீல மயிலிலேறுஞ்
சீலனேக் குகனே (கண்டா)

3 ஆறுமுக சீலனே
தேறு தமிழாளனே (கண்டா)

## 1062. எப்ப வருவா யையனே

பல்லவி

எப்ப வருவா யையனே (எப்ப)

அநுபல்லவி

மைப்படியுங் குன்றை மாமலேக் குகேசா (எப்ப)

சரணங்கள்

1 உத்தமனே யுன்னுடைய
பத்தன் மனம் மகிழவே (எப்ப)

2 யென்னுடைய மிடிதீரச்
சின்னமயிற் றன்னிலேறி (எப்ப)

3 வாடிக்கையாய் வள்ளி
கூடிக் குலாவிவர (எப்ப)

## 1063. இன்னந் தயவு வரவில்லையா

பல்லவி

இன்னந் தயவு வரவில்லையா - சாமி
சொன்ன நிறையுங் குன்றைதுரைக் குமரேசா (இன்ன)

சரணங்கள்

1 வால சண்முக வடிவேல் கிர்பானிதே
கோலமயிலேறும் பால சந்திர சேகரா (இன்ன)

2 மங்களகர வள்ளி பங்கில்வரு முல்லாச
பங்கய மலர்ப்பாதா திங்க னிறைவதனு (இன்ன)

3 சின்னஞ் சிறுவயசின் முன்னமெதிர் சூரனை
மின்னு மயிலால் வென்ற யென்னையனே சாமி
(இன்ன)

## 1064. நீ மறவாதே

பல்லவி

நீ மறவாதே – மனமே (நீ)

அநுபல்லவி

பாமணக்குஞ் செகண்டி நாம வடிவேலனை (நீ)

சரணங்கள்

1 கொச்சை குறத்தியுடன் பச்சை மயிலிலேறி
யிச்சையாய் விளையாடு மெம்பெரு மானை (நீ)

2 பாலா மறைபொருளே மோலந்தேவரனு
கூலா வென்றன்பர் கூடிய நாதனை (நீ)

3 சித்த பரிசுத்த பத்தர்கள் பணிபாத
யுத்தமனைச் சமரோங்கும் வடிவேலனை (நீ)

## 1065. வந்தாதரித் தருள்வாய்

பல்லவி

வந்தாதரித் தருள்வாய் – யன்பர்கள்
முந்தா தரத்துடன் முழங்குங்குன்றுக் குடியாய் (வந்து)

அநுபல்லவி

யாசைப் பெருக்கான நேசக் குறக்கொடி
யாளை மருவிய லோலா (வந்து)

சரணம்

மங்கை தெய்வானையை யிங்கித மாகவே
மருவிய கனசீலா
பத்தர்கண் மிடிதீர்க்குங் கர்த்தனே குருநாதா
புகழ்காரணனே (வந்து)

## 1066. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யடியேற்கு
வேறுதுணை சொல்லையா (ஆறு)

சரணங்கள்

1 நெஞ்சார வந்து யஞ்சாதே யென்று
நித்திய சுபந்தருங் கர்த்தனே சாமி (ஆறு)
2 யாளுந் துயர்க்கடல் வீழு மடியரை
யாதரித் தாண்டருள் வேதனே யென்சாமி (ஆறு)
3 சொன்ன மணிமுடி மின்னுஞ் சிகிமலை
தூய சண்முக நாதா நீயருளென் சாமி (ஆறு)

## 1067. சமர சண்முக நாதா

பல்லவி

சமர சண்முக நாதா – அந்த
அமரர் பணியும் பாதா (சமர)

சரணங்கள்

1 சந்திர சடாதரனே வந்திமை யோருயிர்
சிந்திடவே செயும் திடவசுரனை வென்ற (சமர)
2 யெங்கு நிறைந்திருக்கும் பொங்குங் கரியகடல்
மங்கும்படி தொடுத்த வடிவே லேந்தும் (சமர)

3 வண்ண மணிமுடித் தண்ணுலவும் பொழிற்
குண்ணக் குடிமலைக் குகனே யென்சாமி (சமர)

## 1068. வேலாயுதனே

பல்லவி

வேலாயுதனே – வெகு
கோலாகலனே (வேலா)

அநுபல்லவி

யாரூறு கையனே
நீரூறு மெய்யனே (வேலா)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 கூரான வடிவேலா
மாருமலெனை யாள்வாய் (வேலா)

2 வஞ்சக வரக்கனை நெஞ்சு பகர்ந்திட
வெஞ்சமர் செய்திடும் கஞ்ச மலர்க்கையா (வேலா)

3 பத்தர் நிறைந்திடு முத்தி சிறந்திடு
யெத்தலமும் பணி கொற்றவா (வேலா)

## 1069. கருணைப் பெருங்கடலே

பல்லவி

கருணைப் பெருங்கடலே - யெனையாள்
பெருமைச் சிகியில் வருவாய் (கருணை)

சரணங்கள்

1 வாசக் களபமுலை நேசக் கிறுவியரை
யாசைக் கொடுவினையா லலையுந்துயரைத் தீர்க்கும் (கருணை)

2 யாதுந் தெரியாததோர் பேதை மதியினாலே
மாதர் களாறதேடு மயக்கந்தனைத் தீர்க்கும் (கருணை)

3 தன்னாலுமுயர் பொன்னாலுந் தினமின்னாருங்
குன்றைமேவி நிறைந்திருக்கும் (கருணை)

## 1070. எந்தன் குலதெய்வமே

பல்லவி

எந்தன் குலதெய்வமே – யடியேற்கு
வந்த வினையைத் தீருவாய் (எந்தன்)

சரணங்கள்

1 விற்பன வுமைபாலா வற்புத குருநாதா
பொற்பயின் மயிலாளா கற்பனே யுளதேவே (எந்தன்)

2 வாசக் களபமுலே நேசக் குறமயி
லாசைப் படவு நயம்பேசிக் கலந்தணேயும் (எந்தன்)

3 தங்க முடியிலங்குந் துங்க மயின்மலேயா
யெங்கணு நிறைந்தருளுங் கருணுகரா (எந்தன்)

## 1071. வரவேணுஞ் சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி – யினியருள்
தரவேணுஞ் சாமி (வர)

சரணங்கள்

1 பொன்னின் மயிலேறி
மின்னிய வேலந்தி (வர)

2 வள்ளி தெய்வானேயுடன்
புள்ளி மயிலேறி (வர)

3 மண்டிய பொழிலின்
செகண்டி மலேயிருந்து (வர)

## 1072. சார மில்லாத

பல்லவி

சார மில்லாத தரித்திரக் கடலேத்
தாண்டுவ தெக்காலம் (சார)

அநுபல்லவி

மேரு மாமலேயை நிகருஞ் சிகாமலே
மீதினில் வருதேவே (சார)

சரணங்கள்

1 பூத சென்மம் பலவெடுத்து - பெண்கள்
காதலின் மனமதை விடுத்து – யதிற்
பூண்டு கொண்டே திரும்ப மீண்டு கொள்ளாத (சார)

2 யாசைப் பெருங் கடலுள் விழுந்து
மோசப்படும் வினேகள் சூழ்
வதிலலேந்து திரிந்து மனமுலேந்து வுலேந்து நாளும்
(சார)

3 யுந்தனிரு சரணந் தன்னைக் - கண்டு
வந்தனைமிகச் செய்து பின்னை - வெகு
யுத்தமனே பரிசுத்தனே யென்சாமி (சார)

## 1073. என்னதவஞ் செய்தாலும்

பல்லவி

என்ன தவஞ் செய்தாலும்
பொன்னையனே யுந்தனிருதாள் போலாகுமோ (என்ன)

அநுபல்லவி

அன்ன வயல்கள் சூழு மன்னுங்
குன்றுக் குடிஐயனே வேல்கையனே சாமி (என்ன)

சரணங்கள்

1 யூசியிற் பெருவிர லூன்றி - யிருகண்
ணூசி நுனியிலோட நிறுத்தி - மேல்
வாசியை நன்றாக நடத்திக் - கொண்டு
மகத்துவ மடைந்தந்தச் சுகத்தினி லொருமித்து
(என்ன)

2 யஞ்சாறு பேரையு மடக்கி - யந்தப்
பஞ்சாக்கினி நடுநிலைத்து - பொல்லா
நெஞ்சானந்தம், மகிழ்கொள்ளும்படி
நின்று பரமேசா வென்று புலம்பியே என்ன)

3 காய்கனி கிழங்குகள் புசித்து - மேனி
தேய்பட மற்றதை வெறுத்து - பேசும்
வாய்விழி மற்றதையடைத்து - மன
மயங்காமல் நெஞ்சந் தியங்காமல் வென்று (என்ன)

## 1074. தெண்டனிட்டுக் கொள்வாய்

பல்லவி

தெண்டனிட்டுக் கொள்வாய் - மனமே

அநுபல்லவி

அண்டர் பணியுங் குன்றை ஐயனை மெய்யனைத்
(தெண்ட)

சரணங்கள்

1 மிஞ்சிய குருடன் நெஞ்சு புணுகவே
யஞ்சிடாமல் வெகு நஞ்சுகு வேல்தொட்ட
வீராதி வீரனை சூராதி சூரனை (தெண்ட)

2 பத்தர் பணிவர்க்கு முத்தி யருளிய
நித்திய சுபகர சுத்த பரிபூரண
பன்னிரு கரதல சென்னி யறுமுகனை (தெண்ட)

3 எண்டிசையுந் துதிகொண்டிடு குமரனை
மண்டிய பொழிலின் செகண்டி மலையோனை
எங்கும் பிரகாசனைத் துங்க மயிலோனை (தெண்ட)

## 1075. ஆரை நம்புவேன்

பல்லவி

ஆரை நம்புவேன் – குன்றை
மேரில் வளரும் வேலனே (ஆரை)

அநுபல்லவி

உன்னைச் சாரமர்ந் துதிசாற்றிய பத்தன் (ஆரை)

சரணங்கள்

1 யந்த ஞளுந் துயர்வந்த ஞளு முன்னை
யெந்த ஞளுந் துதித்தேத்திய பத்தன் (ஆரை)

2 வாழும் போதும் வினைசூழும் போதும் துன்பத்
தாழும் போதும் உன்னையடுத்திடும் பத்தன் (ஆரை)

3 கூவி மயிலேறித் தாவி விளையாடுந்
தேவ மகேசனே சிந்திக்குமுன் பத்தன் (ஆரை)

## 1076. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா - யன்பர்
தேடிய வொயில்ாளா (ஆடிய)

அநுபல்லவி

கூரிய வடிவேலா – நீபத்
தாரிரு புயலோலா (ஆடிய)

சரணம்

தெள்ளிய தமிழ்வாயா - கானக
வள்ளி மகிழுநேயா
அடியவர் பணிபாதா – குன்றுக்
குடிமலை வருநாதா (ஆடிய)

## 1077. சிவசரவண பவனே

பல்லவி

சிவசரவண பவனே – நாளுந்
தவமுனிவரர் பணிசண்முக நாதா (சிவ)

அநுபல்லவி

தாவி நின்றாடிய கூவிய மயிலா
பாவியென் வினைதீர்ப்பாய் பார்த்து ரட்சிப்பாய் (சிவ)

சரணம்

யாசைக் கிசைந்த விசுவாசக் குறமயிலை
நேசத்துடன் மருவு நித்திய கல்யாணா
மஞ்சடர் பூம்பொழின் மிஞ்சிட வாழும்
கஞ்ச மலர்ப்பொய்கைக் கதிக்குஞ் சிகாமலை (சிவ)

## 1078. மயிலேறும் பெருமாளே

பல்லவி

மயிலேறும் பெருமாளே – நாளு
மொயிலாக வசுரனை யயிலாலே செயஞ்செயும் (மயி)

சரணங்கள்

1 வஞ்ச மனத்தினை யஞ்சி யிருகூறாய் மாய்த்தவனே
பொய்யைத் தேய்த்தவனே சாமி (மயி)
2 மோசஞ் செய்யும் பேரை நாசஞ் செய்து துயர்
மூட்டிய வாகன நாட்டியவா சாமி (மயி)
3 சொன்ன முடிநிரை மின்னு சிகாமலை
தூயவனே மகா மாயவனே சாமி (மயி)

## 1079. மனதே மறவாதே

பல்லவி

மனதே மறவாதே – நாளுங்
கனமான குன்றைமலைக் கர்த்தனை முத்தனை (மனதே)

சரணங்கள்

1 ஆறுமுக பிரானை
வேறுமுகம் பாராமல் (மனதே)

2 மாயன் மருகோனை
நேய மதாகவே (மனதே)

3 வஞ்ச வரக்கனின்
நெஞ்சைப் பிளந்தோனை (மனதே)

## 1080. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா – யுயர்
விண்முகத் தண்சிகி மலையா (சண்முக)

அநுபல்லவி

வாடிய யிடையாள் நீடிய குழலாள்
யாடிய மயிலாள் தேடிய குறமானை
யணைந்திடு லோலா (சண்முக)

சரணம்

அரும்புமென் முலையாள் சுரும்பிசை குழலாள்
கரும்புமென் மொழியாள் விரும்பு தெய்வானை
கனிந்திடு லோலா
யெங்கும் பிரகாசந் தங்குங் கிர்பேசா
பொங்குங் குணேசா கொங்குந் தண்டலைசூழ்
புனித சிகேசா (சண்முக)

## 1081. ஐயா செகநாதா

பல்லவி

ஐயா செகநாதா – பன்னிரு
கையா குகநாதா (ஐயா)

அநுபல்லவி

சூதுக்குண மிகுந்திடும் வாதுக்கு வருசூரை
மோதிச் செயித்து ன்ற யாதிப் பிரபலசூரா (ஐயா)

சரணம்

வாசக் களபமுலே நேசக் குறமயிலி
யாசைக் கிசைந்த குகேசக் கிர்பானிதியே
யென்புருகத் தியானிக்கு மன்பருக் குபகாரா
பொன்சிறை மயிலான தென்சிகி மலேவாசா (ஐயா)

## 1082. வந்தால் வியாதி தீரும்

பல்லவி

வந்தால் வியாதி தீரும் – யென் கந்தசாமி
வந்தால் வியாதி தீரும்

அநுபல்லவி

செந்தாமரை மடந்தை
யிந்தாத குன்றை விட்டு (வந்தால்)

சரணங்கள்

1 ஓகைபுனே யுல்லாசன் வாகை புனேயும் புயன்
தோகை மயிலேறித் தொந்தொந்தோ மென்று
(வந்தால்)

2 மேலான வர்கள் கோலா கலமதாக
வேலாயுதம் பிடித்து வேணுமென்றே நினேத்து
(வந்தால்)

3 கள்ளிருக்குங் குழலா ருள்ளிக்கு மயலார்
வள்ளி தெய்வானே யுடன்மன தாசை யாகவே
(வந்தால்)

## 1083. தோத்திரம் செய்குவாய் மனமே

பல்லவி

தோத்திரம் செய்குவாய் மனமே (தோ)

அநுபல்லவி

பார்த்திபன் குன்றைப் பரமன் பாதத்தை (தோ)

சரணம்

1 வால வடிவேலன் கோல மயிலாளன்
மேலவர் பணிசெயும் விமலனேக் கண்டு (தோ)

2 கூறு படையயிலோ னீறுபுனே புயவன்
யாறுமுக விலாசன் ஐயனேக் கண்டு (தோ)

3 மஞ்சடர் பூம்பொழின் மிஞ்சிய சிகிமலை
யஞ்சிறை மயிலேறு மாண்டவனைக் கண்டு (தோ)

## 1084. வாசனே சாமி

பல்லவி

வாசனே சாமி – நாளும்
தேசம் பரவிடுஞ் செகண்டி மாமலை (வா)

சரணங்கள்

1 புள்ளி மயிற்சாயல்
வள்ளி தெய்வானை (வா)
2 யெங்கணும் வாசிக்குஞ்
செங்கடம்ப மாலை (வா)
3 யண்டர் முனிவர்
தொண்டரிடம் விசு (வா)

## 1085. ஏதுக் காயிலும் பயமோ

பல்லவி

ஏதுக் காயிலும் பயமோ – மனமே
ஏதுக் காயிலும் பயமோ

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை மோதிப் படையால் வென்ற
வல்லவ முருகேசன் நல்ல பதமிருக்க (ஏது)

சரணங்கள்

1 அன்பர்க் குவன்தான் மின்பற்றுஞ் சொனதானம்
அருளிக்கு மணமலர்த் திருமெய்க் கழலிருக்க (ஏது)
2 யாடும் பம்பரம் போலக் கூடும் அடியார்
அருளிக்கு மணமலர்த் திருமெய்க் கழலிருக்க (ஏது)
3 யடரும் பலபொழில்கள் படருங் குன்றுக்
குடியிலிருக்கு மணமலர்த் திருமெய்க் கழலிருக்க (ஏது)

## 1086. எந்நாளோ அறியேன்

பல்லவி

எந்நாளோ அறியேன் – நாளு
மின்னுருங் குன்றை மீதினில் வருகுகன் (எந்)

அநுபல்லவி

பொன்னூர் மயிலேறிப் பொருந்த வந்தெனைக் காப்பது
(எந்)

சரணங்கள்

1 வாசனை மிகுமலர்ச் சன்ன முதலினோர்
வந்தடி பணிசெயுங் கந்தனெனைக் காப்பது (எந்)

2 வஞ்சக ராவணனை நெஞ்சைப் பிளக்க
வென்ற மாயவன் மருகேசன் சேயனெனைக் காப்பது (எந்)

3 வென்றி படைத்த சூரைக் கொன்றவன் வெற்றி
வேலன் மயிலேறுங் கோலனெனைக் காப்பது (எந்)

## 1087. கண்டாற் கலிதீரும்

பல்லவி

கண்டாற் கலிதீரும் – நாளும்
வண்டார் பொழிற் குன்றைமலை முருகேசனை (கண்)

அநுபல்லவி

ஞானஞ் சிறந்த யன்பர் நாடிய யீசனை
யானந்த நடராச னருள்முரு கேசனை (கண்)

சரணம்

நீல மயிலேறி நின்றிடு நாதனை
சீல வடியர்பணி சிறந்திடும் பாதனை
யந்தரி யாமளை யம்பிகை பாலனை
வந்தடி யவர்க்கருள் வால வேலனை (கண்)

## 1088. காண வேணுமென்று நினைப்பாயே

பல்லவி

காண வேணுமென்று நினைப்பாயே - மனமே (காண)

அநுபல்லவி

சேணுலவும் பொழிற் செகண்டி மலைக்குகனை (காண)

சரணங்கள்

1 ஆதி பராபரச் சோதி சொரூபனை
ஐயனை பன்னிரு கையனை நாளும் (காண)

2 பிரம சொரூபியைச் சரவண பவனை
பாதாம் புயனை வேதாந்த மயனை (காண)

3 பஞ்ச பூதேசனை வஞ்ச சுரேசனை
பார்த்துச் செயித்த வென்ற கீர்த்திப் பிரதாபனை (காண)

## 1089. நடன மாமயிலா

பல்லவி

நடன மாமயிலா – யுயர்
வடவரை நிகர் குன்றைமலை மிசைவாழும் (நடன)

அநுபல்லவி

யந்தரி யாமளை
சுந்தரி பாலா (நடன)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

அள்ளிலை வேல்விழி
வள்ளி மணாளா (நடன)
யாதி பராபரச்
சோதி சொரூபா (நடன)

## 1090. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணும் – குன்றைக்
கந்தனே குகனே கார்த்தி கேயனே (உந்தன்)

அநுபல்லவி

மைப்படியுங் குழற் செப்பிசையு முலை
வள்ளி மணவாளா புள்ளி மயிலாளா (உந்தன்)

சரணம்

மைவாளும் விழித் தெய்வானை
யைநாளும் மருவுபுயவா திருவருள் செய்து
பங்கய மாகிய துங்க மலர்ப்பாதா
பரம ரருளும் பாலா கரதல கமலா (உந்தன்)

## 1091. மாயவனே சாமி

பல்லவி

மாயவனே சாமி – நாளுஞ்
சேயனே யென்னுடைய தீவினை தீர்க்கும் (மாயவனே)

அநுபல்லவி

கந்த மலர்க்குழலாள் பைந்தொடி குறமானுள்
சிந்தை மகிழ்சேரு சுந்தரக் குமரா (மாயவனே)

சரணம்

நீப புனைபுயவா வீறு மிகுந்த சூரை
கூறு கூருகச் செய்யுந் தேறு நுனையயிலா
வால சண்முக நாதா நீல மயிலில் வாகனு
கோல மயின்மலையாய் சீல சண்முக குகா (மாயவனே)

## 1092. உனக்கொரு குறைவருமோ

பல்லவி

உனக்கொரு குறைவருமோ - மனமே (உனக்)

அநுபல்லவி

கனக்குஞ் செகண்டிமலைக் கர்த்தனரு ளிருந்தால் (உனக்)

சரணங்கள்

1 வானுடர் பணியுஞ் சேனுபதி யெனும்
மாயவனுர் மருகன் சேய னிருக்கவே (உனக்)

2 வாக்கினுலே தமிழ்த்தூக் கினிதாய்ச் சொல்லும்
வால வயதின் வடிவேல னிருக்கவே (உனக்)

3 நந்தாத வாவியுஞ் பிந்தாத பொழில்களும்
நாளுநிறை சிகியின் வாழு மையனிருக்க (உனக்)

## 1093. தீவினை தீராயோ

பல்லவி

தீவினை தீராயோ – குன்றைத்
தேவனே பொல்லாப் பாவியேன் செய்த (தீவினை)

சரணங்கள்

1 தஞ்ச மென்ற பேருக்
கஞ்ச லென்று சொல்லி (தீவினை)

2 யுந்த னடியவர்க்கு
சிந்தை மிகமகிழ்ந்து (தீவினை)

3 கூவிய மயிலேறித்
தாவி வந்துஎந்தன் (தீவினை)

## 1094. இன்னந் தயவு வரவில்லையோ

பல்லவி

இன்னந் தயவு வரவில்லையோ
பொன்னங் கிரியை நிகர் சிகாகிரியாய் (இன்னம்)

அநுபல்லவி

சித்த முருகிட மெத்த வன்புடன்
நித்த முனைப்பணியும் பத்தன் றுயரைத் தீர்க்க (இன்னம்)

சரணம்

வனச முகமிலங்க புனமயிலுடன் கூடி
கனக மயிலிலேறி யுனதடியன் முன்வர
துய்ய மலர்கள்கொண்டு செய்ய பதம்பணிவோர்க்
குய்ய வரம்புரிந்து வையகம் மிகவாழ் (இன்னம்)

## 1095. குன்றுக் குடியோனே

பல்லவி

குன்றுக் குடியோனே – நாளும்
நின்றுட் கடியரை ரட்சிக்கும் நாதா (குன்றுக்குடி)

அநுபல்லவி

பஞ்சாட்சர தேக
வஞ்சாட்சர ரருள் பாலனே வடிவேலனே (குன்றுக்குடி)

சரணம்

சங்கர சம்பு சதாசிவ சூலர்தன்
பங்கிலுறை யுமை பாலனே சாமி
தஞ்ச மென்ற பேரை யஞ்ச லென்றுண்டருள்
சண்முகனே யந்த விண்முகமே யுயர் (குன்றுக்குடி)

## 1096. நம்பினேனையா

பல்லவி

நம்பினேனையா – யெங்கள்
தம்பிரானெனை யாதரிப்பாய் (நம்பி)

அநுபல்லவி

யண்டர் பிரானே
தெண்டனிட்டேன் உனை (நம்பி)

சரணம்

மெய்யனே யினி நான்
ஐயனே யுனையே
துய்யா சிகாகிரியாய்
உய்யும்படி உனை (நம்பி)

## 1097. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா - யன்பர்
கூடிய வொயிலா (ஆடிய)

அநுபல்லவி

பன்னிரு கரனே - யாறு
சென்னி ஈஸ்வரனே (ஆடிய)

சரணம்

வள்ளிதன் லோலா - கூரி
னள்ளிலை வேலா
குன்றையின் வாசா – யன்பர்க்
கென்றும் பிரகாசா (ஆடிய)

## 1098. வேலு மயிலுமென்று சொல்லுவாய்

பல்லவி

வேலு மயிலுமென்று சொல்லுவாய் - நெஞ்சே பல
காலு முந்தன் வினையை வெல்லுவாய் (வேலு)

சரணங்கள்

1 கங்கை தரித்த சடைமுடி நாதன் - நல்ல
திங்க டரித்த கனமுடி வேதன் - தக்கன்
பங்கப் படச்செயித்த பிரக்கியாதன் – யருள்
பாலகனை வடிவேலனைக் கண்டு வேலு)

2 வெஞ்சம ராடிய வீரனை - போரின்
மிஞ்சிட வெற்றி கொள்ளுந் தீரனை – போரி
லஞ்சச் செயம் புரியுஞ் சூரனை – வென்ற
ஐயனை வெகுதுய்யனைக் கண்டு (வேலு)

3 குன்றைமலைக் கிசைந்த வாசனை - குறத்தி
மன்றன் மலர்க்குழலி நேசனை - யன்பரை
யென்றும் ரட்சித்தருளீசனை - யுய
ரெம்மானைப் பெரிய பெம்மானைக் கண்டு (வேலு)

## 1099. துரைக்குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா - மேரு
வரைக்கு நிகர் குன்றை வரைக்கு மேலமர்ந்திடும் (துரை)

சரணங்கள்

1 சமரமிடுஞ் சூரை கமரிடவே வென்ற
அமரர் பயங்கரா அடியனை யாண்டருள் (துரை)

2 இன்பக் கடலில் வீழ்ந்து துன்பப் படாமலே
அன்பர்க் கருள் புரிந்து ஆண்டிட வேணும் (துரை)

3 துய்ய பசுந்தமிழ் செய்ய கனிவாயா
ஐயனே பன்னிரு வருட்கரதலனே (துரை)

## 1100. நினைப்பாயே மனமே

பல்லவி

நினைப்பாயே மனமே – பதந்
தனைக் காலமும் அடியார் தான்பணி நாதனை (நினைப்பாயே)

சரணங்கள்

1 ஆதார மான விடந்தருமே – தனது
பாதார விந்தங் காணவருமே – வந்து
பாவ வினையைத் தீர்த்து யாவலுடன் காப்போனை
(நினைப்பாயே)

2 அஞ்சாதே நீ யென்று நாடி - வந்தோர்
நெஞ்ச மகிழ்வருள் சூடி – யன்பர்
நினைத்த வரங்களைத் தினைப்போதிற் செய்வோனை
(நினைப்பாயே)

3 நீடிய மலர்ப்பொழில் சூழுமுடி
கூடிய சிகிமலை வாழு நீலக்
கோல மயிலோனை வால வடிவேலனை (நினைப்பாயே)

## 1101. எண்ண மேதுக்கு

பல்லவி

எண்ண மேதுக்கு - மனமே (எண்ண)

அநுபல்லவி

வண்ணமிகு குன்றை வாச னிருக்கையில் (எண்ண)

சரணங்கள்

1 தேனலர் நீபன் தானவர் கோபன்
தேவர் சகாயன் சீல னிருக்க (எண்ண)
2 குஞ்சரி பாலன் வஞ்சியர் லோலன்
குருபர நாதன் குகனிருக்க (எண்ண)
3 கொம்பலர் சூழும் பைம்பொழில் வாழும்
குன்றையி னுதன் குமர னிருக்க (எண்ண)

## 1102. நாதனே நாதனே

பல்லவி

நாதனே நாதனே – மலர்ப்
பாதனே பாதனே (நாதனே)

அநுபல்லவி

வேலனே வேலனே - யவுணர்
காலனே காலனே (நாதனே)

சரணம்

ஐயனே ஐயனே – பன்னிரு
கையனே கையனே
சூரனே சூரனே – குன்றை
மேரனே மேரனே (நாதனே)

## 1103. இந்தச் செனன மேதுக்கு

பல்லவி

இந்தச் செனன மேதுக்கு - சாமி (இந்த)

அநுபல்லவி

முந்த செனனத்தாலே மோசம் போனேனையா (இந்த)

சரணம்

1 துன்பக் கடலில் வீழ்ந்து துடிக்குத் துடிக்குதே
யின்பக் கடலில் வீழ்ந்துயிர்க்குத் துயிர்க்குதே (இந்த)

2 ஆசை வலையிற் சிக்கி யலையுது யலையுதே
தேசமெல்லாஞ் சுற்றித் திரியுது திரியுதே (இந்த)

3 மன்னுமுடிச் செகண்டி வரையாய்
பொன்னின் மயிலிலேறும் புனிதா புனிதா (இந்த)

## 1104. முருகையா

பல்லவி

முருகையா - பன்
னிருகையா (முரு)

சரணங்கள்

1 வாசனே - குறத்தி
நேசனே (முரு)

2 ஐயனே - பூதி
மெய்யனே (முரு)

3 கோலனே - வடி
வேலனே (முரு)

4 வேதனே - குன்றை
நாதனே (முரு)

## 1105. கவலை ஏதுக்கையா

பல்லவி

கவலை ஏதுக்கையா – நாளுந்
தவமுனிவர் பணிசண்முக நாதா (கவலை)

சரணங்கள்

1 பொல்லாச் சகமயக்கா யெல்லா மயக்கங் கொண்டு
வல்லாண்மையள் குறைந்து மனந்தடு மாறிய (கவலை)

2 வாசக் களபமுலை நேசத்த ராசையால்
மோசப் பட்டுப்பட்டு முளித்து முளித்துக் கொண்டு
(கவலை)

3 முன்செய்த தீவினையா லென்செயலா மென்று
தென்சிகி மலைநாதா தேவ தேவா (கவலை)

## 1106. எண்ண மேதுக்கு

பல்லவி

எண்ண மேதுக்கு - யுயர்
வண்ண மாமுடிக் குன்றை யண்ண லிருக்கையில் (எண்ண)

சரணங்கள்

1 வந்த வசுரனைச் சிந்த வடித்திடு
சுந்தர வேலணி கந்த னிருக்கையில் (எண்ண)

2 எங்கும் பிரகாசந் தங்குங் கிர்பானிதே
தங்க மயிலேறுந் துங்க னிருக்க (எண்ண)

3 தேடு நிதிநிரை கூடுஞ் சிகிமலை
நாடு மறுபடை வீடுளோ னிருக்க (எண்ண)

## 1107. ஒன்றும் குறைச்சலில்லையே

பல்லவி

ஒன்றுங் குறைச்ச லில்லையே – யினி
யென்றுங் குன்ருக்குடிக் கிறைவன் றனையடுத்தால்
(ஒன்)

சரணங்கள்

1 நடன மயிலிலேறிக் கடகமுடன் வந்து
யுடனடி யாரைக் காக்கு முத்தனை யடுத்தால் (ஒன்)

2 வல்லவ சூரனை வெல்ல வடிவேல் கொண்டு
இல்லாமலே வென்ற யிறைவன் றனையடுத்தால் (ஒன்)

3 பேய்பிடித்தாற் போல் பெண்ணுசைப்பிடித்தாடியே
நோய்பிடிப் போரைக் காக்கும் லோலன் றனையடுத்தால்
(ஒன்)

## 1108. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே - நிதமதி
சயங்காணுங் குன்றைச் சண்முக னிருக்க (மயங்)

சரணங்கள்

1 வால சரவண வனுகூல நயவடியார்க்கு
வந்த வினைதீர்த்தருள் தந்த குருவிருக்க (மயங்)

2 வீரப் பிரதாப செய்சூர சம்மாரகண
வேலன் சிறுசதங்கைக் கால னிருக்கையில் (மயங்)

3 முடினிறை குன்ருக் குடிமலை தனில்வரு
முருகேசன் மாயன் மருகேச னிருக்க (மயங்)

## 1109. வந்தாதரிப்பாயே

பல்லவி

வந்தாதரிப்பாயே - நாளுஞ்
சிந்தாத புனல்வாவி நந்தாத குன்றை நாதா (வந்தா)

அநுபல்லவி

தாரித்திர மென்னுஞ் சங்கப் பிரவாகமாம்
வாரிக் கடலில் வீழ்ந்து மயங்காமற் சாமி (வந்தா)

சரணம்

காதல்தனை விளைக்குங் கன்னியர் மயலான
வேதனைக்குள் வீழ்ந்து வேகாமற் சாமி
பொல்லாத திதுவென்று புந்தியி லெண்ணுமல்
யெல்லாஞ் சரியென்று யிருக்கு மென்முன் சாமி (வந்தா)

## 1110. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – குன்றைக்
கர்த்தனே யெனையாளக் கருணைக் கடாட்சம் வைக்க (சித்த)

அநுபல்லவி

வாகன மாமயிலா
ஓகை புனைவொயிலா (சித்த)

சரணம்

கானக மாது மோகா
வானக மாது பாகா
பத்தர்க் கருளுஞ் சீலா
நித்தர்க் கிசையும் பாலா (சித்த)

## 1111. முருகேசனே

பல்லவி

முருகேசனே – யுயர்
மருமலர்ப் பொழில்மலை வாழும் (முரு)

அநுபல்லவி

முல்லைமுகை முறுவன் மெல்லிய யிசை
வள்ளி குறத்தியை மருவிய தோளா (முரு)

சரணம்

வாசக் குழற்பிர காசத் திருமுரு
கேசத் தெய்வானை நினைதனை தோளா
பத்தர் முனிவரர் நித்தந் துதிசெயு
முத்தமனே யெனக்குதவிய தேவே (முரு)

## 1112. எக்காலமுஞ் சாமி

பல்லவி

எக்காலமுஞ் சாமி – யன்பர்
முக்காலும் பணியு முருகேசா யெனையாளாய் (எக்கா)

சரணங்கள்

1 ஆண்டவனே யென்று யடியற்ற மரம்போலே
வேண்டிப் பணியுமெனை விர்த்தி யாக்கி வைக்க (எக்கா)

2 மிஞ்சாத துயரத்தை விலக்கஞ் செய்துவைத்து
அஞ்சாதே யென்று யாதரவு சொல்ல (எக்கா)

3 மஞ்சடர் பூம்பொழில் வாழுங் குன்றுக்குடி
ரஞ்சிதனே யெனை ரட்சிக்கும் படியாக (எக்கா)

## 1113. பட்சம் வைத்தெனை யாளாய்

பல்லவி

பட்சம் வைத்தெனை யாளாய் – யன்பரை
ரட்சிக்குங் கர்த்த விவ்வியன் நீயே யாகையால் (பட்சம்)

அநுபல்லவி

உந்தன் பதமலர் வந்தனை புரிகின்ற
எந்தன் மனமகிழ வந்தருளே செய்து (பட்சம்)

சரணம்

வாசக் களபமுலை நேசக் குறமயிலி
ஆசைக் கிசைந்த முருகேசக் கிர்பாநிதியே
மன்றல் மலர்ப்பொழி னின்றசை பொழிலுறை
கின்ற சிகாமலையின் வென்றி வடிவேலவா (பட்சம்)

## 1114. வரந்தருவாய் ஐயனே

பல்லவி

வரந்தருவாய் ஐயனே – யந்த
புரந்தரன் பணிகுன்றைப் பொருப்புறை நாதா (வரந்)

சரணங்கள்

1 செய்ய கடம்பணி
துய்ய பன்னிருபுயா (வரந்)

2 பன்னிரு காதலா
என்னிரு கண்முன் வந்து (வரந்)

3 ஆசைக் கடலில் வீழ்ந்து
மோசப் படாமலே (வரந்)

## 1115. நெஞ்சிரங்காயோ

பல்லவி

நெஞ்சிரங்காயோ – யுயர்
மஞ்சடர் பொழிற் குன்றைமலைக் குமரேசா (நெஞ்சி)

அநுபல்லவி

அண்டர் பரவுஞ் சேயா
தண்டமிழ் புகல்வாயா (நெஞ்சி)

சரணம்

பூவின் மேன்புயவா
தேவியர் நயவா
மூவர் கணேயா
தேவர் சகாயா (நெஞ்சி)

## 1116. எந்த வினை வந்தாலும் தீருமே

பல்லவி

எந்தவினை வந்தாலுந் தீருமே – மனமே
கந்தனை ஞான சம்பந்தனைக் கண்டால் (எந்த)

சரணங்கள்

1 கொங்கை கௌரியுமை மங்கைக் கிர்பாநிதி
திங்கட் சடாதரி சேயனைக் கண்டால் (எந்த)

2 போதணி கருங்குழன் காதலி குறமயில்
மீதகலா மயல் வேலனைக் கண்டால் (எந்த)

3 கந்த மலியும் பொழிலுந்திய சிகிமலை
வந்த குகேசனை மயிலோனைக் கண்டால் (எந்த)

## 1117. முருகையா யெனையாளாய்

பல்லவி

முருகையா யெனையாளாய் – மாயன்
மருகையா யெனையாளாய் (முரு

அநுபல்லவி

பாவக் கடலில் வீழ்ந்து பதறித் தவியாமல்
யாவற் கிசைந்தபடி யடியேனுக் கருளாய் (முரு)

சரணம்

சாகர சமுசாரந் தன்னி லழுந்தியே
மோகமதாற் கெட்டு மூழ்கிடாமற் சாமி
வெற்றி வடிவேல் கொண்டு விளையாடியவர்
சுற்றிய பொழிற்குன்றை துரைக்குமரேசா (முரு)

## 1118. கடைக்கண் பாரய்யா

பல்லவி

கடைக்கண் பாரய்யா – பிரமன்
படைக்கும் லோகத்தார் பணியுஞ் சரணு (கடை)

அநுபல்லவி

வள்ளி மனோகரா புள்ளி மயிலாளா
யள்ளிலை வேற்கரா அடியேனைக் காக்க (கடை)

சரணம்

வாதுக்கு வருசூரை மோதிச் செயித்தவா
போதுக் குளுயர் நீபம் புனையும் பன்னிரு புயா
யண்டரு முனிவருங் கண்டதிசயமிடுந்
தொண்டர் பணியுமுடித் தோகை மலையின் வாசா (கடை)

## 1119. காக்க வேணுஞ் சாமி

பல்லவி

காக்க வேணுஞ் சாமி – கடைக்கண்ணுற்
பார்க்க வேணுஞ் சாமி (காக்க)

சரணங்கள்

1 உன்னைச் சதமென் றெண்ணி யின்னமுந் தியானிக்கு
மென்னைக் கனிவுடனே யென்றைக்கும் ரட்சிக்க (காக்க)

2 கூறுபடை வேற்கையால் ஆறுமுகக் குமரா
மீறு துயர்களை வென்று பின் ரட்சிக்க (காக்க)

3 கூடிய மந்திக ளாடிய பொழிற்குன்றை
நீடிய மலைவரு நீதா யெந்தனை நாளும் (காக்க)

## 1120. முத்துக் குமரையனே

பல்லவி

முத்துக் குமாரையனே – குன்றைக்
கர்த்தனே யுன்னுட பத்தனை ரட்சிப்பாய் (முத்து)

சரணங்கள்

1 தாதவிழ் நீபமலர்ப்
போதணி மார்பா (முத்து)

2 யுந்தனை யடுத்திடு
மெந்தனை யாளுவாய் (முத்து)

3 போதண்டும் பொழிற்குன்றை
வேதண்ட நாயகா (முத்து)

## 1121. ஆடு மயிலில் வருவாய்

பல்லவி

ஆடு மயிலில் வருவாய் – யன்பர்
தேடுங் குன்ருக்குடி தேவ தேவனே (ஆடு)

சரணங்கள்

1 யந்தர வானவர்
வந்தடி பணிசெய்ய (ஆடு)

2 பன்னிரு கரதலா
யென்னித யங்குளிர (ஆடு)

3 யெங்கணும் பிரகாசந்
தங்குங் கிருபானிதியே (ஆடு)

## 1122. எந்தனை யாளுவாய்

பல்லவி

எந்தனை யாளுள்வாய் – யருள்
கந்தனே யுனை வந்தடுத்தே ன்நான் (எந்தனை)

அநுபல்லவி

தேடு மடியவர் கூடும் படி யாக
யாடு மயிலேறி யானந்த மாகவே (எந்தனை)

சரணம்

சந்திர சடாதர ரந்திரி யாமளை
தந்தருள் பாலகா சாமி கிருபானிதே
மீறு மவுணனை கூறும் வேலால் வென்ற
ஆறுமுக நாதா ஐயனே மெய்யனே (எந்தனை)

## 1123. வால வடிவேலனே

பல்லவி

வால வடிவேலனே – யன்பர்க்கனு
கூலனே மயிலேறுஞ் சீலனே சாமி (வால)

சரணங்கள்

1 வஞ்சச் சூருட
நெஞ்சம் பிளந்திடும் (வால)

2 குவலயக் கடல்கள்
சுவறிடத் தொடுத்திடும் (வால)

3 மன்றலம் பொழில்சேர்
குன்றையின் மலைவாழ் (வால)

## 1124. நீ தயவே புரிவாய்

பல்லவி

நீ தயவே புரிவாய் – நாளு
மாதவனுர்பணி மயின்மலை நாதா (நீ)

சரணங்கள்

1 வண்டலர் சிறந்த தண்டலை வாழும்
கொண்டல்கொள் குழலாள் குறக்கொடி பாகா (நீ)

2 கன்னலின் மொழியாள் நன்னய மடவார்
தன்னல மினிய யென்றன்னை ரட்சித்துக் காக்க (நீ)

3 மன்றலம் பொழில்சேர் குன்றையின் மலைமேல்
நின்றிடு மயிலா நின்றய வுடனே (நீ)

## 1125. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குருநாதா நல்ல
வரமருள் புரிவாய் கரதல கமலா (அரகரா)

சரணங்கள்

1 போதடர் தாளா
மாதய வாளா (அரகரா)

2 வன்ன மாமயிலா
நன்னய வொயிலா (அரகரா)

3 மயின் மலையோகா
குயின் மொழி பாகா (அரகரா)

## 1126. நீ மறவாதே

பல்லவி

நீ மறவாதே – நெஞ்சே ஐயன்
தாமரைமலர்ப் பாதனைத் தொழுதிறைஞ்ச (நீ)

சரணங்கள்

1 வால வடி வேலன்
நீல மயிலோனை (நீ)

2 மூவர்கள் பரவிய
தேவர்க டேவனை (நீ)

3 மகிமைப் பிரதாபச்
சிகிமலை யோனை (நீ)

## 1127. நீ தயவு செய்வாயே

பல்லவி

நீ தயவு செய்வாயே - குன்றைத்
தாயே யெனையாளுஞ் சண்முக நாதா (நீ)

சரணங்கள்

1 யந்தரி யாமளை
சுந்தரி பாலா (நீ)

2 வாசக் குழற்குறத்தி
நேசனுக் கிசைவோனே (நீ)

3 வீறு படைக்கதிர்க்
கூறு படைவேலவா (நீ)

## 1128. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே - யினி
வேறுமுக மில்லையே (ஆறு)

அநுபல்லவி

உந்தனைப் போற்றிய
எந்தனை யாளும் (ஆறு)

சரணம்

பங்கய பாதா
யிங்கித லோலா
மன்றன் மலர்ச்சோலை
குன்றை மலையின் வாழும் (ஆறு)

## 1129. ஆடிக் கொண்டாரையன்

பல்லவி

ஆடிக் கொண்டாரையன் – மயின்மேல்
வேடிக்கையா யன்பர் பாடிப் படித்துவர (ஆடி)

சரணங்கள்

1 ஞான மெய்ஞ்ஞானர்கள் வானவ ரானவர்
நாடித் துதித்துடன் கூடிக் குலாவிவர (ஆடி)

2 துங்கப் பிரகாசச் சுட்டி தங்கச் சிலம்பு தண்டை
துலங்கிட நன்ரு யிலங்கிக் கொண்டு (ஆடி)

3 செங்கையில் வேலேந்தி மங்கையருடன் கூடி
செகண்டி மலையினின்று அகண்ட பூரணராக (ஆடி)

## 1130. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே – பணி
பூண்டவனுர் மகனே (ஆண்ட)

அநுபல்லவி

செங்கை தரித்த வேலா
மங்கையர்க் கிசைபாலா (ஆண்ட)

சரணம்

பன்னிருகர
நன்னிய வரனே
சிகிமலை நாதா
சுகமருள் பாதா (ஆண்ட)

## 1131. தயவு செய்வாயே

பல்லவி

தயவு செய்வாயே – நாளும்
நயமிகுந்த குன்றை நாதனே நீதனே (தயவு)

அநுபல்லவி

கூடுஞ்சிறை மயிலேறி - விளை
யாடிவருங் குமரேசா (தயவு)

சரணம்

அண்டர் இமையவர்சூழ் – நயங்
கொண்ட குருபர நாதா
வாசக் கடம்பணி மார்பா – நல்ல
நேசக் குறத்தி மணாளா (தயவு)

## 1132. சரண தரிசனஞ் செய்வாய்

பல்லவி

சரண தரிசனஞ் செய்வாய் - மனமே

அநுபல்லவி

பரம சிவாவென்று வரகரா வெனச்சொல்லி (சரண)

சரணங்கள்

1 இருவினைகளுந் தூளாய்ப் போகுமே - பொல்லாப்
பெருவினைகளுஞ் சாகலாகுமே - யருட்
குருவாகிய யெங்கண் முருகேச சாமி (சரண)

2 தரித்திரக் கடலைக் கடக்கலாம் – நாளும்
விரிக்குந் துன்பத்தை யடக்கலாம் - யெங்கள்
கருத்தணுகிய யொருத்தனென் சாமி (சரண)

3 வாசக் கடம்பணி புயத்தன் – வெகு
நேசக் குறமயி னயத்தன் – பிர
காசன் மயின்மலை யீசனென் சாமி (சரண)

## 1133. எனை யாதரிக்க விலையோ

பல்லவி

எனையாதரிக்க விலையோ - நாளுந்
தேனெழுகும் பொழிற்சிகி மலைநாதா (எனை)

அநுபல்லவி

பத்த னிவனென்று தோணுதோ – சாமி
சித்த மெள்ளளவு நோகாதோ சாமி (எனை)

சரணம்

நோயை விலக்கிவைக்க லாகாதோ சாமி
பேயை விரட்டிவைக்கப் போகாதோ சாமி
தீயதை விரட்டிட லாகாதோ சாமி
தூயதைச் சேர்த்திட லாகாதோ சாமி (எனை)

## 1134. எனக்கொரு வருள்தாராய்

பல்லவி

எனக்கொரு வருள்தாராய் - முடி
கனக்குங் குன்ருக்குடிக் கர்த்தனே முத்தனே (எனக்)

அநுபல்லவி

வாசனை மலர்நீபா – சூரை
நாசஞ் செயுங்கோபா (எனக்)

சரணம்

அண்டர்கள் பணிபாதா – யடுத்த
தொண்டர்கள் பணிநாதா
தெள்ளிய தமிழ்வாயா – குற
வள்ளி தனக்கு நேயா (எனக்)

## 1135. வாராயோ சாமி

பல்லவி

வாராயோ சாமி - யென்ன
தீரா வியாதிகளுந் தீர்க்குந் தெய்வமா யிருந்தும்
(வாராயோ)

சரணங்கள்

1 எத்தனை நாளாகவே பத்த னடுத்தானென்று
மெத்த யிரங்கிச் சித்திர மயிலிலேறியே (வாராயோ)

2 உந்தனிரு பதத்தை வந்தனை புரிகின்ற
யெந்தன் மனதின்படி சிந்தை மகிழ்ந்தருள
(வாராயோ)

3 மன்றலம் பொழிலுறை குன்றை மலையிலுறை
கின்ற குமரேசனே நன்றருள் செய்திட (வாராயோ)

## 1136. எதனுற் றயவிலை

பல்லவி

எதனுற் றயவிலை – யுயர்
போதுகுங் குன்றைமலை நாதனே யென்சாமி (எதனுற்)

அநுபல்லவி

பங்கய மாமலர்ப் பாதா - யுயர்
திங்க ளிறைமுக நாதா (எதனுற்)

சரணம்

வாசக் கடம்பணி தோளா – யந்த
நேசக் குறக்கொடி நேசா
அண்டர் பணிபுரி தேவே – முடியின்செ
கண்டி மலைவரு கோவே (எதனுற்)

## 1137. ஆடிய மயிலாளா

பல்லவி

ஆடிய மயிலாளா - யன்பர்
தேடிய யிருபாதா (ஆடிய)

அநுபல்லவி

வஞ்சி புணர்தோளா - மலர்
மிஞ்சிய யிருதாளா (ஆடிய)

சரணம்

தூய கிர்பானிதியே - யருட்
சேய கலானிதியே
போர்புரி கூரயிலா - குன்றைச்
சீர்மலை வருமொயிலா (ஆடிய)

## 1138. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே - நல்ல
கூறுபடை வேலணியும் (ஆறுமுக)

அநுபல்லவி

பன்னிருகையா
மின்னிய துய்யா (ஆறுமுக)

சரணம்

வால சண்முகேசா
சீல கிர்பேசா
தோகைக் கிரீசா
வாகைப் புயேசா (ஆறுமுக)

## 1139. கடைக்கண் பாரையா

பல்லவி

கடைக்கண் பாரையா - வெள்ளை
விடைக்குகந்தவர் விரும்பும் பாலகா (கடை)

சரணங்கள்

1 இச்சைக் கிசைந்திடுங் கொச்சைப் பெண்ணும் நீயும்
பச்சை மயிலிலேறிப் பத்தனிடம் வந்து (கடை)

2 தண்டைச் சிலம்பொலி யெண்டிசை யதிரிடக்
கொண்டை மயிலேறிக் கொண்டு வந்துன்னுட (கடை)

3 நீடுங் கொடுமுடி சூடுங் குன்ருக்குடியா
யாடு மயிலேறியே யடியன் றனைரட்சிக்க (கடை)

## 1140. நடன மயிலாளா

பல்லவி

நடன மயிலாளா – கான
மடமயில் குறவள்ளி மணாளா (நடன)

அநுபல்லவி

ஆடிய பம்பரம் போலோடி விளையாடிய
தேடி யுடல்கள் தன்னில் செனிக்காமல் அருளாயோ (நடன)

சரணம்

இந்தச் சென்ன மெடுத்து யெந்தப் பலனைப் பெற்றேன்
இந்தச் சென்ன மினிப் பிறக்காம லருளாயோ
தோகைக் கிரிவளரு மோகைக் குமரேசனே
மாய்கைப் பிறப்பில் வந்து வருந்தாம லருளாயோ (நடன)

## 1141. என்றைக்குக் காண்பேனே

பல்லவி

என்றைக்குக் காண்பேனே - யென்கண் குளிர
குன்றைக்கு வாய்த்திடுங் குமர குகேசனை (என்றை)

சரணங்கள்

1 வாசக் கடம்பணி வாகனை யோகனை
தேசப் பிரகாசனைச் சேயனை நாயனை (என்றை)

2 வீரப் பிரதாப செயவேலனைச் சீலனை
சாரச் செந்தமிழ் சொல்லுந் தரதலனைக் கோலனை
(என்றை)

3 வள்ளி தெய்வானை புணர்மாரனை சீரனை
புள்ளி மயிலேறிய பூபனை நீபனை (என்றை)

## 1142. எந்தனை ஆளாயோ

பல்லவி

எந்தனை யாளாயோ - ஞானசம்
பந்தனே யடியர் சம்பந்தனே சாமி (எந்தனை)

அநுபல்லவி

நீல மயிலேறிய வால வடிவேலவா
சீல வடியார்க் கனுகூல கிர்பா னிதியே (எந்தனை)

சரணம்

வீரப் பிரதாப சூர சம்மார
கோர வேலணி யலங்காரப் பன்னிருகையா
தங்க மணிமுடிசேர் துங்க மயின்மலையா
எங்கனுங் கிருபை துலங்கிய குமரேசா (எந்தனை)

## 1143. வேலாயுத பாணியே

பல்லவி

வேலாயுத பாணியே - வெகு
கோலா கலமயிற் கொற்றவா யென்சாமி (வேலா)

சரணங்கள்

1 தானவர் படையான யானை குதிரை ரதம்
சேனை முதலானதைச் செருக்களத்தினில் மாய்க்கும் (வேலா)

2 சங்கப் பிரளயமாகப் பொங்கி வருங்கடலை
எங்கும் வறளச் செய்து யாரையும் ரட்சிக்கும் (வேலா)

3 வண்ண கனகமுடிக் குண்ணக்குடி வாழும்
அண்ணலே யெனக்கருள் ஆதி பராபரா (வேலா)

## 1144. கிருபா சமுத்திரமே

பல்லவி

கிருபா சமுத்திரமே - யென்முன்னம்
வருவாய் துரைக்கும ரேசா (கிருபா)

சரணங்கள்

1 மூவரையும் மற்ற தேவரையும் பணி
யாவரையும் நிகர் காவலனே சாமி (கிருபா)

2 அந்தரி யாமளை சுந்தரி டாகினி
சந்திர சடாதரர் மைந்தனே எனைக்காக்கும் (கிருபா)

3 சொன்ன மணிமுடி மின்ன வளருங்குன்றை
மன்னனவ் வடியர் பிரசன்ன பொன் மயிலேறும் (கிருபா)

## 1145. இனிச் செனனம் வேண்டாமையா

பல்லவி

இனிச் செனனம் வேண்டாமையா – குன்றை
வனக்கிரியின் வாசா புனக்கொடியி னேசா (இனி)

அநுபல்லவி

பொல்லாத தீவினையா லெல்லாத் துயரும்பட்டே
நில்லாத வாழ்வினின்று நெஞ்சுருக வலைகின்ற (இனி)

சரணம்

வள்ளி மனோகரா தெள்ளிய தமிழா
புள்ளி மெய்மயிலா புனைமலர் நீபா
தருவளர் சோலை திருமலை நிகராய்
வருசிகி மலைமேல் வந்த குகேசா (இனி)

## 1146. நடனமிடு மயிலா

பல்லவி

நடனமிடு மயிலா — யுயர்
வடவரை நிகர் குன்றைமலைக் குமரேசா (நடன)

சரணங்கள்

1 தொந்தந் தொந்தோ மென்று
திந்தந்த மென்று (நடன)

2 அரகரா வென்றடியவர் சூழ
புரவர வென்று பூசுரர் சூழ (நடன)

3 யண்டர் முனிவரர் துதிக்கவே
தொண்டர் குழாம்வந்து மதிக்கவே (நடன)

## 1147. வண்ணமயிற் பெருமாளே

பல்லவி

வண்ணமயிற் பெருமாளே — பிர
சன்னமாக வடியன் முன்னம் வருவாயே (வண்ண)

சரணம்

1 கோகனகம் போலவே
கமழும் பாதா (வண்ண)

2 வஞ்சரக்க குலமெலாம்
பஞ்சு பஞ்சாகச் செயும் (வண்ண)

3 வண்டலர் சூழ்சோலையன்
மண்டிவளர் குன்றைமலை (வண்ண)

## 1148. நெஞ்சம் மகிழ்ந்து

பல்லவி

நெஞ்சம் மகிழ்ந்து வந்து ரட்சிக்க வேணும்
கஞ்ச மலர்ப்பதத்தைக் கண்டு தரிசிக்க (நெஞ்)

அநுபல்லவி

வாசக் களபமுலை வள்ளி மனோகரா
மாசற்ற வடியவர் வாழ்த்து மராவரா (நெஞ்)

சரணம்

சூர சம்மாரஞ் செய்துலங்கிய வேலா
தீர நடனமயிற் சேவக கோலா
நன்ருகிய பொழில்நாள் தோறுஞ் சூழுங்
குன்ருக்குடி மலை குருபரா நாளும் (நெஞ்)

## 1149. காக்கவேணும் ஐயனே

பல்லவி

காக்க வேணு மையனே
தீர்க்கமான குன்றைத் தேவனே யடியெனை (காக்க)

சரணங்கள்

1 உந்தனை நாள்தோறும்
வந்தடுத் திடுமெனை (காக்க)

2 கூர்ந்து பார்த்துவினை
தீர்ந்து போகயெனை (காக்க)

3 மன்றலம் பொழிலுறை
குன்றை மலையிலிருந்து (காக்க)

## 1150. சண்முக நாதா

பல்லவி

சண்முக நாதா - நாளு
மண்மலியு நேமவளங் காளா (சண்முக)

அநுபல்லவி

பொற்பு நிறைந்தரு
வற்புத பாதா (சண்முக)

சரணம்

வால சந்திரவனு
கூல யிங்கித வாயா
வடிவுற்றிடுங் குன்ருக்
குடிபெற்றிடுந் தேவே (சண்முக)

## 1151. தரவேணும் ஐயனே

பல்லவி

தரவேணும் ஐயனே - மயின்மீது
வரவேணுங் குன்றைமலைக் கதிபா வருள் (தர)

சரணங்கள்

1 தூண்டிய மயிலாளா
வேண்டிய வரமெல்லாந் (தர)

2 புள்ளி மயிலாளா
தெள்ளிய வரமெல்லாந் (தர)

3 தகுந்த மயிலாளா
மிகுந்த வரமெல்லாந் (தர)

## 1152. ஆரை நம்புவேன் நான்

பல்லவி

ஆரை நம்புவேன் நான்
நேர வன்பர் கணிறை குன்றை நாதா (ஆரை)

சரணங்கள்

1 சினக்குஞ் சூரனைக் கனக்கும் வேல்கொடு
புனக்குன்றுகப் பொருதிச் செயிக்கும்
பூபனே மலர்நீபனே சாமி (ஆசை)

2 மனதி னினைத்த நினைவின் படியே
யுனதருள் செய்யா துழலு வோர்க்கரு
ளுத்தமனே யருள்சித்தனே சாமி (ஆசை)

3 குன்றை மாமலை நின்ற நாயகா
மன்று ளாடிய மைந்தனே குகா
வால குமரேசா ஞாலம்புகழ் சீலா (ஆரை)

## 1153. அருள்தர வேணும்

பல்லவி

அருள் தர வேணும் - நாளும்
திருமறைபுகழ் குன்றைத் தேவர் தேவா (அரு)

அநுபல்லவி

வஞ்சக வசுரனை நெஞ்சு கூருச் செய்து
வஞ்ச வடித்திடு ஐயனே மெய்யனே (அரு)

சரணம்

ஆடிய பம்பரம் போலோடி யலையுஞ் சீவன்
கூடிய பரகதியைக் கூடியே தேடி
மன்றலம் பொழிலுறை குன்றை மலையினாதா
துன்றிய சிறைமயிற் றுரையே (அரு)

## 1154. ஆறுமுகனே

பல்லவி

ஆறுமுகனே — நல்ல
கூறுபடை வேலணியுங் கொற்றவா வருளுற்றவா (ஆறு)

அநுபல்லவி

வாசக் கடம்பமலர்மார்பிற் றரிக்கு நாதா
நேசத்துட னடியார் நிதந்துதி பாதா (ஆறு)

சரணம்

யாசைக் குறத்தி வள்ளி யம்மையைப் புணர்தோளா
மாசற்ற முனிவரர் வாழ்த்திய தாளா
சமரிடு சூரனைத் தகர்த்திடும் வேலா
குமர சண்முககுகா குன்றையின் மேலா (ஆறு)

## 1155. வால வடிவேலனே

பல்லவி

வால வடிவேலனே — யனு
கூலனே மயிற்கோலனே (வால)

சரணங்கள்

1 யந்தர வானவர் வந்தடி பணிய
சந்த மயிலிலேறித் தொந்தமென் ருடிய (வால)

2 மோதுபடை நெளிய வாதுபுரி சூருடன்
சூதுசெய் சமர்செயும் போது புரியுங்கன (வால)

3 மன்றலம் பொழிலுறை குன்றை மலையின் வாசா
நன்றருள் புரிகுகா யுன்றயவே செய்வாய் (வால)

## 1156. இந்தச் செனனம் வேண்டாம்

பல்லவி

இந்தச் செனனம் வேண்டாம் — சாமி

அநுபல்லவி

யெந்தச் செனனங்க ளெடுத்த போதிலும்
யந்த செனனங்க ளதுவே போதும் (இந்த)

சரணங்கள்

1 தீர்க்க மில்லாத தினலே – யாரும்
பார்க்க நயமில்லாத தாலே – வெகு
மார்க்க மில்லாத தினலே – யிது
வேண்டாம் வேண்டாம் வேண்டாமையா சாமி (இந்த)

2 யின்பத்தினி லழுந்தாத தாலே – பொல்லாத
துன்பத்தி லழுந்து வதாலே - மாயக்
கன்மத்தில் விழுவதினலே – யிது
கனமிலே கனமிலே கனமிலேச் சாமி (இந்த)

3 தண்டலேயு முயர்பூக்கு முயர்நாள்தோறுந்
தண்டலே சூழுஞ் செ
கண்டி மலேதனில் வாழுமெங்கள்
கர்த்தனே கர்த்தனே காத்தனே சாமி (இந்த)

## 1157. ஐயா யெனேயாளாய்

பல்லவி

ஐயா யெனேயாளாய் – பன்னிரு
கையா யெனேயாளாய் (ஐயா)

அநுபல்லவி

வள்ளி தெய்வானேயை மருவிய தோளா
தெள்ளிய வடியவர் சேவிக்குந் தாளா (ஐயா)

சரணம்

வாசக் கடம்பணி வாகா குகேசா
மாசற்ற வன்பர்கள் வாழ்த்திய யீசா
தண்டமிழ் பாடிய சண்முக நாதா
வண்டணி சோலேசூழ் மயின்மலே நீதா (ஐயா)

## 1158. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – குகேசா (சித்த)

அநுபல்லவி

பத்தர் கணங்கள் பரவிய நாதா (சித்த)

சரணங்கள்

1 வாதுக்கு வருசூரை மோதிச் செயித்துவென்ற
வால வடிவேலவா நீல மயில்வாகன (சித்த)

2 மங்கை குறத்தி வள்ளி பங்கில் வளரும் வேலா
வால வடிவேலா நீல மயில் வாகனு (சித்த)

3 தண்டலை சூழ்தரு தண்டிலை நிறைகுன்றை
வால வடிவேலவா நீல மயில்வாகனு (சித்த)

## 1159. ஆதி பராபரனே

பல்லவி

ஆதி பராபரனே - செகச்
சோதி யெனு மரனே (ஆதி)

அநுபல்லவி

சங்கர சண்முகனே - மலர்ப்
பங்கய பதகுகனே (ஆதி)

சரணம்

அண்டர் பணிசரணு – நாளுந்
தொண்டர் பணியரணு
நின்றசை பொழில் சூழு - முயர்
குன்றையின் மலைவாழும் (ஆதி)

## 1160. மனதே யஞ்சாதே

பல்லவி

மனதே அஞ்சாதே - யுயர்
கனமான குன்றைமலைக் கர்த்த னிருக்கிறுர் (மனதே)

சரணங்கள்

1 கானக வள்ளிநன் மானனை புயவன்
காவலன்கன சேவல னிருக்க (மனதே)

2 மாது தெய்வானையின் மீது மயல்கொண்ட
வாசனருண் முருகேச னிருக்க (மனதே)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றை மலைவரு
வால வடிவுள்ள வேல னிருக்க (மனதே)

## 1161. அருள் தரவேணும் ஐய்யனே

பல்லவி

அருள்தர வேணும் ஐயனே – வேண
பொருள்தர வேணு மெய்யனே (அருள்)

அநுபல்லவி

திருமருவிய குன்றை
வருமுரு கேசனே (அருள்)

சரணங்கள்

1 பொன்மயி லேறிய மின்வடி வேலவா
வுன்றயவே செய்து வுருமையுடன் வந்து (அருள்]

2 கந்த மலர்கொடு அந்தர வானவர்
சொந்த வடியவர்கள் சூழ்ந்திடவே வந்து (அருள்)

3 வண்டலர் சோலைகள் மண்டிய பொன்முடிச்
செகண்டி மலையிருந்து காரணனே முன்வந்து (அருள்)

## 1162. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – நல்ல
கரதல மலர்திரி புரதகனு (அர)

அநுபல்லவி

தாதவிழ் நீபமலர்ப்
போதணி புயனே (அர)

சரணம்

யந்தரி யாமளை
சுந்தரி தருபாலா
மன்றலம் பொழில்சேர்
குன்றையின் மலையா (அர)

## 1163. ஏதுக்கையா

பல்லவி

ஏதுக்கையா – செனனம்
வாதுக்கு யெமன்வந்து வதைத்துக் கொலவரனினி (ஏது)

சரணங்கள்

1 வந்து பிறந்து நோயா ளுைந்து மெலிந்து போயே
வெந்து கருகி வாடி வீணுகப் போனதிது (ஏது)

2 மங்கைய ராசையாற் சங்கை யில்லாதுயர்
பொங்க வருந்துகின்ற பொல்லாப் பானயிது (ஏது)

3 மோசத் துறையாகிய பாசத் துறையாகிய
பொல்லாததிது
பாசத்தினில் விழுந்து தேசத்தினி லலைந்து திரியும்
(ஏது)

## 1164. எந்தன் மனதுக்கொரு திடஞ்சொல்வாய்

பல்லவி

எந்தன் மனதுக்கொரு திடஞ்சொல்வாய் – யுய
ரந்தர முயர்சிகி ஆண்டவனே சாமி (எந்த)

அநுபல்லவி

வேண்டியபடி யாசை பூண்டிடவே யலைந்து
மாண்டிடு துயரத்தை மாற்றிட வறியாதே (எந்த)

சரணம்

தாதவிழ் குழலியர் மாதர் மயக்கத் தாலே
வேதனையான நோயை விலக்குதற் கறியாத
சார மிகுந்த சமுசாரத்தினில் விழுந்து
சோர வருந்துயரைத் துலைத்திட வறியாத (எந்த)

## 1165. ஏதுக் காயிலும் பயமோ

பல்லவி

ஏதுக் காயிலும் பயமோ – மனமே (ஏதுக்)

அநுபல்லவி

போது கமழும் பொழில்பொருந்துஞ் சிகேச னிருக்க
(ஏதுக்)

சரணங்கள்

1 துட்டமிருகம் வந்து கட்டிப் பிடித்தாலும்
யட்டமத்துச் சனிதொட்டிருந் தாலுமினி (ஏதுக்)

2 பொல்லாத தீவினை யெல்லாம் வந்தா லுைம்
செல்லாமிடி வந்தாலும் சொல்லாம லோடிப்போம்
(ஏதுக்)

3 யேவற் பேயானுலும் மேவிப் படிந்தாலும்
தாவித் தாவிக் கொண்டு கூவிப் பறந்து போகும்
(ஏதுக்)

## 1166. கிருபை செய்ய வேணும்

பல்லவி

கிருபை செய்ய வேணும் - நாளும்
மறுமை தனையுந் தீர்க்கு மயின்மலை நாதா (கிருபை)

சரணங்கள்

1 வண்டர்களாகிய மிண்ட ரசுசரை
கண்டஞ் செயும்வேலா கருத்தனே யென்சாமி
(கிருபை)

2 போது தரித்த குழன்மாது குறத்தி பங்கா
சாதற் கிசைந்த தொண்டர் கருத்தனே யென்சாமி
(கிருபை)

3 பங்கய மாமலர்த் துங்க மலர்ப்பாதா
கங்கண கரதலா கருத்தனே யென்சாமி (கிருபை)

## 1167. ஐயனே மெய்யனே சாமி

பல்லவி

ஐயனே மெய்யனே சாமி – பன்னிரு
கைய்யனே பூதியணி துய்யனே யென்சாமி (ஐயனே)

அநுபல்லவி

ஆதி பராபரா
சோதி சொரூபா (ஐயனே)

சரணம்

பங்கய பாதா
சங்கரர் பாலா
மண்டிய பொழிலின்
செகண்டியின் மேரா (ஐயனே)

## 1168. ஆடிக் கொள்வாய் மயிலே

பல்லவி

ஆடிக் கொள்வாய் மயிலே – யன்பர்
தேடிப் பணியுங் குன்றைத் தேவனைத் தாங்கி நின்று (ஆடி)

சரணங்கள்

1 அய்யனை பன்னிரு
கையனைத் தாங்கிநின்று (ஆடி)

2 கோலனை கூர்வடி
வேலனைத் தாங்கிநின்று (ஆடி)

3 யீசனை குன்றைமலை
வாசனைத் தாங்கி நின்று (ஆடி)

## 1169. ஆண்டவன் பாதத்தை வேண்ட வேணும்

பல்லவி

ஆண்டவன் பாதத்தை வேண்ட வேணும் நெஞ்சே
(ஆண்ட)

அநுபல்லவி

வேண்டினல் மயிலேறித் தாண்டி வந்தருள் செய்வார்
(ஆண்ட)

சரணங்கள்

1 சோதி மயமான வாதி பராபரன்
போதி லுறையும் வேதன் புண்ணியனென் சாமி
(ஆண்ட)

2 தேடிய வன்பர்க ளுடியபடியருள்
சூடியே காக்கின்ற தூயனென் சாமி (ஆண்ட)

3 பங்கசமாமலர்ச் செங்கையில் வேலணி
மங்களகரவர மாதவனென் சாமி (ஆண்ட)

## 1170. ஆதாரஞ் செய்ய வேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் – நாளும்
போதார் பொழிற் குன்றைமீதார் குருபரனே (ஆதா)

சரணங்கள்

1 வந்த வினையைத் தீர்த்து
நொந்த துயரைத் தீர்த்து (ஆதா)

2 நன்னய மெல்லாஞ் சேர்த்துப்
பன்னிரு கண்ணுற் பார்த்து (ஆதா)

3 மகிமைகள் யாவுந் தந்து
சிகிமலை மீதிருந்து (ஆதா)

## 1171. எத்தனை நாளடுத் தேனையா

பல்லவி

எத்தனை நாளடுத் தேனையா – யுந்தன்
சித்த மிரங்காத தென்ன மெய்யா (எத்தனை)

சரணங்கள்

1 வெள்ளள வாகிலு முள்ள மிரங்கியே
துள்ளு மயிலில் வந்து வள்ளலே யருளென்று (எத்தனை)

2 நெஞ்ச மிரங்கியே தஞ்ச மென்றவர்களை
யஞ்சலெனக் காத்து மிஞ்சருள் செய்யென்று (எத்தனை)

3 கல்லாதவ னென்று யெல்லாருஞ் சொல்லாமற்
பொல்லா வினையுந் தீர்ப்பாய் சொல்லார் குன்றுக்
குடியாய் (எத்தனை)

## 1172. அடியேன் மிடிதீராய்

பல்லவி

அடியேன் மிடிதீராய் – குன்றுக்
குடிவாழு முனைவடி வேலா சாமி (அடி)

சரணங்கள்

1 யுன்னுதரவு செய்து
என்னுளுஞ் சாமி (அடி)

2 சித்த மிரங்கியே
யுத்தமனே சாமி (அடி)

3 சித்திர மயிலிலேறி
யுத்தமனே சாமி (அடி)

## 1173. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா - யன்பர்
தேடிய வொயிலா (ஆடிய)

அநுபல்லவி

சூர சங்காரா – நீபத்
தாரலங் காரா (ஆடிய)

சரணம்

பங்கய பாதா - வள்ளிக்
கிங்கித நாதா
பன்னிரு கையா - பூதி
மின்னிய மெய்யா (ஆடிய)

## 1174. வாராய் யென்சாமி

பல்லவி

வாராய் யென்சாமி – வந்துவரந்
தாராய் யென்சாமி (வாராய்)

அநுபல்லவி

கானக வள்ளி லோலா – வெகு
ஞான வற்புத சீலா (வாராய்)

சரணம்

மிஞ்சவுணர்கள் கோபா – யடியவர்
நெஞ்ச யிருளின் தீபா
யலர்கிசை பாதா - குன்றை
மலைக்குரு நாதா (வாராய்)

## 1175. சித்தந் தெளிய வேணும்

பல்லவி

சித்தந் தெளிய வேணும் (சித்தம்)

அநுபல்லவி

பத்தர்கள் பணிகுன்றைப் பரனே யரனே (சித்தம்)

சரணங்கள்

1 வஞ்சக வசுரனை நெஞ்சமிரு கூறாய்
வதைக்கும் வடிவேலவா வந்து யெந்தனைக் காக்க
(சித்தம்)

2 நேசக் குறத்தி பாகா வாசக் கடம்ப மார்பா
நித்தியசுப கல்யாண பத்தனை ரட்சிக்க (சித்தம்)

3 மன்றலம் பொழிலுறை குன்றையின் மலைவரு
வால சண்முக நாதா நீல மயில் வாகனா (சித்தம்

## 1176. வருத்தமோ ஐயனே

பல்லவி

வருத்தமோ ஐயனே (வருத்த)

அநுபல்லவி

திருத்தமான குன்றை யொருத்தனே யெனையாள் (வருத்த)

சரணங்கள்

1 பால நேத்திரா பால பாத்திரா - திரி
சூல காத்திரா யீசுரா யெனையாள் (வருத்த)

2 புள்ளி மயிலாளா வள்ளி மனோகரா
யள்ளிலை வேற்கரா ஐயா யெனையாள் (வருத்த)

3 மங்கைய ராசையாற் றேங்கிச மாகி
முணங்கி யலைந்திடும்படியரைக் காக்க (வருத்த)

## 1177. கந்தனே குகனே

பல்லவி

கந்தனே குகனே - யினி
யெந்தன் மனம்போல் வந்தெனை யாளாய் (கந்தனே)

சரணங்கள்

1 தவத்தினைச் செய்து மவத்திற் போகாமலப்
பவத்தினை யொழித்துதே பாதத்தினைக் கொடுப்பாய்
(கந்தனே)

2 யாசைக் கடலில் வீழ்ந்து மோசப் படாமலே
பாசத்தை விலக்கியே பாதத்தினைக் கொடுப்பாய்
(கந்தனே)

3 தண்ணறும் பொழிலுயர் வண்ணமுடிக் குன்றைப்
பண்ணவனே நல்ல பதத்தினைக் கொடுப்பாய் (கந்தனே)

## 1178. வருதத மேதுககு

பல்லவி

வருத்த மேதுக்கு - மனமே
வருத்த மேதுக்கு

அநுபல்லவி

கருத்தனே குன்றைக் கொருத்த னிருக்க (வருத்த)

சரணங்கள்

1 வஞ்ச வரக்கனை நெஞ்சைப் பிளந்திடும்
மிஞ்சிய கூரயில் வீர னிருக்கையில் (வருத்த)

2 நித்தந் துதிசெய்யும் பத்தர்கண் மிடிதீர்க்குங்
கர்த்தன் பரிசுத்த காங்கைய னிருக்க (வருத்த)

3 நீளும் பொழிற்குன்றை வாழுங் குகனெனை
யாளும் குருபர வையனிருக்கையில் (வருத்த)

## 1179. வருக வருக ஐயனே

பல்லவி

வருக வருக ஐயனே – நாளும்
அருள்பெருகுங் குன்றை ஐயனே மெய்யனே (வருக)

சரணங்கள்

1 மங்கை குறத்தியொரு பங்க னிறைந்திருக்க
தங்க மயிலிலேறி யங்கமுடனே யென்முன் (வருக)

2 தாதவிழ் மலர்கொண்டு பாதமதனிற் தூவி
போத முனிவர் சூழவே தயவுட னென்முன் (வருக)

3 அண்டர்கள் யாவருந் தொண்டர்கள் தேவருங்
கண்டடி தொழ யென்முன் (வருக)

## 1180. ஐயனை நினை மனமே

பல்லவி

ஐயனை நினைமனமே – சிகிமலை மேவுமுரு
கையனை நினைமனமே (ஐயனே)

அநுபல்லவி

துய்யனைப் பன்னிரு கையனை யருள் முரு (கையனை)

சரணங்கள்

1 ஆனை பரிமுதலாச் சேனை விழுந்தோட
தேனல ரயில்கொண்டு செயிக்கு மயில்முரு (கையனை)

2 கற்றவர் மெய்ஞ்ஞான முற்றவர் வல்லமை
பற்றலர் வந்துடன் பணிபுரி யுமுரு (கையனை)

3 துள்ளிய மயிற்சாயல் வள்ளி மனோகரனை
யுள்ளந் தெளியும்படி யுதவி செய்யுமுரு (கையனை)

## 1181. நெஞ்சே நினைமனமே

பல்லவி

நெஞ்சே நினைமனமே – யுயர்
மஞ்சேறிய குன்றைமலைக் குமரேசனை (நெஞ்சே)

அநுபல்லவி

தேவருக்கு மற்ற யாவருக்கு மருள்
செய்யும் பன்னிரு கையனை நாளும் (நெஞ்சே)

சரணம்

தேடிய அன்பர்கள் நாடிய படியருள்
செய்யும் பன்னிரு கையனை நாளும்
சிந்தனை மகிழ்வொடு வந்தனை புரிவோர்க்குச்
செய்யும் பன்னிரு கையனை நாளும் (நெஞ்சே)

## 1182. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யெனக்கு
வேறு கதி யில்லையே
கூறுபடை வேலணி மீறு மலர்க்கையா (ஆறு)

அநுபல்லவி

வையக மெல்லாம் புகழ்துய்ய மலர்ப்பாதா
ஐயா பன்னிரு கையா யெனையாளாய் (ஆறு)

சரணம்

வாசக் கடம்பப் பிரகாசக் கன்புயவா
யீசர்க் கிசை குகேசக் கிருபானிதே
தீவினை யால் மெலிந்தாவி துடிக்க
பாவியேன்திரிதலால் லாபமென்ன சாமி (ஆறு)

## 1183. திருப்பதந் தருவாயே

பல்லவி

திருப்பதந் தருவாயே – நாளு
மருப் பொலியுங் குன்றைமலைக் குமரேசா (திருப்)

அநுபல்லவி

கொற்ற வசுரன்றனை வெற்றி வடிவேல் கொடு
கொன்றவனே மயின்மே னிறைவனே சாமி (திருப்)

சரணம்

தேனலர் நீபமென் மானல மாலிகை
தேவர்க டேவர் மூவர் கணுதா
யுத்தமனே அருள் கர்த்தனே குகனே
யுந்தனைப் பணியு மெந்தன் கண்காண (திருப்)

## 1184. தயவு செய்திட வேணும்

பல்லவி

தயவு செய்திட வேணும் – நாளும்
நயமிகுந்த குன்றை நாதனே நீதனே (தயவு)

அநுபல்லவி

மங்கள கரவுமை
பங்கனருளும் பலா (தயவு)

சரணம்

யள்ளிலே வேல் விழி
வள்ளி தெய்வானை பாகா
யாதி பராபரா
சோதி சொருபா (தயவு)

## 1185. வேலாயுத பாணியே

பல்லவி

வேலாயுத பாணியே – யருள்
சீலா குன்றைமலைத் தேவா தேவா (வேலா)

அநுபல்லவி

பங்கய மாமலர்ப் பாதா - நல்ல
மங்கை குறத்திக்கிசை கோலா (வேலா)

சரணம்

யண்டர் பரவிய சரணு - யிசை
வண்டணி நீபா பரணு
வாதுசெய் சூர சம்மாரா – மலர்ப்
போது நிறைந்த திவ்வி தாரா (வேலா)

## 1186. தருணந் தயவு செய்குவாய்

பல்லவி

தருணந் தயவு செய்குவாய் - நாளு
மருவுலாவும் பொழின்மயின்மலை நாதா (தருணந்)

அநுபல்லவி

அடியார் தம்முட மிடிதீரிட வந்து
குடிகாத்திடுங் குககுமர குருபரனே (தருணந்)

சரணம்

சிவங்களை மாபத் தவங்களையுஞ் செய்பொய்ப்
பவங்களைப் பரிவுட னன்பர்க்குப்
பாரிக்குந் துயராலுந் தாரித் திரத்தாலும்
நேரிட்டிடும் வினையை நீக்கி யனுக்கிரகித்த (தருணந்)

## 1187. இந்தச் செனன மேதுக்கு

பல்லவி

இந்தச் செனன மேதுக்கு - குகநாதா
எந்தச் செனனங்க ளெடுத்தாலும் நல்லது (இந்த)

சரணங்கள்

1 தாயினிடம் பிறந்து நோயின் மிகமெலிந்து
பேயின் மிகவலைந்து போயிறந்தே கிடக்கும் (இந்த)

2 மாதர் மயக்கில் வீழ்ந்து போதமெல்லாங் கெட்டு
ஆதரவுங் கெட்டு வேதனைப் படுகின்ற (இந்த)

3 பெண்டு பிள்ளைகளென்று கண்டு மனமகிழ்ந்து
கொண்டு துயர்ப்படுந் தெண்டிரை சூழுலகில் (இந்த)

## 1188. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா - வேலின்
கரதல கமலா பரம சிவேசா (அரகரா)

அநுபல்லவி

ஆடிய மயிலா நீடிய வயிலா
நாடிய வடியார் தேடிய சரணா (அரகரா)

சரணம்

வேதியர் பரவும் பாத பங்கேசா
நாத குகேசா சீதள நீபா
மன்றலம் பொழில்சேர் குன்றையின் மலையா
யின்றருள் தருவாய் வென்றியின் கழலா (அரகரா)

## 1189. தேடிக் கொள்வாய் மனமே

பல்லவி

தேடிக் கொள்வாய் மனமே - யன்பர்
நாடிக் கொள்ளுங் குன்றை நாதனை நீதனை (தேடி)

சரணங்கள்

1 நீல மயிலேறுங் கோல சண்முக நாதனை
வலா வடிவேலவா மங்கள கரனைத் (தேடி)

2 வஞ்சக வரக்கனை நெஞ்சிரு கூறு
செயுஞ்சம ராடிய யுத்தமனை நாளுந் (தேடி)

3 திருவா மன்பருக் கருளிய குகனை
அருமறை புகழ்நய மருமலர்ப் பாதனைத் (தேடி)

## 1190. தருவாய் குமரேசா

பல்லவி

தருவாய் குமரேசா – மயின்மீது
வருவாய் குமரேசா (தருவாய்)

அநுபல்லவி

கானக வள்ளி புணர்
தேனலரணி மார்பா (தருவாய்)

சரணம்

அண்டர் பணியும் பாதா
தொண்டர் புகழு நாதா
மன்றன் மலர்ப்பொழிற்
குன்றை மலையா (தருவாய்)

## 1191. இன்னம் தயவிலையோ

பல்லவி

இன்னம் தயவிலையோ - நாளு
மன்னுஞ் சிகாகிரி வாசா யீசா (இன்னம்)

அநுபல்லவி

பத்தர் பணிபாதா
நித்திய சுபகல்யாண (இன்னம்)

சரணம்

வால வடிவேலா
கோல மயிலாளா
மாதுமை பாலகா
போதணி நீபனே (இன்னம்)

## 1192. சாமி குக குருபரா

பல்லவி

சாமி குக குருபரா - யருள்
பூமினுறை செகண்டிப் புனிதா யென்னுட (சாமி)

சரணம்

1 ஆண்டவனே பூதி
பூண்டவனே யென்னுட (சாமி)
2 சீதாம் புயமான
பாதாம்புய யெந்தன் (சாமி)
3 வாச மாமலர் நீபா
தேசப் பிரகாச யெந்தன் (சாமி)

## 1193. ஆதாரஞ் செய்ய வேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் – நாளும்
போதாரும் குன்றை நாதா குக நாதா (ஆதாரஞ்)

அநுபல்லவி

வள்ளி மனோகரா
புள்ளி மயிலாளா (ஆதாரஞ்)

:சரணம்

பைந்தமிழ் பாடிய
சிந்துர வாயா
பங்கய பாதா
இங்கித நாதா (ஆதாரஞ்)

## 1194. முருகேசனே

பல்லவி

முருகேசனே - மயிற்
குருகேசனே (முரு)

அநுபல்லவி

குமரேசனே - சூர
சமரேசனே (முரு)

சரணம்

குகநாதனே - யாறு
முக நாதனே
வடிவேலனே — குன்றுக்
குடிவேலனே (முரு)

## 1195. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் - நாளும்
உந்தனைக் கண்டு வந்தனை செய்யும் (எந்தனை)

அநுபல்லவி

மாயனுர் மருகா — வள்ளி
நேயனே முருகா (எந்தனை)

சரணம்

அற்புத நாதா – மலர்ப்
பொற்புறு நாதா
கந்தனே குகனே - குன்றை
வந்த சண்முகனே (எந்தனை)

## 1196. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா – நான்கு
அருமறை புகழ்சிகி யழகிய மலையாய் (குரு)

அநுபல்லவி

எந்தன் வினைதவிர
உந்தனருள் புரிவாய் (குரு)

சரணம்

அற்புத சரணு
பொற்புறு மயிலா
தெள்ளிய தமிழா
யள்ளிலை யயிலா (குரு)

## 1197. மனமே மறவாதே

பல்லவி

மனமே மறவாதே – நாளுங்
கனமாகிய குன்றைக் கர்த்தனை முத்தனை (மனமே)

சரணம்

1 ஆறுமுகக் கந்தனை கூறுபடை வேலனை
தேறு செந்தமிழனைத் தேவ தேவனை (மனமே)

2 வாசக் கடம்பணி பிரகாசக் குகமெய்க்கும
ரேசப் பரமசிவ யீசனைத் தினந்தினம் (மனமே)

3 பங்கய பாதனைத் தங்க மயிலோனைச்
செங்கை வடிவேலனைத் தென்சிகி மலையோனை (மனமே)

## 1198. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ - நாளும்
பூமிவளஞ் சிறந்த குன்றைப் புண்ணியன் குமரகுரு (சாமி)

சரணங்கள்

1 வாசனை சேருங் கடப்ப மாலை யணியும் புய
யீசனடியவருக் கிரங்குங் குமரகுரு (சாமி)

2 வண்டலர் பூஞ்சோலை தனில்வாழுங் குறமயிலி
செண்டுமுலைக் காசை கொண்ட தேவன் குமரகுரு (சாமி)

3 ஆசைக் கிசைந்த அன்பரவர்கள் வினையைத் தீர்க்கும்
மாசற்ற கதிர்வேலவா தென்குமரகுரு (சாமி)

## 1199. தேடிக் கொள்வாய் மனமே

பல்லவி

தேடிக் கொள்வாய் மனமே – யன்பர்
கூடிப் பணியுங் குன்றை நாதனை யனுதினம் (தேடி)

அநுபல்லவி

வஞ்சக அவுணனை மாய்த்திடும் வேலனை
கஞ்ச மலரைநிகர் காலக் கோலனை (தேடி)

சரணம்

ஆடு மயிலில் விளையாடிவரு மையனைக்
கூடு மன்பருக் கனுகூலஞ் செய்கையனை
எத்தேச காலமு மிருக்குங் கிர்பானிதியை
முத்தேநிகர் நலமுறுவ லெம்மா னிதியை (தேடி)

## 1200. எந்தனை ஆதரிப்பாய்

பல்லவி

எந்தனை யாதரிப்பாய் – யுன்னை
வந்தனை புரியுமுந்த னடிமையை (எந்தனை)

அநுபல்லவி

வாசக் களபமுலை
நேசக் குறத்தி பாகா (எந்தனை)

சரணம்

ஆசைக் கிசைந்தமுரு
கேசக் குருபரனே
மன்றன் மலர்ப்பொழிற்
குன்றைமலைக் குமரா (எந்தனை)

## 1201. ஐயனே எனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் - பன்னிரு
கையனே பூதியணி மெய்யனே யென்சாமி (ஐயனே)

சரணங்கள்

1 காலன் வருமுனுந்தன்
கோல மயிலில் வாராய் (ஐயனே)

2 துன்பம் வருமுன்னே
இன்ப மினியருள்வாய் (ஐயனே)

3 நின்னருட் கன்பர் சூழுங்
குன்றக் குடிவாழும் (ஐயனே)

## 1202. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ - பரி
சுத்தமான குன்றைத்துரை குமரேசா (சித்த)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை மோதிச் செயித்துவென்ற
போதுற்ற செயவேலா பொருந்தும் பன்னிருகையா (சித்த)

சரணம்

தேவர்களு மந்த மூவர்களு மற்ற
யாவர்களும் பணிஐயனே மெய்யனே
கொங்கலர் மாமல ரெங்கணுமே புகுந்
திங்கள் தவழுஞ் சோலை செகண்டிமலைக் குமரா (சித்த)

## 1203. என்சாமிபோல் வருமோ

பல்லவி

என்சாமி போல்வருமோ - யெந்தன் கலியைத் தீர்க்க (என்)

அநுபல்லவி

பொன்சாருங் குன்றைப் புண்ணிய நாதன் (என்)

சரணங்கள்

1 அண்டர்கள் முனிவர்கள் கண்டிதனைத் தொழ
மண்டல வடியவர் தொண்டு செய்தே தாழ
மயின்மிசை யொயிலுட னயிலிரு கையின் மின்னும் (என்)

2 தன்னை யடுத்தவர்க்கு நன்னய மிகச் செய்து
முன்னை வினையைத் தீர்த்து
பின்னை யெல்லாமுஞ் செய்யும்
மாயன் மருகேய னருள்சேயன் வெகுதூயன் (என்)

3 மங்கை குறத்திதன் பங்கில் மருவிய
மங்கள சுபகர துங்க மயிலின் வீரா
மாலான குன்றை சீலன் வடிவேல னனுகூலன் (என்)

## 1204. நீயேன் யோசிக்கிறாய்

பல்லவி

நீயேன் யோசிக்கிறாய் – மனமே
தாயேநிகர் குன்றைச் சண்முக னிருக்க (நீயேன்)

சரணங்கள்

1 என்னதுயர் வந்தாலு மென்னபிணி வந்தாலுஞ்
சன்ன பின்னமாய்ச் செய்யும் பொன்னய னிருக்கையில்
(நீயேன்)

2 வாது புரிந்த சூரை வாது புரிந்து வென்ற
தீத மரர்க்குத் தீர்த்த நாத னிருக்கையில் (நீயேன்)
3 மஞ்சுடர் பூம்பொழில் மஞ்சுடர் கொடுமுடி
மிஞ்சிய பொழிற்குன்றை ரஞ்சித னிருக்கையில் (நீயேன்)

## 1205. குமரகுருபர நாதா

பல்லவி

குமர குருபர நாதா – நாளும்
அமரர் பணியும் பாதா (குமர)

அநுபல்லவி

சங்கர சண்முகா
மங்கள கரசுபா (குமர)

சரணம்

ஆடிய மயிலா
பாடிய வாயா
குன்றையின் வாசா
நன்றருள் பாதா (குமர)

## 1206. வருக வருக ஐயனே

பல்லவி

வருக வருக ஐயனே
மருவருங் குன்றைமலை திருமுரு கேசா (வருக)

அநுபல்லவி

அரவணி பவனருள்
சரவண பவகுகா (வருக)

சரணம்

இமையவர் பணிபாதா
உமையவள் தருபாலா
அள்ளிலை வேற்கரா
வள்ளி மனோகரா (வருக)

## 1207. வேண்டியவன் நானையா

பல்லவி

வேண்டியவன் நானையா - முடி
பூண்டிடுங் குன்றைமலைப் புனிதா யெனக்கருள்வாய்
(வேண்)

சரணங்கள்

1 மங்கை குறமகடன் பங்கிலுறை கணவா
தங்க மயிலேறித் தானே வந்தருள் செய்வாய் (வேண்)

2 தண்டமிழ்தனைப் பாடுந் தொண்டையங் கனிவாயா
வண்டலர் நீபமென் வாக வந்தருள் செய்வாய்
(வேண்)

3 சீதக் களபமுலை மாதர்க் கிசையுந் தோளா
போதுற்ற மலர்த்தோளா பூபா வந்தருள் செய்வாய்
(வேண்)

## 1208. உந்தனை நம்பினேன்

பல்லவி

உந்தனை நம்பினேன் – யினி
யெந்தனை யாளுவாய் (உந்தனை)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை
மோதிப் படையால் வென்ற (உந்தனை)

சரணம்

மிஞ்சும் வினையைத் தீர்த்து
நெஞ்ச மகிழச் செய்வாய்
குன்றைமலைக் குமரா
நன்றருள்வா யென்று (உந்தனை)

## 1209. நீயே யெனையாளாய்

பல்லவி

நீயே யெனையாளாய் – யெந்தன்
தாயே குன்றைமலைச் சண்முக நாதா (நீயே)

அநுபல்லவி

வஞ்ச வரக்கனை நெஞ்சு பிளந்திட
மிஞ்சிய வேலினால் வென்றவனே சாமி (நீயே)

சரணம்

பாதச் சிலம்பணி நாதச் சரவணா
சீக்ஷ நசுரவதனா திவ்விய மலர்க்கடம்பா
சுரசுவுள மலர்ச்சோலை மசுர்சிகிரோ
சீதள மலர்மாரபா தேவர்கள் தேவா (நீயே)

## 1210. சித்த மிரங்கி

பல்லவி

சித்த மிரங்கி யெந்தன் கர்த்தனே யெனையாளாய் (சித்த)

அநுபல்லவி

பத்தர் பணியுங் குன்றை நிர்த்தன மயிலாளா (சித்த)

சரணம்

யெந்த னிடத்தினில் வந்த பிணியைத் தீர்த்து
சீதக் களபமுலை மாதர்க் கிசையுந் தோளா
அற்புத மலர்த்தாளா
பொற்புறு மலர்த் தோளா (சித்த)

## 1211. சாமி யெனையாளாய்

பல்லவி

சாமி யெனையாளாய் - நாளும்
பூமி புகழுங் குன்றைப் புனிதனே யென்குரு (சாமி)

சரணங்கள்

1 முந்திய வினையினுல் நொந்திடுந் துயர்தீர
வந்தினி தான வரந்தந்திட வேணுமெந்தன் (சாமி)

2 யாசைப்படும் பெண்ணுலே மோசப் படலாகுமோ
வாசக் கடம்பணி பிரகாசக் குமரா யெந்தன் (சாமி)

3 தீவினையால் மெலிந்து யாவி தடுமாருமல்
பாவியெனக் கருள்வாய் சேவலனே யெந்தன் (சாமி)

## 1212. அஞ்ச வேண்டாம் மனதே

பல்லவி

அஞ்ச வேண்டாம் மனதே – யன்பர்
நெஞ்ச முறவருள் நித்திய சுபகல்யாண
கஞ்ச மலர்ப்பதக் கர்த்த னிருக்கவே (அஞ்ச)

சரணங்கள்

1 பொன்னின் மயிலேறு மின்னும் வடிவின்வேல்
பன்னிரு கையிலேந்தும் பரம னிருக்கையில் (அஞ்ச)

2 வஞ்ச வரக்கனை நெஞ்சைப் பிழிந்திடுஞ்
நஞ்சணி வேற்கர நாத னிருக்கையில் (அஞ்ச)
3 மன்றலம் பொழிலுறை குன்றை மலையின் வாசன்
யென்று மன்பர்க் கருளுமென் னையனிருக்கையில்
(அஞ்ச)

## 1213. வருவாய் வருவா ஐயனே

பல்லவி

வருவாய் வருவா ஐயனே – வரந்
தருவாய் தருவாய் மெய்யனே (வரு)

சரணங்கள்

1 குகனே குகனே யாளாய் - யாறு
முகனே முகனே யாளாய் (வரு)
2 வடிவேல் வடிவேல் பவனே - குன்றுக்
குடியாய் குடியாய் சிவனே (வரு)

## 1214. நீ தயவாய் யெனையாளாய்

பல்லவி

நீ தயவாய் எனையாளாய் – தவ
மாதவனுர் பணிபாத பங்கயனே (நீ தயவா)

அநுபல்லவி

யந்தரி யாமளை
சுந்தரி பாலா (நீ தயவா)

சரணம்

தெள்ளிய தினைப்புன
வள்ளி மனோகரா
மன்றலம் பொழிலுறை
குன்றையங் கிரியாய் (நீ தயவா)

## 1215. தேவர் தேவனே

பல்லவி

தேவர் தேவனே – யன்பர்
யாவலாய் பணி ஐயனே சாமி (தேவர்)

அநுபல்லவி

ஆடிய மயிலாளா – வள்ளி
கூடிய வொயிலாளா (தேவர்)

சரணம்

பாடிய கனிவாயா – யன்பர்
தேடிய வருள்சேயா
யகண்ட பரிபூரணு - முடிச்
செகண்டி மலைநாரணு (தேவர்)

## 1216. வேண்டிய வரந்தர வேணும்

பல்லவி

வேண்டிய வரந்தர வேணும் – நீபம்
பூண்டிடும் பன்னிரு புயனே நயனே (வேண்)

அநுபல்லவி

மங்கை யரிருவர்கள் பங்கி லுறைபவா
தங்க மயிலேறுந் தங்க வடிவேலவா (வேண்)

சரணம்

வானவர் முதலினோர் தானவர் பணிபாதா
தேனல ரணிமார்பா ஞான சம்பந்தா
வண்டிசை பூமலர் மண்டிய சோலைசூழ்
யெண்டிசையும் புகழ்கொண்டிடு சிகிமேரா (வேண்)

## 1217. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் - நாளும்
கொந்துலவும் பொழிற்குன்றைக் கந்தனே யென்சாமி
(வந்து)

அநுபல்லவி

தண்டைச் சிலம்பசையத்
தொண்டர் துதியிசைய (வந்து)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 புள்ளி மயிலிலாட
வள்ளி தெய்வானையுடன் (வந்து)
2 கந்தமலர் புனைந்து
யெந்தனையே நினைந்து (வந்து)

## 1218. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே – யுயர்
மஞ்சாருங் குன்றைமலைக் குகனிருக்க (அஞ்சாதே)

சரணங்கள்

1 சங்கர ரருள்பால னிங்கித மிகுசீலன்
துங்க மயிலோன் துரைக்குக னிருக்க (அஞ்சாதே)

2 பங்கய மலர்ப்பாதன் மங்கையர்க் கிசைநாதன்
பொங்கிய வருள்வேதன் புகழ்க்குமரனிருக்க (அஞ்சாதே)

3 மன்றலம் பொழில்சூழுங் குன்றை மலையில் வாழும்
யென்று மடியர் தாளும் யெழிற்கந்த னிருக்க (அஞ்சாதே)

## 1219. ஆண்டவனை நினைமனமே

பல்லவி

ஆண்டவனை நினை மனமே – யுனக்கு
வேண்டிய தெல்லாந் தருவான்
தாண்டவஞ்செய் மயிலேறும் (ஆண்ட)

அநுபல்லவி

பங்கச பாத யிங்கித நாத
சங்கர பால சரவண பவகுக (ஆண்ட)

சரணம்

தாதவிழ் நீபப் போதணி மார்பா
மாதர்கள் லோல வால குகேசா
வண்டலர் சோலை மண்டிய தோகை
கொண்டிடு மேரின் குன்றையில் வாழும் (ஆண்ட)

## 1220. என்னை மறவாதே

பல்லவி

என்னை மறவாதே - யுயர்
பொன்னை நிகர்முடிக் குன்றை மலைவரு
புண்ணியனே சுப்பிர மண்ணியனே சாமி (என்னை)

அநுபல்லவி

வாசக் கடம்பணி நேசக் குறமயில்
வாகனே யன்பர் சினேகனே யென்சாமி (என்னை)

சரணம்

உன்னித வேலணி பன்னிரு கையனே
உத்தமனே பரிசுத்தனே யென்சாமி
துங்க மயிலேறுந் தங்கப் பிரகாசனே
தூயனே வள்ளி நேயனே சாமி (என்னை)

## 1221. சிந்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்பவேணும்
உத்தமனே குன்றைக் கொருத்தனே சாமி (சித்தந்)

அநுபல்லவி

எத்தனை குற்றங்கள் செய்தாலும் சாமி
மெத்தக் குறைகளைச் செய்தாலும் சாமி (சித்தந்)

சரணம்

பொல்லாத பாவம் செய்தே னுனலுஞ் சாமி
எல்லார்க்கும் பொல்லாதவ னுனலுஞ் சாமி
வாசனை சேரு மலர்ப்பொழில் சூழும்
மாசறுங் குன்றை யீசனே சாமி (சித்தந்)

## 1222. ஆடிக்கோ மயிலே

பல்லவி

ஆடிக்கோ மயிலே
வேடிக்கையாய்க் குகவிமலனைத் தூக்கிக்கொண்டு (ஆடிக்)

சரணங்கள்

1 வஞ்ச வரக்கனை
நெஞ்சைப் பிளந்துநின்று (ஆடிக்)
2 கந்தனை ஞானசம்
பந்தனைக் தூக்கிக்கொண்டு (ஆடிக்).
3 அடியவர் மிடியெல்லாம்
நொடியிற் பரந்திட (ஆடிக்)

## 1223. தாயே எனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய்
நாயேனையுமாண்டு ரட்சிக்க வேணும் (தாயே)

அநுபல்லவி

ரஞ்சித மாமொழி
வஞ்சி குறத்தி பாகா (தாயே)

சரணம்

தாரணி நெட்டிலே
வீரவடி வேலவா
நின்ருடு மயிலா
குன்ருக்குடி நாதா (தாயே)

## 1224. நித்தம் நினைமனமே

பல்லவி

நித்தம் நினைமனமே – நாளும்
பத்தர் பணியுங் குன்றைப் பரமேசர் பதத்தை (நித்தம்)

சரணங்கள்

1 ஆசைக் குறமயில் நேசத்தை மறவாத
மாசற்ற குமரேச மயிலோன் பாதத்தை (நித்தம்)

2 மின்னிய வயிலணி பன்னிரு கரதல
நன்னய வனுக்கிரக நாயகன் பாதத்தை (நித்தம்)

3 பைந்தமிழ் பாடிய சுந்தர வாயனை
கந்த மலரைநிகர் காட்டிய பாதத்தை (நித்தம்)

## 1225. எந்தனை ஆளாய்

பல்லவி

எந்தனை யாளாய் - நீபக்
கந்த மாலிகைக் கர்த்தனே சாமி (எந்தனை)

சரணங்கள்

1 முப்போதுந் துதித்து
எப்போதும் போற்றும் (எந்தனை)

2 சிந்தனை செய்துடன்
வந்தனை செய்கின்ற (எந்தனை)

3 செகண்டி மலையில்வரு
மகண்ட பரிபூரணா (எந்தனை)

## 1226. எப்படியும் எனக்கருள்வாய்

பல்லவி

எப்படியு மெனக்கருள்வாய் — கண்
மைப்படியுங் குன்றைமலைக் குமரேசா (எப்படி)

சரணங்கள்

1 தோத்திரஞ் செய்யாத
பாத்திர மானாலும் (எப்படி)

2 தேடத் தெரியாத
மூடனா யிருந்தாலும் (எப்படி)

3 தூயவுன பதங்காணப்
பேயனா யிருந்தாலும் (எப்படி)

## 1227. ஆதி பராபரனே

பல்லவி

ஆதி பராபரனே - செகச்
சோதி மகேசுரனே (ஆதி)

அநுபல்லவி

கற்பனை யுலகுயிரைக் - காத்து
அற்புடன் ரட்சிக்கும் (ஆதி)

சரணம்

எங்கும் பிரகாசமாய் — விளங்கிய
துங்க மயிலோனே
கோதண்டனார் மருகா - குன்றை
வேதண்டவரு முருகா (ஆதி)

## 1228. தாயே எனையாளாய்

பல்லவி

தாயே எனையாளாய் — குன்றைச்
சேயே யுனைப்பணி நாயேன் வினைதீர் (தாயே)

அநுபல்லவி

அற்புத மலர்போலும்
பொற்புறு சரணு (தாயே)

சரணம்

வானுடர் பணிதேவ
சேனு பதியே
சங்கர சண்முக
துங்க மயிலேசா (தாயே)

## 1229. எண்ணம் ஏதுக்கு

பல்லவி

எண்ண மேதுக்கு – மனமே யுயர்
வண்ண மாமுடிக் குன்றை மாமலை
வந்த ஞானசம் பந்த னிருக்கவே (எண்ண)

சரணங்கள்

1 பாதி மதியைச் சடைமீதிற் றரித்த சிவ
ஞதி பராபரன் சோதி மைந்த னிருக்க (எண்ண)

2 சூர சம்மாரா கனவீரப் பிரதாப செய்
கோர வடிவேலவ தீர னிருக்கவே (எண்ண)

3 ஞாலம் பரவு முமைபாலன் சுரர்கன்
கால னடிய ரனுகூல னிருக்கவே (எண்ண)

## 1230. வருந்தாதே மனமே

பல்லவி

வருந்தாதே மனமே - நாளும்
பொருந்தாதுக்கு மலர்ப்பொழிற் குன்றைய னிருக்க (வருந்)

சரணங்கள்

1 ஆசைக் கிசைந்த வன்பர் நாசப் படாமலரு
ளீசற் குகந்த பால னெந்தை குகனிருக்க (வருந்)

2 ஆடிய மயிலேறி நாடி யடியரிடந்
தேடி வருங்குன்றை தேவ னிருக்க (வருந்)

3 உத்தமி குறமயில் முத்து நகையைக் கண்டு
மெத்த மயங்கிய வேலவ னிருக்க (வருந்)

## 1231. வேணும் வேணுமையா

பல்லவி

வேணும் வேணுமையா – முடி
தோணுங் குன்ருக்குடி தூயா நின்பாதம் (வேணும்)

சரணங்கள்

1 சோலைக் குறத்தியை யோலைக் குழச்சியை
மாலைப் புயத்தியை மணந்தவா நின்பாதம் (வேணும்)

2 மாறு படைத்துடன் வீறு படைத்திடு
ஆறுமுகச் சூரை வதைத்த நின்பாதம் (வேணும்)

3 நொந்து மெலிந்திட வந்த வினையினைச்
சிந்தும்படி செய்யுந் தேவ நின்பாதம் (வேணும்)

## 1232. எனக்கொரு வரந்தாராய்

பல்லவி

எனக்கொரு வரந்தாராய் – யுயர்
கனத்தமுடிச் செகண்டிக் கர்த்தனே சாமி (எனக்)

அநுபல்லவி

வாசக் கருங்குழ னேசக் குறமயில்
மருவிய தோளா யருளிய தாளா (எனக்)

சரணம்

கங்கைச் சடையான் பங்கி லுமையவள்
கன்னி தருபாலா வன்ன வடிவேலா
அடியவர் தன்னுட மிடியது தீர்ந்திட
அருளிய நாதா திருமலர்ப் பாதா (எனக்)

## 1233. கந்தனை மறவாதே

பல்லவி

கந்தனை மறவாதே - மனமே (கந்தனை)

அநுபல்லவி

கந்தனை ஞான சம்பந்தனை நாளும் (கந்தனை)

சரணங்கள்

1 வானுடர் பணிதேவ
சேனு பதியே (கந்தனை)

2 அந்தரி யாமளை
தந்தருள் பாலனை (கந்தனை)

3 மன்றலம் பொழிலுறை
குன்றையின் வாசனை (கந்தனை)

## 1234. பாத தரிசனம் தாராய்

பல்லவி

பாத தரிசனந் தாராய் – குன்றை
நாத சண்முக குகா தாதவிழ் மலர் நீபா (பாத)

அநுபல்லவி

ஆறுமுகக் குமரா
வேறுகதி யில்லையே (பாத)

சரணம்

அடியவர் தங்களுட
மிடிதனைத் தீர்த்து வைக்கும்
தொண்டர்கள் பணிதரு
தண்டை அணியுமலர்ப் (பாத)

## 1235. துரைக் குமரேசா

பல்லவி

துரைக்குமரேசா - குன்றை
வரைக்குமரேசா வுரைத்தமிழ் வாயா (துரை)

அநுபல்லவி

தாதாவிழ் நீபா
போதணி பூபா (துரை)

சரணம்

வள்ளி மணாளா
யள்ளிலே வேலா
மன்றலம் பொழிற்சேர்
குன்றையின் மேரா (துரை)

## 1236. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் - நாளும்
நயமிகுந்த குன்றை நாதனே யென்மீது (தயவு)

அநுபல்லவி

வாலைப் பருவகுற மாதுதன் பாகா
ஞாலத்தில் யாவரும் நம்பிய யோகா (தயவு)

சரணம்

பத்தர்கண் மிடிதீர்க்கும் பரம சிவேசா
சித்த மகிழ்ந்தருள் செய்யும் பிரகாசா
நம்பிய பேர்களை ரட்சிக்கும் பாதா
வம்பலர் பொழிற்குன்றைமலை வருநாதா (தயவு)

## 1237. வரந்தர வேணுமையனே

பல்லவி

வரந்தர வேணுமையனே - இந்தப்
பரந்த வுலகம் புகழ் சிறந்த குன்றுக் குடியாய் (வரந்)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை
மோதிச் செயித்த வேலா (வரந்)

சரணம்

வன்ன மயிலேறிய
பன்னிரு கரதலா
மாசற்ற வடியவர்
நேசக் குருபரனே (வரந்)

## 1238. யோசனை பண்ணுதே

பல்லவி

யோசனை பண்ணுதே – மனமே
வாசனைநிறை குன்றை யீச னிருக்கவே (யோசனை)

சரணங்கள்

1 யந்தர வானவர் வந்தடி பணிய
தந்த மடியவர்கள் சிந்தனை செய்யத்
தளைத்திடு மனுக்கிரகம் விளைத்தவ னிருக்க (யோசனை)
2 வஞ்சக வரக்கனை நெஞ்சிரு கூறுசெய்
தஞ்ச வடித்திடும் நஞ்சடர் வேற்கர
ஐயன் குமரகுரு துய்யனிருக்க (யோசனை)
3 பாவிய ராளுலுந் தீவினை தீர்த்துட
ளுவிதனை ரட்சிக்குங் காவல் குமர
ஆண்டவன் மலர் நீபம் பூண்டவ னிருக்க (யோசனை)

## 1239. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் – குன்றைச்
சேயே அருள் தருவாய் என்னிரு வினைதீர (தாயே)

சரணங்கள்

1 பன்னிரு கரதலர் யென்னிரு வினை தீர
யுன்னித மயிலேறி யுண்மையுடன் வந்து (தாயே)

2 தஞ்சம் வேறிலையென நெஞ்ச முருகிக்
கஞ்ச மலரடியைக் கண்டு பணியுமெந்தன் (தாயே)

3 வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
சூது புரியுஞ் செய சூரா வீரா யென் (தாயே)

## 1240. உன் தயவு வேணுமையா

பல்லவி

உன் தயவு வேணுமையா – நாளு
மென்றனுட மிடிதீர் (உன் தயவு)

அநுபல்லவி

மங்கை குறத்தியொரு
பங்கில் வளருஞ் சாமி (உன் தயவு)

சரணம்

யாசைக் கடலில் வீழ்ந்து
மோசப்படா திருக்க
நிலைக்குமுடிச் செகண்டி
மலைக்குருபர நாதா (உன் தயவு)

## 1241. சரணமுனை நம்பினேன்

பல்லவி

சரணமுனை நம்பினேன் – நாளும்
அரணம் புகழுங் குன்றை யாதிப சாமி (சரண)

அநுபல்லவி

அடியவர் தம்முடை மிடியைத் தீர்த்திட
நடன மயிலிலேறி நொடியினில் வருவாய் (சரண)

சரணம்

வார்குழற் குறமயில் தார்புனை புயமீது
மார்முலைச் சார்பிலும் லார்துயிற்புரி லோலா
யோக முனிவர ரன்பாக மகிழ்ந்திடு
சிநேக குருபர விசாக விலாச குகா (சரண)

## 1242. நம்பினேன் சாமி

பல்லவி

நம்பினேன் சாமி நாளும்
வம்புலாவிய பொழிற் குன்றுக்குடி
வந்த குருபரக் கந்தசாமி நான் (நம்பி)

அநுபல்லவி

ஆசைக் கடலில் வீழ்ந்து
மோசப் படாமலே (நம்பி)

சரணம்

யிச்சைப்படி யெந்தன்
பட்சம் வைத்தாளுவாய்
யெந்தன் மிடிதீர
வந்தருள்வாய் குகா (நம்பி)

## 1243. வாராய் வாராயோ

பல்லவி

வாராய் வாராயோ - வந்து வரந்
தாராயோ (வாராய்)

சரணங்கள்

1 நானக் கருங்குழலி தேனைப் பழித்தமொழி
மீனைப் பழித்தவிழி கானக் குறத்தியுடன் (வாராய்)

2 ஆவி துடிதுடிக்கவே வருதுயரமாந்
தீவினைதனைத்தீர் ஆவலுடன் மயலில் (வாராய்)

3 மோகத்தினுற் பெண்கள் தாகத்தினுல் மெலி
வாகத்திரி தல்தீர் மாகத்தீர பணிசெய்ய (வாராய்).

## 1244. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே - யுயர்
மஞ்சார் பொழிற்குன்றை மாயினைத் தூயனை (நெஞ்சே)

அநுபல்லவி

பத்தர்கண் மிடிதீர்த்து யெத்தேச காலமும்
நர்த்தன மயிலேறுஞ் சுத்தனை யனுதினம் (நெஞ்சே)

சரணம்

ஆசைக் கடலில் வீழ்ந்து மோசப்படும் வரை
நேசத்துடன் ரட்சிக்கும் வாசக் கடம்பனை
நோயின் மெலிந்து வெகுவா யனைந் தேங்காமல்
தாயின் மிகப்பரிந்த சேயனை நாயனை (நெஞ்சே)

## 1245. தரிசனஞ் செய்வாயே

பல்லவி

தரிசனஞ் செய்வாயே - மனமே (தரிசனம்)

அநுபல்லவி

பரிசனஞ் சூழுங் குன்றைப் பரனை யரனை (தரிசனம்)

சரணங்கள்

1 சூர சம்மார வீரப் பிரதாப
கோர வடிவேலவ தாரணி புயனை (தரிசனம்)

2 தாதவிழ் மலர் நீபப் போதணி புயசீல
நாத பரப்பிரம வேத முதல்வனை (தரிசனம்)

3 பங்கய மலர்வேதன் றன்குருபர வேளை
துங்க முடிச்சிகித் துங்க மலையோனை (தரிசனம்)

## 1246. வரவேணுஞ் சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி - வந்து வரந்
தரவேணுஞ் சாமி (வர)

சரணங்கள்

1 வால வடிவே லேந்திக் கோல மயிலோடு
சீல வன்பர்க்கு வனுகூல மெல்லாந்தர (வர)

2, புள்ளி மாமயிற் சாயல் யள்ளிலை வேல்வழி
வள்ளி மினுளுடன் தெள்ளிய வருள்செய்ய (வர)

3 பூதலந்தனி லன்பர்க் காதரவுகள் செய்ய
தாதவிழ் பொழிற்குன்றை மீதிலிருந்து அன்பாய் (வர)

## 1247. தேவ தேவனே

பல்லவி

தேவ தேவனே – அந்த
மூவராகிய மூர்த்தியே சாமி (தேவ)

அநுபல்லவி

பாத தரிசனஞ் செய்தவர்க் கினிய
ஆதரவு செயுமன்ப னாகிய (தேவ)

சரணம்

வந்தடுத்தவர் தங்களுக் கினிய
சொந்தமாகிய துரைக் குமரேசா
வண்டலர் பூஞ்சோலை கொண்ட செகண்டிவே
தண்டம் வளர் குருசாமி யென்சாமி (தேவ)

## 1248. தாயே தயாபரனே

பல்லவி

தாயே தயாபரனே - அருள் செய்கு
வாயே குன்றுக்குடி சேயே யென்னுட (தாயே)

சரணங்கள்

1 கூடிய யன்பர்கள் வரத்தேடி விண்ணோர்கள் வர
ஆடிய மயிலேறி நாடி யென்முன் வருவாய் (தாயே)
2 தாதவிழ் மலர்நீபா காதலி குறமயில்
மாது மருவுபுயா ஆதரவு செய்குவாய் (தாயே)
3 மஞ்சடர் பூம்பொழில் மிஞ்சிய சிகிமலை
ரஞ்சிதக் கனிவாயா தஞ்சம் வேறிலை எந்தன் (தாயே)

## 1249. இனிக்குறை வில்லையே

பல்லவி

இனிக்குறை வில்லையே – மனமே (இனி)

அநுபல்லவி

தனிக்குன்றை மலைக் கந்தசாமி இருக்கையில் (இனி)

சரணங்கள்

1 பாவியான் வன்ப ராவி நிலைநிற்கக்
கூவு மயிலில் வந்து கொடுக்கு மையனிருக்க (இனி)

2 கடிகமழ் பொழிலுறை வடிவுடையவள் குறக்
கொடி மருவிய புயகுமரேச னிருக்க (இனி)

3 கந்த மலர்ப்பொழி லுந்திய சிசிமலை
வந்த குருபர வடிவேல னிருக்க (இனி)

## 1250. வேண்டிக் கொள்வாய்

பல்லவி

வேண்டிக் கொள்வாய் - மனமே – யெங்குந்
தாண்டிய மயிலேறுஞ் சண்முக நாதனை (வேண்டி)

அநுபல்லவி

வள்ளி மணவாளனை
புள்ளி மயில் வீரனை (வேண்டி)

சரணம்

வேதர்க் கிசைந்த குரு
நாதக் குகேசனை
அண்டர்கள் முனிவர்கள்
கண்டித் தொழுவோனை (வேண்டி)

## 1251. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ - நாளும்
விர்த்தியாகிய குன்றை மாமலை
வேந்தை குறவள்ளி காந்த னென்சாமி (சித்த)

சரணங்கள்

1 சங்கர னிடப் பங்கில் வளர்கின்ற
பைந்தொடி யருளிய மைந்த னென்சாமி (சித்த)

2 ரஞ்சித மாமொழி வஞ்சி தெய்வானை
னெஞ்சுருகிட வருளுஞ் சமரிடு வேலனை (சித்த)

3 வீறு படைத்த சூரை நீறுபடப் பொருதுங்
கூறு படைத்த வேலன் யாறுமுகக் குமரன் (சித்த)

## 1252. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் – நாளு
முந்தனைக் கண்டு வந்தனை செயும் (எந்தனை)

சரணங்கள்

1 வாசக் களபமுலை நேசக் குறமயி
லாசைக் கிசைந்த குகேச கிருபாநிதே (எந்தனை)

2 வஞ்ச வரக்கனை நெஞ்சைப் பிளந்திடு
நஞ்ச வயிலாளா தஞ்சமினி வேறிலை (எந்தனை)

3 சூடிய மலர்ப்பொழி னீடிய சிகிமலை
ஆடிய மயிலேறி நாடியென் முன் வந்து (எந்தனை)

## 1253. கருணைப் பெருங்கடலே

பல்லவி

கருணைப் பெருங்கடலே - தீவினை
இருளைத் தவிர்த்தருள்வாய் (கருணை)

அநுபல்லவி

பொருளுற்ற குன்றைமலைப் புண்ணியனே யென்சாமி
(கருணை)

சரணங்கள்

1 ஆசா பாசத்தை விட்டு அச்சந்தனை விட்டு
மோசாதி மோசம்விட்டு மூர்க்கத் தனத்தை விட்டு
பேசாமலுன் பதத்தைப் பிரியமுடனே போற்றுந்
தாசற் கருள்செய்யுந் தற்பரனே யென்சாமி (கருணை)

2 வாரிட்டதன் மாதர் மாய்கைக்கு ளகப்பட்டு
போரிட்ட மன்மதன் பொழிகணைக் குள்ளே பட்டு
பேரிட்டுத் தான்றிரிந்து பித்துக் கொண் டலைவதை
யேரிட்டுப் பார்த்தெனை யிரட்சிக்க வேணுஞ் சாமி (கருணை)

3 தாரித்திர மென்னுந் தாழ்கடற் குள்ளே வீழ்ந்து
பாரித்த துன்பமென்னும் பாழ்கடற் குள்ளே வீழ்ந்து
சீர்கெட் டலைந்திடாமற் றிருவருள்தனைச் செய்வாய்
பேர்பெற்ற குன்றைமலைப் பெம்மானே சாமி (கருணை)

## 1254. வஞ்சகஞ் செய்யாதே

பல்லவி

வஞ்சகஞ் செய்யாதே - மனமே
பஞ்சமா பாதக பாவத்தைச் செய்தாலும் (வஞ்சகம்)

அநுபல்லவி

ரஞ்சிதன் குன்றைமலை நாதனைப் பணிசெய்ய (வஞ்சகம்)

சரணங்கள்

1 தீவினை தனைச்செய்து சீர்கெட் டலைந்தாலும்
யாவி துடிக்கக் கொலை யநியாயஞ் செய்தாலும்
பாவி யெனவே சொல்லப் பண்ணாது பண்ணினாலும்
காவிக் கலையுடுத்துங் கர்த்தனைப் பணிசெய்ய (வஞ்சகம்)

2 நீடிய கருங்குழ னித்தில நகையினாள்
வாடிய யிடையினாள் மாதனை முலையினாள்
ஆடி மயிற்சாய லன்னத்தி னடையினாள்
கூடிய குறமயில் குழகனைப் பணிசெய்ய (வஞ்சகம்)

3 மிடியினாற் றுயரிட்டு வேதனை யடைந்திடு
மடியவர் தங்களுக் கருளிய தேவன்
கடிகமழ் மலர்ப்பொழில் கலந்திடுங் குன்றுக்
குடிவளர் குருபர குமரனைப் பணிசெய்ய (வஞ்சகம்)

## 1255. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் - யினி (நீயே)

அநுபல்லவி

நாயேனுடை கலிபோய் விடவேவந்து (நீயே)

சரணங்கள்

1 தண்டைச் சிலம்புகள் மண்டி யொலித்திட
கொண்டை மயிலேறிக் குலுங்கக் குலுங்க வந்து (நீயே)

2 தெள்ளிய தினைப்புன வள்ளியுடனே கூடி
யள்ளிலை வேலேந்திப் புள்ளி மயிலிலேறி (நீயே)

3 வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
நாதனே யெனையாள் சீதள மலர்நீபா (நீயே)

## 1256. ஒருதரம் சொன்னாலும் போதுமே

பல்லவி

ஒரு தரம் சொன்னாலும் போதுமே – நாளு
மருவுலவுங் குன்றைமலைக் குமரேசா வென்று (ஒருதரம்)

அநுபல்லவி

வாசனை மலர்நீப மாலிகை மார்பனை
மோச சுரேசனை முடிக்கும் பிரதாபனை (ஒருதரம்)

சரணம்

பத்தர்கண் மிடிதீர்க்கும் பதுமப தேசனை
சித்த மகிழ்ந்தருளைச் செய்யுங் குகேசனை
தன்ருட் கடிமையைத் தற்காக்கு நாதனை
குன்ருக் குடிவரு குருபர வேதனை (ஒரு தரம்)

## 1257. ஆரிருக்கிருர்

பல்லவி

ஆரிருக்கிருர் - நாளும்
பேரிருக்குங் குன்ருக் குடிவளர்
பெருமானே யெனக்கருள்தான் தரவே (ஆரிருக்கிருர்)

சரணங்கள்

1 தாண்டு மயிலேறித் தூண்டி யெதிர்வந்து
வேண்டிய வரஞ்செய்ய யாண்டவனேயினி (ஆரிருக்கிருர்)
2 வெற்றி வடிவே லேந்திக் கொற்ற மயிலிலேறி
மெத்த வருளைச் செய்ய முத்தமனேயினி (ஆரிருக்கிருர்)
3 தாதவிழு நீபப் போதணி மணிமார்பா
யாதரவே செய்யப் பூதலந் தன்னிலே இனி (ஆரிருக்கிருர்)

## 1258. அடியேன் மிடிதீராய்

பல்லவி

அடியேன் மிடிதீராய் - குன்ருக்
குடிவாழுங் குருபரனே பரனே (அடியேன்)

அநுபல்லவி

ஆடிய மயிலேறி கூடிய வன்பருடன்
நாடி வந்தருள் செய்து நன்னய மாகவே (அடியேன்)

சரணம்

வன்ன வடிவேலேந்தி சின்ன யிடையின் வள்ளி
மின்னனை யாளுடன் விரும்பி வந்தருள் செய்து
கற்பக வனமடர் பொற்புறு முடிநிறை
அற்புதமான குன்றை ஐயா வந்தருள் செய்து (அடியேன்).

## 1259. இந்தச் செனன மல்லாது

பல்லவி

இந்தச் செனன மல்லாது – மற்ற
முந்தச் செனன முழுவது நல்லது (இந்த)

சரணங்கள்

1 தாரித்திரந் தன்னாற் ருனவதிப் பட்டுப்
பாரித்த நோயினாற் பாதரம் பயப்பட்டு
பதறிப் பதறி மனஞ்சிதறிச் சிதறிப் போகும் (இந்த)

2 தீவினை யாகிய தீயில் விழுந்து
யாவி துடிக்க வன்னி ஞாயத்தில் விழுந்து
யழிந்து வழிந்துடம்பு கழிந்து கழிந்து போகும் (இந்த)

3 வாது புரியுஞ் சூரை மாய்த்திடும் வேலா
போது புனையு நீபப் புதுமலர் நீபா
புண்ணியா குன்றைச் சுப்பிர மண்ணியா சாமி (இந்த)

## 1260. சித்த மகிழ்ந்தருள்வாய்

பல்லவி

சித்த மகிழ்ந்தருள்வாய் – குன்றை
யுத்தமனே பணிபத்தர் சகாயனே (சித்த)

அநுபல்லவி

வால வடிவே லேந்திக்
கோல மயின்மேல் வந்து (சித்த)

சரணம்

வள்ளி தெய்வானையுடன்
புள்ளி மயில்மேல் வந்து
நின்றுபொழிலுலாவுங்
குன்றை மலையிருந்து (சித்த)

## 1261. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ – நாளும்
பூமிபுகழ் குன்றைமலைப் புனிதன் யெனது கந்த (சாமி)

சரணங்கள்

1 அமரர்கள் பயந்தீரச் சமரமிடுஞ் சூரனை
அயில்கொடு வென்ற மலர்க்கையன் முருகேச யென்
(சாமி)

2 தினைப்புன வள்ளியை நினைத்திடும் நாதன்
தேவர்கள் தேவன் மூவர்கண் மூவன் (சாமி)

3 தருவனஞ் சூழும் திருமுடி மேலும்
தழைக்குங் குன்றுக்குடி விளக்குந் தெய்வக் கனியென்
(சாமி)

## 1262. வரவேணுஞ்சாமி

பல்லவி

வரவேணுஞ் சாமி - வரந்
தரவேணுஞ்சாமி (வர)

சரணங்கள்

1 நடன மயிலிலேறித்
தடநெடு வேலேந்தி (வர)

2 என்னுட துயரங்க
டன்னை விலக்கிவைக்க (வர)

3 மன்றலம் பொழிலுறை
குன்றை மலையிருந்து (வர)

## 1263. அரகரா குருநாதா

பல்லவி

அரகரா குருநாதா - மூன்று
புரவர னருளிட வருநாதா (அர)

அநுபல்லவி

மாதவர் பணிபுரி பாதா - நளினப்
போதயன் சிந்தித வேதா (அர)

சரணம்

சூர சம்மார செயவேலா - வெகு
பாரலங் கிர்தமயிற் கோலா
குன்றுக் குடிமலை வாசா - நாளுந்
தன்றுட் கடியர் பிரகாசா (அர)

## 1264. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் - பன்னிரு
கையனே யெனையாளாய் (ஐயனே)

அநுபல்லவி

வால சண்முக நாதா
ஞாலம் பரவும் பாதா (ஐயனே)

சரணம்

வந்த வினையைத் தீர்த்து
யெந்தன் முகத்தைப் பார்த்து
மாமலர்ப் பொழில் சூழும்
நேம குன்றையாய் நாளும் (ஐயனே)

## 1265. எந்தன் வினைகள் தீர வந்தருள்வாய் சாமி

பல்லவி

எந்தன் வினைகள் தீர வந்தருள்வாய் சாமி (எந்தன்)

அநுபல்லவி

கந்த மலர்ப்பொழி லுந்திய
குன்றைமலைக் கர்த்தனே பரிசுத்தனே சாமி (எந்தன்)

சரணங்கள்

1 வால சுப்பிர் மண்ணிய கோல மயிலின் வீர
வேலணி கரதல விமல குககுமரா (எந்தன்)

2 யண்டர்கள் மிடிதீரப் புண்டரிக மின்னெடுந்
தண்ட காரண்ணியம் வருஞ்சாமிதயன் மருகா (எந்தன்)

3 பத்தர்கண் மிடிதீர்க்குங் கர்த்தனே யனுக்கிரகஞ்
சித்த மிரங்கிச் செய்யுந் தேவர்க டேவா (எந்தன்)

## 1266. பயமேதுக்கு

பல்லவி

பயமேதுக்கு – மனமே
நயமான குன்றை நாத னிருக்கவே (பய)

அநுபல்லவி

யாறுமுக மல்லால் வேறுமுக முண்டோ
ஐயன் பனிரண்டு கையனிருக்கவே (பய)

சரணம்

வாரா தெல்லாம் வருந்தீரா தெல்லாந்
தீருந் தேவன் யெவருக்குந் தேவ னிருக்கவே
தீவினை யெல்லாந் தீருமாவினை யெல்லாஞ் சேரும்
சேயன் குன்றுக்குடி நாய னிருக்கவே (பய)

## 1267. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ – எங்கள் கந்த
சாமி சித்த மெப்படியோ

அநுபல்லவி

வாச மலர்ப்பொழிற் குன்றைமலைக் குமரேசனென் (சாமி)

சரணங்கள்

1 வாதுக்கு வருசூரை மோதிச் செயித்துவென்ற
வால வடிவேலவ கோல மயிலோனென் (சாமி)

2 சமர சண்முக நாத குமர குருபரேச
தற்பர நந்தனு யற்புத மலர்ப்பாத (சாமி)

3 புள்ளி மயிலேறும் வள்ளி மனோகரப்
பூமலரணி மார்ப நாம வடிவேலவ (சாமி)

## 1268, மனமே ஒன்றுக்கும் அஞ்சாதே

பல்லவி

மனமே யொன்றுக்கு மஞ்சாதே
கனமான குன்றைமலைக் கர்த்த னிருக்கவே (மனமே)

சரணங்கள்

1 யாசை வலையிற்பட்டு மோசம் போகாமலே
நேசமாக வந்து இரட்சித்துக் கொள்வார் (மனமே)

2 வாடிடையார் தனைக் கூடி யலையாமல்
தேடி யனுக்கிரகம் செய்து ரட்சித்துக் கொள்வார்
(மனமே)

3 மீறிய வினையெல்லாம் நீறுபடச் செய்து
தேறிட வினைகளைச் செய்து ரட்சித்துக் கொள்வார்
(மனமே)

## 1269: வள்ளி மனோகரா

பல்லவி

வள்ளி மனோகரா – வளர்
தெள்ளிய தினைப்புனப் புள்ளி மயிலாள் (வள்ளி)

சரணங்கள்

1 தாதவிழ் பந்துள பச்சீதனுர் மருக
நாதனே மாமலர்ப் பாதனே திவ்விய (வள்ளி)

2 வஞ்சக வரக்கனை நெஞ்சைப் பிளந்தவா
கஞ்சமலர் நயன வஞ்சி யெனுங்குற (வள்ளி)

3 நின்றுலாவும் பொழிற்குன்றை மலையீசா
வென்றி யயிலின்விழி மன்றலங் குழற்குற (வள்ளி)

## 1270. ஏதுக்கு யோசிக்கிருய்

பல்லவி

ஏதுக்கு யோசிக்கிருய் - மனமே (ஏது)

அநுபல்லவி

போதுற்ற குன்றைப் புண்ணிய ஙிருக்கையில் (ஏது)

சரணங்கள்

1 யென்ன துன்பம் வந்தாலுஞ் சன்ன பின்னமாய்ச் செய்து
பின்னுமனுக் கிரகத்தை நன்னயமாகச் செய்வார் (ஏது)

2 வஞ்சக வசுரனை நெஞ்சிரு கூறுசெ
யுஞ்சமர வேலணியும் சண்முக ரிருக்க (ஏது)

3 வால சரவணநற் கோல மயிலேறிய
பால நயனகுக சீல ரிருக்கவே (ஏது)

## 1271. குருநாதா

பல்லவி

குருநாதா - மயில்மேல்
வருநாதா (குரு)

சரணங்கள்

1 மயிலாளா – கூரிய
அயிலாளா (குரு)

2 பலவேலா - யவுணர்
குலகாலா (குரு)

3 வடிவாளா – குன்ருக்
குடியாளா (குரு)

## 1272. நெஞ்சே ஒன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

நெஞ்சே யொன்றுக்கு மஞ்சாதே – யுயர்
மஞ்சடர்பொழிற் குன்றை மன்னவ னிருக்க (நெஞ்சே)

அநுபல்லவி

மாதவர் பணிசீலன் தாதவிழ் நீப மார்பன்
ஆதரவா யிருக்க யாதொன்று மிலையென்று (நெஞ்சே)

சரணம்

கஞ்ச மலர்ப்பாதன் வஞ்சியர் புணர்புயன்
தஞ்சமென்ற பேரைத் தாங்குவ னிருக்க
ஞான சிரோன்மணி வானவர் பூபதி
தானவர் குலகாலன் சண்முக னிருக்க (நெஞ்சே)

## 1273. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ - நாளும்
பூமிபுகழ் குன்றைமலைப் புண்ணியன் சுப்பிர மண்ணிய (சாமி)

சரணங்கள்

1 அமரர் பணியும் பாத
குமர சண்முக நாத (சாமி)

2 வால வடிவேலவ
கோல மயிலிலேறு (சாமி)

3 மன்றலம் பொழில்சூழுங்
குன்றை மலையில் வாழும் (சாமி)

## 1274. தேவர் கடேவா

பல்லவி

தேவர்க டேவா - யடியென்மு
னீவருவாயே (தேவர்)

சரணங்கள்

1 சேவலங் கொடியாய் – மணிமுடித்
தென்குன்ருக் குடியாய் (தேவர்)

2 பன்னிருகையா – யீராறு
வியா யெனையாள் (தேவர்)

3 கடம்பணி தொடையாய் – சூரை
யடர்ந்திடும் படையாய் (தேவர்)

4 அண்டர் நாதா – துதி
தொண்டர் நீதா (தேவர்)

## 1275. திருவடி நினையாச் சென்மம்

பல்லவி

திருவடி நினையாச் சென்மம் பொல்லாச் சென்ம
மேதுக்கு - நாளு
மருவளர் பூங்காவன மதுக்குழு மயின்மலை வருகுருபர
முருகேசன் (திரு)

சரணங்கள்

1 சின்ன மயிலிலேறு மின்னும் வடிவேலவன்
திருமறையவர் புகழருண் முருகேசன் (திரு)

2 வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
வரிவடி வேலணி கரமுரு கேசன் (திரு)

3 தேசப் பிரகாசன் வாசக் கடம்பன்
தெரிவையர் லோலன் துரைமுரு கேசன் (திரு)

## 1276. நெஞ்சே யொன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

நெஞ்சே யொன்றுக்கு மஞ்சாதே
நஞ்சாரு மிடற்று நாத னருளிய
மஞ்சார் பொழிற்குன்றை மாயவ னிருக்க (நெஞ்சே)

அநுபல்லவி

வன்ன மலியிலேறும் சொன்ன வடிவேலன்
நன்னய வடியர்க்கருள் நன்னய னிருக்க (நெஞ்சே)

சரணம்

சின்னஞ் சிறியயிடை மின்னனை யாள்குறக்
கன்னி மருவிய காரண னிருக்க
தேனலர் பூம்பொழி ருனமாகச் சூழ்
வானமளாவிய குன்றை வாசவ னிருக்க (நெஞ்சே)

## 1277. வருவாய் வருவாய் மெய்யனே

பல்லவி

வருவாய் வருவாய் மெய்யனே – நாளு
மருவார் பொழிற்குன்றை வாசா குகேசா (வரு)

சரணங்கள்

1 உந்த னிருபதத்தை வந்தனை புரியும்
எந்தன் வினைகடீர் சிந்தை மகிழ்ந்தினிதாய் (வரு)

2 ஆசைக் கடலில் வீழ்ந்து மோசப் படும்வரை
நேசத்திற்காகப் பிரகாசத் துடன்மயில்மேல் (வரு)

3 வண்டார் மதுநிறை தண்டலை சூழும்
செகண்டி மலையிலருள் கொண்ட கிர்பேசாநீ (வரு)

## 1278. நடன மயிலாளா

பல்லவி

நடன மயிலாளா
தடமுடி நிரைதளைக்குங் குன்றையா (நடன)

அநுபல்லவி

ஆடிய பம்பரம் போலோடி யுழலும் நிலை
கூடிடாத படிநாடி வந்தருள் செய்வாய் (நடன)

சரணம்

ஆசை வலையிற் சிக்கி மோசப் படாமலே
தேசசை யடியார்க்கு நேசமுட னருள்வாய்
உந்த னடியவர்க்கு வந்த வினையடீர்
சிந்தை மகிழ்ந்து வரந்தந் தருள்வாய் குகா (நடன)

## 1279. வால வடிவேலவா

பல்லவி

வால வடிவேலவா - யெந்த
ஞாலமும் பணிகுன்றை நாதனே நீதனே (வால)

சரணங்கள்

1 பங்கய பாதா மங்கைய ரிருவர்
பங்கி லுறைபவனே பார்த்தெனை யாளாய் (வால)

2 சந்திர சடாதரர் தந்தருள் பாலா
எந்தன் வினைதீர யென்முன் வந்தருள்வாய் (வால)

3 மன்றலம் பொழிலுறை குன்றையின் மாமலை
நின்ற குருபரா நின்கிருபை புரிவாய் (வால)

## 1280. மனதே யொன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

மனதே யொன்றுக்கு மஞ்சாதே – நாளுங்
கனமான குன்றைமலைக் கர்த்த னிருக்கையில் (மனதே)

சரணங்கள்

1 வாசக் கடம்ப மலர்மாலை யணியும்புயன்
நேசக் குறமின்னெனு நேரிழையாள் நயன்
யீசற் கிசைந்த பால னெம்பிரான் குகநாதன்
ஆசை யன்பருக் கருளிய னிருக்கையில் (மனதே)

2 வண்டலரணிமுடி மங்கையர் லோலன்
சண்ட வேக மயின்மே லுண்டிடு வீரன்
அண்டர்கள் பணிபுரியும் புயபாதன்
எண்டிசை யெங்கும்பணி யென்னைய னிருக்க (மனதே)

3 அடியவர் தங்களுடை அயர் வினைதீர்த்து
மிடியையுந் தீர்த்துடன் மேன்மையைக் கொடுத்துக்
குடிதனைக் காக்குங்குக குமரேசன்
வடிவுள்ள குன்றைமலை மன்னவ னிருக்க (மனதே)

## 1281. ஆண்டவனை நினைமனமே

பல்லவி

ஆண்டவனை நினைமனமே – யெங்குந்
தாண்டவம் புரிமயிற் சண்முக நாத (ஆண்ட)

சரணங்கள்

1 சங்கர சரவண
மங்கள கரகுக (ஆண்ட)

2 வால வடிவேலவ
கோலமைவாகன் (ஆண்ட)

3 மன்றலம் பொழிலுறை
குன்றை மலையில்வரும் (ஆண்ட)

## 1282. ஆளுமையனே

பல்லவி

ஆளுமையனே – குன்றை
வாழுமையனே (ஆளு)

அநுபல்லவி

ஆசைக் கடலில் வீழ்ந்து
மோசப் படாமலே (ஆளு)

சரணம்

இன்ப மெல்லாந் தழைந்து
துன்பப் படாமலே
தீவினையா லுழன்று
ஆவி துடிக்காமலே (ஆளு)

## 1283. குருபர குமரேசா

பல்லவி

குருபர குமரேசா
திருமுடி மேவிய சிகிமலை வாழும் (குரு)

சரணங்கள்

1 திங்க ளணியுஞ் சடைச்
சங்கர சம்புவின் (குரு)
2 தேன் மலர்தனில் வாழும்
நான்மறைபுகல் வாயன் (குரு)
3 பொதிய மலைக்கு
அதிபதி குறுமுனிவன் (குரு)

## 1284. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே - யடியேற்கு
வேறுமுக மில்லையே (ஆறுமுக)

அநுபல்லவி

பன்னிரு கரதலனே – பொல்லா
என்னிரு வினைதீராய் (ஆறுமுக)

சரணம்

தீவினை தனைத் தீர்த்து
ஆவிதனையுங் காப்பாய்
அடியர் பணியுங் - குன்றுக்
குடியினில் வாழும் (ஆறுமுக)

## 1285. உன்னை நம்பினேன்

பல்லவி

உன்னை நம்பினேன் - சாமி
உன்னை நம்பினே னென்னை யாளுவாய் (உன்னை)

அநுபல்லவி

வாசக் கருங்குழ ளேசத்த ராசையில்
நாசப் படாமற் பிரகாசத் துடனுள்வாய் (உன்னை)

சரணம்

பங்கய மலர்ப்பாதா சங்கரரருள் பாலா
தங்க மயிலிலே றுந்துங்க வடிவேலவா
தேடிய அன்பர்க்கு நாடிய படியருள்
கூடிய பொழிற்குன்றை நீடிய மலைவாழ்வே (உன்னை)

## 1286. எல்லாம் வினைப்பயனே

பல்லவி

எல்லாம் வினைப்பயனே - மனமே
செல்லார் பொழிற்குன்றைத் தேவனனுக் கிரகத்தால்
(எல்லாம்)

அநுபல்லவி

வாராது வந்து தீரும் போவாது போய்த் தீரும்
யாரது வானாலு மையமையமில்லை (எல்லாம்)

சரணம்

இன்பங்கள் வந்தாலும் துன்பங்கள் வந்தாலும்
பொன்புறை மயிலேறு புண்ணிய னனுபூதியால்
வள்ளி தெய்வானை லோலன் புள்ளி மயிலேறிய
யள்ளிலை வேற்கைய னுண்டவ னிருந்தாலும் (எல்லாம்)

## 1287. எந்தனைக் காக்க வேணும்

பல்லவி

எந்தனைக் காக்க வேணும்
உந்தனை யன்புடன் வந்தடுத் தேனையா (எந்தனை)

அநுபல்லவி

வாசக் களபமுலை நேசக் குறமயில்
மருவிய திவ்விய பன்னிரு புயவா நாளும் (எந்தனை)

சரணம்

மாது தெய்வானை மீது வெகு தயவு
வைத்து மருவிய புயத்து வடிவேலவா
மன்றலம் பொழிலுறை குன்றை மலையில் வாழும்
வன்ன மயிலிலேறுஞ் சொன்னமுடிக் குமரா (எந்தனை)

## 1288. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் - சாமி
இந்துதவழ் பூங்கா யிலங்கிய குன்றுக் குடியாய் (வந்து)

அநுபல்லவி

கங்கை தரித்தசடை திங்கள் முடித்தமுடிக்
கர்த்த ரருளும் பாலா யுத்தம குணசீலா (வந்து)

சரணம்

செய்ய பூமலர்ப் பாதா துய்ய பன்னிருகையா
தேடிய அன்பர் முன்னுடிய மயிலேறிய
தாவிய மலர்ப்பொழின் மேவிய குன்றைமலை
சாமி குமரய்யா நாம வடிவேலவா (வந்து)

## 1289. தருணமுனை நம்பினேன்

பல்லவி

தருணமுனை நம்பினேன் - நாளுந் (தருண)
திருமக ளுறைதரு சிகிமலை நாதா

அநுபல்லவி

பூமலரெனு நீபத்
தாம மணியும்புயா (தருணம்)

சரணம்

வஞ்சக வசுரனை
நெஞ்சடர வடிவேலா
மின்னிய மயிலேறும்
பன்னிரு கரதலா (தருண

## 1290. என்னமோ அறியேன்

பல்லவி

என்னமோ அறியேன் சாமி – சித்தம்
சொன்ன மாமுடிக் குன்றை மாமலைத் துரைக்குருபரன்
மனத்திருப்பது (என்னமோ)

சரணங்கள்

1 யாசைக் கடலி லமிழ்ந்திடச் செய்யுமோ
மோசப் படுத்தி விழித்திடச் செய்யுமோ
தேசத்தர் யாருக்கும் சிரித்திடச் செய்யுமோ
தெய்வ குருபரன் சித்தம் சித்தம் (என்னமோ)

2 பாதக வினையில் படிந்திடச் செய்யுமோ
மாதர் மயக்கின் மயங்கிடச் செய்யுமோ
ஆதர வின்றி யலைந்திடச் செய்யுமோ
ஐயன் குருபரன் சித்தஞ் சித்தம் (என்னமோ)

3 பரம பதத்திற் பணிந்திடச் செய்யுமோ
சிரம மில்லாமற் றெழிந்திடச் செய்யுமோ
இரவும் பகலு மிறைஞ்சிடச் செய்யுமோ
யெழிற்குன்றை மலைஐயன் சித்தம் சித்தம் (என்னமோ)

## 1291 ஆருகதி ஐயனே

பல்லவி

ஆருகதி ஐயனே - வாசஞ்
சரு மலர்ப்பொழிற் செகண்டிமலைக் குமரா (ஆருகதி)

அநுபல்லவி

சித கருமத்தைப் போக்கவும் – நாளு
சு நல்வினையை யுண்டாக்கவும் (ஆருகதி)

சரணம்

க் கடலை விட்டு யேற்றவும் – பொல்லா
ந்தில் விழுகாமல் மாற்றவும்
னைகளை யோட்டவும் - நாளும்
னலங்கூட்டவும் (ஆருகதி)

## 1292. அண்ணலை நினைமனமே

பல்லவி

அண்ணலை நினைமனமே - சுப்பிர
மண்ணியனைக் குருபர மாதவனைக் குகனை (அண்ணலை)

அநுபல்லவி

வஞ்சக சூரனை நெஞ்சிரு கூறு செய
யுஞ்சமர வேலனைக் கஞ்சமலர்க் கையனை (அண்ணலை)

சரணம்

அண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் பணியும்
வண்டணி மலர்ப்பாதத் தண்டாயுத பாணியை
சஞ்சித வினையைப் பஞ்சு பஞ்சாக
வுஞ்செயு நாதனை ரஞ்சித நாயனை (அண்ணலை)

## 1293. நெஞ்சிரங்காயோ

பல்லவி

நெஞ்சிரங்காயோ
மஞ்சடர் குன்றைமலைக் குமரேசா (நெஞ்சி)

அநுபல்லவி

வஞ்ச வரக்கனை நெஞ்சு பிளந்திட
மிஞ்சு மயில்கொடு வென்றவனே சாமி (நெஞ்சி)

சரணம்

கானக மாமயில் மானனை யாளுடன்
தேனலர் சூடியே சேருங் குகேசா
பாத பங்கயந்தனை மாதய வுடன்பணி
மூதறி வன்பரை முழுதுங் காக்குமையா (நெஞ்சி)

## 1294. சாமி யெனையாளாய்

பல்லவி

சாமி யெனையாளாய் – நாளும்
பூமி புகழுங் குன்றைப் பொருப்பி லுறையுங் கந்த (சாமி)

சரணங்கள்

1 கங்கை தரித்தசடைத் திங்கண் முடித்தமுடிக்
கர்த்த ரருளிய புத்திரனெனுங் கந்த (சாமி)

2 வால வடிவேல்கொடு கோல மயிலிலேறி
வந்தருளிய சம்பந்தனே யுயர்கந்த (சாமி)
3 நீடிய மலர்ப்பொழில் கூடிய குன்றைமலை
வாசனே பிரகாசனே கந்த (சாமி)

## 1295. தண்டாயுத பாணியே

பல்லவி

தண்டாயுத பாணியே – மலர்
வண்டார் பொழிற்குன்றை மன்னவனே சாமி (தண்டா)

சரணங்கள்

1 தொண்டர்கண் மிடிதீர் யண்டர் துயர்தீர
தண்ட னெனுஞ் சூரை மாய்த்த வடிவேலவா (தண்டா)
2 வந்த வினைகளெல்லாம் நொந்து நொந்து போக
யுந்தன் தயவு யுருமையுடனே சாமி (தண்டா)
3 நீளுமலர்ப் பொழில் சூழுஞ் சிகாமலை
வாழுங் குருபரனே வந்தருள் வாயே (தண்டா)

## 1296. உந்தன் தயவு செய்ய வேணும்

பல்லவி

உந்தன் தயவு செய்ய வேணும் - நாளுங்
கந்த மலர்ப்பொழிற் சந்தமலைச் சிகியா (உந்தன்)

அநுபல்லவி

வாசக் களபமுலை வள்ளி மனோகரா
யீசற் கிசைந்த புத்திரா யெனக்கருள் செய்ய (உந்தன்)

சரணம்

சொன்ன மயிலிலேறுஞ் சுந்தர நாதா
வன்ன வடிவேலணி மாமலர்க்கையா
தொண்டர் கடுவினை துலைத்திடு நாதா
வண்டலர் நீபமென் மாலிகாபரணா (உந்தன்)

## 1297 ஆடிய மயில்வீரா

பல்லவி

ஆடிய மயில்வீரா – பொழில்
கூடிய குன்றைமலைக் குருபரா நாதா (ஆடிய)

அநுபல்லவி

சங்கர ரருளிய சண்முக வேலா
மங்கை குறத்தி மீது மயங்கிய லோலா (ஆடிய)

சரணம்

வாச மிகுந்த நீப மாலை யணியும்புயா
தேச மிகுந்த வன்பர் தேடிய நன்னயா
அண்டர் பணியுஞ்செய வழகிய தாளா
வண்டணி மலர்ச்சோலை மயின்மலை யாளா (ஆடிய)

## 1298. கண்டேனே கண்டேனே

பல்லவி

கண்டேனே கண்டேனே – நாளும்
வண்டார் பொழிற்குன்றை மன்னவன் பாதத்தைக்
(கண்டேனே)

சரணங்கள்

1 யாடிய மயிலேறித் தேடிய வன்பருடன்
கூடிவருங் குமர கோலாகல நாதனைக் (கண்டேனே)
2 யெத்தேச காலமும் பத்தர்களைக் காக்குங்
கர்த்தனை குருபர கருணைப் பெருங்கடலைக் (கண்டேனே)
3 வன்னக் குவிமுலையாள் சின்னச் சிற்றிடை மாது
கன்னல்மொழிக்குறத்தி கணவனை நாளும்
(கண்டேனே)

## 1299. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ
யெத்தலமும் பணியென் னையனே சாமி (சித்தம்)

அநுபல்லவி

நடிக்கும் பாதாம் புயத்தைப்
படிக்கு மடியாரிடம் (சித்தம்)

சரணம்

ஆடிய மயிலேறி
யோடிவரு மையனே
குன்றையின் மலைமீது
நின்ற வடிவேலவா (சித்தம்)

## 1300. மறந்திருக்காதே

பல்லவி

மறந்திருக்காதே – மனதே
சிறந்த குன்றைமலைத் தேவனைப் பணிய (மறந்தி)

சரணங்கள்

1 போது தரித்தகுழன் மாதுமணி
காதற் குறவஞ்சி கணவனைப் பணிய (மறந்தி)

2 வண்டனெனுஞ் சூரை அண்டர் மகிழ்ந்திட
தண்டமதால் வென்ற சாமியைப் பணிய (மறந்தி)

3 அடியவர் தங்களின் குடிதனைக் காத்திடும்
வடிவுள்ள வேலவ வாசனைப் பணிய (மறந்தி)

## 1301. அஞ்சாதே மனமே

பல்லவி

அஞ்சாதே மனமே – நாளு
மஞ்சார் பொழிற்குன்றை மன்னவ னிருக்க (அஞ்சா)

அநுபல்லவி

காலனை வதைசெய்த காலனரருள்
பால குகேச யனுகூல னிருக்கவே (அஞ்சா)

சரணம்

புள்ளி மயிற் சாயல் தெள்ளிய தினைப்புன
வள்ளி மருவிய வள்ள லிருக்கவே
வண்டணி மலர்ச்சோலை கொண்ட சிகாமலை
அண்டர் தம் நாயகன் றண்டாயுத னிருக்கவே (அஞ்சா)

## 1302. ஐயா குமரேசா

பல்லவி

ஐயா குமரேசா – பன்னிரு
கையா குன்றைமலைத் துய்யா யென்சாமி (ஐயா)

அநுபல்லவி

புத்தியுடன் காய சித்திதனைப் பெற்றுச்
சித்திபெறு ஞானர் தினந்தினம் பணியும் (ஐயா)

சரணம்

கடிமலர் தூவி யடியவர் கூடி
படிமிசை வீழ்ந்து பணிந்திடும் பாதா
தன்னை யடுத்தவர் பின்னைவினைகளைச்
சன்னப் பின்னஞ் செய்யுஞ் சற்குரு நாதா (ஐயா)

## 1303. வால வடிவேலவனே

பல்லவி

வால வடிவேலவனே - யெந்த
ஞாலமும் பணியுங் குன்றை நாதனே கிர்பேசனே (வால)

சரணங்கள்

1 வஞ்சக வசுரனுட
நெஞ்ச மிருகூறுசெயும் (வால)
2 பார்தனை வளைந்துவளர்
ஆர்கலி சுவற்றிட (வால)
3 யன்பர் களிடத்து வந்த
துன்பத்தைக் கீறுசெயும் (வால)

## 1304. ஆதாயந் தரவேணும்

பல்லவி

ஆதாயந் தரவேணும் – நாளும்
வேதாவு மாயவனும் விரும்பிய குன்ருக் குடியாய்
(ஆதாயம்)

அநுபல்லவி

மாது சிரோன்மணி போது மின்போலான்
காதலி குறமான் கருத்துக் கிசைநாதா (ஆதாயம்)

சரணம்

வால மதிச்சடை கோல மலர்புனை
பால நன்னேத்திரா பாலகனே சாமி
யாடிய மயிலேறித் தேடி யென்முன் வந்து
நாடிய படிவரம் நல்கியே ரட்சித்து (ஆதாயம்)

## 1305. மனதுக்குத் திடஞ்சொல்வாய்

பல்லவி

மனதுக்குத் திடஞ் சொல்வாய் சாமி - நாளும்
வனசத்திரு வளரு மயின்மலை நாதா (மனது)

அநுபல்லவி

கங்கை தரித்தசடை திங்கள் முடித்தமுடிக்
கர்த்த ரருளிய புத்திர சிகாமணியே (மனது)

சரணம்

வாசக் கடம்பப் பிரகாசக் குமரேசா
மன்னும் வடிவேலவா பொன்னின் மயில்வாகனு
கொம்புக் குரங்குபோல சோம்பித் திரிந்தலேயும்
கொத்து மெந்தனுட வேதனே யாகிய (மனது)

## 1306. நெஞ்சிரக்க மிலேயோ

பல்லவி

நெஞ்சிரக்க மிலேயோ சாமி – யுயர்
மஞ்சுதவழ் குன்றைமலே வாசனே யீசனே (நெஞ்சு)

அநுபல்லவி

வாசக் கடம்பணியும்
குகேசக் கிர்பா நிதியே (நெஞ்சு)

சரணம்

பங்கச மாமலர்
தங்கிய பாதா
கூடிய பொழிற்குன்றை
யாடிய மயிலாளா (நெஞ்சு)

## 1307. எனக்கொரு வரந்தருவாய்

பல்லவி

எனக்கொரு வரந்தருவாய் – குன்றை
வனக்கிரி வளருஞ் சினத்திடு மயிலா (எனக்)

சரணங்கள்

1 அஞ்ச வேண்டா மென்று
நெஞ்ச மகிழ்ந்திட (எனக்)

2 வேண்டியபடி யெல்லா
மாண்டவனே செய்து (எனக்)

3 பதம்பதந் தந்து
வற்புதனே சாமி (எனக்)

## 1308. துயரந் தீராயோ

பல்லவி

துயரந் தீராயோ
செயமிகுந்த கனவயி லுகந்த கையா (துயரம்)

சரணங்கள்

1 உன்னைச் சதமென்றே
யெண்ணு மடியனுடை (துயரம்)

2 சித்த முருகிய
பத்தனிடம் வரு (துயரம்)

3 யென்று மன்பர்கள் சூழுங்
குன்றை மலையினுதா (துயரம்)

## 1309. இந்தச் செனனமென்ன செனனம்

பல்லவி

இந்தச் செனனமென்ன செனனம்
சந்தச் செனன நீபத்தார் புனைபுயவா (இந்த)

சரணங்கள்

1 போது தரித்த குழன்மாது குறத்தி பாகா
புண்ணியமுங் நற்கண்ணியமு மில்லா (இந்த)

2 தாதிருக்கு மலர்ப்போதிருக்கும் புயா
சவுரியமும் நல்ல பவுருக்களு மில்லா (இந்த)

3 மன்றலம் பொழிலுறை குன்றையின் மலைநாதா
மாயத்தி லகப்பட்ட பாயத்தில் விழுந்து (இந்த)

## 1310. பாதத்தை மறவாதே

பல்லவி

பாதத்தை மறவாதே - நான்கு
வேதத்தின் முடிவான விமலருட் பனிமலர்ப் (பாத)

சரணங்கள்

1 ஆதி அந்தமு மான சோதி பராபர
நாத கிர்பானிதி நாடக நடன (பாத)

2 மருமலர் நீபத் தருமலர் சூடு
மருகேச வடிவுள்ள தேவன் (பாத)

3 மன்றலம் பொழில்சேர் குன்றையின் மலையில்
நின்ற வமரேசர் நிர்மல மான (பாத)

## 1311. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் – யுந்தன்
நாயேன் மிடிதீரு வாயே யென்சாமி (தாயே)

அநுபல்லவி

அஞ்ச வேண்டா மென்று ஆதரவு செய்து
கஞ்ச மலர்ப்பாதங் காட்டி யென்சாமி (தாயே)

சரணம்

வன்ன மயிற்சாயல் வள்ளி மனோகரா
அன்னநடைத் தெய்வயானை மனோகரா
யாடிய பொழிலுறை அருள்குன்றை மலையாய்
நாடியபடி காத்து ரட்சிக்கு நாதா (தாயே)

## 1312. கண்டு தரிசிப்பாய் மனமே

பல்லவி

கண்டு தரிசிப்பாய் மனமே – நாளும் (கண்டு)

அநுபல்லவி

வண்டுலவும் பொழில்கொண்ட செகண்டிமலை
வந்த குருபரன் கந்த மலர்ப்பதம் (கண்டு)

சரணங்கள் (அநுபல்லவிபோல்)

1 யந்தரி யாமளை சுந்தரி டாகினி
அம்பிகை அருள்பாலன் சம்பிரம பாதத்தைக் (கண்டு)
2 தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரத்
தேவன்மார்கள் பூபனிரு பாதம் (கண்டு)
3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றை மலைவரு
வாசன் குககுமரேச னிருபதத்தைக் (வண்டு)

## 1313. வாராய் குமரேசா

பல்லவி

வாராய் குமரேசா - வந்து வரந்
தாராய் குருநாதா (வாராய்)

அநுபல்லவி

வள்ளி மயிலுடன்
புள்ளி மயிலிலேறி (வாராய்)

சரணம்

அண்டர்கள் பாடிய
தொண்டருடன் கூடி
யென்றுமன்பரைக் காக்கும்
குன்றை மலையினின்று (வாராய்)

## 1314. வஞ்சனை செய்யாதே

பல்லவி

வஞ்சனை செய்யாதே - நாளுங்
கஞ்ச மலர்ச்சுனை மிஞ்சுங் குன்றுக்குடி
கர்த்தன் குகன் பரிசுத்தன் றனைப்பரவ (வஞ்சனை)

சரணங்கள்

1 ஆடிய மயின்மீது நாடி வந்தெந்தனைத்
தேடி யனுக்கிரகஞ் செய்யு மையனைப் போற்ற (வஞ்சனை)

2 பங்கய மாமல ரிங்கித மாமகள்
பங்கனரி மருகன் பதத்தைப் போற்ற (வஞ்சனை)

3 வடிவே லேந்துங்கை கடிசேர் குன்றுக்குடி
முடிசேர்மலை மூர்த்திகளைப் போற்ற (வஞ்சனை)

## 1315. வடிவேலவனை நினைமனமே

பல்லவி

வடிவேலவனை நினைமனமே (வடி)

அநுபல்லவி

குன்றுக் குடிவாழு மாறுமுடி நாயக குக
குருபர சரவண திருவருள் புரிசெய் (வடி)

சரணங்கள்

1 வஞ்சக வசுரனை நெஞ்சிரு கூறிடு
வல்லப மாகிய சொல்லரி தாகிய
நல்ல விலாசணி வெல்லு முலாசமெய் (வடி)

2 ஆடிய மயிலேறுங் கூடிய வனுக்கிரக
யாகா பரசிவ வருமடிய வருடபுரவ லனும் (வடி)

3 தென்புடனே வருமன்பர்கள் மிடிதீர்க்குந்
திருவரு டருகுக முருகரி ம்ருமக (வடி)

## 1316. எப்படியுந் தயவுவைப்பாயே

பல்லவி

எப்படியுந் தயவு வைப்பாயே - சாமி
மைப்படியு முடிமயின் மலைநாதா (எப்படி)

சரணங்கள்

1 பாதக னானாலும் நோதக னானாலும்
வேதனை யாகாமல் நீ தயாள மாக (எப்படி)

2 வஞ்சக னானாலும் கொஞ்சனே யானாலும்
பஞ்சையா யிருந்தாலும் நெஞ்ச மகிழ்வாக (எப்படி)

3 மன்றன் மலர்ப்பொழில் நின்ற கனகமுடிக்
குன்றை மலைக்குகா யென்றும் மனதிரங்கி (எப்படி)

## 1317. செய்யவேணும் சாமி

பல்லவி

செய்யவேணுஞ் சாமி
வையம்புகழுங் குன்றை ஐயனே அடியேற்குச் (செய்ய)

சரணங்கள்

1 வஞ்சக வினையினை யஞ்ச விரட்டிவைத்து
மிஞ்ச வருளைத் தந்து மேன்மை யதாகவே (செய்ய)

2 மாது குறத்திதன் மீது மயக்கங்கொள்
காதலனே நல்ல கருத்து வைத்தினி யருள் (செய்ய)

3 தன்னுட பத்தனிவ னென்ன நினைத்துடன்
நன்னய மானவரம் நல்கி யனுபூதி (செய்ய)

## 1318. பத்தர் சகாயா

பல்லவி

பத்தர் சகாயா – நாளும்
மொய்த்த பொழிற்குன்றை முன்னவனே சாமி (பத்தர்)

அநுபல்லவி

வஞ்சக வசுரனை நெஞ்சிரு கூறிடு
மிஞ்சிய கூர்வேலா தஞ்சம் வேறிலே சாமி (பத்தர்)

சரணம்

போது தரித்தகுழன் மாது குறத்திபாகா
தாதவிழ் மலர்ப்பாதா யாதரவு செய்குவாய்
துட்ட வியாதிகள் கிட்ட வணுகாம
விட்ட படிக்கருள் சீரிட்ட பரிபாலனு (பத்தர்)

## 1319. ஐயா குமரேசா

பல்லவி

ஐயா குமரேசா - பன்னிரு
கையாவடியர்பணிதுய்யா யெனையாளும் (ஐயா)

சரணங்கள்

1 மாலைக் கருங்குழல் யோலைக் குழைக்குற
மங்கை மருவுபுயா துங்க மயிலில் வரும் (ஐயா)

2 வல்லவ சூரனை வெல்லும் வடிவேலவா
மன்னு மன்பர்களுடன் சொன்ன மயிலிலேறும் (ஐயா)

3 ஓங்கிய மலர்ப்பொழில் தாங்கிய குன்றைமலை
உத்தமனே யுயர்சித்திர மயிலிலேறும் (ஐயா)

## 1320. கண்டேன் கண்டேனே

பல்லவி

கண்டேன் கண்டேன்
வண்டார் மலர்ப்பொழில் மயின்மலை நாதனைக் (கண்)

சரணங்கள்

1 வாடிய கொடியிடை யோடிய கெண்டைவிழி
நீடிய கருங்குழல் சூடிய கானமயில்
தோளனை மணவாளனைக் கண்ணுற் (கண்)

2 வஞ்சக சூரனை நெஞ்சிரு கூறுசெ
யுஞ்சமர வேலனை மிஞ்சிய வீரனை
மேலனை யனுகூலனைக் கண்ணுற் (கண்)

3 அண்டர் சகாயனை தொண்டர்க ளுதனை
கொண்டை மயிலோனை மண்டிய பூஞ்சோலை
மயின்மலைவரு யொயிலனைக் கண்ணுற் (கண்)

## 1321. சித்தம் திரும்பவேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் – நாளும்
பத்தர் பணியுங் குன்றைப் பரமனே யுந்தன் (சித்தம்)

அநுபல்லவி

வால வடிவேலவா
கோல மயிற்குமரா (சித்தம்)

சரணம்

வஞ்சனை தீர்த்தருள்
கஞ்சமலர்ப் பாதா
கானகம் வாழ்தரு
மானனையாள் பங்கா (சித்தம்)

## 1322. நெஞ்சே மறவாதே

பல்லவி

நெஞ்சே மறவாதே
மஞ்சார் பொழிற்குன்றை மாயவ னிருபதத்தை (நெஞ்சே)

சரணங்கள்

1 வஞ்சக வரக்கனை நெஞ்சிரு கூறிடு
நஞ்சயி லாளியன் கஞ்சமலர்ப் பதத்தை (நெஞ்சே)

2 நித்தந் துதித்திடும் பத்தர்கள் மிடிதீர்க்குங்
கர்த்தன் குருபர சித்த னிருபதத்தை (நெஞ்சே)

3 ஆடிய மலர்ச்சோலை கூடிய சிகிமலை
நாடிய குகநாதன் தேடிய பாதத்தை (நெஞ்சே)

## 1323. மயிலேறும் பெருமாளே

பல்லவி

மயிலேறும் பெருமாளே – நாளும்
ஒயிலான குன்றைமலை யொருத்தனே சாமி (மயி)

அநுபல்லவி

ஆலைக் கரும்பு போலும் வேலைத் துரும்பு போலும்
அலையாமற் கிருபை நிலையாகச் செய்வாய் (மயி)

சரணம்

வஞ்ச வினைகளை யஞ்சிட வோடிட
மாய்த்தவனே கண்பார்த்திட வருள்வாய்
மன்றலம் பொழிலுறை குன்றையின் மாமலை
வந்தவனே கிருபை தந்தவனே சாமி (மயி)

## 1324. நடன மயிலா

பல்லவி

நடன மயிலா
வடவரைநிகர் மயின்மலை நாதா (நடன)

அநுபல்லவி

பொல்லாத தீவினை யெல்லாமும் வந்து
பொருந்தாமற் பட்டு வருந்தாமற் செய்வாய் (நடன)

சரணம்

தீவினைப் பயத்தினு லாவியைப் போகாமலதைத்
தீர்க்க வந்தருளிக் கண்பார்க்க வேணும் சாமி
போது தரித்த குழன்மாது குறத்தி பங்கா
போதனே திவ்விய வேதனே சாமி (நடன

## 1325. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் - யெந்தன்
தாயே குன்ருக்குடிச் சண்முக நாதா (நீயே)

சரணங்கள்

1 உந்தன் சரணத்தை வந்தனையே செய்யும்
எந்தன் வினைதீர வந்தருள் செய்ய (நீயே)
2 ஆசைக் கடலில் வீழ்ந்து மோசப் படாமலே
வாசக் கடம்பா பிரகாசத் துடனருள (நீயே)
3 சொன்ன முடிநிரை யுன்னும் சிகாமலை
மன்னவனே யெனைமுன்னம் வந்தாள (நீயே)

## 1326. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் - யரு
ளைந்துமுகத் தேய மருளிய பாலா (வந்து)

அநுபல்லவி

வாதுபுரி சூரனை
மோதி வென்ற வயிலா (வந்து)

சரணம்

தெள்ளிய தினைப்புன
வள்ளி மணவாளா
துன்றிய பொழில்சேர்
குன்றையின் மலையா (வந்து)

## 1327. கருத்தினில் மறவாதே

பல்லவி

கருத்தினில் மறவாதே - மனமே
ஒருத்தர் துணையுமில்லை பருத்த குன்றையானைக் (கருத்)

சரணங்கள்

1 பத்தர்கண் மிடிதீர்க்குங் கர்த்தனை மயிலேறு
நிர்த்தனையருள் பரிசுத்தனை நாளுங் (கருத்)

2 உள்ள முருக ஞான வெள்ளம் பெருகத் துதி
கொள்ளு மன்பரைக் காக்கும் வள்ளலை நாளுங் (கருத்)

3 வாய்த்திடுஞ் சூரனைக் காய்த்திடும் வீரனை
நேர்த்தியான குன்றைப் பார்த்திபனை நாளுங் (கருத்)

## 1328. துதிப்பாயே மனமே

பல்லவி

துதிப்பாயே மனமே – நாளும்
மதிப்பான குன்றைமலை வன்ன வடிவேலனை (துதிப்)

அநுபல்லவி

வண்டன் சூரனை ரெண்டகலஞ் செயும்
வால வடிவேலனைக் கோல மயிலோனை (துதிப்)

சரணம்

மாது குறத்தியைக் காதலுடன்புணர்
மாயவனை யன்பர் நேயனை
வாசப் பொழில்க ளாகாசத் தளாவிய
மயின்மலை யோனை யயின்முரு கேசனை (துதிப்)

## 1329. வாராய் குகநாதா

பல்லவி

வாராய் குகநாதா — யனுக்கிரகந்
தாராய் குகநாதா (வாராய்)

அநுபல்லவி

அந்தர வானவர் வந்தடி பணிபுரி
கந்த மலரினீபா யெந்தன்மேற் றயவாக (வாராய்)

சரணம்

வாசக் களபமுலை நேசக் குறமயிலி
ஆசைக் கிசைந்திடு பிரகாசப் பிரல நாதா
மஞ்சடர் பொழிற்குன்றை ரஞ்சிதனே சாமி
தஞ்சம் வேறிலை யெனையஞ்ச லென்றுண்டி (வாராய்

## 1330. சாமி உந்தனை நம்பினேன்

பல்லவி

சாமி உந்தனை நம்பினேன்
தேமலர்ப் பூஞ்சோலைச் செகண்டிமலை முருகா (சாமி)

அநுபல்லவி

வன்ன மயிலிலேறி மின்னல் வடிவேலேந்தி
நன்னய மாக வந்து ரட்சிக்கு நாதா (சாமி)

சரணம்

வாசக் குழலியர்க ளாசைக் குழியில் வீழ்ந்து
மோசப் படுவோர்தமை முழுதும் ரட்சிக்கு நாதா
பாவ வினையினாலே யாவி துடிதுடித்துப்
பூவிலுள் ளோர்க்கருள் புரிந்து ரட்சிக்கு நாதா (சாமி)

## 1331. ஐயனே யென்சாமி

பல்லவி

ஐயனே யென்சாமி — பன்னிரு
கையனே குன்றைமலை மெய்யனே யென்சாமி (ஐயனே)

அநுபல்லவி

வஞ்சகரக்கரை நெஞ்சடர்த்திடு
மிஞ்சும் வேலவா ரஞ்சித நாதா (ஐயனே)

சரணம்

சின்ன மயிலேறு மின்னும் வடிவேலா
நன்னய வடியவர் தன்னை ரட்சிக்கு நாதா
அண்டர்கள் முதலினர் தொண்டர்கள் பணிபுரி
வண்டலர் மலர்ப்பாதா யெண்டிசை புகழ்நாதா (ஐயனே)

## 1332. சித்த மிரங்கவேணும்

பல்லவி

சித்த மிரங்க வேணும் - குன்றைக்
கர்த்தனே கமல பதத்தனே யென்மீது (சித்தம்)

அநுபல்லவி

வஞ்ச வரக்கர்குலமஞ்ச வயில்விடும்
கஞ்ச மாமலர்க்கையா ரஞ்சிதக் கனிவாயா (சித்தம்)

சரணம்

எந்தன் வினைகள் தீரயுந்தன் மயிலிலேறி
வந்தனு பூதி செய்து சொந்த வடியனென்று
பொல்லாத் தீவினை யெல்லாமுந் தீரவே
உல்லாச மாகவே சல்லாப மாக வந்து (சித்தம்)

## 1333. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் – நாளும்
நாயேன் மிடிதீர்த்து ரட்சித்து யெந்தன் (தாயே)

அநுபல்லவி

கானகந் தன்னில்வரு மானனை யாளுடன்
வானமினுள் தெய்வ யானையு மேவிய (தாயே)

சரணம்

யுந்தன் மலரடி வந்தனை புரியுமென்
சிந்தை மகிழ்ந்திட வந்தருள் புரிவாய்
யுன்னத மயிலிற்பிர சன்னமாக வந்து
நன்னய வருள்புரி முன்னவனே யெந்தன் (தாயே)

## 1334. ஆறுமுகத் தெய்வமே

பல்லவி

ஆறுமுகத் தெய்வமே – யெனக்கு
வேறு தெய்வ மில்லையே (ஆறு)

அநுபல்லவி

வஞ்சரக்கனை நெஞ்சடர்த்திடு
மிஞ்சு முக்கிர வீர வேலவா (ஆறு)

சரணம்

பத்தருடைய சித்தம் மகிழ்
விர்த்தி செய்கிற மேலவா குகா
மன்றலம் பொழில்துன்றிய குணக்குன்றை
மாமலைக் குமரய்யா மெய்யா (ஆறு)

## 1335. வருவாய் வருவாய் மெய்யனே

பல்லவி

வருவாய் வருவாய் மெய்யனே – நாளுந்
திருவாழுங் குன்றைமலைத் தேவ தேவனே (வருவாய்)

அநுபல்லவி

ஆசைக் கடலில் வீழ்ந்து
மோசப் படாமலே (வருவாய்)

சரணம்

உந்தன்பதம் பணியு
மெந்த னிடத்தி லன்பாய்
மின்னிய வேலந்திச்
சொன்ன மயிலிலேறி (வருவாய்)

## 1336. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணும் – உயர்
கந்த மலர்ப்பொழில் காட்டுங் குன்றை நாதா (உந்தன்)

அநுபல்லவி

வாதுக்கு வருசூரை மோதிப் படையால் வென்ற
சூதுற்ற வடிவேலா தோகை மயிலாளா (உந்தன்)

சரணம்

துன்பக் கடலில் வீழ்ந்து வம்புப் படாமலே
நம்பினேன் சாமி நட்டாற்றில் விடலாமா
சேலார்விழி மடவார் நல்லார் மயிலினுலே
பொல்லாப்பு வாராமற் புண்ணியனே நீ காப்பாய்
(உந்தனை)

## 1337. மறப்பேனே ஒரு நாளும்

பல்லவி

மறப்பேனு ஒரு நாளும் – திருநாள்
சிறக்குங் குன்ருக்குடித் தேவர்கள் தேவனை
(மறப்பேனே)

அநுபல்லவி

பத்தர்கண் மிடிதீர்க்குங்
கர்த்தனை நானே (மறப்பேனே)

சரணம்

எந்தன் மிடிதீர்க்குங்
கந்தனைக் காண
கூடறு படையயில்
ஆறுமுகத் தோனை (மறப்பேனே)

## 1338. தயவு செய்ய வேணும்

பல்லவி

தயவு செய்ய வேணும் – நாளும்
நயமிகுந்த குன்றை நாதனே சாமி (தயவு)

அநுபல்லவி

உந்தன் மனதிரங்கி
யெந்தன் வினையடீர் (தயவு)

சரணம்

மாயப் பிறப்பில் வந்து
நோயின் மிகமெலியாமல்
மன்றலம் பொழிலுறை
குன்றை மலையின் வாசா (தயவு)

## 1339. உந்தன் தயவு செய்வாய்

பல்லவி

உந்தன் தயவு செய்வாய் – உயர்
கந்த மலர்ப்பொழில் வந்த சிகேசனனே (உந்தன்)

அநுபல்லவி

வாசக் களபமுலை
நேசக் குறத்தி பங்கா (உந்தன்)

சரணம்

தெள்ளிய சுமுக வாயா
புள்ளி மயில்வாகனு
நெஞ்ச மகிழ அருள்வாய்
தஞ்சம் வேலய்யா (உந்தன்)

## 1340. வரவேணுமையனே

பல்லவி

வரவேணுமையனே – வந்தருள்
தரவேணுமையனே (வர)

அநுபல்லவி

கோல மாமயி னுதா – வடி
வேலணி கரதலனே (வர)

சரணம்

அண்டர்கள் குலதீரா
தொண்டர்கள் மகிழ்வேதா
மன்றலம் பொழிலுறை
குன்றையின் மலைவாழ்வே (வர)

## 1341. என்னை ஆளுமையா

பல்லவி

என்னை ஆளுமையா – நாளு
மின்னை நேரு முடிமீறு குன்றுக் குடியாய் (என்னை)

அநுபல்லவி

சுற்றி விளையாடுஞ்
சித்திர மயில்வாகா (என்னை)

சரணம்

வால வடிவேலணி
கோல மலர்க்கையா
மண்டிய பொழிலின்
செகண்டி மலைவாழ்வே (என்னை)

## 1342. கந்தனே சாமி

பல்லவி

கந்தனே சாமி - ஞானசம்
பந்தனே சாமி (கந்தனே)

அநுபல்லவி

பன்னிரு கையா – நடம் செய்
யுன்னித மயிலா (கந்தனே)

சரணம்

பாத பங்கயனே – தேவர்
நாத யிங்கிதனே
மண்டிய பொழிலுயரும் - முடியின்
செகண்டியின் மலைவாழ்வே (கந்தனே)

## 1343. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே - பணி
பூண்டவனுருட புத்திரனே சாமி (ஆண்டவ)

அநுபல்லவி

தேடிய யன்பரிடம் யாடிய மயிலேறி
யோடியே வந்தருள் செயு முத்தமனே சாமி (ஆண்டவ)

சரணம்

பன்னிரு கையினி லுன்னித வேலேந்தி
மின்னிவந் தடியார்க்கு வேண்டிய வருள் செய்ய
சித்திர முடிகணிறை பத்தர்கடுதி மிகு
விர்த்தியான குன்றை மேலுறையுஞ் சாமி (ஆண்டவ)

## 1344. கண்டு கொண்டேனே

பல்லவி

கண்டு கொண்டேனே
வண்டலர் பொழிற் குன்றைமலேக் குமரேசனைக் (கண்டு)

அநுபல்லவி

மூவர்க்கு முதலிய தேவர்க்கும் யடியவர்
யாவர்க்கும் யருள்புரி ஐயனை மெய்யனைக் (கண்டு)

சரணம்

யெங்கும் பிரகாசங்கள் தங்குங் கிர்பானிதி
பொங்குங் கருணைக் கடல்போல் விளங்குவோனை
சோதி மயமான யாதி பராபர
நாத மகேசுவர நாயனை நேயனை (கண்டு)

## 1345. நாதா மகேசா

பல்லவி

நாதா மகேசா - மலர்ப்
பாதா சிகிமலே வேதாகம குகா (நாதா)

அநுபல்லவி

வஞ்ச வரக்கனை நெஞ்சைப் பிளந்திடு
மிஞ்சு கதிர்வேலா வீரப் பிரதாபா (நாதா)

சரணம்

தாதவிழு நீபப் போதணி புயனே
பாத பங்கயனே பரம பதனே
அண்டர்க ளிமையவர் தொண்டர்கள் பணியும்
வண்டலர் மலர்ப்பாதா மயின்மலே வாழும் (நாதா)

## 1346. காணாத கண்ணென்ன கண்

பல்லவி

காணாத கண்ணென்ன கண்
பூணார் முடிக்குன்றைப் புண்ணியனை யன்பர் (காணாத)

சரணங்கள்

1 அண்டர் நாதனை
வண்டலர்ப் பாதனை (காணாத)

2 சோதி மயமான
யாதிப ரேசனைக் (காணாத)

3 வம்பலர் நீபனைச்
சம்பிரம வேலனைக் (காணாத)

## 1347. நினைப்பதே பெரிது

பல்லவி

நினைப்பதே பெரிது - நாளும்
அனைத்துலகும் புகழையனை மெய்யனை (நினைப்)

அநுபல்லவி

பன்னிரு கரதல புள்ளி மயிலாள
மன்னிய வடிவேல் வராத சண்முகனை (நினைப்)

சரணம்

வஞ்ச வினையினை யஞ்ச வடித்திடு
கஞ்ச மலரைநிகர் காலனை கோலனை
மனறன் மலர்ப் பொழிற் குன்றையின் மலையோனை
நன்றி யருளிய நாதனை நீதனை (நினைப்)

## 1348. கண்டு தரிசித்தேனே

பல்லவி

கண்டு தரிசித் தேனே - மலர்
மண்டு பொழிற்குன்றை யண்டர் பிரானை நான் (கண்டு)

அநுபல்லவி

மங்கையை ரிருவர்கள் பங்கிலுறை வோனை
துங்கச் சிலம்பணி பங்கய பாதனைக் (கண்டு)

சரணம்

அரவணிப வாதர வருகுக பரம
சிவேச சரவண பவனை
மயின்மிசை யேறி யயி லிலங்கிட
யொயிலுடன் வருசெய முருகனைக் (கண்டு)

## 1349. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும் – நாளும்
பத்தர் பணியுங் குன்றைப் பரம சிவேசனே (சித்தம்)

அநுபல்லவி

நாதாந்த முடிவே வேதாந்த மயமே
நாயகமே யெந்தன் நாயகமே சாமி (சித்தம்)

சரணம்

பாத பங்கயங் கண்டு நாத யிங்கிதவென்று
பரவு மன்பருக்கினி விரைவுடனருள் செய்ய
மன்றலம் பொழிலுறை குன்றையின் மலைவாசா
வால வடிவேலவா கோல மயில் வாகனு (சித்தம்)

## 1350. என்னைத் தெரியச் செய்குவாய்

பல்லவி

என்னைத் தெரியச் செய்குவாய் - நானு
முன்னைச் சதமென் றெண்ணு முண்மை யடியேனுன்
(என்னை)

சரணங்கள்

1 பூத வுடம்பில் வந்து யாதர வொன்று மின்றி
வேதனைப் படப்பட வியர்த்தமா யலையும் (என்னை)

2 சார மில்லாச் சமுசார வலையிற் சிக்கிப்
பார வினையிற் பட்டுப் பரதவித் தலைகின்ற (என்னை)

3 முற்பிறப்பினில் யாரோ யிப்பிறப்பினில் வந்து
கற்பனையாகக் குன்றைக் கர்த்தா வுனைப் பணியும் (என்னை)

## 1351. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணும் – ஞானசம்
பந்தனே யமரர்கள் பணியும் பதாம்புயா (உந்தன்)

அநுபல்லவி

வாரணி பூமுலை வள்ளி மனோகரா
யாரணி மணிமார்பா யன்பர்கள் சேகரா (உந்தன்)

சரணம்

அண்டர்கள் தங்களை யாண்டருள் நாதா
தொண்டர்களுடன் வந்து துதித்திடும் பாதா
வாச மலர்ப்பொழின் மயின்மலை வாசா
ஈசா பிரகாசா யிலங்குங் கிர்பேசா (உந்தன்)

## 1352. ஆதாரஞ் செய்ய வேணும்

பல்லவி

ஆதாரஞ் செய்ய வேணும் - நாளும்
பாதார விந்தத்தைப் பணியு மடியருக்கு (ஆதாரம்)

அநுபல்லவி

உந்தனைச் சதமெண்ணு
மெந்தனைச் சுகம்பெறவே (ஆதாரம்)

சரணம்

நிதமுனைப் பரவும்
பத்தன் மிடியைத் தீர்த்து
வண்டிமிருந் தண்டலைச்
செகண்டி மலைதனின் நாதா (ஆதாரம்)

## 1353. பாதத்தை மறவாதே

பல்லவி

பாதத்தை மறவாதே - மனமே
வேதத்தின் முடிவான விமலேசர் மாமலர்ப் (பாதத்தை)

சரணங்கள்

1 அந்தர வானவர் வந்தடி பணியும்
கந்த முலாவிய கமல தளம் போலும் (பாதத்தை)
2 யாதி பராபர சோதி மயமான
கியாதி யாகியகன கமலதளம் போலும் (பாதத்தை)
3 நன் றரு ளடியர்க்கு யென்று மருளிய
மன்றலம் பொழிலுறை மயின்மலை வாசன் (பாதத்தை)

## 1354. சரண மலரை நம்புவாய்

பல்லவி

சரண மலரை நம்புவாய் – மனமே
பரம பதமருளும் சரவண பவனிரு (சரண)

சரணங்கள்

1 நொந்திடவே வருமுந்திய வினைகளை
நைந்திடவே யருடந்திடு மையன் (சரண)
2 அடுத்திடு மடியவர் தொடுத்திடு துயரைக்
கெடுத்தினி தருளைக் கொடுத்திடு மையன் (சரண)

3 பாதக வினையினை நோதகவே செய்து
யாதரம்புரி குன்றை நாத வென்னையன் (சரண)

## 1355. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ - நாளும்
பூமி புகழுங் குன்றை நாம வடிவேலவ (சாமி)

சரணங்கள்

1 பூத வுடம்பினி லாதரஞ் செய்யாமல்
வேதனை வாராமல் விரும்பி அருள்புரிய (சாமி)

2 நெஞ்சிற் றுயரமெல்லாம் பஞ்சு பஞ்சாகவே
தொஞ்சு தொஞ்சோடிடச் சுகவருள்புரிய (சாமி)

3 அண்டின பேர்களைத் தொண்டுடன் எடுத்துக்
கொண்டருள் புரிய குன்றுக் குடிவாழ் (சாமி)

## 1356. என்சாமி யென்னை யாளுவாய்

பல்லவி

என்சாமி யென்னை யாளுவாய்
பொன்போலு முயர்சிகி மின்போலு முடிமலை (என்சாமி)

அநுபல்லவி

ஆசைக் கடலில் விழுந்து மோசப் படாமலே
நாசப் படாமலே நயந்தருள் புரியும் (என்சாமி)

சரணம்

வஞ்ச வரக்கர்களை நெஞ்சு பிளந்துவிட
மிஞ்சிய வயில்தொட்ட வீராதி வீரன்
மன்றலம் பொழிலுறை குன்றைமலையில் வாழும்
வென்றி வடிவேலவ விமல குகேசன் (என்சாமி)

## 1357. மனமே ஐயனை நினைப்பாயே

பல்லவி

மனமே ஐயனை நினைப்பாயே – நாளும் (மனமே)

அநுபல்லவி

கனமான குன்றைமலைக் கர்த்தனை நிர்த்தனை (மனமே)

சரணங்கள்

1 வஞ்சனை யரக்கனை நெஞ்சடர்ச் செய்யும்
வால வடிவேலனை கோல மயிலாளனை (மனமே)

2 தாதவிழ் தாமரைப் போதடர் பாதனை
சண்முக நாதனைத் தண்மலர் நீபனை (மனமே)

3 வாச மலர்ப்பொழில் வீசுஞ் சிகாமலை
மாதவனைக் குகநாதனை நாளும் (மனமே)

## 1358. வடிவேலவனே

பல்லவி

வடிவேலவனே – குன்றுக்
குடிவேலவனே (வடி)

சரணங்கள்

1 குகநாதனே – சமு
முகநாதனே (வடி)

2 குமரேசனே - எதிரு
சமரேசனே (வடி)

3 சிகநாதனே – சண்
முகநாதனே (வடி)

## 1359. வாருமையா சாமி

பல்லவி

வாருமையா சாமி – யென்றும்
பாருலகெங்கும்புகழ் சீருயர் குன்றை மீது (வாரு)

சரணங்கள்

1 தங்களை அடுத்திடு
மெங்களைக் காத்திட (வாரு)

2 உம்மை யடுத்தவர்
தம்மைக் காப்பதற்கு (வாரு)

3 யாடிய பொழிற்குன்றை
நீடிய மலைமீது (வாரு)

## 1360. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ
எத்தலமும் பணிகுன்றையில் வாழுங்
கர்த்தன்வெகு பரிசுத்தன் மகேசன் (சித்த)

அநுபல்லவி

ஆசைக் கடலில் விழச்செய்கு வானோ
பாசக் கயிற்றெம் படுத்தச் செய்வானோ (சித்த)

சரணம்

துன்பத்தில் வீழ்ந்து துடிக்கச் செய்வானோ
இன்பத் திருந்து யிலங்கச் செய்வானோ
எங்கும் பிரகாச மிலங்குங் குன்றுக்குடி
தங்குங் குருபர சண்முக நாதன் (சித்த)

## 1361. கடைக்கண் பாரையா

பல்லவி

கடைக்கண் பாரையா – வெள்ளை
விடைக் குகந்திடும் விமலர் பாலகா (கடைக்கண்)

அநுபல்லவி

வாசக் கடம்பணி – பிர
காசக் குமரேசா (கடைக்கண்)

சரணம்

மங்கை குறக்கொடி
பங்கின் வடிவேலா
ஆடு மலர்ப்பொழி
னீடுங் குன்றைநாதா (கடைக்கண்)

## 1362. தருணமென்னை யாளுவாய்

பல்லவி

தருணமென்னை யாளுவாய் – யன்பர்
பரவுங் குன்றுக்குடி யரனே யரனே (தருண்)

அநுபல்லவி

ஆடிய மயிலேறிக் கூடிய வன்பருடன்
நாடி வந்தடியேனைத் தேடி யிங்கிதமாக (தருண)

சரணம்

சீத பங்கய மலர்ப்பாத பங்கயந்தனை
நாத வென்றே பணிவோர்க் காதரவே செய்ய
மன்றல் மலர்ப்பொழில் நின்று நிதமுலாவு
குன்றையின் மலைநாதா வென்று தயவுகந்து (தருண)

## 1363. கண்ணுற் பாரய்யா

பல்லவி

கண்ணுற் பாரய்யா – யுயர்
விண்ணுற் பொழிற்குன்றை மேரில் வளரு நாதா (கண்ணுற்)

அநுபல்லவி

வாதுசெயுஞ்சூரனை மோது படையால் வென்ற
வால வடிவேலவா கோல மயிலாளா (கண்ணுற்)

சரணம்

கண்டு பணிகின்ற தொண்டர் பணிதாளா
கன்னி குறத்தி பாகா பன்னிரு கரதலா
உந்த னிருதாளை வந்து தொழுதேத்தும்
வால சண்முக நாதா பாலனை யுன்னுட (கண்ணுற்)

## 1364. எப்படி காண்பேனோ

பல்லவி

எப்படி காண்பேனோ - நாளு
மொப்பரிதான குன்றையொருத்தனைக் கருத்தனை (எப்படி)

அநுபல்லவி

அண்ட பகிரண்ட யெண்டிசையும் புகழ்
கொண்டல் மயிலேறுங் குமர குருபரனை (எப்படி)

சரணம்

அஞ்சியே வருசூரை மிஞ்சிய வேல்கொடு
பஞ்சு பஞ்சாய்ச் செய்யும் பரனை யரனை
சொந்தமாகத்தனை வந்தடுத் தோர்களைச்
சிந்தை மகிழச்செய்யுஞ் செகண்டிமலைக் குகனை (எப்படி)

## 1365. ஐயா குரு நாதா

பல்லவி

ஐயா குருநாதா – பன்னிரு
கையா குருநாதா (ஐயா)

அநுபல்லவி

வள்ளி மணவாளா
புள்ளி மயிலாளா (ஐயா)

சரணம்

அண்டர் பணிநாதா
தொண்டர் பணிபாதா
குன்றையின் மலைவாசா
நன்றருள் பிரகாசா (ஐயா)

## 1366. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ – நாளும்
பூமி புகழும் குன்றைப் புண்ணியன் சுப்பிரமண்ணிய (சாமி)

அநுபல்லவி

அந்தர வானவ ரிந்திர தானவர்
வந்தடி பரவிய மாமலர்ப் பாதன் (சாமி)

சரணம்

தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரன்
புள்ளி மயிலேறும் புனித குகேசன்
வாச மலர்ப்பொழில் வீசுஞ் சிகாமலை
மாசறு குகநாத வால வடிவேலன் (சாமி)

## 1367. ஆண்டவனே குகனே

பல்லவி

ஆண்டவனே குகனே – நாளும்
வேண்டிய வடியவர் பூண்டிடு பாதா (ஆண்ட)

அநுபல்லவி

வந்தடுத் தவர்களைச் சிந்தை'மகிழச்செய்து
தந்து ரட்சித்துக் காக்கும் சண்முக நாதா (ஆண்ட)

சரணம்

சீதள சந்திர தாதவிழ் கொன்றை
ஞுதர ருளிய ரஞ்சித வாயா (ஆண்ட)
சூழு மலர்ப்பொழில் வாழுஞ் சிகிமலை
ஆளும் வடிவேலா யாதரிக்க வேணும் (ஆண்ட)

## 1368. நடன மயில் வாகனு

பல்லவி

நடன மயில்வாகனு – யந்த
வடவரைநிகர் குன்றை வால சண்முகேசா (நடன)

அநுபல்லவி

அஞ்சிட வருசூரை மிஞ்சிட வடல்புரி
நஞ்சட ரயிலாளா நாடக நாட்டிய (நடன)

சரணம்

அண்ட மெலாமு மெண்டிசை யாவும்
விண்டிடச் சிறையை விரித்து நின்றுடனே
அடிதொழு மடியார் மிடிதனை விலக்கிக்
குடிதனைக் காக்குங் குன்றையி னுதா (நடன)

## 1369. இந்தச் செனனம் வேண்டாம்

பல்லவி

இந்தச் செனனம் வேண்டாம் – சாமி

அநுபல்லவி

முந்தச் செனன மெடுத்து வந்து
அந்தப் பலனை யடைந்தது போதும் (இந்த)

சரணங்கள்

1 ஆசைக் கடலி லமிழ்ந்து வீழ்ந்து
மோசப் பட்டே யலையுமே
பாசக் கயிற்ருல் பற்றிப் பற்றி
வீசி யிழுக்க யுலையுமே (இந்த)

2 மாயச் சமுசாரந் தன்னி லலைந்து
நோயின் மெலிந்து போகுமே
தூயக் கருங்குழலார்கள் பயிற்றிய
நேயத்தி லழுந்த லாகுமே (இந்த)

3 நீளு மலர்ப்பொழில் மாமுடி மீறியே
சூழுங் குன்ருக்குடி நாதா
நாளு மடியவர் தங்கள் வினை தனை
மீளும்படி யருள் பாதா (இந்த)

## 1370. ஏதுக்கு இந்தக் காயம்

பல்லவி

ஏதுக் கிந்தக் காயம் (ஏதுக்கிந்த)

அநுபல்லவி

போதுக் குளுயர் மலர்ப்பொழிற் குன்றைப்
புண்ணியனை சுப்பிர மண்ணியனைப் போற்ருமல் (ஏதுக்கிந்த)

சரணங்கள்

1 அண்டருந் தொண்டரும் பணியும் பாதனை
கண்டவர் வினையைத் துணிக்கு நாதனை
கந்தனை ஞான சம்பந்தனைப் போற்ருமல் (ஏதுக்கிந்த)
2 வஞ்சக ளுகிய சூர சம்மாரனை
ரஞ்சித வள்ளி தெய்வானை யொய்யாரனை
நாயனை யன்பர் சகாயனைப் போற்ருமல் (ஏதுக்கிந்த)
3 பூதலம் விளங்குங் குன்றையின் வாசனை
அந்தர வன்பர்க் கருளிய நேசனை
ஐயனை பன்னிரு கையனைப் போற்ருமல் (ஏதுக்கிந்த)

## 1371. மனதே குகேசன் பாதம் மறவாய்

பல்லவி

மனதே குகேசன் பாதம் மறவாய் - யெல்லாம்
உனதே யென்றெண்ணி நினைவே தடுமாருமல் (மனதே)

அநுபல்லவி

உன்னைப் பிடித்த தோசம் பின்னைத் தடுமாருமல்
சன்ன பின்னங்கள் செய்து சவுக்கிய மாக்குவான் (மனதே)

சரணம்

ஏது துயர் வந்தாலும் பாதகநோய் வந்தாலும்
சேதமுடனே செய்து திவ்விய வரமருள்வான்
வெற்றி வடிவேலணி கொற்றம் படைக்கும் சூரன்
பொற்பு நிறையுங் குன்றைப் புண்ணியனென் சாமி (மனதே)

## 1372. தெண்டனிட்டுக் கொள்ளுவாய் மனமே

பல்லவி

தண்டனிட்டுக் கொள்ளுவாய் மனமே - நாளு
மண்டர்களுந் தொண்டர்களுங் கண்டு பணியுமையனை
(தெண்ட)

சரணங்கள்

1 வாசக் கருங்குழலி நேசக் குறமயிலி
ஆசைக் குகந்த மணவாளனைக் கண்டு (தெண்ட)

2 துய்ய பஞ்சாட்சர மெய்யனை பன்னிரு
கையனைச் சிறுதண்டைக் காலனைக் கண்டு (தெண்ட)

3 பந்த வினையிற்பட்டு நொந்து வுடல்மெலிந்து
வந்த வன்புரைக் காக்கு மயின்மலை யானைக் கண்டு
(தெண்ட)

## 1373. வரவேணும் சாமி

பல்லவி

வரவேணும் சாமி – யனுக்கிரகந்
தரவேணும் சாமி (வர)

சரணங்கள்

1 கானக மயிலோலா – தெய்வானை
வானக மயின்மாலா (வர)

2 வள்ளலே மனமீற
புள்ளி மயிலிலேறி (வர)

3 என்று முடிதிருந்து
குன்றை மலையிருந்து (வர)

## 1374. அடி தொழுவாயே

பல்லவி

அடிதொழு வாயே - குன்றுக்
குடிமலை வாழுங் குகனை நீ மனமே (அடி)

அநுபல்லவி

வாசக் கடம்பணியு மார்பனைத் தீரனை
நேசக் கருத்தடியார் நீதனை நாதனை (அடி)

சரணங்கள்

கோல மயிலேறிய குமரனைச் சமரனை
வால வடிவேலணி மாயனை ஞயனை
அண்டர்கள் பணிசெயு மையனை மெய்யனை
மண்டலம் பணிகுன்றை வாசனை யீசனை (அடி)

## 1375. கும்பிடுவாய் மனமே

பல்லவி

கும்பிடுவாய் மனமே - நாளும்
சுசம்பிரம மான குன்றைச் சண்முக நாதனைக் (கும்பிடு)

சரணங்கள்

1 கந்தனை யெந்நாளும் வந்தனை செய்து
சொந்தமென வாழும் தூயனைக் கண்டு (கும்பிடு)

2 வஞ்சரக் காகடனை நெஞ்சிரு கூறுசெய்
மிஞ்சிய வேலணி வீரனைக் கண்டு (கும்பிடு)

3 நீடிய பொழிற்குன்றை யாடிய மயிலேறி
நாடி யன்பரைக் காக்கும் ரஞ்சிதனைக் கண்டு (கும்பிடு)

## 1376. சிந்தனை செய்குவாய்

பல்லவி

சிந்தனை செய்குவாய் – மனமே (சிந்தனை)

அநுபல்லவி

கந்தனை ஞான சம்பந்தனை யரனருள்
மைந்தனைக் கண்டு வந்தனை செய்து (சிந்தனை)

சரணங்கள்

1 வேதாந்த முடிவின் மீதாந்த நயங்கொள்
நாதாந்த வடிவைப் போதாந்த சரணத்தைச் (சிந்தனை)

2 வேலனை மயிலேறு கோலனைச் சிறுதண்டைக்
காலனைக் குறமயி லோலனைக் கண்டு (சிந்தனை)

3 அடியவர் பணியு முடிமணி யொளிரும்
கடிபொழிற் குன்ருக் குடிமலை யானைச் (சிந்தனை)

## 1377. ஏன் மயங்குகிருய்

பல்லவி

ஏன் மயங்குகிருய் மனமே (ஏன்)

அநுபல்லவி

மான்மயங்கும் விழிவள்ளி பங்கனிருக்க (ஏன்)

சரணங்கள்

1 இச்சைக் கிசைந்தபடி பச்சம் வைத்தடியரை
ரச்சிக்குங் கருணு நிதியிருக்கக் கண்டு (ஏன்)

2 வம்பவு பூமிதழ்க் கடம்பணி புயநாதன்
அம்புய மலர்ப்பாத வையனிருக்கக் கண்டும் (ஏன்)

3 மீறு மவுணர்குலம் நீறுபடவே வெல்லும்
கூறு மயிலன் குன்ருக் குடியோ னிருக்கக் கண்டும் (ஏன்)

## 1378. சித்தந் திரும்ப வேணும்

பல்லவி

சித்தந் திரும்ப வேணும்
பத்தர்கள் பணிகுன்றைப் பரனே யரனே (சித்தம்)

அநுபல்லவி

உந்த னடியார் மீது
வந்த வினையடீர் (சித்தம்)

சரணம்

உன்னை யடுத்தோர்வினை
தன்னை விலக்கி வைக்க (சித்தம்)
மன்றலம் பொழிலுறை
குன்றையின் மலைநாதா (சித்தம்)

## 1379. முருகா வுனை நம்பினேன்

பல்லவி

முருகா வுனை நம்பினேன் – யுந்தன்
இருகாலையும் நம்பி யிருக்கு மெந்தனைக் காப்பாய் (முருகா)

அநுபல்லவி

பன்னிரு கைவேலா
உன்னித மயிலோலா (முருகா)

சரணம்

செங்கடம் பணிதோளா
பங்கசமலர்த் தாளா
குன்றை மலையினுதா
மன்றல் மலர்ப்பாதா (முருகா)

## 1380. நீயே தயவு செய்குவாய்

பல்லவி

நீயே தயவு செய்குவாய் - நாளுந்
தாயே குன்றுக்குடி சண்முக நாதா (நீயே)

அநுபல்லவி

அண்டரும் முனிவருந் தொண்டரும் பணிபாதா
புண்டரிக மலர்கொண்ட கரதலா (நீயே)

சரணம்

வாசக் களபமுலை நேசக் குறமயிலி
ஆசைக் கிசைந்த குமரேசக் குருபரா
மன்றலம் பொழிலுறை குன்றையின் மலைவாழ்வே
நன்றருள் புரிநாதா வென்றி வடிவேலவா (நீயே)

## 1381. வரவேணுஞ் சாமிநாதா

பல்லவி

வரவேணுஞ் சாமிநாதா வந்துவரந்
தரவேணுஞ் சாமிநாதா (வர)

சரணங்கள்

1 எந்த ஞானு முந்தன் றனை
வந்தனைசெயு மெந்தனை யாள (வர)

2 அயில்விழி நயக்கு மின்மொழி வள்ளி
யொயிலுட னவர மயிலிலேறி (வர)

3 மஞ்சடர் பொழின் மிஞ்சிய முடி
மஞ்சடர் குன்றை ரஞ்சித நாதா (வர)

## 1382. அடியனை ஆதரிப்பாய்

பல்லவி

அடியனை ஆதரிப்பாய் – குன்றுக்
குடிமலை மிசைவரு குகனே குகனே (அடியனை)

அநுபல்லவி

வஞ்சக வரக்கனை நெஞ்சிரு கூறிடு
மிஞ்சிய கதிரிலை வேலவனே சாமி (அடியனை)

சரணம்

துன்னிய சமுசாரப் பின்னிய வலையினுல்
இன்னலும் படுவோர்க்குத் தண்ணருள் புரிநாதா
முடிநிரை நிரையுள் கடிகமழ்பொழில் குன்ருக்
குடிமலை வருகுக வடிவுள மயிஞதா (அடியனை)

## 1383. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – பன்னிரு
கரதல கமல வரமருள் புரிவாய் (அரகரா)

சரணங்கள்

1 வாது புரியுஞ் சூரை மோது படையால் வென்ற
வால வடிவேலவா கோல மயில்வாகனு (அரகரா)
2 பொல்லாத தீவினை யெல்லாப் பிழையுந்தீர்
புண்ணியனே யருள்பண்ண வேணுஞ் சாமி (அரகரா)
3 மன்றல் மலர்ப்பொழிற் குன்றையின் மலைநாதா
வாசக் கடம்பா கிர்பேசச் சிகாமணியே (அரகரா)

## 1384. வேண்டிய வரந்தருவாய்

பல்லவி

வேண்டிய வரந்தருவாய் - நீபம்
பூண்டிடு மார்பா புண்ணிய நாதா (வேண்டிய)

அநுபல்லவி

வந்தடி பணியு
மெந்தனை யாள (வேண்டிய)

சரணம்

அடியா ருடைய
மிடியே தீர
மன்றல் மலர்ப்பொழிற்
குன்றையின் மலையா (வேண்டிய)

## 1385. காக்க வேணுமையா

பல்லவி

காக்க வேணுமையா – கடைக்கண்
பார்க்க வேணுமையா (காக்க)

அநுபல்லவி

ஆறுமுகக் கடவுளே – யினி
வேறுகதி யில்லையே (காக்க)

சரணம்

பன்னிரு கரதலனே – நாளும்
நன்னயவருள் புரிந்தே
குன்றையின் மலைநாதா – யனுபூதி
யின்றருள் புரிவாயே (காக்க)

## 1386. வேலனை நினை மனமே

பல்லவி

வேலனை நினைமனமே – யனு
கூலனைச் சிவனருள் பாலக் கூர்வடி (வேலனை)

அநுபல்லவி

தெள்ளிய தினைப்புன வள்ளி மனோகரனை
புள்ளி மயிலேறிய புனிதனைப் புனிதனை (வேலனை)

சரணம்

தாதவிழ் நீபமலர்ப் போதணியும் புயனை
யாதர வடியர்க்கு அருளிய பரனை
யண்டர்கள் முனிவர்கள் தொண்டர்கள் பணிபுரி
வண்டர் கணிறைபொழில்மயின்மலை யானை (வேலனை)

## 1387. ஐயனை மறவாதே

பல்லவி

ஐயனை மறவாதே – மனமே வேற்
கையனை யருள்மெய்யனை முரு (கையனை)

அநுபல்லவி

ஆடிய மயிலேறியே விளையாடிய நாதனை நாளும்
தேடிய வடியார்கள் தோத்திரஞ் செய்யும் பாதனை
(ஐயனை)

சரணம்

வஞ்ச வரக்க னெஞ்சைப் பகர்ந்து மாய்த்திடும்
வேலனை - வந்து
தஞ்சம் வேறிலையென்ற பேர்களைத் தற்காக்கும் சீலனை
ஆசைக் கடலிலகப்பட்டோரை யாதரிக்கும் யோகனை - வெகு
வாசப் பொழிலுறை குன்றை மாமலைமிசை வந்திடுயோகனை
(ஐயனை)

## 1388. எப்போது காண்பேனே

பல்லவி

எப்போது காண்பேனே – யன்பர்
முப்போது பணிகுன்றை முத்தனைச் சித்தனை (எப்போது)

அநுபல்லவி

ஆசா பாசத்தை விட்டுப் பேசா மவுனியாக
யீசா வென்போர்க் கருளிய குமரேசனை (எப்போது)

சரணம்

சார மிகுந்த சமுசார வலையிற் பட்டு
யீர மில்லாத வரையிரட்சிக்கு நாதனை
வேசக் கருங்குழலி நேசக் குறமயிலி
மாசற்ற கணவனை மயிலேறும் மலையோனை (எப்போது)

## 1389. என்னை யாளுமையா

பல்லவி

என்னை யாளுமையா – நாளு
மின்னை நிகர்முடி விளங்குஞ் சிகாமலையா (என்னை)

அநுபல்லவி

ஆடிய மயிலேறு
நீடிய தயைநாதா (என்னை)

சரணம்

சுந்தர மயிலேறுஞ்
சந்திர சடாதரா
மிஞ்சிய பொழிற்குன்றை
ரஞ்சிதனே சாமி (என்னை)

## 1390. உந்தன் தயவு வேணும்

பல்லவி

உந்தன் தயவு வேணும் – ஞானசம்
பந்தனே யமரர்கள் பணியும் பதாம்புயா (உந்தன்)

அநுபல்லவி

வையத்தி லடியரை வாழ யிரட்சிக்கு நாதா
துய்யத்தி லுயரிதழ் தூயமலர்ப் பாதா (உந்தன்)

சரணம்

பன்னிரு கையிருந்து பனிரிடு வேலா
நன்னய வன்பரை ரட்சிக்குஞ் சீலா
மன்றன் மலர்ப்பொழின் மயிலை மலை வாசா
நின்றயவுடன் வந்து ரட்சிப்பாய் யீசா (உந்தன்)

## 1391. ஆறுமுகச் சிவனே

பல்லவி

ஆறுமுகச் சிவனே ஐந்துமுகச் சிவன்பாலா
அடியேற் கிரங்க வேணும் (ஆறுமுக)

அநுபல்லவி

தேறுதமிழ்க் குறுமுனி நீறுபுனை யடியார்கள்
தேடரிய பாதா ஆடு மயில்வாகா (ஆறுமுக)

சரணங்கள்

1 யடுத்திடு மன்பரைத் தொடுத்திடும் வினையினை
கெடுத்தருள் புரியுங் கண்ணியா சுப்பிர மண்ணியா
(ஆறுமுக)

2 யுந்த னிருபதத்தை வந்தனை புரிசெய்யும்
சொந்த வடியார்களைச் சுகங்கொடுத் தாளும் (ஆறுமுக)

3 மன்றல் மலர்ப்பொழிற் குன்றையின் மலைவாசா
வென்றி வடிவேலவா வீரப் பிரதாபா (ஆறுமுக)

## 1392. தருவாய் தருவாய் ஐயனே

பல்லவி

தருவாய் தருவாய் ஐயனே - நாளுந் (தருவாய்)

அநுபல்லவி

நெட்டிலை வேலணி
மட்டவிழ் மலர்க்கையா (தருவாய்)

சரணம்

வாசக் கடம்பா பிர
காசக் குமரேசா
திங்களணி சடிலா
பங்கினுமை பாலா (தருவாய்)

## 1393. எப்படி யென்றறியேன்

பல்லவி

எப்படி யென்றறியேன் - நாளும்
யொப்பரிதான குன்றைக் கொருத்தன் கருத்தன் மனம் (எப்படி)

சரணங்கள்

1 நம்மை யடுத்தவனைச் செம்மை செய்ய வென்று
யிம்மையிலே நினைத்திருப் பாரோ யேதோ (எப்படி)

2 தஞ்சமென்ற பேரை அஞ்ச வேண்டாமென்று
நெஞ்ச மகிழ்ந்தருளி ரட்சிப்பாரோ யேதோ (எப்படி)

3 நீடிய மலர்ப்பொழில் கூடிய சிகிமலை
நாடிய குமரேசா நாயகன் மனம் (எப்படி)

## 1394. இப்ப வரந்தர வேணும்

பல்லவி

இப்ப வரந்தர வேணும் - யுயர்
மைப்படியும் பொழிற் குன்றை மலைக்குமரேசா (இப்ப)

அநுபல்லவி

சூது படைத்தமுலை
மாது குறத்தி பாகா (இப்ப)

சரணம்

கங்கை தரித்தசடை
பங்கை யுமைதன் பாலா
யெந்தன் வினைதீர்ந்து
சுந்தரமா யிருக்க (இப்ப)

## 1395. தேடிக் கொள்வாய் மனமே

பல்லவி

தேடிக் கொள்வாய் மனமே – நாளும்
கூடிய பொழிற்குன்றைக் குருபரன் பாதத்தைத் (தேடி)

சரணங்கள்

1 பத்தர்கள் மிடிதீர்க்குங்
கர்த்த னிருபதத்தைத் (தேடி)

2 மங்கை மலர்ப்பொழிலுந்
துங்க மலரடியைத் (தேடி)

3 மன்றல் மலர்ப்பொழிற்
குன்றையோன் பாதத்தைத் (தேடி)

## 1396. மனமே யொன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

மனமே யொன்றுக்கு மஞ்சாதே – நாளுங்
கனமான குன்றைமலைக் கர்த்த னிருக்கவே (மனமே)

அநுபல்லவி

வஞ்ச யரக்கர்தனை நெஞ்சு பிளந்துவிட
மிஞ்சயில் தொட்டிடும் வீர னிருக்கவே (மனமே)

சரணம்

வாசக் கடம்பணி நேசக் கிர்பாநிதி
தேசப் பிரகாச தேவ னிருக்கவே
துங்க மயின்மலைத் தங்கப் பிரகாச
திங்கட் சடாதர செல்வ னிருக்கவே (மனமே)

## 1397. நாயகனே யெனையாளாய்

பல்லவி

நாயகனே யெனையாளாய் – யார்க்குந்
தாயக மான குன்றைச் சண்முக நாத (நாயகனே)

அநுபல்லவி

நீடிய தீவினை யோடிட வேதா
ஆடிய மயின்மே லாகநீ வந்து (நாயகனே)

சரணம்

மாய மயக்கில் வீழ்ந்து சாயமெல்லாந் திரிந்து
தூய வருள் பெருமற் றுலைந்தலைந்து போகாமல்
மீறிய பொழிற்குன்றை தேறிய வனுக்கிரக
ஆறுமுக வேலவ ஐயனே மெய்யனே (நாயகனே)

## 1398. இனிச் செனனம் வேண்டாமையா

பல்லவி

இனிச் செனனம் வேண்டாமையா – தாயிடத்திற்
செனிச்சது போதும் பொல்ல மனிதனுய்ப் பிறந்து மென்ன
(இனி)

சரணங்கள்

1 மட்டவிழுங் குழலார்கள் கிட்ட யிருந்துஞ் சரசந்
தொட்ட லீலையால் மனங்கெட்டலைந்து போமெனக்கு
(இனி)

2 பெண்டு பிள்ளைக ளென்று கண்டு மனமகிழ்ந்து
கொண்டு திரிந்தலையு மண்டு வினையே யெனக்கு (இனி)

3 மஞ்சடர் மாமுடி மிஞ்சிய பொழிற்குன்றை
ரஞ்சிதனே சாமி தஞ்சமிலை யெனக்கு (இனி)

## 1399. இது போதுஞ் சாமி

பல்லவி

இதுபோதுஞ் சாமி – நாளும்
மதுவேறிய பொழின்மயின் மலைநாதா (இது)

சரணங்கள்

1 மாயப் பிறவியில் வந்து பிறக்காமல்
நோயிற் படாதுபட்டு நொந்தே யிருக்காமல் (இது)

2 மாதர் மயக்கினில் மயங்கியே போகாமல்
போதமெல்லாங் கெட்டுப் போகாமற் சாகாமல் (இது)

3 சிந்தை மகிழ் குன்றைத் தேவா யெனைக்காத்தல்
வந்த வினையைத் தீர்த்து வால விழியாற் பார்த்தல் (இது)

## 1400. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா – மலர்க்
கரதல கமலா சரவண பவனே (அரகரா)

அநுபல்லவி

யுன்னித மயிலேறி யென்னிதய மகிழ
முன்னிலையாய் வந்து நன்னய மருள்வாய் (அரகரா)

சரணம்

*வாதில் வருஞ்சூரனை மோதிப் படையால் வென்ற*
*சோதி யயில்வேலவா நீதயவா யாள்வாய்*
*மஞ்சடர் பொழிற்குன்றை ரஞ்சித குகனே*
*தஞ்சம் வேறில்லை சாமி நெஞ்ச மகிழ்ந்தருள்வாய்*
*(அரகரா)*

## 1401. சரவணபவ குகனே

பல்லவி

*சரவணபவ குகனே – திவ்விய*
*கரதல கமலா பரம சிவேசா* *(சரவண)*

அநுபல்லவி

வீர சிம்மம் போல்வரு சூர சம்மாரஞ்செய்
தீர வடிவேலவா செகதல ரட்சகா (சரவண)

சரணம்

வால வடிவேலவா கோல மயிலேறிய
*சீல சண்முக நாதா செகதல ரட்சகா*
*தாதவிழு நீபப் போதணி புயவா*
*சீதள சிகிமலைச் செகதல ரட்சகா* *(சரவண)*

## 1402. கண்டேன் கண்டேனே

பல்லவி

கண்டேன் கண்டேனே – யுயர்
விண்டாவிய குன்றை மேரில் வருநாதனைக் (கண்டேன்)

அநுபல்லவி

எங்கும் பிரகாசந் தங்குங் கிர்பாநிதி
துங்க வயிலணி துரைக்கும ரேசனைக் (கண்டேன்)

சரணம்

ஆடிய மயிலேறி யோடி யடியரைத்
தேடிவரு மையனைச் செயகும ரேசனை
மண்டலந் துதிசெயும் அண்டர்கள் பணிபுரி
வண்டலர் பொழிலுறை மயின்மலைநாதனைக் (கண்டேன்)

## 1403. கண்டேன் கண்டேனே

பல்லவி

கண்டேன் கண்டேனே – நானே
கண்டேன் குன்றைமலைக் கர்த்தனை முத்தனைக் (கண்டேன்)

அநுபல்லவி

வாசக் கடம்பணி தேசப் பிரகாசனை
ஈசற் கிசைந்த குமரேசனை நேசனைக் (கண்டேன்)

சரணம்

கந்தனை ஞான சம்பந்தனை யரனருண்
மைந்தனை யடியவர் சொந்தனைத் தந்திரனை
மன்றல் மலர்ப்பொழில் குன்றையின் வாசனை
நன்றருள் புரியும் வென்றி வேலன்றனை (கண்டேன்)

## 1404. சித்த மெப்படியோ

பல்லவி

சித்த மெப்படியோ
பத்தர் பணியுங் குன்றை பரம சிவேசன் (சித்த)

அநுபல்லவி

ஆடிய மயிலாளா – யன்பர்
தேடிய வொயிலாளா (சித்த)

சரணம்

வள்ளி மணவாளா – மலர்ப்பொற்
றெள்ளிய யிருதாளா
செங்கடம்பணி வாகா – குன்றைத்
துங்க மலையின்யோகா (சித்த)

## 1405. தாயே யெனையாளாய்

பல்லவி

தாயே யெனையாளாய் – யருள்
சேயே குன்றைமலைத் தேவ தேவனே (தாயே)

சரணங்கள்

1 வாசக் கருங்குழ னேசக் குறக்கொடி
கநேச கணவா பிரகாசக் குமரேசா (தாயே)

2 சித்த முருகிடவே மெத்தத் தியானஞ்செயும்
பத்தர் மிடிதீர்க்கு முத்தமனே சாமி (தாயே)

3 மன்றன் மலர்ப்பொழிற் குன்றை மலையில்வரும்
வென்றி வடிவேலவா யின்றனுக்கிரகஞ் செய்வாய்
(தாயே)

## 1406. ஏதுக்கு யோசனை

பல்லவி

ஏதுக்கு யோசனை - மனமே
போதுற்ற பொழிற் குன்றை மீதுற்றவ னிருக்க
(ஏதுக்கு)

சரணங்கள்

1 தெள்ளிய தினைப்புன
வள்ளி பங்கனிருக்க (ஏதுக்கு)

2 வடிவேலவ கோல
மயிலோ னிருக்க (ஏதுக்கு)

3 நன்றருள் புரியுங்
குன்றைய னிருக்க (ஏதுக்கு)

## 1407. ஐயனே யெனையாளாய்

பல்லவி

ஐயனே யெனையாளாய் - பன்னிரு
கையனே குன்றைமலைக் கர்த்தனே முத்தனே
(ஐயனே)

அநுபல்லவி

வால சண்முகனே
சால யிங்கிதனே (ஐயனே)

சரணம்

மங்கைய ரிருவர்
பங்கின் மணாளா
நின்றாடும் பொழிற்
குன்றாக் குடியாய் (ஐயனே)

## 1408. வாராய் குமரேசா

பல்லவி

வாராய் குமரேசா – வந்து வினை
தீராய் குமரேசா (வாராய்)

அநுபல்லவி

அண்டர்கள் பணிபாதா – யருள்
கொண்டிடு செகநாதா (வாராய்)

சரணம்

வருசூர சங்காரா – யுயர்
திருவளர் சிங்காரா
குன்றையின் மலைவாசா – யெனக்கு
நன்றருள் புரியீசா (வாராய்)

## 1409. சம்பு சதாசிவனே

பல்லவி

சம்பு சதாசிவனே
நம்பினே னென்சாமி (சம்பு)

அநுபல்லவி

யெந்தன் மனது போலே
யுந்தன் தயவு வேணும் (சம்பு)

சரணம்

மீன்விலோசனியாள்
கானக வள்ளி பாகா
கந்தமலி குன்றைமேல்
வந்த கிருபைக் கடலே (சம்பு)

## 1410. எந்தன் மனது நோகுதே

பல்லவி

எந்தன் மனது நோகுதே - சாமி
யுந்தன் மனது யெப்படியோ (எந்தன்)

அநுபல்லவி

கொங்கலர் சோலை பைங்கிளியாள்
மங்கை குறத்தியை மருவிய லோலா (எந்தன்)

சரணம்

வாசக் கடம்பா பிரகாசக்குகா கும
ரேசக் குருபரா யிச்சை கிர்பேசா
பன்னிரு கரதலா யுன்னித மயிலாளா
யென்னிதய தீபா யெழிற்சிகி மலையா (எந்தன்)

## 1411. இன்னஞ் செனனம் வேண்டாஞ் சாமி

பல்லவி

இன்னஞ் செனனம் வேண்டாஞ் சாமி
வன்ன மாமணி முடிச்சிகா மலைவாசனே முருகேசனே
(இன்னம்)

சரணங்கள்

1 கந்தனே ஞான சம்பந்தனே யீசன்
மைந்தனே பொல்லாது மாதர் வயிற்றினில் (இன்னம்)
2 வாசக் கருங்குழ நேசக் குறமயி
லாசைக் கிசைந்தவா யன்னை வயிற்றினில் (இன்னம்)
3 யுந்தனை யடுத்த யெந்தனைக் காக்குந்
தந்தருள் வாயென் றுயின் வயிற்றினில் (இன்னம்)

## 1412. வேலாயுதக் கடவுளே

பல்லவி

வேலாயுதக் கடவுளே – யுயர்
மாலார்ந்த குன்றைமலை வாசனே யீசனே (வேலா)

அநுபல்லவி

துங்க மயிலேறி மங்கள கரமான
நங்கை யருடன் கூடி யங்கமுடன் வருவாய் (வேலா)

சரணம்

சீறியே வருசூரைக் கூறுபடவே செய்து
மாறு படுத்துகின்ற மீறிய தகட்டிலை
யோங்கிய மலர்ப்பொழில் தாங்கிய சிகிமலை
யாங்கிரி வாழ்தரு தேங்கமழ் நீபா (வேலா)

## 1413. கண்டு கொள்வாய்

பல்லவி

கண்டு கொள்வாய் – மனமே (கண்டு)

அநுபல்லவி

வண்டுண் மாமலர்ப் பொழிற்சிகாமலை
அண்டர் கோனை தண்டபாணியைக் (கண்டு)

சரணங்கள்

1 தங்கச் சிலம்பொலி யெங்கு முழங்கிடத்
துங்கச் சிகிமீது தொந்த மென்றாடிய
தூய குமரனை மாய வதாரனைக் (கண்டு)

2 தெள்ளிய தினைப்புன வள்ளி மணாளனைப்
புள்ளி மயிலோனை யள்ளிலை வேலனை
ஆண்டவனை நீபம் பூண்டவனை தினம் (கண்டு)

3 யடியவர் தங்களை மிடிமுழுதுந் தள்ளிக்
குடிதனைக் காத்திடுங் கடிகமழ் மார்பனைக் கர்த்தனை
குன்றையின் சித்தனை முத்தனைக் (கண்டு)

## 1414. கந்தனை நினைமனமே

பல்லவி

கந்தனை நினைமனமே - யடியவர்
சிந்தனை யுடனே வந்தனை புரியும் (கந்தனை)

அநுபல்லவி

ஆதி பராபர சோதி சொரூபனை
பாதி மதியையணி வேதியர் பாலனை (கந்தனை)

சரணம்

காலனை யடியவர் பாலணுகா வகை
வேலணி கரதல கோலமை மயிலனை
மிஞ்சிய தீவினை யஞ்சிட வருளிய
ரஞ்சிதனை குன்றையஞ் சிகிமலைவாழ் (கந்தனை)

## 1415. எந்தனை யாளாய்

பல்லவி

எந்தனை யாளாய் – நாளும்
வந்தனை யுடனே யுந்தனைப் பரவும் (எந்தனை)

அநுபல்லவி

கானகம் வாழ்வுறு மானனையாள்புணர்
தேனலர் நீபயென் றேவர்க டேவா (எந்தனை)

சரணம்

வஞ்ச சுரேசனை நெஞ்சிரு கூறுசெய்
மிஞ்சிய கூருன வேலவனே
மன்றலம் பொழிலுறை குன்றையின் மலைவரு
வென்றி வடிவேலணி வீரப் பிரதாபா (எந்தனை)

## 1416. மனதே யொன்றுக்கு மஞ்சாதே

பல்லவி

மனதே யொன்றுக்கு மஞ்சாதே– உனக்குத்
தனதான குன்றைமலைச் சண்முக னிருக்க (மனதே)

சரணங்கள்

1 மற்புயனுஞ் சூர பத்மனை வென்றிடு
பொற்புயர் வடிவேல னற்புத னிருக்க (மனதே)

2 நீறு புனையும் புயன் ஆறுமுகக் குமரன்
தேறு தமிழ்ச்சொல் வாயன் மீறு குகனிருக்க (மனதே)

3 ஓகைபுனை யுல்லாசன் வாகை புனையும் வீரன்
தோகை மலைக்குமரன் யோக னிருக்க (மனதே)

## 1417. என்னை யாளய்யனே

பல்லவி

என்னை யாளய்யனே – யுயர்
மின்னை நேருமுடி விளங்குங் குன்ருக் குடியாய் (என்னை)

அநுபல்லவி

மதுமலர் நீபமென் புதுமலர் சூடிய
சதுமறை புகழ்புயா சண்முக நாதா (என்னை)

சரணம்

ஆடிய மயிலேறு நீடிய வயிலாளா
நாடிய வன்பர்க்கு நல்குங் கிர்பானிதே
மிஞ்சிய தீவினை யஞ்சிட வடித்தவா
ரஞ்சிதனே குகநாயகனே சாமி (என்னை)

## 1418. சரணஞ் சரணமுனை நம்பினேன்

பல்லவி

சரணஞ் சரணமுனை நம்பினேன்
யுரணம் புகழுங் குன்றை ஐயனே மெய்யனே (சரணஞ்)

அநுபல்லவி

வாருற்ற பூமுலை காருற்ற கருங்குழ
ளுருற்ற மலர்ப்புய நங்கையர் பாகா (சரணஞ்)

சரணம்

நேச மதாகிய தாசர்கள் வினைதீர்க்கும்
மாறு கருணையா மாமயில் வாகனு
யள்ளிலே வேல்கொடு துள்ளிவருசூரை
கொள்ளை யிடுபவா குமர குருபரா (சரணஞ்)

## 1419. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – செக
கர்த்தனே குன்றைமலைக் கந்தனே வந்துந்தன் (சித்த)

அநுபல்லவி

தீவினைதனைத் தீர்த்து யாவிதனைக் காத்துப்
பாவியின் மிடியோட்டிப் பார்த்து ரட்சிக்க (சித்த)

சரணம்

பொல்லாத தெல்லாந் தீர்த்து வல்லாண்மையைக்
கொடுத்து
நல்லாள னுகச் செய்து நயந்தனைத் தரவே
நீடிய மலர்ப்பொழில் கூடிய குன்றையி
னுடிய குககுரு நாதா யெனைக் காக்க (சித்த)

## 1420. நம்பிக் கொள்வாய் மனமே

பல்லவி

நம்பிக் கொள்வாய் மனமே
தும்பிக்கையானை யின்றுணைவனை நாளும் (நம்பி)

சரணங்கள்

1 கங்கை தரித்தவர் பங்கில் வளருமை
'மங்கை குறமயில் வாகனை நாளும் (நம்பி)
2 சோதி மயமான வாதி பராபர
நீதியா யருள்புரி நிமலனை நாளும் (நம்பி)
3 மங்யை ரிருவர் கடங்களை மேவிய
பங்கனை குன்ருக்குடிப் பரமனை நாளும் (நம்பி)

## 1421. பொன்மயில் வாகனு

பல்லவி

பொன்மயில் வாகனு - யடியேற்கு
நன்மையைத் தர வேணும் (பொன்)

அநுபல்லவி

சூர சம்மாரா
வீரப் பிரதாபா (பொன்)

சரணம்

யெங்கும் பிரகாசா
பொங்குங் கிர்பேசா
மன்றலம் பொழில்சூழ்
குன்றையி னுதா (பொன்)

## 1422. குகனே உனை நம்பினேன்

பல்லவி

குகனே உனை நம்பினேன் - சிவனுர்
மகனே யெனையாளாய் (குகனே)

அநுபல்லவி

துய்ய மயிலில் வந்து மெய்யின் வினையைத் தீர்த்து
ஐயனே நலமான யனுக்கிர கந்தனைச் செய்வாய் (குகனே)

சரணம்

மீறி வருஞ்சூரனைக் கூறுபடு மயிலால்
வேறு வேருகச் செய்யும் வீரப் பிரதாபா
யடிய வருடைய மிடிதவிர் குன்ருக்
குடிவரு குமர குகபர நாதா (குகனே)

## 1423. வாராயோ குகனே

பல்லவி

வாராயோ குகனே – வந்துவரந்
தாராயோ குகனே (வாராயோ)

சரணங்கள்

1 தீவினை தனைத் தீர்த்து
ஆவியைத்தான் காக்க (வாராயோ)

2 தெள்ளிய தினைப்புன
வள்ளி மயிலாளுடன் (வாராயோ)

3 மன்றலம் மலர்ப்பொழிற்
குன்றைமலை யிருந்து (வாராயோ)

## 1424. எந்த வினையையுந் தீர்ப்பாய்

பல்லவி

எந்த வினையையுந் தீர்ப்பாய் – நாளும்
கந்த மலர்ப் பொழிற் செகண்டியின் மலைநாதா (எந்த)

அநுபல்லவி

ஐயனே பன்னிரு
கையனே யென்சாமி (எந்த)

சரணம்

அண்டர் முனிவரர்
தொண்டர் பணியும் சாமி
துங்க மயிலேறிய
தங்க வேலவா சாமி (எந்த)

## 1425. உனை நம்பினேனையா சாமி

பல்லவி

உனை நம்பினேனையா சாமி - நீபம்
புனையும் புயாசலா புண்ணிய குகேசா (உனை)

சரணங்கள்

1 யந்தரி யாமளை கோலர்கா
சுந்தரி யம்பிகை பாலா அருள்
கந்தனே ஞான சம்பந்தனே சாமி (உனை)

2 வேலாயுத மலர்க்கையா – நல்ல
நாலாகலை பயிலய்யா – நய
லீலா வள்ளியின் மாலா யென்சாமி (உனை)

3 வாசனையுயர் மலர்த்தோளா – ஞானயு
பாசனையோர் பணிதாளா - யுயர் பிர
காச முடிக்குன்றை யீசனே யென்சாமி (உனை)

## 1426. நெஞ்சமே மயங்காதே

பல்லவி

நெஞ்சமே மயங்காதே
தஞ்சமே யில்லை யென்றடியார்களைத் தற்காக்கும்
கந்தசாமி யிருக்கவே (நெஞ்சமே)

சரணங்கள்

1 சங்கரி யாமளை மங்கள கல்யாணி
பயங்கயதள நேத்திரி பால னிருக்கவே (நெஞ்சமே)

2 தெள்ளிய தினைப்புன வள்ளி மின்னுளுடன்
துள்ளிய மயிலேறுந் துரைக்குக னிருக்கவே (நெஞ்சமே)

3 மஞ்சடர் பொழின்முடி யுஞ்சரியா
யுயருஞ் சிகிமலை வருமுத்தம னிருக்கவே (நெஞ்சமே)

## 1427. வேலவனே அருள்வாய்

பல்லவி

வேலவனே அருள்வாய் – யுமை
பாலகனே குன்றைப் பரம சிவனே வடி (வேல)

சரணங்கள்

1 தஞ்சம் வேறில்லை யென்ற தன்னடி யார்களை
அஞ்ச வேண்டா மென்ற வாதரஞ் செய்வாய் வடி (வேல)

2 யுந்தனை நம்பிய வுன்னடி யார்களை
சந்தத வாழ்வு கடந்து ரட்சிக்கும் வடி (வேல)

3 அரகர சம்பு அறுமுகத் தேவா
புரவரன் பாலா புனித குகா வடி (வேல)

## 1428. ஒருநாளும் மறவாதே

பல்லவி

ஒருநாளும் மறவாதே – மனமே
திருநாளும் பூசையும் சிறக்குங் குன்றேசனை (ஒரு)

அநுபல்லவி

சீதாம் புயநிகர்
பாதாம் புயனை (ஒரு)

சரணம்

யந்தரி யாமளை
சுந்தரி பாலனை
தித்திமி திமியென
நிர்த்தன மயிலனை (ஒரு)

## 1429. கடவுளை வணங்குவாய்

பல்லவி

கடவுளை வணங்குவாய் - மனமே
தடமுடி சூழும் வடவரை நிகரும்
தண்மலை சூழ்குன்றை அண்டர்கள் நாதனை (கடவுளை)

சரணங்கள்

1 வஞ்ச மனத்த சூரை
அஞ்ச வமரில் வென்ற (கடவுளை)
2 வந்த தீவினைகளைச்
சிந்த வடித்து வென்ற (கடவுளை)
3 வாச மிகுந்த நீபனை
தாச னெந்தனை யாளும் (கடவுளை)

## 1430. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே
நயங்காணுங் குன்றை நாதன் பாதமிருக்க (மயங்)

சரணங்கள்

1 யொன்றுக்கு மஞ்சாதே யொன்றுக்குங் கெஞ்சாதே
நன்றுக்குந் தீதுக்கும் நாதன் பாதமிருக்க (மயங்)
2 பொய்களைக் கல்லாதே பொய்களைச் சொல்லாதே
நைய நோய்களை வெல்லும் நாதன் பாதமிருக்க (மயங்)
3 நோயது வாராது நோயது சேராது
நாயன் குன்ருக்குடி நாதன் பாதமிருக்க (மயங்)

## 1431. ஈசனே யெனக்கருள் தருவாய்

பல்லவி

ஈசனே யெனக்கருள் தருவாய் – சரவணபவ வருக
(ஈசனே)

அநுபல்லவி

வாச மலியுங் குன்றைச் சீதள கிரிவரு (ஈசனே)

சரணங்கள்

1 அந்தர வானவர் மந்தர வேதியர்
சுந்தர வடியர்கள் வந்தடி பரவும் ஈசனே

1 சகல புவனர்களு மிகவு மனமகிழ்
கமல ரிடவருள் சுகசுக நாதா (ஈசனே)

3 யந்தி பராபர நாத மகேசா
சோதி சொருப கணுதிபக் கியாதிப (ஈசனே)

## 1432. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ
பத்தர்கள் நாதா பதம் பதாம்புயா (சித்த)

அநுபல்லவி

பன்னிருகையா
யுன்னித மயிலா (சித்த)

சரணம்

தெள்ளிய தமிழ்வாயா
வள்ளிதன் பாகா
மன்றலம் பொழில் சேர்
குன்றையின் மலையா (சித்த)

## 1433. சாமி சித்த மெப்படியோ

பல்லவி

சாமி சித்த மெப்படியோ – யந்த
பூமியும் பரவுங் குன்றைப் புண்ணியன் சுப்பிரமண்ணிய
(சாமி)

சரணங்கள்

1 மாயப் பிறப்பிற் பிறக்க வைக்குமோ – யிந்தக்
காயத்தை நோயிற் கலக்க வைக்குமோ (சாமி)

2 துன்பப் படுவென்று துடிக்க வைக்குமோ
யின்பப் பட்டிருந்து யிசைய வைக்குமோ (சாமி)

3 பங்கய பாதத்தைப் பணிய வைக்குமோ
திங்கடாவுங் குன்றைச் சேர வைக்குமோ (சாமி)

## 1434. சிவனே சிவனே யென்பாய்

பல்லவி

சிவனே சிவனே யென்பாய் - நெஞ்சகனே
புவனேஸ்வரன் குன்றைப் புனிதனை யனுதினம் (சிவனே)

சரணங்கள்

1 யந்தரி யாமளை சுந்தரி யருளிய
மைந்தனை யனுக்கிர கந்தனைக் கண்டு (சிவனே)

2 வாசக் கருங்குழ னேசக் குறமயி
லாசைக் கிசைந்த கிர்பேசனைக் கண்டு (சிவனே)

3 வண்டினம் பாடிய தண்டலை சூழ்தரு
யெண்டிசை புகழ்குன்றை கொண்டவனைக் கண்டு (சித்தம்)

## 1435. பதந்தர வேணும்

பல்லவி

பதந்தர வேணும் - பரம
பதந்தர வேணும் - நாளுஞ்
சுதந்தர மான குன்றைத் துரைக்கும ரேசாவுன் (பதம்)

சரணங்கள்

1 யாலைக கரும்பு போலும் வேலைத் துரும்பு போலும்
யலையாமல் மனங்கலையா மலுந்தன் (பதம்)

2 துயரத்தி லகப்பட்டு வயர்வுற்றுத் திரியாமல்
துன்ப சாகரங் கடந்தின்ப மாக வுந்தன் (பதம்)

3 யில்லாத வாழ்வெண்ணும் பொல்லாத சாரத்தி
லிறங்காம லிறங்கி யுறங்காம லுந்தன் (பதம்)

## 1436. மயங்காதே மனமே

பல்லவி

மயங்காதே மனமே - யெந்நாளும்
நயங்காணுங் குன்றை நாத னிருக்கையில் (மயங்)

சரணங்கள்

1 யின்னமும் பிறவாமற் றண்ணருள் புரிந்து
சின்ன மயிலில் வந்து நன்னயவருள் செய்வான் (மயங்)

2 யிந்த வுலகத்திலு மந்த வுலகத்திலு
மெந்த வுலகத்திலும் வந்த வினையைத் தீர்ப்பான் (மயங்)

3 நீடிய வாதட ராடிய மலர்ப்பொழில்
கூடிய சிகிமலை நாடிடுவோ னிருக்க (மயங்)

## 1437. ஆடு மயிலில் வருவாய்

பல்லவி

ஆடு மயிலில் வருவாய் – நாளுந்
தேடு மடியவர்க ளுடும் படியாக (ஆடு)

சரணங்கள்

1 யந்தர வானவர் துந்துபி முழங்கிட
சொந்த வடியவர்கள் சிந்தை மகிழ்ந்திடவே (ஆடு)

2 யாசைக் குழியில் வீழ்ந்து மோசப்படாமலும்
நாசப் படாமலும் நேசத்த வடியர்முன் (ஆடு)

3 மன்றல் மலர்ப்பொழிற் குன்றை மலையிருந்து
வென்றி வடிவேலேந்தி நன்றருள் புரிந்துடன் (ஆடு)

## 1438. நெஞ்சே அஞ்சாதே

பல்லவி

நெஞ்சே அஞ்சாதே
மஞ்சே யுலாவிய குன்றைமலை
மாய னடியவள் நேய னிருக்க (நெஞ்சே)

சரணங்கள்

1 ஆடிய மயிலேறி யோடி விளையாடி
அந்த மெங்கும்போய் வந்தவ னிருக்கையில் (நெஞ்சே)

2 முன்னங் களத்திற் பிரசன்ன மாகவந்த
மூடன் சூரைச்சூரை யாடின னிருக்கையில் (நெஞ்சே)

3 வேதாந்த முடிவாய் நாதாந்த வெளியாய்
விர்த்திக்குங் குன்றைக் கர்த்த னிருக்கையில் (நெஞ்சே)

## 1439. சம்பு சதாசிவனே

பல்லவி

சம்பு சதாசிவனே - யுனை
நம்பினேன் சரவண பவனே (சம்பு)

அநுபல்லவி

வாசக் கடம்பணி தோளா – நல்ல
நேசக் குறத்தி மணவாளா (சம்பு)

சரணம்

வஞ்ச வரக்கரை வெல்வேலா – யெந்தன்
நெஞ்சின் துயரை நீப்பாய் சீலா
மஞ்சடர் பொழிற்குன்றை நாதா - திவ்விய
பஞ்சினு மெல்லிய பாதா (சம்பு)

## 1440. மனதே சடாட்சரத்தை மறவாதே

பல்லவி

மனதே சடாட்சரத்தை மறவாதே - நாளுங்
கனமான குன்றைமலைக் கருத்த னெருத்தனுடை (மனதே)

அநுபல்லவி

நல்ல நல்ல வழியைக் கூட்டுமே – கூட்டி
மெல்ல மெல்ல ஞானத்தை யூட்டுமே (மனதே)

சரணம்

காலன் வராமலே பண்ணுமே – நல்ல
சீலமான விதங்கள் நண்ணுமே
குன்றை மலையிலுன்னைச் சேர்க்குமே - தூய
ரென்று மண்டாமல் நிதங் காக்குமே (மனதே)

## 1441. பத்தன்முன் வாராய்

பல்லவி

பத்தன்முன் வாராய் - யுந்தன்
சித்த மிரங்கியே மெத்தத் தயவுடன் (பத்தன்)

சரணங்கள்

அந்தர துந்துபி கும்கும் கும்மென
சந்தமிகு சங்கு பம்பம் பம்மெனப் (பத்தன்)

2 வானவர் சூழ்ந்து பரபர பரவென
ஞானவர் தாழ்ந்து வரவர வரவென (பத்தன்)

3 நின்றுடிய பொழினித்த முலாவிய
குன்றுக்குடி வருகுமர குகேசா (பத்தன்)

## 1442. சிவகுரு நாதா

பல்லவி

சிவகுரு நாதா - யுயர்
தவமுனிவோர் பணி சரவண பவனே (சிவ)

அநுபல்லவி

பன்னிரு கரதலா
உன்னித மயிலா (சிவ)

சரணம்

போத மெய்ஞ்ஞான
நாத சங்கீதா
குன்றையின் மேரா
வென்றியின் வேலா (சிவ)

## 1443. கந்தனே உனை நம்பினேன்

பல்லவி

கந்தனே வுனை நம்பினேன் சாமி - கந்த
பைந்தரு சூழ்தரு குன்றை மாமலைப்
பரனே பரனே பரனே பரனே (கந்த)

அநுபல்லவி

வானவர் தானவர்
ஞானவர் பணிபாதா (கந்த)

சரணம்

தெள்ளிய தினைப்புன
வள்ளி மனோகரா
பங்கய மலர்ப்பாதா
சங்கர சண்முகா (கந்த)

## 1444. வருவாய் என்சாமி

பல்லவி

வருவாய் என்சாமி – மலர்த்
திருவாளுங் குன்றைத் தேசிக நாதா (வரு)

அநுபல்லவி

சரவண பவகுகா
அரவணி பவசிவா (வரு)

சரணம்

திருமறை புகலிய
குருபர நாதா
மன்றலம் பொழிலுயர்
குன்றையின் மலைமீது (வரு)

## 1445. வெற்றி வடிவேலவனே

பல்லவி

வெற்றி வடிவேலவனே – நாளும்
சுற்று மலர்ப்பொழில் வாழும் தோகை மலைநாதா (வெற்றி)

சரணங்கள்

1 வீரப் பிரதாப - செய
சூர சம்மார (வெற்றி)

2 மஞ்சடருங் கிற
வுஞ்ச கிரியை வென்ற (வெற்றி)

3 வாழிய வுலகினைச்
சூழு முலகை வென்ற (வெற்றி)

## 1446. அரகரா குமரேசா

பல்லவி

அரகரா குமரேசா - மூன்று
புரவரனரு ளீசா (அர)

அநுபல்லவி

மகபதி மருகேசா – வெகு
சகவடியவர் நேசா (அர)

சரணம்

தானவர் குலகாலா - யந்த
வானவர் பணிசீலா
குன்றையினருள் சீரா - யடியனை
என்றும் ரட்சிக்கு வாரா (அர)

## 1447. ஐயனை நம்புவாய்

பல்லவி

ஐயனை நம்புவாய் – மனமே (ஐயனை)

அநுபல்லவி

துய்யனைப் பன்னிரு கையனை யென்சாமி (ஐயனை)

சரணங்கள்

1 கந்தனை ஞானசம்
பந்தனை யென்சாமி (ஐயனை)
2 குமரனை தானவர்
அமரனை யென்சாமி (ஐயனை)
3 மன்றலம் பொழிலுறை
குன்றையனை யென்சாமி (ஐயனை)

## 1448. வருவாய் வருவாய் ஐயனே

பல்லவி

வருவாய் வருவாய் ஐயனே – வந்து வரந்
தருவாய் தருவாய் மெய்யனே (வரு)

அநுபல்லவி

யோடி நடனமுட
ஞடி மயிலேறி (வரு)

சரணம்

பத்தர்கள் வானவர்
சித்தர்கள் சூழ
அகண்ட பரிபூரண
செகண்டி மலையிருந்து (வரு)

## 1449. யோசனை செய்யாதே

பல்லவி

யோசனை செய்யாதே – மனமே (யோசனை)

அநுபல்லவி

வாசனைசேர் குன்றை யீச னிருக்கவே (யோசனை)

சரணங்கள்

1 ஆடிய மயிலேறி யோடி வந்தடியர்க்கு
நாடிய படியரு ளுயக னிருக்கவே (யோசனை)

2 மூவர்க்கும் வானுள தேவர்க்கும் பணிந்திடும்
யாவர்க்கும் நலம்புரி ஐய னிருக்கவே (யோசனை)

3 எத்தனை யானாலுஞ் சித்தமகிழ்ந்தினி
பத்தரை ரட்சிக்கும் பரம னிருக்கவே (யோசனை)

## 1450. நம்புவாய் மனமே

பல்லவி

நம்புவாய் மனமே - நாளும்
வம்புலாம் பொழில்மயின் மலையோனை (நம்பு)

சரணங்கள்

1 மையலாள் குறத்தையலாள் புணர்
ஐயனை பன்னிரு கையனை நாளும் (நம்பு)

2 வீரனைக் கண்தீரனைப் பொல்லாச்
சூரனை வென்ற போரனை நாளும் (நம்பு)

3 முன்பரவிய யன்பருடைய வன்றுயர்
தீர்க்குந் தென்குன் றேசனை (நம்பு)

## 1451. இந்தச் செனனம் வேண்டாம்

பல்லவி

இந்தச் செனனம் வேண்டாம் - யினி
எந்தச் செனன மெடுத்தாலும் சாமி (இந்த)

சரணங்கள்

1 ஆசா பாசத்தைக் கூட்டுமனி
யாயங்களைப் பாராட்டும்
மோசா மோசத்தைக் காட்டும் - வினை
மூட்டும் பகையைச் சாட்டுஞ் சாமி (இந்த)

2 மாதர் மாய்கையைக் கொள்ளும் - பொல்லா
வஞ்சனைகளை யுள்ளும்
சூதுபொய்களை விள்ளும் - யிந்த
தூலஞ் செய்வது சாலஞ்சாமி (இந்த)

3 பன்னிரண்டு கையனே - நீலப்
பச்சை மயிலினையனே
நன்னயமிகு மெய்யனே – குன்றை
நாதனே மலர்ப்பாதனே சாமி (சாமி)

## 1452. பார்க்க வேணும் சாமி

பல்லவி

பார்க்க வேணும் சாமி - கடைக்கண் (பார்க்க)

அநுபல்லவி

தீர்க்கமான குன்றை மாமலைச் சேயனே
வெகு தூயனே கண் (பார்க்க)

சரணங்கள் (அநுபல்லவி போல்)

1 வந்த தீவினை தீர – நாளு
முந்தன் றயவு சேர (பார்க்க)

2 கால பாசர் களோட - யுந்தன்
பால னுந்தனைத் தேட (பார்க்க)

3 வஞ்சனை பில்லி போக - யெந்தன்
நெஞ்சில் சந்தோச மாக (பார்க்க)

## 1453. சிவனை நம்பாதே

பல்லவி

சீவனை நம்பாதே - மனமே
சீவனை நம்பாதே (சீவனை)

அநுபல்லவி

பாவனையா யுலகிற் பதுங்கிக் கொண்டு அலையும் (சீவனை)

சரணங்கள்

1 கூட்டினிலே யிருந்து நாட்டியமே புரிந்து
மேட்டிமையாய் திரிந்து விருட்டென வோடிடுஞ் (சீவனை)

2 இருக்குமிட மென்றெண்ணி விருப்ப மில்லாமலே
மருட்டி மயக்கிப்போட்டு வாங்கி விட்டோடிடுஞ் (சீவனை)

3 மன்றலம் பொழிலுறை குன்றையின் மலையோனை
என்றும் நினைமனமே யிரக்கமில்லா மலோடுஞ் (சீவனை)

## 1454. எப்படியும் காக்க வேணும் சாமி

பல்லவி

எப்படியுங் காக்க வேணுஞ் சாமி (எப்படியும்)

அநுபல்லவி

மைப்படியுங் குழல்வள்ளி பங்காளா (எப்படியும்)

சரணங்கள்

1 தெரிந்து செய்தாலும் தெரியாமற் செய்தாலும்
பரிந்து வுந்தன்கண் பார்த்து ரட்சித்து (எப்படியும்)

2 என்னுட புத்தியா லேது செய்தாலும்
சின்ன மயிலில் வந்து சித்த மிரங்கி (எப்படியும்)

3 மிகுந்த மாமண மீறி யுலாவுந்
தகுந்த குன்றையிற் சண்முக நாதா (எப்படியும்)

## 1455. சித்த மிரங்காயோ

பல்லவி

சித்த மிரங்காயோ – குன்றைக்
கர்த்தனே யெனையாளும் முத்தனே யென்சாமி (சித்தம்)

அநுபல்லவி

செகதலக் கீயாதர
சுககுரு நாதா (சித்தம்)

சரணம்

ஆரண முருகா
நாரண மருகா
சிகிமலே வாசா
சுகிர்த விலாசா (சித்தம்)

## 1456. தயவு செய்குவாய்

பல்லவி

தயவு செய்குவாய் – யுந்தன்
நயமிகுந்த சிகாமலே நாதா (தயவு)

அநுபல்லவி

உந்தனை யடுத்த
எந்தன் மீது (தயவு)

சரணம்

உன்னை யடுத்த
என்னை யாள
மன்றலம் பொழிற்
குன்றை நாதா (தயவு)

## 1457. ஆடிய மயிலா

பல்லவி

ஆடிய மயிலா - யன்பர்
கூடிய வொயிலா (ஆடிய)

அநுபல்லவி

தெள்ளு தமிழ்வாயா - புன
வள்ளியம்மை நேயா (ஆடிய)

சரணம்

வஞ்சியர் கணேசா - நய
ரஞ்சித வுலாசா
சங்கரிதன் பாலா - யுயர்
தங்க வடிவேலா
நின்று பொழில்சூழும் - முடிக்
குன்றைமலை வாழும் (ஆடிய)

## 1458. பதந்தர வேணுஞ் சாமி

பல்லவி

பதந்தர வேணுஞ் சாமி – யென்மேல்
நிதந்தயவாக வந்து சுதந்தரமாக வுந்தன் (பதம்)

அநுபல்லவி

வால வடிவேலவா
கோல மயிலுயகா (பதம்)

சரணங்கள்

எந்தன் மனமகிழ
உந்தன் கமலமலர் (பதம்)
மன்றல் மலர்ப்பொழிற்
குன்றை மலையிருந்து (பதம்)

## 1459. மனமே வருந்தாதே

பல்லவி

மனமே வருந்தாதே - நாளுங்
கனமே பொருந்திய காரண னிருக்க (மனமே)

சரணங்கள்

1 அந்தர வானவர் சுந்தர வடியவர்
வந்தடி பணியுங் கந்த னிருக்க (மனமே)

2 கானக மயிலும் வானக மயிலும்
தானனை புயன்மா கியான னிருக்க (மனமே)

3 மஞ்சடர் சோலைகளுஞ் சகலங்களும்
மிஞ்சிய சிகிமலை ரஞ்சித னிருக்க (மனமே)

## 1460. வந்து வரந்தர வேணும்

பல்லவி

வந்து வரந்தர வேணும் - நாளும்
உந்தன் பதமலர்க்குப் பந்தப்படு மவர்முன் (வந்து)

சரணங்கள்

1 நம்பி யிருக்கிற யன்ப ரிடத்தினிற்
சம்பிரம மாகவே யும்பர் பணிய முன்பாய் (வந்து)

2 சீதள மலர்ப்போலுந் தன்பாத மலர்கடனை
ஆதர வாகவெண்ணுங் காதலர் தங்கள் முன்பாய் (வந்து)

3 வண்டின் மிசையாடும் தண்டலை சூழும்
செகன்டி மலையில் வாழு மண்டர்க ளுதா வந்து)

முற்றும்